# உயர் நிலை மாண்டிசோரி முறை

(THE ADVANCED MONTISSORI METHOD)

ஆசிரியர்

மரியா மாண்டிசோரி

தமிழாக்கம்

சி. நல். வைத்தீஸ்வரன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—375

# உயர்நிலை மாண்டிசோரி முறை

## முதல் பாகம்

## கல்வியில் தன்னியலார்ந்த செயல்

(ஏழிலிருந்து பதினேரு வயதுவரை உள்ள
குழந்தைகளுக்கான கல்விக்குப் பயன்படுத்தப்பட்ட அளவில்
அறிவியல்பான ஆசிரிய இயல்)

*ஆசிரியை*

**மரியா மாண்டிசோரி**

*('மாண்டிசோரி முறை', 'ஆசிரிய இயல்,-மனித இயல்',
'மாண்டிசோரியின் கையேடு' ஆகிய நூல்களின் ஆசிரியை.)*

*தமிழாக்கம்*

சா. நல். **வைத்தீஸ்வரன்**, பி.எஸ்ஸி., மாண்டிசோரி டிப்ளோமா.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1972

T.N.T.B.S. (C. P.) No. 375



# The Advanced Montessori Method—Part I

DR. MARIA MONTESSORI

*Translation*

C. N. VAIDHESWARAN

**Price Rs. 8-70**

This edition of "Advanced Montessori Method, Vol. I, 1965 edition is published by arrangements with Thiru. C. N. Vaidheswaran."

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*
New Century Printers,
6/30, Mount Road,
Madras-2.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி - உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'உயர்நிலை மாண்டிசோரி முறை' (முதல் பாகம்) என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 375ஆவது வெளியீடாகும். இதுவரை 410 நூல்கள் வெளி வந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி-சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின் கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

**ப டை ப் பு**

இத்தாலிய முதல் அரசி
மேதகு
சேவாயைச் சார்ந்த மார்கரீத்தாவுக்கு

# மூலநூலின் முன்னுரை

டாக்டர் மரியா மாண்டிசோரி அம்மையாருடைய நூல்கள், மாண்டிசோரி முறை தொடக்கநிலை (The Montessori Method), உயர்நிலை மாண்டிசோரி முறை (The Advanced Montessori Method) ஆகிய இரண்டும் கல்வி சார்ந்த நடவடிக்கைகளில் எவ்வளவு பதிந்திருக்கிறது என்பதைக் கல்வியின் வரலாறு காண்போர் அறிவார்கள்.

இரண்டாம் நூல் பல ஆண்டுகளுக்குப் பிறகு மறுபடியும் சரித்திர வரலாற்றுடன் இன்று இப் பதிப்பாக வெளியாகிறது. முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு 1918ஆம் ஆண்டு வெளியாயிற்று. இதில் உள்ள மொழி அக்கால இலக்கியப் போக்கினைப் பிரதிபலிக்கிறது. இங்கு உபயோகிக்கப்படுகின்ற துறைச் சொற்கள் (terminology) அக்காலத்துக்கு உரியவை. நேர்காட்சி வாதம் (positivism) அறிவியலின்மேல் தன்னுடைய பண்பினைத் தோயச் செய்திருந்தது. படங்களில்தான் வேற்றுமையுண்டு. இத்தாலி நாட்டில் 'பெர்காமோ' (Bergamo) என்ற ஊரில் உயர்நிலை மாண்டிசோரிப் பள்ளிக்கூடங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருந்த மாதிரிப் பள்ளிக்கூடத்தின் படங்கள் இந் நூலில் காணப்படுகின்றன.

இந்நூலாசிரியருக்கு மரியாதையுடனும் பயபக்தியுடனுமே நான் முன்னுரை எழுதுகிறேன். அம்மையார் தம் வாழ்வில் சாதித்தவைகளைத் தாங்கிக்கொண்டு அவர் வாழ்நாள் முழுவதும் இருந்த நிலையில் வேறு யாராவது இருந்திருக்க முடியுமா என்பது ஐயமே.

அவர் எத்தகையவர் என்பதை நூலின் முதல் பாகத்திலிருந்து அறியலாம். அதில் தெளிவும், புதுமையும், விறுவிறுப்பும் வாய்ந்த திடஉறுதியும் முன்நின்று மரியா மாண்டிசோரி அம்மையாரின் புகழ் வடிவை விளங்க வைக்கின்றன.

இதற்குப் பிறகு குழந்தைமை இரகசியம் (The Secret of Childhood) என்ற நூலை இயற்றினார். எவ்வாறு மூன்றிலிருந்து ஆறாண்டுவரை உள்ள சில குழந்தைகளின் கூட்டம் தன்னுடைய வாழ்க்கைப் பாதையையே மாற்றிவிட்டதென்று அவர் எடுத்துக் கூறுகிறார். அக் குழந்தைகள் பெருமளவில் அனாதைகள்—ஆளற்றவர்கள்—சமூகத்திடம் அச்சம் கொண்டவர்கள். எனினும்

வன்செயலர், அழிப்பவர், வாழ்வு வாய்ப்புப் பெருத ரோமா புரியின் கழிசடை மக்களிடமிருந்து வந்தவர்கள்; அவர்கள் 'மாசு படிந்தவர்கள் ; பேராசை பிடித்துக் கலையழிக்கும் சிறுவர்கள் (Vandals).[1]

டாக்டர் மாண்டிசோரி ஓர் உள இயல் வல்லுநர், இக் குழந்தைகளுக்காகப் பொருத்தமான சூழ்நிலையை அமைத்தார். அங்குப் பலவித செயலாற்றல்களைத் தூண்டும் பொருள்கள் இருந் தன. அவைகளை எவ்வாறு வினையாற்றல் வேண்டுமென்ற செயல் நுட்பத்தைத் துல்லியமாக அக் குழந்தைகளுக்கு விளங்க வைத் தார். அத்துடன் அவரவர்க்கு வேண்டிய வினையில் எவ்வளவு நேரம் வேண்டினாலும் அவரவர் விருப்பம்போல ஈடுபடக் குழந்தை களுக்குச் சுதந்திரம் அளித்தார். எது ஆபத்து விளைவிக்குமோ, எது பிறர்க்குத் துன்பம் விளைவிக்குமோ, அது மட்டும் குழந்தை களுக்கு அனுமதிக்கப்படவில்லை. சில மாதங்களுக்குப் பிறகு அக் குழந்தைகளுடைய நடத்தையில் நம்புதற்கரிய மாறுதல் ஏற் பட்டது. இது உண்மை என்பதை டாக்டர் மரியா மாண்டிசோரி அம்மையாராலேயே நம்ப முடியவில்லை.

குழந்தைமை இரகசியத்தில் (The Secret of Childhood—Longmans, 1945, Page 155) அம்மையார் பின்வருமாறு குறிப்பிடு கிருர்கள்: 'இது ஒரு மாயை அல்ல என்று நான் நம்ப எனக்கு நெடுங் காலம் பிடித்தது. 'அந்த உண்மையை மெய்ப்பித்த ஒவ்வோர் அனு பவத்திற்குப் பின் நானே எனக்குச் சொல்லிக் கொண்டேன்: இன்னும் நான் நம்ப மாட்டேன்; அடுத்த முறை நம்புவேன்.' இம் மாதிரி நெடுங்காலம் அவநம்பிக்கையுடனும், அதே சமயத்தில் ஆழ்ந்து தூண்டப்பட்டும், நடுக்கமுற்றும் இருந்து வந்தேன்.' ஆனல், இறுதியில் உண்மைக்கு அடிபணிய வேண்டியதாயிற்று. மேலும் அந் நூலில் அதே பக்கத்தில் கூறுகிருர் : 'ஒருநாள் மனவெழுச்சி யுடன் என் நெஞ்சை இரு கரங்களிலும் ஏந்திக்கொண்டு அதை நம்பிக்கையின் உச்சிக்கு உயர்த்த ஊக்கம் அளிப்பவள்போல் குழந்தைகளின் முன் பணிவுடன் நின்றேன். அப்படியானல் நீங்கள் யார்? இயேசுநாதரின் கரங்களால் அணைக்கப்பெற்று அவருடைய புனித மொழியைக் கேட்டுக்கொண்டிருந்த குழந்தைகளையே ஒருவேளை நான் சந்தித்துவிட்டேனு? உங்களுடன் வீடுபேறு அடைய நான் உங்களைப் பின்பற்றுகிறேன்' என்ருர்.

எனினும், வெளிப்படு காட்சிகள் முற்றுப்பெறவில்லை. அவர்களுக்கு இன்னும் எதிர்பாராத திடீர்க் காட்சிகள் தோன்ற

[1] Vandals—ரோமப் பேரரசினை அழித்த முரட்டு சர்மானிய இனம் சார்ந்தவர்கள் (மொழிபெயர்ப்பாளர்கள்.)

விருக்கின்றன. இறுதியில் அக் குழந்தைகளைப் படிக்க வைக்க வேண்டுமென்ற நோக்கத்தில் சில வெட்டப்பட்ட நெடுங்கணக்கு எழுத்துகளை (cut - out alphabetical letters) குழந்தைகளுக்குக் கொடுத்து, அவ்வெழுத்துகளின் ஒலிகளையும் கற்பித்தார்.

சில வாரங்கள் கழித்து ஒருநாள் ஒரு குழந்தை மிக்க ஆர்வத்துடன் எதிர்பாராமல் திடீரென எழுதத் தொடங்கிற்று. அதையடுத்து மற்றொரு குழந்தை......மற்றும் ஒன்று. இந்தக் குழந்தைகளின் வயது நாலரை. அது புரிந்துகொள்ள முடியாதது, இயலாதது. அம்மையார் பெண்ணுரிமைக்காகப் பரிந்து பேசும் இயக்கத்தை (feminist movement) நடத்தி வைப்பதையும், பல்கலைக் கழகப் பேராசிரியர் பதவியையும், மருத்துவத் தொழிலையும் விட்டுவிட்டு இக் குழந்தைகளைப்பற்றி ஆராயப் புகுந்தது வியக்கத்தக்கது. அக் குழந்தைகள் அம்மையாருக்குப் புத்துலகத்தின் காட்சி அளித்திருந்தார்கள். அது புனித ஆவியின் உலகக் காட்சி (The World of the Spirit). குழந்தைகள் தாமாகவே பெற்ற அறநெறி மத மாற்றத்துக்கு (moral conversion) உறுதுணையாக இருந்த நிலைமைகளை இன்னும் மேம்படுத்திக் காப்பளிக்க அவர் கட்டாயப்படுத்தப்பட்டாரா என்று வியப்படைய வேண்டியிருக்கிறது. அல்லது சாதாரணப் பள்ளிக்கூடங்களில் வேதனை கொடுக்கும் அறிவு வளர்ச்சிக்குரிய ஒருவகையை மகிழ்ச்சியுடன் வெற்றிபெறச் செய்து நம் புதை உணர் நிலையில் (unconscious) என்னவாய் இருந்திருக்கலாம் என்று புரிந்துகொள்வதற்காக அவர் எல்லாவற்றையும் விட்டு விலகினார்.

குழந்தையின் இரகசியத்துக்குள் மூழ்கினார். அதன் பிறகு தமக்கு நேர்ந்தவைகளையும், தம்மைச் சுற்றிலும் நேர்ந்தவைகளையும் அவருடைய போக்கிலிருந்து திருப்ப இயலவில்லை. பிறகு பல நிகழ்ந்தன.

அவர்கள் எழுதிய இரு நூல்கள் 'மாண்டிசோரி முறை' என்பதும், இந்நூலும் ஆகும். புதிய மறைவு வெளிப்பாடென இவை புகழப் பெற்றன. அதையடுத்து ஒரு வாத எதிர்வாதம் தொடங்கிற்று. அது இன்னும் தொடர்கிறது. மதப்பற்றுடையவர்கள் அம்மையார் நேர்க்காட்சி வாதத்தைப் (positivism) பின்பற்றுகிறார் என்று வாதாடினார்கள். நேர்க்காட்சி வாதத்தினர் அம்மையார் மதம் சார்ந்த மொழியைப் பயன்படுத்துவதற்காகக் கண்டனம் தெரிவித்தனர். அறிவியலார் (விஞ்ஞானிகள்) கருத்தார்ந்த கொள்கை இதில் இல்லாமைக்கும் எதிர்ப்புக் கூறினர். கட்சி வாதச் சொற்பொழிவாளர்போல் விளக்கம் தருவதற்காகவும் அம்மையாரை நையாண்டி செய்தனர். மற்றக்

கல்வி முறைகளை ஏற்க மறுக்கும் தற்பெருமைக்காரி என்றும் இவள் ஒரு கிறுக்கு என்றும் அழைக்கப்பட்டார். பக்குவம் ஆகாத அவ்வளவு இளம் பிராயத்தில் குழந்தைகளுக்கு நுண்ணறிவு சார்ந்த பாடங்களைக் கற்பிப்பதற்காகவும்.........சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவும், கல்வித்துறை வித்தகர்கள் அம்மை யார் மீது குற்றம் சாட்டினார்கள்.

ஆட்சி முறையும் அந்த எதிர்ப்புகளில் கலந்து கொண்டது. பல நாடுகளில் உள்ள சர்வாதிகாரம் அவர்களுடைய பள்ளிக் கூடங்களை மூடி அவருடைய கருத்துக் கோட்பாடுகளுக்காக அவரை நாடு கடத்தியது. அதன் காரணமாகப் பல முறைகள் தாமே தம்மை நாடு கடத்திக்கொள்ள வேண்டியதாயிற்று.

வேறொரு காரணத்துக்கு அல்லாவிட்டாலும் எல்லாக் காலத் திலும் எந்தக் கல்வித்துறை வித்தகரும் இந்த அளவுக்குத் தப்பாகப் புரிந்து கொள்ளப்பட்டவர் என்ற ஒரே ஒரு காரணத்துக்காக வாவது டாக்டர் மாண்டிசோரி அம்மையாரின் பெயர் சரித்திர ஏட்டில் பொறிக்கப்படத் தகுதி பெற்றதாகும். ஒவ்வொருவரும் ஒன்றுகூடி இவருடைய தொண்டாற்றலை அழித்து விடவேண்டு மென்று சூழ்ச்சி செய்து வந்ததைக் கண்டு வேறெவரும் அவர்தம் முயற்சிகளை விட்டொழித்திருப்பார்கள். ஆனால், இவர் தம்முடைய கூர்நோக்கில் மட்டற்ற தன்னுறுதி பெற்றிருந்தார்; குழந்தை களும் தம்முடைய வெளிப்பாட்டில் மாறாது இருந்தனர். அம்மையாருடைய பணியில் அடங்கியிருந்த உண்மையைத் தலை தூக்காது செய்வதற்குத் தகுந்த எதற்கும் அவ்வளவு சக்தியிருப்ப தாகக் காட்டிக் கொள்ளவில்லை. இந்த முறை ஒரு நாட்டில் வேண்டா என்று தடுக்கப்பட்டால், மற்றோர் நாட்டில் இம் முறை தோன்றிற்று. எந்த நாட்டில் அடக்கி ஒடுக்கப்பட்டு விலக்கப் பட்டதோ அந் நாட்டில் சாதித்ததைவிடப் புது விறுவிறுப்புடன் நிறைந்ததாகப் புதுநாட்டில் இம் முறை காட்சியளித்தது.

இந் நூலின் மதிப்புக்கு இது ஒன்றே சாலும். இரண்டு நூல் களுள் ஒன்றாகிய இந் நூல் கடும்பகையையும், தப்பெண்ணத்தை யும் வரவழைத்துக் கொண்டது. இந் நூலைப் படிக்கும் பொழுது ‘குழந்தையின் திருத்தொண்டர்’ குரலைக் கேட்பீர்கள், அப் பெயரால் அம்மையார் அடிக்கடி அழைக்கப்பட்டார் (the apostle of the child).[1] சொடோமா (Sodoma), கொமோரா (Gomorah) என்ற நகர மக்களைப் பழைய திருத் தொண்டர்கள்

[1] இயேசுநாதர் தம் கொள்கைகளைப் பரப்புவதற்கு அனுப்பிய பன்னிரண்டு திருத் தொண்டர்களில் ஒருவர்—மொழிபெயர்ப்பாளர்,

எவ்வாறு கடுமையாகக் கண்டித்தார்களோ அவ்வாறு சமூகத்தை இக் குழந்தையின் .தொண்டர் தாக்கிப் பேசினுர். தொடக்கத்தி லிருந்தே குழந்தையின் நன்மைக்கென்ற ஒரு சமூகத் தொண்டுப் பிரசாரத்தை முக்கியமாக அவர் ஏற்றுக்கொண்டார். அவர் இந் நூலை எழுதின காலத்தில் குழந்தைகள் எவரையும் திகைக்க வைக்கின்ற நிலைமையில் வாழ்ந்து வந்ததை வெட்டிப் பேசினுர். அவர் கூறியவை சில மிகைபடக் கூறியனவாகத் தோன்றலாம். ஆனுல், நாம் ஒன்றை மறந்துவிடக் கூடாது. சமூக மனச் சான்றினை அவர் தட்டியெழுப்ப வேண்டியிருந்தது. பெரும்பாலும் தங்களுக் குத் தெரியாத வகையில்—புதை உணர்நிலையில்—மக்கள் மனத்தில் ஆயிரம் ஆயிரமாகப் பதிந்து கிடக்கும் சார்பெண்ணங்களையும், புரிந்து கொள்ளக் கூடிய ஆற்றல் இன்மையும், தெய்விக உணர்ச்சி இன்மையும் அவரை எதிர்த்து நின்றன.

சாதாரணமாக நடைமுறை சாராததும், விஞ்ஞானத் துறை யிலும், .இவ்வாறு சொற்களைப் பயன்படுத்துவது பொதுவாகக் கையாளப்படுவதில்லை. எனினும் அவர்களுடைய சமூக முன் னேற்றக் குறிக்கோளினுல், அவ்வாறெல்லாம் எடுத்துக் கூறுவதில் தவறேதும் இல்லை என்றும்; நியாயமானதென்றும் கருதினுர். எனவே, இவை இக் குறிக்கோளுக்காக ஏற்பட்ட கட்டுக்கடங்காத கருத்து வெளிப்பாடேயன்றி, மேலோடியாகக் காணப்படுவது போல் மறுக்கமுடியாத போக்கு என்று ஆகாது. அவர்கள் தாக்கிப் பேசுவதிலிருந்து மிகவும் தெளிவாகிறது. மற்றவைகளில் முக்கியமாகக் குழந்தைகளின் மனக்கோட்டை பற்றியும், அக் காலத்தில் கல்வித்துறையினரும், உள இயலாரும் இதுபற்றி என்ன போக்கினை அனுசரித்தார்கள் என்பது பற்றியும் அவர் தாக்கிப் பேசியிருக்கிருர். இந்த மனக்கோட்டையின் பல வெளிப்பாடு களுக்கும் ஒரே வகையில் மதிப்பீடு கொடுப்பதில் அவர்கள் மிகை படக் கூறியிருக்கிருர்கள் என்பதை மறுக்க முடியாது. அவர்கள் நேர்மையானவை எவை, அல்லாதவை எவை என்று ஒன்றுக் கொன்று வேறுபாடு காணவில்லை. அவர் இந்தக் கற்பனையின் ஆக்கும் போக்கினை முழுக் கவனச்சிதைவுள்ள போக்குடன் குழப்பிக் கொண்டனர்.

அம்மையார் விளையாட்டையும், கற்பனையையும் போற்ற வில்லை என்ருல் அவர் விளையாட்டின் பயனை அங்கீகரிக்கவில்லை என்று பொருள் கொள்ளக்கூடாது. அவர் அதற்கு மதிப்புக் கொடுத்தார் என்பதற்குப் பிறகு வெளிவந்த அவர்களுடைய நூல்களே சான்று. அந்தக் காலத்தில் குழந்தைகளின் நல் நடத் தைக்காக முதியோர் கையாண்ட அசலான ஆயத்தங்கள் கற்பனை யும், விளையாட்டும் குழந்தையின் ஏமாளித்தனமும் ஆம். ‘நல்

நடத்தை' என்பதன் பொருள் யாது? முதிர்ந்தோரைக் குழந்தை தொந்தரவு செய்யாதிருத்தலாகும்.

குழந்தைகளின் தொந்தரவு பொறுக்க முடியாதவர்கள் குழந்தைகளைப் பார்த்து, 'போய் விளையாடுங்கள்' என்று அடிக்கடி கூறப்படுவது பழக்கமாக இருந்தது. மாயக் கதைகள் சொல்லும் பொழுது அக் குழந்தைகளை வயப்படுத்துவதற்கும், வேடிக்கைக்கு மல்லாமல் குழந்தைகள் இயங்கா வண்ணம் இருப்பதற்கும், அச்சத் தால் அவர்களுடைய கீழ்ப்படிதலைப் பெறுவதற்கும், அவ்வாறு கீழ்ப்படியாமலிருந்தால் மனிதனைத் தின்னும் அரக்கன் வந்து அவர்களை விழுங்கிவிடுவான் அல்லது நல்ல தெய்வலோகக் கன்னி இவர்களிடம் வெறுப்படைந்து அவளிடம் எதிர்பார்க்கப்படும் பரிசுகளை அவள் கொண்டு வரமாட்டாள் என்று நம்புவதற்கும் அக் கதைகள் சொல்லப்பட்டுவந்தன. அந்தக் காலத்தில் குழந்தை களுடன் கற்பனை விளையாட்டு விளையாடும்பொழுது பல பாவங்கள் அதில் அடக்கப்பட்டிருந்தன. அவைகளில் சிறப்பாகக் கூறவேண்டியது அவர்களை மனப்பசியில் ஆழ்த்துவதாகும். 'குழந்தைமை இரகசியத்தில்'[1] கூறப்படுவதுபோல் குழந்தைகள் பொம்மைகளைத் தொடவில்லை என்பதும், அவ்வாறு செய் தது அக்காலத்தில் தொழில் என்று கருதப்படும் வினையாற்ற லில் அவர்கள் இறங்கியதும் மிகவும் சிறப்புடையதாகும்.

நல்ல வேளையாக இன்று குழந்தையை மனநிறைவு அடையச் செய்வதற்குக் கற்பனையைக் கையாளத் தேவையில்லை. ஆனால், அந்தக் காலத்தில் ஸ்தூல உலகிலும் அது உபயோகப்படுத்தப் பட்டது. இந் நூலில் ஏழைத்தாய் தன்னுடைய குழந்தைக்கு ரொட்டியுடன் ஊனையும் கொடுக்க இயலாத ஏழ்மையில் இருந்த காரணத்தால் ரொட்டியை இரண்டாக்கி ஒன்றினைச் சுட்டிக் காட்டி அது ஊன் என்று இங்கு மறுபடியும் கூறப்படுவது நெஞ்சை இளகவைக்கும் நிகழ்ச்சியாகும். ஆனால் இன்னும் இரங்கல் நிகழ்ச்சி அக் குழந்தையும் தான் இருந்த நிலைமையை ஒப்புக் கொண்டு, தான் பெற்றுள்ளது ரொட்டிதான் என்று தெளிவாக உணர்ந்திருந்தும் தன் கற்பனையினால் தான் ஊனையும் உண்டதாக மகிழ்ச்சி அடைந்ததாகும்.

அம்மையார் சமூகத்தைத் தாக்கிப் பேசினர் என்றும் அவர் கையாண்ட மொழியும் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படும் விஞ்ஞான மொழி அல்ல என்றும் ஒப்புக்கொள்வோம். ஆனால், அம்மையார் தம்முடைய தத்துவத்தைப் பிறர்மேல் திணிப்

[1] Secret of Childhood

பதற்கும் பிறருடைய கொள்கைகளைத் தாழ்த்துவதற்குமே அவ்வாறு பேசினார் என்று பிறர் கூறும் குற்றச்சாட்டுக்கு ஆதாரமே இல்லை. நான் மேலே கூறியதுபோல உறங்கிக் கிடந்த மனச் சான்றுகளைத் தட்டி எழுப்பவும், குழந்தைகள் தமக்குரிய தேவை என்று காட்டிய உண்மைகளைப் பிறர் புரிந்துகொள்ளச் செய்யும் நோக்கத்தாலும் அவ்வாறு அம்மையார் மொழிய வேண்டிய தாயிற்று. இவைகள் அம்மையாருக்கே வெளிக்காட்டப்பட்ட உண்மை என்பது ஒன்றே அவர் கண்ட இயல் நிகழ்ச்சிகள் அனைத்தும் தம்முடைய எந்தக் கல்விக் கோட்பாட்டாலும் விளைந்ததல்ல என்ற மெய்ம்மைக்குச் சான்றாகும்.

டாக்டர் மாண்டிசோரி அம்மையார் வெறும் புனைவியலாளர் (theorist) அல்லர் ; அவ்வாறு இருக்கவேண்டுமென்றும் அவர் விரும்பவும் இல்லை. அவருடைய அணுகு நெறி (approach) என்று ஒன்றிருந்தால், அது அனுபவத்தால் அறியும் தன்மைக்கு நெருங்கியதாக இருக்கும். உள இயல் சார்ந்ததோ, ஆசிரிய இயல் சார்ந்ததோ அல்லது தத்துவ இயல் சார்ந்ததோ என்ற ஒரு முறையையும் உருவாக்க வேண்டும் என்ற எண்ணம் அவர் மனத்தில் என்றும் உதித்ததில்லை. அவர் செய்ததெல்லாம் தொடர்பிணைவை (orientation) விரிவுபடுத்தலேயாகும். அவர்கள் அளித்தது விஞ்ஞான முறைப்படி சரியான பொதுக் கட்டளையாகும். இது மெய்யா, பொய்யா என்று பரந்த அளவில், எல்லாச் சமூக மட்டங்களிலும், உலகில் பல நாடுகளில் பரீட்சை செய்யப்பட்டு உண்மை தான் என்று காட்டப்பட்டவைகளாகும். இந்தப் பொதுக் கட்டளைகளை அளித்ததின் நோக்கம் கல்வித் துறையிலும், சமூகத் துறையிலும் மனிதனின் ஆளுமை வளர்வதற்குத் தக்க நடைமுறையில் உதவி புரிவதற்காகும்.

அம்மையாரும், அவர்களுடைய தொண்டாற்றலால் தூண்டப் பெற்ற துணைவர்களும் பல சூழ்நிலைகளில் குழந்தைகள் வெளிக் காட்டின இயல் நிகழ்ச்சிகளின் மேலும், உண்மைகளின் மேலும் கவனத்தைச் செலுத்தினார்கள். கவனிக்கப்பட்ட இயல் நிகழ்ச்சியின் சாரத்தை எப்பொழுதும் அவர் தேர்ந்தெடுத்து, முடிந்த வரை அவைகளைக் கொண்டு முக்கியமான 'புற மெய்ம்மை மறுத்த வாழ்வியல் மெய்ம்மைக் கோட்பாடு'[1] சார்ந்த ஒரு காட்சியை விரிவு படுத்த முடியுமா என்று முயன்றார். குழந்தைகளுடன் அவர் நடத்திவந்த நடைமுறைத் தொழிலால் வெளிப்படுத்

[1] existentialistic—ஒன்றுக் கொன்று தொடர்பு கொண்ட சித்தாந்தங்கள் மெய்ம்மையான பொதுத் தகவுகளை மறுத்து ஒவ்வொருவனும் தன்னுடைய செயலால் தனக்கே தகவை உண்டு பண்ணிக்கொள்ள வேண்டுமென்றும் அவ்வாறு செயலாற்றுவதற்கு அந்தந்த நிமிடத்தில் தன் முழுமையும் வாழவிட வேண்டுமென்னும் நம்பிக்கையைக் குறிக்கும் பதம்,

தப்பட்ட இயல் நிகழ்ச்சிகள் இரண்டினுக்கும் பொருள் விளக்கம் தருவதும், எடுத்துக் காட்டுவதும், அவைகளிலிருந்து வடித்து எடுத்த முடிவுகளும் ஆகிய அனைத்தையும் அக் காலத்தில் வழக்கில் இருந்த கலைச் சொற்களால் தம் உள்ளக் கருத்தை வெளியாக்கு வதும் செய்தார்கள்.

இக் காரணத்தினாலும், அவர் ஆங்காங்குக் குறிப்பிட்ட சில கோட்பாடுகள் இன்று தகர்த்தெறியப் பட்டதாலும் சில கல்வித் துறை சார்ந்த உள இயல் போக்குகள் அம்மையார் கூறுவதைப் பொய் எனப் பிரகடனம் செய்தன. சி. எஃப். உல்ஃப் என்பவர் (C. F. Wolff) தம்முடைய இனப் பெருக்கக் கோட்பாடு (Theoria-generations) என்ற கோட்பாட்டினால் 'உடலியக்கத்துக்கு நுண் உயிரினங்களே காரணம் என்ற கோட்பாட்டாளரின் கோட்பாடு களையும் (animalenlists) கருவுரு முட்டைக் கோட்பாட்டாளரின் கோட்பாடுகளையும் (ovulists) தகர்த்தெறிந்த காரணத்தால், குழந்தைகள் உலகத்தில் பிறக்கிறார்கள் என்ற உண்மையை மறுத் தால் எவ்வளவு நியாயமற்றதோ அவ்வளவு நியாயமற்றதாகும், மற்றவர்கள் அம்மையார் பற்றிக் கூறும் கூற்றும். அந்தக் காலத் தில் நடைமுறையில் இருந்துவந்த கோட்பாடுகள் தகர்த்தெறியப் பட்டிருக்கலாம். ஆனால், உண்மை உண்மையே. மற்றக் கோட் பாடுகள் உண்மை என்று ஒப்புக்கொண்டபொழுது அன்று அம்மையார் வருணித்தவை இன்று திரும்பத்திரும்ப உருக்காட்டு கின்றன. இந்த உண்மைகளை நம் காலத்தில் விளக்கம் தர வேண்டுமென நினைத்தால் டாக்டர் மாண்டிசோரி இயற்கையாக இன்றுள்ள கோட்பாடுகளைக் குறிப்பிடுவார்கள். அதைத்தான் அன்று அவர்கள் செய்தார்கள். அன்று நடைமுறையில் இருந்து வந்த சமகாலப் பலதுறை அறிவியல்கள் உணர்ந்ததை அம்மையார் உபயோகிக்க வேண்டியிருந்தது. அப்படியானால் அக்காலத்தில் நடப்பில் இருந்துவந்த கோட்பாடுகள் அம்மை யாரின் கோட்பாடெனப் பொருள்படா.

டாக்டர் மாண்டிசோரி அம்மையார் கல்விபற்றிக் கூற வேண்டியதெல்லாம் கூறிவிட்டார்களா? நிச்சயமாக அவர்கள் அவ்வாறு எண்ணவில்லை.

தத்துவ இயலாரும் கல்வித்துறை சார்ந்தவர்களும் அம்மை யாரைக் கொள்கைப் பிடிவாதக்காரர் என்றும், வளையாதவ ரென்றும், தன்னைத்தவிர மற்றவர்கள் எல்லோரும் பிழை செய்த வர்களென்று எண்ணும் போலிப் பகட்டாளரென்றும் நிந்தித்தார் களேயானால், அதற்குக் காரணம் என்னவென்றால், அவர்கள் பழமையிலிருந்து வாதாடிக் கொண்டேயிருந்தார்கள். ஆனால்,

அம்மையார் புதுமைக் கல்வி இயலுக்குத் தொடக்க நிலை ஒன்றை எடுத்துக்காட்டிவிட்டார் என்பதை அவ்வாறு நிந்திப்பவர்கள் உணராமையே ஆகும்.

இந்தப் புதுமை அறிவியல் அன்று பிறந்த குழந்தை போன்றது என்றும், எதிர்காலத்தில் அறிவியல் முன்னேற முன்னேற இதைப் பற்றிப் புது விளக்கங்கள் கூறவேண்டிய சாத்தியக்கூறுகள் இருக்கலாம் என்றும் டாக்டர் மாண்டிசோரி உணர்ந்தார்கள். அவர்கள் தீட்டிய புது நூல்கள், அவருடைய முதல்முறை எவ்வாறு வரவர முன்னேற்றம் அடைந்தது எனக் கூறுகின்றன.

அம்மையார் அடிக்கடி கீழ்வருமாறு கூறுவதுண்டு: 'குழந்தையிடம் உள்ள மாபெரும் உள்ளார்ந்த சக்தி என்று நான் எடுத்து விளக்கியனவெல்லாம் இதுவரை எவரும் அவ்வாறு ஒன்று இருக்கிறதென்று சிந்திக்கப்படாத ஒரு சக்தி உள்ளிருக்கிறதென்பதே ஆகும்.' 'கால்வனி' என்ற அறிவியலார் இறந்த தவளையின் வறண்ட கால்கள் தாமே 'விலுக் விலுக்'கென்று இழுத்துக் கொண்டதைக் கண்டு அதன் காரணம் ஒரு மாய சக்தியாக இருக்க வேண்டுமென்று நம்பினார்.[1] இதை அவர் சுட்டிக் காட்டினார். மின் சக்திபற்றி ஓர் அக்கறை பிறக்கலாயிற்று. இன்று அணுசக்தி விஞ்ஞானத்தில் வந்து நிற்கிறது. குழந்தையின் உள்ளார்ந்த சக்தியின் பயன்பற்றியோ அதைப்பற்றி அறிதல் பற்றியோ சிந்திக்கப்போனால், நாமும் கால்வனி காலத்தவராகத் தான் இருந்து வருகிறோம்.

அணு விஞ்ஞான உலகம் டாக்டர் மாண்டிசோரியை மெய்ப்பித்துக் காட்டும் வகையில் உண்மைகளை வெளியாக்கிவிட்டது. முன்னேற்றங்கள் புதியன தோன்றிவிட்டன. அவைகளை ஒட்டித் தக்க முறையில் நாம் நடந்துகொள்ள வேண்டுமானால், இந்த மன்பதை (humanity) இன்னும் அதிகமாகவும் வேகமாகவும் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அணுசக்தியின் பிரமாண்டமான அழிக்கும் சக்தியால் மனித இனமே அழிந்து போகும் என்ற இடைவிடா அச்சத்தில் இருக்கிறது. ஒப்புரவும், சமநிலையும் பெற்ற மனிதர்கள் வேண்டும் என்றும் இரங்கிப் பேசும் பேச்சு ஒரு புறம் இருக்க, திகைப்பூட்டும் உண்மை என்னவென்றால் இளங் குற்றவாளிகளும், குழந்தைகளைப் பாதிக்கும் நரம்புப்பிணி உடையவர்களும் (spelling clinics), மருத்துவ நிலையங்களைத் தேவைப்படுகின்ற கல்லூரி மாணவர்களின் எண்ணிக்கையும் நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டே போகின்றது.

[1] அச் சக்தியை எவ்வாறு பயன்படுத்துவது என்பதெல்லாம் அன்று அவர் கருத்துக்கு எட்டவில்லை.

இந்தக் கவர் நிலையில் (dilemma) ஒளிருகிற குழந்தை உருவம் மனநோய்க்கு இடம் தராத நலமான நிலைக்குத் தானே வழிகள் கண்டுபிடித்திருக்கிறதென்றும், குழந்தை தானே மகிழ்ச்சியுடன் தன் முயற்சியால் மிக இளம் பருவத்தில் கற்றுக்கொண்டு, புதுமை யாக எல்லோர் கவனத்தையும் ஈர்த்துவிட்டது என்றும் டாக்டர் மாண்டிசோரி சுட்டிக்காட்டியிருக்கிறார். இந்தக் கவர் நிலை இன்னும் அதிகமாகிறதென்றே கூறலாம். ஏனென்றால் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் டாக்டர் மாண்டிசோரி அம்மையார் கண்டு பிடித்த உண்மைகள் இவை. பல விஞ்ஞானத் துறைகளின் தற்கால ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகளும் அதே முடிவுக்கு வந்திருக்கின்றன.

ஆதலால் இந்தச் சரித்திரப் புகழ்பெற்ற நூல் வெளியாகிறது. இந்நூல் இத்தாலியில் 1916ஆம் ஆண்டில் முதலில் வெளி வந்தது. அன்று இருந்ததைவிட இன்று பள்ளிக்கூடப் பாடங்கள் மாபெரும் முன்னேற்றங்களை அடைந்திருக்கின்றன என்பதைக் காட்டி எச்சரிக்கை கூறவேண்டியிருக்கிறது. இரண்டாம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறதை ஒரு கம்பீர மாளிகையின் மூலைக்கல் என்றே கொள்ளவேண்டும். இந்த முன் னேற்றத்தை எடுத்துக்காட்டத் துரதிருஷ்டவசத்தால் இன்றுவரை சிறிதளவே அச்சிடப்பட்டிருக்கிறது என்றோ, அச்சிடப்படவே இல்லை என்றோ கூறிவிடலாம். எனினும் இத்தாலி நாட்டில் உள்ள பெர்காமோ (Bergamo) என்னும் இடத்தில் பல் நாட்டு மாண்டிசோரிக் கல்வி நிலையத்தில் நடைபெற்ற முதல் பயிற்சி களில் இந்த முன்னேற்றச் சாதனைகள் அளிக்கப்படுகின்றன. அண்மை எதிர் காலத்தில் சில நூல்கள் தொடர்ந்து வெளியாக்கப் பட்டுப் பொதுமக்களுக்குக் கிடைக்கலாம் என எதிர் பார்க்கப்படு கிறது.

ஆம்ஸ்டர்டாம், 1965 — மரியோ எம். மாண்டிசோரி[1]

[1] அம்மையாரின் வளர்ப்பு மகன்; அம்மையார் நூல்கள் அனைத்துக்கும் பொறுப்பாளி.

# பொருளடக்கம்

# 1. குழந்தை வாழ்க்கையின் அளவாய்வு

குழந்தையின் மனநலத்தைக் கட்டுப்படுத்துகின்ற பொது விதிகளுக்கு இணையாக உடலைக் கட்டுப்படுத்தும் பொது விதிகளும் இருக்கின்றன.—சிறு குழந்தைகளுக் கென்று நான் அனுசரித்து வந்த முறைகளை ஏழாண்டுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கும் தொடர்ந்து அனுசரிக்கலாமே என்று என்னைக் கேட்டுக்கொண்ட பலர், 'இந்த முறை பலிக்குமா' என்னும் ஐயப்பாட்டைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் எடுத்துக்கூறும் இடையூறுகள் எல்லாம் முக்கியமாக ஒழுக்கம் சார்ந்தவைகளே.

'குழந்தை தன்னுடைய விருப்பப்படியே நடப்பதற்குப் பதிலாக இனிமேல் மற்றவர்களின் விருப்பத்திற்கு மரியாதை செலுத்த வேண்டாமா? தானே தேர்ந்து எடுத்துக்கொண்ட பணிக்குப் பதிலாக முக்கியமாகத் தேவைப்படுகின்ற ஒரு பணியில் தன்னைக் கட்டாயப்படுத்தி ஒருநாள் நடந்துகொள்ளத் தெரிய வேண்டாமா? மனிதனுடைய வாழ்க்கையே வெறும் எளிய களிப்பான வாழ்க்கையல்லவே! ஆதலால், இவனும் தன்னைத் தியாகம் செய்யப் பழகிக்கொள்ள வேண்டாமா?' என்றெல்லாம் என்னிடம் கேட்கின்றனர்.

ஆரம்பக் கல்வியைச் சார்ந்த சில பகுதிகள் ஆறும் வயதிலும் தொந்தரவு கொடுக்கக் கூடியவை என்று சிலர் கூறுகின்றனர். அந்தத் தொல்லைகள் ஏழாம் ஆண்டிலும் தீவிரமாகக் கவனிக்கப் பட வேண்டாமா என்று கீழ்வரும் வகையில் எதிர்ப்புகளைத் தெரிவிக்கின்றனர். பெருக்கல் வாய்பாட்டின் படுதொல்லையை

நாங்கள் நேருக்கு நேர் அனுபவித்து வருகிறோம். இலக்கணத்தால் ஏற்படும் வறண்ட மனக்குட்டிக்கரணங்களையும் உணர்வோம். நீங்கள் இதற்கெல்லாம் என்ன சொல்கிறீர்கள்? இவைகளையெல்லாம் அறவே ஒழித்துவிடுவீர்களா? அல்லது இறுதியில் குழந்தை இன்றியமையாதவைகளுக்குத் தலை வணங்கித்தான் ஆக வேண்டும் என்று ஒப்புக்கொள்கிறீர்களா?

நான் கையாண்ட முறையின் அடிப்படைக் கொள்கையாகச் 'சுதந்திரம்' என்பதைச் சுற்றிலுமே இந்தத் தர்க்க வாதங்களெல்லாம் சுழல்கின்றன.

ஒருவேளை குறுகிய காலத்துக்குள் இந்த எதிர்ப்புகளெல்லாம் ஒரு புன்னகையைத் தூண்டி விடலாம். இந் நூல் இனி வரும் பதிப்புகளில், இந்த எதிர்ப்புகளையும் அவைகளைப்பற்றி நான் கூறிய விளக்கங்களையும் சேர்த்து வெளிவராமல் மறைத்து விடும்படியும் நான் கேட்டுக்கொள்ளப்படலாம். ஆனால், தற்போது அவை இருந்துவருவதற்கு உரிமையுண்டு. எதிர்ப்புகளுக்குத் தக்க சமாதானமும் கூற வேண்டியிருக்கிறது. நேர்முகமாகவும், தெளிவாகவும், ஒப்புக் கொள்ளும் வகையிலும் சமாதானம் கூறுவதென்பது மிகவும் எளிதன்று. ஏனென்றால், இவைகளைப் பற்றி ஒவ்வொருவரும் உறுதியான ஆழ்ந்த நம்பிக்கைகளைப் பெற்றிருக்கின்றனர். அவைகளைப்பற்றித் துருவிப் பார்ப்பது எளிதன்று.

எடுத்துக்காட்டு ஒன்றை இங்குக் கூறினால் மிகுந்த அளவு வேலை குறையலாம். பச்சிளங் குழந்தைகளின் உடல்நல வாழ்வு என்ற பகுதியில் அடைந்த முன்னேற்றங்கள் இக் கேள்விகளுக்குத் தக்க விடைகளை மறைமுகமாக ஏற்கெனவே அளித்து விட்டிருக்கின்றன. முன்னெல்லாம் குழந்தைகளை எவ்வாறு குணப்படுத்தி வந்தார்கள்? பொதுமக்களால் இன்றியமையாத பயிற்சிகள் என்று கருதப்பட்டு வந்தவைகளில் சிலவற்றை அனேகர் இன்னும் நினைவுபடுத்திக்கொள்ளக்கூடும். கைக்குழந்தையின் கால்கள் இறுக்கிப் பட்டைத் துணியில் வரிந்து கட்டப்பட வேண்டும். இல்லாவிட்டால் அதன் கால்கள் கோணலாக வளரும். நாக்கின் அடியில் காணப்படும் இணைப்புத் 'தசை'யைக் கத்தரித்து விட்டால் வருங்காலத்தில் அது நன்றாகப் பேச முடியும். எப்பொழுதும் குழந்தையின் செவிகள் வெளியே நீட்டிக் கொண்டிராமல் இருக்க ஒரு குல்லாவால் காதைச் சேர்த்து அணியப்பட வேண்டும். படுத்துக்கொண்டிருக்கும் குழந்தையின் மண்டை ஓட்டில் நிரந்தரமான குறைபாடு ஏற்படாதவகை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பால் குடிக்கும் குழந்தைகளை நல்ல தாய்மார் குழந்தைகளின்

மூக்கைத் தடவிக்கொடுத்தும் நசுக்கிவிட்டும் வந்தார்கள். எதற்கு? சப்பை மூக்கு ஆகாமல் நீண்ட அழகான மூக்கைப் பெறுவதற்கு. குழந்தை பிறந்தவுடன் தங்கக் காதணியை அணிவித்தார்கள். எதற்கு? குழந்தைகளின் கண்பார்வை நன்ருக வளர்வதற்கு. இத்தகைய பழக்கங்கள் சில நாடுகளில் மறந்தே போயிருக்கலாம். ஆனுல், மற்ற நாடுகளில் இன்றும் கையாளப்படுகிறது. குழந்தைகளே நடை பழக்குவதற்கு அனுசரிக்கப்பட்ட பல முறைகளே எவரால் மறக்க முடியும்? குழந்தை பிறந்து முதல் சில மாதங்களில் அதனுடைய நரம்பு மண்டலம் முழுமை வளர்ச்சி பெருத நிலேயில் இருக்கிறது. அந்த நிலேயில் குழந்தையால் அதனுடைய இயக்கங்களே ஒருமைப்படுத்த இயலாது. அப்பொழுது தாய்மார் ஒவ்வொரு நாளும் எத்துணே அரைமணிக் காலங்களேக் 'குழந்தைக்கு நடைபழக்குவதில்' வீணுக்கியிருக்கின்றனர். சின்னக்குட்டியின் உடலேத் தாங்கிக்கொண்டு அதனுடைய சிறு பாதங்களின் நோக்கமற்ற இயக்கங்களேக் கவனித்தனர். குழந்தை அப்பொழுதே நடப்பதற்கு முயற்சி செய்யத் தொடங்கிவிட்டது என்று தங்களேயே ஏமாற்றிக் கொண்டனர். குழந்தை பையப்பையத் தன் பாதங்களே வளேத்துத் தன் கால்களேத் திடமாக அசைப்பதால் ஏற்படும் இந்த முன்னேற்றம் எல்லாம் தாம் கற்பித்ததால் ஏற்பட்டவை என்று தாயார் காரணம் கூறுகிருள். இறுதியில் இயக்கம் நிலேபெறுகிறது. ஆனுல், இன்னும் சமநிலே பெறப்படவில்லே. ஆதலால் சரிவர இன்னும் நிற்க முடிவதில்லே. அந்த நிலேயில் தாய்மார் குழந்தையின் உடலேப் பட்டைகள் கொண்டு பிணேத்துப் பிடித்துக்கொண்டு தங்களுடன் தரைமேல் நடக்கவைத்தார்கள். அவர்களுக்கு நேரம் இல்லாத போது குழந்தையை ஒருவகை மணி போன்ற கூடைக்குள் நிறுத்திஞர்கள். கூடையின் அடிப்பாகம் அகலமானது. ஆதலால், குழந்தை தவறிக் கீழே விழாதபடி காத்துக் கொண்டது. இந்தக் கூடைக்குள் குழந்தையைக் கட்டிவிட்டார்கள். குழந்தையின் கைகள் கூடைக்கு வெளியே தொங்கும்படி விட்டார்கள். குழந்தையின் உடலேக் கூடையின் மேல் விளிம்பு தாங்கிக் கொண்டது. குழந்தையால் நிற்க முடியாவிட்டாலும் தன் கால்களே முன்னும் பின்னும் அசைத்ததால் அது 'நடக்கிறது' என்று கருதப்பட்டது.

அண்மையில் பயன்படுத்திவந்த பண்டைப் பழக்கச் சின்னம் ஒன்றிருக்கிறது. அது ஒரு குவிந்த கிரீடம் போன்றது. குழந்தை தாகை நிற்கும் சக்தி பெற்று வரும் சமயத்தில் இந்தக் கிரீடத்தைக் குழந்தைக்குச் சூட்டிவிடுவார்கள். அந்த வகையில் குழந்தைகள் கூடையிலிருந்து விடுதலே பெற்றனர். இதுவரை குழந்தை முடவனுக்குள்ள ஊன்றுகோல் போல் கூடையால் தாங்கப்பட்டு

வந்தது. இப்பொழுது அந்தப் பாதுகாப்பு இல்லாததால் நிற்கும் போதெல்லாம் 'தொப் தொப்' என்று அடிக்கடி விழுந்து வந்தது. அந்த நிலையில் மண்டையில் காயம் ஏற்படாது தடுப்பதற்கே இந்தத் தலைக்கவசம் அணிவிக்கப்பட்டது.

குழந்தையின் அருள் மீட்புக்காக விஞ்ஞானம் முன் வந்த பொழுது தோன்றிய அருள் வெளிப்பாடுகள் என்ன? குழந்தையின் செவிகளையும் மூக்குகளையும் நோக்குவதற்கென்று எந்தப் பண் பற்ற முறையையும் அது எடுத்துக்கூறவில்லை என்பது உறுதி. அல்லது குழந்தை பிறந்தவுடனே அதை எப்படி நடக்கவைப்பது என்பதைப் பற்றியும் தாய்மாருக்கு விளக்கிக் கூறவும் இல்லை. குழந்தையின் மூக்கும் செவியும் இப்படி இப்படித்தான் வளர வேண்டும் என்பதை இயற்கை அன்னையே கவனித்துக் கொள்வாள் என்று எடுத்துக் கூறிற்று. நாவின் அடியில் உள்ள இணைப்புத் தசையைக் கத்தரித்து விடாமலே மனிதன் பேசுவான் என்பதையும், கால்கள் தாமே நேராக வளரும் என்பதையும், ஒருவர் குறுக்கீடும் இல்லாமலே நடைப்பழக்கம் தானாகவே தோன்றும் என்பதையும் எடுத்துக்காட்டிற்று.

எனவே, நாமும் நம்மால் இயன்றவரை இயற்கையின் போக்கின்படியே விட்டுவிட வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு குழந்தை தானாகவே சுதந்திரத்துடன் வளர விடப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது தனக்குரிய உடலமைப்பையும் அதன் வேலைகளையும் இன்னும் வேகமாகவும் செம்மையாகவும் ஆக்கிக் கொள்ளும். எனவே, குழந்தையை இறுகக் கட்டும் துணிப் பட்டைகள் நீக்கப்பட்டன. 'மிகுந்த அமைதி என்பது ஓய்வு பெறும் நிலையாகும்' என்பது எடுத்துக் காட்டப்பட்டது. குழந்தையின் கால்கள் தடுதலை இல்லாமல் இயங்கும் வகையில் நீட்டிப் படுக்கும் நிலையில் கிடக்கும். பலர் நினைப்பது போல் குழந்தையின் மனமகிழ்ச்சிக்காக இப்படியும் அப்படியும் இந்த முறையால் தள்ளாடச் செய்ய வேண்டியதில்லை. சரியான பக்குவநிலை அடைவதற்கு முன் குழந்தை நடக்கும்படி உந்தப்பட மாட்டாது. அந்த நேரம் வந்ததும் குழந்தை தானாகவே எழுந்து நின்று நடக்கத் தொடங்கும்.

இப்பொழுதெல்லாம் தாய்மார்கள் இந்த உண்மைகளை ஒப்புக்கொண்டிருக்கின்றனர். குழந்தைகளை இழுத்துக் கட்டும் பட்டைகள், நாடாக்கள், கூடைகள் முதலியவை விற்போர் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்துவிட்டனர்.

இதன் காரணமாகக் குழந்தைகள் முன்னைவிட இப்போது வளைவில்லாத நேர்க் கால்களுடன் வளர்கின்றார்கள். முன்னைவிட இன்னும் முன்கூட்டியே மேலான முறையில் நடக்கிறார்கள்.

இது நிலைபெறப்பட்ட உண்மை. மிகவும் மன ஆறுதல் அளிக்கும் நிலையாகும். குழந்தைக் காலின் வளைவற்ற தன்மையும், அதன் மூக்கு, செவி, தலை முதலியவைகளின் வடிவமும் நம் பாதுகாப்பின் பயனால் ஆனவை என்பதை நினைக்கும் பொழுது என்ன இடைவிடாத கவலையாய் இருந்திருக்கும். இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சாதிப்பதென்பது எவ்வளவு மகத்தானது! 'இனி இயற்கை அன்னையே கவனித்துக் கொள்வாள் என்று கூறுவதில் என்ன உதவி பெறுகிறோம்! என் குழந்தையைச் சுயேச்சையாக வளரவிடுவேன். அது எழிலாக வளர்வதை நான் கவனித்து வருவேன். அற்புத மாயைத்தோற்றத்தை நான் அமைதியாகக் காட்சி காண்பவளாக இருப்பேன்.'

இதைப்போலவே குழந்தையின் உள வாழ்விலும் சில மாறுதல்கள் நடந்துகொண்டு வருகின்றன. இவைகளைப் போன்ற கவலைகளுக்கு நாம் ஆளாகிறோம். குழந்தையின் நற்குணங்கள் வளர வேண்டும்; அதன் நுண்ணறிவு பெருக வேண்டும். மன எழுச்சிகள் மலர்ந்து ஒழுங்குபடுத்தப்பட வேண்டும். இவைகளை எல்லாம் நாம் எவ்வாறு செய்ய வேண்டும் என்று நம்மையே கேட்டுக் கொள்ளுகிறோம். குழந்தையின் ஆன்மாவை ஓரிரு சமயங்களில் தொடுகிறோம். அல்லது முன்னெல்லாம் தாய்மார் குழந்தைகளின் மூக்குகளை அமுக்கிவிட்டதுபோலும், செவிகளைத் தாழ்வாக அழுத்திக் கட்டியது போலும் நாமும் குழந்தை உள்ளத்தைக் கட்டுப்படுத்துகிறோம். சில மட்டமான வெற்றிகளின் அடியில் நம்முடைய கவலைகளை மறைத்துக் கொள்கிறோம். ஏனென்றால் மனிதர் நற்குணங்களுடனும், நுண்ணறிவுடனும், நல்லுணர்ச்சிகளுடனும் வளர்வதை நாம் காண்கிறோம். ஆனால், இவைகளெல்லாம் இல்லாத காலத்தில் நாம் தோல்வியுற்றவர்களாகிறோம். அப்படியானால் நாம் என்ன செய்ய வேண்டும்? சீர் கெட்டவனுக்கு நற்குணங்களை அளிப்பது யார்? அறிவிலிக்கு அறிவூட்டுவோர் யார்? ஒழுக்கமிலா வெறியனுக்கு நல்ல மனித உணர்ச்சியை அளிப்பது யார்?

இத்துணைக் குணங்களும் ஆன்மாவின் விட்டுவிட்டுச் செய்யும் முயற்சிகளால் மனிதனிடம் தோன்றுகிறது உண்மையானால், இந்த ஆன்மாக்கள் பலமற்று இருக்கும் வேளையில் இன்னும் கொஞ்சம் சக்தியைப் பயன்படுத்தினால் போதும். ஆனால், இது போதாது.

உடல் உருவத்தை ஆக்குவதில் நமக்கு எவ்வளவு பங்கில்லையோ அதேபோல் தெய்விகத் தன்மை வளர்ச்சியிலும் நமக்கு ஒரு பங்கும் இல்லை.

இயற்கை அன்னைதான், சிருட்டிதான் இவைகள் அனைத்தை யும் ஒழுங்குபடுத்துகிறது. இந்த உண்மையை ஒப்புக் கொண் டோமானால், இயற்கையான வளர்ச்சிக்கு நாம் ஒருமுட்டுக் கட்டையும் போடக்கூடாது என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டும். நல்லொழுக்கத்தையும், நுண்ணறிவையும், நல்லுணர்ச் சியையும் இவை போன்ற ஒவ்வொன்றையும் தனித்தனியே எவ் வாறு வளரச் செய்வது என்று கவனிப்பதற்குப் பதிலாகக் கல்வியின் அடிப்படையாக எல்லாப் பிரச்சினைகளும் ஒரே பிரச்சினை யாக முன்தோன்றும். அதுதான் 'குழந்தைக்குச் சுதந்திரம் அளிப்பது எங்ஙனம்' என்பதாகும்.

குழந்தையின் உடல் வளர்ச்சியும், அதன் தொழில்களும் இயற்கையாக வளரவேண்டும் என்று விஞ்ஞானம் காட்டுகிறது. தலையும், மூக்கும், செவிகளும் இடர்ப்பாடுகள் இல்லாமல் சுயேச்சையாகச் சிறந்த அழகுடனும் கவர்ச்சிகரமாகவும், பிறந்த குழந்தையின் சக்திக்கு இணங்க மிகுந்த சரிநுட்பத்துடன் வளர் கின்றன. அதேபோல் இங்கும் அந்தச் சுதந்திரத்தைக் கடைப் பிடிக்க வேண்டும். எனவே, இங்கும் சுதந்திரமே முக்கிய கருவி யாக இருந்து மிகச் சிறந்த நற்குணங்களையும், நுண்ணறிவையும், மேலீடான மன உணர்ச்சிகளையும்[1] வளர்க்க வழி காட்டும். வளர்ச்சியின் அற்புதங்களைப்பற்றி ஆசிரியர்களாகிய நமக்கு ஆழ்ந்து சிந்திக்கவும் அமைதிபெறவும் வழி வகுக்கும்.

மேலும் இந்தச் சுதந்திரமானது நமது போலிப் பொறுப்பான வலிமிகுந்த பளுவிலிருந்தும் பயங்கரமான மாயையிலிருந்தும் நம்மைக் காக்கும்.

நம்முடைய பொறுப்பு அல்லாதனவற்றை நமது என்று கருதி நம் துணை இன்றியே தாமே தம்மைச் சீரமைத்துக் கொள்ளக் கூடியவற்றை நாம்தான் சீராக்குகின்றோம் என நினைத்துக் கொண்டோமானால், அந்தோ! வந்தது வினை நமக்கு! அப்பொழுது நாம் பித்தர்களைப்போல் ஆகிவிடுகிறோம். அப்படியானால் முக்கிய கேள்வி பிறக்கிறது. நம்முடைய உண்மையான பணியும் பொறுப் பும் எவை? நாம் நம்மையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம் என்றால் பிறகு உண்மைதான் எது? நாம் விட்டும் விடாததும் எவை? அவைகளால் நம்மைச் சார்ந்த பழிகள்தாம் எவை? சேவலைப்போல் நாமும் கூவுவதால் காலையில் பகலவன் உதய மாகிறான் என்று நம்பினோமானால் நம்முடைய சரியான நினைவுக்கு வரும்பொழுது என்ன கடமைகளை நாம் காண்போம்? நம்முடைய

[1] Sentiment.

மெய்யான ரொட்டியை உண்ண நாம் மறந்து போனதால் எவர் திக்கற்றவர்களாக விடப்பட்டிருக்கின்றனர்?

குழந்தையின் 'உடல் சார்ந்த மீட்பின் வரலாறு'[1] என்பது நமக்குச் சிறந்த வகையில் அறிவூட்டும்'அளவுக்குப் பின் தொடர்ச்சி கொண்டுள்ளது.

உடல்நலநூல் என்பது மனித இன வரலாறு[2] சம்பந்தமான எடுத்துக்காட்டுகளுடன் நிற்கவில்லை. எல்லோர்க்கும் இது மனித இன வரலாறுபற்றி எடுத்துக்காட்டினதுடன் உடலானது தானுக இயற்கையாக வளர்கிறதென்று எல்லோர்க்கும் நிரூபித்துக் காட்டியது. ஏனெனில், நடைமுறையில் குழந்தை நலம் என்ற பிரச்சினை உடலமைப்பின் நிறைவு குறைவுகளைப் பற்றி எழவில்லை. விஞ்ஞானம் குறுக்கிடவேண்டிய வகையில் எழுந்த உண்மையான குழந்தைப் பிரச்சினை என்னவென்றுல் குழந்தைப் பருவத்தில் ஏராளமாக உயிரிழந்த பயங்கர நிகழ்ச்சிகளாகும்.

இக்காலத்தில் இந்த உண்மையைப் பற்றி இங்கு ஆராய்வது அதிசயமாகத் தோன்றலாம். குழந்தைகளைக் கணக்கின்றிச் சாவு வாரிக்கொண்டு போகும்பொழுது பொதுமக்களுடைய கவலை எல்லாம் குழந்தை இறப்பில் செல்வதற்குப் பதிலாக மூக்கின் வடிவத்தைப் பற்றியும், கால்களின் வளைவு இலாத் தன்மை பற்றியும்தான் இருந்தது. உண்மையான பிரச்சினை வாழ்வா? சாவா? என்பது. இது கவனிக்கப்படாமலே போயிற்று. இதுபோன்ற உரையாடல்களை என்போல் கேட்டிருப்பவர்கள் பலர் இருப்பார்கள் என்பது உறுதி. 'குழந்தை வளர்ப்பில் எனக்கு நிறைந்த அனுபவம் உண்டு. ஒன்பதைப் பெற்றேன். அவைகளில் எத்தனை பிழைத்திருக்கின்றன?' இரண்டு இருந்த போதிலும் இந்தத் தாயார் அனுபவம் நிறைந்தவள் என்று கருதப்பட்டாள்.

சாவுப்பட்டியல் நமக்குக் காட்டும் மிகுதியான கணக்குகளைப் பார்க்கும்பொழுது இந்த நிகழ்ச்சியை, 'குற்றமற்றவர்களின் படுகொலை'[3] என்று கூறுவது சாலப்பொருந்தும். லெக்ஸிஸ்[4] என்பவருடைய புகழ்பெற்ற வரைபடம் என்பது இந்த நாட்டுக்கோ வேறு குறிப்பிட்ட நாட்டுக்கோ பொருந்தியதன்று. பொதுவாகச் சராசரி மனித சமுதாயச் சாவைக் குறிக்கிறது. இந்தக் கொடிய சாவின் வேகம் எல்லா நாட்டுக்கும் பொருந்தும் என்ற உண்மையை வெளிப்படுத்துகிறது. இதற்குக் காரணங்கள்

[1] History of physical redemption. [2] Anthropology.
[3] Slaughter of the Innocents. [4] Lexis.

இரண்டு இருக்கவேண்டும். குழந்தைப் பருவத்தின் மிகவும் மெலிந்த தன்மை ஒரு காரணமாய் இருக்கவேண்டும் என்பதில் ஐயம் இல்லை. இரண்டாவது காரணம், இந்த மெலிவைத் தடுப்பதற்குத் தற்காப்பு இன்மை ஆகும். இந்தத் தற்காப்பு இன்மை என்பது எல்லா மக்களிடமும் பொதுவாகக் காணப் படுகிறது. நல்லெண்ணமோ பெற்றோர் அன்போ ஒரு விதத்திலும் குறையவில்லைதான். ஆனால், ஏதோ மறைந்த காரணத்தில் விஷயம் அடங்கியிருந்தது. ஒரு பெரிய விபத்தி லிருந்து காப்பற்றச் சக்தியற்றிருந்தார்கள். இதைப்பற்றிப் பொதுமக்களுக்குத் தெரியாமல் இருந்தது. தொத்துநோய்கள்—அதிலும் முக்கியமாகச் சிறுகுடல் சம்பந்தமான நோய்களால் குழந்தைச் சாவு ஏற்படுகிறது என்பது இப்பொழுது எல்லோரும் பொதுவாக அறிந்த உண்மையாகும். சிறுகுடல் கோளாறுகள் உணவைக் கெடுத்து நச்சுப் பொருள்களை (Toxins) உண்டாக்கி இளம் வயதில் மிகவும் உணர்ச்சியுடைய மென்மையான திசுக்களைப் பாதிப்பதால் அனேகமாக எல்லாக் குழந்தைச் சாவுகளுக்கும் காரணமாய் இருந்தன. குழந்தைகளுக்குப் பொறுப்பாளிகளாக இருந்தவர் செய்கின்ற சில பிழைகளால் இன்னும் சாவு அதிகரிக் கப்பட்டது. இந்தப் பிழைகளுள் ஒன்று துப்புரவு இன்மை. தற்காலத்தில் அவை நம்மைத் திடுக்கிடச் செய்யும். குழந்தை களின் உணவு பற்றி எவ்வித விதியோ ஒழுங்கோ இல்லாதது மற்றொன்று. குழந்தையின் அரையில் கட்டப்பட்ட துணி நனைந்து கெட்டுப்போனால் அதைத் திரும்பத்திரும்ப வெயிலில் உலர்த்தித் துவைக்காமல் குழந்தைக்கு அதையே உபயோகிப்பார்கள். தாயின் முலையையோ குழந்தையின் வாயையோ கழுவவேண்டும் என்று கவலைப்படவில்லை. இதைச் செய்யாததனால் புளிப்புத் தட்டி வெளிப்படையாகப் பல கோளாறுகள் ஏற்பட்டும் இவைகளைக் கவனித்துக்கொள்ளவில்லை. குழந்தைக்குப் பால் ஊட்டுவது என்பதில் ஓர் ஒழுங்கு முறை அனுசரிக்கப்படவில்லை. குழந்தை அழுவதொன்றே பால் ஊட்டும் நேரம் வந்துவிட்டது என்பதன் அறிகுறியாக இருந்தது. அது பகலானாலும் சரி, இரவானாலும் சரி, எவ்வளவுக்கெவ்வளவு அசீரணத்தால் வலி பொறுக்க முடியாமல் அழுததோ, அவ்வளவு தரமும் குழந்தைக்குப் பால் ஊட்டப்பட்டது. அதனால் வலி இன்னும் அதிகரித்தது. அந்தக் காலத்தில் காய்ச்சலோடு வருந்தும் குழந்தைகளைத் தாய்மார் தம் கரங்களால் அணைத்துக்கொண்டு அடிக்கடி குழந்தையின் அழுகின்ற வாய்க்குள் தம் முலையைத் திணித்து அதன் அழுகையை நிறுத்தப் பார்ப்பதை யார்தான் பார்த்திருக்கமாட்டார்கள்? எனினும் அந்தத் தாய்மார் தம்மையே தியாகம் செய்து தாய்க் கவலை கொண்டவர்களாய் இருந்தனர்.

விஞ்ஞானம் எளிய சட்டங்களை விதித்தது. மிகவும் துப்புரவுடன் இருப்பதன் அவசியத்தை வற்புறுத்திற்று. தானே விளங்கக்கூடியதாகிய கொள்கையை வெளிப்படுத்திற்று. இவை தாமே விளங்கக்கூடியவை. இவற்றை நாமே புரிந்துகொள்ளாதது விந்தையாக இருக்கிறது. நம்மைப்போல் பச்சைக் குழந்தைக்கும் வேளாவேளைக்கே உணவளிக்கப்படவேண்டும். இதற்குமுன் ஊட்டப்பட்ட உணவு செரித்த பிறகே புது உணவு ஊட்ட வேண்டும். ஆதலால் குறிப்பிட்ட கால வரம்புக்குப் பிறகே குழந்தைக்குப் பால் ஊட்டவேண்டும். அவ்வாறு ஊட்டுவது குழந்தை எத்தனை மாத வயதுடையதோ அதற்குப் பொருத்த மாகவும், அதன் வளர்ச்சியில் உடலின் போக்கை ஒட்டியும் ஊட்டப்படவேண்டும். பச்சைக் குழந்தைக்கு ரொட்டித் துண்டைச் சப்பக் கொடுத்தலாகாது. இவ்வாறு தாய்மார் சிலர் கொடுத்து வருகிறார்கள். அதிலும் வறுமையில் தாழ்ந்த தாய்மார் குழந்தையின் அழுகையை நிறுத்த இவ்வாறு கொடுக் கிறார்கள். ரொட்டியின் சிறுதுண்டுகளைக் குழந்தை விழுங்கி விடலாம். அதைச் சீரணம் செய்யும் சக்தி பச்சைக்குழந்தைக்கு இன்னும் வரவில்லை.

குழந்தை அழுதால் பிறகு என்ன செய்வது என்பதே தாயின் கவலையாயிற்று. சில நாள்களுக்குப் பிறகு குழந்தை களின் அழுகை மிகவும் குறைந்ததை ஆச்சரியத்துடன் கவனித்தனர். சில குழந்தைகள் அழுவதையே நிறுத்திவிட்டன. ஏன், பிறந்து இரண்டு வாரம்தான் ஆன குழந்தையும் பால் குடித்த பிறகு இரண்டு மணிநேர இடைவெளிக் காலத்திலும் அமைதியாகவும் கண்களை விழித்துக்கொண்டும் உயிர் உளதோ என்று ஐயப்படும் அளவுக்கு அசைவற்றுக் கிடந்தன. இயற்கை சில சமயங்களில் தன்னுடைய தெய்விக அமைதியில் சலனமற்று இருப்பதுபோல் இருந்தன. குழந்தை ஏன்தான் இடைவிடாமல் அழவேண்டும்? அந்த அழுகை எல்லாம் தன்னுடைய நிலையைக் குறிப்பதாகும். அதன் பொருள் என்னவென்றால் வேதனையும் சாவும் ஆகும்.

இவ்வாறு அலறுகின்ற சிசுவுக்கு உலகம் ஒன்றுமே செய்ய வில்லை. அவைகளைக் கெட்டியான துணியால் சுற்றிவைத்தனர். அனேகமாக இன்னும் கொஞ்சம் வயதுவந்த வேறு ஒரு சிறு குழந்தையிடம் இந்தச் சிசுவை ஒப்படைத்து விட்டனர். அக் குழந்தையால் அதன் பொறுப்பு உணரமுடியாது. குழந்தை களுக்கு எனத் தனிப்படுக்கையோ தனி அறையோ கிடையாது.

விஞ்ஞானம்தான் அப்பொழுது குழந்தை நலத்துக்குத் துணையாக வந்தது. நர்சரிகள் (Nurseries), தொட்டில்கள், ஏந்து

குழந்தைகளுக்கென்ற அறைகள், பொருத்தமான உடைகள், பால் மறக்கடித்த பிறகு குழந்தை நலனுக்கென்று பாடுபடும் பெரிய தொழிற்சாலைகளால் உண்டாக்கப்பட்ட உணவுகள், குழந்தை நோய் குணமாக்கும் மருத்துவர் எனப் பலவற்றை உருவாக்கியது. சுருங்கக் கூறின் துப்புரவும், நுண்ணறிவு நிறைந்ததுமான பல வாழ்வு நலம் நிறைக்கப்பெற்று ஒரு புதிய உலகமே குழந்தைக்காக உருவாகியது எனலாம். பச்சைக் குழந்தைகளின் உடல் நல விதிகள் மக்களில் பரவப்பரவ குழந்தைகள் மரணமும் குறைந்திருக்கிறது.

எனவே, அதேபோல் குழந்தையைத் தெய்விக நிலையிலும் (Spiritually) சுதந்திரத்துடன் விட்டு விட வேண்டும். ஏனென்றால் நம்மை விட இயற்கை அன்னை குழந்தையின் உள்ளத்தை நல்ல முறையில் பயன்படுத்துவாள். இவ்வாறு கூறுவதால் குழந்தையைக் கவனிக்காமல் தனியாக ஒதுக்கிவிட வேண்டும் என்று அர்த்த மல்ல.

ஒரு வேளை நம்மைச் சுற்றிலும் கவனித்தோமானால், குழந்தை யின் தனிப்பட்ட குணதிசயங்களையும், நுண்ணறிவையும், உணர்ச்சிகளையும் உருவாக்க இயலாது என்றாலும் நமது கடமை களில் பலவற்றையும் அக்கறையையும் புறக்கணித்திருக் கிறோம் என்பதை நாம் உணருவோம். இவ்வாறு புறக்கணிக்கப் பட்டவைகளைப் பொறுத்திருக்கிறது உள் உயிர் (Spirit).

சுதந்திரக் கொள்கை என்பது புறக்கணிப்புக் கொள்கை யன்று; அல்லது கைவிடுதல் (Abandonment) அன்று. 'மாயையி லிருந்து உண்மையை அறிய வழிதேடி, 'குழந்தைப் பாதுகாப்பு' என்ற விஷயத்தில் நிறைந்த பலனை அளிப்பதாகும்.

இக்காலத்தில் குழந்தைக்கு அளிக்கப்படும் சுதந்திரம் வெறும் உடல் சார்ந்ததே யாகும். இருபதாம் நூற்றாண்டில் குழந்தைக்கு அளிக்கப்படும் சமுதாய சுதந்திரம். — சுகாதாரம் குழந்தையின் உடல் வாழ்வில் சுதந்திரம் தந்திருக்கிறது. இறுக்கிக் கட்டப் படும் துணிப்பட்டை நீக்கம் (Swaddling band)[1] காற்றோட்ட வாழ்க்கை, தானே விழித்துக் கொள்ளும் வரை குழந்தையைத் தூங்கவிடும் தூக்கக்கால அதிகரிப்பு முதலியவை இந்தச் சுகாதா ரத்தால் பெறும் தெளிவான முன்னேற்றங்களாகும். ஆனால், இவைகளெல்லாம் சுதந்திரம் பெறுவதற்கு ஏற்பட்ட சாதனங் களாகும். இதைக்காட்டிலும் முக்கியமான விடுதலைச் சாதனம் ஒன்றுள்ளது. அது குழந்தையின் தொடக்க யாத்திரையில்

[1] முன்பெல்லாம் ஏந்து குழந்தையின் உடலைச் சுற்றிக் காலுக்குப் பட்டி சுற்றுவது போல் துணியால் சுற்றுவது மேனாட்டுப் பழக்கம்,

காணப்படும் நோய் விபத்துகளையும் சாவையும் நீக்குவதாகும். இந்த அடிப்படையான குறைபாடுகளை நீக்கினவுடன் பச்சைக் குழந்தைகள் பெருவாரியாகப் பிழைத்ததோடல்லாமல் அவை களின் வளர்ச்சியிலும் முன்னேற்றம் இருந்தது தெளிவாயிற்று. அவைகளின் உடல் எடையை அதிகப்படுத்தியதும், உடல் வலிமை யும், பொலிவும், இன்னும் பொதுவாக உடல் வாழ்க்கை ஒட்டிய யாவும் வளர்ந்தது. சுகாதாரத்தால்தானா? சுகாதாரமே இவை யாவற்றையும் பெறச் செய்துவிடவில்லை. குழந்தையின் வளர்ச்சி யைத் தடைசெய்தவைகளிலிருந்து சுகாதாரம் விடுவித்தது. வெளிப்படையாகத் தடைகளெல்லாம் உடல் சார்ந்த வளர்ச்சியை வளரவிடாமல் கட்டுப்படுத்தின. சுகாதாரம் அந்தக் கட்டுப் பாடுகளைத் தகர்த்தெறிந்தது. ஒரு விடுதலை பெறப்பட்டது என்று எல்லோரும் உணர்ந்தார்கள். இவ்வாறு சாதிக்கப்பெற்ற நோக்கத்துடன் 'குழந்தைகள் சுதந்திரமாக வாழ வேண்டும்' என்று பலமுறை கூறிக்கொண்டனர். உடல் வாழ்வு நிறை வேற்றத்துக்கான தேவைப் பொருள்களுக்கும், பெற்ற சுதந்தி ரத்திற்கும் உள்ள நேரடியான சம்பந்தம் எல்லாராலும் உள்ளு ணர்வால்[1] அறியப்படுகிறது. எனவே, குழந்தை ஓர் இளஞ்செடி யைப்போல் நடத்தப்படுகிறது. நன்றாகப் பாதுகாக்கப்பட்ட தோட் டத்தில் வளரும் காய்கறிச் செடிகளுக்குத் தொன்றுதொட்டு அளிக்கப்பட்டு வரும் பாதுகாப்பைப் போல் குழந்தைகளுக்கும் இன்று பாதுகாப்பு அளிக்கப்பட்டு வருகிறது. நல்லுணவு, பிராண வாயு, தக்க தட்ப வெப்பம், நோய் உண்டாக்கும் கிருமிகளை எச்சரிக்கையுடன் நீக்குதல் போன்றவைகள் அனுசரிக்கப்படு கின்றன. ஆம், இனிமேல் ஓர் இராசகுமாரனும் ஒரு பூங்காவில் வளர்க்கப்படும் ரோசாச் செடிபோல் பாதுகாக்கப்படுவான் என்று நாம் கூறலாம்.

முன்பெல்லாம் குழந்தையை ஒரு மலருக்கு ஒப்பிடுவது வழக் கம். அந்த உண்மையைத்தான் நாம் இன்று நிலைநாட்டப் பார்க்கிறோம். இந்த நோக்கமும் ஏதோ சில கொடுத்துவைத்த வர்களுக்கே ஒதுக்கிவைக்கப்படுகிறது. ஆனால், ஒரு பெரும் தவறுதலை நாம் எச்சரித்துக் கொள்ளவேண்டும். குழந்தை ஒரு மனிதன். ஒரு செடிக்குப் போதுமானது அவனுக்குப் போதாது. பச்சை வாதம் வந்தவனைப் பார்த்து, 'அவன் சும்மா கிடக்கிறான்; மனிதன் என்ற முறையில் அவன் சவமே; அவன் உடலைத் தவிர வேறொன்றுமில்லை' என்று நாம் துக்கப்படும்பொழுது, அந்தப் பச்சை வாதக்காரன் எவ்வளவு ஆழ்ந்த துன்பத்தில் இறங்கியிருக் கிறான் என்று சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்.

[1] Intuitively.

ஏந்து குழந்தை ஒரு மனிதன் என்ற உருவத்தை நாம் நம் மனத்தில் இருத்திக் கொள்ளவேண்டும். நம்முடைய குழப்பம் நிறைந்த மனித சமுதாயத்தின் நடுவில் குழந்தை எப்படி ஒரு வீரா வேசத்துடன் வாழ விரும்புகிறதென்பதை நாம் காண வேண்டும்.

குழந்தைகளின் உரிமைகள் யாவை? அவைகளை ஒரு சமூக இனத்தவர் என்ற முறையில் ஆராய்வோம். அவர்களைச் சமூகத் தொழிலாளிகள் என்று கவனிப்போம். ஆம், அவர்கள் மனிதனை உருவாக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்கள் வரும் தலைமுறை ஆவார்கள். உடல் சலிப்பையும் உள்ளச் சலிப்பையும் அடைந்து அவர்கள் உழைத்து வருகிறுர்கள். தங்களுடைய தாய் மார் சிலமாதங்களாக நிறைவேற்றி வந்ததைத் தொடர்ந்து தாங்களே செய்கின்றனர். ஆனுல், அவர்களுடைய தொழில் மிகவும் கடினமானது, சிக்கலானது, உழைப்புள்ளது. அவர் பிறக்கும்பொழுது எந்தச் சாதனையுடனும் பிறக்கவில்லை. ஆனுல், சாதிக்கக்கூடிய ஆற்றலுடன் பிறக்கின்றனர். முதிந்தோர்களே நம் உலகத்தில் பல கஷ்டங்கள் நிறைந்திருக்கின்றன என்று ஒப்புக்கொள்கின்றனர். அத்தகைய கஷ்டங்களுக்கு இடையே எல்லாவற்றையும் தாமே செய்து கொள்ள வேண்டியிருக் கிறது. முன்பின் தெரியாத இந்த உலகத்துக்கு வரும் மெலிந்த யாத்திரிகர்களுக்கு உதவியாகச் செய்யப்படுவது யாது? ஒரு விலங்கை விட இன்னும் பலம் அற்ற உதவி பெருத மெலிந்த உடம்புடன் அவர்கள் பிறக்கின்றுர்கள். சில ஆண்டுகளுக்குள் அவர்கள் மனிதர்களாகி விடவேண்டும். மிகவும் உயர்ந்த சிக்கலான ஒழுங்குபட்ட ஒரு சமூகத்தின் அங்கத் தினராக வேண்டும். சமயச் சார்பற்ற பல தலைமுறைகளின் முயற்சியால் ஆக்கப்பட்ட சமுதாயத்தில் அங்கத்தினராகிவிட வேண்டும். தற்கால நாகரிகத்தில் நேர்மையாக வாழ்வதென்பது ஒருவருடைய தீவிர முயற்சியால் — உழைப்பால் — பெறப்பட்ட உரிமைகள் பிறகு சட்டத்தால் நிலைநாட்டப் பெற்றவைகளைப் பொறுத்திருக்கிறது. அந்த நிலையில் நமக்கிடையில் ஒருவித பலமும் ஒருவித எண்ணமும் இல்லாது தோன்றியவனுக்கு என்ன உரிமைகள் இருக்கின்றன? பண்டு ஒரு நாள் நைல் நதியில் நாண லிற்கிடையே ஒரு பேழையில் குழந்தை மோசஸ் கிடந்தான். தேர்ந்து எடுக்கப்பட்ட வருங்கால மக்களின் அறிகுறியானுன். ஆனுல், தற்செயலாக அந்த வழியாக வந்த இளவரசி ஒருத்தி அந்தச் சேயைக் காண்பாளா?[1]

[1] **கர்ணன் கங்கையாற்றில் பெட்டகத்தில் மிதந்து வந்ததும் அதிரதன் என்ற தேர்ப்பாகன் எடுத்து வளர்த்ததும் நமக்கு நினைவு வருகிறதல்லவா?**

தற்செயலாகவோ, அதிர்ஷ்டப்படியோ, அன்பினலோ குழந்தை வளரட்டும் என்று நாம் விட்டுவிடுகிறேம். எகிப்து நாட்டுக் கொடுங்கோல் மன்னன் ஒருவன் முதல் பிறந்த குழந்தையைக் கொன்று விட வேண்டும் என்று ஆணை பிறப்பித்ததாக பைபில் கதை கூறுகிறது. அதே போல் தண்டனை நிற்காமல் மறுபடியும் தொடங்குவதுபோல் ஆகும்.

குழந்தை முதலில் மண்ணில் உதிக்கும் பொழுது சமுதாய நீதி அவனை எவ்வாறு வரவேற்கிறதென்று பார்ப்போம். நாம் இருபதாம் நூற்ருண்டில் வாழ்ந்து வருகிறேம். நாகரிகம் அடைந்த நாடு என்று சொல்லப்படும் பெரும்பாலான நாடுகளில் அனதை இல்லங்களும், பாலூட்டும் செவிலித்தாயும் இன்னும் அங்கீகரிக்கப்படுகின்ற ஏற்பாடுகளாகும். அனதை இல்லம் என்பதென்ன? அது ஓர் ஒதுக்கான இடம். இருண்ட கொடிய சிறைச்சாலை. இடையிருட் காலத்தில் (மேனட்டில் கி. பி. 5 முதல் 15 நூற்ருண்டு வரை) இருண்ட சிறைகளில் அடைக்கப்பட்ட குற்றவாளிகள் தாங்கள் இருந்த இடமே தெரியாதபடி எப்படி மறைந்தார்களோ அதேபோல் இந்த அனதை இல்லங்கள் என்ற சிறையில் சிக்கினவர்களும் சாவைத்தான் அடிக்கடி காண்பதுண்டு. அவனிடம் அன்பு கொண்டவர் எவரையும் அவன் காண்பதில்லை. அவனுடைய குடும்பப் பெயர் நீக்கப் பட்டிருக்கிறது. அவனுடைய பொருள்கள் கைப்பற்றப் படுகின்றன. பெரிய குற்றவாளி தன்னுடைய தாயின் நினைவுகளை வைத்திருக்கலாம். அவனுக்கு ஒரு பெயர் இருந்ததென்று நினைந்து, அந்த நினைவால் ஏதோ ஓரளவுக்கு மனத்துக்குள் இன்பம் பெறலாம். கண்ணை இழந்தவன் ஒருவன் வண்ணங்களின் எழிலையும் சூரியனின் பிரகாசத்தையும் நினைவுபடுத்திக்கொண்டு இன்புறுகிறனே அதே போல் ஆகும் இவ்வாறு இன்புறுவது. ஆனல், இந்த அனதை பிறவிக் குருடனுக்கு ஒப்பாவான். எந்தத் தீமை செய்கிறவனும் இந்த அனதையை விட அதிக உரிமைகளைப் பெற்றிருக்கிறன். எனினும், இவனைவிட எவர் குற்றமற்றவர்களாக இருக்க முடியும்? மிகவும் கொடிய ஆட்சிக்காலத்திலும், நசுக்கப்பட்ட அனதைகளைக் காணும் பொழுது நியாயம் என்கின்ற தீபத்தைத் தூண்டிவிட்டு, அதுவே பிறகு பெரிய புரட்சியாகவும் பொங்கிற்று. கொடுங்கோல் மன்னர் செய்த குற்றங்களைக் கண்ட காரணத்தால் அந்த அபராதிகள் இருட்டறைகளில் தள்ளப்பட்டனர். அவர் படும் துன்பங்கள் வெளியுலகுக்குக் கேட்காத சிறைவாசமாக இருந்தது. எனினும் அவர்களுடைய நிலைமை மற்றவர்களைத் தூண்டி எல்லோர்க்கும் சமமான உரிமையும், நியாயமும் அளிக்கப்பட வேண்டும் என்று போராடச் செய்தது. ஆனல் இந்தத் திக்கற்ற குழந்தைகளுக்கென்று எவர் முன்வந்து

நியாயம் பேசுவார்கள்? இந்தத் திக்கற்றவர்கள் மனிதர்கள் என்றே சமுதாயம் கருதுவதில்லை. மெய்யாக அவர்கள் மனித சமுதாயத்தின் மலர்கள் ஆவார்கள். மானத்தையும், பெயரையும் காப்பாற்றச் சமூகம் ஒன்று சேர்ந்த இந்த மலர்களை என்ன விதம் தான் பலி கொடுக்க மாட்டாது.

பால் ஊட்டும் செவிலித்தாய் என்பது சமூகப் பழக்கமாய் வந்து விட்டது; ஒரு வகையில் சொகுசான பழக்கம். அண்மையில், நடுத்தர வாழ்வுடைய—நடுத்தர வாழ்வில் செல்வாக்குடையவள் கூட அல்ல—அப்பேர்ப்பட்ட இளமங்கை தன் திருமணத்துக்கு முன் வருங்காலக் கணவன் தனக்குக் கொடுத்த வாக்குறுதிகளை இவ்வாறு வர்ணிக்கிறுள். 'எனக்கு ஒரு சமையல்காரி, வேலைக்காரி, பால் ஊட்டும் செவிலித்தாய் ஆகியோர் இருக்கப் போகின்றனர்' என்று பெருமையாகக் கூறுவாள். அதே சமயத்தில் உடல் கட்டுள்ள ஒரு குடியானப் பெண் ஒரு மகனைப் பெற்று இறுமாப்புடன் தன் பருத்த மார்பைப்பற்றி நினைப்பதென்ன? பாலூட்டும் செவிலித்தாயாக எனக்கு நல்ல இடம் கிடைக்கும் என்று நினைக்கிறுள். தங்களுடைய குழந்தைகளுக்குப் பாலூட்டாத தாய்மார்களின் சோம்பல்தனத்தை அண்மையில் தான் சுகாதாரம் 'வெட்கம் வெட்கம்!' என்று கண்டித்திருக்கிறது. நம் காலத்தில் தம் குழந்தைகளுக்குத் தாங்களே பாலூட்டும் அரசிகளையும், பேரரசிகளையும் மற்றத் தாய்மாருக்கு எடுத்துக் காட்டாகக் கூறப்படுகின்றன. தன் குழந்தைக்குத் தானே பால் கொடுக்க வேண்டும் என்று சுகாதாரம் தாய்க்கடமை என்று கூறுவதில் உடல்நூல் உண்மையைக் கொண்டுள்ளது. மற்றவர்களைவிடப் பெற்ற தாயின் பாலே குழந்தைக்குப் பொருத்தமான உணவாகிறது. இந்தத் தெளிவான உண்மை தெரிந்திருந்தும் இந்தக் கடமை பொதுவாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் படுவதில்லை. நாம் உல்லாச நடைக்குப் போகும் பொழுது நல்ல உடல்கட்டு அமைந்த ஒரு தாயுடன், சிவப்பிலும் நீலத்திலும் வெள்ளி, தங்கச் சரிகை போட்ட பகட்டான உடை அணிந்த ஒரு பாலூட்டும் செவிலித்தாயும் ஒரு குழந்தையை ஏந்திக்கொண்டு தொடர்ந்து போகும் காட்சியைக் காண்கிறோம். செல்வாக்குள்ள தாய்மார்கள் துப்புரவாக உடைதரிக்காத பாலூட்டும் செவிலித் தாய்மார்களை வைத்திருக்கின்றனர். இந்தச் செவிலிகள் தாய்மாருடன் செல்வதில்லை. தாய்மார் நவீன செவிலித்தாய்மாருடன் (Nurses) செல்கின்றனர். அவர்கள் குழந்தையைப் 'பூப் போல்' கவனித்துக் கொள்வார்கள்.

மற்றக் குழந்தையின் நிலைமை என்ன? இருதாய்மாரின் பாலைக் குடிக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் நேராகப் பாலே இல்லாத

குழந்தை ஒன்றும் இருந்து வருகிறது. இங்குக் கருதப்படும் செல்வம் என்பது தொழில் சம்பந்தப்பட்ட ஆக்கம் அன்று. இயற்கை அன்னையால் சரி நுட்பத்தில் தக்க முறையில் பங்கீடு செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு புதுவாழ்வுக்கும் பால் பங்கீடு செய்யப்பட்டிருக்கிறது. குழந்தையைப் பிறப்பிக்காமல் உடலில் எந்தவகையாலும் பாலை உற்பத்தி செய்ய முடியாது. பசு வளர்ப் போர்க்கு இது நன்ருகத் தெரியும். நல்ல பசுக்களைச் சுகாதார முறைப்படி வளர்க்கிருர்கள்; கன்றுகள் இறைச்சிக் கடைக்குச் செல்கின்றன. எனினும், சில விலங்குகளின் குட்டிகளைத் தாயிட மிருந்து பிரிக்கும் பொழுது எவ்வளவு வருத்தம் தெரிவிக்கப்படு கிறது! நாய்க்குட்டிகள் விஷயத்திலும், பூனைக்குட்டிகளின் விஷயத் திலும் அப்படித்தானே? வீட்டில் வளர்க்கப்படும் நாய் தன்ஞல் எல்லாவற்றுக்கும் பால் கொடுக்கும் சக்திக்கு மீறின அளவு குட்டி களைப் போட்டு விட்டால் அக் குட்டிகளிற் சிலவற்றைக் கொல்ல வேண்டிய அவசியம் ஏற்படும் பொழுது வீட்டு எஜமானிக்கு எவ்வளவு உண்மையான மனக்கவலை ஏற்படுகிறது! அதே தாயின் குழந்தையை அதே சமயத்தில் ஒரு செவிலித்தாய் பாலூட்டி வருகிருள். வீட்டு எஜமானியின் பரிவைத் தூண்டிவிடுவது எல்லாம் சிணுங்குகின்ற தாய் நாயைப் பற்றித்தான். அது பெற்ற இன்னும் முழு வடிவு பெருத குட்டிகள் அத்துணைக்கும் தன்ஞல் பால் கொடுக்க இயலுமா இயலாதா என்று உணராத நிலையில் இருக்கிறது. இருந்தபோதிலும், ஒரு குட்டியையாவது மன முறிவுருமல் இழக்க விரும்புவதில்லை. செவிலித்தாயின் விஷயம் வேறு. தன்னுடைய பாலை விற்பதற்காகத் தானே வந்தவள். அவளுடைய சொந்தக் குழந்தையின் கதி என்ன என்பதைப்பற்றி எவரும் கவலைப்படவில்லை.

தெளிவாக எடுத்துக் கூறப்பட்ட உரிமையோ அல்லது சட்டமோதான் அக்குழந்தையைக் காக்க முடியும். ஏனென்ருல் சமூகம் உரிமைகள் என்ற அடிப்படையில் அமைந்திருக்கிறது. மெய் தான்— சொத்தின் உரிமைகள் என்பவை முழுமையானவை. அளவுகடந்தவை (absolute). நீ பசியால் வாடிஞலும் சரி, அப் பொழுது ஒரு ரொட்டியைத் திருடிஞலும் நீ ஒரு திருடன் என்று சட்டம் உன்மேல் குற்றம் சாட்டும். சமூகம் உன்னைத் தனியாகச் சிறையில் இடும். சொத்தின் உரிமை என்பது சமூகத்தின் வெல்ல முடியாத அடிப்படையாகும். நில ஆஸ்தியைக் கவனித்துக் கொண்டிருக்கும் பொறுப்பாளி தன் உரிமையாளனின் நிலத்தை விற்றுத் தனக்கென அப் பணத்தை உபயோகித்துக் கொண்டு எஜமானனைக் கொடிய வறுமைக்கு ஆளாக்கிஞன். ஆஞல், அவனைப்போன்ற குற்றவாளியை நாம் மனத்தாலும் எண்ண முடியாது. சொந்தக்காரனுடைய கையொப்பம் இன்றி எவர்

தான் ஒரு சொத்தை வாங்குவார்கள்? சில குற்றங்கள் செய்யப் பட்டால் அவைகளுக்குத் தண்டனை அளிப்பதோடல்லாமல் அத்தகைய குற்றங்களை எளிதில் செய்ய முடியாதபடியும் சமூகச் சட்டங்கள் அமைந்திருக்கின்றன. ஆனால், சிறு குழந்தைகள் விஷயத்தில் இந்தக் குற்றம் ஒவ்வொரு நாளும் செய்யப்பட்டு வருகின்றது. இதைக் குற்றமாக நினைக்காமல் 'சொகுசு' என்று கருதப்பட்டு வருகிறது. தன்னுடைய தாய்ப்பாலுக்கு உரிமை கொண்டாடுவதைவிடக் குழந்தைக்கு வேறு எந்தப் புனிதமான உரிமை இருக்க முடியும்? பேரரசன் நெப்போலியன்[1] வாய்மொழியாகக் குழந்தை இவ்வாறு கூறலாம்: 'இறைவன் அதை எனக்குக் கொடுத்திருக்கிறார்' ('God has given it to me'). தாய்ப்பாலுக்குத் தனக்கு உரிமை உண்டு என்பதில் என்ன ஐயம் இருக்க முடியும்? குழந்தையினுடைய முழு ஆஸ்தியாகிய பால் அவனுடன் பிறந்தது; அவனுக்கென்றே சுரந்தது. அவனுடைய சொத்தெல்லாம் அங்கிருக்கிறது. வளர்வதற்கும், வலிமை பெறுவதற்கும் வேண்டிய சக்தி அந்த உணவில் நிறைந்திருக்கிறது. இவ்வாறு ஏமாற்றப்பட்ட குழந்தை மெலிந்து உடல் வலிமை குன்றினால் அவனுடைய கதி என்னாகும்? வறுமையில் சிக்குண்டு கடினமான தொழிலைத் தேடி அலைய வேண்டியிருக்கும். ஒருவன் நியாயவாதிகளின் முன் நின்று தன் உரிமைகளுக்கு மன்றாடுவதுபோல் குழந்தையும் வருங்காலத்தில் சமுதாயத்துக்கு முன் நின்று, 'எனக்கு விளைத்த அழிவுக்கு என்ன இழப்பீடு தரப்போகிறீர்கள்? என் தொழிலில் நடைபெற்ற நிரந்தரமான விபத்துக்கு என்ன ஈடு செய்யப் போகின்றீர்கள்' என்று கேட்டால் எப்படியிருக்கும்?

நாகரிகம் அடைந்த நாடுகளில் செல்வந்தர்களான தாய்மாரைத் தம் குழந்தைகளுக்குத் தாய்ப்பாலும் ஊட்டும்படி ஊக்குவித்திருக்கின்றனர். ஏனென்றால் இது குழந்தை நலனுக்கு நல்லதென்று சுகாதார நிபுணர்கள் நிரூபித்திருக்கின்றனர். பெரியவர்களுக்கு இருக்கின்ற 'சிவில் உரிமைகள்' குழந்தைகளுக்கும் உண்டு என்ற நம்பிக்கையால் இவ்வாறு தாய்மார் கேட்டுக் கொள்ளப்படவில்லை. எந்த நாட்டில் செவிலித்தாய்மார்களை இன்னும் உபயோகிக்கின்றார்களோ, அந்நாட்டவரைத் தாமே பால் கொடுக்கும் தாய்மார், தம் நாட்டவர் போல் நாகரிகம் பெற்றவராயினும், இவர்களைவிட வளர்ச்சியில் சற்றுத் தாழ்ந்தவர்கள் என்றே கருதி வருகின்றனர்.

'குழந்தையின் தாய்க்கு நோய் வந்து அவளால் தாய்ப்பால் ஊட்டமுடியாத நிலையில் இருந்தால் என்ன செய்வது?' என்று கேட்கலாம். அந்த நிலையில் நோயாளித் தாயின் குழந்தை

[1] Napoleon.

துர்-அதிர்ஷ்டமான குழந்தை என்றே கருதவேண்டும். அவனுடைய துர்-அதிர்ஷ்டத்திற்கு மற்றொருவன் ஏன் துன்பப்பட வேண்டும்? எவ்வளவு வறுமையில் ஒருவன் துன்பப்பட்டுக் கொண்டிருந்தாலும், அவசியமான தேவைக்கு அதற்காக வேறொருவருடைய சொத்தை எடுத்துக்கொள்ள நாம் அனுமதிப்பதில்லை. ஒரு பேரரசனுக்கு உற்ற கொடிய நோயைக் குணப்படுத்த மக்களின் இரத்தத்தில் மூழ்கினால் குணமாகும் என்று சொன்னால், அதற்காக உடல் நலமுள்ள மக்களின் இரத்தத்தைப் பிழிய இயலுமா? முற்காலத்தில் காட்டுமிராண்டிப் பேரரசன் வேண்டுமானால் செய்திருக்க முடியும். இவைகளெல்லாம்தான் நமது சமுதாயத்தை ஆக்கியிருக்கின்றன. மனிதனை மனிதன் தின்னும்[1] காட்டு மனிதனுக்கும், கடல் - கொள்ளைக்காரர்க்கும் நமக்கும் உள்ள வேற்றுமை இதுவே. வயது வந்தவர்களுடைய உரிமைகள் அங்கீகரிக்கப் பெற்றவைகள் ஆகும்.

ஆனால் குழந்தையின் உரிமைகள் அவ்வாறு அங்கீகாரம் பெறாதவை.[2] இதில் எவ்வளவு இழிவான விஷயம் அடங்கியிருக்கிறதென்று பாருங்கள். முதிர்ந்தவர்களின் உரிமைகளை நிச்சயமாக ஒப்புக்கொள்கிறோம். ஆனால் குழந்தைகளுடையதை ஒப்புக்கொள்வதில்லை. எவர்களால் கிளர்ச்சி செய்யமுடியுமோ, எவர்களால் தங்களைத் தாங்களே காத்துக் கொள்ள முடியுமோ அவர்களுடைய உரிமைகளை ஏற்றுக் கொள்கிறோம். மற்றவர்கள் விஷயத்தில் காட்டு மிராண்டிகளைப் போல் நடந்துகொள்கிறோம்.

ஜெர்மனி நாட்டில் முன் அறிவிப்பு முறையாகிப் பிறகு சட்டமெனக் கடைப்பிடிக்கப் படுவதொன்றை உங்கள் கவனத்துக்குக் கொண்டுவருகிறேன். தன் குழந்தைக்கு ஆறுமாதம் நிறையும் வரைக்கும், அவள் செவிலித்தாயாக எங்கும் சேர்வதாக ஒப்புக் கொள்ளக் கூடாது. இந்த ஆறுமாத இடைக்காலம் அக் குழந்தை போதுமான அளவுக்கு ஆரோக்கியமாக வளர வாய்ப்பளிப்பதாகக் கருதப்படுகிறது. தாய்மாரிடம் இருந்து உணவுபெற முடியாத குழந்தைகளுக்கு ஜெர்மனியில் குழந்தைக்கென்று புட்டிப்பால், டப்பாப்பால்களை நல்ல முறையில் ஆக்குவதால் கவலை இல்லை. இத்தகைய சட்டங்களும் ஏற்பாடுகளும் குழந்தைக்குரிய உரிமை

[1] மனிதருணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனியுண்டோ?—பாரதியார்.

[2] செவிலித்தாயின் குழந்தை இறந்து போயிருந்தால் அப்பொழுது அக் குழந்தையின் உரிமையைப் புறக்கணிப்பதென்ற கேள்விக்கே இடமில்லை. நோய்க்குரிய காரணமாகத் தன் குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்கச் சக்தியிழந்த பணக்காரத் தாய்மார் விஷயத்துக்கும் மேலே குறிப்பிட்ட செவிலிக்கும் சம்பந்தமில்லை.

களை ஏற்றுக்கொள்வதற்கு முதல் அறிகுறிகளாகும். சுகாதார அடிப்படையில் நாகரிக முன்னேற்றத்தில் உயர்ந்தவர்களோ தாழ்ந்தவர்களோ இருக்கலாம். ஆனால் எல்லோரும் ஒரே நாக ரிகத்தைச் சேர்ந்தவர்களாவார்கள். வல்லவனுடைய உரிமையை அடிப்படையாகக் கொண்ட நாகரிகம்.

குழந்தையின் நல்லொழுக்கம் பற்றிய கல்வியின் பிரச்சினை களைப் பொறுப்புடன் கவனிக்கத் தொடங்கும் பொழுது, நம்மைச் சுற்றிலும் கவனித்து, எந்த விதத்தில் அவனுக்காக அவனுடைய உலகை ஆயத்தமாக்கியிருக்கிறோம் என்று சிந்தனை செய்ய வேண்டும். மெலிந்தோரிடம் மயக்கம், தயக்கம் இல்லாமல் நாம் நடந்து கொள்வதைப் போல அவனும் ஆகவேண்டுமென்பதா நம் விருப்பம்? தங்களுடைய குறைகளைப் போக்கிக் கொள்வதற்காக எதிர்ப்புகளோ கிளர்ச்சிகளோ செய்யாதவர்கள் பக்கம் சேராத அளவுக்கு நீதி நெறியைத் தம் உள்ளத்தில் நம்மைப்போல் கடைப் பிடிக்காதவர்களாக வேண்டுமா? நமக்குச் சமமானவர்களுடன் தொடர்பு கொள்ளும் பொழுது பாதி நாகரிகமடைந்தவனைப் போலும், பேதைகளையும் கொடுமைக்குள்ளானவர்களையும் கண்ட போது பாதிக் கொடிய விலங்குபோலும் நாம் நடந்து கொள்கிறோமே — அதே போல் அவனையும் ஆக்க வேண்டுமென்று நாம் ஒப்புக் கொள்கிறோமா?

அவ்வாறில்லையெனில் குழந்தைக்கு நல்லொழுக்கக் கல்வி கற்பிப்பதற்குமுன், ஆண்டவன் கோவில் சன்னிதியில் படிக்கட்டு ஏறுவதற்குமுன் பாதிரி செய்து கொள்வதைப் போல, நாமும் செய்து கொள்வோமாக! அங்குக் குழுமியுள்ளோர் அனைவர் முன் னிலையில் கழிவிரக்கத்துடன் தலைவணங்கித் தாம் செய்த பாபங் களை ஒப்புக் கொள்கிறார்.

சமூகத்திலிருந்து ஒதுக்கித்தள்ளப்பட்ட குழந்தை மூட்டுக் கழன்ற கையைப் போன்றது. இந்தக் கையைத் தன்னிலைக்கு வரும்படி சீர்படுத்தும் வரை மனித சமுதாயம் நல்லொழுக்க வளர்ச்சியைப்பற்றி எதுவும் செய்ய இயலாது. அவ்வாறு சீர் படுத்தும் பொழுது அத்துடன் 'இணைக்கப் பட்டிருக்கும் காய மடைந்த தசைகளின் வலியையும் பக்க வாதத்தையும் ஒரு முடி வுக்குக் கொண்டுவரும். குழந்தைகளுடன் இணைக்கப்பட்ட பெண் டிரின் வேதனைகளும் முடிவுபெறும். சமுதாயத்தில் குழந்தை எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்பது மிகவும் ஆழமானது; முழுமையானது; நம்முடைய தற்காலத்தையும் எதிர்காலத் தையும் பொறுத்ததாகும்.

குழந்தைகளுக்கு நம்மால் விளையும் அத்தகைய பெரும் அநீதிகளையும், கொடுமைகளையும், அவை அநீதியென்றும் கொடுமை என்றும் நம்முடைய மனத்துக்குள் ஓரளவுக்குச் சமாதானப் படுத்திக் கொள்வோமாஞல் குழந்தைகளிடம் காட்டப்படும் எந்த அடக்குமுறையைத்தான் நாம் ஒப்புக் கொள்ள மாட்டோம்?

**இவ்வுலகத்தில் பிறந்த குழந்தையை நாம் எவ்வாறு வரவேற்கிறோம்?**

நம்மைச் சுற்றிலும் பார்ப்போம் — இந்த விழுமிய விருந்தினரை எவ்வாறு வரவேற்க வேண்டும் என்பது பற்றி அண்மையில்தான் ஏற்பாடு செய்ய முன்வந்திருக்கிறார்கள். குழந்தைகளுக்கென சிறுபடுக்கைகள் முதல்முதலாகச் சமீபகாலத்தில்தான் செய்யத் தொடங்கினர்.[1] கலையில்லாததும் வேண்டாததும் அளவுக்கு மீறிய விலையுடையதுமான எண்ணற்ற பொருள்கள் விற்பனைக்கு வருகின்றனவே, அவைகளில் எத்துணை குழந்தைகளுக்கு ஏற்றன என்று கவனிப்போம். முகம் கைகளைக் கழுவுவதற்குத் தேவையான 'வாஷ் ஸ்டாண்டுகள்' இல்லை. சோபாக்கள் இல்லை; மேசைகள் இல்லை; புருசுகள் இல்லை; எத்தனையோ வீடுகள் இருக்கின்றன. அவைகளில் அவனுக்கும் அவன் போன்றவர்களுக்கும் தகுதியான ஒரு வீடும் கட்டப்படவில்லை. பணக்காரக் குழந்தைகளும், கொடுத்துவைத்த குழந்தைகளும் தங்களுக்கென்று ஒரு தனி அறையைப் பெற்றிருக்கின்றன. அந்த அறையும் அனேகமாக நாடு கடத்தப்பட்டவனுக்கு ஒதுக்கிடம் இருக்குமே, அதை ஒத்தது.

அவன் குற்றம் சாட்டப்படுகின்ற துன்ப நிலையில் நம்மையும் ஒரு நாளைக்காவது ஆளாக்கிக் கொண்டால் எவ்வாறு இருக்கும் என்று மனக் கற்பனை செய்து பார்ப்போம்.

அரக்கர் இனத்தார் இருக்கும் ஓர் இடத்திற்கு நாம் கொண்டு போகப் பட்டோம் என்று கற்பனை செய்து கொள்வோம். அவர்களுடைய கால்களும் உடலும் நம்முடையவைகளை விடப் பன்மடங்கு பிரமாண்ட மானவையாயிருக்கும். நம்மை விட அவர்கள் அதிவேகமாக நடமாடக் கூடியவர்களாக இருப்பார்கள். நம்மைவிட நுண்ணறிவில் மிகமிக மேம்பட்டவர்களாகவும், துடுக்குள்ளவர்களாகவும் அவர்கள் இருப்பார்கள் என்று எண்ணிக் கொள்வோம். அவர்களுடைய இல்லத்துக்குள் நாம் நுழைய விரும்புகிறோம். ஒவ்வொரு படிக்கட்டும் நம் முழங்கால் உயரம்

[1] குழந்தைக்கென மணித்தொட்டில் நம் நாட்டவர் தொன்றுதொட்டு உபயோகித்து வந்தனர். எனினும் அதனைப் பாமரமக்கள் பெற்றாரில்லை.

இருக்கும். எனினும் அந்த வீட்டுக்காரர்களுடன் நாமும் அந்த உயரப் படிக்கட்டுகளை ஏறித்தான் தீர வேண்டும். உட்கார வேண்டு மென்று நினைத்தால் ஒவ்வொரு நாற்காலியும் அனேகமாக நம் தோள் உயரம் இருக்கும். எப்படியோ தட்டிமுட்டி அந்த உயரமான நாற்காலியில் ஏறி உட்கார்கிறோம். நம்முடைய ஆடைகளைப் புருசால் துடைத்துத் துப்புரவாக்க நினைக்கிறோம். ஆனால் எல்லா ஆடைப் புருசுகளும் பிரமாண்டமானவை; நம் கைக்குள் அடங்காதவை; நம்மால் தூக்க முடியாத பளுவுடையவை. நம்முடைய நகத்தைத் தேய்த்துக் கொள்ளப் புருசு வேண்டுமென்றால், துணியைத் துப்புரவாக்கப் பயன்படும் புருசை நம்மிடம் தருகிறார்கள். கழுவு அகலவாய்க் கிண்ணத்தில் (வாஷ் பேசின்) நாம் நீராடலாம் என்று விரும்புவோம். ஆனால், அத்துணை பளுவான 'பேசினை' நம்மால் தூக்க இயலாது. இந்த அரக்கர்கள் நம் வரவைஎதிர்பார்த்திருந்தார்களானல், நம் வரவுக்காக அவர்கள் ஓர் ஏற்பாடும் செய்து வைக்க வில்லை என்று சொல்லத் தோன்றும். அவர்களுடன் நாம் இணைந்து வாழ்வதற்கு ஏற்பாடுகள் செய்யவில்லை என்று கூறுவோம். குழந்தை தன் தேவைக்கு என்று வேண்டுவதெல்லாம் பொம்மைகளுக்கான விளையாட்டுச் சாமான்களாகவே இருக்கின்றன. அவனுக்குத் தகுந்த விலையானதும், கவர்ச்சிகரமானதுமான பல பண்டங்கள் நிறைந்த சூழ்நிலை அவனுக்கென அமைக்கப் பெறவில்லை. ஆனால் பொம்மைகளுக்கு விருந்தினர் வரவேற்பு அறைகள், சமையலறைகள், உடை அறைகள் போன்று பெரியவர்கள் உபயோகிப்பதெல்லாம் சின்ன அளவில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. எனினும் இவைகளுக்கு இடையில் குழந்தையால் வாழ இயலாது. வேண்டுமானல் ஏதோ வேடிக்கையாகப் பொழுது போக்கலாம். குழந்தைக்கு அளிக்கப்படும் சூழ்நிலை எல்லாம் கேலிக்கூத்தாக இருக்கிறது. அவனை வாழ்க்கை நடத்தும் ஒரு மனிதன் என்று உலகம் தெரிந்து கொள்ளவில்லை. தன் வரவுக்குச் சமூகம் செய்திருக்கும் ஏற்பாடெல்லாம் ஏளனமாக நினைக்கிறது குழந்தை.

குழந்தைகள் பொம்மைகளை உடைத்து எறிவது எல்லோரும் அறிந்த உண்மை. தங்களுக்கெனத் தனியாகப் படைக்கப்பட்ட இந்தப் பொம்மைகளை உடைப்பதிலிருந்து அவர்களுடைய நுண்ணறிவு காட்டப்படுகிறது. பொம்மைகள் எவ்வாறு செய்யப்பட்டிருக்கின்றன என்று கண்டுபிடிப்பதற்கே அவன் அவைகளை உடைக்கிறான் என்கிறோம். அந்தப் பொம்மைகளில் வெளிப்படையாகத் தன்னைக் கவரக்கூடிய எதையும் குழந்தை காண இயலாததால் உள்ளேயாவது ஏதாவது கவர்ச்சி ஆற்றல் உள்ளது இருக்கிறதா என்றே உடைக்கிறான். சில சமயங்களில் கோபம் வந்த

மனிதனைப் போல் பொம்மைகளை ஆவேசத்துடன் உடைத்தெறிகிறான். அந்தச் செயலைக் கண்டு அவன் குறும்புக்கு உடைக்கிறான் என்று நாம் தீர்மானித்து விடுகிறோம்.

தன்னைச் சுற்றிலும் காணப்படும் பண்டங்களை உபயோகிப்பதில் குழந்தையின் மெய்யான வாழ்வு அடங்கியிருக்கிறது என்பது குழந்தை இயலாகும். தனக்குத் தகுந்த 'வாஷ் பேசினை' உபயோகிக்க விரும்புவான். தானே உடை அணிந்து கொள்ளவும், தானே தன் தலைவாரிக் கொள்ளவும், தரையைத் தானே பெருக்கவும் விரும்புகிறான். அவனும் தான் தனக்கென்ற மேசைகள், நாற்காலிகள், சோபாக்கள், துணியை உலர்த்தப் பயனாகும் மரக்கிளிப்புகள் (Clothes pegs), பீரோக்கள் வேண்டுமென்ற தேவை கொண்டிருக்கிறான். அவன் விரும்புவது என்ன? தானே உழைக்க வேண்டும். ஏதோ ஒரு நுண்ணறிவு சார்ந்த விஷயத்தைப் பெற உழைக்க வேண்டும் என்று எண்ணுகிறான். அவனுடைய சொந்த வாழ்வில் சுகம் பெற விரும்புகிறான். அவன் 'மனிதனைப் போல்' நடந்து கொள்வது மட்டுமன்று; மனிதனையும் உருவாக்க வேண்டியவனாகவும் இருக்கிறான். அவனுடைய இயலின் ஆதிக்கமான போக்கும் அவனுடைய வாழ்க்கைக் குறிக்கோளும் அவையே ஆகும்.

எங்களுடைய 'காஸா தீ பம்பீனி' — குழந்தை இல்லத்தில் அவனைப் பார்த்திருக்கிறோம். களிப்புடனும், பொறுமையுடனும் மிகவும் மெச்சத்தக்க ஒரு தொழிலாளியைப்போல நிதானமாகவும், சரிநுட்பமாகவும், வேலைசெய்து பண்டங்களைப் பாழாக்காமல் அதிக அக்கறையுடன் பாதுகாப்போனாக நடந்து கொண்டிருப்பதை நாங்கள் கவனித்திருக்கிறோம். அவனை மகிழ்விக்க மிகவும் அற்பமான பொருள் இருந்தாலும் போதும். சுவரில் தன் கைக்கு எட்டும் அளவில் தாழ்வான உயரத்தில் தன்னுடைய உடைகளைத் தொங்க விடுவதில் ஒரு மகிழ்வைக் காண்கிறான். தன் கையால் பிடிக்கக்கூடிய கைப்பிடியுள்ள இலேசான கதவைத் திறப்பதிலும் தன் கைகளால் தூக்கக்கூடிய பளுவுள்ள நாற்காலியை எடுத்துச் சத்தம் செய்யாமலும் கம்பீரமாகவும் போடுவதிலும் இன்பம் காண்கிறான். நாங்கள் ஒரு சுலபமான கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். குழந்தையின் வளர்ச்சிக்குப் பொருத்தமான வகையில் சூழ்நிலையை ஏற்பாடு செய்து அந்தச் சூழ்நிலையில் அவனை வாழ விடுங்கள். அப்பொழுது குழந்தையின் உள்ளத்தில் ஒரு சுறுசுறுப்பான வாழ்க்கை தோன்றத் தொடங்கும். இந்த வாழ்க்கையைக் கண்டு பலர் ஆச்சரியப் பட்டிருக்கின்றனர். ஏனென்றால், இந்த வாழ்க்கையில் எளிய பயிற்சியை

மிகவும் நிறைந்த மகிழ்ச்சியுடன் செயல்புரிவது மட்டுமன்று; அவனிடம் மலரப்படும் ஒரு தெய்விக வாழ்வும் பலர் கண்முன் தோற்றமளிக்கிறது. இம்மாதிரியான சிக்கல்கள் இல்லாத சூழ்நிலையில், நுண்ணறிவு நிறைந்த வாழ்வைக் குழந்தைபற்றிக் கொள்வது விளங்குகிறது. ஒரு விதை எவ்வாறு தன் வேரைப் பூமிக்குள் வளரவிட்டு உயர்கிறதோ, அதே போலக் குழந்தையும் இந்த இயக்கங்களைத் தன் பற்றுக்கோல்களாக அமைத்துக் கொண்டு ஒவ்வொரு பயிற்சியையும் பலமுறை செய்துசெய்து அவைகளின் மூலமாக வளர்ந்து முன்னேறுகிறது.

குழந்தைகள் தங்கள் தொழிலில் அக்கறை காட்டுவதுடன் நிதானமாகவே எதையும் செய்து முடிக்கின்றார்கள். ஏனென்றால் அவர்களுடைய உடல் அமைப்பு இன்னும் நன்றாக வலிவு பெற வில்லை. அவர்களுடைய கால்கள் குள்ளமாக இருப்பதால், அவர்களின் நடையும் மெதுவாக இருக்கிறது. இவைகளை எல்லாம் நாம் கவனிக்கும் பொழுது, எப்படிக் கூட்டுப்புழுக் குள்ளிருக்கும் உட்கூடு எவ்வாறு வண்ணத்துப் பூச்சியை மெதுவாக உருவாக்கு கிறதோ அதேபோலக் குழந்தைக்குள் வாழ்வே மலரச் செய்வது போல் இருக்கிறது என்று நாம் நம்மை அறியாமலே யூகித்துக் கொள்கிறோம். அவர்களுடைய தொழில்களைக் குறுக்கிட்டுத் தடை செய்வது அவர்களுடைய வாழ்க்கைக்கே பலவந்தம் (Violence) செய்வதாகும். ஆனால் குழந்தைகளிடம் சாதாரண மாகக் காணப்படும் முறை யாது? அடிமைகளுக்கு மனித உரிமை கள் இல்லை. அத்தகைய அடிமைகளை எஜமானன் எவ்வாறு நடத்து கிறானோ அதேபோல் நாமும் குழந்தைகள் ஏதோ ஒன்றைச் செய்து கொண்டிருக்கும் பொழுது மன உறுத்தலில்லாமலும் ஆராயா மலும் அத் தொழில்களில் குறுக்கிடுகிறோம். முதிர்ந்தோரைப் போல் குழந்தைகளுக்கும் தயக்கம் காட்டுவதோ அல்லது விட்டுக் கொடுப்பதோ பெரும்பாலோருக்கு ஏளனமாகத் தோன்றலாம். எனினும், 'குறுக்கே தொந்தரவு செய்யாதே' என்று எவ்வளவு கடுமையாகக் கட்டுப்படுத்துகிறோம். சின்னக் குழந்தை தானாக உண்டு கொண்டிருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். முதிர்ந்தோர் ஒருவர் அங்கு வந்து அவனுக்கு ஊட்டுகிறார். அவன் மேலங்கியை அணிய முயற்சி செய்துகொண்டிருந்தால் ஏதோ ஒரு வயது வந்தவர் வந்து அவனுக்கு அவசரம் அவசரமாக உடையை அணியவைக்கிறார். அவனுக்குப் புறம்பான ஒரு செயலை ஒவ்வொருவரும் அவன் அனுமதி பெறாமலே முரட்டுத்தன மான முறையில் செய்துவைக்கின்றனர். ஆனால் நாம் மாத்திரம் நம்முடைய சொந்த வேலையில் நம் உரிமைகள் எவ்வளவு உண்டு என்பதில் மிகவும் உணர்ச்சி பெற்றவர்களாக இருக்கிறோம்.

நமக்குப் பதிலாக வேறு யாராவது செய்ய முன்வந்தால் அது நம்மை அவமதிப்பதாகிறது. பைபில் வேத நூலில், 'அவனுடைய ஸ்தானத்தை மற்றொருவன் வகிப்பானாக' என்ற மொழி காணாமல் போனவனுக்கு விடுவிக்கப்படும் எச்சரிக்கைகளில் ஒன்றாகும்.

நம்மைவிட உடல் வலிமையில் மிக்கவர்களாயும், நம்முடைய உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ளச் சக்தி அற்றவர்களாயும் உள்ள ஒருவகை ராட்சச மக்களுக்கு நாம் அடிமையாகி விட்டோமானால், நாம் என்ன செய்ய முடியும்? நம்முடைய பாயசத்தையோ அல்லது குழம்பையோ பொதுவாக நம் போக்கில் சுவைத்துக் கொண்டிருக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம். சுதந்திரத்துடன் இருப்பதைப் பொறுத்து இன்புறுவதும் இருக்கிறதென்று உணர்ந்து நாம் அவ்வாறு அருந்திக் கொண்டிருக்கும் சமயத்தில், ஓர் அரக்கன் நம்முன் தோன்றி, நம் கையில் இருக்கும் கரண்டியை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு, மூச்சுத் திணறும் வகையில் வேகவேகமாக நம்மை விழுங்க வைத்தானானால் எப்படியிருக்கும்? 'ஐயா! சற்று மெதுவாக, மெதுவாக' என்று பரிவுக்காகத் தடை செய்யப் புகுவோம். அத்துடன் இருதயத்துடிப்பும் ஓரளவுக்குத் தடுக்கப்படும். நம்முடைய சீரண சக்தியும் பாதிக்கப்படும். அவ்வாறே நமது இல்லத்தில் நமக்குக் கிடைக்கும் சுதந்திரத்தைப் போல் மகிழ்ச்சியுடன் நமது மேல்அங்கியை அணிந்து கொள்ளும் போது, ஏதோ ஓர் இன்ப நிகழ்ச்சியை மனத்தில் எண்ணிக் கொண்டு மெதுவாக நம் வேலையைச் செய்து கொண்டிருக்கும் பொழுது, ஓர் அரக்கன் அதை நம்மேல் தூக்கி எறிந்து உடையை அணியவைத்துக் கண் மூடிக் கண் திறப்பதற்குள் நம்மைக் கதவோரத்திலிருந்து கொஞ்சம் தொலைவு கொண்டு போய் விட்டானானால், நாம் நம் உல்லாசப் பயணத்தில் அடைய இருந்த எல்லா இன்பமும் இழக்கும் வகையில் நம்முடைய கௌரவமே புண்ணாகிவிடுகிறது. நமது ஊட்டம் நாம் விழுங்கி வைத்த குழம்பு ஒன்றைப் பொறுத்தே இருப்பதில்லை. அதேபோல் நாம் உல்லாசமாக நடப்பதாலேயே நமது உடல் நலம் பெறுகிறது என்று எண்ணிவிட முடியாது. ஆனால் இந்த வேலைகளை எவ்வளவு சுதந்திரத்துடன் செய்ய நாம் அனுமதிக்கப்படுகிறோமோ அதைப் பொறுத்தும் இருக்கிறது நம் உடல் நலமும். இந்த அரக்கர்களை எதிர்த்து வெறுப்புக்கொள்ள வேண்டுவதும் புரட்சி செய்வதும் அவர்களின் மேல் நமக்குள்ள பொறாமையினால் அன்று; வாழ்க்கை சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களிலும் சுயேச்சையாகச் செய்ய அனுமதிக்கப் படவேண்டுமென்ற ஓர் உணர்ச்சியை நாம் ஒப்புக் கொள்வதால்தான். நமக்குள் இருக்கும் ஏதோ ஒன்றை மனிதன்

புரிந்து கொள்வதில்லை. ஆண்டவனுக்குத்தான் அது என்ன என்பது தெரியும்; நமக்குப் புலனாகாத வகையில் இறுதிவரை யிலும் காட்டி, நம்மைப் பூர்த்தி செய்ய வைக்கிறது. நமது வாழ்வில் ஒவ்வொரு சிறு செயலிலும் இந்தச் சுதந்திரத்தின் மேல் நமக்குள்ள அன்பே நமக்கு ஊட்டம் தந்து, நல்வாழ்வைப் பெறச் செய்கிறது. இதைப்பற்றிக் கூறும்பொழுது, 'மனிதன் ரொட்டி ஒன்றினாலேயே வாழவில்லை' என்று குறிப்பிட்டிருக்கின்றனர் சான்றோர். சிருஷ்டி அல்லது ஆக்கத் தொழில் இன்னும் நடை முறையில் இருந்து வரும் குழந்தைமையில் இதன் தேவை இன்னும் எவ்வளவு மிகையாக இருக்க வேண்டும்!

குழந்தைகள் தம் சூழ்நிலையில் பெறுகின்ற சிறு வெற்றி களையும் எவ்வளவு போராடிப் புரட்சி செய்து காத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது! தொட்டு அறிவது போன்ற தமது புலன்களைப் பயன்படுத்த முயற்சி செய்யும்போது ஒவ்வொருவரும் அவர்களைக் குறை கூறுகின்றனர்; 'தொடாதே' என்கின்றனர். சமையலறை யிலிருந்து ஏதோ சில பண்டங்களை எடுத்துச் சுவை பார்க்கலாம் என்று முயற்சி செய்தார்களானால், அவர்களைத் துரத்தி விடுகிறார் கள்; கருணையின்றி, 'பொம்மைகளுடன் விளையாடப் போங்கள்' என்று ஒதுக்கப்படுகிறார்கள். அவர்களுடைய கவனம் ஒன்றின்மீது ஆழ்ந்து பதிந்து, தம்மையே உருவாக்கும் ஏற்பாடு தமதுள்ளத் தில் தோன்றப் புகும் சமயங்களில் எவ்வளவு முறை பெரியவர்கள் அவர்கள் போக்கில் முரட்டுத் தனமாகக் குறுக்கிடுகின்றனர். தமது நுண்ணறிவு வளர்வதற்காக இளங்குழந்தைகள் தமது சூழ்நிலையில் தாமாகவே முயற்சி செய்துவருகின்ற சமயத்தில் அத்தகைய குறுக்கீடுகளுக்கு ஆளாகின்றனர். நம்முடைய வாழ்க் கையிலும் ஏதோ ஒன்று நிரந்தரமாக ஒடுக்கப் பட்டிருக்கிறதென்று நம் உள்ளத்தில் எங்கோ பதிந்திருக்கிறதல்லவா?

நிச்சயமான எக்காரணத்தையும் குறிப்பிடாமல் நமது வாழ்க்கைப் பயணத்தில் ஏதோ ஒரு முக்கியமானது இழக்கப் பட்டது என்று நமக்குத் தோன்றுகிறது; நாம் ஏமாற்றப்பட் டிருப்பதாகவும், சிறுமைப்படுத்தப் பட்டிருப்பதாகவும் நமக்குத் தோன்றுகிறது. ஒரு வேளை நம்மையே நாம் உருவாக்கிக் கொண் டிருக்கும் பொழுது நாம் குறுக்கிடப்பட்டும், கொடுமைப்படுத்தப் பட்டும் இருக்கிறோம். நம்முடைய தெய்விக உயிர் அமைப்புத் திறமையற்றும் வலிமையற்றும் ஆட்டம்தரக் கூடியதாகவும் விடப்பட்டிருக்கிறது.

சாதாரண வயது வந்தவர்களைப்போல் முதிர்ச்சியும், ஒரு நிலையும் பெற்ற பெரும்பாலான வளர்ந்தவர்களைப் போல் அல்லா

மல் மகாமேதைகளாகத் தம்மைத் தாமே ஆக்கிக் கொண்டிருக்கும் தெய்விக நிலையைச் சற்று ஆராய்வோம். கவிபுனேயும் ஆர்வத்தால் உந்தப்பட்ட ஓர் எழுத்தாளரைக் கவனிப்போம். மற்ற மனிதர்களுக்குப் பயன் அளிக்கும் வகையில் தம்முடைய பணி உருவெடுக்கும் சமயம் அது. அல்லது ஒரு கணித மேதை மக்களுக்குப் பயனளிக்கும் ஒரு சிக்கலான பிரச்சினைக்கு வழி கண்டுபிடிக்கும் தருணமாய் இருக்கலாம். அல்லது தம் மனத்தில் எடுத்துக்காட்டான உன்னத கருத்துத் தோன்றி, அந்த அற்புதமான கருத்து மக்களுக்குக் கிடைக்காமல் போய்விடக் கூடாதென்று அதைத் திரைச்சீலையில் தீட்ட வேண்டும் என்று துடிக்கும் ஓர் ஓவியரை எடுத்துக் கொள்ளலாம். அந்தச் சந்தர்ப்பத்தில் ஏதோ ஒரு முரடன் குறுக்கே நுழைந்து, 'உடனே என்னைப் பின்பற்றுங்கள்' என்று கையைப் பிடித்து இழுப்பது போலும் தோலைப்பற்றி உந்துவது போலும் இருக்கிறது. இத்துணையும் எதற்காக? சதுரங்கப் பலகை அடுக்கியாயிற்று. 'ஆட்டத்திற்கு வாருங்கள்' என்று அழைப்பதுபோல் இருக்கிறது முதிர்ந்தோர் குழந்தையின் சுயேச்சைச் செயலில் குறுக்கிடுவது. அந்த அறிஞர்கள் என்ன சொல்லியிருப்பார்கள்? இதைவிடக் கொடுமை வேறெதுவும் நீர் செய்திருக்க முடியாது. எங்களுடைய ஊக்கம் அழிந்துவிட்டது. மனித சமுதாயம் ஒரு கவியை இழந்துவிட்டது; ஓர் ஓவியனின் உயர் படைப்பை இழந்து விட்டது; ஒரு பயன் தரும் கண்டுபிடிப்பை உமது குற்றத்தால் இழந்துவிட்டது.'

ஆனால், குழந்தை ஏதோ ஒரு தனிப்பட்ட ஆக்கத்தை அவர்களைப்போல் இழக்கவில்லை. தன்னையே இழக்கிறான். அவன் தன்னுடைய ஆக்கு மேதா சக்தியால் தன்னைப் புது மனிதன் ஆக்கிக் கொள்ளும் திறனையே இழந்துவிடுகிறான். குழந்தைகளின் 'சபலபுத்தி,' 'அடங்காமை,' 'திடீரென்று தோன்றும் மன எழுச்சிகள்' ஆகியவை எல்லாம் புரிந்து கொள்ளப்படாத புண்பட்ட ஆன்மாவின் மறைந்த அலறல்களாக இருக்கலாம்.

ஆனால், ஆன்மா ஒன்றுமட்டும் பாதிக்கப்படுவதில்லை. அத்துடன் உடலும் துன்புறுகிறது. முழு உடலின் மேலும் உள்ளம் தன் போக்கை உணரச் செய்வதென்பது மனிதனுக்கே உரித்தாய சிறப்பியல்பாகும்.

அனாதைக் குழந்தைகளுக்கென்று ஒரு நிலையம் இருந்தது. அதில் மிகவும் அவலட்சணமான குழந்தை ஒன்று இருந்தது. அவனைப் பார்த்துக் கொள்ளும் இளம் பெண்ணினிடம் அக்குழந்தைக்கு அலாதிப் பிரியம். இந்தத் தாதி ஒருநாள் இந் நிலையத்து ஆதரவாளர்களில் ஓர் அம்மையாரிடம் சென்று, இக் 'குழந்தை

வரவர அழகாகிக் கொண்டிருக்கிறது' என்று எடுத்துக்கூறினள். அந்த அம்மையார் அக் குழந்தையைப் பார்க்கச் சென்றார். அது மிகவும் அழகற்றதாக இருப்பதையே கண்டார். தினந்தோறும் பார்த்து வருகின்ற பழக்கத்தால் பிறருடைய குறைபாடுகள் நமக்கு சகஜமாகிப் போகிறது போலும் என்று அவர் தமக்குள்ளே நினைத்துக் கொண்டு சென்றுவிட்டார். இந்தச் சம்பவம் நடந்த சில கால இடைவெளிக்குப் பிறகு முன்போலவே இந்தத் தாதி அம்மையாருக்கு மறுபடியும் எடுத்துக் கூறினள். அந்த அம்மையாரும் நல்லெண்ணத்துடன் மறுபடியும் அந் நிலையத்தைக் காணச் சென்றாள். அந்த இளம் தாதி அக் குழந்தையைப்பற்றி அவ்வளவு அன்பாகப் பேசுவதைக் கேட்டு அவளுடைய அன்பே அவளைக் குருடாக்கி விட்டது என்று தீர்மானித்து விட்டார். பல மாதங்கள் கழிந்தன. இறுதியாக அந்தத் தாதி ஏதோ வெற்றி பெற்றவள் போல், 'இனி எந்தவிதச் சந்தேகமும் இருக்க முடியாது; அக் குழந்தை நிச்சயம் அழகன் ஆகிவிட்டான்' என்று உறுதியாக விளம்பரம் செய்தாள். அந்த அம்மையார் சென்றார்கள்; பார்த்தார்கள். என்ன அதிசயம்! மெய்யாகவே அக் குழந்தையைப்பற்றிக் கூறியது உண்மை என்று ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. நிறைந்த அன்பினல் அக் குழந்தையின் உடல் உண்மையாக மாற்றிக்கொண்டுவிட்டது என்பது தெளிவாயிற்று.

நல்ல காற்றும், நல்லுணவும் குழந்தைக்கு அளிப்பதால் எல்லாம் அளிக்கிறோம் என்று நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்கிறோம். பார்க்கப் போனல் இவைகளைக்கூட நாம் அவர்களுக்கு அளிப்பதில்லை. மனித உடலுக்குக் காற்றும், உணவும் மட்டும் போதா. எல்லா உடல் சார்ந்த வேலைகளும் இதனினும் உயர்ந்த ஒரு நலனைப் பொறுத்திருக்கிறது. அந்த நலனிலே தான் எல்லா வாழ்க்கையின் திறவுகோலைக் காண இருக்கிறது. குழந்தையின் உடல் ஆன்மாவின் மகிழ்ச்சியாலும் வாழ்கிறது.

இவைகளைப் பற்றி உடலியலே நமக்குப் போதிக்கிறது. அடைபட்ட அறையில் உண்ணப்படும் அறுசுவை உண்டியைவிட வெட்ட வெளியில் உண்ணப்படும் எளிய உணவு உடலை மேலாகப் போஷிக்கும். அடைபட்ட அறையில் இருக்கும் காற்று தூய்மை பெறாதது. வெட்டவெளியில் உடலுறுப்புகளின் எல்லா வேலையும் இன்னும் சுறுசுறுப்பாக இருக்கின்ற காரணத்தால், சீரணமாதலும் இன்னும் நன்றாக நடைபெறுகிறது. அதேபோல் நிலையற்ற எசமானனுடன் அரச பந்தியில் உட்கார்ந்து உண்ண இருக்கும் தொல்லைக்கு ஆளாகும் ஒரு செயலாளரின் உணவைவிட, நம்மிடம் பரிவும் அன்பும் காட்டக்கூடியவர்களுடன் கூடி உண்ணப்படும் எளிய உணவு

எவ்வளவோ மடங்கு சத்துள்ளதாக இருக்கும். இவைகளுக்கு எல்லாம் தெளிவு கூறுவது சுதந்திரம் என்பதுதான். பர்வா டொமுஸ் செய்மியா'[1] — 'சிறிய வீடுதான், ஆனுல் என் சொந்த வீடு!' என்பது ரோமர் காலம்தொட்டு எடுத்துக் கூறப்படுகிறது. எல்லா வீடுகளிலும் எது மிகவும் உடல் நலம் தரக்கூடியது என்பதற்கு மேலே குறிப்பிட்டதை வரையறையாகக் கூறி வந்திருக்கிருர்கள். அற்புதக் கட்டடங்களிலோ அல்லது இளவரச விருந்திலோ அருந்திளுலும் நமது வாழ்க்கை ஒடுக்கப்பட்டால் நமக்கு உடல் நலம் கிடைக்காது.

**மனிதனுடைய உடல்வாழ்க்கை உளவாழ்க்கையைப் பொறுத்திருக்கிறது.**—இத்தகைய காட்சி அற்புதங்களின் இயங்கு முறையைப் பற்றி உடல்நூல் விரிவான விளக்கங்கள் தருகிறது. உடலின் பல்வேறு தொழில்கள் அறநெறிச் செயல்களால் அல்லது மனம் சம்பந்தப்பட்டவைகளால் மிகவும் பாதிக்கப்படுகின்றன. சோகம், கோபம், களேப்பு, இன்பம் ஆகிய இம் மனேநிலேகளால் நாம் எவ்வாறு பாதிக்கப்படுகிறேம் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. சோகம் அல்லது துக்கத்தில்இருதயம் தளர்கிறது. வாதம் வந்தது போல் தளர்கிறது. எல்லா இரத்தக் குழல்களும் குறுகுகின்றன. இரத்தம் இன்னும் மெதுவாக ஓடிச் சுழல்கிறது. கிரந்திகள் முன் போல் இயற்கையாகத் தமது நீர்களேச் சுரக்க விடுவதில்லே. இவைகளால் முகமே வெளுத்துக் காட்டுகிறது. தளர்ந்து போன உடலின் வாட்டம் காண்கிறது. உமிழ்நீர்க் குறைவால் வாய் வறண்டு போகிறது. சீரணநீர் இல்லாத குறைவால் சீரணமே கெட்டுப் போகிறது. கைகள் 'சில்' என்று ஆகிவிடுகின்றன. அந்தத் துக்கம் நீடித்தால் சரியாக உணவு உட்கொள்ள முடிவதில்லே; அதளுல் உடல் இளேத்துப் போகிறது. பலவீனமான உடல் தொத்து நோய்களுக்கு இடம் தரவிடுகிறது. களேப்பு என்பது இருதயத்தின் வேகமான பச்சைவாதம் போன்றது. மயக்கத்தை உண்டாக்கலாம். மிகவும் களேத்த போது 'இனிச் செத்தேன்' [ஆங்கிலத்தில் Dead tired என்பர்] என்பது போலிருக்கும். ஆளுல், இவ்வாறு துன்புறுபவனே ஒரு பிரதிக்கிரியை அந்த நிலேயிலிருந்து ஓரளவு காப்பாற்றிவிடும். இயந்திரங்களில் தானே இயங்கும் வால்வுகள், எங்ஙனம் விபத்துகளே வராமல் தடுக்கின்றனவோ, அங்ஙனம் இந்தப் பிரதிக்கிரியைகள் காப்பாற்றுகின்றன. கொட்டாவிவிடும் பொழுது என்ன நடைபெறுகிறது? அது ஆழ்ந்து விட்டுவிட்டுக் காற்றை உள்ளிழுக்கும் செயலாகும். அப்பொழுது 'பால்மினரி ஆல்வியோலே'களே[2] விரிவாக்குகின்றன. ஒரு பம்பு

[1] Parva domus sed mea.

[2] Pulmonary alveoli— நுரை ஈரல் கண்ணறை.

போல் இரத்தத்தை இருதயத்திற்குள் உந்தச் செய்கின்றன. அவ்வாறு செய்வதால் இருதயத்தை மறுபடியும் இயங்கச் செய்கிறது. கோபம் வரும் பொழுது நடைபெறுவதென்ன? எல்லாத் தந்துகிகளும் கிருமி விடம் தீண்டப்பட்டதுபோல் குறுகிவிடு கின்றன. அப்பொழுது உடல் வெளுக்கிறது; கல்லீரலிலிருந்து எப்பொழுதையும் விட இன்னும் அதிகமான பித்த நீரை வெளி யாக்குகிறது; ஆனல் இன்பம் வந்தபோது இரத்தக் குழல்கள் விரி வடைகின்றன. இரத்த ஓட்டம் அதிகரிக்கிறது. அதன் காரண மாகச் சுரப்பிகள் சுரக்கின்றன. செரிக்கும் திறன் ஏற்படுகிறது. முகத்தில் நல்ல வண்ணப்பொலிவு தோன்றுகிறது, சீரணத்துக் கான இரைப்பை நீரும், உமிழ் நீரும் சுரப்பது தெரிகிறது. இரைப்பை நீரும் உமிழ் நீரும் நல்ல பசிக்கு அறிகுறியாகி, உடலுக்குத் தேவைப்படும் புதிய சக்தி வாய்ந்த உணவை ஊட்டு விக்க வழி வகுக்கிறது. எல்லாத் திசுக்களும் தமக்குள் பொதிந்து கிடக்கும் நச்சுப் பொருள்களை வெளிப்படுத்தும் தீவிரப் பணியில் முற்படுகின்றன. விரிந்த நுரை ஈரல்களும் நிறைந்த அளவு பிராணவாயுவைத் தமக்குள் நிரப்பிக் கொள்கின்றன. பிராணவாயு உடலுக்குள் இருக்கும் வேண்டாப் பொருளை எரித்து விடுகிறது. எவ்வகை நச்சுக் கிருமியும் உடலுக்குள் நிலைத்திராத படி எரித்து விடுகிறது. நல்ல உடல் நலத்தையே உட்புகுத்தி விடு கிறது என்னலாம்.

இத்தாலி நாட்டில் தூக்குத் தண்டனை கூடாது என்று சட்டப்படி நீக்கிவிட்டுத் தனிக்கடுங்காவல் முறையைக் கையாண் டனர். உடலின் உறுப்புகள் இயங்குமாறு உளப் போக்கால் எப்படி எப்படியெல்லாம் பாதிக்கப் படுகிறதென்பதற்கு இன்னும் மேலான சான்ருக இங்கு நாம் காண்கிருேம். நவீன உடல் நல முறைகளைக் கையாளுவதால் சிறைக்கூடங்களை, உடலைச் சித்திர வதை செய்யப்படும் கூடமாகக் கருத இடம் தருவதில்லை. இந்த இடத்தில் ஆன்ம இயலான வாழ்வாதாரம் (Spiritual sustenance) மறுக்கப் படுகிறது. இந்தச் சிறை எப்பேர்ப்பட்டது? தனி அறை, சாம்பல் நிறச் சுவர்கள், ஓர் ஓவியமோ திரைச்சீலையோ பெருத சுவர். கதவு திறந்தால் காணப்படும் முற்றம் சிறு குறுகலான தரை. இதன் நாற்புறமும் உயர்ந்த சுவர்கள். இந்தக் குறுகிய முற்றத்தில் நல்ல காற்று வாங்கக் குற்றவாளி உலாவலாம். அவனைச் சுற்றி லும் திறந்த வெட்டவெளி இருக்கத்தான் செய்கிறது. ஆனல், அவன் அது தன் கண்ணுக்குப் புலனுகாமல் அடைபட்டுக்கிடக் கிருன். இங்கு அவனுடைய உடலுக்கு என்ன நேரிடுகிறது? அதற்குத் தேவைப்படும் உணவு அளிக்கப்படுகிறது. தட்ப, வெப்ப மழைக்குத் தக்க இருப்பிடம் அளிக்கப்படுகிறது. படுக்க

இடம் உண்டு. புதிதாகப் பிராணவாயு ஏற்றுக் கொள்ள வசதி உண்டு. உடல் இளைப்பாற முடியும். ஆம்; இங்கு உடல் இளைப் பாறுவதைத் தவிர வேறு எதையும் செய்ய முடியாது. ஒன்றுமே செய்யாமல் சும்மா இருக்க விரும்புவோருக்கு இது மிகவும் பொருத்தமான இடமே ஆகும். வெளியிலிருந்து ஓர் ஒலியும் இங்கு நுழையாது. இந்த இடத்தில் அடைபட்டவரின் செவியில் எந்த வெளியாரின் குரலும் விழாது. அவன் இனிமேல் ஒரு வண்ணத்தையோ உருவத்தையோ காணுவதில்லை. வெளி உலகத் தைப் பற்றிய எந்தச் செய்தியும் அவனுக்கு எட்டுவதில்லை. அவன் தன்னந்தனியாக ஆன்ம இருளில் அடைபட்டுக் கிடக்கிறான். அவன் முடிவுறா மணிகளை, நாள்களை, பருவங்களை, ஆண்டுகளைக் கழிக்கிறான். இந்தத் துயரம் மிகுந்தவர்கள் இனிப் பிழைக்க முடியாதென்பது இன்று கண்ட உண்மை. அவர்கள் மனநோயால் அவதியுற்று இறக்கின்றனர். சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர் களுடைய உடல் மட்டுமன்று; உள்ளமும் உடைந்து மடிகிறது. சாவைத் தோற்றுவிப்பது யாது? அத்தகைய மனிதன் ஒரு செடியா யிருந்தால் அவனுக்கு ஒரு குறைவும் இருந்திருக்க முடியாது. வேண்டிய உணவூட்டம் இருந்திருக்கிறது. ஆனால் அவனுக்கு வேறு வகையான ஊட்டம் வேண்டியிருக்கிறது. மிகவும் கொடிய குற்றவாளிக்கும் ஆன்ம வெற்றிடம் மாள்வுக்குரியது. ஏனென்றால் இது மனித இயலின் விதி. தரையில் இருக்க வேண்டிய நைட் ரேட்டு உப்புகளும் சுத்தமான பிராணவாயு கலந்த காற்றும் இல்லாவிடில் எவ்வாறு ஒரு தேக்குமரம் அழிந்து விடுமோ அதே போல் அவனுடைய தசைகள், உட்கிடப்புறுப்புகள், எலும்புகள் அனைத்தும் ஆன்ம ஊட்டம் இல்லாத காரணத்தால் அப்படியே அழிந்து விடுகின்றன. பலாத்காரச் சாவை விட இந்த மெதுவான சாவு பெரிய கொடுமை என்று தீவிரமாகக் கண்டிக்கப்பட்டது. ஜியார்டானோ, புருனோ (giordano Bruno)என்ற இத்தாலிய மேதை தீயிட்டுக் கொல்லப்பட்டதை விட ஒன்பது நாள்கள் பட்டினி போட்டு கவுண்ட்யுகோலீனோவைச்[1] சாகவைத்தது மிகவும் கொடுமையானது. ஆனால், ஆன்மப் பட்டினியால் பல ஆண்டு கள் வாடிச் சாகவைப்பது இதுவரை மனிதனைக் கண்டித்துத் திருத்த அமைத்துக் கொண்டுள்ள எவ்வகைக் கொடிய தண்டனை யினையும் விடக் கொடியதாகும்.

நல்ல உடல் வலிவு பெற்ற கொடிய குற்றவாளி ஆன்மப் பட்டினியால் அழிய முடியும் என்றால், குழந்தையின் ஆன்மத் தேவையைப் பொருட்படுத்தாவிட்டால் அவன் கதி என்னவாகும்? அவனுடைய உடல் எளிதில் முறிகின்ற தன்மை உடையது.

[1] Count Ugolino.

எலும்புகள் இன்னும் வளர்ந்து கொண்டிருக்கின்றன. அவனுடைய தசைகளில் சர்க்கரைப் பொருள் நிறைந்திருப்பதால் அவைகளுடைய முழுச்சக்தியைப் பயன்படுத்த இயலாது. அவைகளை வெளியிலிருந்து விரிவடையச் செய்ய முடியாது. தாமேதான் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. அவனுடைய மென்மையான உறுப்புகளுக்கு ஊட்டமும் பிராணவாயும் தேவை என்பது உண்மையே. ஆனால், அதனுடைய தொழில்கள் திருப்திகரமாக நடைபெற வேண்டுமாயின், அதற்கு மகிழ்ச்சி வேண்டும். மகிழ்ச்சியுள்ள உள்ளுயிரே 'மனிதனுடைய எலும்புகளை மகிழ்ச்சியில் திளைக்கச் செய்கிறது.'

# 2. நற்காலக் கல்விபற்றி அளவாய்வு

**அறநெறிக் கல்வியையும் போதனு முறையையும் ஆட்கொண்டு நடத்தும் விதிகள்.**—முதிர்ந்தோன் குழந்தையைப் பொம்மை உலகத்துடன் வாழ ஒதுக்கிவிட்டிருக்கிருன். குழந்தையின் அந்தரங்க வளர்ச்சியை வளரச் செய்யும் பயிற்சிகளையும் மனம் இரங்காமல் மறுத்துவிட்டிருக்கிருன். எனினும், அறநெறிப் பகுதியில் குழந்தை முதிர்ந்தோரைப் பின்பற்றவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. முதிர்ந்தோன் குழந்தைக்கு என்ன சொல்கிருன்? ‘நான் செய்வது போலச்செய்’ என்கிருன். குழந்தை ஒரு மனிதனுக வேண்டும் என்ருல், பயிற்சிகளாலும் அன்று; வளர்ச்சியாலும் அன்று. ஆனுல் பின்பற்றல்[1] செய்தலால் ஆகும். இது எப்படி இருக்கிறதென்ருல், தந்தை தன் குழந்தையான மகனுக்குக் காலையில், ‘என்னைப் பார்; பார் எவ்வளவு உயரமாக இருக்கிறேன். நான் மாலையில் திருப்பி வரும்போது நீ ஓர் அடி உயரம் வளர்ந்திருக்க வேண்டும்’ என்று கட்டளை இடுவது போலிருக்கிறது.

இந்த முறையை அனுசரிக்கும் பொழுது கல்வி மிகவும் எளிமையாகிவிடுகிறது. ஒரு வீரச் செயல் பற்றிய கதை குழந்தைக்குப் படிக்கப்படுகிறது. ‘அந்த வீரனைப்போல் நீயும் ஆவாய்,’ என்று சொல்லப்படுகிறது. ஓர் அறநெறிச் செய்தி கூறப்படுகிறது. முடிவில், ‘நீயும் நன்னெறியாளனுகுக’ என்று சிபார்சு செய்யப்படுகிறது. ஒரு சிறந்த நற்குணம் வாய்ந்தவர் வரலாற்றினை எடுத்துக் காட்டின பிறகு, ‘நீயும் தளராத நற்குணம் வாய்ந்தவனுக இருக்க வேண்டும்’ என்றெல்லாம் குழந்தைக்குச் சொல்லும் பொழுது, அவன் ஒரு பெரிய மனிதன் ஆகும் வழியைக் காட்டிவிட்டோம்.

[1] imitate.

குழந்தைகள் அதிருப்தியுடனும் அமைதியுடனும் அமைதி இன்றியும் இருந்தார்களானல், அவர்களுக்கு எல்லாம் நிறைந்திருக்கிற தென்றும், இனித் தேவைப்படுவது ஏதுமில்லை என்றும், நல்ல தாய் தந்தையரைப் பெற்ற நற்பேறு உடையவர்கள் என்றும் எடுத்துக்காட்டி, இறுதியில், 'குழந்தைகளே மகிழ்ச்சியடையுங்கள், குழந்தைகளே நீங்கள் எப்பொழுதும் இன்புற்றிருக்க வேண்டும்' என்றும் கூறப்படுகின்றன. இத்தனையும் கூறப்படும் பொழுது குழந்தையின் அந்தரங்கப் பேராவல்கள் அனைத்தும் திருப்தி அடைந்து விட்டதாகக் கருதப்படுகிறது.

இவ்வாறு நடந்துகொள்ளும் பொழுது முதிர்ந்தோர் மன நிறைவு பெறுகின்றனர். முன்னெல்லாம் குழந்தைகளின் மடங்கியிருந்த குழந்தைக் கால்களைக் கட்டுக் கட்டி நீட்டி விடுவது பழக்கத்தில் இருந்தது. அதேபோல் குழந்தையின் குணங்களையும், நன்னெறியையும், நேர்மைப்படுத்தப் பார்க்கின்றனர்.

இம்மாதிரி உபதேசங்கள் பயனற்றவை என்பதை வம்புக்காரக் குழந்தைகள் சில சமயங்களில் காட்டிவிடுகின்றூர்கள் என்பது உண்மையே. அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் நல்ல போதகன் அவர்களுடைய வேண்டா நடத்தையை விலக்கப் பொருத்தமான கதைகளைத் தேர்ந்தெடுக்கிறான். நன்றியின்மையின் இழிவையும், கீழ்ப்படியாமையின் அபாயத்தையும் கோபத்தின் விகாரத்தையும் காட்டும் வகையில் கதைகளைத் தேர்ந்தெடுக்கிறான்; அவனுடைய குறைபாடுகளை வலியுறுத்திக் காட்டுகிறான். குருடனுக்குக் கண்ணில்லாத அபாயங்களைப் பற்றிக் கூறுவது போலும், கைகால் வராதவனுக்கு நடப்பதின் இடர்ப்பாடுகள் என்னென்ன வென்று நல்லறிவுறுத்தல் போலவும் குழந்தைக்கு மேலே கூறப்பட்ட முறையில் ஊக்கம் அளிக்கப் பேசுகிறான் நல்ல போதகன். கலை மூல விஷயங்களிலும் இதே நடைபெறுகிறது. இசைவாணர் புதிதாகப் பழகுபவனுக்கு என்ன கூறுகிறார்? 'விரல்களைச்' சரியாக வைத்துக் கொள். அவ்வாறு செய்யா விட்டால் உன்னல் இசைக்கருவியை இசைக்க முடியாது' என்கிறார்.

பள்ளிக்கூடத்தில் நாள் முழுதும் அந்த பெஞ்சுகளில் குனிந்து உட்கார்ந்தும், சமூகக் கட்டுப்பாட்டினல் நாள் முழுதும் கட்டாயமாகப் படிக்க வேண்டியிருப்பதாலும், அவன் கூன் போடுகினறான். அப்பேர்ப்பட்ட குழந்தையைப் பெற்றவள், 'நேராக, கம்பீரமாக நில்; பிறர் மத்தியில் அப்படி நீ அருவருப்பாக நின்று என்னை வெட்கப்படும்படி செய்யாதே' என்று கூறுவாள்.

'நீங்கள் தானே என்னுடைய நற்குணத்தையும் மனத்துணிவையும் வளரவிடாமல் தடுத்தீர்கள். நான் குறும்புத்தனமாகக் கீழ்ப்படியாதிருந்ததாகக் காட்சி அளிக்கும் போது, நான் என்னையே காத்துக்கொள்ள முயற்சி செய்து கொள்கிறேன். என்னையே பலி கொடுக்கப்படும் பொழுது நான் எவ்வாறு அருவருப்பாக நடந்து கொள்ளாமல் இருக்க முடியும்' என்று இவ்வாறு ஒரு நாள் குழந்தை சொன்னுல் இது பலருக்கு ஒரு மறைவு வெளிப்பாடாகும் (Revelation). வேறு பலருக்கு இது மரியாதைக் குறைவாகவும் தோன்றலாம்.

இதுதான் நல்லது என்று முதிர்ந்தோரால் கருதப்பட்டவைகளைக் குழந்தை பெறச் செய்ய ஒரு முறை இருக்கிறது. அது மிகவும் எளிய முறை. முதிர்ந்தோர் என்ன விரும்புகிருரோ அதைக் குழந்தை செய்ய வேண்டும். அப்பொழுது நற்குணம், தியாகம், மனத்திட்பம் போன்றவைகளின் உச்ச நிலையை அடைய முதிர்ந்தவன் வழிகாட்ட முடியும். அப்பொழுது நன்னெறிக் குழந்தை உருவாகி விடுவான். குழந்தையின்மேல் ஆதிக்கம் செலுத்தி அடிமையாக்கிக் கீழ்ப்படியச் செய்வதே கல்வியின் அடிப்படையாகும். இதை எந்த வகையிலாலும் செய்ய முடிந்தால்,— பலாத்காரமானுலும் சரி, மற்றவைகளெல்லாம் தானுகத் தொடரும். எல்லாம் குழந்தையின் நலனுக்காகவே என்று எண்ணுவதையும் நாம் மறந்து விடக் கூடாது. குழந்தையை வேறு எந்த வகையிலும் உருவாக்க முடியாது. குழந்தையின் மனத்திட்பத்தைக் கற்பித்தலுக்கு இதுதான் முதல்படி. இந்த முறையை அனுசரித்த பிறகு வர்கில் [1] (Virgil) இறைவனைப்பற்றிக் கூறியதுபோல் முதிர்ந்தவனும் தன்னைப் பற்றிக் கூறிக் கொள்ளலாம்.

இந்த முதல் படியைத் தாண்டின பிறகு எந்தெந்த விஷயங்கள் மிகவும் கடினமானவை என்று முதிர்ந்தவன் ஆராய்வான். இவைகளை அந்தந்தக் காலத்தில் குழந்தையிடம் தோன்ற வற்புறுத்துவான். மனித வாழ்க்கையில் இன்றியமையாத இடர்ப்பாடுகள் இவை இவை என்று குழந்தை தெரிந்து கொள்ளும்படி செய்து வைப்பான். சில சமயங்களில் சில விதிகளைக் குழந்தையின்

[1] பூபிலஸ் வர்கிலியஸ் மாரோ (Publius Virgilius Maro—கி. மு. 70 - 19) என்பவர் இத்தாலியில் பிறந்த மாபெரும் கவிகளில் ஒருவர். தாந்தே (Dante) இயற்றிய மகா காவியத்தில் இவர் அவருக்கு வழிகாட்டியாக இருப்பதாகவும் அவர் வாயால் இறைவனது திண்ணம் பற்றி இருவரிகளை தாந்தே பொறித்திருக்கிருர். "எண்ணியவாங்கு நடத்திவைக்க வல்லவரான சித்தர் திண்ணமாக எண்ணினுர். இதற்கு மேல் கேட்காதே."

This it was willed where He who wills
Can do what He wills and do not ask further.
—Dante - Inferno (Hell) III: 95/96

3

மேல் திணிக்கப் பார்க்கிறான். இவ் விதிகளில் சிலவற்றைக்கூடத் தன்னால் ஏற்றுக் கொள்ளக்கூடிய மனவலிமையை முதிர்ந்தவன் பெற்றானில்லை. எடுத்துக்காட்டாக ஊக்கமில்லாத சோர்வூட்டும் சொற்பொழிவொன்றைத் தினந்தோறும் மூன்று நான்கு மணி நேரங்கள் பல ஆண்டுகள் ஆரவமர்ந்து கவனத்தோடு கேட்டு வர வேண்டும் என்பது முதிர்ந்தோரால் சாதிக்க முடியும். இதைக் குழந்தை சாதிக்க வேண்டும் என்பது இயலாத காரியமாகும்.

**குழந்தையின் மனத்தை உருவாக்குவது ஆசிரியனே — அவன் எவ்வாறு கற்பிக்கிறான்: —** இதே கருத்துதான் பள்ளிக் கூடத்திலும் கையாளப்படுகிறது. மாணவனை உருவாக்குவது ஆசிரியனே. குழந்தையின் நுண்ணறிவு வளர்ச்சியும் பண்பாடும் ஆசிரியன் கையில் இருந்தன. ஆசிரியனுக்கு மிகப்பெரும் வல்லமை வாய்ந்த பொறுப்பு இருக்கிறது. அவன் முன் தோன்றும் பிரச்சினைகள் எண்ணற்றவை; கடுமையானவை. அவை மாணவர்களிட மிருந்து ஆசிரியனைப் பிரிக்கின்ற ஒரு முள் வேலி போல் ஆகிவிடு கின்றன. குழந்தைக்கு அவசியம் என்று ஆசிரியன் கருதுவதை யெல்லாம் குழந்தையினுடைய மனத்துக்குள் செலுத்த, அவ னுடைய கவனத்தை ஒருநிலைப்படுத்த முதலில் செய்யப்பட வேண்டிய சூழ்ச்சி என்ன? அவர்கள் தம் நினைவில் மங்காமல் ஒரு கருத்தை நிலைபெறச்செய்ய வேண்டுமானால், ஆசிரியன் எவ்வாறு அளிக்க வேண்டும்? இந்த நோக்கம் நிறைவேற வேண்டுமானால், உள இயல் உண்மையை அவன் தெரிந்து கொள்ள வேண்டும். உள இயல் நிகழ்ச்சிகள் எவ்வாறு நடைபெறுகின்றன, நினைவு பற்றிய விதிகள், கருத்துகள் உருவாகப் பயன்படும் உள இயல் இயக்கம், எண்ண இயைபு (association of ideas) சம்பந்தமான விதிகளும், அவை படிப்படியாக மிகவும் விழுமிய வினையாற்றலை யும், குழந்தை மனத்தில் விவாதிக்க ஏற்பாடு செய்வதும் எப்படி என்று புரிந்துகொள்ள வேண்டும். எல்லாம் தெரிந்த ஆசிரியனே குழந்தையின் மனத்தை உருவாக்கி நிறைக்க வேண்டியிருக்கிறது. இது ஓர் எளிதான காரியமன்று. ஏனென்றால் இந்த இடர்ப் பாட்டுக்கு மேல் இன்னும் எல்லா இடர்ப்பாடுகளிலும் இடர்ப் பாடானது ஒன்று இருக்கிறது. அது இந்த முயற்சிகளுக்கெல்லாம் குழந்தையை ஒப்ப வைப்பது ஆகும். ஆசிரியரைத் தழுவி நடத்தல், ஆசிரியர் தன் பொருட்டு எடுத்துக் கொண்ட முயற்சிக்கு முரண்பாடு உடையவனாக ஆகாதிருத்தல். இக் காரணம்பற்றி நன்னெறிக் கல்வியை முதலில் பெறவேண்டும். மற்றவைகளைச் சாதிப்பதற்கு முன் வகுப்பைக் கட்டுப்படுத்த வேண்டும். ஆசிரி யனுடைய முயற்சியை மாணவன் ஆதரிக்க வேண்டும்; வழி மொழிய வேண்டும். அன்பினால் இல்லாவிட்டால் கட்டாயப்

படுத்திப் பலாத்காரத்திலாவது கட்டுப்படுத்த வேண்டும். இதை நிலைபெறச் செய்யாவிட்டால் எல்லாக் கல்வியும், போதனையும் இயலாததாகிவிடும். பள்ளிக்கூடங்களும் பயனற்றதாகிவிடும்.

மற்றொரு இடர்ப்பாடு குழந்தைகளின் சக்தியைச் சிக்கன மாக்குதல். அதாவது அச் சக்திகளை வீண்போக்காமல் நிறைந்த அளவுக்குப் பயன்படுத்துதலாம். எவ்வளவு ஓய்வு பெற வேண்டும்? எந்த வேலையும் எவ்வளவு நேரம் நடைபெற வேண்டும்? முதல் முக்கால் மணி நேரம் வேலை செய்த பிறகு ஒரு வேளை பத்து நிமிடங்கள் ஓய்வு தேவைப்படலாம். அடுத்த முக்கால் மணி நேரத்துக்குப் பிறகு இன்னும் பதினைந்து நிமிட ஓய்வு தேவைப் படலாம். இப்படியே நாள் முழுமையும் நடைபெற்று இறுதியில் பத்து நிமிட வேலைக்குப் பிறகு பதினைந்து நிமிட ஓய்வு தேவைப் படலாம். ஒரு நாளின் பல பிரிவுகளில் எந்தெந்த நேரத்தில் எந் தெந்தப் பாடம் கற்பிப்பது அவனுடைய சக்திகளுக்குப் பொருத்த மாக இருக்கும். ஆரம்பத்தில் கணக்கைச் சொல்லித் தருவதா அல்லது ஒப்ப எழுதக் கூறுவதா?[1] குழந்தை தன் மனக் கற்பனை சக்தியை எந்நேரத்தில் பயன்படுத்தத் தானாக விரும்புவான். காலை '9 மணிக்கா 11 மணிக்கா?' என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

மற்றக் கவலைகளும் ஒரு நல்ல ஆசிரியரைத் திகைக்க வைக்கும். கடைசியில் உட்கார்ந்திருக்கும் குழந்தைக்கும் தெரியும்படி எவ்வாறு ஆசிரியர் கரும்பலகையின்மேல் எழுதவேண்டும். ஏனென்றால், இவர் எழுதுவதைப் படிக்க முடியாவிட்டால் ஒரு பயனும் இல்லை. கறுப்புப் பரப்பின்மேல் எவ்வளவு வெளிச்சம் விழுந்தால் அதன்மேல் எழுதப்படும் வெள்ளை எழுத்துகளை எல்லோரும் தெளிவாகப் பார்க்க முடியும்? தூரப்பார்வைக்குத் தகுந்தபடி எவ்வளவு பெரிதாக ஆசிரியர் பலகையின்மேல் எழுத வேண்டும்? இது மிகவும் முக்கியமான விஷயம். ஏனென்றால் பலாத்காரத்தால் குழந்தை தொலைவிலிருந்து பார்த்துப் படிக்கும் பொழுது பார்வையின் ஒத்தமைப்புத் திறன் (Power of accommodation) பாதிக்கப்படலாம். இறுதியில் கிட்டப் பார்வை-எட்டப் பார்வைக் கோளாறு ஏற்பட்டு விடலாம். அப்பொழுது ஆசிரியர் ஒரு குருடனைப் படைத்து விட்டார். இது மிகவும் கவலைக்குரிய விஷயமே.

* * *

இத்தகைய ஆசிரியருடைய கவலை இத்தகையது என்று ஒருவாறு புரிந்துகொள்ள, இனிமேல் தாயாகப் போகும் இளம்

[1] dictation.

மனைவி ஒருத்தியை நினைத்துக் கொள்வோம். தனக்குள் இத்தகைய பிரச்சினைகளைத் தானே கிளப்பிக் கொள்வாள். எனக்கு உடல் கூறுப்பகுப்புப் பற்றி (anatomy) தெரியாவிடில் என்ஞல் எப்படி ஒரு சிசுவை உருவாக்க முடியும்? எலும்புகளின் உள்ளமைப்பை நான் கூர்ந்து கற்றுக் கொள்ள வேண்டும். பிறகு தசைகள் எவ்வாறு இணைக்கப்பட்டிருக்கின்றன என்றும் கற்கவேண்டும். அது சரி, மூளையை எப்படி மண்டைக்குள் புகவைப்பது? சிறு இருதயம் ஓயாமல் சாகும் வரை துடித்துக்கொண்டிருக்க வேண்டுமா? அது சலிப்படையாதிருக்க முடியுமா?

இதேபோல் அவளுடைய அன்று பிறந்த குழந்தையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கி விடுவாள். என் குழந்தை நடுநிலை அமைதி (equilibrium) என்பதின் விதி இன்னதென்பதைப் புரிந்து கொள்ளாவிடில் எங்ஙனம் நடப்பான்? அவனை அப்படியே விட்டு விட்டால் இருபது வயது பிறக்கும் வரையில் அவன் இதைப் புரிந்து கொள்ளப் போவதே இல்லை. அவன் எவ்வளவு சீக்கிரத்தில் நடக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் நடப்பதற்காக நான் முதிராத பருவத்திலேயே இந்த விதிகளை அவனுக்குக் கற்பிக்க ஆயத்தமாக வேண்டும்.

பள்ளிக்கூட ஆசிரியன்தான் குழந்தையின் நுண்ணறிவை ஆக்குபவன் ஆகிருன். ஆசிரியன் எவ்வளவுக்கெவ்வளவு முயற்சி செய்கிருனே அவ்வளவுக்கவ்வளவு குழந்தையின் நுண்ணறிவும் அதிகரிக்கிறது. அதாவது ஆசிரியன் அவனுக்கு அறிய வைத்ததையே தெரிந்து கொண்டிருக்கிருன். எவ்வளவு புரியவைத் தாரோ அம்மட்டே குழந்தை தெரிந்து கொண்டிருக்கிருன். அதற்கு அதிகமும் இல்லை, குறைவும் இல்லை. ஒரு மேல்தணிக்கையாளர் பள்ளியைப் பார்வையிட வந்து குழந்தைகளைச் சில கேள்விகள் கேட்கிருர். விடையைக் கேட்டுத் திருப்தி அடைந்த அதிகாரி 'நன்ருய்க் கற்பித்திருக்கிறீர் ஆசிரியரே' என்று அவர் பக்கம் திரும்பிப் பாராட்டுகிருர். ஏனென்ருல், பலன் எல்லாம் ஆசிரியரின் உழைப்பினுல்தான் என்பதற்கு ஐயப்பாடேதும் இல்லை. குழந்தைகளின் ஒருமுனைப்பைப் பதியவைத்தமையும், அவருடைய பாடபோதனையில் துணைபுரிந்த உள இயல் இயக்கு திறனும், ஆசிரியருடைய சாதனையே ஆகும். இறைவன் பள்ளிக் கூடத்துக்குள் சிலுவைச் சின்னமாய் அமைந்து நுழைகிருன் ஆனல் படைத்தளிப்பவன் ஆசிரியனே.

மீமனித (super-human) முயற்சியில் ஆசிரியருக்குப் பல உதவிகள் கொடுக்கப்படுகின்றன. ஒருவகையான உழைப்புப் பங்கீடு (division of labour) ஒன்றிருக்கிறது. கைதேர்ந்த

நிபுணர்கள் பாடபோதனையை ஆய்ந்து ஆயத்தமாக்குகின்றனர். உளவியலைக் கருத்தில் கொண்டு விஞ்ஞானத்திட்டப்படி (scientific plan) பாடம் கற்பிக்கப்படுகிறது. அல்லது, 'ஹெர்பார்ட்' (Herbart) போன்ற போதனை முறையாளர் (Pedagogist) நிலை நாட்டின தத்துவங்களைப் பின்பற்றிப் போதிக்க வழி வகுக்கப் படுகிறது. பாடத்திட்டங்களை அமைப்பதிலும், தினசரிக் கால அட்டவணையை நிர்ணயிப்பதிலும், பள்ளிக்கூட அறைகள் எவ்வாறு அமைக்கப்பட வேண்டுமென்பதிலும், இன்னும் பிற வற்றிலும் ஏற்படக்கூடிய நடைமுறை இடர்ப்பாடுகளைத் தவிர்க்க உடல் நல இயலும் (hygiene), தேர்வு ஆய்வு உள இயலும் (experimental psychology) பயன்படுத்தப்படுகிறது.

உள இயல் அடிப்படையில் ஆசிரியர்களால் அனுசரிக்கப் பட்ட பாடக் குறிப்புகள் கீழே தரப்படுகின்றன. பாடம் எதற்குப் பிறகு எது தொடர்ந்து வரவேண்டும் என்ற எண்ணத் துடனும் அவ்வாறு செய்வதால் உள இயல் சார்புவினை ஆற்றல் களால் குழந்தையின் மனம் எவ்வாறு வளர்ச்சி பெறவேண்டும் என்றும் கருதப்படுகிறது. இத்தகைய பயிற்சிகளை அனுசரிக்கும் பொழுது, குழந்தை கற்றுக்கொள்வது மட்டுமல்லாமல் நுண் ணறிவு வளர்ச்சி வளரவேண்டிய விதிக்கு இணங்க வளர்ச்சியும் பெறும்.[1]

## மாதிரிப் பாடம்

ஒரு மெழுகுவர்த்தி—புலன்சார்ந்த கல்வியும் புலன்காட்சி மனப்பெற்றியும் பற்றிக் கற்பித்தல் (Education of the sensory and perceptive faculties).

பார்வை—வெண்மை, திடப்பொருள்.

தொடு உணர்ச்சி—பிசுக்குள்ளது, வழவழப்பு.

இடு பெயர்த் தொகுதி—மெழுகுவர்த்தியின் பாகங்கள், திரி மேற்பரப்பு, இருமுனைகள், விளிம்புகள், மேற்பாகம், கீழ்ப்பாகம், நடுப்பாகம். நாம் உபயோகிக்கும் மெழுகுவர்த்தியானது கொழுப்புக் கலந்த மெழுகினால் ஆக்கப்பட்டது. இந்தக் கொழுப்பு ஆடு மாடு பன்றிகளிலிருந்து எடுத்து ஆக்கப்படுகிறது, ஆதலால், இவைகள் கொழுப்பு வர்த்திகள் என்று அழைக்கப்படுகின்றன. இவை அல்லாமல் மெழுகாலான வர்த்திகளும் இருக்கின்றன. இவை மஞ்சளாகவும் பிசுக்குக் குறைவாகவும் இருக்கும். மெழுகு

[1] பின் வரும் இரண்டு எடுத்துக்காட்டுகளும் சிறந்த பத்திரிகையான I Diritti della Scuola—year XIV. லிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

தேனீக்களால் ஆக்கப்படுகின்றது. டேலோ (Tallow) என்னும் ஒரு விலங்கின் கொழுப்பால்—நிணத்தால் செய்யப்பட்ட வர்த்திகள் இருக்கின்றன. இவை மிகவும் பிசுக்காகவும், எரிக்கப்படும் பொழுது விரும்பத்தகாத நாற்றத்தைத் தருவனவாகவும் உள்ளன.

மீட்டு நினைவு (Memory)—நீங்கள் எப்பொழுதாவது ஒரு மெழுகுவர்த்தி செய்யப்படும் தொழிற்சாலையைப் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் எப்பொழுதாவது ஒரு தேன்கூட்டைப் பார்த்திருக்கிறீர்களா? தேன்கூட்டின் அறைகள் எதனால் ஆக்கப்பட்டிருக்கின்றன. நீங்கள் எப்பொழுது மெழுகுவர்த்தியை ஏற்றுகிறீர்கள். நீங்கள் எப்பொழுதாவது எரியும் மெழுகுவர்த்தியை அஜாக்கிரதையாக எடுத்துச் சென்றிருக்கிறீர்களா? இதனால் பெரிய விபத்து ஏற்படவில்லையா?

கற்பனை (Imagination)—ஒரு மெழுகுவர்த்தியின் படத்தைக் கரும்பலகையில் வரைதல்.

ஒப்பீடு செய்தல் (Comparison)—கருத்து இயைபு (association) பிரித்தெடுத்தல் (abstraction)—கொழுப்பு, மெழுகு, டேலோ ஆகியவற்றால் தனித்தனியாகச் செய்யப்பட்ட மெழுகுவர்த்திகளின் ஒற்றுமை வேற்றுமைகள்.

பகுத்துணர்வும் (Judgement) வாதகாரணமும் (reasoning)—மெழுகுவர்த்திகள் பயனுடையவையா? முன்பெல்லாம் அவை அதிகமாக உபயோகமாயினவா அல்லது வாயுவும் (gas) மின்சாரமும் உபயோகிக்கின்ற இந்தக் காலத்தில் அவை அதிகம் உபயோகமாகின்றனவா?

உணர்ச்சிக்கனிவு (Sentiment)—மெழுகுவர்த்தித் தொழிற்சாலையைப் போய்ப் பார்க்கும்பொழுது குழந்தைகள் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றனர். பலரால் உபயோகிக்கப்படும் மெழுகுவர்த்தி எவ்வாறு செய்யப்படுகிறது என்று நேரில் காணும் பொழுது அது மனத்துக்கு ஏற்றதாக இருக்கிறது. போதிக்கப்படுவதற்கு நம் ஆசைகளைத் திருப்தி அடையச் செய்யும் பொழுது நமக்குள் இன்பமும் மனநிறைவும் ஏற்படுகின்றன.

விருப்பத் துணிவாற்றல் (Volition)—கொழுப்பு—ஸ்டீரின்—செய்வது எப்படி என்று நமக்குத் தெரியாதிருந்தால் பன்றியின் நிணத்தை நம்மால் என்ன செய்யமுடியும்? எப்படி உபயோகிப்பது என்று நமக்குத் தெரிந்திராவிடில் மெழுகை நாம் என்ன செய்ய முடியும்? பல பொருள்களைத் தன் வினைத்திறத்தால் உழைத்து அப் பொருள்களைப் பயன்தரும் பண்டங்களாகத் தொழிலாளி

மாற்றி அமைத்துவிடுகிறுன். தொழில்தான் நம் உயிர். தொழிலாளி வாழ்க! நாமும் தொழிலைப் பேணுவோமாக. நம்மைத் தளரா முயற்சியோடு அதில் ஈடுபடுத்துவோமாக.

குறிப்பு : (குழந்தைகள் அசையாமல் கவனித்துக் கொண்டிருக்கவேண்டும்.) எந்தப் பாடமும் இதே உள இயல் சம்பந்தமான திட்டத்தின் அடிப்படையைக் கொண்டதே யாகும். அறநெறி சம்பந்தமான பாடமும் அஃதே. எடுத்துக்காட்டாக:

வினையாற்றலைக் கூர்ந்து கவனித்ததில் பிறந்த அறநெறிக் கல்வி

குறிப்பு : வினையாற்றலெல்லாம் கற்பனை செய்யப்பட்டு இங்குக் கூறப்படுகிறது. [குறிப்பு : வினையாற்றல்கள் அனைத்தும் உண்டாக்கப்பட்டுக் கூறப்பட்டவை.]

ஒத்த பழக்க வழக்க நடைமுறைகள் (agreeable manners)— நிகழ்ச்சி : 'அக்கா, அது மெய்யா? கிராம மாதா கோவில் இங்கிருந்து ஒரு கிலோ மீட்டரைவிடத் தொலைவில் இருக்கிறது. என்னுடைய தாயார் என்னை அங்குப் போகக் கட்டளை இட்டிருக்கிறுர்கள். நான் வந்து சேர்ந்துவிட்டேன் என்று நினைத்தேன். எவ்வளவோ மகிழ்ச்சி அடைந்தேன். நான் வெகு தொலைவிலிருந்து நடந்து வந்திருக்கிறேன். எனக்கு ரொம்பரொம்பக் களைப்பாய் இருக்கிறது.' தன் வீட்டு வாசல் கதவோரம் நின்று கொண்டிருந்த பெண், 'ஆம், இன்னும் மாதாகோவிலிலிருந்து ஒன்றரைக் கிலோமீட்டர் தொலைவில்தான் இருக்கிறுய்' என்றுள். 'ஆனல் என் கதவு வழியாக வா ; குறுக்கு வழியே எங்கள் வயல் வழியாகக் கூட்டிக் கொண்டு போகிறேன். இன்னும் ஐந்தே நிமிடங்களில் மாதாகோவிலை அடைந்துவிட முடியும்' என்றுள். என்ன கேண்மைப் பாங்குள்ள (amiable) பெண்.

காரண காரியத்தின் தொடர்ந்த ஒற்றுமை (Successive relations of cause & effect) கிராமப் பெண் சிறு பிரயாணியிடம் கேண்மை காட்டினுள். பிரயாணியும் சீக்கிரத்தில் மாதாகோவிலை அடைந்தாள். பெரும் ஆறுதலையும் பெற்றுள்.

மீட்டு நினைவு : உனது தோழர்களுடன் நீ எப்பொழுதும் சுமுகமாக இருந்திருக்கிறுயா? உன் தோழன் கேட்ட எதையும் தயங்காமல் கொடுக்கச் சித்தமாய் இருந்திருக்கிறுயா? உனக்கு உதவி புரிந்தவர்களுக்கு மரியாதையாக எப்போதும் நன்றி செலுத்தியிருக்கிறுயா?

ஒப்பீடு செய்தல், கருத்துத் தொடர்பு, பிரித்தெடுத்தல்: மனத்துக்கிசைந்த குழந்தையுடன் முரட்டுக் குழந்தையை ஒப்பிடுதல்.

பகுத்துணர்வு, வாதகாரணம் : எல்லோரிடத்திலும் இணக்க வணக்கமாக (Courteous) இருக்க வேண்டிய அவசியம் என்ன ?

உணர்ச்சிக் கனிவு : இசைந்தவனுடைய ஆத்மா இனிமையும் கனிவும் நிறைந்ததாய் இருக்கும். எல்லோரிடத்திலும் என்ன பரிவைத் தூண்ட வைக்கிறான்! இணங்காதவன் சிறு விஷயங் களைக் கண்டும் வெடுவெடுப்பாகி விடுகிறான்; எரிந்து விழுகிறான். மற்றவர்களிடம் சலிப்பையும், அச்சத்தையும் கிளப்பிவிடுகிறான். இணக்கமுடையவன் அண்டையிலுள்ளவர்களுக்கு அன்பு காட்டு கிறான்.

விருப்பத் துணிவாற்றல் : குழந்தைகளே, எல்லோரிடமும் இனிமையாய் நடந்து கொள்ளப் பழகிக் கொள்ளுங்கள். ஒரு வருக்கு நன்மை செய்யும் பொழுது பூரிப்புடையவர்களாகவே நடந்து கொள்ள வேண்டும். இல்லாவிடில் அந்த நன்மையானது தொந்தரையூட்டுவதாகவே தோன்றும். உனக்கு ஏதாவது தேவைப்பட்டால் அவமரியாதையாகவா கேட்கிறாய் ? அவ்வா றிருப்பின், 'ஆம்' என்று சொல்வதைக் காட்டிலும் 'இல்லை' என்று சொல்லி விடுவது எளிதாகும். அதற்குப் பதிலாக ஒரு பொருளை மிகவும் மரியாதையுடன் கேட்டாயானால் உனக்கு இல்லை என்று மறுப்பது மிகவும் கடினம் அல்லவா ?

ஆசிரியர்களுக்கு மாதிரிப்பாடம் என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட ஒன்றை நாம் கவனித்தோமானால், அது இன்னும் அதிகமாக அக்கறை ஊட்டுவதாக இருக்கும். ஆசிரியர்களுக் கென இத்தாலியில் வைக்கப்பட்ட போட்டி ஒன்றில் பரிசு பெற்ற பாடத்தை இங்கு நான் அப்படியே எடுத்துக் காட்டுகிறேன். (இது La Voce delle Maestre d' Asilo, year VIII).

இதில் பாடத்தை ஒட்டியோ கருத்தை ஒட்டியோ ஒரே ஒரு பிரதம உள இயல் வினைஆற்றல்தான் எடுத்துக் கொள்ளப் படுகிறது. அதாவது, புலன் சார்ந்த புலன் உணர் புலன் காட்சி (Sensory Perception) பற்றி ஆயப்படுகிறது. (இந்தக் கட்டுரைகள் எழுதியோர் பெயர்ப்படி தேர்ந்தெடுக்கப் படவில்லை.) ஆனால் கட்டுரையில் உள்ள முகவுரை மேற்கோள் வாசகம் (Motto) குறிக் கோள் பிரகாரமே எடுத்துக் கொள்ளப்பட்டது.

**மேற்கோள் வாசக அமைப்பு (Motto) :** பண்டங்களே முதன்மை யான மிகச் சிறந்த ஆசிரியராகும்.

இந்த வரம்புகளை நானே அமைத்துக் கொண்டிருக்கிறேன்.

வெப்பத்திற்கும், பனிக்கட்டிக் குளிருக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை என்ன என்பது பற்றி எடுத்துக்காட்டுதல் : (இதற்குள்

ளாகவே இக்.கருத்து நிறைந்த வகையில் பொதிந்து கிடக்கிறது. ஒவ்வொன்ருகப் பொறுக்கி எடுக்கப்படும் சிறு மணிகளல்ல இக் கருத்துகள். இவை விழுமிய உள இயல் சார்ந்த உண்மை அல்லது செய்திகளாகும். மிகவும் சிக்கலானவை. ஆதலால் இதை உள்ளே ஏற்றுக்கொண்டு தன்மயம் ஆக்குதல் என்பது அரிது.)

கூதிர்க்காலம் வந்தால் ஏழைகள் குளிரால் பெரும்பாடு படுகின்றனர். இவர்களிடம் அன்பும், பரிவும் காட்டப் பல முயற்சிகள் ஏற்கெனவே பலதரம் செய்திருக்கிறேன்.

போதிக்க எண்ணியிருக்கும் கருத்துடன் இரக்கமும் பரிவும் வளரச் செய்வதும் ஆகும்.

மேலே குறிப்பிட்டது எனக்கு வழிகாட்டியாக இருப்பதற்கே. இனித் தொடர்வது குழந்தைகளுக்கு ஆகும்.

'குழந்தைகளே! இங்கு நாம் எவ்வளவு ஆறுதலாக இருக்கிருேம். எல்லாம் துப்புரவாக இருக்கின்றன. அனைத்தும் ஒழுங்காக இருக்கின்றன. உங்களிடத்தில் எனக்குப் பேரன்புண்டு. நீங்களும் என்னிடத்தில் பேரன்பு கொண்டிருக்கிறீர்கள். குழந்தைகளே, இது மெய்தானே?

குழந்தைகள்—ஆம், நானும்தான்; நானும் கூடத்தான்.

இனே உனக்குக் குளிர்கிறதா? 'இல்லை' என்று உடனே பதில் கூறிவிட்டாய். உம், இல்லை, நீ சொன்னது சரிதான். நாம் இங்கே மிகவும் வசதியாக இருக்கிருேம். அதோ அந்த மூலையில் (சுட்டிக்காட்டுகிறேன்) நிறையாகக் கொடுக்கக் கூடியது அங்கு ஒன்றிருக்கிறது.......

குழந்தைகள்—வெப்பம்; அது அடுப்பு.

ஆனுல் வெளியே, அடுப்பில்லாத வெளியிலே, அதோ அங்கே அடிவானத்தின் திக்கில் (இந்த வார்த்தை ஓரளவுக்குக் குழந்தைகள் பழக்கத்தில் அறிந்து கொண்டிருக்கின்றனர்.) அங்கு வெப்பம் இல்லை.

குழந்தைகள் : அங்குக் குளிராக இருக்கிறது. (ஒப்பீட்டடிப் படையில் வேறுபாட்டு விதிகள் (laws of contrast) பற்றித் தெளிவு பெற்ற காரணத்தால் பிறந்த விடை.)

நேற்றிரவு : நாம் எல்லோரும் உறங்கிக் கொண்டிருந்த பொழுது—ஒருவேளை அன்னை உன் துணிகளின் கிழிசலைத் தைத்துக் கொண்டிருக்கும்பொழுது—பாவம் அன்னை எவ்வளவு அன்புடையவள்! ... உம், நேற்றிரவு அநேகம் வெள்ளைச் சிம்புகள் (சீற்றுகள்-flakes) விண்ணிலிருந்து மென்மையாக விழுந்தன!...... 'வெண்

பனி! வெண்பனி !' என்று வியந்துரைத்தனர். குழந்தைகளே, எத்தனையோ கீற்றுகள் விழுந்தன என்று சொல்வோம். வெண்பனி எவ்வளவு அழகாக இருக்கிறது. அருகே சென்று அதை உற்று நோக்குவோம்.

குழந்தைகள் : ஆம், ஆம், ஆம், ஆம்.

ஆளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் எடுத்துப் போகவேண்டும் போல் அவ்வளவு அழகாக இருக்கிறது. ஒருவேளை அவ்வாறு எடுத்துப் போகக் கூடாது போலும். இந்த வெண்பனி யாருக்குச் சொந்தம் ? (விடை ஏதுமில்லை.) யார் வாங்கினார்கள் ? யார் செய்தார்கள் ? நீங்களா ? இல்லை. நானா ? இல்லை. உங்கள் அன்னையா ? இல்லை. அப்படியானால் உங்கள் தந்தை வாங் கினாரா ? (என்னை மலைப்புடன் நோக்குகின்றனர். இவை யெல்லாம் விசித்திரமான வினாக்கள்.) மறுபடியும் 'இல்லை' என்ற விடை. அப்படியானால் வெண்பனி எல்லோர்க் கும் சொந்தம். அப்படியானால் நாம் ஒரு கையளவு எடுத்துக் கொள்ளலாம் (களிப்பின் அறிகுறித் தோற்றம்.) நேற்று நீங்கள் செய்த பெட்டிகளை உங்களிடம் ஒப்படைக்கிறேன். (இக் குழந் தைகள் செய்த கைத்தொழில் பொருள்களை வைத்துக்கொள்ளத் தனி அறைப் பெட்டிகளோ, கைம்மேசைகளோ கிடையாது. இந்தப் பெட்டிகளைப் பயன்படுத்தினால் அவர்கள் தங்கள் கைகளி னால் செய்த பண்டங்களின் உபயோகத்தை நல்ல முறையில் எடுத்துக் காட்டியதாகவும் ஆகும்.) அழகான வெண்பனியை ஏற்றுக்கொள்ள இப் பெட்டிகள் மிகவும் பொருத்தமானவை. (அவர்களுடைய கவனம் தளராதிருக்க நான் பெட்டிகளைக் கொடுத்துக் கொண்டே பேசிக் கொண்டும் இருக்கிறேன்.) உங்க ளுடன் நான் செய்த பெட்டியை நானும் எடுத்துக் கொள்கிறேன். அப் பெட்டி உங்களுடையதை விடப் பெரியது. ஆதலால், எந்தப் பெட்டியில் அதிகம் வெண்பனி பிடிக்கும்? உங்களுடையதா, என் னுடையதா ?

குழந்தைகள் — உங்களுடையது ?

அப்படியானால் வாருங்கள் குழந்தைகாள். ஒரு கையளவு வெண்பனியை அவரவர் பெட்டிக்குள் போட்டுக் கொள்ளுங்கள். எவ்வளவு மகிழ்ச்சி ஊட்டுவதாக இருக்கிறது.

(போய்க்கொண்டு) சற்று அப்படியே நில்லுங்கள். இங்கு எவ்வளவு ஆறுதலுடன் இருக்கிறோம். உங்களுடைய ஒரு கையை உங்கள் முகத்தின்மேல் வையுங்கள். உங்கள் முகம் எவ்வளவு வெதுவெதுப்பாக இருக்கிறது. உங்கள் கையும் எவ்வளவு வெது வெதுப்பாக இருக்கிறது! வெண்பனியைத் தொட்ட பிறகும் உங்க

ளுடைய கைகள் முன்போல் அவ்வளவு வெதுவெதுப்பாக இருக்குமா என்று பார்க்கலாம்.

குழந்தைகள் — அவை குளிராக இருக்கும்.

ஆம். நிச்சயமாக (வெளியே சென்று கொண்டு) எவ்வளவு எழிலாக இருக்கிறது. மேலிருந்து கீழே விழுந்திருக்கிறது. ஆகாயம் பூமிக்கு ஓர் எழில் நிறைந்த ஆடையைக் கொடுத்திருக்கிறது. எல்லாம்.......

குழந்தைகள் — வெண்மை.

என்னுடைய குழந்தைகள் தக்க ஒழுங்கான சுதந்திரத்தைப் பெறுவதில் பழக்கப்பட்டவர்கள். இதுதானே நற்குணம் தோன்றுவதற்கு அடிப்படை. இந்தச் சந்தர்ப்பத்தில் குழந்தைகள் வெண்பனியைத் தொட்டுச் சேகரித்துக் கொள்கின்றனர். சிலர் தெளிவான வெண்பனிப்பரப்பை சிறுசிறு சித்திரங்களாய்க் கலைத்து விடுகின்றனர். செய்யட்டும் என்று நானும் விட்டுவிடுகின்றேன். ஒரு நிமிடம் காத்திருக்கிறேன். பிறகு திடீரென்று அவர்களுடைய ஒருமுனைப்பின்மேல் தாக்குபவள் போல் ஆகிவிடுகிறேன்.

குழந்தைகளே நானும் கொஞ்சம் வெண்பனியை எடுத்துக் கொள்கிறேன். ஆனல் உங்களுடன் சேர்ந்து எடுத்துக்கொள்கிறேன். நிறுத்துங்கள். எழுந்திருங்கள், என்னை நன்ருக உற்றுப் பாருங்கள். இந்தப் பரந்த ஆடையிலிருந்து ஒரு சிறு கீற்றினை நாம் எடுத்துக்கொள்வோம். அதை நம் பெட்டிகளின் மேல் வைப்போம். சரி, அப்படித்தான் (பாடசாலை அறைக்குள் மறுபடியும் நுழைந்து) ஓ! எவ்வளவு குளிராக இருக்கிறது. நன்ருகப் போர்த்திக் கொள்ளாத குழந்தைகள்தாம் எல்லோரினும் அதிகக் குளிராக இருக்கின்றனர். பாவம் சிறு குழந்தைகள்! நன்ருக எரியக்கூடிய நிலக்கரி தம் வீடுகளில் இல்லாதவர்களே அவர்கள்.

குழந்தைகள்—அடுப்பு.

அவர்கள் எவ்வளவு குளிரடைவார்கள்! வாருங்கள் வேகமாக, எல்லோரும் அவரவர் மேசைமேல் பெட்டிகளை வையுங்கள். வெண்பனி எவ்வளவு குளிராக இருக்கிறது! வெதுவெதுப்பாக இருந்த உங்கள் கைகளை எவ்வளவு குளிராக்கியதென்று கவனித்தீர்களா?

குழந்தைகள்—என் கைகள் குளிராக இருக்கின்றன. என் கைகள் கூடக் குளிர்!

முற்றத்தில் கரோலின் கொஞ்சம் வெண்பனியை எடுப்பதைப் பார்த்தேன். உடனே அதை நழுவ விட்டாள். அவ்வளவு குளிரைத் தாங்கும் அளவுக்கு அவளுக்கு உடல் வலிவில்லை. ஆனால், மறுபடியும் முயற்சி செய்தாள். இரண்டாம் முறை செய்த பொழுது அதை நழுவ விடவில்லை.

குழந்தை—நழுவ விடவில்லை, நான் உடனே என் பெட்டிக்குள் போட்டுவிட்டேன்.

குழந்தைகளே வெண்பனியைப் போலக் குளிராக இருந்தால் அதற்கு **உறைபனி** (Frost) என்று பெயர்? அதைச் சொல்லுகியதோ, அந்த வார்த்தை என்ன? இப்பொழுது சியானினு, நீ சொல். அவ்வளவு குளிரான வெண்பனிக்கு என்னென்று பெயர்? யாரால் சொல்ல முடியும்?

ஒரு குழந்தை—உறைந்த

சொல்—வெண்பனி உறைந்திருக்கிறது.

நாம் உள்ளே வந்து விட்டோம், ஏன்? வெளியே உறைபனியாக இருப்பதால். அறைக்குள் எப்படி இருக்கிறது?

**குழந்தைகள்**—வெதுவெதுப்பாக.

ஆனால் நாம் உறைந்த ஒன்றை நம்முடன் கொண்டுவந்தோமே—அதென்ன?

குழந்தைகள்—வெண்பனி.

*       *       *

அடுப்பு நமக்கு என்ன கொடுக்கிறது நினைவிருக்கிறதா? (அடுப்பு நமக்கு வெப்பம் அளிக்கிறதென்று ஞாபகத்திலிருந்து சொல்லக் குழந்தைகள் எதிர்பார்க்கப்படுகின்றனர்.)

**குழந்தைகள்**—வெப்பம்.

மரியா எனக்குச் சொல்லட்டும். இப்பொழுது பிப்பினோ.

நம்முடைய வாய்களும் வெப்பம் தருகின்றனவென்று உங்களுக்குத் தெரியுமா? உங்கள் வாய்களைத் திறவுங்கள். அதிகமாகத் திறக்க வேண்டாம். ஒரு கையை அதன்முன் பிடியுங்கள்; வலது கையை என்னைப்போல் நீட்டி நீங்களும் அதன்மேல் மூச்சு விடுங்கள். நாம் மறுபடியும் மூச்சு விடுவோம். இப்பொழுது நம் மூச்சை வெளியே விடுவோம். நான் செய்வது போல், மறு

படியும்...... மறுபடியும்.....மறுபடியும், சரி, இப்பொழுது தொட்டுப் பாருங்கள். உங்களுடைய வாயும்கூட.... தருகிறது. என்ன ?

குழந்தைகள்—வெப்பம்.

இப்பொழுது வாய்க்குள் ஒரு சிறு வெண்பனியைப் போடுவோம். ஒரு சிறு துண்டை. இப்படி ஓ! வாயின் வெப்பம் மறைகிறது. வெண்பனியின் குளிர் பட்டவுடனே அப்பொழுதே அது மறைந்துவிட்டது.

குழந்தைகள்—எங்களுடைய வாய்கள் இப்பொழுது குளிராக இருக்கின்றன.

ஆம். அதுதான் சரி. அவை மிகமிகக் குளிராக இருக்கின்றன. அவ்வளவு குளிராய் இருப்பதை நாம்...என்கிறோம்.

குழந்தைகள்—உறைகின்றதென்போம்.

ஒருவேளை க்யூசெப்பீக்கு அது தெரியாதிருக்கலாம். மற்றவர்களுடன் சேர்ந்து அவன் செல்லவில்லை. மறுபடியும் சொல்லுங்கள். அவனும் உங்களுடன் சேர்ந்து உச்சரிக்கட்டும். மறுபடியும் அது போதும். பலே க்யூசெப்பீ. ஆதலால் நம்முடைய வாய்கள் எப்படி இருந்தன ?

குழந்தைகள்—உறைந்திருந்தன.

நாம் இன்னொரு சிறு வெண்பனித் துண்டினைச் சாப்பிடுவோம். வெண்பனி வாய்க்குள் தண்ணீராக மாறிவிடுகிறது. ஏனென்றால் அது தண்ணீரால் ஆக்கப்பட்டிருக்கிறது. ரொட்டியும் தண்ணீரால் ஆக்கப்பட்டிருக்கிறது. ஆனால் தண்ணீராலேயே மட்டும் ஆக்கப்படவில்லை. ரொட்டிக்காரன் ரொட்டிமாவு செய்ய என்ன தேவைப்படுகிறது ?

குழந்தைகள்—மாவு

வேறென்ன ?

குழந்தைகள்—உப்பு

இன்னும் வேறென்ன ?

குழந்தைகள்—'ஈஸ்ட்'—நுரைமம்.[1]

லுயிகி இன்னும் வெண்பனியைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாயா ? ஆல்ஃபன்சோ, பியிரினோவும் கூட உங்களுக்குப் பிடிக்கிறதா ?

[1] மாவு, பால், சாராயம் முதலியவைகளைப் புளிக்கச்செய்யும் சத்து; ஒரு சிற்றறைத் தாவரம்.

**குழந்தைகள்**—ஆம் அம்மா.

எல்லோருக்கும் பிடித்ததா?

**குழந்தைகள்**—ஆம் அம்மா. எனக்கும் கூடத்தான்; எனக்கும் கூட.

அப்படியானால் இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள். ஆனால் அதிகம் வேண்டாம். உடம்புக்கு ஒருவேளை ஒத்துக் கொள்ளாது. அது நன்றாக உறைகிறது. (இந்த வார்த்தையை மறுபடியும் உச்சரிக்கிறேன். ஏனென்றால் நான் தெரிவிக்க விரும்பும் என் கருத்தை அது விளக்குகிறது.)

வெண்பனி பொழியும் பொழுது மிகக் குளிராக இருக்கிறது. அப்பொழுது எத்தனைக் குழந்தைகள், எத்தனைப் பெரியவர்கள் கம்பளித்துணி இல்லாமல், அடுப்பில்லாமல் இருக்கிறார்கள். அவர்கள் ஏழைகள், அவர்கள் மிகவும் துன்புறுகின்றனர். அவர்களில் சிலர் சாகின்றனர். பாவம் ஏழைகள்! இவ்வாறிருக்க நாம் எவ்வளவு பாக்கியசாலிகள். நமக்கு எத்தனையோ மேலங்கிகள் நம்மைப் போர்த்திக்கொள்ள இருக்கின்றன. (இந்தச் சொல்லை அவர்கள் கற்றிருக்கின்றனர்.) நமக்கு வீட்டில் ஓரடுப்பும், பாடசாலையில் ஓரடுப்பும் வெப்பம் அளிக்க இருக்கின்றன. நாம் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள்?

**ஒரு குழந்தை**—எங்கள் வீட்டில் அடுப்பில்லை.

எமிலோ உனக்கில்லை என்பது எனக்குத் தெரியும்.

நான் மிகவும் வருந்துகிறேன். குழந்தைகளே எமிலியோவிடமும் கயிசிப்பினாவிடமும் அன்பாக இருக்கவேண்டும். ஏனென்றால் அவர்கள் மிகவும்...

**குழந்தைகள்**—ஏழை.

எல்லாவற்றையும் தின்றாகி விட்டதா?

**குழந்தைகள்**—இல்லையம்மா.

இப்பொழுது முற்றத்துக்குப்போய் மீதியிருக்கும் வெண்பனியெல்லாம் எறிந்துவிடுவோம். பிறகு பெட்டிகளை இம் மேசைமேல் காயவைக்க விடுவோம். நாளைக்கு வெண்பனியால் மூடப்பட்ட ஓர் அழகான நாட்டின் படம் காட்டுகிறேன். வாருங்கள். பெட்டிகளைக் கொண்டுவாருங்கள். அவைகளில் உள்ளவற்றைக் காலியாக்கின பிறகு நான் சொன்ன இடத்தில் அவைகளை வையுங்கள்.

இந்தப் பாடத்தை வேறு ஓர் உருவத்தில் திரும்ப நடத்த உத்தேசித்திருக்கிறேன். மற்றவைகளையும் அதில் இணைத்துக் கொள்ளப் போகிறேன். வேறு கருத்துகளையும், அதில் குறிப்பிடு வேன். இங்குக் காட்டப்பட்டவைகளுடன் அவை தொடர்பு கொண்டிருக்கும்.

ஸ்தூல உலகத்திலும் நன்னெறி உலகத்திலும் உள்ள அனைத்தும் ஒன்றே; வகுக்க முடியாதது. மிகவும் நெருங்கிய ஒற்றுமையில் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அதேபோல், ஒழுங் கற்றுத் தனித்தனியாக இங்கொன்று அங்கொன்றெனக் கல்வித் துறை உண்மைகளை எடுத்துக்காட்டினோமானால், மனித வளர்ச்சி மிகவும் பாதிக்கப்படுகிறது. ஏனென்றால் தெய்விக நிரந்தரமான விதியால் இணைக்கப்பட்ட ஒன்றைத் தனித்தனியாகப் பிரிப்பது என்பது அரிது.

* * *

மேலே குறிப்பிட்ட மாதிரிப் பாடத்தில் இரண்டே இரண்டு புலன் காட்சிகளைப் (perceptions) பற்றிக் கவனிக்கப்படுகின்றன. குழந்தைக்குப் பரந்த அளவில் சுதந்திரம் அளிக்கப்பட்டிருப்பதாக வும் அதுவும் முன் கவனத்துடனும் (judicious) அளிக்கப்பட்டதாக வும் கருதப்படுகிறது.

இரண்டே இரண்டு புலன்காட்சிகளுடன் நிறுத்திக் கொள்வ தென்பது மிகமிகக் கடினமானது. அதிலும் பல புறத் தூண்டு தல்கள் (stimulus) நிறைந்த சூழ்நிலையில் இருந்து பல குழப்பமான மனப்பதிப்புகளைப் பெற்றிருப்பவர்களிடமிருந்து நிறுத்திக் கொள் வது மிகமிக அரிதாகும். ஆனால் அதே குறிக்கோளாக, அதாவது இரண்டே புலன்காட்சிகளைக் கவனிப்பதென்பதை எடுத்துக் கொண்டிருப்பதால் கூடியவரை மற்றப் புலன்காட்சிகளை ஒதுக்கி, இவ்விரண்டின்மேல் மட்டும் கவனம் செலுத்தி, மற்றவைக ளெல்லாம் மனப்பதிவுகளும், சூழ்நிலையில் மறைந்து கிடக்கும்படி செய்வது அவசியம் ஆகிறது. இதுதான் புலனுணர்ச்சிகளைத் தனிப் படுத்துவதற்கு உள்ள விஞ்ஞான முறையாகும். அதுதான் நடை முறையில் அனுசரிக்க வேண்டியதாகும். புலன் கல்வியில் நாங்கள் அனுசரிக்கும் முறையும் இதுவே. தட்ப வெப்பத்தைப்பற்றி ஆயப்புகுவதன் முன் குறிப்பிட்ட புலனைத் தனிப்படுத்தி அதற்கு அவனை ஆயத்தமாக்குகிறோம். தனியாகக் கண்மூடியுடன் மௌன மாக ஓரிடத்தில் அவன் உட்கார வைக்கப்படுகிறான். அந்த நிலையில் வெப்ப உணர்வு தவிர வேறெதுவும் அவனை அணுகா திருக்கும். அவன் முன் இரண்டு பொருள்கள் வைக்கப்படு கின்றன. இரண்டும் பார்வைக்கு ஒரே மாதிரியாக இருக்கின்றன. தசை உணர்வாலும், தொடு உணர்வாலும் இவ்விரண்டுக்கும்

வேறுபாடு அறிய இயலாத வகையில் இவ்விரண்டு பொருள்களும் அமைந்திருக்கின்றன. ஒரே அளவு, ஒரே வடிவம், ஒரே மென்மையான பரப்பு, அமுக்கினுல் அமுக்கப்படுவதிலும் ஒரே மாதிரி, இரண்டு ரப்பர்ப் பைகள். இரண்டிலும் ஒரே அளவு தண்ணீர் நிறைக்கப்பட்டிருக்கின்றது. பைகளின் வெளியே ஈரமே இல்லாமல் வறண்டிருக்கின்றன. இரண்டுக்கும் இடையே உள்ள முக்கிய வேறுபாடு அவைகளின் உஷ்ண நிலைகள்தாம். ஒன்றில் வெப்பமானது 60°c (அறுபது டிகிரி சென்டி கிரேடாக இருக்கும்) மற்றதில் குளிரானது 10°c (பத்து டிகிரி சென்டி கிரேடாக இருக்கும்). இந்தப் பொருள்களின்மேல் குழந்தையின் கவனத்தைச் செலுத்தின பிறகு அவனுடைய கை வெப்பப் பையின் மேல் தடவப்படுகிறது. பிறகு தட்பப் பையின்மேல். அவன் கை வெப்பப் பையின்மேல் இருக்கும் பொழுது ஆசிரியர் அது 'வெப்பம்' என்று தெளிவாக உச்சரிக்கிருர். தட்பப் பையைத் தொடும்பொழுது 'தட்பம்' என்று உச்சரிக்கிருர். இத்துடன் பாடம் முடிந்து போயிற்று. இதில் இரண்டே சொற்கள் அடங்கியிருக்கின்றன. கூடுமானவரை குழந்தையின் அனுபவத்தில் வரக்கூடிய இரண்டே இரண்டு சொற்களும் இவ்வுணர்ச்சிகளுக்கு ஒத்ததாக இருக்கும்படி நீண்ட தயாரிப்புத் தேவைப்படுகிறது. மற்ற உணர்ச்சிகள் கேள்வியும், பார்வையும் குறுக்கிடாதபடி ஒதுங்கி நிற்கும்படி காக்கப்பட்டிருந்தன. தொட்டு உணரக் கொடுக்கப்பட்ட இரு பொருள்களிலும் தட்ப வெப்பத்தைத் தவிர வேறெதும் தொடுபுலனுக்குத் தோன்ருத வகையில் அமைந்திருந்தன. இவ்வாறு குழந்தை இரண்டே இரண்டு புலன் உணர்ச்சிகளைப் பிரித்து அறிந்து கொள்வதற்கு ஏறத்தாழ இயல வழி வகுத்ததாகும்.

ஆனுல் குழந்தையின் சுதந்திரம் என்னுகிறது என்று கேட்கலாம்.

ஆம், ஒவ்வொரு பாடமும் அவனுடைய சுதந்திர எல்லையைக் கடக்கிறதென்பதை ஒப்புக் கொள்கிருேம். அக் காரணத்தால் அவ்வாறு எல்லை கடப்பதும், ஏதோ சில நிமிடங்களுக்குள் இருக்கப் பார்த்துக் கொள்கிருேம். தட்பம், வெப்பம் என்ற இரு பதங்களையும் உச்சரிக்கத் தேவைப்படும் நேரம்தான். இது முன் கூட்டிச் செய்கின்ற ஏற்பாடுகளால் நிலைபெறச் செய்கிறது. முதலில் புலன் உணர்வுகளைத் தனித்தனிப் பாகுபடுத்துவதால் தெளி உணர் நிலையில் (consciousness) ஓர் இருட்டடிப்புப் போல் தோன்றுகிறது. அந்த இருட்டுத் திரையின் மேல் இரண்டே இரண்டு பிம்பங்கள் விழும்படி செய்கிறது. ஒரு திரைப்படத்தில்

காணப்படுவதுபோல் குழந்தையும் உள இயல் சம்பந்தமான கைப்பற்றுதலைப் பெறுகிறன் போலும். அல்லது நல்ல பக்குவமான நிலத்தில் விதை விழுந்தது போலாகும். இதன் தொடர்ச்சியாய்த் தோன்றும் சுயேச்சைத் தேர்வும் (free choice), திரும்பத்திரும்ப ஒன்றையே செய்யும் பாங்கும், அதன் பிறகு தொடரும். தானுக் கூடிச் சேரும் இயல், இன்னும் பெருகச் செய்தல் ஆகிய வினை யாற்றல்களால் குழந்தை இனித் தனியாக விட்டுவிடப்படுவான். அவன் பெறுவது வெறும் பாடமன்று. இணைப்பால் ஏற்படக் கூடிய வெளியுலகத்தைப் பற்றிய தீவிரமான உட்பதிவு. அவன் பெறக்கூடிய இந்தப் பற்றிணைப்பானது (contact) தெளிவானது; விஞ்ஞான முறையானது; முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டது. இது சூழ்நிலையிலிருந்து எப்பொழுதும் பெற்றுக்கொண்டிருக்கிற நிர்ணயிக்கப்படாத பல பற்றிணைப்புத் தொகையிலிருந்து வேறு படுகிறது. இத்தகைய பல தெளிவற்ற பற்றிணைப்புகள் குழந்தை மனத்தில் குழப்பத்தைத்தான் உண்டுபண்ணும். முன்கூட்டியே தெளிவுபெற்ற பற்றிணைப்புகள் இதற்கு மாறுக ஒழுங்கை நிலை பெறச் செய்யும். ஏனென்றல் தனியாகப் பாகுபடுத்தும் முறைப் படி குழந்தை ஒன்றுக்கும் மற்றென்றுக்குமுள்ள பேதங்களைப் பகுத்துணரும்படி செய்யும்.

எங்கள் பாடங்களின் தனித்துறைமுறை (technique) யானது ஆய்வு சோதனை உள இயலால் ஆட்கொண்டு இயக்கப்பட்டது. ஐயமேதும் இல்லாமல் இந்தப் போக்கு பழைய முறைக்கு முற்றிலும் மாறுபட்டதாகும். பழைய முறை ஊக உள இயலால் (speculative psychology) ஆட்கொண்டு இயக்கப்பட்டது. இது வரை எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் சாதாரணமாக அனுசரிக்கப் பட்டு வந்த கல்விமுறைகளனைத்தும் இந்த ஊக உள இயல் அடிப் படையிலேயே நடைபெற்று வந்திருக்கின்றன.

போதனு விதிகளை ஒரு முறையாக்க ஹெர்பார்ட் (Herbart) அவர் காலத்தில் தத்துவ உள இயலை (philosophical psychology) ஒரு வழி காட்டும் கொள்கையாக அனுசரித்து வந்தார். அவருடைய தனிப்பட்ட அனுபவத்தைக் கொண்டு மனத்தை வளர்க்க அனைத்திற்கும் பொருத்தமான ஒரு முறையை உருவாக்க லாம் என்று நம்பினர். பாடம் கற்பிக்கும் முறையின் உள இயல் அடிப்படையாக இதை அமைத்துக்கொண்டார்.

ஜெர்மன் ஆசிரிய இயலாரின் (pedagogist) முறை இத்தாலி நாடு முழுவதிலும் தொடக்கப் பள்ளிகளில் அங்கீகரித்து அமுலில் இருந்துவருகிறது. இவ்வாறு இம் முறை சிறப்படையக் காரண புருஷர் ரோமாபுரிப் பல்கலைக் கழகத்தில் ஆசிரிய இயல் பேராசிரி யராகவும், பிறகு கல்வி அமைச்சராகவும் இருந்த க்ரீடேரோ

(Credaro) என்பவரே ஆவார். மிகவும் தனிப்பட்ட முறையில் பாடம் கற்பிக்க அவர் ஏற்பாடு கண்டுபிடித்தார். பிரபலமான நான்கு படிவங்களில் பாடம் கற்பிக்கப்பட்டன. தெளிவு (clarity), கருத்து இயைபு (association), அமைப்பு முறை (system), ஒழுங்கு முறை (Method) ஆகியவையே இந் நான்காகும்.

கீழ்க் கண்டவாறு ஓரளவுக்கு இவைகளை இவ்வாறு விளக்க லாம். ஒரு பொருளை அறிமுகப்படுத்தி அதனுடைய பிரிவுகளை ஆய்தல் (தெளிவு). மற்றச் சூழ்நிலைப் பொருள்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து முடிவுகட்டுவது அல்லது நினைவூட்டும் மனப் பதிவுகளுடன் ஒப்பிடல் (கருத்துத் தொடர்பு). முன் தீர்ப்பு களிலிருந்து பெறப்பட்ட பொருளை வரையறுத்தல் (அமைப்பு முறை). இன்னும் ஆழ்த்தப்பட்ட கருத்துகளிலிருந்து பெறப்படும் கொள்கைகள். இவை அறநெறி ஒழுங்கில் நடைமுறையில் பயன்பெற உந்திச் செல்லும் (ஒழுங்குமுறை).

ஒவ்வொரு பாடத்திலும் இம் முறையைக் கையாண்டு குழந்தையின் மனத்துக்கு வழிகாட்டுவது ஆசிரியர் கடமை யாகும். ஆனால், ஆசிரியர் குழந்தையின் நுண்ணறிவுக்குப் பதிலாகத் தம் நுண்ணறிவைப் புகுத்தக்கூடாது. குழந்தையையே சிந்திக்கச் செய்யவேண்டும். அவனுடைய செயலாற்றலைத் தானே இயங்குமாறு குழந்தையை ஆசிரியர் தூண்டிவிடவேண்டும். எடுத்துக்காட்டாகக் கருத்துத் தொடர்புப் (association Period) பிரிவில் ஆசிரியர் பின் வருமாறு கூறப்படாது.

'இன்னின்னதையும் இன்னின்னதையும் பார். ஒவ்வொன்றும் எப்படியெல்லாம் ஒத்திருக்கின்றன?' போன்றவைகளைக் கூறக் கூடாது. அவர் மாணவனை, 'சுற்றிலும் பார்க்கும்பொழுது என்ன பார்க்கிறாய்? இதைப்போல் வேறொன்றில்லையா?' என்றிவ்வாறு பிற வினாக்களைக் கேட்கவேண்டும். மறுபடியும் வரையறைப் பிரிவில் பின்வருமாறு கூறக்கூடாது: ஒரு பறவை சிறகால் போர்த்தப் பெற்ற முதுகெலும்பு விலங்கு—தண்டெலும்பி (Verlebrate). அதனுடைய முன் இரு உறுப்புகள் அதாவது கைகள் அல்லது முன் கால்கள் இறக்கைகளாக மாறிவிட்டன.' ஆனால் தொடர்ந்த கேள்விகளாலும் திருத்தங்களாலும், ஒப்புமை களாலும் குழந்தை தானாகவே சரிநுட்ப வரையறையைக் கண்டு பிடிக்குமாறு ஆசிரியர் தூண்டவேண்டும். ஹெர்பார்ட் (Herbart) எடுத்துக் கூறின நான்கு பிரிவுகளின் மனநிகழ்ச்சிகள் இயற்கை யாகத் தோன்றவேண்டுமானால் அந்தப் பொருளின்மேல் நிறைந்த அக்கறை இருக்கவேண்டும். மனத்தை ஒன்றினிடத்தில் ஈடுபடச் செய்து வைப்பது அக்கறையாகும். சிறந்த ஆசிரிய இயல்

வல்லுநர் கூறுவதுபோலக் கருத்தில் மூழ்கியும் பல கோணங்களைக் கொண்ட பல கருத்துகளில் மறையாமல் தனித்து நிற்கவும் செய்ய வேண்டும். ஆதலால் எல்லாப் போதனைகளிலும் அக்கறை தூண்டப் பெற்றும் நிலைபெற்றும் இருக்க வேண்டும். ஹெர் பார்ட்டின் மாணவன் அவருடைய நான்கு பிரிவுகளுடன் அதற்கு முந்தின பிரிவையும் இணைத்துக்கொள்ளவேண்டும். அதுதான் அக்கறை (interest). எல்லாப் புதிய அறிவையும் பழையதுடன் இணைக்கவேண்டும். தெரிந்ததிலிருந்து தெரியாததற்குப் போதல்.[1] ஏனென்றால் முழுதும் புதுமையாக இருப்பது ஓர் அக்கறையை ஊட்டாது.

நம்மிடத்தில் பிறருக்குச் செயற்கை மூலம் அக்கறை பிறக்கச் செய்வது அரிது. ஒவ்வொரு மணி நேரமும் மாதந்தோறும் ஆண்டு தோறும் நாம் பலருடன் பழகுகிறோம். பலபேருக்கு நம்மிடம் அக்கறை ஊட்டி நிலைபெறச் செய்வது அரிது. அவர் களுக்கும் நமக்கும் ஒருவிதத்திலும் சம்பந்தமில்லை. வயதிலும் வேறுபட்டவர்கள். இந்த நிலையில் பொறுப்பேற்பது மிகவும் சிரம மான பணியாகும். எனினும் இதுதானே ஆசிரியருடைய பணி. அவர் கூறுகிறபடி அவருடைய 'கலை' இந்தக் குழந்தைகளின் குழுவைக் கட்டுப்பாட்டினால் அசைவற்றவர்களாக்கி விட்டிருக் கிறார்கள். தங்களுடைய மனத்தால் ஆசிரியரைப் பின்பற்ற வேண்டும்; கற்றுக்கொள்ள வேண்டும். இது அந்தரங்கத்தில் நடைபெறுவதாகும். இதை ஆசிரியரால் அவர்கள் உடம்பைக் கட்டுப்படுத்துவதுபோல் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் தம் மேல் அவர்களுக்கு அக்கறை பிறக்கும் வகையில் நடந்துகொண்டு அவர்களைத் தம் வசம் ஆக்கிக் கொள்ள வேண்டும். பாடம் கற்பிப்பதென்பது எவ்வழியில் எவ்வளவு தூரம் குழந்தைகளின் அக்கறையை நிலைநாட்டமுடியும் என்பதைப் பொறுத்திருக்கிறது என்கிறார் ஆர்டிகோ (Ardigo). குழந்தையின் மூளையில் ஒரு பகுதியைக் களைப்படைய விடாமல் செய்பவரே திறமை வாய்ந்த ஆசிரியராவார். 'குழந்தையின் அக்கறை இங்கும், பிறகு வேறு பக்கமும் திரும்பி ஓய்வு எடுத்து மறுபடியும் வலிமை பெற்று உரையாற்றலின் முக்கிய கருத்துக்கு இன்னும் புதிதாகப் பெற்ற சக்தியுடன் திரும்பும்படி செய்வதே சிறந்த ஆசிரியரின் கற்பிக்கும் கலைத் திறமை' என்று ஆர்டிகோ கூறுகிறார்.

இதைக்காட்டிலும் மிகவும் சிரமமான கலை என்னவென்றால் தன்னுடைய சொந்த மன முயற்சிகளாலேயே தானாக இயற்கை யாகக் கண்டுபிடிப்பதை விட்டுவிட்டு, ஆசிரியர் கருத்தென்னவோ,

[1] going from the known to the unknown.

அவர் விருப்பம் எதுவோ என்பதைக் கண்டறிவதாகும். ஆசிரியர் தாம் விரும்புவது இன்னதென்று தெளிவாக எடுத்துக் கூறு விடினும் குழந்தையின் கருத்தையும் தம் கருத்துடன் தானாக இணையும்படி அவர் குழந்தையைத் தூண்டிவிடுகிறார். ஆசிரியர் தாம் தேர்ந்தெடுத்த சொற்களைக் கொண்டே குழந்தை அறியா மலே அதன் வாயிலிருந்து வரும்படிசெய்து 'வரையறைகளை (definitions) உருவாக்கச் செய்துவிடுகிறார். இத்தகைய செயல் ஏதோ மறைவியலான விஞ்ஞானம் (occult science) போலும் ஒரு வகை மந்திரசக்தி போலும் இருப்பதாகத் தோன்றலாம். எனினும் அத்தகைய முறைகள் கையாளப்பட்டு வந்தன; இன்னும் நடைமுறையில் இருந்து வருகின்றன. சிலரிடம் இதுவே ஆசிரிய ருடைய முக்கிய கலையாகவும் இருக்கிறது.

டால்ஸ்டாய்[1] 1862ஆம் ஆண்டு ஜெர்மனி நாட்டுப் பள்ளிக் கூடங்களைப் பார்வையிடப் பயணமானார். இந்த முறையைக் கண்டு மெச்சினார். பிறகு அவருடைய ஆசிரிய இயல் கட்டுரை களில் ஐயஸ்நாஜா போலியானா (Iasnaja Poliana) என்பவர் தம்முடைய பள்ளிக்கூடத்தைப் பற்றி எழுதும் பொழுது ஒரு பாடத்தை அப்படியே காட்டி, இது பதிவுக்குரியது என்றும் குறிப் பிடுகிறார். ஆனால் தற்காலத்தில் அத்தகைய மாதிரிப் பாடம் எந்த ஜெர்மன் பள்ளிக் கூடத்திலும் காண்பது அரிது.

> ஐயஸ்நாஜா போலியானா 1862.[2] அமைதியாகவும் தன் நம்பிக்கையுடனும் தம் வகுப்பு இருக்கையில் அமர்ந்திருக் கிறார். பேராசிரியர் துணைக்கருவிகள் ஆயத்தமாயிருக் கின்றன. எழுத்துகளுடன் சிறு கைம்மேசைகளும், மீனின் படம் கொண்ட ஒரு புத்தகமும் இருக்கின்றன. ஆசிரியர் தம் குழந்தைகளை உற்று நோக்குகிறார். அவர்கள் என்னெல்லாம் புரிந்து கொள்ள வேண்டுமென் பதை அறிவார். அவர்களுடைய உள்ளத்தில் அடங்கி யிருப்பதையும் அவர் அறிவார். அவன், இதற்குமுன் இயேசு கழகத்தின் பயிற்சிப் பள்ளியில் என்னவெல்லாம் கற்றுக் கொண்டிருக்கிறான் என்பதையும் அறிவார்.
>
> அவர் புத்தகத்தைத் திறந்து மீனைக் காட்டுகிறார். 'அருங்குழந்தைகளே! இதென்ன' என்கிறார். பாவம்!' மீனைப் பார்த்தவுடன் குழந்தைகளுக்கு ஒரே மகிழ்ச்சி. மற்றக் குழந்தைகளிடமிருந்து எந்தச் சுவைக் கூட்டுக்குப் பிறகு இது படைக்கப்படும் என்றும் தெரிந்து கொண் டிருக்கலாம். என்ன இருந்த போதிலும் அவர்கள், 'அது

[1] Tolstoy; [2] Iasnaja Poliana

ஒரு மீன்' என்று பதில் கூறுகின்றனர். 'அன்று' என் கிருர் பேராசிரியர்! (இவையெல்லாம் கற்பனை அல்ல. நையாண்டியுமல்ல. ஒன்று விடாமல் எல்லா ஜெர்மன் பாடசாலைகளிலும் இந்த முறையை அனுசரித்த பிரான்ஸ் நாட்டுப் பாடசாலைகளிலும் நான் என் கண் களால் கண்டவைகளே இவை). 'இப்பொழுது நீங்கள் பார்ப்பது என்ன?' என்கிருர் ஆசிரியர். குழந்தைகள் மௌனமாக இருக்கின்றனர். ஒவ்வொரு குழந்தையும் அவரவர் இடத்தில் அசையாமல் அமைதியாக உட்கார்ந் திருக்க வேண்டுமென்ற கட்டுப்பாடு ஒன்று இருப்பதை நாம் மறந்து விடக்கூடாது. 'சரி, என்ன பார்க்கின் றீர்கள்' என ஆசிரியர் வினவ 'ஒரு புத்தகம்' என்று வகுப்பில் மிகவும் மக்கான குழந்தை சொல்கிறது. இந்த இடை நேரத்தில் மிகவும் நுண்ணறிவு படைத்த குழந் தைகள் 'என்ன பார்க்கிருேம்' என்று தத்தமக்குள் மறு படியும் மறுபடியும் சிந்தனை செய்துகொண்டிருக்கின்ற னர். ஆசிரியர் தம்மிடமிருந்து எதிர்பார்ப்பதை அவர் களால் ஊகிக்க முடியாதென்பதையும், இது ஒரு மீன் அன்று, வேறு ஏதோ அவர்களுக்குத் தெரியாத ஒரு பெய ரைக் கூற எதிர்பார்க்கப்படுகிருர்கள் என்பதையும் அவர்கள் அறிவார்கள். 'ஆம், ஆம்' என்று ஆவலுடன் ஆசிரியர் கூறுகிருர். 'ரொம்ப சரி, புத்தகம்; இன்னும் வேறென்ன?' என்கிருர் ஆசிரியர். நுண்ணறிவுக் குழந் தைகள் யூகித்து விடுகின்றனர். மகிழ்ச்சியுடனும் பெரு மையுடனும் 'எழுத்துகள்' என்கின்றனர். 'அல்ல, அல்ல; அல்லவே அல்ல'. என்கிருர் ஆசிரியர். ஏமாந்தவ ராக, 'சொல்வதற்கு முன் நீங்கள் யோசிக்க வேண்டும்' என்கிருர். எல்லா நுண்ணறிவுக் குழந்தைகளும் வாடிய முகத்துடன் மௌனம் சாதிக்கின்றனர். இன்னதான் இருக்ககூடும் என்றும் அவர்களால் யூகிக்கக்கூட முடிய வில்லை. ஆசிரியருடைய மூக்குக்கண்ணுடியைப்பற்றி நினைக் கின்றனர். அதன் விளிம்பின் வழியாகக் குழந்தைகளை நோக்குவதற்குப் பதிலாக ஏன் கண்ணுடியை அவர் கழற் றக்கூடாது என்று எண்ணுகின்றனர். 'எங்கே பார்ப் போம்; புத்தகத்தில் என்ன இருக்கிறது?' என்று ஆசிரியர் தொடர்ந்து வினவுகிருர். எல்லோரும் மௌன மாய் இருக்கின்றனர். 'சரி, இந்தப் பொருள் என்ன?' என்ற கேள்விக்கு, 'ஒரு மீன்' என்கிருன் துடுக்குப்பயல். 'ஆம் ஒரு மீன். ஆனுல் இது ஓர் உயிருள்ள மீனு?' என்கிருர் ஆசிரியர். 'இல்லை, உயிருள்ள மீன் அன்று' என்கிருன்

மாணவன். ஆம் சரி. 'அப்படியானால் அது செத்ததா? என்கிறார் ஆசிரியர். 'அன்று' என்று மாணவன் விடை அளித்தான். 'சரி, பிறகு இது என்ன மீன்?' என்ற ஆசிரியர் வினவுக்கு 'ஒரு படம்' என்கிறான் மாணவன். 'அப்படிச் சொல். ரொம்ப சரி!' என்கிறார் ஆசிரியர். எல்லாக் குழந்தைகளும் அதைத் திரும்பச் சொல்கின்ற னர். 'அது ஒரு படம்'. எல்லோரும் அவ்வளவுதான் என்று நினைக்கின்றனர். இல்லவே இல்லை, 'அது மீனைக் குறிக்கும் படம்' என்று எல்லோரும் சொல்லித் தீர வேண்டும். இதே முறையைப் பின்பற்றி ஆசிரியர் 'மீனைக் குறிக்கின்ற படம்' என்று பேசும்படி தூண்டிவிடுகிறார். குழந்தைகளின் பகுத்தறியும் சக்தியை வளம் பெறச்செய் வதாக ஆசிரியர் கற்பனை செய்துகொள்கிறார். 'அது மீனின் படமுள்ள புத்தகம்' என்று குழந்தைகளைச் சொல்ல வைக்க வேண்டிய கடமையுடையவர் என்று நினைத்தால் இந்த அதிசயச் சொற்றொடரைச் சொல்லிக் குழந்தைகளை மனப்பாடம் செய்யச் செய்வது எவ் வளவோ எளிதாகுமே. ஏன்தான் அவருடைய மூளைக்கு இது எட்டவில்லை!

ஜெர்மனி நாட்டில் துவக்கப் பள்ளிக்கூடங்களில் டால்ஸ்டாய் நேரடியாகப் பார்த்த பழைய முறைப் பாடப் புத்தகம் போல் அண்மையில் சிறப்பு வாய்ந்த ஒரு பிரஞ்சு ஆசிரியரியல் வல்லுநரும் தத்துவ இயல் வல்லுநருமானவர் அளித்துள்ள ஒரு பாடத்தையும் இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறோம். இவர் இயற்றிய பாடப் புத்தகங்கள் அவருடைய தாய்நாட்டிலும், அயல் நாடுகளிலும் புகழ் சான்ற ஏடுகளாகக் (classics) கருதப்படுகின்றன. இத்தாலி நாட்டு ஆசிரியர் கல்லூரிகளில் பாடப்புத்தகமாகவும் இருக்கின் றன. பாட உப தலைப்பில் கூறப்பட்டபடி ஆசிரியர்களையும், குடி மக்களையும் திருத்தியும் அவர்களுடைய குடும்பத்துக்கும் தந்தை நாட்டுக்கும், மனித சமூகத்துக்குமே கடமைப் பட்டிருக்கின்றனர் என்பதையும் எடுத்துக்காட்டுவதே இந் நூல்களின் நோக்காகும். ஆதலால், நாம் உயர்நிலைப் பள்ளியின் புற எல்லையில் இருக்கிறோம். வினாக்களின் உதவி கொண்டு பாடம் கற்பிக்கும் கொள்கைக்கு நடைமுறையான ஓர் எடுத்துக் காட்டுப் பாடத்தை இங்கு தரு கிறோம். வினாவின் துணைக்கொண்டு கற்பிக்கும் முறைக்கு 'சாக்ரட்டிக் முறை' [1] என்பது பெயர். அது அறநெறியை ஆய்வுப் பொருளாகவும் உரிமைகளாகவும் குறிப்பிடுகிறது.

[1] Socratic method.

'பையன்களே, உங்களுடைய தோழன் பாலுவை (Paul) இந்த மேசை என்றோ, அல்லது இந்த மரம் என்றோ தவறாக எண்ணி விடுவீர்களோ? இல்லவே இல்லை! ஏன்? ஏனென்றால், மேசையும் மரமும் உயிரற்றவை, உணர் வற்றவை. பாலு உயிருடன் வாழ்பவன்; உணரமுடியும். நல்லது. நீங்கள் மேசையைத் தட்டினால் அது ஒன்றும் உணராது. அதை நீங்கள் துன்புறுத்த மாட்டீர்கள். ஆனால், அதை அழிக்க ஏதாவது உரிமை உங்களுக்கு இருக்கிறதா? இல்லை. பிறருக்குச் சொந்தமானதை நாம் அழித்தவர்களாவோம். அப்படியானால் இந்த மேசை யின் எதை நீங்கள் கௌரவிக்கின்றீர்கள்? உயிரற்ற, உணர்வற்ற மரத்தையா, அல்லது ஒருவருக்குச் சொந்த மான சொத்தையா? பாலுவைத் தாக்க உங்களுக்கு ஏதாவது உரிமையுண்டா? இல்லை. ஏனென்றால் அவ்வாறு செய்தால் நாம் அவனைத் துன்புறுத்துவோம். அவன் கஷ்டப்படுவான். அவனிடத்தில் எதற்கு நீங்கள் மரி யாதை செலுத்துகின்றீர்கள். வேறொருவருடைய சொத் துக்கா? அல்லது பாலுவுக்கா? பாலுவுக்கேதான். அப்படி யானால் நீங்கள் அவனைத் தாக்கக் கூடாது அல்லது அடைத்து வைக்கவும் கூடாது. அல்லது அவனுக்கு உணவையும் மறுக்கக் கூடாது. கூடாது. 'அவ்வாறு செய்தால் போலீஸ் எங்களைச் சிறைப்படுத்தும்'. ஆஆ! நீங்கள் போலீஸுக்காக அஞ்சுகிறீர்களா? இதொன்று தான் பாலுவைக் தாக்காமல் பாதுகாக்கிறதா? 'ஓ! இல்லைங்கோ ஐயா: ஏனென்றால் பாலுவின்மேல் எங்களுக் குள்ள அன்பால் அவனைத் துன்புற விட நாங்கள் விரும்ப வில்லை. ஏனென்றால் அவ்வாறு செய்வதற்கு எங்களுக்கு உரிமை இல்லை.' 'பாலுவினுடைய உயிருக்கும் உணர் வுக்கும் மதிப்புத்தர வேண்டுமென்று நினைக்கிறீர்கள். ஏனென்றால் உயிரும், உணர்வுகளும் மதிப்பளிக்கப்பட வேண்டியவைதாமே?

'ஆமாங்க ஐயா?' பாலுவினிடம் மதிக்க வேண்டி யவை இவைதாமோ? ஆய்ந்து பார்ப்போம். நன்றாகச் சிந்தனை செய்து பாருங்கள்—அவனுடைய புத்தகங்கள், அவனுடைய ஆடைகள், அவனுடைய பள்ளிக்கூடப் பை (satchal), அதற்குள்ளிருக்கும் மதிய உணவு—சரி. அப்படி என்றால் நீங்கள் கருதுவதென்ன? அவனுடைய புத்தகங் களை நாங்கள் கிழிக்கக் கூடாது; ஆடைகளைக் கெடுக்கக் கூடாது; பள்ளிக்கூடப் பையைப் பாழாக்கப்படாது; அவ

னுடைய மதிய உணவைப் புசிக்கப்படாது; ஏன்? ஏனென்றால் இவையனைத்தும் அவனுடையவை. பிறருக்குச் சொந்தமான பொருள்களை எடுத்துக் கொள்ள எங்களுக்கு உரிமை இல்லை. பிறருடைய பொருளை எடுத்துக் கொள்வதற்கு என்ன பெயர்? களவு, அல்லது திருட்டு. களவு ஏன் தவிர்க்கப்படுகிறது ? ஏனென்றால், நாம் களவாடினால் சிறைக்குச் செல்ல வேண்டும். போலீஸ் அச்சம் மறுபடியும் வந்துவிடுகிறது. நாம் திருடாதிருப்பதற்கு இதுதானா முக்கிய காரணம் ? ' இல்லை ஐயா, ஏனென்றால் நாம் பிறருடைய சொத்தையும், அவர்களையும் மதிக்க வேண்டும்.' 'ரொம்ப நல்லது. சொத்து என்பது ஒருவனுடைய ஆளுமையின் (Personality) தொடர்ச்சி. ஆதலால் அது மதிக்கப்படவேண்டும்.

அப்படியானால் இவ்வளவுதானா ? பாலுவினுடைய உடல், அவனுடைய புத்தகங்கள், அவனுடைய காப்பிப் புத்தகம் தவிரப் பாலுவினிடம் மதிக்கப்படவேண்டியது எதுவுமே இல்லையா ? இதைத் தவிர வேறு எதுவும் உங்களுக்குப் புலப்படவில்லையா ? இன்னும் ஏதாவது இருக்கிறதா என்று யோசிக்க முடியாதா? நான் ஒரு சிறு நினைவுக் குறிப்புத் (hint) தருகிறேன். பாலு நன்றாக உழைக்கிற மாணவன் ; நேர்மையானவன் ; நற்குணமுள்ள தோழன். உங்கள் எல்லோருக்கும் அவனைக் கண்டால் பிடிக்கும். உங்கள் அன்பு அவனுக்கு உரியதாகும். அவனைப்பற்றி நாம் எல்லோரும் மதிப்பாகக் கொள்வதற்கும், அவனைப் பற்றி வைத்திருக்கும் நல்ல அபிப்பிராயத்திற்கும் என்ன பெயர் ? ' தன் மானம் (honour), நற்பெயர் (reputation).' 'சரி, இந்தத் தன்மானத்தையும், நற்பெயரையும் தன் நல்ல நடத்தையாலும், நல்ல வணக்க இணக்க நடைமுறையாலும் (good manners) பாலு பெற்றிருக்கிறான். இவை அனைத்தும் அவனுக்கு உரியவை.' 'ஆம் ஐயா அவைகளை அவனிடமிருந்து அபகரிக்க எங்களுக்கு உரிமை இல்லைதான்.' 'மிகவும் நல்லது. இவ்வகையான திருட்டுக்கு என்னவென்று கூறுகிறோம். அதாவது தன்மானத்தையும், நற்பெயரையும் திருடுவதற்கு என்னவென்று கூறுகிறோம்? முதலாவது அவைகளை நாம் எவ்வாறு திருடமுடியும் ? அவைகளை எடுத்து நம் ஜேபுக்குள் திணித்துக்கொள்ள முடியுமா ? முடியாது. அவனைப் பற்றி இழிவாகப் பேசமுடியும். எப்படி? தன்னுடைய தோழன் ஒருவனுக்கு அவன் தீமை

விளைவித்திருக்கிறன் என்று நாம் சொல்ல முடியும்...... பக்கத்துத் தோட்டத்திலிருந்து ஆப்பிள் கனிகளைத் திருடினன் என்று சொல்ல முடியும்—பிற ஒருவனைப் பற்றித் தீய மொழி பகர்ந்தான் என்று சொல்ல முடியும்—ஆம் அப்படித்தான். சரி. அவ்வாறு பேசுவதால் அவனுடைய நன்மதிப்பையும், நற்பெயரையும் எவ்வாறு திருட முடியும் ?' 'ஐயா அவனைப்பற்றிக் கெட்ட அபிப்பிராயம் கொண்டால் பொதுமக்கள் அவனை ஒருபோதும் நம்பமாட்டார்கள். அவன் அடிக்கப்படுவான்; நிந்திக்கப்படுவான்; தனியாக ஒதுக்கப்படுவான். நீங்கள் பாலுவைப்பற்றித் தீயதைக் கூறினல், நீங்கள் கூறினதும் பொய்யாக இருந்தால் அவனுக்கு நீங்கள் இன்பமூட்டுகிறீர்களா?' 'இல்லை ஐயா. அவனுக்குத் துன்பமே கொடுப்போம். அவனுக்கு ஒரு பிழை செய்துவிடுவோம். அப்பிழை அருவருப்பானது; பழிக்கு இடம் தருவது.' 'ஆம், பிள்ளைகளே! வேண்டுமென்றே பிறரைக் கெடுக்கப் பொய் கூறுதல் அருவருப்புடையது; பழிக்குரிது. இதற்கு அவதூறு என்றும் பெயருண்டு. பிறரைப்பற்றிப் பொல்லாங்கு (evil) சொல்வது அவதூறிலிருந்து வேறுபடுகிறதென்பதைப் பிறகு விளக்குகிறேன். கூறுப்படுவது பொய்யன்று. பொல்லாங்கு சொல்வதாலும் அவதூறினலும் விளைகின்ற கொடுமைகளைக் குறிப்பிடுகிறேன்.

இதுவரை கூறிவந்ததை ஒன்றுகச் சுருக்குவோம். பாலு உயிருடன் வாழ்பவன்; உணர்ச்சி மிகுந்தவன். அவனுக்கு நாம் துன்பம் விளைவிக்கக்கூடாது. அவனிடமிருந்து களவாடக்கூடாது. அவதூறு கூறக்கூடாது. அவனை நாம் மதிக்க வேண்டும். பாலுவிடம் உள்ள மதிப்புக்குரியவை அவனுடைய உரிமைகளாகும். அவை அவனை ஒரு மனிதனுக்குகின்றன. இந்த உரிமைகளை மதிக்க வேண்டிய நம்முடைய பொறுப்புக்குக் கடமை (duty) என்கிறேம். பிறருடைய உரிமைகளை மதிக்கும் பொறுப்புக்கும் கடமைக்கும் நேர்மை (Justice) என்று பெயர். Justice என்ற மொழி இரண்டு லத்தீன் பதங்களிலிருந்து பிறந்திருக்கிறது (jure stare) 'யூரேஸ்டாரே'. அப்படி என்றல் ஒருவனை நேர்மையில் இருத்திக் கொள்வது (to keep oneself in the right).

இது வரை நேர்மை என்று கூறி வந்ததின் கடமைகளைச் சுருக்கிச் சொல்லவேண்டுமானல், அவை கொல்லாமை, துன்புறுத்தாமை, களவாடாமை, புறங்கூருமை.

எதிர்மறையில்[1] கூறப்படுபவைகளைச் சிந்தித்துப்பார்—அதன் பொருளென்ன?

ஒரு கடப்பாடு (obligaion), ஓர் ஆணை, ஒரு விலக்கு (prohibition)—அப்படியே விளக்கம் தந்து கொண்டுபோ. மரியாதையின் கடப்பாடு. உரிமைகளை மதிக்குமாறு ஆணை; களவாடாமல் விலக்குதல். இவை எல்லாம் ஒன்றாய்த் தொகுத்தவைகளையே தீங்கு செய்யாமை என்றாகும்.

நேர்காட்சி (positive science) **விஞ்ஞானம் பள்ளிக்கூடங்களில் தோன்றத்** தொடங்குகிறது—ஒரே குழப்பத்தில் இருட்டிலிருந்து ஒளியைப் பிரிப்பது போலும், பெரிய அழிவு நேர்ந்த காலத்தில் உற்றுழி உதவும் தேவைபோல் நேர்காட்சி விஞ்ஞானமும் பள்ளிக் கூடத்துக்குள் வரவேற்கப்பட்டது.

**மருத்துவ நூலின் கண்டுபிடிப்புகள் — உருத்திரிவுகளும் (distortions) நோய்களும்:** பள்ளிக்கூடத்தில் முதல்முதலாக நுழைந்த விஞ்ஞானம் மருத்துவ நூலே. பொருத்தமான தனி உடல் நலத்தை அமைத்துக்கொண்டது. ஒரு வகையான செஞ்சிலுவைச் சேவை பள்ளிக் கூடத்தில் நுழைந்த சுகாதாரத்தின் அக்கறையூட்டுபகுதி என்னவென்றால், குழந்தைகளின் நோய்களை ஆராய்ந்து வர்ணித்ததாகும். (பள்ளிக்கூடக் குழந்தைகளின் நோய்கள்). அதாவது பள்ளிக்கூடத்தில் படிப்பதால் முக்கியமாக ஏற்படும் நோய்களைக் குறிக்கும். அப்பொழுது பொதுவாகத் தோன்றின கோளாறுகளில் மிகவும் முக்கியமானது முதுகு எலும்புக் கோணல்களும் கிட்டப் பார்வை நோயு மாகும் (spinal curvative & Myopia). முதலாவது முதுகெலும்புக் கோணலானது அதிகநேரம் உட்காருவதாலும், கெடுதல் விளைவிக்கும் வகையில் எழுதும்பொழுது தோள்களைச் சாய்த்து வைத்திருப்பதாலும் ஆகும். இரண்டாவது ஏற்படக் காரணம் என்னவென்றால் மாணவன் உட்காரவேண்டிய இடத்தில் வாசிக்கப் போதுமான வெளிச்சம் இல்லாததாலும், அதன் காரணமாகத் தெளிவாகப் பார்க்க இயலாமையாலுமே யாகும். அல்லது இவன் உட்காரும் இடம் கரும்பலகையிலிருந்து தொலைவில் இருக்கலாம். அல்லது மாணவன் எங்கிருந்து படிக்கவேண்டுமோ அவ்வாறில்லாததினாலும் ஏற்படலாம். அந்தக் கிட்டப்பார்வை நோயைப் பற்றியும் இன்னும் வேறு சில பொதுக் கோளாறுகள் பற்றியும் வருணிக்கப் பட்டிருந்தன. உறுப்பாக்கம் குலைக்கிற தளர்ச்சி

[1] always reflect upon the words you say in which 'Not' is followed by a verb in the imperative infinitive.

(organic debility) என்பது அவைகளில் ஒன்று. அது பொதுவாக எல்லோரிடமும் பரவியிருந்தது. இதற்குச் சுகாதாரம் முறையாக மீன் எண்ணெயை உபயோகிக்கவேண்டுமென்றும் மறுபடியும் ஆக்கிப் படைக்கிற சிகிச்சைகளை எல்லா மாணவர்களுக்கும் அனுசரிக்கப் படவேண்டும் என்றும் கூறிற்று. இரத்தச் சோகை (anemia), கல்லீரல் கோளாறுகள், நரம்புத் தளர்ச்சி (neurasthenia) ஆகியவைகளும் பள்ளிக்கூட நோய்களாக ஆராயப்பட்டன.

மருத்துவத்துறையில் காணப்படும் நோய்களில் முக்கியமானவற்றைச் சுகாதார நூலும் ஆராயப் புகுந்தது. படிப்பதும் எழுதுவதும் ஆகிய இரண்டையும் ஆசிரிய இயல் முறை சார்ந்ததென மிகவும் அக்கறையுடன் ஆராயப்பட்டன. சுகாதாரத் துறையில் முதுகெலும்புக் கோணலுக்கும், கண்ணில் பார்வைக் கோளாறுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்றும் ஆராயப் பட்டது.

தகாததும், பொருத்தமற்ற பணியில் ஈடுபடச் செய்யப் பட்டதுமான ஒரு குற்றவாளிபோல் குழந்தை நடத்தப்பட்டான். மருத்துவ முன்னேற்றத்தின் துணைக்கொண்டு அந்தக் குழந்தையை முன்னணிக்குக் கொண்டு வருவார்கள் என்று எதிர்ப்பார்த்ததற்குப் பதிலாகப் புதிதாகச் சட்டம் சார்ந்த மருத்துவம் (legal medicine) என்ற ஒரு துறை உருவாயிற்று. அனாதை இல்லங்களில் பல குழந்தைகள் அகால மரணமடைந்ததற்குக் காரணத்தைத் தெளிவாக எடுத்துக்காட்டியது மருத்துவமே. அதேபோல் செயற்கைப் பாலூட்டுதலாலும், குளறுபடியான (irrational) உணவூட்டுதலாலும், முலைத்தாய் நன்முறை அனுசரிக்காததாலும் பல குழந்தைகள் உயிரிழந்ததையும் மருத்துவம் வெளியாக்கிற்று. இவ்வகையான ஒவ்வொரு நோயாளி விஷயத்திலும் ஆராய்ந்து பார்த்து ஒரு சட்ட உண்மையை வெளியாக்கிற்று. அது என்ன ? குழந்தைகளுக்குக் குடிமை உரிமை கிடையாது (civil rights) என்பதாகும். மருத்துவம் இன்னும் ஒரு துறையில் இறங்கிற்று. இதில் கலந்த குற்றவாளிகள் வெறும் நோயாளிகள் அல்ல (cases). ஆனால் பொதுப்பட ஆராயப் புகுந்தது குழந்தைகள் சமூகம் அனைத்தையும் பற்றி ஆய்ந்தது. இப்பொழுது சட்டமே குழந்தைகளின்மேல் கடமைகளை விதித்திருக்கிறது. அவர்கள் அனைவரையும் ஒரே போடாக ஸ்தூல உடல் சித்திரவதை செய்யும் வகையில் பல ஆண்டுகள் கடுமையான தொழிலில் இறங்க வைத்திருக்கிறது. சாதாரணக் குற்றவாளிகள் சம்பந்தமாகச் சட்ட மருத்துவத்துறை (legal medicine) ஒன்று தோன்றியிருக்கிறது. ஆனால் இந்தத் திக்கற்ற குழந்தைகள் சார்பில் எந்தச்சட்ட மருத்துவத்துறையும் தோன்றாதிருப்பது விந்தையே.

குழந்தைகளைக் கவனிக்கும் விஷயத்தில் விஞ்ஞானம் தன் குறிக்கோள் — பணித்திட்டத்தை நிறைவேற்றவில்லை. — செயற்கையாகத் தோன்ற வைத்த நோய்களைப்பற்றி மருத்துவம் ஆய்வதிலேயே தன் கவனத்தைச் செலுத்தியிருக்கிறது. ஒரு நோயின் காரணத்தை ஆய்ந்து அக் காரணத்தை அப்படியே விட்டுவிட்டிருக்கிறது. நோய்களுக்குப் பலியான பலபேர்களின் துன்பத்தை ஓரளவுக்கு மட்டுப்படுத்துவதோடு திருப்தி அடைந்து விட்டது (மருத்துவம்). மருத்துவத்தினுடைய கம்பீரமான குறிக்கோள் என்ன ? உயிரைக் காத்தல். இந்த மாபெரும் கொள்கையை அது பின்பற்றவில்லை. போர் நடக்கும் காலத்தில் செஞ்சிலுவை (Red Cross Service) சேவைபோல் புண்ணை ஆறவைப்பதோடும் துன்புறுதலை மட்டுப்படுத்துவதோடும் நின்றுவிட்டது. சுகாதாரத்தின் 'பாதுகாப்பு' மருத்துவம் என்ற அதிகாரத்தை அது பயன்படுத்திக் கொள்ளவில்லை. மிகவும் பயங்கரமானதும், நியாயமற்றதும், மனிதத்தன்மை இழந்ததுமான ஒரு பெரிய போரை அடியோடு உடனடியாக நிறுத்தி அமைதியை நிலைபெறச் செய்யவேண்டும் என்ற குரலை எழுப்பாமல் தயங்கிவிட்டது.

பல நோய்களுக்கும் அவைகளின் விளைவாகிய சாவுக்கும் காரணம் நோய்க்கிருமிகள் (microbes). இக் கிருமிகளை ஒழித்துக் கட்ட முன்வந்து மருத்துவம் புகழ்பெற்றது. அதேபோல் வருங் காலத் தலைமுறை மக்களின் வளங்குறைவு (impovishment)பற்றிக் கவனித்திருக்கலாம். வரும் தலை முறையின் பாதுகாப்பாளனாய் இருந்திருக்கலாம். இதற்கு மாறாக விஞ்ஞானத்தை ஒப்புப் போலி போல் (mimic) ஓர் துறையை உண்டுபண்ணிற்று. அதுதான் பள்ளிக்கூடச் சுகாதாரம் (School Hygiene); பள்ளிக்கூட உடல்நல இயல். இவ்வாறு செய்கையில் சமூகக் கொடுமையை அங்கீகரிக்கின்ற தோழமையையும் மருத்துவம் பெற்றுவிட்டது.

அண்மையில் வெளியான பள்ளிக்கூட உடல்நலம் பற்றிய வெளியீட்டைச் சற்று ஆராய்வோம். பொதுவாக உலகனைத்திலும் நிலவிவரும் கருத்துகளையும், அதுபற்றி ஆற்றப்பட்ட பணிகளையும் பற்றி இவ்வெளியீடு தொகுத்துக் கூறுகிறது.

முதுகு எலும்புக் கோணல்களுக்கு இடங் கொடுக்கக் கூடிய முக்கிய காரணங்களை இங்குச் சுருக்கமாக எடுத்துக் காட்டுவோம். இந் நோய் சாதரரணமாகத் தோன்றும் பருவம் இரண்டாம் பிள்ளைப் பருவம். ஆதலால் இதற்குக் குமரப்பருவ முதுகெலும்புத் தண்டுக்கோணல் (Spinal curvature of the adolescent) என்று பெயர். ரிக்கட்ஸ் (rickets) குழந்தைக் கணையினால் ஏற்படும் முதுகெலும்புக் கோணல் அவ்வளவு பரவலாக இல்லை. ஆதலால் அது இங்கு நம் அக்கறையில் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

இந் நோய்க்கு முக்கிய காரணமாய் இருப்பதன் காரணத்தின் மேல் நம் கவனம் முக்கியமாய்ச் செலுத்தப்படவேண்டும்.

கல்விக் கூடங்களில் மாணவரில் பெரும்பாலோர் அனுசரித்து வரும் தவறான போக்கினால் ஏற்படக்கூடியது இக் குறைபாடு. இந்தக் காரணம் எல்லாக் குழந்தைகளுக்கும் பொதுவாகையால் முதுகெலும்புத் தண்டுக் கோணலை மாணவ இனத்தாரின் தொழில் நோய் என்றே கருதலாம் (professional disease of the pupil). டாக்டர் லெகண்டிரி (Dr. Legendre) என்பவர் மிகவும் கடுமை யென்று கருதும் அளவில் இந்த நோயைப்பற்றிக் கூறியிருக்கிறார். இவ்வளவு கடுமையாகச் சொல்லியிருக்கிறாரே என்று முதலில் தோன்றினால் உண்மையில் அதுதான் சரி என்று உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது. அவர் கூறியதென்ன? அங்கக் கோளாறையும், கண்பார்வைக் கோளாறையும் உருவாக்கும் தொழிற்சாலைகளே பள்ளிக் கூடங்கள்—என்றார்

கிட்டப்பார்வை நோய்க்கு (myopia)[1] முக்கிய காரணம் நம் பள்ளிக்கூடங்களில் குழந்தைகள் ஒன்றாகக் கூடியிருக்கும் சூழ் நிலையே ஆகும். போதாத வெளிச்சம், பாடப்புத்தகங்களில் காணப்படும் மிகச் சிறிய எழுத்துகள், அடிக்கடி ஆசிரியர் கரும் பலகைமேல் எழுதுவது. அவ்வாறு ஆசிரியர் எழுதும் பொழுது அதைப் படிக்கும் குழந்தைகள் எவ்வளவு தொலைவில் உட்கார்ந் திருக்கிறார்கள். ஆதலால் எவ்வளவு பெரிதாக எழுத்துகளை எழுதினால் அவர்கள் சிரமப்படாமல் வாசிக்க முடியும் என்றெல் லாம் ஆசிரியர் சிந்திக்காமல் சிறிதாக எழுதுகிறார். இதுபோன்ற பல காரணங்களால் கண்பார்வைக் கோளாறுகள் ஏற்படுகின்றன. ‘வெளிச்சத்தின் பிரகாசம் குறிப்பிட்ட அளவுக்குக் கீழானால் ஒரு கண்ணின் பார்வை நுண்மையானது மிக வேகமாகக் குறை கிறது’ என்று டாக்டர் லெப்ரின்ஸ் (Dr. Leprince) கூறுகிறார். போதா வெளிச்சத்தில் உழைக்கின்ற மாணவன் இந்தக் குறை பாட்டை நீக்குவதற்கு அவன் பார்க்கின்ற பொருளின் பார்வைக் கோணத்தை (visual angle) அதிகப்படுத்தி அப் பொருள் கண் ணுக்குத் தெளிவாக்கச் செய்து கொள்கிறான். அதாவது அந்தப் பொருளை அளவுக்கு மீறித் தன் அருகே கொண்டு வந்து விடுகிறான்.

பார்வை நுண்மை (visual acuteness) அளவு எட்டினவுடன் ஓரெழுத்தைக் கண்டறியும் நேரம் மிகவும் அதிகரிக்கிறது. ஆதலால் போதா வெளிச்சம், செய்யும் வேலையைத் தாமதப்படுத்

[1] Short sight—பக்கப்பார்வை அல்லது கிட்டப்பார்வை அல்லது அணிமைப்பார்வை.

தும். மாணவன் அப்பொருளின் அருகே தன் கண்களை அமைத்தா லொழிய வேறு வழியில்லை. ஆதலால் பள்ளிக்கூடங்களில் ஏற்படும் வெளிச்சக் குறைபாட்டுக்குச் சமாளித்துக் கொள்ளும் முயற்சியால் கிட்டப்பார்வை நோய் பிறக்கிறது.[1]

இதையெல்லாம் பார்க்கும் பொழுது இயற்கையாக நமக்கு என்ன தோன்றுகிறது. நல்ல வெளிச்சமுள்ள இடத்துக்குக் குழந்தை மாற்றி உட்கார்ந்து கொள்ளட்டுமே. கரும்பலகை வெகு தொலைவில் இருந்தால் அதன் அருகே வரட்டுமே. போதா வெளிச்சம் அவனை முன்னேற விடாவிடில் அவன் மெதுவாக முன் னேறட்டுமே. இவ்வாறெல்லாம் தோன்றலாம். இந்தப் பிரச் சினைக்குத் தேடவேண்டிய பரிகாரம் இவ்வளவு எளியனவாக இருந் தால்—இடம் மாற்றிக்கொள்வது, முன் ஓரிரண்டு அடி எடுத்துக் கொள்வது, கொடுக்கப்பட்ட வேலையை முடிக்க இன்னும் சில வினாடிகளை அதிகமாக எடுத்துக் கொள்வது போன்றவைகளாக இருந்தால், இந்த உலகத்தில் எந்தக் கொடுங்கோலன் இந்தச் சிறு சலுகைகளை மறுத்துக் குறையிரக்கும் ஏழைக் குழந்தையைக் குருடனாக்க விரும்புவான்?

அத்தகைய கொடுங்கோலன்—தன் ஆ ண வ க் கா ர ன்— ஆசிரியனே ஆவான். தனக்குப் பலியுயிர் போன்ற குழந்தை களின் அன்பைப்பெற அறநெறி ஊக்க மொழிகளைக் கையாளு கின்றான்.

உட்கார்ந்து உட்கார்ந்து சலித்துப் போனவர்களை எழுந் திருக்க விடுவதும், எழுதி எழுதிக் களைத்துப் போனவர்களை எழுதா மலிருக்கச் செய்வதும் எவ்வளவு எளிய செயலாகும். அப்பொழுது அவர்களுடைய எலும்புகள் கோணலடையா. இடைநிலைக் காலத்தில் (600—1500 கி.பி) மக்களின் உள்ளங்கால்கள் பூட்ஸால் அழுத்தப்பட்டுக் கோணலாயின. அதேபோல், மேசை களை உபயோகிப்பதால் குழந்தைகளின் முதுகெலும்புத்தண்டு கோணிப் போயின. இவ்வாறான குழந்தைகளை எவர்தாம் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியும்? இந்த அருவருப்பான கொடுமை தேவை என்று யாதுகாரணம்பற்றி நினைத்தார்களோ!

ஏனென்றால் மனிதனே கடவுளுக்குப் பதிலாக இருப்பதாக எண்ணி விடுகிறான். குழந்தையின் மனத்தைத் தன்னைப் போலவே உருவாக்க வேண்டுமென எண்ணிவிடுகிறான். இதைச் சாதிக்க வேண்டுமானால் சுதந்திரமான குழந்தையைத் துன்பத்துக்காளாக் காமல் முடியாது. இது ஒன்றுதான் காரணம்.

[1] Brouardel et Mosny, Hygiene Scolaire Bailliere, Paris, 1 of 14 pp. 142, 143, 430, 496.

பள்ளிக்கூடக் குழந்தைகளின் முதுகெலும்புக் கோணலைச் சரிக் கட்டும் வழிகளை இங்கு ஆராய்வோம். நீண்ட நேரம் குழந்தை தன் மேசையின் முன் உட்கார வேண்டியிருக்கிறது. அவனுடைய முதுகெலும்புத்தண்டுக்கு ஒரு பங்கமும் விளைவிக்காத வகையில் இருக்க வழி கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

மேசையின் முன் உட்காரும் குழந்தை தன் பாதங்கள் தரை மேலோ அல்லது பாதம் தாங்கி (foot rest) யின் மேலோ ஊன்றப் படவேண்டும். கால்கள் துடைகளுடன் செங்கோணமாக இருக்க வேண்டும். அதேபோல் துடைகளும் முண்டத்துடன் (trunk) செங்கோணமாக இருக்க வேண்டும். பெஞ்சு சற்றுச் சாய்ந் திருக்கலாம். முண்டமும் பக்கவாக்கில் முதுகெலும்புத்தண்டு வளைவடையாமல் இருக்கும் வகையில் பெஞ்சு இருக்க வேண்டும். உடம்பின் பக்கத்துடன் கரங்கள் சமதொலைவில் (parallel) இருக்க வேண்டும். மேசையின் முன் பக்கம் நெஞ்சைப் பாதிக்கக்கூடாது. இடுப்பெலும்பு இருபுறமும் சமமாகத் தாங்கப்பட வேண்டும். தலை சுமார் 30 சென்டி மீட்டர் தொலைவில் சற்று வளைந்து கொடுக்க வேண்டும். கண்ணின் அச்சும், மேசையின் முன்பக்கத் துக்கு இணையாக (parallel) இருப்பதோடு கிடையாகவும் இருக்க வேண்டும் (horizontal). முன் கரங்களின் மூன்றில் இருபங்கு மேசை மேல் அசையாமல் கிடத்தப்பட வேண்டும். ஆனால், முன் கரங் களின் மேல் சாயாதிருக்க வேண்டும்.

இவைகளை எல்லாம் பெற வேண்டுமானால் குழந்தையின் உரு வத்துக்குப் பொருத்தமான அளவில் மேசை இருக்கவேண்டும். மேசையின் கால் முதலிய பகுதிகளும் மாணவனின் உடலுக்கும், உறுப்புகளுக்கும் பொருத்தமானதாக இருத்தல் வேண்டும்.

குழந்தைகளுக்குப் பொருத்தமான மேசைகளின் இன்றியமை யாத அளவுகள் இவை என தூஃபெஸல் (Dufessel) எடுத்துக் காட்டுகிறார்.

1. உயரம்.

2. குழந்தை துடைகளுக்குச் செங்கோணத்தில் கால்களை வைத்துப் பாதங்கள் தரைமேல் தட்டையாகவும் இருக்கும் பொழுது முழங்காலிலிருந்து கீழே காலின் அளவு குறிக்கப்படு கிறது. இந்த அளவு உட்காரும் ஆசனம் பாதம் வைக்கப்படும் இடத்திலிருந்து எவ்வளவு உயரம் இருக்கிறதென்று காட்டுகிறது.

3. மார்பெலும்பின் முன்னிருந்து பின்வழியாக உடலின் விட்டத்தை எடுத்து அத்துடன் இன்னும் 5 சென்டி மீட்டர் நீளத் தையும் கூட்டிக் கொண்டால் அது வாசிக்க உபயோகிக்கப்படும்

மேசையின் விளிம்பிலிருந்து சாய்வுப் பகுதிக்கு எவ்வளவு தூரம் இருக்கவேண்டுமென்று கூறுகிறது.

4. துடை எலும்பில் மூன்றில் இரண்டு பங்கு நீளம் ஆசனத்தின் அகலத்தைக் குறிக்கும்.

5. இறுதியாக இரைப்பைக்கு மேல் அடிவயிற்றின் உயரத்துடன் சில சென்டி மீட்டர்களைச் சேர்த்துக் கொண்டால் அதுவே வாசிக்க உபயோகிக்கப்படும் கைம்மேசையின் உயரத்தைக் குறிக்கும்.

குழந்தையின் வளர்ச்சி வேகமாகச் செல்வதால் இந்த அளவுகளனைத்தும் ஆண்டுக்கு இருமுறை எடுக்கப்படவேண்டும். இந்த அளவுகளை அனுசரித்துக் குழந்தைகள் இடம் மாற்றப்படவேண்டும்.

ஒரு வகைச் சிறிய நண்டு இனம் இருக்கிறது. பிறக்கும் பொழுது அதற்கு மேற்கவசம் ஏதும் இல்லை. காலியான சங்கை அது தேர்ந்து எடுத்துக் கொள்கிறது. அதனுள் தன் உடலைப் பொருத்திக் கொள்கிறது. அது பெரிதாக வளரும் பொழுது சங்கு அதற்குக் கெட்டியாகக் காணப்படுகிறது. அதை ஒதுக்கி விட்டு இன்னும் சற்றுப் பெரிதான ஒரு சங்கைத் தேர்ந்து எடுத்துக் கொண்டு அதனுள் தன் உடலைப் பிணைத்துக்கொண்டு வாழ்கிறது. இந்த உயிரினம் தானகவே இதைச் செய்து கொள்கிறது. இதனுடைய உடல் அளவை அளக்கக் கற்றறிஞரும் இல்லை; புதுச் சங்கை அமைத்துக் கொடுக்கத் தனி ஆசிரியரும் இல்லை. ஆனால், நமக்கும், விஞ்ஞானிகளுக்கும் ஒரு குழந்தை இந்த முதுகெலும்புத் தண்டு (invertebrate) இல்லாதவற்றைவிடத் தாழ்ந்ததாகத் தோன்றுகிறது.

குறிப்பிட்ட உடல் நலப் போக்கில் நாற்பது ஐம்பது குழந்தைகளை மணிக்கணக்கில் அசைவற்று அமரச் செய்வதும், வளரும் உடல்களுக்குத் தக்க கைம்மேசைகளைக் கண்டுபிடித்துத் தருவதும் நடைமுறையில் சாத்தியம் இல்லை. ஆதலால், நம்மில் கூன் முதுகு தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது. பிரச்சினைக்குத் தீர்வு காணுமலே நின்று போகிறது.

ரோமாபுரியில் சில பள்ளிக்கூடங்களின் ஒரு பகுதியில் அங்கக் கோணல் சார்ந்த மருத்துவ நிலையங்களில் (orthopaedic) இருப்பது போல ஒன்றை அமைப்பது பலன் தரும் என்று ஏற்பாடு செய்திருக்கின்றனர். அங்கு மிகவும் விலையுயர்ந்ததும் மிகச் சிக்கல் வாய்ந்ததுமான ஆய்கருவி (apparatus) ஒன்று இருக்கிறது. குழந்தைகள் ஒவ்வொருவராக இங்கு வருகிறார்கள். ரிக்கெட்ஸ் என்னும்

நோயால் முதுகெலும்புக் கோணல் ஏற்பட்டாலும், க்ஷயரோகத்தால் முதுகெலும்புக் கோணல் ஏற்பட்டாலும் (pott's disease) இவைகளைப் போக்குவதற்குத் தலையைப் பிடித்துத் தொங்க விடுவார்கள். அதேபோல் பள்ளிக்கூடக் குழந்தைகளும் தலையைப் பிடித்துத் தொங்கவிடப்படுவார்கள். உடல் நலமுள்ள குழந்தைகளும், நலமற்றவர்களும், இந்தத் தொல்லையான சிகிச்சைக்கு உட்படுகின்றனர். இந்த முயற்சிகள் ஊக்கமளிக்கும் புள்ளி விவரங்களைத் தருகின்றன. பள்ளிக்கூடக் கைம்மேசைகளால் குழந்தைகளிடம் தோற்றமளிக்கும் முதுகு எலும்புக் கோணல்களின் கெடுதல் ஆருண்டிலிருந்து இந்தத் தொங்கவிடும் அப்பியாசத்தைச் செய்ய வைத்தால் உடலில் சமநிலை ஏற்பட்டுத் தொடர்ந்து துன்புறுத்தி வந்த முதுகு கோணலிலிருந்து விடுபடுகிறார்கள் என்பது தெளிவாகிறது.

**விஞ்ஞான ரீதியில் உளவியலின் கண்டுபிடிப்புகள்: அளவுக்கு மீறின வேலை, நரம்புச்சோர்வு:** பள்ளிக்கூடத்தில் உடல்நலம் உட்புகுந்ததும் மாணவர்களின் முதுகெலும்புத் தண்டுக் கோணலையும், கிட்டப் பார்வை நோயையும்[1] கண்டுபிடித்தது. சோதனை உளவியல், மாணவர்களின் மிஞ்சிய உழைப்பால் ஏற்படும் (experimental Psychology) சோர்வையும் அயர்ச்சியையும் பற்றிக் கண்டுபிடித்தது. அது இதுவரை மருத்துவம் பின்பற்றிய முறையைப் பின்பற்றியது. அதாவது கண்டுபிடிக்கப்பட்ட குறைகளைச் சீர்திருத்த முயன்றது. விஞ்ஞானத்தின் ஒரு கிளையாக ஒன்றைப் புதுப்பித்தனர். அது என்ன தலைப்பைக் கொண்டது என்று இன்னும் நன்கு தெளிவு படுத்தப்படவில்லை. சிலர் இதைப் **'பள்ளிக்கூடங்களில் அனுசரிக்கப்படும் சோதனை முறை இயல்'** (experimenta Psychology applied to the school) என்கின்றனர். வேறு சிலர் விஞ்ஞான ஆசிரிய இயல் (Scientific Pedagogy) என்றும் கூறுகின்றனர்.

சோதனை முறை உள இயலை ஃபெஷ்ணர் (Fechner) என்பவர் 1860ஆம் ஆண்டில் நிலைபெறச் செய்தார் என்பதை அவசியம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். இவர் ஒரு பௌதிக வல்லுநர் (Physicist). அவருக்குப் பொருள்களின்மேல் ஆராய்ச்சி செய்த பழக்கமே இருந்தது. உயிரினங்களின்மேல் ஆராய்ச்சி நடத்தின அனுபவம் அவருக்கு இல்லை. பௌதிகத்தில் அனுசரித்த முறைகளை உள இயல் அளவைகளுக்கும் கையாண்டார். அவ்வாறு செய்து உள பௌதிகம் (Psycho-Physics) என்ற துறையையும் தோற்றுவித்தார். தொடு உணர்வு அளவீடுகளுக்காக வென்றே (esthesiometric measurements) தனியாகக் கண்டுபிடித்த

[1] **பக்கப்பார்வை, கிட்டப்பார்வை — Myopia.**

கருவிகளனைத்தும் மிகவும் நுண்மை வாய்ந்தவையாகவே இருந்தன. இம் முறையால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகள் முரண்பட்டதாகக் காணப்பட்டன. கணித விதிப்படி (mathematical Law) இவை அளத்தலில் ஏற்பட்ட பிழைகள் எனக் கூறிவிட முடியாது. ஆனால் முறையினால் ஏற்பட்ட பிழைகளே என்பது தெளிவாயிற்று. கடினப்பொருளை அளப்பதற்கு உபயோகிக்கப்படும் அளவையைக் கொண்டு திரவப் பொருளை அளக்க முடியாதென்பது தெளிவு. இவ்வாறு அளக்கும் பொழுது பௌதிகத்தின் எல்லை வரம்புக்குள்தான் இருக்கிறோம். ஒரு கடினப் பொருளை ஆழாக்கால் அளக்க முடியாது. பாலை மீட்டர்க் கோலால் அளக்க முடியாது. அப்படியானால் பௌதிகப் பொருளையும், தெய்விக சக்தியையும் அளக்கும் முறையும் எவ்வளவு அளவுக்கு வேறுபட வேண்டியிருக்கிறது என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

உள பௌதிகம், அதற்குப் பிறகு உள - உடலியல் (psycho-physics, psycho - physiology) ஆகிய இரண்டையும் வுண்ட் (wundt) என்பவர் கொண்டுவந்தார். வுண்ட் என்பவர் உடல்நூலார். உடல் இயல் நிகழ்ச்சிகளுக்கே பொருந்திய சரியான முறைகளை உள இயல் ஆய்வுக்கும் பயன்படுத்தினார். சரிநுட்பமான கருவியை உண்டுபண்ணுவதை அவருடைய குறிக்கோளாக வைத்துக் கொள்ளவில்லை. ஆனால், அவர் நரம்பு எதிர்வினைகளைக் குறிப்பிட்ட கால எல்லைக்குள் சரிநுட்பமாக அளந்தார். ஃபெஷ்ணருடைய (Fechner) தொடக்க ஆராய்ச்சிகள் புதுப்புது நுண்மையான கருவிகளை உருவாக்க வழிவகுத்தது. அத்தகைய நுண் கருவிகளில் ஒன்று ஒரு மீட்டர் உயர்த்திலிருந்து விழும் ஒரு துளியால் ஏற்படும் சத்தத்தை அளக்க வல்லது. ஆனால் வுண்ட் செய்த ஆய்வுகளினடியாகப் பிறந்தவையே குரோனு மீட்டர்கள் எனப்படும் (chronometer) திட்டக்காலக் கணிப்பளவு கருவிகள். இவை ஒரு வினாடியின் ஆயிரத்தின் ஒரு பகுதியை அளக்க வல்லவை. ஆனால் சக்தியானது (spirit) ஆராய்ச்சியின் சரி நுட்பத்துக்குச் சரியாகப் பொருந்தவில்லை. ஊசல்களால் ஒன்றுமே அளக்கப்படவில்லை என்று காட்டிவிட்டது. அளக்கப்படவேண்டிய பொருள் தப்பித்துக் கொண்டது. இங்கு ஒன்று குறிப்பிட விரும்புகிறோம். உள் தூண்டுதல் நரம்புகளின் மூலமும் முள்ளந்தண்டின் உள்ளீட்டு இறுதியிலுள்ள நரம்புக் கணுச்சிற்றறைகளிலும் பாயும் வேகத்தை எக்ஸ்னர் (Exner) என்பவர் 8 மீட்டர் என்றும், அதே குறிப்பிட்ட கால அளவுக்குள் 194 மீட்டர் வேகம் என்று ப்ளாக் (Block) என்பவரும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இந்த இரு ஆராய்ச்சிகளில் உபயோகப்படுத்தப்பட்ட துணைக் கருவிகளின் சரிநுட்பமும் அவை கண்டுபிடித்த உண்மைகளில்

தோன்றின மாபெரும் வேறுபாடுகளும் ஒப்பிடப்படும் பொழுது கணித விதிப் பிரகாரம் (Mathematical Law) மிகவும் பொருத்தமற்றதாகவே காணப்பட்டது. இவ்வாறிருந்தும் சோதனை உள உயல் எல்லாம் கணித அடிப்படையைப் பொறுத்திருக்கிறதென்ற மாயை நம்பிக்கையுடன் பரந்த அளவில் ஆராய்ச்சி செய்து வந்தது.

இந்த விஞ்ஞானத்திலிருந்து ஒரு தனிக் கிளை பிறந்தது. அது பள்ளிக்கூடத்துக்குள் ஊடுருவிற்று. மாணவனுக்கு ஒரு தெய்விக உதவி புரியவும் ஆசிரிய இயலுக்குப் புது ஊக்கம் அளிக்கும் நோக்கத்திலும் இப் புது விஞ்ஞானம் பிறந்தது.

ஆராய்ச்சிகள் அனைத்தும் பழங்கால உளநூல் சார்ந்த பௌதிகமுமன்று; உளநூல் சார்ந்த உடலியலுமன்று. சோதனைமுறை உள இயலானது இனிமேல் தன் தொடக்கத்திலிருந்து விடுவித்துக் கொண்டு தான் சுயமாக விருத்தி அடைந்திருக்கிறது. தன்னுடைய ஆராய்ச்சிகளுக்கு உள இயல் சோதனைகளையே முழுமையும் நம்பியிருக்கிறது. ஆய்வுச் சாலையில் (laboratory) பயன்படுத்தப்படும் முறைகளை ஒதுக்கிவிடவேண்டும் என்பதில்லை. ஏஸ்திஸ்யோமீட்டர் (esthesiometer) பிழையறி கருவி (ergograph) போன்ற மிக நுட்பமானதும், நம்பக் கூடியதுமான கருவிகளை உபயோகப் படுத்தவேண்டுவதில்லை என்பதும் இல்லை. இப்பொழுது பள்ளிக்கூடமே ஆராய்ச்சிக் களம் ஆகிவிட்டது.

எடுத்துக் காட்டாக, ஒருமுனைப்பு (attention) அல்லது கவனம் என்பது பற்றி எல்லோருக்கும் தெரிந்த பரிசோதனை ஒன்று இருக்கிறது. ஓர் அச்சிட்ட தாளை மாணவன் கையில் கொடுத்து அந்தப் பக்கத்தில் இருக்கிற ஒவ்வொரு 'a' ஐயும் அடித்துவிடு என்று முன் கூட்டியே சொல்லப்படுகிறது. இந்தப் பணி தொடங்குவதிலிருந்து முடிக்கும் வரை எடுத்துக்கொண்ட நேரத்தை ஒரு குரோனுமீட்டர் (chronometer) குறித்துக் கொள்கிறது.

ஒன்றிலிருந்து நூறு வரை சத்தமாக உச்சரித்துக்கொண்டு அதே வேளையில் ஒரு கணக்கை எழுத்தால் எழுதவும் செய்ய வேண்டும் என்கின்றபொழுது அவனுடைய ஒருமுனைப்பு எந்தெந்த வழிகளில் பிரிந்துவிடுகிறதென்று ஆராயப்படுகிறது. இந்த ஆராய்ச்சிக்கு எவ்வளவு நேரம் பிடித்திருக்கிறது என்று கண்டு பிடிப்பதும், பிழைகள் அனைத்தையும் பதிவு செய்யப்படுவதும் எல்லாம் குரோனு மீட்டரின் வேலை ஆகும். இது போன்றே பலர் இம்மாதிரிப் பயிற்சிகளைச் செய்யும்போது ஒவ்வொருவரின் தனித்

தனிச் செயல் ஆற்றலை ஆராய முடிகிறது. பள்ளிக் கூடங்களில் எவ்வகையான சொற்களையோ சொற்றொடரையோ மாணவர்களுக்குப் பாராமல் கேட்டெழுதத்தருவது எவ்வளவு நேரம் பிடித்திருக்கிறது என்றும் குரோனுமீட்டர் குறித்துக் கொள்கிறது. பிறகு அவர்களுடைய பிழையையும் ஒப்பிட்டுக் குறிக்கிறது. எல்லோரையும் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் இந்த முறை எளியதே.

இந்தப் பரிசோதனைகள் அனைத்தும் பள்ளிக் கூடத்தின் தினசரிப் பாடத்திட்டங்களைக் குறுக்கிடாமல் செய்யப்பட வேண்மென்பதை எல்லா உள இயலாரும் ஒப்புக் கொள்கின்றனர். இந்தப் பரிசோதனைகள் சாதாரண பாடங்களுக்கு மேம்பட்டதாக இருக்கவேண்டும்—மேற்கொண்டவை (extra) பள்ளிக்கூடப் பாடங்களின் உள இயல் நிலைமைகளை நன்கு புரிந்துகொள்ள இவ்வாராய்ச்சிகள் உதவி புரியும் எனக் கொள்ளலாம்.

அத்தகைய பரிசோதனைகளின் முக்கிய பலன்கள் இவை: செய்யப்பட்ட பிழைகள் பன்மடங்கு பெருகுதல், கவனத்தை ஒன்றின்மேல் நிலைபெறச் செய்ய இயலாமை. அதாவது அவை குழந்தைகளின் சோர்வையும் களைப்பின் அளவையும் வெளியாக்கின.

இது அபாய அறிவிப்பைத் தந்தது. பழைய ஆசிரிய இயல் கருத்தில் கொண்டதெல்லாம் குழந்தைகள் என்ன செய்யவேண்டும் என்பது பற்றியே. குழந்தைகளுடைய நரம்புச் சக்திகள் பாழடையலாம் என்ற உண்மையை முதல்முதலாக விஞ்ஞானமே எச்சரிக்கை செய்து காட்டிற்று.

களைப்பேற்படக் காரணங்கள் யாவை என்பதில் ஆராய்ச்சிகள் மென்மேலும் தொடங்கின. இத்துடன் இணைந்து அவ்வளவு உடனடியானதல்லாத போனாலும் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. களைப்பை எப்படித் தவிர்க்கலாம் அல்லது குறைக்கலாம் என்ற ஆராய்ச்சியாகும். அது சம்பந்தப்பட்ட எல்லா ஆக்கக்கூறுகளும் (factors) ஆராயப்பட்டன. வயது, பால் (Sex) நுண்ணறிவின் திற அளவு, தனியார் வகை (type of individual), பருவகாலங்கள்...பாதிக்கும் போக்கு, ஒருநாளின் வெவ்வேறு நேரங்களால் ஏற்படக்கூடிய போக்குகள், வாரத்தின் வெவ்வேறு நாள்கள் எவ்வாறு பாதிக்கின்றன. பழக்கங்கள், களைப்பாறும் இடைநேரங்கள், அக்கறை, விதவிதத் தொழில், உடலின் நிலைமை (position of the body) ஆகியவைகள் பற்றியும் இறுதியாக நாற்றிசை முனைகள் சம்பந்தப்பட்ட நிலைமைகளும் (position in reference to the cardinal points) ஆராயப்பட்டன.

விடுவிக்கப் படாத சிக்கல்கள் விஞ்ஞானத்துக்கு முன் எதிராக நின்றன.—இந்த ஆராய்ச்சிகளின் பயன் என்ன? இன்னும் பெருகிக் கொண்டே செல்கின்ற விடுவிக்காத பல சிக்கல்களாகும். ஆண்கள் பெண்களை விட எளிதில் களைப்படைந்து விடுகிறார்களா என்று நிலைநாட்டப்படவில்லை. நுண்ணறிவு படைத்தவர்கள், நுண்ணறிவு படைக்காதவர்களைவிட எளிதில் களைப்படைவார்களா என்றும் கண்டுபிடிக்கப்படவில்லை. தனிப்பட்டவர் நிலைமை பற்றி 'டிஸ்ஸி' (Tissies) என்பவருடைய ஆராய்ச்சி முடிவே மிகவும் சிறப்பானதெனலாம். ஒவ்வொருவரும் அவரவர் மனத் திட்ப அளவுக்குத் (will) தக்க வகையில் களைப்படைகிறார்கள். பருவகாலங்களைப் பொறுத்த மட்டில் முதல் நாள் தொடங்கி வரவர ஆண்டு இறுதிக்குள் களைப்புப் படிப்படியாக உயர்ந்து கொண்டே போகிறது. இதற்குக் காரணம் பருவகாலம் தானா என்பதை நிச்சயமாகக் கூற முடியாது. ஷுய்டன் (schuyten) என்பவர் கருதுவது போல் மாணவர்களில் படிப்படியாகத் தளர்ச்சி அடைவதற்குக் காரணம் கல்வி முறையாகவே இருக்கலாம். ஒவ்வொரு தினத்தின் நேரம் எவ்வாறு சோர்வை உண்டாக்குகிறது என்பதில் மாணவன் தானாக வேலை செய்யும்பொழுது சோர்வு குறைந்திருக்கிறதா என்பது 'இன்னும் முடிவு காணப்படாத விஷயம். ஆனால் இந்தப் பிரச்சினை விடுவிடுக்க முடியாதது. வாரத்தில் திங்களன்றும் வெள்ளியன்றும் சோர்வு குறைவாகக் காணப்படுகிறது. ஆனால் இது சம்பந்தமாகச் செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் இது உண்மை தானா என்று நிச்சயமாக எடுத்துக்கூற முடியவில்லை. பழக்கம், இளைப்பாறும் இடை நேரம், அக்கறை முதலியவற்றைப் பொறுத்த மட்டில், 'இவையெல்லாம் சோர்வுக்கு எதிரானவை. இவை உண்மையாகச் சோர்வைத் தணிக்கின்றனவா என்று ஐயுறப்படுகின்றனவா அல்லது சோர்வைப் போர்வை போல் மறைக்கின்றனவா என்று இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை'. வேலை மாற்றத்தால் சோர்வு தணிகிறதா என்று பல அக்கறை யூட்டும் பரிசோதனைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளால் பெறப்பட்ட உண்மைகளும் ஒரே மாதிரியானவையே, அவை ஒரே வகையான வேலையில் ஈடுபட்டிருப்பதை விட்டு அடிக்கடி வேலைமாற்றம் செய்யப்படும் பொழுது இன்னும் அதிகமான சோர்வை உண்டு பண்ணி விடுகிறது. பிடிவாதமாகச் (persistence) செய்யப்படும் வேலையைவிட அடிக்கடி குறுக்கிடப்படும் வேலையால் சோர்வு அதிகரிக்கிறது. கிளபாரிடி (claparede) என்பவர் எடுத்துக்காட்டும் ஆராய்ச்சி ஷியூலட்ஜே (Schultze) என்பவரால் செய்யப்பட்டது. ஒருநாள் பெண்களை இருபத்தைந்து நிமிடங்கள் எண்களைக் கூட்டும்படி செய்தார்கள்; பிறகு இன்னும் இருபத்தைந்து நிமிடங்கள் சில பாடங்களைப் பார்த்தெழுத வைத்தார்கள். இன்

ஞெரு நாளும் இம்மாதிரியே செய்தார்கள். ஆனால் இந்த முறை வேறுவகையாகச் செய்யவைத்தார்கள். ஐம்பது நிமிடங்கள் கூட்டுவதும், ஐம்பது நிமிடங்கள் பார்த்து எழுதுவதுமாகச் செய்ய வைத்தார்கள். பின்னல் செய்யப்பட்ட பரிசோதனைகளால் பெற்ற உண்மை முதல் பரிசோதனை விளைவாகப் பெற்றதை விட எவ்வளவோ சிறப்பு வாய்ந்தவையாக இருந்தது. எனினும், இந்த உண்மைகள் தோற்றுவிக்கப்பட்ட பிறகும், சோர்வைத் தவிர்க்க விஞ்ஞான முறை என்ற பெயரில் பள்ளிக்கூடங்களில் அடிக்கடி குறுக்கிடுவதும், மாணவர் செய்துகொண்டிருக்கும் தொழிலை அடிக்கடி மாற்றுவதும் நல்லதென இன்னும் அனுசரித்து வரப்படுகிறது.

அண்மையில் பள்ளிக்கூடங்களைப் பற்றி ஓர் ஆராய்ச்சி நடத்தப்பட்டது. ஒவ்வொரு பாடத்தைப் போதிக்கப்படும்பொழுதும் எந்தெந்த அளவில் சோர்வு உண்டாக்கப் படுகிறதென்ற ஆராய்ச்சியாகும். இதற்குச் சோர்வு வளர்தல் கெழு 'போனோஜெனிக் கொயிபிஷெண்டு' (Ponogenic co-efficient) என்று பெயர். வாக்னர் என்பவர் (Wagner) எல்லாப்பாடங்களைவிடக் கணிதத்துக்கே அதிக மதிப்புக் கொடுக்கவேண்டும் என்கிறார். அதாவது கணிதத்தால் தான் அதிகச் சோர்வு ஏற்படுகிறதென்றும், அதற்குப் பாடத்திட்டத்தில் நூற்றுக்குநூறு கொடுக்கப்படவேண்டுமென்கிறார். கீழ் வரும் பட்டியலில் ஒவ்வொரு பள்ளிப் பாடத்திலும் சோர்வு வளர்தல் கெழு எவ்வாறு (Ponogenic co-efficient in school) ஏற்படுகிறது என்பது தெளிவுபடுகிறது.

| | |
|---|---|
| கணிதம் | 100 |
| லத்தீன் மொழி | 91 |
| கிரீக் மொழி | 90 |
| உடற்பயிற்சி | 90 |
| சரித்திரம், பூகோளம் | 85 |
| பிரஞ்சு, ஜெர்மனி (மொழி) | 82 |
| இயற்கைப்பாடம் | 80 |
| ஓவியம், மதம் | 77 |

மனம் போன போக்கில் வியப்பூட்டும் வகையில் ஆராய்ச்சிப் பலன்கள் கணிக்கப்பட்டிருப்பதை நாம் குறித்துக் கொள்ளலாம். எனினும் பரிசோதனை அறிவியலின் பேரில் (Experimental Science) கீழ்க்கண்டவாறு உய்த்துணரலாம்.

சோர்வு வளர்தல் கெழு என்பது குழந்தையின் வயதுக்குத் தக்கவாறு மாறுகிறதா என்பதை ஆராய்வது அக்கறையூட்டுவ தாகும். அவ்வாறு செய்வோமானல் மூளையானது ஒரு பாடத் தைக் கற்பதற்கு எந்தத் தருணத்தில் நல்ல சிறந்த பக்குவமடைந் திருக்கிறதென்றும், ஆதலால் பாடத்திட்டத்தில் எப்பொழுது அதை மிகைப்பட அனுசரிப்பது நியாயமானதென்றும் புரிந்து கொள்ள முடியும். மேலும் தினந்தோறும் பாடத்திட்டத்தில் எந்தப்பாடம் எப்பொழுது கற்பிப்பது நல்லதென்றும் அறிந்து கொள்ளப் பயன்படும். மிகவும் அதிகச்சோர்வை ஊட்டும் பாடங் களை அன்றுடம் இளநேரத்தில் எடுத்துக் கொள்ளலாம்.' (Claparede - கிளபாரிடி op. cit).

அண்மையில் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளில் ஒன்று சோர்வு நேரத்தில் உண்டாக்கப்பட்ட நச்சுப் பொருள்கள் பற்றியது ஆகும். வெய்ச்ஹார்ட் (Weich hardt) என்பவர் இந்த நச்சுப் பொருள்களைத் தனித்தனியாகப் பிரித்தெடுத்தார். இவைகளுக்கு எதிர்மறையான தடுப்பு நச்சுப் பொருள்களைக் கூட்டி எலிகளின் மேல் வெற்றிகரமான பரிசோதனைகளை நடத்தினர். இந்தப் பரி சோதனை மருத்துவமனையிலும் திரும்பச் செய்யப்பட்டது. மிகவும் சலிப்பூட்டும் பணியாற்றும்பொழுது இந்த நச்சுப் பொருள்கள் அளவுக்கு மீறி உண்டாக்கப்பட்டன என்றும், அக்கறை ஊட்டும் பணியாற்றும் பொழுது அத்தகைய நச்சுப் பொருள்கள் ஏதோ மாதிரிக்குச் சிறிதளவு தோன்றின என்றும் காணப்பட்டது.

இந்த விஞ்ஞான முறைப்படி பல பரிசோதனைகளும், ஆராய்ச் சிகளும் செய்யப்பட்டன. பல விமோசனம் காணப்படாத சிக்கல் களையும் நமக்கு அளித்திருக்கின்றன. இவைகளில் முக்கியமென்று கருதப்பட்ட எந்தக் காரணமும் சோர்வைத் தணிக்க முடியா தென்றும் புலப்படுத்திற்று. குறுக்கிடுதலும் தொழில் மாற்றமும் மட்டும் இருந்தால் அவை சோர்வை இன்னும் அதிகப்படுத்தும். மிகைபடத் தொழில் புரிவதால் (surmenage) ஏற்படும் சோர்வைத் தடுப்பதற்கு ஒரேஒரு வழிதான் சிறந்தது. அதாவது தொழிலை இன்பமூட்டும் வகையாக இருக்கச் செய்வதும் வருத்தத்தை ஒழித்து மகிழ்ச்சியைத் தருவனவாக இருக்கச் செய்வதும் ஆகும்.

பாடபோதனை கவர்ச்சிகரமாக இருக்க வேண்டுமென்ற அவசிய உண்மையைப் புகழ்பெற்ற எல்லா ஆசிரிய இயல் வல்லு நரும் வலியுறுத்தி வந்திருக்கின்றனர். ஃபெனிலான் (Fenelon), ரூசோ (Rousseau), பெஸ்டலாஜி (Pestalozzi), ஹெர்பார்ட் (Herbart), ஸ்பென்ஸர் (Spencer) போன்றவர்கள் வலியுறுத்தி யிருக்கின்றனர். எனினும் தினசரி நடைமுறைப் பயிற்சிகளில் இது

பள்ளிக்கூடங்களில் அனுசரிக்கப்படுவதில்லை (கிளபாரிடி-Claparede op. cit)

எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது என்ன?

**கற்பிப்போனது முதற்கடமை கெடுதல் விளைவிக்காதிருத்தல்:** மருத்துவப் பயிற்சியிலும் இதே கொள்கைதான் அனுசரிக்க வேண்டுமென ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இதை முழுக்க முழுக்கப் பின்பற்றுவது இயலாததே. ஏனென்றால் ஒவ்வொரு கல்வி புகட்டும் முறையும் ஓரளவில் இல்லாவிடினும் மற்றோரளவில் நேர்மையான குழந்தை வளர்ச்சியைப் பாதிப்பதாகவே இருந்து வருகிறது. ஆனால் போதனையால் நிச்சயமாய் ஏற்படுத்தப்படும் தீங்கினைப் போதகன் நீக்க வழி தேடுவான்.

இத்துணை ஆராய்ச்சிகளும், பரிசோதனைகளும் செய்த பிறகு இவ்வாறு எண்ணுவது வாயளவுக்குச் சமாதானம் அளிப்பதேயாகும். ஒவ்வொரு கட்டத்திலும் பிரச்சினைகள் கிளம்பியிருக்கின்றன. இவைகளில் ஒன்றுக்காவது தீர்வு காணப்படவில்லை என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். இவைகளுக்கெல்லாம் ஆதிமூலமாக இருக்கும் பிரச்சினைகளிலெல்லாம் பிரச்சினை என்னவென்றால் இதுவரை மாணவனின் உடலை வளைத்துத் துன்புறுத்திச் சோர்வினால் குருதியில் நச்சூட்டி வந்த இடத்தை (பள்ளிக்கூடத்தை) எவ்வாறு கவர்ச்சிகரமாகவும் இன்பம் ஊட்டும் வகையில் மாற்றியும் அமைப்பதென்பதே ஆகும். தீங்கு விளைவிக்காமல் கற்பிப்பது இயலாத காரியம். எனினும், இன்பம் ஊட்டுகின்ற தீங்கினை நாம் செய்ய வேண்டும். இது மிகவும் இக்கட்டான நிலையாகும். ஆதலால்தான் இந்த விஞ்ஞானத்தின் குறிக்கோளாக முடிவுறாத சலிப்பூட்டும் கேள்வித் தொடர் ஒலிகள் அலங்கரித்து வருகின்றன. இதற்கு அறிவிலி (ignorabimus) என்ற பொருத்தமான பெயர் கொடுக்கலாம்.

இதே காரணத்தால் உடல்நல இயலும் உள இயலும் எடுத்துக் காட்டின குறைதீராத தீங்குகள் அனைத்தையும் ஒரேஅடியாக விலக்கிவிடும் தீர்ப்பளிப்பதுபோல் முயற்சிசெய்யப்பட்டு வருகிறது. பாடம் கற்பிக்கும் நேரத்தைக் குறைப்பது, பாடத் திட்டத்தில் வெட்டுதல், எழுத்து வேலையைக் குறைத்தல் என்ற முறைகளைக் கையாளத் தொடங்கினர். இதுவரை நடமாடிய அழிவு என்ற பேயுருவுக்குப் பதிலாக (spectre of destruction) அறியாமையும், நாளின் பெரும்பொழுது குழந்தை கவனிக்கப்படாமல் நிராகரிக்கப்பட்ட பேயுரு ஒன்றும் தோன்றியிருக்கின்றன. இந்த நிலையில் தற்காலம் வருங்காலப் பரம்பரையை நெருங்கிய அக்கறையுடன் பாதுகாக்க வேண்டும் என்றும், இன்றுள்ளதை விட

இன்னும் பரந்த அளவில் உயர்ந்த ஒரு பண்பாட்டினை உருவாக்க வேண்டுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது; உரிமையுடன் கோரப் படுகிறது.

இக் காலத்தில் களைப்பால் ஏற்படும் நச்சுப்பொருள்களுக்குப் பதிலாகப் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நச்சு முறிகளை ஊட்டி விடலாம் என்று தோன்றலாம். 'சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்' என்கிறார் கிளபார்டி. சோர்வுக்கு எதிராக ஒரு விலங்கின் நிண நீரை முறியாக (serum) உள்ளே செலுத்தப்பட்டால் எவ் வளவு மதிப்புள்ளதாக இருக்கும்!

இந்தக் கோணத்தில் காணும்பொழுது பாடத்திட்டங்களால் வலியுறுத்தப்பட்ட உண்மைகளைக் காட்டிலும் சோர்வு வளர்தல் கெழுவின் உண்மைகள் நடை முறையில் பயன் அளிக்கலாம் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஒவ்வொரு பாடத்தை யும் கற்பிக்கும் பொழுது ஓரளவு நச்சுப்பொருள் உடலில் உண் டாக்கப்படுகிறது. இது இவ்வளவு என்று இந்தக் குணகம் (Co-efficient) காட்டும். அதற்குத் தேவையான முறையில் முறையின் அளவு இன்னதென்றும் கண்டுபிடிக்க முடியும். இதை உபயோகித் தால் சோர்வின் தீங்கு விலகி விடும். அண்மையில் ஓர் எதிர் காலம் பிறக்கலாம். பள்ளிக்கூடத்தின் விஞ்ஞானக் கிளைகளும், ஆசிரிய இயலும் நல்ல முன்னேற்றம் அடைந்த பிறகு அங்கக் கோணல் சார்ந்த மருத்துவ நிலையத்துடன் (orthopaedic ward) உள இயல் சார்ந்த வேதிநூல் நிலையமும் அமைக்கப்படலாம். ஒவ்வொரு மாலையிலும் குழந்தைகள் இல்லம் திரும்புவதற்கு முன் பயனூட்டும் தொங்கவைக்கும் துணைக்கருவியால், (beneficent suspensary apparatus) எலும்புகளுக்குப் பள்ளிக்கூடத்தில் ஏற் பட்ட கோணல்களைச் சீர்திருத்தலாம். இதன்பிறகு ஒவ்வொரு குழந்தைக்கும் அது பெற்ற பாடத்தால் ஏற்பட்ட சோர்வுக்குத் தக்கப்படி சோர்வு நீங்கும் வகையில் ஒரு தடுப்பூசி போட்டுக் கொண்டு இல்லம் திரும்பலாம். இதெல்லாம் மனத்தில் காணப் படும் எதிர்காலக் கனவு.

...இதைப் பார்க்கும் அளவில் கொடிய வஞ்சப் புகழ்ச்சியாகத் தோன்றலாம் (irony). ஆனால் அப்படியில்லை. அங்கக் கோணல் சார்ந்த நிலையம் என்பது நிலைநாட்டப் பெற்றாய் விட்டது. இதற் கேதும் ஐயமில்லை. இத்துடன் சீக்கிரத்தில் வேதிநூல் மருத்துவ நிலையமும் தோன்றுவதைக் காண்போம். சுதந்திரம் என்ற பிரச் சினை ஓர் இயந்திரத்தால் தீர்க்க வேண்டுமானால், நியாயம் என்ற பிரச்சினை வேதிநூல் (இரசாயனக்) கண்கொண்டு ஆராய வேண்டு மானால் இத்தகைய பிழைகளை அடிப்படையாகக் கொண்ட விஞ்

ஞானங்களின் அழிவுக்கு அத்தகைய முடிவுகளே காரணமாய் இருக்கலாம்.

கல்விக்கு வழிகாட்டி, குழந்தையை அதன் அடிமைத் தன்மையிலிருந்து விடுவிக்கும் வகையில் உண்மையான சோதனை அறிவியல் (experimental science) ஒன்று இன்னும் தோன்றவில்லை என்பது தெளிவு. பல நூற்றாண்டுகளுக்கு முன் இரசவாதத்திலிருந்து வேதி நூல் தோன்றிற்று. அனுபவ வைத்தியத்திலிருந்து ஐயத்துக்கு இடமற்ற வைத்தியம் தோன்றிற்று. அதேபோல் புதிதாக ஓர் அறிவியல் தோன்றினால் அது தியாகம் செய்யப்பட்ட குழந்தைமையின் நோய்களிலிருந்து பிறந்ததாக இருக்கும்.

கணிதத் துறையை விட்டுவிட்டு உயர்நூலையும் ஆராய்ச்சி உளநூலையும் (Experimental Psychology) கற்கப் புகுந்த ஒருவரின் கருத்துகளை எடுத்துக்கூற விரும்புகிறேன். அவை அக்கறை ஊட்டுவனவாய் இருக்கலாம் என்று நம்புகிறேன்.

அவர் ஓர் ஆங்கில 'இஞ்சினீயர்'—பொறி இயலார். அவர் தம்மை அறியாமலே பொருத்தமில்லாத ஒரு தொழிலில் ஈடுபட்டு விட்டிருந்தார். என்னுடைய முறையை இரண்டாண்டுகள் கற்ற பிறகு அவருடைய பெரிய நாட்டிற்கே திரும்பச் சென்று உயிர் நூல் மாணவனாகச் சேர்ந்து கற்கத் தொடங்கினார்.

ஆராய்ச்சி உள நூலைப்பற்றிய அவர் கருத்துப் பின்வருமாறு:

> உள இயலில் தற்காலத்தில் மிகவும் புதுமையான ஆராய்ச்சிப் பரிசோதனைகளைப்பற்றிக் கற்று வருகிறோம். இப்போது எண்ணமும் கற்பனையும் (Thought & Imagination) என்ற இரண்டைப்பற்றி ஆராய்ந்து வருகிறோம். இந்த ஆராய்ச்சிகள் பற்றி ஏதோ சிறிதளவாவது தெரிந்து கொள்வது இன்றியமையாததாயினும் இந்தப் போக்கு அவ்வளவு தெளிவூக்கம் அளிப்பதாக இல்லை என்று நான் ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது. தற்கால உள இயலில் நமது முறைக்கு (மாண்டிசோரி முறை) ஈடாக எதுவும் இல்லை. இந்த ஆராய்ச்சியாளர் ஒரு மரத்தைப் பார்த்து அதன் வெளித் தோற்றத்தில் தெளிவாகக் காணப்படும் உறுப்புகளைக் குறிப்பதுபோல் தோன்றுகிறது. (இலையின் வடிவம், தண்டு முதலியன.) இவைகளெல்லாம் ஆழ்ந்த கவனத்துடனும் துல்லியமான மொழியையும் உபயோகித்து வர்ணிக்கிறார்கள் (ஒரு வேளை இதுதான் விஞ்ஞானம் என்று கருதுகிறார்கள் போலும்.)

வரையறை (definition)யின் இயக்கக் கூறும் (function) வர்ணனையும் ஒன்றென்றே குழப்பிக் கொள்கின்றனர்.

இவ்வாறு வியப்பூட்டுவதும், கவர்ச்சி கரமானதுமான விஷயங்கள் வெறும் சப்பற்ற வரையறைகளாக மாறி விடுகின்றன. இவர்களுடைய விஞ்ஞானங்களில் இவ் வரையறைகளைத் திணித்துவிடவே இவ்வாறு செய்கின் றனர். ஆதலால் எண்ணங்களைத் தூண்டிவிடும் அளவில் இவை சக்தியிழந்தனவாகி விடுகின்றன. அவர்கள் நடு நிலை வினை ஆற்றுவதில்லை. நிறையப் படிக்கிறார்கள்; மனக்கற்பனைகளில் சிந்திக்கின்றனர். கரும்பலகைமேல் வரையப்படும் வரைகோடு எவ்வாறு உயிர் இனத்தைக் காட்டுவதில்லையோ அதேபோல் இவர்கள் எடுத்துக் காட்டுவனவும் உண்மை விஷயத்தைக் குறிப்பதில்லை. இந்த உருவங்கள் வெவ்வேறு உள இயலாரில் வெவ்வேறு தோற்றங்கள் அளிக்கின்றன. ஆனாலும் அவர்கள் உப யோகிப்பது எப்பொழுதும் ஒரே வாசகம்தான். அவர் கள் முன்னேற்றம் அடைவதாகவே எண்ணிக்கொண்டு இவைகளை எல்லாம் செய்கின்றனர். சார்பெண்ணங்கள் ஏதும் இல்லாமல் தங்களுடைய மாணவர்களைத் தாங் களே கூர்ந்து கவனிக்கச் செய்வதற்கு மாறாக இந்த உள இயலாரின் சொந்தச் சார்பெண்ணங்களை மாணவர் களுடைய மனத்தில் புகுத்திவிடுகின்றனர். பல உருவமற் றதும், அதிசயமானதும் ஆன விஷயங்களை வர்ணித்தும் வரையறை வகுத்தும் மாணவர்களை நெட்டுருச் செய்ய வைக்கின்றனர். இவ்வாறெல்லாம் செய்வதால் மாண வர்கள் தாங்களாகவே எதையும் சிந்திக்கின்ற திறமையை அறவே இழக்கின்றார்கள்.

ஆனால் மரத்துக்குள் அடிப்படையான உள்ளமைப்பு ஒன்று இருக்கிறது. இதை அவர்கள் கூர்ந்து கவனிக்கத் தொடங்கவில்லை. இதை அவர்கள் உணர்ந்தார்க ளானால் வெளிப்படையான மெய்ச்செய்திகள் அனைத்தும் விளங்கிவிடும். இனம் இனமாகக் கூறுவது (details) முக்கியத்துவத்தில் குறையும். இத்தனை இன இனக் கூறு கள் ஒரு தனி மூலத்திலிருந்து பிறந்திருந்த போதிலும் அவைகளை மிகவும் எளிதான முறையில் வகைப்படுத்தி விடமுடியும். முன்காலத்தில் வான சாஸ்திரம் அவ்வள வாக நவீன முறையில் முன்னேறாத பொழுது விண்மீன் குழுக்களைப் பற்றிப் (constellation) பல கதைகள் கூறப் பட்டன. சப்த ரிஷிகள் (the Great Bear), கற்கடகம் (the

Crab), மேஷம் (the Goat) என்றெல்லாம் வர்ணித்து வந்த னர். தற்கால உள இயலார் தோற்றுவிக்கும் விஞ்ஞானம் எனக்கு அந்தப் பழங்கால விண்மீன் குழுக் கதைகளை நினைவூட்டுகிறது.

தங்களுடைய அறியாமையைப் புரிந்து கொள்ளாமல் சாரமற்றவர்களைக் கண்டாலே நான் வெறுக்கிறேன். பெரிய கர்வத்துடன் பெரிய பெரிய வறண்ட நூல்களை எழுதுகின்றனர். ஏதோ முழுமையான அறிவுப் படைப் புகளாக அந் நூல்களை அவர்கள் கருதுகின்றனர். இந் நூல்கள் மாணவர்கள் மனத்தில் பெரும் சுமையாகக் கிடக் கின்றன. ஆசிரியர்களைப்போல் இவர்களும் வற்றினவர் களாகவே ஆக்கப்படுகின்றனர். மாணவர்களும் தங்கள் பரீட்சைகளில் வெற்றி காணவேண்டுமென்ற ஒரே நோக் கத்தைக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. புதிதாக எதை யும் கண்டுபிடிக்க வேண்டும் என்ற நோக்கமே இல்லாத வர்கள் போல் காணப்படுகின்றனர். பேராசிரியர்களும் இந்தக் குறிக்கோளை அடையும் அளவுக்கு மாணவர் களுக்கு உதவி புரிகின்றனர். ஒரு தவறான கல்வி முறை யால் நாம் எல்லோரும் அடிமைகளாகி விட்டோம். இந்தத் தவறான கல்வி முறை சீர்திருத்தப்பட வேண்டும் என்றும் உரக்கப் பறை சாற்றப்பட்டு வருகிறது.

# 3. பரிசோதனை விஞ்ஞானத்திற்கு எனது பங்கு

## (My Contribution to Experimental Science)

உள இயல் வாழ்வின் அமைப்பு முறை (organisation) யானது தனிச்சிறப்பு நிகழ்ச்சி இயலான கவனத்தில்தொடங்குகிறது.—மூன்றிலிருந்து ஆருண்டுவரை உள்ள குழந்தைகளை நான் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். அந்தப் பணியால் பெற்ற உண்மை புது ஆராய்ச்சிக்கு நடைமுறையில் துணைபுரிவதாகும். இந்த ஆராய்ச்சியின் நோக்கம் குழந்தையின் ஆன்மாவை—உள்ளத்தை—எவ்வாறு நடத்தப்பட வேண்டுமென்பது. உடல் நலம் அல்லது சுகாதாரம் உடலுக்கு இவ்வாறு செய்யவேண்டுமென்று எடுத்துக் காட்டுவதுபோல் மேலே குறிப்பிட்ட சிகிச்சையும் ஆகும்.

ஆதலால் என்னுடைய முறையை வரையறுக்க வழிவகுத்த அடிப்படை விஷயங்கள் எவை என்று குறிப்பிடுவது அவசியம் என்று தோன்றுகிறது.

பல ஆண்டுகளாகக் குறைபாடுடைய குழந்தைகளின் கல்வியில் சில சாதனங்களை முன்பு பயன்படுத்தி வந்திருக்கிறேன். ரோமாபுரியில் ஸான்லோரன்சோ என்னும் பகுதியில் அதே சாதனங்களை நேர்மைக் குழந்தைகளுக்கும் உபயோகித்துப் பார்த்தேன். என்னுடைய கொள்கைகளையும் சாதனங்களில் சிலவற்றையும் பற்றி என்னுடைய முதல் கட்டுரைகளை உருவாக்கிக் கொண்டிருந்தேன். மூன்ருண்டுக் குழந்தை ஒன்று உருளைக் கட்டைகளின்மேல் தன் ஆழ்ந்த கவனத்தைச் செலுத்திக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். அக் குழந்தை அந்த சாதனத்திலுள்ள ஒவ்வொரு உருளையையும் அதனுடைய தொளையிலிருந்து எடுப்பதும் பிறகு அதனதன்

தொளைகளிலேயே பொருத்துவதுமாகக் காட்சி அளித்தது. குழந்தையின் முகத்தில் சலனமற்ற கவனம் பிரகாசித்தது. இது பிரமாதமான வெளிப்படுதலாகத் தோன்றிற்று. இதுவரை வேறு எந்தக் குழந்தையும் ஒரு பண்டத்தின்மேல் இவ்வளவு நிலைபெற்ற அக்கறையைக் காட்டியதில்லை. குழந்தைகள் எப்பொருளின் மேலும் சம்பவத்தின் மேலும் தொடர்ந்து அக்கறை காட்டமாட்டார்கள் என்று இதுவரை நம்பி வந்த நான், இந்தப் புது நிகழ்ச்சியைக் கண்டு உள்ளத் துடிப்புப் பெற்றேன்.

குழந்தையைக் கூர்ந்து கவனித்து வந்தேன். அதை முதலில் குறுக்கிடவில்லை. அது எவ்வளவு முறை இந்த விளையாற்றலைத் திரும்பத் திரும்பச் செய்தது என்று கணக்கிட்டேன். அந்தச் சிறுமி தொடர்ந்து செய்துகொண்டு போவதைக் கவனித்த நான் அவள் உட்கார்ந்திருந்த கைந்நாற்காலியுடன் மேலே தூக்கி அப்படியே மேசைமேல் நிறுத்தினேன். அந்தச் சின்னக்குட்டி அந்த மரக்கட்டையை வெடுக்கென்று பிடித்துக்கொண்டது. தன்னுடைய கைந்நாற்காலியின் கைகளின்மேல் நிறுத்திக் கொண்டது. உருளைகளைத் தன் மடியில் ஒன்று சேர்த்துக் கொண்டு தன் வேலையை முன்போல் தொடங்கிற்று. பிறகு எல்லாக் குழந்தைகளையும் பாடச் சொன்னேன். அவர்கள் பாடினார்கள். அக்குழந்தை தன் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டே இருந்தது. அந்தச் சிறுபாடல் நின்று விட்ட பிறகும் திரும்பத் திரும்பச் செய்து கொண்டே இருந்தது. நாற்பத்து நான்குமுறைகள் அக்குழந்தை செய்ததை நான் கணக்கிட்டேன். இறுதியில் தானாக நிறுத்தினாள். இந்த நிறுத்தத்துக்கும், வெளிச் சூழ்நிலைக்கும் ஒரு சம்பந்தமுமில்லை என்பதில் ஐயமில்லை. அக் குழந்தை சுற்றிலும் தலைதூக்கிப் பார்த்தது. அப் பார்வையில் ஒரு மன நிறைவு இருந்தது. ஏதோ சோர்வு நீக்கும் உறக்கத்திலிருந்து தெளிவுடன் விழித்து எழுந்திருப்பதுபோல் காட்சியளித்தது.

இந்தச் சம்பவத்தை என்னால் என்றும் மறக்க முடியாது. புதிதாகக் கண்டுபிடித்தவருடைய உள்ளத் துடிப்பையே நானும் அந்தச் சமயத்தில் அனுபவித்தேன்.

வரவர இந்த மெய்ந்நெகிழ்ச்சி பொதுவாக எல்லாக் குழந்தைகளிடத்திலும் தோன்ற ஆரம்பித்தது. நிர்ணயிக்கக்கூடிய சிலசில வெளிப்படையான நிபந்தனைகள் இருக்கும்பொழுது, இம்மாதிரி நிகழ்ச்சிகள் கட்டாயமாக நடந்தேறின என்பதைக் குறிக்கலாம். இவ்வகையில் ஒவ்வொரு முறையும் கவன முனைப்பு (Polarisation of attention) ஏற்பட்ட போதெல்லாம் குழந்தை முழுமையாக மாறுபட்டதாகத் தெரிந்தது. முன்னிலும் அமைதியாகவும்,

இன்னும் அதிக நுண்ணறிவு பெற்றும், இன்னும் பரந்த நோக்குப் பெற்றதாகவும் தோன்றிற்று. அபூர்வ அறநெறிப் பண்புகளையும் காட்டிற்று. மதம் மாறப்படும் பொழுது அந்தரங்கத்தில் தோன்றுகின்ற உயர்ந்த நனவு நிலை (Phenomena of a higher consciousness) மெய்ந்நிகழ்ச்சியை ஒத்திருந்ததெனலாம்.

உறுகலப்பெல்லை தாண்டிய கரைசலில் (Saturated solution) படிகத்தின் ஒரு புள்ளி தோன்றுகிறது. இதைச் சுற்றிலும் இது வரை சுற்றிலும் இருந்த குழப்பமானதும் மாறிக்கொண்டும் இருக்கக்கூடிய நிலைமை மாறி, எல்லாம் ஒன்றாக இணைந்து எழில்வடிவம் பெற்ற ஒரு படிகத்தின் உருத் தோன்றுகிறது. அதேபோல் கவன முனைப்பு ஏற்பட்டபோதும் குழந்தை உள்ளத்தில் இதுவரை குழம்பி ஒழுங்கற்றுக் கிடந்தவை அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு அறநெறிப் படைப்புப்போல் (Spiritual creation) ஏற்படத் தோன்றியது. இம்மாதிரி வியப்பூட்டும் சிறப்பியல்பு ஒவ்வொரு தனிக் குழந்தையிடமும் நிகழ்வுற்றது.

இதையெல்லாம் காணும்பொழுது பல குழப்பமான சூழ் நிலைக்குள் சிக்குண்டு கிடக்கும் மனித வாழ்வைப்பற்றி (life of man) சிந்திக்கச் செய்தது. அவன் சிக்குண்டது தாழ்வான ஒரு ஒழுங் கற்ற வேலை. ஏதோ ஒரு குறிப்பிட்ட பொருள் தீவிரமாக உள்ளத்தை ஈர்க்கிறது; பதிய வைக்கிறது; அப்பொழுது தன்னையே உணரும் சக்தியைப் பெற்று விடுகிறான். தான் இனி வாழத் தொடங்கி விட்டதாக உணருகிறான்.

இது ஓர் அறநெறி நிகழ்ச்சி. இதில் முதியோனுடைய முழு மனவிழிப்பு நிலையும் பங்கு கொண்டிருக்கலாம். ஆதலால் உள் ளார்ந்த படைப்பின் (internal formation) மெய்ந்நிகழ்ச்சிகளில் ஒன்றாக இருக்கலாம். குழந்தைகளின் அந்தரங்க வாழ்வில் நேர்மையான தொடக்கமாக நிகழ்கிறது. இது ஓர் உண்மை நடைபெறுகிற செயல் என்பதை ஆராயத்தக்க முறையில் அவ்வாறு தோன்றித் தொடர்ந்து வளர்கிறது.

இம்மாதிரிக் குழந்தையின் உள்ளம் தன்னுடைய மறைவு வெளிப்பாடுகளை (revelations) உணர்த்திற்று. அவைகளின் துணைக்கொண்டு தெய்விக சுதந்திரம் அல்லது அகநிலைத் தன்னு ரிமை தோன்ற ஆரம்பித்தது.

இந்தத் தொடக்க நிகழ்ச்சியின் செய்தி உலகெங்கும் பரவிற்று. முதலில் ஓர் அருஞ்செயலின் கதைபோல் தோன்றிற்று. வெவ்வேறு இனமக்களிடம் இப் பரிசோதனைகள் செய்யப்பட்ட

பொழுது, இந்தத் தெய்விக முறையின் உட்கருத்துகள் தெளிவாக நிலையுறுத்தப் பெற்றன.

**உள இயல் சார்ந்த வளர்ச்சி புறத்தூண்டுதல்களால் ஒழுங்கு படுத்தப்படுகிறது. இத் தூண்டுதல்களைப் பரிசோதனை மூலமாக நிர்ணயிக்க முடியும்.** குழந்தைகளின் கல்விக்காக நான் ஆற்றின பங்கு பரிசோதனைகளின் மூலம் உள வளர்ச்சியில் காணப்படும் தன்னுரிமை உருவத்தைத் தெளிவாகக் குறிப்பிடுவதே ஆகும்,

உள்ளார்ந்த வளர்ச்சியைத் தானாக உருவாக்கும் சக்தி குழந்தையிடம் இல்லாவிடில் வளர்ச்சியின் தன்னுரிமை என்பதை எண்ணவும் முடியாது. தன்னுள் புதைந்து கிடக்கின்ற சக்திகளை இன்னும் சிறப்பாக வளரச் செய்யவேண்டிய பங்கு இல்லாவிடினும், அந்தரங்க வாழ்வில் ஒன்றுபட்ட ஒரு வளர்ச்சியைத் தோற்றுவிக்கத் தேவைப்படுகின்ற எல்லா வழிவகைகளையும் வெல்லக்கூடிய சக்தி குழந்தையின் உள்ளத்தில் முன்னதாகவே இருந்திராவிட்டால், அத்தகைய வளர்ச்சித் தன்னுரிமையை (liberty of development) எண்ணிப் பார்க்கமுடியாது. குழந்தை முன்னிலும் பரந்த அளவில் வளர்ச்சி பெறவேண்டுமானால் தன்னுடைய செயல்களைத் தன்னுரிமையுடன் ஆற்றத் தகுந்த ஒரு சூழ்நிலையில் விடப்படவேண்டும். அவனுடைய அந்தரங்கத் தேவைகளை ஒழுங்குபடுத்துவது சம்பந்தப்பட்ட சூழ்நிலையாக இருக்கவேண்டும். அப்பொழுது குழந்தை இயற்கையான விதிகளைப் பின்பற்றித் தானாக வளர்கிறது. தன்னுரிமையுள்ள ஒரு பூச்சி, பூவின் உருவத்திலும் பண்பிலும் தன்னுடைய உயிர் வாழ்க்கைக்கும் வெளி உருவத்துக்கும் உள்ள ஒற்றுமையைக் காண்கிறது. அதேபோல்தான் இங்கும். பூச்சி தன் உடல் தேவைக்குத் தேனைத் தேடும்பொழுது தன்னுரிமை பெற்றதாகவே இருக்கிறது. உண்மையாகப் பார்க்கப்போனால் அது செடியின் இன விருத்திக்கு உதவி புரிகிறது. இந்த இரண்டு இனங்களில் (பூவின் வடிவமும் பூச்சியின் உருவமும்) காணப்படும் ஓரினத்துக்கும் மற்றோரினத்துக்கும் இயற்கையான ஒத்துழைப்புக்கு இதைக்காட்டிலும் வேறு எந்த அற்புதக்காட்சியும் இல்லை. (பூவின் வடிவத்தை ஒட்டிப் பூச்சியின் உடலும் நாக்கும் மாறுவதோ அல்லது பூச்சியின் உருவத்தை ஒட்டிப் பூவின் உருவம் மாறி மதுவையும் மகரந்தத்தையும் விருந்தளிப்பதோ பரிணாமத்தில் தாவர உயிரியலார் கண்ட பேருண்மை).

தன்னுரிமையுடன் குழந்தை வளர்ச்சி அடையவேண்டிய இரகசியம் தன் அந்தரங்க வளர்ச்சிக்கு வேண்டியவைகளை வழிவகுத்து ஒழுங்குபடுத்தித் தருவதிலேயே இருக்கிறது. இந்த வழிவகுப்பு,

குழந்தையின் தொடக்கத்தில் தோன்றுகின்ற தூண்டுதலுக்கு வழி வகுப்பது போலாகும். தாயின் முலைப்பாலைக் குடிக்க அன்று பிறந்த குழந்தையிடம் இயற்கையானதோர் தூண்டுதல் இருக்கிறது. குழந்தையின் தேவைக்குப் பொருத்தமான வகையில் தாயின் மார்பு வடிவத்திலும் உணவூட்டும் வகையிலும் பொருத்தமாக அமைந்திருக்கிறது.

குழந்தைக்கு அந்தரங்கத்தில் பசி இருக்கிறது. இந்தப் பசியைத் திருப்தி ஆக்குகையில் குழந்தையின் ஆளுமை தானாக ஒழுங்குபட்டு உருவாகத் தொடங்கித் தன் சிறப்பியல்புகளையும் வெளியாக்குகிறது. அன்று பிறந்த குழந்தை எவ்வாறு தானாகவே பாலைப் பருகத் தன் உறுப்புகளையும், இயக்கங்களையும் ஒழுங்கு படுத்திக் கொள்கிறதோ அதேபோல் இங்கும் நடைபெறுகிறது.

குழந்தையின் அந்தரங்கமான ஆளுமையை ஒழுங்குபடுத்துவதோ, அவனுடைய சிறப்பியல்புகளை வளரச் செய்வதோ நம்முடைய கல்விப்பிரச்சினை என்று நாம் அம் முறையில் ஈடுபட இறங்கிவிடக் கூடாது. முக்கியமான பிரச்சினை என்னவென்றால் குழந்தைக்குத் தேவைப்படும் ஊட்டத்தைப் படைப்பதே ஆகும்.

இந்த வகையில் குழந்தை ஒழுங்குபடுத்திய சிக்கலான செய்வினைகளை வளரவைக்கிறான். இந்தச் செய்வினைகள் ஆரம்பத் தூண்டுதல்களுக்கு இணக்கம் காட்டுகின்றன. நுண்ணறிவை முயற்சி செய்விக்கிறது; மேலான குணங்கள் என்று நாம் கருதுவதை எல்லாம் வளரச் செய்கிறது. இக் குணங்களெல்லாம் குழந்தைக்கு அப்பாற்பட்டதென்று கருதி வந்திருக்கிறோம். பொறுமை, தொழிலில் விடாமுயற்சி, அறநெறி ஒழுங்கிலும் விடாமுயற்சி, கீழ்ப்படிதல், சாந்தம், அன்பு, மரியாதை, வீறமைதி (serenity) போன்ற பண்புகளை வெவ்வேறாக வகுப்பதே நம் பழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இப் பண்புகளைப் படிப்படியாகக் குழந்தையிடம் தோன்றவைப்பதற்கு நம் குறுக்கீடு தேவைப்படுவது நம் கடமை என்ற போலிக் கருத்தை நம்மில் கொண்டிருக்கிறோம். இப் பண்புகளை எவ்வகையிலாவது நேரடியாகக் குழந்தைகளுக்குள் திணித்துவிட வெளி முயற்சிகள் செய்ய வேண்டுமென்று பார்த்திருக்கிறோம்; நம்பியிருக்கிறோம். ஆனால் நடைமுறையில் வெற்றிகரமாக இப் பண்புகளை உருவாக்க வழி தெரியாமல் இருந்துவந்திருக்கிறோம்.

இந்த இயல்நிகழ்ச்சி தானாகக் குழந்தையிடம் நடைபெற வேண்டுமானால், குழந்தை தானாக வளரும் போக்குக்கு நாம் முழுமையான தன்னுரிமை அளிக்கவேண்டும். அதாவது அதனுடைய சாந்தமானதும் அமைதியானதுமான விரிவாதலைக்

காலத்துக்குப் பொருத்தமற்ற கலைக்கக்கூடிய சக்திகள் குறுக்கிடாதபடி பாதுகாக்கவேண்டும். அன்று பிறந்த குழந்தை எப்படித் தானாகத் தன் வளர்ச்சிக்குத் தேவைப்படும் அமுதை உண்டு, தன்னுள் ஆக்கி, நல்ல முறையில் தன்னுரிமையோடு வளர விட்டுவிடப்பட்டதோ அதே போக்கினையும் இங்கு அனுசரித்தல் வேண்டும்.

நுண்ணறிவு படைத்த தாய் என்ன செய்கிறாள்? குழந்தைக்கு ஊட்டம் அளிக்கிறாள்; ஓய்வளிக்கிறாள். அது வளர்வதைப்பற்றி மனத்தில் சிந்தித்து வருகிறாள். இயற்கையின் வெளிப்படுத்தல்களுக்கு எதிர்ப்பார்த்திருக்கிறாள். முதல் பல், முதல்சொல், இறுதியாகக் குழந்தை தானாக எழுந்து நின்று நடக்கின்ற செயலைக்காண ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணம் பொறுமையாகக் காத்திருக்கிறாள். இந்த மனப்பாங்கில் குழந்தையின் அந்தரங்க வாழ்வில் விரிவாதலும், எதிர்பாராத அற்புத வெடிப்புகளையும் எதிர்பார்த்திருப்பதா ?—என்னும் கேள்வி பிறக்கிறது.

உள்ளார்ந்த இயல் நிகழ்ச்சிகள் தோன்ற வேண்டுமானால் குறிப்பிட்ட வகையில் சூழ்வினையை நாம் ஆயத்தமாக்க வேண்டும். குழந்தைக்குத் தேவையான புறவழிவகைகளை இந்தச் சூழ்நிலையிலிருந்து நாம் அளிக்கவேண்டும்.

என்னுடைய பரிசோதனை தெளிவாக்கின உறுதியான உண்மை. இதுவரை குழந்தையின் தன்னுரிமை அல்லது சுதந்திரம் என்பது தெளிவுறு வகையில் வாதாடப்பட்டு வந்தது. தன்னுரிமைக்கும் கைதுறப்பதற்கும் (abandonment) உள்ள அளவை இன்னதென்று எவரும் தெளிவுபடுத்தவில்லை. 'தன்னுரிமைக்கும் ஓர் அளவுண்டு' என்றும், 'தன்னுரிமையைச் சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும்' என்றும் கூறப்பட்டன. ஆனால், தன்னுரிமையின் பொருள் என்ன? அத்துடன் சேர்ந்து இருக்க வேண்டிய உள்ளுணர்வுத் தொகை அல்லது கத்தை (intutive quid) என்ன? இவற்றையும் எடுத்துரைக்கும் தனிப்பட்ட முறை ஏதும் இதுவரை காணப்படவில்லை.

அத்தகைய ஒரு முறை நிலைநாட்டப் பெற்றால் எல்லாக் கல்விக்கும் ஒரு புதுவழியைத் திறந்துவிடும்.

* * *

ஆதலால் சூழ்நிலை தானே கற்பிக்கவல்ல சாதனங்களைப் பெற்றிருக்க வேண்டுமென்பது தேவைப்படுகிறது. இந்தச் சாதனங்கள் இங்கொன்று அங்கொன்றாக எடுத்துக் கொள்ளப்பட்டவை அல்ல. அவை அனைத்தும் நன்கு பரிசோதனை செய்துபெற்ற பயனடியாக வந்தனவாய் இருக்க வேண்டும். இப் பரிசோதனை

களை எல்லோராலும் செய்துவிடமுடியாது. ஏனெனில் இத்தகைய நுண்மையான வேலைக்கு விஞ்ஞான தயாரிப்பு தேவைப்படுகிறது. மேலும், எல்லாப் பரிசோதனையாலும் உண்மை காண்பதென்பது நீண்டநாள் உழைப்புடன் சரிநுட்பமானதாகவும் இருத்தல் வேண்டும். உளம் சார்ந்த வளர்ச்சிக்குத் (psychical development) தேவையுள்ள உண்மையான சாதனங்களை அமைத்துத் தருவதற்குப் பல ஆண்டுகள் பரிசோதனை நடத்தப்படவேண்டும். சில கல்வித்துறை வல்லுநர்கள் குழந்தையினுடைய தன்னுரிமையை ஆசிரியரின் நல்லெண்ணத்துக்கும் ஆயத்தத்துக்கும் விட்டு விடுகிறார்கள். அத்தகைய வல்லுநர் தன்னுரிமைப் பிரச்சினைக்குத் தீர்வுகாண வெகு தொலைவில் இருக்கிறார்கள். இயற்கையாகப் போதிக்கக் கூடிய திறமையுடையவரோ அல்லது மாபெரும் விஞ்ஞானியோ இத்தகையனவற்றை அவராலேயே கண்டுபிடித்து விடமுடியாது. தயாரிப்புடனும், இயற்கையாகப் பெற்றிருக்கும் திறமையுடனும் காலம் என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். பரிசோதனைக்கு நீண்ட ஆயத்தநேரம் தேவைப்படும். ஆதலால் தானே கற்றல் என்பதற்குத் தேவைப்படும் சாதனங்களைத் தந்திருக்கிற ஒரு விஞ்ஞானம் முன்னதாக இருந்திருக்க வேண்டும். இன்று பள்ளிக்கூடங்களில் சுய உரிமை (liberty) என்று பேசுகிறவர்கள் அதே சமயத்தில் விஞ்ஞானத் துணைக்கருவிகளைப் போன்ற சாதனங்களை எடுத்துக்காட்ட வேண்டும். அப்பொழுதுதான் அந்தச் சுதந்திரம், தன்னுரிமை எல்லாம் நடைமுறையில் அனுசரிக்க முடியும்.

இந்த விஞ்ஞானக் கருவிகள் (scientific instruments) சரிநுட்பமானவைகளாக இருத்தல் வேண்டும். இயற்பியல் வல்லுநர் (பௌதிக நூல்வல்லுநர்) உபயோகிக்கின்ற 'லென்ஸ்'கள் வெளிச்சக் கதிர்ச் சிதர்வு விதியை ஒட்டியே ஆக்கப்பட்டிருக்கின்றன. அதேபோல் போதனா முறைக் கருவிகளும் குழந்தையின் உள இயல் வெளிக்காட்டல்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட வேண்டும்.

இத்தகைய துணைக்கருவியை ஓர் ஒழுங்குபடுத்திய மனத் தேர்வுக்கு (systematised mental test) ஒப்பிடலாம். இந்தத் தேர்வுகளைக் கொடுக்கும் பொழுது உடனடியாக ஏற்படக்கூடிய உளம் சார்ந்த எதிர்வினைகளைக் (psychical reaction) கணக்கிடுவதற்கென்று வெளிப்படையான புற அளவுகள் நிலை நிறுத்தப்படவில்லை. அதற்கு நேர் விரோதமாக அது ஒரு தூண்டுதலாகும். அந்தத் தூண்டுதல் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பதும் அது ஏற்படுத்தக்கூடிய உள இயல் சார்ந்த எதிர்வினைகளைப் பொறுத்தும் அவை நிரந்தரமாக இருக்கச் செய்வதைப் பொறுத்

தும் இருக்கிறது. ஆதலால் உள இயல் சார்ந்த எதிர் வினைகளே முறைப்படுத்திய மனத்தேர்வை (mental test) நிலைபெறச் செய்வதாகும். இந்தச் சோதனைகளைத் தீர்மானித்து ஒப்புமைபார்ப்பதற்கு உதவுவது உளஇயல் சார்ந்த எதிர் வினைகளே. இந்த உள இயல் சார்ந்த எதிர் வினைகள் கவனமும் அது சம்பந்தமான திரும்பத் திரும்ப ஒன்றையே செய்யும் வினையாற்றலும் சேர்ந்து முனைப்பாகும் (polarisation of the attention, and the repetition of the actions) — ஒரு தூண்டுதல் இந்த வகையில் மறிவினை ஆளுமைக்கு (reflex personality) ஒத்திருக்கும்போது அப்பொழுது அது அளப்பதற்குப் பயனுவதில்லை. ஆனால், உயிர்த்துடிப்புள்ள ஓர் எதிர்வினையைத் தொடர்ந்து நிலைபெற வைக்கிறது. ஆதலால் அந்தரங்க ஆக்கத்துக்கு அது ஒரு தூண்டுதலாகிறது. இத்தகைய வினை ஆற்றல்களை விழிப்படையச் செய்வித்தும் நிலைபெறச் செய்வித்தும் விடும்போது இது சம்பந்தப்பட்ட உறுப்பாண்மை (organism) தூண்டுதலுக்கு அனுசரித்துத் தன்னுடைய அந்தரங்க விரிவாக்குதலைத் துவக்கி வைக்கிறது.

பரிசோதனை சார்ந்த உள இயல் பள்ளிக்கூடங்களில் புகுத்தப்பட்டிருக்கிறது. அது என்ன செய்து வந்தது? ஆளுமையை அளக்கும் ஒரு விஞ்ஞானமாக இருந்தது. ஆனால், நாம் மேலே குறிப்பிட்டது பழைய உள இயலின் சுற்றெல்லைக்குள் நுழைவதில்லை. ஆனால் ஆளுமையையே அடியோடு மாற்றி அமைக்கும் ஒரு விஞ்ஞானமாகி விடுகிறது.. ஆதலால் இது ஒரு பிறழாத மெய் ஆசிரிய இயல் எனச் சொல்லிக் கொள்ள முடியும். பழைய முறை ஆசிரிய இயல் தன்னுடைய பற்பல பொருள் விளக்கங்களிலும் (interpretations) ஏற்புத் திறமுடைய ஆளுமை (receptive personality) என்ற கருத்துடனே தொடங்கிற்று. இந்தக் கொள்கைப்படி ஆளுமை வெளியிலிருந்து ஆஞ்ஞைகளை ஏற்றுக்கொண்டு எதிர்ப்பேதும் இல்லாமல் அப்படியே உருவாகி வந்தது. ஆனால் இந்தப் புது விஞ்ஞான மாறுதல் செயல் திறமுடைய ஆளுமை என்ற கருத்துடன் தொடங்குகிறது. அது மறிவினையுடையதாகவும் கூடிச் சேரும் இயைபுடையதாகவும் (reflex & associative) இருக்கும். ஒழுங்காக்கப்பட்ட தூண்டுதல்களால் ஏற்படும் பல தொடர்ந்த எதிர் வினைகளால் தன்னைத்தானே வளர்த்துக் கொள்கிறது. எந்தத் தூண்டுதல்கள் என்பதும் பரிசோதனைகளால் தீர்மானிக்கப்பட்டவை. இந்தப் புது ஆசிரியஇயல் தற்கால விஞ்ஞானங்களுள் ஒன்றுகிறது. பழங்கால ஊகக்கோட்டையைச் சார்ந்ததன்று. மாறாத ஆசிரியஇயலைப்போல் பதின்மான முறையில் நேரான தொடர்பு கொண்டிருப்பதில்லை. ஆனால், அந்தத் துறைக்குக் கீழ்க்கண்ட வழிகளில் எடுத்துக் கூறுகிறது. அவை, பரிசோதனை, கூர்ந்து கவனித்தல், சான்று விளக்கம், புது

இயல் நிகழ்ச்சியை ஏற்றுக் கொள்ளுதல், அவைகளைப்போல் திரும்பவும் தோற்றுவித்தல், பயன் படுத்தல், ஆகிய இவற்றை எல்லாம் புது ஆசிரிய இயல் கையாளுகிறதென்றால், இது ஆராய்ச்சி சார்ந்த விஞ்ஞானங்கள் கூட்டத்துக்குரியதாகிறது.

வெளித் தூண்டுதல் இதுதான் என்று அளவிலும் பண்பிலும் தீர்மானிக்கலாம்—இதைக்காட்டிலும் வேறு எந்தப் பரிசோதனையும் அவ்வளவு அக்கறை ஊட்டுவதாக இருக்க முடியாது. அவைகளின் துணைக் கருவிகளைக் கொண்டு, வெளித் தூண்டுதலின் அளவையும், பண்பையும் நிறைந்த சரிநுட்பத்தில் தீர்மானிக்க முடியும். எடுத்துகாட்டாகப் பல வித ஜியோமித்ரி சார்ந்த வடிவமுள்ள மிகச் சிறிய பொருள்கள் இங்குமங்கும் அலையும் மூன்றாண்டுக் குழந்தையின் கவனத்தை ஈர்க்கும். படிப்படியாக இப் பண்டங்களின் உருவ அளவை (நீள, அகல, உயரம்) அதிகப் படுத்திக் கொண்டே போனால் இந்த உருவ அளவின் ஒரு வரம்பை எட்டி விடுகிறோம். அந்த நிலையில் இப் பொருள்கள் கவனத்தை ஒரு நிலைப்படுத்தும். அப்பொழுது அப் பொருள்கள் ஒரு வினை ஆற்றலைத் தூண்டிவிடுகின்றன. இது நிரந்தரமாகி விடுகிறது. இதனால் தோன்றும் வினை ஆற்றல் வளர்ச்சிக்கு ஓர் ஆக்கக் கூறு கிறது (factor). இந்தப் பரிசோதனை பல குழந்தைகளிடம் நடத்தி வைக்கப்பட்டன. அவ்வாறு செய்து ஒரு வரிசைப் பொருள் களின் உருவ அளவுகள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன.

வண்ணங்களிடத்திலும், ஒவ்வொரு பண்பினிடத்திலும் இதே முறை அனுசரிக்கப்பட்டது. கவனத்தை ஓரளவுக்கு ஒன்றின் மேல் இருத்தி வைக்கும் நிலைக்கு ஒரு பண்பு இருக்க வேண்டுமானால் அந்தத் தூண்டுதலின் விரிவும், செறிவும் ஓரளவுக்குத் தேவைப் படுகிறது. இதைக் குழந்தை எவ்வாறு தன்னுடைய உள எதிர் வினைகளால் காட்டுகிறதென்பதைக் கொண்டு தீர்மானித்து விடலாம். உதாரணமாக வண்ணப்பலகைகளில் காணப்படும் வண்ணங்களாகிய தூண்டுதல் எந்த அளவு குறைந்த பட்சம் இருந் தாலொழியக் குழந்தையின் கவனம் அதில் ஈர்க்கப்பட மாட்டாது என்று கணக்கிட வேண்டியிருக்கிறது. இவ்வாறே பிறவும். ஆதலால் பண்பு என்பது உளம் சார்ந்த பரிசோதனையைக் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது. குழந்தைகளிடத்தில் இப் பண்பு எவ்வகை வினையாற்றலைத் தூண்டிவிடுகிறது என்று ஆய்கிறது. குழந்தையும் அதே பொருளை வைத்துக் கொண்டு வெகு நேரம் தொடர்ந்து வினையாற்றிக் கொண்டிருக்கும். தானே தன்னைப் படைத்துக் கொள்ளுதலாகிய அந்தரங்க வளர்ச்சி என்ற இயல் நிகழ்ச்சியை இன்னும் விரிவுபடுத்துவதாகும்.

பொருள்களில் காணப்படும் சிறப்பியல்புகளில் ஒன்றைக் குறிப்பிட வேண்டும். அது நுண்ணறிவின் மிக உயர்ந்த வினையாற்றலை எதிர்பார்க்கச் செய்கிறது. அதுதான் தவறுத்தடுப்பு அல்லது பிழைக்கட்டுப்பாடு—தவறுத்தடை (control of error).

செயற்பாங்கு (process) தற்கல்வியாக (self-education) இருக்க வேண்டின், இந்தத் தூண்டுதல் ஒரு வினை ஆற்றலைத் தூண்டி விட்டால் மட்டும் போதாது. அது இவ்வாறு நடைபெற வேண்டுமென்று வழிகாட்ட வேண்டும். குழந்தை ஒரு பயிற்சியை நெடு நேரம் செய்து கொண்டிருப்பது மட்டும் போதாது. அவன் பிழையின்றியும் செய்ய வேண்டும். அப் பொருளின் எல்லாப் புறப்பண்புகளும் அகப்பண்புகளும் தீர்மானிக்கப் படவேண்டும். குழந்தையிடத்தில் உடனடியாகத் தோற்றுவிக்கும் கவனம் சார்ந்த எதிர்வினைகளை மட்டுமல்ல. அடிப்படைச் சிறப்பியலாகிய தவறுத்தடை இருக்கிறதா என்றும் கவனிக்கப்படவேண்டும். மிக உயர்ந்த வினை ஆற்றல்களாகிய ஒப்புமை காண்டல், இது சரி என்று தீர்மானித்தல் (comparison, judgement) என்ற இரண்டுடன் செயல்படும் அளவுக்கு இயங்கும் சக்தியையும் அத் தவறுத்தடை பெற்றிருக்க வேண்டும். மூவாண்டுக் குழந்தையின் கவனத்தை ஈர்க்கின்ற சாதனங்களில் முதன்மையானது கட்டையும் உருளைகளும் ஆகும். பத்து உருளைகள் வரிசையாக வெவ்வேறு அளவில் அதனதன் வடிவத்துக்குத் தக்க துளைகளில் சரிநுட்பமாகப் பொருத்தப்பட்டிருக்கின்றன; இந்தத் துணைக் கருவியில் மாறாத உயர்ந்த தவறுத்தடை இருக்கிறது. ஏனென்றால் இந்த உருளைகளைப் பொருத்துவதில் ஒரு தனித்தவறு ஏற்பட்டு விட்டாலும் ஒரு தனி உருளை பயிற்சியின் இறுதியில் தக்க துளையில்லாமல் தனியே நின்றுவிடும். ஆதலால் ஒரு பிழை ஏற்பட்டு விட்டால் அது ஒரு தடை. அந்தத் தடையைத் திருத்தியே சரிப்படுத்த வேண்டும். ஏனென்றால் இந்தப் பிழையை நீக்காவிட்டால் இந்தப் பயிற்சியைச் செய்து முடிக்க முடியாது. இத்துடன் இந்தத் திருத்தமும் மிக எளியது. குழந்தை தானாகவே அதைத் திருத்திக் கொள்ள முடியும். ஏதோ பெட்டிக்குள்ளிருந்து பொம்மை தலை நீட்டுவதுபோல்[1] இந்தத் தவறு குழந்தையின் முன் தோன்றுகிறது. அவனுடைய அக்கறையைத் தூண்டிவிடுகிறது.

இப்பொழுது தோன்றின பிரச்சினையே அக்கறையைத் தூண்டி விடுவதாகக் கொள்ளலாகாது. இந்தப் பிழையேதான் குழந்தையைத் திரும்பத் திரும்ப ஒன்றையே செய்யவைத்துக் குழந்தையின் முன்னேற்றத்துக்கு வழிசெய்கிறதென்றும் எண்ணிவிடக்

[1] 'Jack-in-the-box.'

கூடாது. குழந்தையின் அக்கறையைத் தூண்டுவது என்ன? அந்த உருளைகளை அதனதன் இடத்தில் பொருத்துவது மட்டுமல்ல, புதிதாக ஏற்படும் புலன்காட்சி சக்தி (power of perception). இச்சக்தியால் உருளைகளில் காணப்படும் வடிவ அளவுகளின் வேறுபாடுகளை இப்பொழுது உணருகிறான். இதுவரை இவ் வேறுபாடுகள் அவன் உணர்வுக்கு எட்டாது கிடந்திருந்தன. பிரச்சினையானது தவறுடன் மட்டும் தொடர்பு கொண்டிருந்தது. சாதாரண வளர்ச்சிப் போக்கில் அது பங்குகொள்ளத் தொடரவில்லை. வெறும் ஆர்வமுள்ள இயல்பால் (curiosity) தூண்டிவிடப்பட்ட அக்கறை ஆக்குவிக்க அல்லது படைப்புக்குதவும் அக்கறை ஆகாது. படைப்புக்குரிய அக்கறை குழந்தையின் தேவையின் அடியாக மேற்கிளம்புகிறது. ஆதலால் தெய்விக ஆளுமையைப் படைப்பதில் பங்கெடுத்துக் கொண்டு வழி காட்டுகிறது. பிரச்சினை ஒன்றே குழந்தையின் ஆத்மாவினைத் தானே கண்டு பிடிக்க வழிகாட்ட வேண்டுமென்றால், ஒழுங்கென்பது சிதறிப் போய்விடும். மற்றப் புறக்காரணங்கள் வாழ்க்கையைப் போலி வழிகளில் திருப்பி விடுவதுபோல், மேற்கூறிய வெறும் பிரச்சினைத் தூண்டுதலும் ஒழுங்கைக் கலைத்துவிடும். இதுபற்றி நான் மிகைபட வலியுறுத்துவதாகத் தோன்றலாம். ஆம், என்னிடத்தில் கூறப்பட்ட முக்கிய மறுப்புகளுக்கும் குறிப்புகளுக்கும் விடை பகரும் வகையிலே இவ்வாறு கூறுகிறேன்.

வடிவ அளவுகளைக் கண்ணால் கண்டு பிடிக்கத் தக்க பொருள்கள் அடுத்தபடியாக இருக்கின்றன. இவைகளில் காணப்படும் தவறுத்தடை வெறும் வெளித் தோற்றம் மட்டுமன்று; உளம் சார்ந்தது. இதுவரை குழந்தையின் கண்கள் வடிவங்களின் வேறுபாடுகளைக் கண்டறியும் சக்தியைப் பெற்றிருக்கிறது. அது தவறு இன்னதென்று கண்டுபிடித்துவிடும். ஆனால் அவ்வாறு கண்டு பிடிப்பதற்கு அப் பொருள்கள் குறிப்பிட்ட வடிவத்திலும், குறிப்பிட்ட கவர்ச்சிகரமான வண்ணத்திலும் இருக்கவேண்டும். இக் காரணம் பற்றியே அடுத்தபடியான பண்ட வரிசைகளில் தவறுத் தடை அவைகளின் வடிவிலும், வண்ணத்தின் செறிவிலும் காணப் படுகின்றன. கணக்குச் சட்டத்தில் வேறுவகையான தவறுத் தடுப்பு இருக்கிறது. முன் கூறியதைவிட உயர்ந்த வகையில் தவறுத்தடை அமைந்திருக்கிறது. இந்தத் தவறுத்தடையில் குழந்தை தன்னுடைய வேலையை மாதிரியுடன் ஒப்புமை செய்து பார்க்கிறது. இவ்வாறு செய்யும்பொழுது குழந்தையிடத்தில் மிகவும் சிறந்த முறையில் மன உறுதியை நுண்ணறிவு முயற்சியால் நிலைபெறச் செய்கிறது. அதிலிருந்து தெளி உணர்வுடன் தானாகக் கற்றுக் கொள்ளும் நிலையில் அவனை நிறுத்தி வைக்கிறது. இந்தத்

தவறுத்தடை எவ்வளவு சிறியதாயிருந்த போதிலும், இது மேலும் மேலும் புற இயந்திர நுணுக்கத்திலிருந்து (mechanism) விலகிப் போன போதிலும், அகவினை ஆற்றலின்மேல் நம்பிக்கை வைக்க வேண்டியிருக்கிறது. இவ் வினையாற்றல்கள் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து கொண்டே இருக்கின்றன. பொருளின் எல்லாப் பண்புகளைப் போல் குழந்தையின் அடிப்படை எதிர்வினையைப் பொறுத்திருக்கிறது. குழந்தையும் நீண்ட நேரம் அதன்மேல் கவனம் செலுத்துவதுடன் அப் பயிற்சிகளைத் திரும்பத் திரும்பச் செய்கிறான்.

ஒரு பொருளின் அளவை இதுதான் என்று நிர்ணயிப்பதற்குப் பரிசோதனைக் கட்டளை விதி (experimental criterion) வேறுபட்டிருக்கிறது. இந்தக் கருவிகள் மிகவும் சரிநுட்பமான முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை தானாகப் பயிற்சி செய்யத் தூண்டுகின்றன. அவை அக வளர்ச்சியுடன் ஒத்துழைத்து ஒன்றியிருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு புதுமை உள இயல் படம், மிகவும் சிக்கல் வாய்ந்த பிரச்சினையில் உயர்ந்த மட்டத்தில் ஒரு தனி இனமாகக் காட்சியளிக்கிறது.

குழந்தை அக் கருவியிலிருந்து தானாக விலகி விடுகிறது. சோர்வின் காரணமாக விலகுவதில்லை. புதுச்சக்திகளால் தூண்டப்பட்டது போல் விலகுகிறது. அவனுடைய மனமும் அருவத்தைக் குறித்துக் கொள்ளத் திறம் பெற்றிருக்கிறது. குழந்தையின் இந்த வளர்ச்சிப் பருவத்தில் தன் கவனத்தைப் புற உலகத்தின் மேல் திருப்புகிறது. ஓர் ஒழுங்கோடு கவனிக்கிறது. இந்த ஒழுங்கு இதற்கு முற்பட்ட பருவத்தில் தன் மனத்தில் பதிந்த ஒழுங்காகும். அவன் தானாகவே சாக்கிரதையானதும் தர்க்க ரீதியானதுமான ஒப்புமை வரிசையை அனுசரித்து வருகிறான். அது மெய்ப்படியானது (veritable) ; அறிவைத் தானாகப் பெறுவது மாகும். இனிமேல் இந்தக் காலப் பிரிவினைதான் புதிய கண்டு பிடிக்கும் காலம் அல்லது பருவம் என்று அழைக்கப்படும். இந்தக் கண்டுபிடிப்புகள் குழந்தையிடம் ஊக்கமும், உவகையும் தூண்டி விடச் செய்கின்றன.

இந்த இன்னும் உயர்த்தப்பட்ட வளர்ச்சி இதனுடைய ஏற்றக் கட்டத்தின் இறுதியில் மிகவும் பயன் அளிக்கிறது. குழந்தையின் மிக நுண்மையான அருவ இயல் நிகழ்ச்சி (delicate phenomenon of abstraction) தொடங்கும் பொழுது குழந்தையினுடைய கவனம் புலனால் அறியப்படும் புறப்பொருளின்மேல் திருப்பப்படாமல் இருக்கவேண்டும் என்பது மிகவும் அவசியமானது. எடுத்துக்

காட்டாக அத் தருணத்தில் ஓர் ஆசிரியர் குழந்தையை அப் புறப் பொருளை வைத்துக் கொண்டு தொடர்ந்து செயலாற்றும்படி தூண்டினாரானால், அவன் தானாக வளருகின்ற வளர்ச்சியைப் பின் வாங்கச் செய்வதுடன் குறுக்கிடவும் செய்கிறார் எனலாம். குழந்தையின் ஊக்கம் தன்னை மிக உயர்ந்த நிலை அடைந்து பல நுண்ணறிவுணர்ச்சிகளையும் அனுபவிக்க வாய்ப்பளிக்கும் சமயத்தில், அவையெல்லாம் அணைந்து போவதுடன் ஒரு முன்னேற்றப் பாதையும் அடைபட்டுப் போகிறது. இதேபோல அதிகப்படியான கல்வியூட்டும் புறப்பொருள்கள் இருந்தாலும் பெரிய தவறு விளைவித்ததாகிவிடும். இது கவனத்தைச் சிதற வைக்கும். புறப்பொருளுடன் செய்கின்ற வினையாற்றல் வெறும் இயக்கமாகிவிடும். குழந்தையின் உள இயல் சார்ந்த முன்னேற்றத் தருணத்தை உணர்ந்து அதைப் பற்றாமல் இருந்துவிட முடியும். மேலும் அத்தகைய புறப் பொருள்கள் வீணானவை; பயனற்றவை. இந்தப் பயனின்மையால் குழந்தை தன் ஆன்மாவையே இழக்க நேரிடலாம்.

இதுதான் தேவையென்று சரி அளவில் தீர்மானிப்பது எங்ஙனம்? குழந்தையின் உள்ளம் தன்னைத்தானே வளரச் செய்து கொண்டிருக்கிறது. மேலும் மேலும் உயர்ந்த நிலையை அடைய முன்னேறிக் கொண்டிருக்கிறது. அந்த முன்னேற்றத்திற்கு எவ்வளவு தேவையோ அந்த அளவே இருத்தல் வேண்டும். இன்றியமையாததும் போதுமானதுமாக இருத்தல் வேண்டும். இவ்வளவு (quantity) தான் என்பதை நிர்ணயிக்கும் பொழுது குழந்தையின் முகபாவத்திலும் அதே சமயத்தில் குழந்தையின் சுறுசுறுப்பான வெளிப்படுத்தல்களாலும் (manifestations) நாம் வழிகாட்டப்படவேண்டும். ஒரு விமானம் தரைமேல் சிறிது பிரயாணத்தை முடித்துக் கொண்டு தானாகவே விண்ணிலே கிளம்பி விடுகிறது. அதேபோல் குழந்தைகளும், நிர்ணயிக்கப் பட்ட இந்தப் புறப் பொருள்களை வைத்துக்கொண்டு பலநாள்கள் வினையாற்றி வந்திருக்கின்றன; உட்கவரப்பட்ட கவனத்தின் வெளித்தோற்றத்தைக் காட்டிவந்திருக்கின்றன. இந்த நிலையிலிருந்து திடீரென்று மெதுவாகத் தானறியாமலே உயரக் கிளம்புவார்கள். அப்பொழுது புறப்பொருள்கள் மேல் அவர்களுக்குக் கவலை இல்லாததுபோல் காட்சியளிப்பார்கள். இதை அவர்களுடைய நிறைந்த ஒளிபடர் முகம் காட்டும். அந்த முகக் குறிப்பிலே களிபேருவகை தாண்டவமாடும். குழந்தை ஏதும் செய்யாமல் சும்மா இருப்பதுபோல் காணும். ஆனால் அந்த நிலை ஒரு சிறிதளவே ஆகும். சீக்கிரத்தில் அவன் பேசுவான்; தன் உள்ளத்தில் இன்னது நடைபெறுகிறதென்பதை வெளிப்படுத்துவான். அவனுடைய பொங்கி எழும் வினையாற்றல் பல

ஆராய்ச்சிகளையும் புதுமை காண்டலையும் தொடர்ந்து நடத்த முன்னேறிச் செல்வான். அவன் காப்பாற்றப்படுகிறான்.

இப்பொழுது அளவு கடந்த புறப் பொருள்களைத் தம் சூழ் நிலையில் பெற்றிருக்கும் மற்றக் குழந்தைகளின் பாங்கினைச் சற்று ஆராய்வோம். அவர்களிடமும் இந்த அடிப்படையான தொடக்க இயல் நிகழ்ச்சிகள் இருக்கத்தான் செய்கின்றன. முதிர் பருவம் ஆகும் தருணத்தில் அவர்கள் ஏதோ இவ்வுலகத்தில் பிணைக்கப் படுகின்ற பணிகளில் பிடிபட்டவர்கள்போல் உணரக்கூடிய அளவுக்கு விடுவிக்க முடியாத சிக்கலில் மாட்டிக் கொண்ட வர்கள் போலிருக்கின்றனர். புதுப் புறப்பொருள்களின்மேல் கவர்ச்சியுடைய கவனக்குறைவு, ஒரு நிலையில்லாமை, ஆதலால் சோர்வு ஆகியவை தன் உள்ளார்ந்த செயலாற்றலின் தொடர்ச்சி யானவை புறத்திலும் நடைபெறுகின்றன. குழந்தையின் ஒழுக லாறு (bearing) வரவரத் தாழ்வுநிலை பெறுகிறது; உயர்ந்த குரலில் பொருளற்ற சிரிப்பில் ஈடுபடுகிறான்; முரட்டுத்தனமான செயலாற்றல்களைச் செய்கிறான்; சோம்பேறியாகி விடுகிறான். வேறு பொருள் வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்கிறான். இன்னும் பொருள்கள் வேண்டுமென்கிறான். ஏனென்றால், அவன் வீண் இடம்பமாகிய சிறையில் அடைபட்டுக் கிடக்கிறான். தன் னுடைய சோர்விலிருந்து விடுவித்துக் கொள்ள வேண்டுமென்ற ஓர் ஆசையைத் தவிர வேறு எதனிடமும் உணர்ச்சியற்றவனாகவே காண்கிறான். முதியோன் ஒரு குழப்பமான வாழ்வில் இத்தகைய தவறுகளைச் செய்வதுபோல் இவனும் ஒழுங்கிழந்து, ஆற்றலற்று அழிவுறும் இடரில் சிக்குண்டு கிடக்கிறான். அவனிடம் உள்ள பயனற்ற பொருள்களைப் பிடுங்கிக்கொண்டு, அவனைக் காப்பாற்றி, அவனுடைய பேரின்ப உலகத்தை அவனுக்கு எவரும் காட்டா விடில், அவனிடம் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தகுந்த சக்தி பெறாதவனாகவே இருப்பான்.

மிகையான பொருள்கள் தளர்வூட்டுகின்றன; வலு இழக்கச் செய்கின்றன; முன்னேற்றத்தைத் தடைசெய்கின்றன. இந்த உண்மையை என்னுடன் தோழமை கொண்டவர்கள் திரும்பத் திரும்ப மெய்ப்பித்திருக்கின்றனர்.

இதற்குப்பதிலாகப் புறப்பொருள் வேண்டிய அளவுக்குக் கம்மியாக இருந்தும் பிரதம தானியங்கு பயிற்சிகளும், தன்னை ஓங்கச் செய்கின்ற முதிர்ச்சி அளவுக்குச் சக்தி பெறுதிருந்தால் அருவ இயல் நிகழ்ச்சி (phenomenon of abstraction) யின் வெடி (explosion) தோன்றுது. இந்த அருவ இயல் நிகழ்ச்சியானது கணிப்பு வரம்பு கடந்த வளர்ச்சியில் (infinite progression) முன்

னேறுகின்ற தற்கல்வி (auto-education)யின் இரண்டாம் படியாகும். ஒரு செயலைத் திரும்பத் திரும்பச் செய்விக்கின்ற நீண்ட மனம் கவனத்தின் அடிப்படை இயல் நிகழ்ச்சி குழந்தையின் வயதுக்குத் தக்க தூண்டுதல் இதென்று தீர்மானிக்க நமக்கு உதவி புரிகிறது. மூன்றாண்டுக் குழந்தையை ஒரு செயலை நாற்பது முறை திரும்பத் திரும்பச் செய்விக்கத் தூண்டுகின்ற அதே சக்தி ஆறாண்டுக் குழந்தையைப் பத்து முறைதான் செய்விக்க உந்தலாம். மூன்றாண் டுக் குழந்தையின் அக்கறையைத் தூண்டிவிடும் ஒரு பொருள் ஆறாண்டுக் குழந்தையிடம் எவ்வித அக்கறையையும் காண்பதில்லை. எனினும் ஆறாண்டுக் குழந்தையின் செயலாற்றலுக்கு ஒத்ததான தூண்டுதலாக இருப்பின், அவன் மூன்றாண்டுக்குக் குழந்தையை விட இன்னும் நீண்டநேரம் தன் கவனத்தை ஒன்றின்மேல் செலுத்த முடியும். மூன்றாண்டுக் குழந்தை ஒன்றைத் திரும்பத் திரும்பச் செய்கின்ற உச்சவரம்பு நாற்பதாக இருந்தால் ஆறாண் டுக் குழந்தை தன் அக்கறைக்கு உகந்ததாய் இருந்தால் இருநூறு முறை கூடத் திரும்பத் திரும்பச் செய்யவல்லவனாக இருக்கிறான். தொடர்ந்து ஒன்றின்மேல் வினை ஆற்றும் நேரம் மூன்றாண்டுக் குழந்தையிடம் அரைமணி ஆனால், ஆறாண்டுக் குழந்தையிடம் இரண்டு மணிக்கு அதிகமாகவும் ஆகலாம்.

குழந்தைகளின் வயதை மனத்தில் கொள்ளாமல் எழுத வைப்பது போன்ற பிறவினை ஆற்றல்களை நடைமுறையில் கொண்டு வரவேண்டுமென்ற நோக்கத்தில் சரிநுட்பமான ஒழுங்குள்ள தேர்வுகளை நிலைநாட்ட வேண்டி முயற்சி செய்வதில் சிறிதும் பயனில்லை. என்னுடைய முறையில் எழுதக் கற்பிப்ப தென்பது எழுதுவதற்குத் தேவைப்படும் உடல் இயக்கங்களை அடிப்படையாகச் கொண்ட முயற்சிகளாகும். அவை எழுது கோலைப் பிடித்து இயங்கச் செய்வது, நெடுங்கணக்கின் எழுத்து களைத் தொட்டுவிளம்புதலாகும். குழந்தைகள் ஜியோமித்ரி ஓவியத் தகடுகளை வைத்து வடிவங்களை வரைந்து, அவ்வுருவத்துக்குள் எண்ணற்ற சமதூரச் செங்குத்துக் கோடுகளை வரைவது ஒன்று. உப்புத்தாள் எழுத்துகளைத் தொட்டுத் தொட்டு விளம்பும் செயல் மற்றொன்று. இந்த இரண்டும் தசை இயக்கத்தை அவ்வளவு சரிநுட்பமாக நடத்திவைக்கிறது. இதனுடைய இறுதி விளை வென்ன? இதுவரை எழுதாதிருந்தவர்கள் திடீரென ஓயாமல் எழுதுகின்றார்கள் (explosion into writing). எல்லாக் குழந்தை களின் எழுத்துகளும் வடிவில் ஒரே மாதிரி இருக்கின்றன. ஏதோ எல்லோரும் ஒரே வடிவத்துக்கு ஆக்கப்பட்டவர்கள் போல் தோன்றிற்று. ஒரே வகையான எழுத்துகளைத் தொட்டுத் தொட்டுப் பார்ப்பதில் தேவைப்படுகின்ற இயக்கத்தைக் கையாண்

டிருக்கின்றனர். ஆதலால் எல்லோரும் அதே வடிவத்தில் உள்ளது உள்ளபடியே எழுதுகின்றார்கள். இதை நிலைநாட்ட, உண்மையான இயக்க இயல் நிலைபெற வேண்டும். இந்தப் பயிற்சியைத் திரும்பத் திரும்பச் செய்யவேண்டும் என்பது மிகவும் முக்கியமானது. உருவங்களில் சமதூரச் செங்குத்துக் கோடுகளால் நிரப்புகின்றவர்களும், இதைவிட எழுத்துகளைத் தொட்டுத் தடவித்தடவிப் பார்க்கின்றவர்களும் அனேகமாக நான்கு அல்லது ஐந்தாண்டுக்கு உட்பட்டவர்களாகவே இருக்கின்றார்கள். இதே பொருளை ஆறாண்டுக் குழந்தைக்குக் கொடுத்தோமானால், அவன் அதை அவ்வளவு தரம் தொட்டு விளம்ப மாட்டான். அவன் நன்றாகவும் எழுதத் தெரிந்து கொள்ளவும் மாட்டான். ஆனால், இவனிலும் சின்னக் குழந்தை அவனுக்குத் தக்க பருவத்தில் தொடங்கியிருத்தலால் அச்சுப்போல் எழுதுகிறான். இதேபோல் தான் இந்த முறையின் எல்லா நுட்பமான காரியங்களுக்கும். இதுவரை காணாத சரிநுட்பமான முறையில் ஒவ்வொரு குழந்தையின் வயதுக்குத் தகுந்த பாங்கு (mental attitude) இன்னதென்று கணக்கிடமுடியும் என்று நான் நம்புகிறேன். ஆதலால் வயதுக்குப் பொருத்தமான வளர்ச்சி சார்ந்த புறப்பொருளைக் (material for development) கொடுத்தோமானால் வயதுக்கு ஒத்த சராசரி நுண்ணறிவு வளர்ச்சி மட்டம் (level of intellectual development) என்ன என்று தீர்மானிக்க முடியும்.

[ஒரு பூச்சியின் அந்தரங்கத்தில் உண்டி (தேன், பூப்பொடி) தேவைப்படுகிறது. புறத்திலே பூ மதுவையும் பூப்பொடியையும் காட்டித் தூண்டுகிறது. அகத் தேவைக்கும், புறத்தூண்டுதலுக்கும் ஒரு சம்பந்தம் இருக்கிறது. பூ தன் உருவத்தை இணைந்து கொடுக்கிறது பூச்சிக்கு; பூச்சியும் தன் உடலைத் தக்க முறையில் பல பரம்பரை முயற்சியால் பூவிற்குத் தகுந்தாற்போல் மாற்றி அமைத்துக் கொள்கிறது (மொழிபெயர்ப்பாளர்.)] அதேபோல் இங்கும் அகத்தேவைக்கும் புறத்தூண்டுதலுக்கும் இடையே உள்ள ஒற்றுமையை நிலைநாட்ட வளர்ச்சிப் புறப் பொருள்கள் இப்படித்தான் இருக்கவேண்டுமென்று நிலைநாட்ட இங்கு ஒரு சுட்டிக்காட்டு இருக்கிறதென்று தெரிகிறது.

இந்தப் புறப்பொருள்கள் எல்லாம் தன்னிடம் இருப்பவர்க்குக் குழந்தையின் அகவாழ்வு வளர்ச்சியை உருவாக்க வேண்டுமென்ற பணி மிகவும் எளிதாகிவிடும். தன்னிடம் இந்தப் பொருள்களை வைத்துக் கொண்டிருந்தால் கல்விக் கூடத்தில் தன்னுரிமை (liberty in the school) என்ற குறிக்கோளை ஆசிரியர் ஒவ்வொருவரும் உணரலாம்.

இந்த நீண்ட மறைவான பரிசோதனை (occult experiment) நான் முன் கூறியதுபோல் இட்டார்டு (Itard), சிகான் (seguin) ஆகிய இருவரும் எனக்குக் காட்டிய வழியாகும். இந்தப் பரி சோதனைப்பலன்தான் கல்விக்கு என் தொடக்கப் பங்கு.

இத்துணை தொடக்க வேலைகளெல்லாம் இன்று எல்லோரும் நன்கு அறிந்த இம் முறையை நிர்ணயிக்க உதவி செய்தன. அத்துடன் இவை நீடித்து நிலைபெறுவதற்கும் திறவுகோல் போன்றவை யாகவும் இருக்கின்றன.

**வளர்ச்சிக்கான புறப்பொருள் தொடங்கச் செய்வதற்கே தேவைப் படுகிறது.**—குழந்தையின் ஆத்ம வளர்ச்சியிலும், முன்னேற்றத் திலும் உதவிபுரிய புறப்பொருள்கள் தேவைப்படுகின்றன. இந்த வளர்ச்சிக்குரிய புறப்பொருள்களை ஒழுங்குபடுத்துவதில் அக வாழ்வு வளர்ச்சியின் புறப்பதிவு ஒன்று இருக்கிறது. அடிச்சுவட்டில் முழு உடலின் பதிவு இருக்காதல்லவா? அதேபோல் இந்தப் புறப்பொருள் பகுதியில் ஆன்மா முழுமையும் அடங்கியிருக்க முடியாது. விமான நிலைய வீதி விமானத்துக்குரிய இயக்கத்துக்குத் தேவைப்படும் முழு இடம் அன்று. ஆனால் அது பறக்க உதவி புரியும் திண்ணிலம் (terra firma). மேலும் அது இளைப்பாறும் இடம், பாதுகாப்பிடம், கொட்டகை. எல்லா விமானங்களும் இங்குதான் திரும்பி வர வேண்டும். அதேபோல் உள இயல் சார்ந்த பகுதியிலும் உள்ளம் எழுந்து உயர்வதற்குத் தேவையான புறப்பகுதியும் இருக்கிறது. அந்தப் புறப்பகுதியில் பாதுகாப் பிடம்—புகலிடம் பெறவேண்டும். தன்னைத் தாங்கும் சக்தி வாய்ந்த இடமாகவும் இருத்தல் வேண்டும். இது இல்லாமல் தன்னுரிமையுடன் வளர்ந்து ஓங்க முடியாது.

அது உண்மையான ஆதாரமாக இருக்க வேண்டுமானால், அது தன்னுடைய உருவங்களைப் பிறப்பிக்கச் செய்ய வேண்டும். அந்தப் புறப்பொருள் துணையின் விசேஷ தொழில்களுக்குப் பொருத்தமான வகையில் அவற்றினில் அடங்கியிருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக உள இயல் சார்ந்த வாழ்வின் முதல் பகுதி யில் புறப்பொருள்கள் புலன் பயிற்சிகளின் ஆரம்பத்திற்கு ஒத்திருக்கின்றன. இயற்கையால் அளிக்கப்பட்ட புலன் வளர்ச் சித் தேவைகளுக்கு ஒத்த வகையில் அதனுடைய பண்பும் அளவும் தீர்மானிக்கப்படுகின்றன. அது சம்பந்தப்பட்ட பயிற்சிகளை அப்பொருள் கொண்டு செய்ய உதவுகின்றன. முன்னிலும் உயர்ந்த உள இயல் தன்மை பெற்ற கவனித்தலும், அருவமாக்கு தலுமான முதிர்ச்சி அடைய உதவுகிறது. பேரானந்தத்துடன்

பரந்த அறிவையும் தொடர்ந்து குழந்தை உள்ளம் பெறுகிறது. இத்துணை வளர்ச்சியின் பதிவு அந்தப் புறப் பொருளினிடம் காணப்படுவதுமில்லை. ஆனால் ஆன்மா இன்னும் உயர்ந்த பயிற்சிகளைச் செய்ய ஆவல் கொள்வதைப் பார்க்கிறோம். இங்கு மறுபடியும் அதே தொடர்ச்சிக்காக இயல் நிகழ்ச்சிகளைக் காண்கிறோம். இது இனிமேல் நெடுங்கணக்கு, கணிதம் போன்றவைகள் சார்ந்த புறப்பொருள்களின் மேல் வினை ஆற்றும். இன்னும் சிக்கல் வாய்ந்த வடிவில் ஒழுங்கு முறையில் நுண்ணறிவுப் பயிற்சிகளைப் பயிலும். கேள்விப் படிமங்களைப் பார்வைப்படிமங்களுடனும், பேச்சு சம்பந்தமான இயங்கு படிமங்களை எழுதப்பட்ட வார்த்தைகளுடனும் இணைக்கும். அளவைகள், விகிதங்கள், எண் முதலியவற்றின் உறுதியான ஆய்விலும் இறங்க வைக்கும். பொறுமை, விடா முயற்சிகளின் அதே இணைந்து இயலும் (concomitant) இயல் நிகழ்ச்சிகளும் தாமே உருக்காட்டுகின்றன. இத்துடன் ஊக்கமுடைமை (vivacity) செயல் அல்லது சுறுசுறுப்பாயிருத்தல் (activity) மகிழ்ச்சி ஆகியவற்றின் அயல் நிகழ்ச்சிகளும் தோன்றும். உள்ளத்தின் சிறப்பியல்பைக் காட்டும். இவை தோன்றுவது உள்ளார்ந்த சக்திகள். அவைகளின் இசைக் கருவியின் ஆணிப் பட்டடைகளைக் (keyboard) கண்டபோது உடற்பயிற்சி அரங்கில் அமைதியாகவும் சுய உரிமையுடனும் பயிற்சி செய்வதுபோல் இதுவும் பயிற்சி செய்யும்.

ஓர் ஒழுங்கின் துணைக்கொண்டு உள்ளார்ந்த சக்தி ஒழுங்கு படுத்தப்படுகிறது. இந்த ஒழுங்கு இயற்கையான ஒழுங்கை ஒக்கும். நன்றாகக் காக்கப்படுகிறது. தீவிரமாக வளர்கிறது. நம் குழந்தைகளின் சிறப்பான இயல்பெனக் கருதப்படும் அமைதி ஒழுங்கையும், தன்னடக்கத்தையும், சமநிலையையும் தோற்றுவிக்கிறது.

எனவே புறப்பொருள் குழந்தையின் உள இயல் தேவைக்குத் தானே முன்னிறுத்தப்படவேண்டும். படிக்கட்டுப்போல் அந்தக் குழந்தை தானாகப் படிப்படியாக ஏற உதவி அளிக்கும். இந்தப் படிக்கட்டுகளில் பண்பாட்டின் சார்புள்ள சாதனங்களும் இன்னும் உயர்ந்த ஆக்கங்களும் அளிக்கப்படும். ஆதலால் உள்ளார்ந்த பயிற்சிகளுக்குப் புதுப் பொருள்கள் தேவைப்படுகின்றன. இதுவும் தன் நோக்கத்தை நிறைவேற்ற வேண்டுமானால் இதில் புதுமையானதும் இன்னும் அதிகச் சிக்கலானதுமான பொருள்கள் அடங்கியிருக்க வேண்டும். இப் பொருள்கள் கவனத்தை ஒரு நிலைப் படுத்துவதிலும், தன் சக்திகளை இடைவிடாது பயன்படுத்துவதின் மூலம் நுண்ணறிவை முதிரவைப்பதிலும், நடைமுறையில் ஊக்கம்

குன்றுமை இயல் நிகழ்ச்சியை நிலைபெற வைத்தலிலும், பொறுமை, நெகிழும் தன்மை, உள இயல் சார்ந்த சமநிலை, உருவத்திலிருந்து அருவத்தைக் காணும் திறமையும், தானாகவே ஆக்குவிக்கும் ஆற்றலும், ஆகியவை சிறப்பு வாய்ந்த புறப்பொருள்களாக இவை அமைய வேண்டும். இவ்வாறு இதற்குப் பிறகு தோன்றும் குழந்தையின் வளர்ச்சியில் அவர்கள் ஞாபக சக்தி சம்பந்தப்பட்ட பயிற்சிகளில் ஈடுபடுவதைக் காண்கிறோம். இதைப் பார்க்கும் நமக்கு இவை மிகவும் வறண்டதாகக் காணலாம். ஏனென்றால் உலகத்தில் தாங்கள் எதிர்ப்படுகின்ற படிமங்களை மட்டுமல்லாமல் வேண்டுமென்று முயற்சியால் பெற்ற அறிவையும் தம் நினைவில் இருக்க வைக்கும் ஓர் ஆசை பிறந்திருக்கிறது. இதற்கு ஓர் எடுத்துக்காட்டு ஆச்சரியகரமானதாயினும் சாதாரணமாக நடைபெறும் இயல் நிகழ்ச்சியான பெருக்கல் வாய்பாடு மனப்பாடமாகும். ஆனால் சில சமயங்களில் அடங்கா ஆர்வமூட்டும் செய்யுளையும், உரைநடைப் பகுதிகளையும் நெட்டுருப் போடுவதில் நமக்கு ஓர்அதிசயத்தையும் காட்டுவதில்லை.

மறுபடியும் ஓர் அதிசயம். குறிப்பிட்ட சமயத்தில் குழந்தை கணிதம் போட உதவும் கருவிகளிலிருந்து தன்னை விலக்கிக் கொள்வதாகும். ஒரு குறிப்பிட்ட முதிர்பருவத்தில் அவன் அருவத்தில் வாதாட விரும்புகிறான் (reason in abstract). எண்களைக் கொண்டு அருவக் கணக்குகள் போடப்பார்க்கிறான் (abstract calculation with numbers). ஏதோ அந்தரங்கத் தூண்டுதலுக்குக் கீழ்ப்படிவது போல் இருக்கிறது. இந்தத் தூண்டுதல் ஆன்மாவைப் புறப்பந்தம் ஒவ்வொன்றிலிருந்தும் விடுவிப்பதோடு காலத்திலும் ஒரு சிக்கனத்தை ஏற்படுத்த முயற்சி செய்வதுபோலிருக்கிறது. இதற்குப் பிறகு எட்டாண்டுக் குழந்தைகள் ஊக்கம் பெற்ற பிஞ்சில் பழுத்த (precocious) கணக்கர்களாகி விடுகின்றனர்.

தானே கற்றல் என்ற முறையின் சார்பான சாதனங்களைப் பயன்படுத்தி வந்த குழந்தைகள் அவர்களுடைய அந்தரங்கத் தேவைகள் விஷயமாக அற்புதமான உணர்ச்சியைப் பெறுகின்றனர். அன்று பிறந்த குழந்தை முறைப்படி திட்டமாகப் பாலூட்டப்படும்பொழுது செரித்து உடலில் தன்மயம் ஆகும் வரை அமைதியாகவும், அழாமலும் இருந்து விட்டு, புது ஊட்டம் தேவைப்படும் நேரம் வந்தவுடன் அழத்தொடங்கி விடுகிறது. அதே போல இந்தக் குழந்தைகளும் 'உதவி வேண்டும்,' புது புறப் பொருள்கள்,' 'புது வகை வேலை' எல்லாம் வேண்டுமென்று, அவர்களுடைய அந்தரங்க முதிர்ச்சி அடையும் இயல் நிகழ்ச்சி ஏற்பட்டவுடன் கேட்கத் தொடங்குகின்றனர். அவர்கள் கேட்பதிலும்

தயக்கம் ஏதும் இல்லை. உறுதியுடன்தான் கேட்கின்றனர். அவர்களுடைய முக்கியமான அண்மைத்தேவைகளையே இவை காட்டுகின்றன. உடல் சம்பந்தப்பட்ட தேவையை ஒருவன் எவ்வாறு தெளிவாக, 'பசி, தாகம், தூக்கம்' தேவை என்று கேட்பானோ அதேபோல் உளத்தேவை பற்றியும் முதிர்ச்சி அடைந்த உள்ளம் படைத்த எட்டாண்டுக் குழந்தையும் கேட்கும். இம்மாதிரியே ஒரு குழந்தை வாசிப்பதற்கும் இலக்கணத்திற்கும் தேவைப்படும் பயிற்சிகளையோ அல்லது இயற்கையைக் கூர்ந்து கவனிக்க உதவும் துணைக்கருவிகளையோ தரவேண்டிக் கேட்கலாம். அவனுடைய உணர்ச்சி தெளிவான தீவிர ஆசையில் தன்னை உருவாக்கிக் கொள்கிறது. ஆசிரியர் இதை உணர்ந்து துலங்கி வேண்டுவன செய்வதுதான் பாக்கி.

இந்த இயல்நிகழ்ச்சி படிப்படியாக வளர்வதற்குப் புற அடிப்படை (external basis) ஒன்று தேவைப்படுகிறது. தெளிவறிவுடன் முன்னேறும் குழந்தையின் வேண்டுகோளுக்கு இணங்க வேண்டுமென்ற ஆசிரியன் ஒருவன் தற்செயலான ஏதோ ஒரு பொருளை வைத்துக்கொண்டு பொருத்தமான முறையில் குழந்தையின் வேண்டுகோளுக்கு இணங்க முடியாது. ஏற்கெனவே அனுபவத்தால் தீர்மானிக்கப்பட்ட நிபந்தனைகளால் அவன் வழிகாட்டப் படவேண்டும். அதாவது இதுவரை பலமுறை எடுத்துக் காட்டப்பட்ட புறப்பொருள்கள்—அந்தப் படிக்கட்டுகள்—ஆன்மாவை மேலே செல்ல வைக்கும் படிக்கட்டுகள்—ஏற்கெனவே அனுபவங்களால் நிலைநாட்டப் பெற்றிருக்க வேண்டும். குழந்தையின் தொடக்க வளர்ச்சிக்கான புறப்பொருள் எவ்வாறு நிலைநாட்டப் பெற்றனவோ, அவ்வாறே இங்கும் நிலைநாட்டப் பெற வேண்டும்.

அன்று பிறந்த குழந்தையின் பசி அதை அற்புதமானதும் சிக்கலானதுமான பால் குடிக்கும் இயக்கத்தைச் செய்யத் தூண்டி விடுகிறது. இதேபோல் இரண்டரை ஆண்டுக் குழந்தையின் தொடக்கத் தூண்டுதலால் புலன் சார்ந்த உணர்ச்சிகளைப் பெற்று அது வினையாற்றுகிறது. தலைகீழாக நிறுத்தப்பட்ட ஒரு கூம்பின் தோற்றம் எவ்வாறிருக்கிறது ? கீழே ஒரு முனையாகக் கூர்மையான உச்சி இருக்கிறது. மேலே போகப்போக விரிந்து போகிறது. இந்தக் கூம்பின் உச்சி குழந்தையின் தொடக்க உளவாழ்வைத் தொட்டு விடுகிறது. அதேபோல் மேலேறும் படிக்கட்டும் வளர்ச்சியில் முன்னேறுகின்ற ஆன்மாவுக்கு ஆதாரமாயிருக்கும் புறப்பொருள்களும் அமைப்பில் படிப்படியாகத் தலைகீழ்க் கூம்புபோல் விரிவடைந்து கொண்டே போகிறது. இந்தப் புறப்பொருள்கள்

பெருகப்பெருகக் குழந்தையின் வளரும் உள இயல் தேவைக்கு ஒத்து மேலும் சிக்கல் வாய்ந்ததாகிவிடுகின்றன. அவைகளில் பண்பாட்டின் கொள்கைகள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன.

எந்த மிக உயர்ந்த வெளி நிறுவனமும் வெறும் உள இயல் தேவைகளுடன் மட்டும் அடிப்படையாகக் கொள்வதில்லை. பண்பாடு சம்பந்தப்பட்ட விஷயங்களையும் சேர்த்துக் கொள்கிறது. கணிதம், இலக்கணம், ஜியோமித்ரி, இயற்கை விஞ்ஞானம், இசை, இலக்கியம் போன்ற ஒவ்வொரு துறைப் பாடமும், நன்குக வரையறுக்கப்பட்ட ஒழுங்கான திட்டப்படி புறச் சாதனங்களின் துணைக்கொண்டு முன் நிறுத்தப்படவேண்டும் (presented). தொடக்கத்தில் கையாண்ட வேலைகளின் உள இயல் சார்ந்த குணங்கள் இப்பொழுது ஒவ்வொரு பாடத்திலும் தனித் திறமை பெற்ற வல்லுநரின் ஒத்துழைப்புத் துணைக்கொண்டு இன்னும் விரிவு படுத்த வேண்டும். அவ்வாறு செய்வதால் தானே கற்றல் என்ற பாங்குக்குத் தேவையான தூண்டுதலை அளிக்கும் வகையில் எல்லாப் புறப் பொருள்களும் ஒன்று சேரும் அமைப்பை நிலைநாட்டவே இவ்வாறு செய்ய வேண்டியிருக்கிறது.

இது சோதிக்கப்பட்ட ஆயத்தப்பணி. இப் பணி வளர்ச்சிக்குத் தேவையான சாதனங்களை நிலைநாட்டுகிறது. இந்த வெளிப் பதிவுகள் (external impressions) உள வாழ்க்கையை மலரச் செய்யத் தேவைப்படுகின்றன. உள இயல் சார்ந்த உருவமைத்தலின் (formation) தேவைக்கு ஒத்த வகையில் இந்தப் புறப் பொருள்களும் தம் அமைப்பில் ஒத்திருக்க வேண்டும்.

ஒரு வகையில் இவை பழைய முறையின் போதனைப் பொருள்களை (Didactic materials) ஒத்திருக்கலாம். ஆனால் அவைகளின் உட்கருத்து முற்றிலும் வேறுபட்டது. பழைய முறைத் துணைப் பொருள்கள் ஆசிரியர் பாடம் கற்பிக்கப் பயனுனவை. அவருடைய மாணவக்குழு அமைதியாக இருந்த இடத்தில் இருந்து கவனமாய்க் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுது பாடத்தைத் தெளிவுபடுத்த அக் கருவிகள் துணைபுரிந்தன. என்ன விளக்கம் கூற வேண்டுமோ அதற்குப் பொருத்தமாக இருந்தன அக் கருவிகள். அவைகளும் ஏதோ இங்கொன்றும் அங்கொன்றுமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டன. அதாவது குழந்தையின் உளம் சார்ந்த தேவைக்குத் தகுந்தபடி எந்த விஞ்ஞான அடிப்படைத் தத்துவமும் (Scientific intention) அனுசரிக்காமல் தேர்ந்தெடுக்கப்பட்டவையே அப் புறப் பொருள்கள்.

நமது முறையில் காண்பதென்ன? வளர்ச்சித் துணைப் பொருள்கள் குழந்தையின் உள இயல் சார்ந்த வளர்ச்சிக்குப்

பொருத்தமான வகையில் விஞ்ஞான முறையை அனுசரித்துத் தேர்ந்து ஆக்கப்பட்டிருக்கின்றன. **இவைகளின் நோக்கம் வெறும் பாடம் கற்பிப்பதற்கன்று.** அந்தரங்க சக்திகளை விளங்க வைக்கத் தானாக ஊக்கம் அளிக்கும் பொருள்களாக அமைந்திருக்கின்றன.

எனவே புறப்பொருள்கள் குழந்தைக்கு அறிமுகப்படுத்தின பிறகு குழந்தைகள் ஒவ்வொருவரின் இயற்கையான தனிச்சக்திக்குச் சுய உரிமையுடன் விட்டுவிடப்படுகின்றன. அவர்கள் தங்களுக்குத் தேவையான பொருளைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். அவர்களின் அந்தரங்க வளர்ச்சிக்குத் தேவையானது இது என்று ஆணை இடுவது உள்ளார்ந்த சக்தியே. ஒவ்வொரு குழந்தையும் தான் தேர்ந்தெடுத்துக் கொண்ட பொருளை எவ்வளவு நேரமானாலும் வைத்துக்கொண்டு வினை ஆற்றி வரலாம். உள்ளத்தின் நெருங்கிய முதிர்ச்சி நிலைக்குத் தகுந்தமாதிரி இருக்கும் இந்தத் தேவையும். இந்த முதிர்ச்சிக்கு ஊக்கம் குறையாத நெடுநாள் பயிற்சி தேவைப்படுகிறது. தனிக் குழந்தையின் தேவை என்ன, முதிர்ச்சி எப்பொழுது அடையும் என்று எந்த வழிகாட்டியோ, ஆசிரியரோ முன்னறிய இயலாது. ஆனால் குழந்தையைத் தன்னுரிமையுடன் விட்டுவிட்டால் அத்துணையும் இயற்கையின் தூண்டும் ஆற்றல் துணையால் நமக்கு வெளிப்படுத்தும்.

**உளம் சார்ந்த உண்மைகள்**—பழைய கல்வி முறைக் கருத்துருவப்படி (Scholastic conception) குழந்தையின் முன்னேற்றத்தை அவன் படிக்கும் ஒவ்வொரு பாடத்திலும் என்ன திறமை பெற்றிருக்கிறான் என்பதை ஆய்ந்து தீர்மானிக்கப்படுகிறது. இதிலிருந்து முற்றிலும் விலக்கிக் கொள்வதற்கும் இந்தப் புதுமுறைப் பிரகாரம் வளரும் குழந்தைகள் காட்டும் உண்மைகளின் கருத்தைப் புரிந்து கொள்வதற்கும் ஒரு விஞ்ஞானக் கண்கொண்டு பார்த்தல் இன்றியமையாதது. இயற்கை நூல் வல்லுநர்போல் வாழ்க்கையின் சில இயல் நிகழ்ச்சிகளின் வளர்ச்சியைக் கூர்ந்து கவனிக்க வேண்டியிருக்கிறது. தனிப்பட்ட **புறநிபந்தனைகளை** இங்கு ஏற்படுத்தி வைக்கிறோம் என்பது உண்மையே. ஆனால் குழந்தையின் அந்தரங்க வினையாற்றலின் சுய வளர்ச்சியுடன் உள இயல் வினைப் பயனும் நேர்முகமாக இணைக்கப்பட்டிருக்கின்றது.

ஆதலால் ஆசிரியருக்கும் குழந்தைக்கும் இடையே ஒரு தொடர்பு (correspondence) ஏதும் இல்லை. நம் கவனத்துக்கு வெளிப்படுத்தப்பட்ட பலன்கள் நிச்சயமாகப் போதனையால் உருவானவை அல்ல. இரசாயன மாறுதல்களில் சில பொருள்கள் துணை நின்று தூண்டிவிடுகின்றன (re-agents). அதேபோல் இந்தப் புறப்பொருள்களும் தனிப்பட்ட உள இயல் எதிர்வினை

களையும் தூண்டி விடுகின்றன. இதை ஒரு துயில் எழுப்புதல் என்றோ அல்லது ஆளுமையின் அமைப்பு என்றோ (organisation) கருதலாம். அந்தரங்கத்தில் ஓர் ஒழுங்கு ஏற்பட்டதின் விளைவு கட்டுப்பாடு ஆகும் (discipline). அந்தரங்கப் பாங்கினில் தூண்டி விடப்பட்டதின் வெளித் தோற்றம் கட்டுப்பாடு. இந்த முதல் இயல் நிகழ்ச்சியையே உள் ஒழுங்கின் வெளித் தோற்றமாக நாம் எதிர்பார்க்க வேண்டும்.

பள்ளிக்கூடம் புதிதாகத் துவங்கின முதல் சில நாள்களில் ஆரம்பக் குழப்பமோ ஒழுங்கின்மையோ இயல்பாக இருக்கலாம். முக்கியமாக ஆசிரியையும் முதல்முதலாக முதல் பரீட்சை செய்வ தாக இருந்தால் அப்படித்தான் இருக்கும். அவளுடைய மிகுதி யான நல்லார்வமுள்ள எதிர்பார்த்தலும் ஒரு தடங்கலாக இருக் கிறது. சூழ்நிலையில் வைக்கப்பட்டிருக்கும் பொருள்களால் குழந்தை உடனே கவரப்படுவதில்லை. குழந்தைகள் தாமே அவரவர் விருப்பம்போல் பொருள்களை எடுத்துக்கொண்டு வினை ஆற்றுவார்கள் என்று ஆசிரியை எதிர்பார்த்திருந்தாள். அதனால் அவளுக்கு ஓர் ஏமாற்றம். ஆனால் குழந்தைகள் ஏழைகளாய் இருந்தால் இந்த இயல் நிகழ்ச்சி அநேகமாக உடனே நிகழ்கிறது. ஆனால் பணக்காரக் குழந்தைகள் தங்களிடம் உள்ள பல பண்டங் களாலும் விலையுயர்ந்த விளையாட்டுப் பொம்மைகளாலும் தெவிட்டிப்போய்க் கிடப்பதால் முதலில் அறிமுகப்படுத்தின புறத் தூண்டுதல்களிடம் அக்கறை காட்டுவது மிக அரிது. இந்தப் புது ஆசிரியை 'தன்னுரிமை' என்பதை மரியாதைக்குரிய ஒரு பந்தமா கவும் (chain) குழந்தையின் ஆன்மாவுக்கும், புறத்தூண்டுதலுக்கும் இடையே உள்ள ஒற்றுமையை ஓர் ஆணவப் பிடிவாதமாகவும் கொண்டாளானால், இயற்கையாகக் கட்டுப்பாடு குறைந்த ஒரு குழப்பத்தில் கொண்டுபோகத்தான் செய்யும். குழந்தையின் உள்ளத்தில் உள்ள வாழ்வைத் தூண்டிவிட்ட பிறகுதான் தன்னு ரிமை என்பது ஆரம்பிக்கின்றது என்ற உண்மையை அனுபவம் பெற்ற ஆசிரியர் நன்கு புரிந்து கொள்கிறார். ஆரம்பத்தில் எல்லா வற்றையும் ஒன்றாக இணைக்கும் ஒரு நிலைப்பாட்டைப் படைக்க அவர்களுக்கு ஒரு தனித்திறமை இருக்கத்தான் செய்கிறது.

எனினும் பணக்காரக் குழந்தைகளை வைத்துக்கொண்டு முதலில் பரிசோதனை செய்யும்பொழுது அதிகம் விளக்கம் தருவ தாகவும் அடிப்படையான உளஇயல் சார்ந்த இயல்நிகழ்ச்சியின் தெளிவான தோற்றப் பாட்டினையும் அறிவிப்பதாகவும் இருக்கும். இந்த இயல்நிகழ்ச்சியை குழப்பத்திலிருந்து தோன்றும் ஒழுங் குக்கு ஒப்பிடலாம்.

இது சம்பந்தமாக வெவ்வேறு எடுத்துக்காட்டு வர்ணனைகளைக் கூறுகிறேன். அவைகளில் சில ஏற்கெனவே அச்சிடப்பட்டவை. அவைகளில் அமெரிக்க ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த பள்ளிக்கூடத்தைப் பற்றி மிஸ். ஜார்ஜ்[1] கூறுவதையும் இங்கிலாந்தைச் சேர்ந்த மெலிடுஃப்ரேஸ்னி[2] என்பவர் கூறுவதையும் எடுத்துக்காட்டுகிறேன்.

ஆரம்பத்தில் காணப்படும் ஒழுக்கமின்மை மிகத் தெளிவாக மிஸ். ஜார்ஜின் எடுத்துக்காட்டில் காணப்படுகிறது. 'அவர்கள் (குழந்தைகள்) முதலில் ஒருவனிடம் உள்ளதை மற்றவன் பிடுங்கிக் கொள்வான். எவராவது ஒருவனுக்கு நான் ஒரு பொருளைக் காட்டினேனானால் மற்றவர்கள் அவரவர் வைத்திருந்ததை அப்படி அப்படியே விட்டுவிட்டு எங்களைச் சுற்றிலும் கூச்சல் போட்டுக்கொண்டு நோக்கம் ஏதுமில்லாமல் கூடிவிடுவார்கள். அப் பொருளைப் பற்றி நான் விளக்கம் கூறுவதை முடித்தவுடன் அவர்கள், 'எனக்கு உனக்கு' என்று அதன்மேல் பாய்வார்கள். அந்தப் பொருள்மேல் குழந்தைகள் ஓர் அக்கறையையும் காட்டவில்லை. ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு அவர்கள் தாவினார்கள். ஒன்றின் பயன்மேலாவது அவர்கள் விடாது சிந்திக்கவில்லை. குழந்தைகளுக்கு நாம் கொடுக்கும் ஒரு சிறு வட்டத்தின் விளிம்பைத் தன் விரல்களால் தடவக்கூடப் பொறுமை இழந்து ஒரு நிலையில் அந்தக் குறுகிய நேரமும் உட்கார முடியாத குழந்தையும் இருந்தது. அனேகம்பேருடைய இயக்கங்கள் நோக்கமற்றனவாக இருந்தன. வெளிப்படையாகக் காணக்கூடிய எந்த நோக்கமுமில்லாமல் பல குழந்தைகள் அறைக்குள் வட்டமாக ஓடிக் கொண்டிருந்தனர். இவ்வாறு ஓடும்பொழுதும் வேறு வகையில் இயங்கும் பொழுதும் அவர்களைச் சுற்றிலும் இருந்த பொருள்களை மதிக்கவே இல்லை: மேசைமேல் முட்டினார்கள்; நாற்காலிகளைக் கவிழ்த்தார்கள்; பொருள்களின்மேல் மிதித்தார்கள்; சில சமயங்களில் ஓரிடத்தில் ஒரு வேலையைத் தொடங்குவார்கள்; பிறகு வேறொரு திக்கில் ஓடிவிடுவார்கள்; பொருள்களை எடுத்து அவைகளைக் கண்டது கண்டபடி விட்டெறிந்தார்கள்.

மிஸ். டஃப்ரெஸ்னி அவருடைய முதல் முயற்சியில் கண்ட ஒழுங்கின்மையை வர்ணிக்கிறார்: முதல் நான்கு வாரங்களும் மிகவும் மனக் கவலையை ஏற்படுத்தியது என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். சில வினாடிகளுக்குமேல் குழந்தைகளால் எந்த வேலையும் தொடர்ந்து செய்யமுடியவில்லை; விடா முயற்சி என்பதையே அவர்கள் காட்டவில்லை; தன்னூக்கமில்லை; சில வேளைகளில் ஆட்டுமந்தைபோல் ஒருவனைப் பின்பற்றினர்.

[1] Miss. George. [2] Mlle-Dufresne.

ஒரு குழந்தை ஏதாவது ஒரு பொருளை எடுத்துக்கொண்டால் மற்றக் குழந்தைகள் அனைவரும் அவனைப் போலவே நடித்தனர். சில சமயங்களில் அவர்கள் தரைமேல் உருண்டு புரண்டு நாற்காலி களைக் கவிழ்த்தார்கள்.

ரோமாபுரியில் பணக்காரக் குழந்தைகளிடம் நடத்தப்பட்ட பரிசோதனைகளின் விளைவாகப் பொருட்செறிவுடன் கூடிய ஒரு வருணனை இதுவாகும்: 'மிகவும் தொல்லை கொடுத்தது, ஒழுக்கம் அல்லது கட்டுப்பாடு. குழந்தைகளிடம் தொழில்மேல் இருக்க வேண்டிய ஒரு கவர்ச்சியும் காணப்படவில்லை; பொருளை வைத்து எந்த விதத்திலும் வினையாற்றல் தொடங்கும் ஆர்வமே காணப் படவில்லை.'

தனித்தனியாகப் பணியாற்றின இவர்கள் ஒவ்வொருவரும் ஒழுங்கு எவ்வாறு குழந்தையிடம் புகுந்தது என்பதுபற்றி ஒரே குரலில் பேசுகின்றனர். அவர்கள் கண்ட இயல் நிகழ்ச்சி ஒரே மாதிரிதான் இருந்தது. ஏதோ ஒரு பயிற்சியின்மேல் குறிப்பிட்ட நேரத்தில் குழந்தைக்கு நிறைந்த அக்கறை பிறந்துவிடுகிறது. முதல் பரிசோதனைக்குரிய பொருள் என்று கருதப்பட்டதின் மேலே தான் அதன் முதல் அக்கறை பிறக்கவேண்டுமென்பது அவசிய மில்லை. வேறு எந்தப் பொருளானாலும் குழந்தையின் கவனத்தை ஆழ்ந்து பதியவைத்து விடலாம். முக்கியமான விஷயம் புறப் பொருளன்று. ஆனால், ஒரு தூண்டுதலுக்கு இணங்கிக் கவரச் செய்யப்படுகின்ற குழந்தையின் ஆன்மாவின் இயக்கமே முக்கிய மானது.

குழந்தையின் உள்ளத்தில் ஒரு தேவை ஏற்படுகிறதை உணர்ந்து ஏதோ ஒரு புறப்பொருளைக் குழந்தைக்கு அறிமுகப் படுத்தி வைக்கிறோம். குழந்தையும் அப்பொருளின்மேல் ஆழ்ந்த அக்கறையைக் காட்டுகிறது. இதைத் தொடர்ந்து மற்றப் பொருள்கள் மேலும் அக்கறை காட்டுகின்றது. இயற்கையான இயல் நிகழ்ச்சி என பல வினையாற்றல்களையும் வளர்விக்கிறது. ஒரு தரம் ஆரம்பித்து விட்டால் அது தொடர்ந்து முன்னேறு கிறது. அது தானாகவே இடைவிடாது பெருகிக் கொண்டே போகிறது. இந்த இயல் நிகழ்ச்சியானது வெளி வினையாற்றலின் தூண்டுதலால் நிதானமாகவும், அளவுடனும் படிப்படியாக வளர் வது போலன்று. அம் முன்னேற்றம் திடீரென்ற முன்னேற்றம்; ஒரு வெடி போன்றது (explosion). எதிர்பாராத விஷயங்கள் இருந் திருந்தாற்போல் தம்மை நிலைநாட்டிக் கொள்கின்றன. இவ்வாறு நடைபெறுவதைக் காணும்பொழுது குழந்தையின் உடல் வளர்ச்சி யில் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் சில சிறப்பான நிகழ்ச்சிகள் நடை

பெறுவது நினைவுக்குவருகிறது. அவை: இருந்திருந்தாற்போல் ஒரு நாள் குழந்தைக்குப் பல் முளைக்கத் தொடங்குகிறது. ஒருநாள் தன்னுடைய முதல் வார்த்தை உச்சரிக்கிறான். ஒரு நாள் தன் முதல் நடையில் அடி எடுத்து வைக்கிறான். முதல் பல் முளைத்ததும் மற்ற பற்களும் முளைக்கும். முதல் வார்த்தையை உச்சரித்தானுல் பேச்சுமொழி முழுமையும் வளர்ச்சி பெற்றுவிடும். முதல் அடி எடுத்துவைத்து விட்டானுல் நடக்கும் திறமை கவலையில்லாமல் நிலைப்பெறச் செய்ததுபோல் ஆகிவிட்டது.

இதே போன்ற ஒரு திரும்புகட்டம் (crises) உளவாழ்க்கை ஒழுங்கு நிலைநாட்டலிலும் ஏற்படுகிறது. அதுதான் அந்தரங்க வாழ்வின் முன்னேற்ற வளர்ச்சியின் தொடக்கமாகும்.

கட்டுப்பாடு எவ்வாறு தோன்றிற்று என்பதை மிஸ். ஜார்ஜின் வருணனையினின்று எடுத்துக்காட்டுகிறேன்.

'அந்த ஒண் மீன் படலம்[1] போன்ற புள்ளிகள்—ஒழுங்கற்ற குழந்தைகளும் சில நாள்களில் குறிப்பிட்ட அமைப்பைப் பெற்றனர். குழந்தைகள் தாமே தமது போக்கினை உணர்ந்து கொண்டனர். இதுவரை அவர்கள் அருமையாகத் தம்மிடம் வைத்துக் கொண்டிருந்தனவற்றை இப்பொழுது கேவலமான விளையாட்டுப் பண்டங்களென வெறுத்தார்கள். ஒரு புது அக்கறை அவர்களிடம் தோன்றிற்று. அதன் காரணமாக அவர்கள் தனிப்பட்ட முறையில் தங்கள் நடத்தையைத் தாமே மேற்கொண்டனர்.' மேலும், மிஸ். ஜார்ஜ் கூறுவதாவது: 'அவர்கள் சிறந்த வகையில் தனியார்கள் (individuals) ஆகிவிட்டனர். அப்பொழுது ஒரு குழந்தைக்கு உள்ளம் ஈர்க்கும் பண்டம் மற்றக் குழந்தையிடம் ஒன்று தூண்டாதது போல் இருந்தது. அவர்களுடைய கவனத் திறமைக் காட்சியில் தீவிர வேறுபாடுகளைப் பெற்றிருந்தனர். தன்னிடத்தில் நிறைந்த அக்கறையை ஊட்டும் வகையில் ஏதாவது ஒரு பொருள் அமைந்துவிட்டால், போர் வெற்றி அடைந்து விட்டதென்றே கருதலாம். சில வேளைகளில் இந்த உற்சாகம் எதிர்பாராத வகையில் விழிப்படைகிறது. ஆச்சரியகரமான வேகத்திலும் தோன்றுகிறது.

ஒரு சமயம் ஒரு குழந்தையிடம் அநேகமாக ஒன்று விடாமல் எல்லாப் பொருள்களையும் கொடுத்துப் பார்த்தேன். இம்மி அளவும் அக்கறை தோன்றவைக்க முடியவில்லை. பிறகு ஏதோ

[1] Nebular particles—சூரியன் முதலில் மேக மண்டலம்போல் பல சிறு துளிகள் சுழலுவதுபோல் சுழன்று இறுதியில் சூரியனுயிற்று. எல்லா விண்மீனும் இப்படித்தான் ஒரு குழப்பத்திலிருந்து ஒழுங்கான உருவம் பெற்றன.

போக்கிலே இரண்டு வண்ணப் பலகையின் வண்ண வேற்றுமையை எடுத்துக் காட்டினேன். தீவிர தாகவிடாய் கொண்டவன்போல் அவைகளைப் பெற்றுக் கொண்டு ஒரே பாடத்தில் ஐந்து வண்ணங் களைக் கற்றுக் கொண்டான். தொடர்ந்த நாள்களில் இதுவரை விரும்பாது ஒதுக்கிவிட்டிருந்த எல்லாப் பொருள்களையும் படிப்படி யாக எடுத்துக்கொண்டு அவைகளின் உண்மையை வெற்றி பெறக் கற்றுக் கொண்டான்.

ஒரு குழந்தையிடம் சிறிதளவும் கவனம் என்பதே கிடையாது. முதலில் அப்படித்தான் இருந்தது. பிறகு இந்தக் குழப்பத்திலிருந்து ஒரு வழி கண்டுபிடிப்பதுபோல் ஒரு சிக்கல் வாய்ந்த பொருளை எடுத்துக் கொண்டான். அதுதான் நீண்ட கோல்கள்[1] என்று சொல்லப்படுபவை. இதை வைத்துக்கொண்டு நாள் முழுதும் விளையாடிக் கொண்டிருந்தான். எண்ணத் தெரிந்துகொண் டான். எளிய கூட்டல்களையும் போடக் கற்றுக்கொண்டான். அதன் பிறகு உருளைகளையும், செருகுபலகைகளையும் எளிய பொருள்களையும் தொடங்கினான். இந்த முறையின் ஒவ்வொரு பிரிவின் மேலும் தன்னுடைய அக்கறையைக் காட்டினான்.

'தங்கள் அக்கறைக்குட்பட்ட பொருளைக் குழந்தைகள் எடுத்துக்கொண்ட தருணத்திலே ஒழுங்கின்மை மறைகிறது. மன அமைதிக் குறைவு முடிவடைகிறது. உருளைக் கட்டைகளையும் வண்ணப் பலகைகளையும் பிற பொருள்களையும் வைத்துக்கொண்டு தாமே மகிழ்வுறுகின்றனர். இம்மாதிரி இயல் நிகழ்ச்சி ஏற்பட்ட பிறகு சில சிறந்த பண்புகள் எவ்வாறு தோன்றுகின்றன என்பதை நமக்கு மிஸ். ஜார்ஜ் நிறைந்த அக்கறை ஊட்டுவதுபோல் ஒரு சம்பவம் காட்டுகின்றார்கள்.

'இரண்டு பேர் அக்காள் தங்கை இருந்தனர். ஒருத்திக்கு மூன்று வயது. மற்றொருத்திக்கு ஐந்து வயது. மூன்று வயதுக் குழந்தை ஒன்று இருப்பதாகவே சொல்ல முடியாது. அவள் இம்மியும் பிறழாமல் தன் அக்காள் செய்வது போலவே எதையும் செய்து வந்தாள். எடுத்துக்காட்டாக அக்காள் நீலப் பென்சில் வைத்திருந்தால் தங்கைக்கும் நீலப் பென்சில் கொடுக்கப்படும் வரை மனநிறைவு பெறமாட்டாள். அக்காள் ரொட்டியும் வெண்ணெயும் உண்டாளானால் தங்கையிடம் வேறு என்ன தின் பண்டம் இருந்தாலும் அவள் ரொட்டி வெண்ணெய் தவிர வேறு எந்த உண்டியையும் தொடமாட்டாள். இப்படியே நடந்தேறி யது. பள்ளிக் கூடத்தில் நடைபெறுகிற எதன்மேலும் இக் குழந்

[1] இது எண் கோலைக் குறிக்கும் (Number rods); நீளப் படிக்கட்டு (Long stairs) அன்று.

தைக்கு அக்கறை இல்லை. அக்காளைப் பின் தொடர்ந்து அவள் செய்வதைப்போல் இவளும் செய்து கொண்டிருந்தாள். ஒரு நாள் சின்னக்குட்டிக்கு ரோசாக் கோபுரத்தின் மேல் அக்கறை பிறந்தது. முழு ஊக்கத்துடன்—உயிர்ப்பூக்கத்துடன் கோபுரத்தைக் கட்டி முடித்தாள். அது மட்டுமா, பல முறை திரும்பத் திரும்பக் கட்டினாள். தன் அக்காளை அடியோடு மறந்துவிட்டாள். இதைக் கண்ட அக்காளுக்கு ஒரே ஆச்சரியம். தங்கையைக் கூப்பிட்டாள். 'என்ன இது! நான் ஒரு வட்டத்தை வண்ணத்தால் நிறைத்துக் கொண்டிருக்கிறேன். நீ கோபுரம் கட்டிக்கொண்டிருக்கிறாயே?' என்று வினவினாள். அன்று முதல் தங்கை தன் ஆளுமை பெற்றவளாகி விட்டாள். அவள் தானாக வளரத் தொடங்கினாள். அன்று முதல் அவளுடைய அக்காளின் நிழலாகவோ, பிரதி பிம்பமாகவோ இருக்கவில்லை.

தானாக வளர்ச்சி பெறும் பண்புகளைப்பற்றி இந்த அக்கறையூட்டும் உண்மைகள் எடுத்துக்காட்டுகின்றன. இந்தப் பண்புகள் இதுவரை தனிப் பேர்வழியிடம் காணப்படவில்லை. ஒரு பணியில் தொடர்ந்த தீவிர அக்கறை பிறக்கும் அடிப்படை இயல் நிகழ்ச்சி நடைபெறும்போது இப் பண்புகள் உருவாகின்றன. ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாத நிலையில் பலர் பல இடங்களில் திரும்பத் திரும்பப் பல பரிசோதனைகள் செய்த பிறகு இதே உண்மையைக் கண்டதாக எடுத்துக் கூறுகின்றனர்.

மிஸ். டஃப்ரஸ்னி[1] என்பவர் நாலாண்டுச் சிறுமி பற்றி என்ன கூறுகிறார் பாருங்கள்: 'அவளால் பாதி அளவு தண்ணீரால் நிறைத்த குவளையைச் சிந்தாமல் கொண்டு போக முடியாதிருந்தது. இதைச் செய்யத் தன் கையால் ஆகாது என்று இந்த வேலையை அவள் தொடமாட்டாள். ஒரு நாள் வேறு சில பண்டங்களின் மேல் தன் அக்கறையை ஆழ்ந்து பதிய வைத்தாள். இதன்பின் அவள் குவளை நீரைச் சுலபமாகச் சிந்தாமல் எடுத்துச் சென்றாள். அவளுடைய தோழிகள் வண்ணத்தால் ஓவியம் தீட்டிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குத் தேவைப்படும் தண்ணீரைக் குவளையில் எடுத்து ஒரு சொட்டும் சிந்தாமல் கொண்டுபோய்க் கொடுத்துக்கொண்டே இருந்தாள்.

இன்னும் அற்புதமான ஒரு நிகழ்ச்சியை ஆஸ்திரேலியன் ஆசிரியை ஆன மிஸ். பார்ட்டன்[2] நமக்குக் கூறுகிறார். அவருடைய குழந்தைகளில் ஒரு சிறுமிக்கு இன்னும் பேச்சு அவ்வளவாக வரவில்லை. ஏதோ விளங்காத சில ஒலிகளாலேயே பேசிவந்தாள். பெற்றோர் ஒரு மருத்துவரைக் கொண்டு அவளுக்கு ஏதாவது

[1] Miss, Dufresne. [2] Miss. Barton.

கோளாறுண்டா என்று சோதித்துப் பார்த்தனர். அப்படி ஒன்றுமில்லை, எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறதென்றும் மருத்துவர் கூறிவிட்டார். இப்போது பேச்சு வராவிட்டாலும் இனி மேல் பேசுவாள் என்றும் உறுதி கூறிவிட்டார். இந்தக் குழந்தைக்கு உருளைக் கட்டைகள் மேல் அக்கறை பிறந்தது. அதையே பலமுறை திரும்பத் திரும்பச் செய்துகொண்டே இருந்தது. துளைகளுக்குள் இருந்து உருளைகளை எடுப்பதும் மறுபடியும் அவைகளைச் சரியாகப் பொருத்துவதும் செய்துவந்தாள். தீவிர அக்கறையுடன் பலமுறை செய்த பிறகு ஆசிரியையிடம் ஓடி, 'வந்து பாருங்கள்' என்று சொன்னாள்.

ஒரு தொழிலில் குழந்தைகளுக்கு அக்கறை தோன்றித் தங்களைத்தாங்களே வளரச் செய்யும் பொழுது சாதாரணமாக நடைபெறும் ஒரு இயல்நிகழ்ச்சி என்னவென்றால் அவர்களிடம் காணப்படும் உயிர்ப்புடை மனமகிழ்ச்சியாகும். சில உள இயலார் இதை நுண்ணறிவுவெற்றி போன்ற (intellectual acquisitions) ஒரு 'மென்னய உணர்ச்சிக் குறிப்பு' (sentimental note) என்பார்கள். உடல்நூல் வல்லுநர் துல்லியமான ஒப்புமை செய்து உடலில் எடை அதிகமானால் உடல் வளர்ச்சியை எவ்வாறு குறிக்கிறதோ அவ்வாறே இங்கும் இந்த மகிழ்ச்சி உள வளர்ச்சிக்கு அடையாளம் என்றும் கூறுவர்.

குழந்தைகள் தாமாகவே தம்முடைய தெய்விக வளர்ச்சியை எவ்வாறு குறிக்கிறதோ அவ்வாறே இங்கும் இந்த மகிழ்ச்சி உள வளர்ச்சிக்கு அடையாளம் என்று கூறுவர்.

குழந்தைகள் தாமாகவே தம்முடைய தெய்விக வளர்ச்சியை உணர்வது போல் ஒரு புலன் உணர்ச்சியைப் பெறுகின்றார்கள். தங்களுடைய ஆளுமையை விரிவாக்குவதால் பெறுகின்ற திறமையை அவர்கள் உணர்கின்றார்கள். தங்கள் முன் உயர்ந்த பாங்கு வளர்வதைப் பொங்கும் மகிழ்ச்சியால் வெளிப்படுத்துகின்றார்கள். மிஸ். ஜார்ஜ் கூறுகிறார்; — 'ஏதோ புதுமையை நாம் சாதித்தவுடன் நாம் பெறுகிறோமே பெருமை அத்தகைய பெருமையைக் குழந்தைகளும் காட்டுகின்றார்கள். ஓர் எளிய செயலைப் புரியக் கற்றுக் கொண்டபோது என்னைச் சுற்றிலும் தாவிக் குதித்தோடி என் கழுத்தைக் கட்டிக் கொண்டு, 'நானே எல்லாம் செய்தேன்; என்னால் செய்யமுடியும் என்று நீங்கள் நம்பவில்லைதானே! நேற்றை விட இன்று இன்னும் நன்றாகச் செய்துவிட்டேன்' என்று அவர்கள் மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றார்கள்.

இத்துணை வெளிக்காட்டுதல்கள் எல்லாம் நடந்தேறின பிறகு உண்மையான கட்டுப்பாடு நிலைபெறச் செய்யப்படுகிறது. இதனுடைய தெளிவான பலன் 'பிறர் பணிக்கு மரியாதையும், பிறர்உரிமைக்கு மதிப்பும்' ('respect for the work of others and consideration for the rights of others') ஆகிய இரண்டுடனும் பிணைந்து கிடக்கிறது. இதிலிருந்து மற்றவர் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது வேறு எந்தக் குழந்தையும் அதைக் கைப்பற்ற முயற்சி செய்வதில்லை. ஒரு பொருளின்மேல் நாட்டம் கொண்டாலும் அப் பொருள் தனக்குக் கிடைக்கும் வரை பொறுமையாகக் காத்துக் கொண்டேயிருக்கிறது. சில வேளை களில் தான் எதைச் செய்யவேண்டும் என்று நினைக்கிறதோ அப் பொருளை வேறொரு குழந்தை வைத்துக்கொண்டு வினையாற்றி வந்தால், அதை இக் குழந்தை உற்றுநோக்குகிறது. நண்பனுடைய பணியில் அக்கறை கொள்கிறது.

பிறகு இந்த அந்தரங்க நடத்தைகளால் கட்டுப்பாடு நிலை நாட்டப்படும்பொழுது திடீரென்று ஒரு குழந்தை மற்றவர்கள் துணை இல்லாமல் சாந்தமாகத் தனியே வேலைசெய்யும். தன்னுடைய ஆளுமையை வளர்க்கவே இவ்வாறு செய்கிறது போலும். இம் மாதிரிப் பணியாற்றும்பொழுது ஒழுக்கமுறை சார்ந்த தனிமை ஏதும் இதில் இல்லை. அதற்குப் பதிலாகக் குழந்தைகளின் இடையில் ஒருவர்க்கொருவர் அன்பும் மரியாதையும் செலுத்திக்கொள் கின்றனர். உணர்ச்சிக்கனிவால் (sentiment) தோழர்களைப் பிரிப் பதற்கு மாறாக ஒன்றுபடுத்துகிறது. ஆதலால், ஒரு சிக்கலான கட்டுப்பாடு பிறக்கிறது. ஒரு சமூகத்தின் ஒழுங்கைத் தொடர வேண்டிய உணர்ச்சிக்கனிவும் இந்தக் கட்டுப்பாட்டில் அடங்கி யிருக்கிறது.

மிஸ். டஃப்ரஸ்னி மேலும் கூறுகிறார்கள் : 'கிருஸ்துமஸ் விடு முறைக்குப் பிறகு திரும்பவும் குழந்தைகள் கூடினபிறகு வகுப்பில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. என் முயற்சி ஏதுமில்லாமல் கட்டுப்பாடு தானாகவே உருவாகிக் கொண்டிருந்ததுபோல் தெரிந் தது. தொடக்கத்தில் அவர்களுடைய நடத்தையில் ஓர் ஒழுங் கின்மை.காணப்பட்டது. விடுமுறைக்குப் பிறகு இதுவரை காணப் படாத வகையில் அவரவர்கள் பணியில் நன்றாக ஆழ்ந்திருந் தார்கள். முன்பெல்லாம் அவர்களுடைய மனத்தைக் கவராத பண் டங்கள் வைத்திருந்த பீரோவுக்குச் சென்று இப்பொழுது தாங் களே அச்சாமான்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்கள். அவர் கள் ஜியோமித்ரி வடிவங்கள்—வடிவியல் வடிவங்கள்—கணக்காக அமைந்த உருளைகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டார்கள். மர வடிவங்களின் வெளி ஓரங்களைத் தங்கள் விரல்களால் தொடத்

தொடங்கினார்கள். இளங்குழந்தைகள் பொத்தான் போடுவதிலும் பின்னல் முடிவதிலும் அக்கறை காட்டினார்கள். ஒன்றுக்குப்பிறகு மற்றொன்றாக அவர்கள் எந்தவிதச் சோர்வு அடையாளமும் காட்டாமல் தேர்ந்தெடுத்தார்கள். புதுப் பொருள்களைக் கண்டு மெத்த மகிழ்ச்சி அடைந்ததுபோல் இருந்தார்கள். பள்ளிக்கூடத்தில் உழைப்பின் மணம் கமழ்ந்தது. இதுவரை மனத்துக்குத் தோன்றியவாறு எப்பொருளையும் எடுத்துவந்தவர்கள் இப்பொழுது ஏதோ ஒரு விதியைத் தேவைப்படுகிறவர்கள் போல் காட்டிக் கொண்டார்கள். தங்கள் அந்தரங்கத்துக்கும் தனக்கு என்றே ஒரு தனி விதியை அல்லது சட்டத்தை விரும்பினார்கள். அவர்கள் தங்களுடைய பணியில் தங்கள் முயற்சியை ஒருமுகமாகக் குவிய வைத்தார்கள். முறையாகவும், துல்லியமாகவும் உழைத்து வந்தார்கள். இடர்ப்பாடுகளை வெல்வதில் மெய்யான மனநிறைவைப் பெற்றார்கள். தொழில் துல்லியமாகச் செய்யும் பாங்கு அவர்களுடைய பண்பினை மாற்றிற்று. அவர்களுடைய நரம்புக் கோளாறுகளைத் தடுக்கும் திறமை பெற்றனர்கள்.'

மிஸ். டீஃப்ரஸ்னி என்பவரின் கவனத்தை மிகவும் ஈர்த்த ஓர் எடுத்துக்காட்டு நாலரை ஆண்டுப் பையன் ஒருவனைப் பற்றியது. 'தொடக்கத்தில் அவன் நரம்புக் கோளாறுடையவனாகவும், எளிதில் படபடப்பை அடையக் கூடியவனாகவும், முழு வகுப்பையும் தொந்தரவு செய்பவனாகவும் காணப்பட்டான். அவனுடைய மனக்கற்பனை வியக்கத்தக்க அளவில் வளர்ச்சிபெற்றிருந்தது. ஒரு பொருள் அவனிடம் கொடுக்கப்பட்டால், அதன் உண்மையான வடிவத்தைப்பற்றி அவன் மனத்துக்குள் வாங்கிக் கொள்ளவில்லை. அதை ஓர் உருவகமாக்கிக் கொண்டான். தன்னையும் அதனுடன் இடைவிடாமல் உரையாடுவதாகவும் கற்பனை செய்து கொண்டான். தான் வேறொருவன்போல் நடந்து கொண்டான். பொருள்களின்மேல் தன் கவனத்தை ஊன்ற வைக்கச் சக்தி இழந்தவன்போல் காணப்பட்டான். அவனுடைய மனம் இந்தக் குழப்ப நிலையில் இருக்கும்பொழுது அவனால் எந்த வேலையையும் துல்லியமாகச் செய்ய முடியவில்லை. எடுத்துக்காட்டாகப் பொத்தான் சட்டத்தில் ஒரு பொத்தானும் போட முடியவில்லை. .......திடீரென்று ஓர் அற்புதம் அவனுள் நடைபெற்றதுபோல் தோன்றிற்று. அவனிடம் தோன்றின மாறுதலை வியப்புடன் குறித்தேன். அவனுக்கு மிகவும் பிடித்ததாக ஒரு பயிற்சிப் பொருளை எடுத்துக்கொண்டான். பிறகு இதைத் தொடர்ந்து இந்த வரிசையிலுள்ள ஒவ்வொன்றையும் தேர்ந்து எடுத்து விளையாற்றினான். தன் நரம்புகளிலும் அமைதி கண்டான்.'

ரோமாபுரியில் பணக்காரக் குழந்தைகளுக்கென்று ஒரு குழந்தை இல்லம் தொடங்கப்பட்டது. இக் குழந்தைகளைப்பற்றி இரண்டு ஆசிரியைகள் பல குறிப்புகள் எழுதி வைத்திருக்கிறார்கள். அவைகளிலிருந்து இரண்டை நான் பொறுக்கிக் காட்டுகிறேன். இவை வெவ்வேறு குணங்களைப் பெற்ற இரண்டு குழந்தைகள் பற்றியதாகும். இவர்களுள் ஒருவன் சற்று வயது மீறினவனாக வந்து சேர்ந்தான். இவன் ஏற்கெனவே வேறு ஒரு சூழ்நிலையில் வளர்ந்திருக்கிறான். மற்றவன் சாதாரணமாகக் குழந்தை இல்லத்தில் சேரக்கூடிய வயதுடையவன் ஆவான். பெரியவனுக்கு வயது ஐந்து. இதற்கு முன் ஃப்ரோபலின்[1] கிண்டர்கார்டன் பள்ளிக் கூடத்தில் படித்தவன். அவன் மிகவும் வம்புக்காரன் என்று கருதப்பட்டவன். ஏனென்றால், அவன் ஒரு கிடையில் இருக்க மாட்டான். முதல் சில நாள்களுக்கு அவன் எங்களுக்குப் பெரிய தொல்லையாக இருந்தான். அவனுக்கு ஏதாவது வினையாற்ற வேண்டுமென்றிருந்தது. ஆனால், அவனால் எதையும் தொடங்கி ஆர அமர்ந்து செய்ய முடியவில்லை. எந்தப் பொருளை எடுத்தாலும் 'இது ஒரு விளையாட்டு' என்பான். வகுப்பில் இங்கும் அங்கும் ஓடுவான். இல்லாவிட்டால் மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுப்பான். கடைசியில் அவனுக்கு ஓவியம் தீட்டுவதில் அக்கறை பிறந்தது. சாதாரணமாக ஓவியம் தீட்டுதல் என்பது புலன் சார்ந்த பயிற்சிகளுக்குப்[2] பிறகே எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். இருப்பினும் அவன் விருப்பம்போல் இதைச் செய்ய விட்டு விட்டோம். இக் குழந்தையை வேறு தொழிலில் ஈடுபடக் கட்டாயப்படுத்துவதில் ஒரு பயனும் இருக்காதென்று கருதினார்கள் ஆசிரியைகள். ஆம், உண்மையான தீர்மானமே. ஒருவனுடைய ஸ்தூல உடலின் தேவையைத் திருப்தி செய்யக்கூடிய பொருள்கள் இனி இவனுக்குப் பயனளிக்காத வயதுக்கு வந்து விட்டான். உயர்ந்த வயதின் பொருளால் இப்பொழுது இவன் கவரப்படுகிறான். ஓவியம் தீட்டும் வினை ஆற்றல். முதலில் இவன் ஒரு தொழிலிலிருந்து மற்றொரு தொழிலுக்குத் தாவினான். நெடுங்கணக்கின் எழுத்துகளை அவன் ஓர் சமயம் எடுத்ததும் உண்டு. ஆனால் அவனால் எந்த ஒரு தனிப் பொருளை வைத்துக் கொண்டும் தொடர்ந்து பணியாற்ற இயலவில்லை. திடீரென்று கட்டுப்பாடு நிலைபெற்று விட்டது. எந்தத் தருணத்தில் இந்த மாறுதல் ஏற்பட்டதென்று எங்களுக்குத் தெரியாது. ஆனால் கட்டுப்பாடு—ஒழுங்கு நிலைபெற்று விட்டது—சீராக்கப்பட்டு விட்டது. குழந்தை தான் ஆற்றிவந்த ஒவ்வொரு தொழிலின்மேல் காட்டி வந்த அக்கறைக்கு ஒத்த வகையில் கட்டுப்பாட்டின் திறம் உயர்ந்து கொண்டே போயிற்று. முதலில் ஓவியத்தில் அக்கறை தூண்டப்

[1] Froebel. [2] Sensonal.

பட்ட பிறகு அவன் தானாகவே எண்கோல்களை எடுத்துக்கொண்டான். பிறகு ஜியோமித்ரி சார்ந்த வடிவங்களை எடுத்து வைக்கத் தொடங்கினான். இப்படியே இதுவரை ஆசிரியர் எடுத்துக் காட்டாமல் ஒதுக்கிவைத்திருந்த ஒவ்வொரு புலன் தீட்டும் பயிற்சிகளையும் செய்யத் தொடங்கினான். இவ்வாறு வயது வந்த பையன் பொருள்களைத் தலைகீழ் வரிசையில் தேர்ந்தெடுப்பதைக் காண்கிறோம். மிகவும் கஷ்டமானதிலிருந்து மிகவும் எளிமையானதற்கு அவன் படிப்படியாகவும், ஒழுங்காகவும் போவதைக் காண்கிறோம்.

மற்ற மூன்றாண்டுக் குழந்தையும் கட்டுப்பாடற்றதாகவே இருந்தது. இவன் இருந்த வகுப்பில் ஒழுங்கை நிலைநாட்ட ஆசிரியர்கள் திண்டாடினார்கள். திடீரென்று இந்தக் குழந்தை உருளைகளின் மேல் அக்கறை காட்டினான்; எடுத்துக்கொண்டான், வினையாற்றினான். அதேபோல் பொத்தான் சட்டங்களில் ஒன்றின் மேலும் அக்கறை காட்டினான். அதற்குப் பிறகு அவன் தொடர்ந்துஅமைதியாக வேலை செய்தான். தன் தோழர்களைத் தொந்தரவு செய்வதும் நின்று விட்டது.

* * *

ரோமாபுரியில் ஏழைக்காக நிறுவப்பட்ட குழந்தை இல்லங்களை சின்யோரா மக்ரோனி [1] என்றவர் மேல் தணிக்கை பார்த்து வந்தார். இன்னும் சிறப்பும் ஒழுங்கும் வாய்ந்த பரிசோதனைகளைச் செய்ய முடிந்தது. இவைகள் வரிப்படங்களால் விளக்கம் தரப்பட்டன. இந்தப் படங்கள் இயல் நிகழ்ச்சியின் போக்கினை இன்னும் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன.

A. B — கிடைக்கோடு இயங்கா நிலையைக் குறிக்கிறது. ஒழுங்கின் இயல் நிகழ்ச்சி (தொழில்) மேலே குறிக்கப்பட்டுள்ளன. ஒழுங்கின்மை கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு தொழிலினால் தீவிரமாகக் கவரப்பட்டிருந்தால் அக் குழந்தையின் உள்ளத்தில் ஒரு நிரந்தர ஒழுங்கு நிலை ஏற்பட்டு விடலாம். இந்த நிலையில் தொழிலுக்கு மிகவும் பொருத்தமான நிபந்தனைகளை ஆராயலாம்.

ஒழுங்குபட்ட தொழிலின் மூலமுதலான வளைவு




[1] Signora Maccheroni.

இவ்வாறுதான் குழந்தை வளர்கிறது. இது ஒழுங்குபடுத்திய காலைத் தொழிலின் தனி ஒரு மாதிரி.

குழந்தை ஒன்றும் செய்யாமல் சும்மா கொஞ்ச நேரம் இருக்கிறது. பிறகு தனக்கு எளிதாகத் தோன்றும் ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. எடுத்துக்காட்டாக வண்ணங்களை வரிசைப் படுத்தலாகும். இம்மாதிரி சற்று நேரம் தொடர்ந்து பணியாற்றுகிறான். ஆனால், நிரம்ப நேரம் இல்லை. இயங்கும் எழுத்துகளை வைத்துக் கொண்டு வார்த்தைகளைக் கோப்பது போன்ற இன்னும் சிக்கலான தொழிலுக்கு மாற்றிக்கொள்கிறான். இதே தொழிலை நிரம்ப நேரம் செய்து கொண்டிருக்கிறான் (சுமார் அரைமணி நேரம்). இந்த நிலைமையில் அவன் வேலையை நிறுத்தி விடுகிறான். அறையைச் சுற்றிலும் நடக்கிறான். இன்னும் குறைவான அமைதி பெற்றவனாகக் காணப்படுகிறான். வெளிப்படையாக நோக்குபவர்க்கு அவனிடம் சோர்வின் சாயல் இருப்பதுபோல் காணப்படும். சில நிமிடங்களுக்குப் பிறகு இன்னும் கடுமையான தொழிலை அவனே தேர்ந்து எடுத்துக் கொள்கிறான். அதில் ஆழ்ந்து கிடக்கிறான். தொழிலின் உச்சியை இவன் அடைந்து விட்டதாக நமக்குக் காட்டுகிறான். (கூட்டல்களும் அவைகளின் முடிவை எழுதிக் கொள்வதும்) இந்தத் தொழில் நிறைவேறின பிறகு அவனுடைய வினையாற்றல்கள் எல்லாம் ஒரு வீறமைதி நிலை (sernity) அடைகிறது. தன்னுடைய கைத்தொழிலை ஆழ்ந்து வெகுநேரம் சிந்திக்கிறான். பிறகு ஆசிரியையிடம் நெருங்குகிறான். நம்பிக்கை வைத்து அவரிடம் உள்ளத்தைக் கொட்டி விடுகிறான்.

இக் குழந்தையின் தோற்றம் பார்ப்பதற்கு ஓய்வெடுத்து மன நிறைவு எய்தித் தன்னை உயர்த்திக் கொண்ட ஒருவனைப்போல் தோன்றுகிறது.

இந்தக் குழந்தையின் தொழிலில் முதல் காலப்பகுதிக்கும் இரண்டாவது காலப்பகுதிக்கும் இடையே காணப்படும் சோர்வும் தோற்றமும் அக்கறையூட்டுவனவாக இருக்கின்றன. அத்தருணத்தில் வளைவின் இறுதியில் இருப்பதுபோல் குழந்தையின் மனப்பாங்கு அமைதியாகவும் மகிழ்ச்சி பெற்றதாகவும் இருப்பதில்லை. அவன் ஒரு கலக்கத்தைக் காட்டுகிறான்; அசைகிறான்; இங்குமங்கும் நடக்கிறான். ஆனால், மற்றவர்களைத் தொந்தரவு செய்வதில்லை. அவன் தனக்கு மிகவும் மனநிறைவு அளிக்கக்கூடிய அக்கறை ஒன்றைத் தேடுவதுபோலக் காண்கிறான். தன்னுடைய மாபெரும் தொழிலுக்கு ஆயத்தமாகிறான்போல் தோன்றுகிறான்.

ஆனால், வளைவு முடிந்தவுடன் குழந்தை தன்னுடைய அந்த ரங்க ஒருமுனைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறான். புது ஊக்கம் பெறுகிறான்; மனநிறைவெய்துகிறான். மற்ற உள்ளங்களுடன் ஆழ்ந்து கலந்து கொள்வது போலும், தன் உள்ளத்தில் உள்ளதை மறைக்காமல் பிறரிடம் நெருங்கி எடுத்துக் கூறுவது போலும் உள்ளம் உயர்ந்த சமூக உணர்ச்சிகளை அனுபவிக்கிறான்.

வரவர இத்தகைய தனிப்பாங்கே கட்டுப்பாடு பெற்ற வகுப்புக் குழந்தைகளின் பொதுப் பாங்காக ஆகிவிட்டது. சிஞோரினா மக்ரோனி இந்தச் சிக்கலான இயல் நிகழ்ச்சியைக் கீழ்க் கண்டவாறு தொகுத்துக் கூறுகிறார்:

### முழு வகுப்பும் தொழிலில் ஈடுபாடும்

காலையின் முதல் காலப் பகுதிக்குள், அதாவது காலை சுமார் 10 மணி வரைக்கும் அவர்கள் தேர்ந்து எடுத்துக் கொள்ளும் தொழில் பொதுவாக எளிதாகவும் பழக்கப்பட்டதாகவும் இருக்கிறது.

பிறகு 10 மணிக்கு அங்கு ஒரு பெரிய குழப்பம் ஏற்படுகிறது. குழந்தைகள் அமைதியிழந்து எந்தத் தொழிலும் ஆற்றுவதில்லை. பொருள்களைத் தேடச் செல்வதும் இல்லை. வெளியிலிருந்து பார்ப்பவர்க்கு, 'இவர்கள் களைத்துப்போய் விட்டார்கள்; இனி ஒழுக்கம் குறையும்' என்று தோன்றலாம். சிறிது நேரத்திற்குள் மிகவும் சீரான ஒழுக்க நிலை மறுபடியும் ஏற்படுகிறது. மறுபடியும் குழந்தைகள் காலத்தைக் கழிக்காமல் தத்தம் தொழிலில் ஆழ்ந்து கவரப்படுகின்றார்கள். இப்பொழுது அவர்கள் புதிதாகவும் இன்னும் கடினமான தொழில்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றார்கள்.

இந்தத் தொழில் முடியும் பொழுது குழந்தைகள் முரட்டுத் தனமற்று, அமைதியாகி இன்புறுகின்றார்கள்.



போலிச் சோர்வு நேரத்தில் அதாவது 10 மணிக்கு அனுபவம் பெற்றிராத ஆசிரியை ஒருவர் இனிமேல் வரப்போகும் தொழி லுக்கு ஆயத்தமாவதையோ அல்லது தாற்காலிகமாகத் தொழில் நின்றிருக்கும் இயல் நிகழ்ச்சியையோ ஒழுங்கின்மை என்று கருதிக் குறுக்கிட்டு, குழந்தைகளைத் தன்னிடம் அழைத்து ஓய்வெடுக்க வைத்தாராஞல் அவர்களுடைய அமைதிக்குறைவு இன்னும் நீடிக் கிறது. இனிமேல் அவர்கள் மேற்கொள்ள இருந்த தொழிலை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்வதில்லை: குழந்தைகள் அமைதி பெறுவதில்லை. அவர்கள் அசாதாரண நிலையில் இருக்கின்ருர்கள். அதாவது அவர்கள் தம்முடைய தொழிலாற்றும் வட்டத்தில் குறுக்கிடப்பட்டார்களாஞல் அந்தரங்கத்தில் ஒழுங்காகவும் முழுமையாகவும் நடைபெற இருக்கும் இயக்கம் சார்ந்த எல்லா சிறப்பியல்புகளையும் இழக்கின்ருர்கள்.

* * *

தனியாரின் ஒழுங்கான தொழிலைக் காட்டும் தனி வளைவு எல்லோர்க்கும் பொதுவல்ல. இங்கு வருணிக்கப்பட்டதுபோல் எப்பொழுதும் ஒரே தன்மையாக இருப்பதும் இல்லை. நிலைநாட் டப் பெற்ற ஒழுங்கு நிலையின் சராசரி மாதிரி என்றும் கொள்ள லாம். இந்த ஒழுங்கு இன்னும் நிலைபெறப்படாதிருக்கும் குழந் தைகளைப்பற்றி முதலில் ஆராய்வது அக்கறை தருவதாகும். பணக் காரக் குழந்தைகள் போல் ஏழைக் குழந்தைகள் இத்தகைய முழுக் குழப்ப நிலையில் தாங்கள் இருப்பதாகக் காட்சி அளிப்பதே இல்லை. ஏழை மக்கள் பொருள்களைக் கண்டதுமே கவரப்படுகின்ருர்கள். தொடக்கத்திலிருந்தே அவர்கள் ஓரளவுக்கு அவைகளிடம் அக் கறை காட்டும் வகையில் பிரதிசெயல் செய்யக்கூடிய தன்மை (respond) பெற்றிருக்கின்ருர்கள். இத்தகைய அக்கறை முதலில் மேலெழுந்தவாரியாகவே இருக்கிறது. புதுமையைக் கண்ட கவர்ச்சியே அது. அழகான பண்டங்களைத் தொட்டு எடுக்க உந்தும் இயற்கையான ஆர்வமே அது. தனி ஒரு பண்டத்தை வைத்துக்கொண்டு சிறிது நேரம் பொழுது போக்குகின்ருர்கள். என்பது உண்மை. பிறகு அவைகளை மாற்றி வேருென்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்ருர்கள். ஆஞல், அவர்கள் இவ்வாறு செய்யும் பொழுது எவ்வித ஆழ்ந்த அக்கறையையும் வளர்த்துக் கொள்வதில்லை. பணக்காரக் குழந்தைகளிடம் காணப்படாத இந்தப் பருவத்தில் காணப்படும் சிறப்பியல்பு என்னவென்ருல், மாறி மாறித் தோன்றும் ஒழுங்கின்மையாகும். பின்வரும் விளக்க வரைபடம் இதைக் காட்டும்.

## தனியாள் வேற்றுமைகள்

ஒழுங்கு நிலைபெறு முன் உள்ள நிலை.
ஏழைக் குழந்தை ஒன்றின் தனி வளைவு.




தொழிலின் பல வளைவுகளும் ஓய்வுநிலைக் கோட்டின்கீழ் ஒழுங்கின்மைப் பகுதியில் காணப்படுகின்றன. எல்லோரையும் ஒழுங்காக இருக்க வேண்டும் என்று பொதுவாக நினைவூட்டும்பொழுதுதான் அக் குழந்தை அமைதி பெற்றது. அக் குழந்தை தொழிலைத் தொடங்குவதாக இருந்தால் அமைதி பெற்றது. அவ்வாறு இருந்தபோதிலும் அது அவ்வளவாகத் தொடர்ந்து தொழில் ஆற்றவும் இல்லை. வளைவு திடீரென்று கீழே சாய்ந்து விடுகிறது. இந்த விளக்க வரைபடத்தில் ஒழுங்கின்மையைக் காண்கிறோம். அதில் கடின தொழிலுக்கு முன் ஓர் எளிய தொழிலை மேற்கொள்வதை நாம் குறிக்க வேண்டும் (சட்டம், ஜியோமித்ரி வடிவம்) இந்த இரண்டுக்கும் இடையே அதிகமான ஒழுங்கின்மையில் சரிகின்றது.

## தொழிலின் வளைவு

**மிகவும் ஏழைக் குழந்தை பெற்றோர்களால் பெரும்பாலும்**
**கவனிக்கப்படாதது மிகவும் கட்டுக்கடங்காதது**
**ஒழுங்கின்மையின் காலப்பகுப்பு**




இந்தக் குறிப்பிட்ட குழந்தை மற்றவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளும் திறமை பெற்றிருப்பதுபோல் தோன்றிற்று. அவன் தொழிலில் இருந்து ஓடிவிட்டான். அப்படிக் கவர்ச்சிக்கு உட்பட்டாலும் சிறிது நேரத்துக்குத்தான் செயலாற்றினன். நேரடியான

போதனையைப் பெறச் சக்தியற்றவன்போல் இருந்தான். பாடம் கற்பிக்க ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டால் அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு ஓடி விடுவான். இங்குமங்கும் ஓடுவான். நண்பர்களைத் தொந்தரவு செய்வான். அவனைப் பின் தொடர்வது அரிதாக இருந்தது. ஆனால் ஆசிரியை மற்றக் குழந்தைகளுக்கு அளித்த பாடங்களை மிகுந்த கவனத்துடன் கேட்டுவந்தான்.

### ஒழுங்குப் பாதையில் முன்னேற்றம்




எப்படித் தொழில் புரிவது என்று கற்றுக்கொண்டு அவன் தொழில் ஆற்றத் தொடங்கின பொழுது தன்னுள் ஊக்கம் குன்றாமல் செய்து வந்தான். அவனுடைய சாதாரணப் போக்கு வரைபடத்தில் தெளிவாகக் காட்டப்படுகிறது. அதாவது அவன் தொடக்கத்தில் தொழில் புரிந்தும், பிறகு சற்று ஓய்வுக்கெடுத்துக் கொண்டும் இந்த இடை வெளிக் காலத்தில் குழந்தை பழையபடி தன் தோழர்களைத் தொந்தரவு செய்வதில் தாற்காலிகமாக இறங்கினான். பிறகு வினையாற்றலின் பெருமுயற்சி நடந்தது. மறுபடியும் சிறிது ஓய்வு (இந்தக் கால இடைவெளியில் மறுபடியும் தன் பழைய குறைபாட்டினைக் காட்டிக்கொண்டான்). இந்த வரைபடத்தின் உச்சிகள் தொழிலில் காட்டப்படும் அக்கறையைக் காட்டுவதோடு குறிப்பிட்ட தகுந்த கருணையையும் காட்டுகிறது. குழந்தை அமைதியுடன் மட்டும் இருக்கவில்லை. ஆனால், பேரானந்தமும் சாந்தமும் பெற்றவனானான். அவனுடைய தொழில் புரியும் ஆற்றலின் உச்ச நிலையில் அடிக்கடி தன் தோழர்களைச் சற்று நோக்கினான். தன் விரல்களைத் தன் உதட்டின் நேர் வைத்து அவர்களுக்கு முத்தம் அளிப்பது போல் சாடை செய்தான். அவ்வாறு செய்யும் பொழுது தன்னுடைய தொழில் எவ்வித கவனத்தையும் தளர்த்தவில்லை. அவனுடைய ஆன்மா கரடுமுரடாகவும் கவர்ச்சி அற்றதாகவும் முதலில் இருந்தது. இப்பொழுது அந்த ஆன்மாவின் ஆழத்திலிருநது தன்னுடைய உள மனநிறைவின் முழுமையால் அன்பு ஊற்று சுரந்து பாய்வதுபோல் காட்சி அளிக்கப்பட்டது.

ஊக்கம் குன்றிய ஒரு குழந்தையின் தொழில் வளைவு




இந்த வரைபடத்தில் வளைவுகள் ஒய்வு நிலைக் கோட்டைத் தொடுகின்றன. இதில் வளைவின் ஐக்கியம் இல்லை. ஆதலால் முயற்சியின் ஐக்கியமும் இல்லை. தொடக்கத்தில் எளிதான சில தொழில்களைச் செய்த பிறகே தொழிலின் உச்சநிலை (culminating point) தோன்றுகிறது. இன்னும் உயர்ந்த பணி (வண்ணங்கள்) பெரிய தூண்டுதல் சலித்துப் போன பிறகு மறுபடியும் தொடங்கப் படுகிறது. இளைப்பாறும் பகுதி தெளிவாகக் காணப்படுவதில்லை. குழந்தை ஓர் எளிய செயலை (உருளைகள்) நாடிச் செல்கிறது. அரைகுறை மனப்பாங்கில் பண்பின் வன்மை இன்மை தானாகத் தோன்றுவது போல் இருக்கிறது. குழந்தை முன்னேறுவதற்குத் தொடர்ந்து பல முயற்சிகள் செய்கிறான். ஆனால் அவனால் தீவிர மாக முயற்சி செய்யத் தீர்மானம் செய்யவும் முடியாது. வேலை நிறுத்தம் செய்யலாம் என்றும் ஒரு தீர்மானத்துக்கு வரமுடிவதும் இல்லை. குழந்தை அமைதியாயிருக்கிறது. ஆனால் அந்த அமைதிக்கு வேறுபாடுகள் இல்லை. அவன் உற்சாகமுடையவனும் அல்லன்; சாந்தமாகவும் (Serene) இல்லை. நிறைந்த அன்புணர்ச்சியையும் காட்டுவதில்லை.

முன்னேற்றத்தின் போக்கு

முழு வகுப்பும் கட்டுப்பாட்டொழுங்கு நிலைபெற்ற பிறகு அந்தரங்க வினையாற்றலின் வளர்ச்சிப் போக்கினைக் கூர்ந்து கவனிக்க முடியும்.

புறப்பொருள் வளர்ச்சி படிப்படியான பயிற்சிகளைச் செய்யும் வகையில் அமைந்திருக்கின்றதை நாம் நினைவு படுத்திக்கொள்ள வேண்டும். இப் பயிற்சிகள் மிகவும் அடிப்படையான புலன் பயிற்சிப் பொருள்களிலிருந்து எழுதும் பயிற்சிக்கும், கணக்குப் போடுவதற்கும், வாசிப்பதற்கும் வேண்டிய பயிற்சிகள்வரை அமைந்திருப்பதை நாம் மறந்து விடக்கூடாது. குழந்தைகள் தமக்கு விருப்பமான பயிற்சிகளைத் தாமே தன்னுரிமையுடன் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஆனால் ஆசிரியை ஒவ்வொன்றையும் அறிமுகப்படுத்தின பிறகு அவர்களுக்கு எதன் பயன் தெரியுமோ அதைத்தான் அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். (சூழ்நிலையில் காணப்படும் எந்தப் பொருளையும் அறிமுகப் படுத்தப்படாவிடில் எடுத்துக் கொள்ளக் கூடாது என்பது ஒப்புக்

கொண்ட விதி—மொழிபெயர்ப்பாளர்) இந்தக் குழந்தைகளைக் கூர்ந்து கவனித்து வரும் ஆசிரியை இன்னும் மேலான பயிற்சிகளைக் கொடுக்கக்கூடிய முதிர்ச்சி குழந்தையிடம் எப்பொழுது உருவாகிறது என்று கவனித்து வருவார். அப்பொழுது அதை அக் குழந்தைக்கு அறிமுகப்படுத்திவைப்பார். அல்லது தன்னிலும் முன்னேறின குழந்தைகள் செய்வதைப் பார்த்து அக் குழந்தையும் தானே அப் பொருளை எடுத்துக்கொண்டு விளையாற்றலாம்.

இத்தகைய நிலைமைகளை மனத்தில் இருத்திக்கொண்டே தொழிலின் முன்னேற்றத்தைத் தொடர முடியும்.

தொடக்கத்தில் கண்ட ஒழுங்கான தொழிலைக் குறிக்கும் வளைவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இரண்டு வளைவுகளும் மிகவும் உயர்ந்த வளர்ச்சியைக் காட்டுகின்றன. எளிய வேலைக்கும் கடின வேலைக்கும் இடையே உள்ள அமைதியின்மை மறைய ஆரம்பிக்கிறது. குழந்தைக்குத் தன்னைப் பொறுத்த மட்டும் ஐயப்பாடெதுவும் இல்லை. அவனுடைய முடிவுப் பயிற்சிகளுக்கு நேராகச்சென்று தயக்கமில்லாமல் தேர்ந்தெடுக்கிறான்.

எனவே குறுக்கீடற்ற தொழிலின் இரண்டு தொடர்ந்த பகுதிகள் விடப்பட்டிருக்கின்றன. ஒன்று ஆயத்தப் பகுதி என்றும் (phase of preparation) மற்றது கருத்தூன்றிய தொழில் பகுதி (phase of serious work) என்றும் கூறலாம். ஆயத்தப் பகுதி அல்லது கட்டம் மிகவும் குறைந்த நேரத்தளவேதான் நிலைத்திருக்கும். கருத்து ஊன்றிய தொழில் இன்னும் நீண்ட




நேரம் நிலைத்திருக்கும் உச்ச அளவு முயற்சி தானாகவே தீர்ந்த பிறகு (Maximum effort has spontaneously spent itself) ஓய்வுப் பகுதி தன்னுடைய சுகத்தையும் அமைதியையும்

பெற்றவாறு தோன்றுகிறது. இதற்கு மாருகக் குழந்தையின் முயற்சியை வெளியிலிருந்து ஏதாவது ஒன்று தடை செய்தால் நிச்சயமாக அப்பொழுது குழந்தையிடம் சோர்வைக் கிளப்பி விடும் சாயலைக் காட்டி விடுகிறது—அமைதி அற்று விடுகிறது. அல்லது கவனத்தை இழக்கிறது.

முதல் வளைவில் முதல் தொழில் இரண்டு எளிய தொழில்களைக் கொண்டதாகும். இவை குறுகிய கால அளவு வினையாற்றப்பட்டன. இவைகளிலிருந்து குழந்தை நேராகத் தொழிலில் ஈடுபடுகிருன். இறுதிப் பகுதியானது எண்ணம் நிறைந்த ஓர் ஓய்வுப் பகுதியாகும். குழந்தை வேலை செய்வதை நிறுத்திவிடுகிறது. ஆனால் தான் நிறைவேற்றின வேலையைப்பற்றி நீண்ட நேரம் மௌனமாக ஆழ்ந்து சிந்திக்கிறது. எடுத்து வினையாற்றி வந்த பொருளை அதன் இருப்பிடத்தில் வைக்கப்போகும் முன்போ அல்லது அவனுடைய வேலையை நிறைவேற்றின பிறகோ மற்றவர்கள் செய்து கொண்டிருப்பதைக் கூர்ந்து கவனிப்பதற்காக அமைதியாகச் செல்கிருன்.

இரண்டாவது வளைவில் அமைதிக் கோட்டுடன் குறிப்பிடத்தக்க ஒருபோகுநிலை (parallelism) இருக்கிறது. குழந்தை தன் வேலைகளை ஒரே மாதிரியாகத் தொடர்ந்து செய்கிருன். தொடக்க வேலைக்கும், கருத்தூன்றிய வேலைக்கும் உள்ள வேற்றுமை, அவைகள் நடைபெறும் நேரம் அல்லது காலவரம்புக்குள் இருக்கிறது. சிந்தனை செய்யப்படும் பகுதி இனிமேல் அந்தரங்கத் தொழில் பகுதியின் ஐயத்துக்கிடம் தாராததாகி விடுகிறது. இது அனேகமாக உள்மயம் ஆகும் பருவம் எனலாம். அல்லது அந்தரங்க முதிர்ச்சி என்றும் கொள்ளலாம். பிறர் செய்யும் தொழிலைக் கூர்ந்து கவனிப்பதென்பது அடிக்கடி முன்னிலும் அதிகமாகி விடுகிறது. தன்னுடைய வேலையையும், பிற தோழர்களின் வேலையையும் தானுகவே ஒப்பிட்டுப் பார்ப்பது போல் இருக்கிறது. அல்லது வெளிச் சூழ்நிலையைப்பற்றிச் சிந்தனை செய்வது இன்னும் வளர்ச்சி அடைவது போலி, புதுமை கண்டு பிடிக்கும் காலம் போலும் (period of discovery) தோன்றுகிறது. குழந்தை தான் சாதித்தவைகளைப் பற்றித் தானுகவே ஆய்வது போலும் தன் தோழர்களுடன் தன்னை உடன்படுத்திக்கொண்டு தன் சூழ்நிலையையும் ஆய்வதுபோலும் காணப்படுகிருன்.

இந்த நிலையில் முழு வளைவும் நிறைவேறும் பொழுது குழந்தையின் ஆளுமையின்மேல் வரவர இன்னும் அதிகமாகத் தன் சக்தியைச் செலுத்துகிறது. உடனடியாக நிறைந்த ஒருமுனைப்பைப் பெற்ற தொழில் புரியத் தூண்டப்படுவது மட்டும் அல்லாமலும் அந்தரங்க சமநிலையையும் தன் சூழ்நிலையின்மேல் இடை

விடாது தொடர்ந்து அக்கறையையும் காட்டுகிறான். உயர்ந்த பரிணாமத்தைப் பெற்ற (evolution) ஆளுமை படைக்கப் பெற்ற வனாகி விடுகிறான். இந்தப் பருவத்தில்தான் குழந்தை தானே தன் எசமானன் ஆகிவிடுகிறான். என்றால் அழைக்கப்படுகின்ற கீழ்ப் படிதல் என்ற இயல்நிகழ்ச்சிக் கட்டத்தில் (Phenomenon of obedience) அவன் நுழைகிறான். அவனால் கீழ்ப்படிய முடியும். அதாவது அவன் தன்னுடைய செயலைக் கட்டுப்படுத்த முடியும். ஆதலால் மற்றொருவருடைய விருப்பத்தின்படி வழிகாட்டப்படுவதற்கு இணங்கத் தன் செயலைத் திருப்பிவிட முடியும். நடுவில் குறுக்கிடப் பட்டாலும் தன் ஒழுங்கை இழக்காமலும், சோர்வின் சாயலைக் காட்டாமலும் தன் வேலையை அப்படியே நிறுத்தி வைக்க முடியும். மேலும் தொழில் என்பது அவனுடைய பழக்கப்பட்ட பாங்காகி விட்டிருக்கிறது. குழந்தையால் இனிமேல் சோம்பேறி யாக இருக்க முடியாது. எடுத்துக்காட்டாக ஆசிரியர் சில சமயங் களில் இந்த நிலையில் இருக்கும் குழந்தைகளுக்கு ஒரு பாடத்தை அறிமுகப்படுத்த அழைப்பார்கள். அப்பொழுது சிலரைக் கொண்டு தான் பாடம் கற்பிக்கப்பட வேண்டும். அந்தச் சமயத்தில் இத் தகைய குழந்தைகள் தாமே பணிவுடன் முந்திக்கொள்கின்றனர். குழந்தைகளின் உயரம், எடை முதலியவைகளை அளக்க வேண்டு மென்றால் இவர்கள் முன் வருகின்றனர். அதை ஒரு தொல்லையாக நினைப்பதில்லை. நாம் சொல்கின்ற பயிற்சிகளைச் செய்ய ஒப்புக் கொள்கின்றனர். அவ்வாறு ஒப்புக்கொள்வதிலும் அப்பொழுது அவர்களிடம் ஓர் அக்கறை காணப்படுகிறது. ஏதோ செய்ய வேண்டுமென்பதற்கு அல்ல. அவர்களும் நம்முடன் ஒத்துழைப்ப தாக எண்ணியே அவ்வாறு செய்கின்றனர். ஆனால் அழைக்கப் படும் வரை அவர்கள் ஓரிடத்தில் அமைதியாக உட்கார்ந்திருக்கப் பட வேண்டுமென்றிருந்தால், அவர்களால் சும்மா இருக்க முடி யாது. வேறு எதையாவது வைத்துக்கொண்டு விளையாற்றியே வந்தனர். சும்மா இருப்பது என்பது அவர்களால் பொறுக்க முடி யாத காரியம். நான் ஒரு பாடத்தை அறிமுகப் படுத்திக் கொண் டிருக்கும் பொழுது பெரும்பாலும் பின்னல் சட்டத்தையோ அல்லது நாடாச் சட்டத்தையோ எடுத்துக்கொண்டு அவர்கள் விளையாற்றி வருவார்கள். இல்லையேல், இயங்கும் எழுத்துகளைக் கொண்டு (movable letters) தரைப்பரப்பு முழுவதையும் கோத்த வார்த்தைகளால் நிறைத்து விடுவார்கள். காத்திருக்க வேண்டிய நேரத்தில் வசதியுள்ள சூழ்நிலையில் இக் குழந்தைகள் வண்ணப் படங்களைத் தீட்டிக் கொண்டிருப்பார்கள்.

இவைகள் அனைத்தும் நுண்ணறிவு சார்ந்த விளையாற்றலின் வெளித் தோற்றங்களாகிவிட்டிருக்கின்றன. இவ் விளையாற்றல்கள்

அவர்களுடைய உள்ளார்ந்த உறுப்பாண்மை ஆகும் (psychical organism).

ஆனால் இந்த மனப்பான்மை தொடர்ந்து நடைபெறுவதற்கும் ஆளுமை வளர்ச்சிக்கும் ஒவ்வொரு நாளும் ஒரு மெய் உயிர்ப் புடைய பணி ஒன்றினைச் செய்வது அவசியமாகிறது. ஏனென்றால் முறைப்படி கவனம் செலுத்தப்பட்டதின் விளைவான ஒரு வினையின் முழு வட்டத்தாலேதான் (cycle of an activity) குழந்தை சமநிலை, நெகிழ்திறம் (elasticity), தழுவல்தன்மை ஆகியவற்றை வளர்க் கிறான். இதைக் காணும் பொழுது கத்தோலிக்க மதம் அறநெறிச் சக்திகளை நிலைபெறச் செய்வதற்கு விதித்துக் கொள்ளும் முறை நமக்கு நினைவூட்டப்படுகிறது. அது அறநெறியின் ஒருமுனைப்புக் காலப் பிரிவாகும் (Period of spiritual concentration). இது அற நெறிச் சக்திகளைப் பெறும் வாய்ப்பளிக்கிறது. முறையான தியானத்தின் மூலமாகத்தான் அறநெறி ஆளுமை (moral personality) தன்னுடைய திண்மை சக்தியைப் பெற வேண்டும். இதில்லா விடில் உள்ளார்ந்த மனிதன் தொடர்பிசைவற்று (incoherent) நிலை தவறி, தன்னைத் தானே அடக்கி ஆளும் தன்மையற்று, சீர்மைப் பணிகளில் ஈடுபடும் திறமையும் பெறாதவனாகிறான்.

இறுதி வளர்ச்சித் திறமையைப் பெறுவதற்குக் குழந்தை களுக்கு எப்பொழுதும் கவனம் செலுத்தப்படும் காலப் பிரிவும், கருத்தூன்றிய வினையும் தேவைப்படுகின்றன.

கீழே தரப்படும் வரைபடம் குழந்தையின் விழுமிய வளர்ச்சி யைக் காட்டுகிறது.

மேம்பட்ட படிநிலை (superior stage).

சராசரி மாதிரிப் படிவம் (average type).

எழுத்துகளை விளக்குதல்
எழுதுகிறது
சீட்டுகளை வாசிக்கிறது
இன்பப்பொழுது போக்த
பாடப்புத்தகங்களைப் பார்த்தல்

ஓய்வு நிலைக்கோடு

இப்பொழுதெல்லாம் ஆயத்த வேலையும் சற்று உயர்ந்த தொழிலாகவே இருக்கிறது. குழந்தை பள்ளிக்கூடத்துக்கு வந்த வுடன் நெடுங்கணக்கின் எழுத்துகளை எடுக்கிறான்; அல்லது எழுதுகிறான். அதன் பிறகு (அவனுடைய மிக முயற்சி வாய்ந்த தொழில்) அவன் வாசிக்கிறான். இன்பப் பொழுது போக்குக்குப் படப் புத்தகங்களைப் பார்க்கிறான்.

அவனுடைய அறநெறி இயல்பு குணங்களைப் போல் (கீழ்ப் படிதல், சாந்தம், விடாமுயற்சி) நுண்ணறிவு வேலைகளும் உயர்ந்த படி நிலையுள்ளதாக இருக்கும்.

ஓய்வு நிலைக் கோட்டின் வளர்ச்சியினைச் சமநிலையாக எடுத்துக் கொண்டால் அந்த வளர்ச்சி மட்டம் இன்னும் உயர்ந்திருக்கிறது.




உயர்ந்த படிம நிலையில் தொழிலைக் குறிக்கும் கோடு ஓய்வு நிலைக் கோட்டுக்குச் சமதூரக் கோடுபோல் (parallel) இருக்கிறது.

இதற்கிடையில் வளர்ச்சியின் அளவை (degrees of development) அல்லது அந்தரங்க வளர்ச்சியின் சராசரியைக் கணக்கிட முடியும் என்பதை நிலைநாட்டியிருக்கின்றனர். இந்த அக வளர்ச்சியின் மூலம் தனியொருவரின் வேறுபாட்டினைக் கண்டறிய முடியும் அவை தொடக்க மாதிரியின் சிறப்பியல்புகளும், ஒழுங்கற்ற போக்கும், கவனத்தை எதிலும் ஒருநிலைப்படுத்த இயலாத தன்மையும் ஆகும். அத்தகைய நிலையில் உண்மையான தொழில் கோடு இல்லை. வரைகோட்டின் முக்கிய பகுதி ஓய்வு நிலைக் கோட்டுக்குக் கீழேயே இருக்கிறது. ஒரு தொழிலின் மேல் நிராதரமான ஒரு கவனத்தின் ஒருமுனைப்பைத்தானே பெற்று விட்ட குழந்தையிடம் சாதாரண முதல் ஒழுங்கு வேலையின் சராசரிச் சிறப்பு இயல் வரைபடம் இப்பொழுது நிலைபெற்று விடுகிறது. அதாவது தொடக்க வேலையைத் தொடர்ந்து ஓர் அமைதியிலா நிலையும், பிறகு கடினமான வேலையும் அதைத் தொடர்ந்து ஓய்வும் தோன்றுகின்றன.

இதற்குப் பிறகு இரண்டாவது டிகிரியைத் தெளிவாகக் காண் கிறோம். அமைதியிலாப் படிவம் மறைவதை இந்நிலையின் சிறப்பி யல்பாகக் காண்கிறோம். அந்நிலையின் சராசரி ஓய்வற்ற காலப்பகுதி (Period of unrest) மறைவது சிறப்பியல்பாகத் தோன்றுகிறது. கடினமான தொழில் ஆழ்ந்த சிந்தனையில் முடிவுறக் கொண்டுவரப் படுகிறது. புதுமைகளைக் கண்டுபிடிப்பதும் பொதுவாக உற்று நோக்குவதும், கீழ்ப்படிதலும் ஆகியவை தோற்றம் அளிக்கும் பகுதி இதுவாகும். ஒழுங்கான நடத்தை ஒரு பழக்கமாகிவிட் டிருக்கிறது.

இதைத் தொடர்ந்து ஒரு பொது உயர்தல் காணப்படுகிறது. அதனுடைய அறிகுறி இன்னும் உயர்ந்த தொடக்கத் தொழிலைத் தேர்ந்து எடுப்பதாகும். கட்டுப்பாடுடைய நடத்தை இப்பொழுது ஒரு பழக்கமாகிவிடுகிறது (disciplined behaviour has become a habit)

அவனுடைய இந்த முன்னேற்றத்தில் தொழிலின் வரை கோடு நேர்கோடாக முயன்று ஓய்வு நிலைக் கோட்டுக்கு இணைகர மாகி விடுகிறது.

ஒரு தொகுத்த வளர்ச்சிப்பட்டி
(A Recapitulatory Table of Development)

சராசரி வளர்ச்சியின் வரைபடம்




ஒரு நிலையின் மட்ட உயர்வு இன்னும் உயர்ந்த நுண்ணறிவு வேலையின் பண்புகளுடன் தொடர்புகொண்டிருக்கிறது. கோடு நேர்படுதல் அந்தரங்க ஆக்கு தொழில், ஆளுமையை ஒழுங்கு படுத்துதல் ஆகியவற்றின் குணங்களுடன் தொடர்பு கொண்டிருக் கிறது. இக் குணங்கள் அறநெறி ஒழுங்கினைச் சேர்ந்தவைகளே ஆகும். எடுத்துக்காட்டாக அமைதி, ஒழுங்கு அல்லது கட்டுப்

பாடு, கீழ்ப்படிதலிலும் குழந்தையின் வெவ்வேறு செய்வினைகளிலும் தோன்றும் தானே தன் வயப்படுத்தும் திறம் (self mastery) அறநெறி ஒழுங்கினைச் சேர்ந்தவைகள் ஆகும்.

தொழில் ஒரு பழக்கமாகி விட்டால் நுண்ணறிவு மட்டம் வேகமாக உயர்கிறது. சீர்ப்படுத்தப்பட்ட ஒழுங்கு (order) நல்லொழுக்கத்தை ஒரு பழக்கமாகச் செய்து விடுகிறது. அப்பொழுது குழந்தைகள் ஒழுங்கு, விடாமுயற்சி, கட்டுப்பாடு முதலியவைகளுடன் இடையறுது, இயற்கையாக உழைக்கின்றன. ஸ்தூல உறுப்புகளின் நிரந்தரமான அமைதியும், உயிர்ப்பூட்டும் தொழிலும், மூச்சுவிடும் ஒழுங்குக்கு (rhythm) ஒக்கும்.

இந்த ஆளுமையை உருவாக்குவதன் சூட்சுமம், இயக்க மையம்(Pivot) எங்கிருக்கிறது? அது தன்னுரிமையுடன் தொழில் புரிவதில் இருக்கிறது. அதுவும் அந்தரங்க வாழ்வுக்கு இயற்கையான தேவைகளைப் பொறுத்திருக்கிறது. இவ்வாறு உள் அமையும் கட்டுப்பாடு அல்லது ஒழுங்கென்பதின் அடிப்படை நுண்ணறிவுத் தொழிலின் தன்னுரிமையில் இருக்கிறது. குழந்தை இல்லத்தின் (case dei Bambini) பெரிய சாதனை என்ன? கட்டுப்பாடுடைய குழந்தைகளை உருவாக்குவது (disciplined children).

இந்த அந்தரங்க அமைப்பு முறை (organisation) குழந்தைகளுக்கு ஒரு தனி 'மாதிரி'—அல்லது குணநலத்தை அளிக்கிறது. பண்பாட்டின் தொடர் படிவங்களைப் படிப்படியாக வெற்றிபெறத் தேவைப்படும் பல வினையாற்றல்களைத் தன்னுரிமையுடன் பயிற்சி செய்ய இந்தக் குண நலம் தேவைப்படுகிறது.

தொடக்கப் பள்ளிக்கூடம், குழந்தை இல்லத்தின் தொடர்பு என்பதை நயமாக நமக்கு எடுத்துக் காட்டுகிறது. இங்கு நல்லொழுக்கம் ஒரு பழக்கமாகி விட்டிருக்கிறது (behaviour is a habit). இதற்கு முந்தின பருவத்தில் காணப்பட்ட தொழிலின் பழக்கம் (habit of work) இதன் மேல் (நல்லொழுக்கத்தின்மேல்) பதிந்து ஒன்றிவிட்டிருக்கிறது. இதற்குப் பிறகு இன்னும் உள்ள பண்பாட்டுத் துறை சார்ந்த பொருள்களைக் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்தினுல் போதும். குழந்தை அவைகளைக் கொண்டு படிப்படியாகத் தானே பயிற்சி செய்து வருகிறுன். அவ்வாறு செய்யும் பொழுது பண்பாட்டின் ஒரு நுண்ணறிவு மட்டத்திலிருந்து மற்றொரு நுண்ணறிவு மட்டத்துக்குச் செல்வான்.

படிப்படியான வயதுகளில் காட்டப்படும் வேறுபாடுகள் நுண்ணறிவு அக்கறையினடியாகப் பிறந்தவை. இவையும் திரும்

பத் திரும்ப ஒன்றைச் செய்ய வேண்டுமென்ற வெறும் தூண்டுதலால் ஆனவை அல்ல. ஆனால், அது ஓர் உயர்ந்த அக்கறைத் தொழிலுக்கே நோக்குடையது. வெளிவேலையை நிறைவேற்ற வேண்டும் என்ற ஊக்கம் அல்லது அறிவின் ஒரு கிளை முழுமையும் பூர்த்தி செய்ய வேண்டுமென்ற ஊக்கம் ஆகும். இவ்வாறு குழந்தை அவைகளுக்குள்ளேயே ஒழுங்குபடுத்தப்பட்ட பொருள்களை ஆக்குகிறான்; தேடுகிறான். எடுத்துக்காட்டாக, உலோகச் செருகு தகடுகளைப் பல இணைப்புகளில் உபயோகித்துப் பல வடிவங்களை ஆக்குவிக்க விரும்புகிறான். இந்தத் தொழிலில் தீவிர முயற்சியுடன் அது நிறைவேறும் வரை தன்னை ஈடுபடச் செய்து கொள்கிறான். அதேபோல் மற்றொரு குழந்தை ஒரே தொழிலில் தொடர்ந்து ஏழெட்டு நாள்கள் ஈடுபடுவதையும் காண்கிறோம். வேறொரு குழந்தை எண்களின் உள்மதிப்பிலோ அல்லது கணக்குச் சட்டங்களில் ஈடுபட்டோ பல நாள்கள் அதையே தொடர்ந்து செய்து வருகிறான். அது பற்றிய அவனுடைய அறிவு முதிரும் வரை விடாமல் அவன் செய்வதையும் நாம் காண்கிறோம்.

அந்தரங்க அமைப்பு முறையால் தோற்றுவிக்கப்பட்ட ஓர் உள்ளொழுங்கின் அடிப்படையில் மனம் தன்னுடைய கோட்டையைக் கட்டுவிக்கிறது. பிறப்பிற்குப் பிறகு ஓர் உயிர்ப்பிராணி எவ்வாறு அமைதியுடனும் நிதானமாகவும் வளர்கிறதோ அதே போல்தான் இந்த மனத்தின் வளர்ச்சியும் வளர்கிறது.

வயதுக்குப் பொருத்தமான அந்தரங்க வளர்ச்சியின் சராசரி மட்டங்களை நிர்ணயிக்க வல்ல நடைமுறைச் சாத்தியக் கூறுகளைத் —தற்போது தொடக்கக் கருத்தைத்தான்—நம்மால் தரமுடியும். இதற்கு இன்னும் தேவைப்படுவன அநேக சரிநுட்பப் பரிசோதனைகள், அவைகளில் ஒரே மாதிரி வயதுக் குழந்தைகள் முழுமையான தகுதி பெற்ற சூழ்நிலை; பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் ஆகியவையாகும். இவைகள் இருந்தால் பரிசோதனைக்குரிய நிறைந்த பொருளோ அல்லது கூர்ந்து கவனிக்கத்தக்கவையோ கிடைக்கும். அப்பொழுது மாணவர்கள் ஒரு விஞ்ஞான முறை சார்ந்த பணியை ஏற்றுக்கொள்ள முடியும். இப்பொழுதெல்லாம் உடலைப்பற்றிப் பல அளவுகளை எடுத்துக் குறிக்கின்றார்கள். அந்த அளவுகளை விட இன்னும் மேலான துல்லிய அளவுகளை எடுத்து வளர்ச்சியின் சராசரி அளவு கணக்குகளைத் தரமுடியும் (mathematical averages of growth).

எனவே, இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் குறிப்புகள் நீண்ட ஒழுங்கான முயற்சியைக் குறிக்கிறதென்பதை நாம் கவனிக்க வேண்டும். மேலும் அக் குறிப்புகள் இயற்கையான வளர்ச்சிக்கு

வழிவகுக்கும் வெளிப்படைப் பொருள்களைக் கண்டுபிடிக்கக் கூடிய இன்னும் உயர்ந்த தொழிலைப் பொறுத்திருக்கின்றன.

விஞ்ஞான முறை சார்ந்த புத்தாய்வு (research) எவ்வளவு கஷ்டமான தென்பதை இது ஒருவாறு வெளியாக்கும். பினே சைமன் தேர்வுகள் (Binet & Simon test) போன்ற சோதனைகளைப் போல், மனம் போன போக்கிலும் (arbitrary) மேலோடியாகவும் இத் தேர்வுகளை அமைத்துவிட முடியும் என்று பலர் இன்றும் நம்பு கின்றனர்.

* * *

குழந்தையைப் பற்றிய ஆராய்ச்சி உடனடியான வழிவகை யால் சாதிக்க முடியாது. அவனுடைய சிறப்பியல்புகளை நிழற்பட மூல மாகத்தான் வெளியிட முடியும் (illustrated cinematographically).

குழந்தையின் உளவாழ்வுக்குத் தேவையானபடி வெளிப்புற வழிவகைகளை ஒழுங்காக அமைத்தல் இன்றிமையாத முக்கிய மாகும். ஏனென்றால் அந்தரங்கத்தில் ஒழுங்கைப் பெறுவதில் (acquisition of internal order) தனிப்பட்ட வேறுபாடுகள் என்ன என்று எவ்வாறு மதிப்பிட முடியும்? அருவத்துக்கு உயர்தலும் நுண்ணறிவு வளர்ச்சியில் படிப்படியாக முன்னேறுவதும் முன் கூட்டியே மாறுபாடற்ற வெளிப்புற வழிவகையில்லாமலும் எவ்வாறு மதிப்பிட முடியும்? (judge) இந்த வெளிப்புற வழிவகை பல தாங்கும் நிலைகள் போல் உருவாகிக் கொண்டிருக்கும் குழந்தை யைத் தன் குறிகோளுக்குக் கொண்டுபோய்விடும்.

தனிப்பட்டவர்களின் வேற்றுமைகளைத் (individual differences) தர்க்க ரீதியாகத் தீர்மானம் செய்வதற்குத் தொடர்ந்த தொழில் அல்லது குறிக்கோள் ஒன்று (constant work or aim) இருக்க வேண்டும். அதுதான் இந்த வெளிப்புற வழிவகை. இவைகளைக் கொண்டு ஒவ்வொரு ஆளுமையும் தன்னை உருவாக்கிக் கொள் கிறது. வெளிப்புற வழிவகை ஒன்றாக இருந்து அதுவும் பொது வாக வயதுக்கு ஒத்த உளஇயல் தேவைக்கு ஒத்திருந்தால் அந்த ரங்கத்தில் வேறுபட்ட அமைப்பு ஏற்படலாம். அது தனிப்பட்ட மனிதனால் ஆனதுதான். அதற்கு மாறாக வழிவகை வெவ்வேறாக இருப்பின், எதிர்வினையில் வேற்றுமை ஏற்பட்டால் அவைகளுக்குக் காரணம் வெளிவகையில் காணப்படும் வேறுபாடுகள் என்றே காரணம் காட்டப்படும்.

இறுதியாக எல்லா விஞ்ஞானப் புதுமை ஆய்விலும் அளவு கருவிகள் நிர்ணயிக்கப்படவேண்டும். ஆனால் அளக்கப்படவேண் டிய ஒவ்வொன்றுக்கும் ஒரு தனிக்கருவி தேவைப்படுகிறது. உள

இயல் அளவுகளில் எப்பொழுதும் இருக்க வேண்டிய கருவி கல்வி முறையாகும் (method of education).

பின்னே சைமன் (Binet Simon) தேர்வுகள் போன்ற சுருக்க விதிமுறைகள் பல ஒன்றினை அளக்கவும் முடியாது அல்லது வயதுக்குத் தக்க நுண்ணறிவு சாதனை இன்னது என்று ஏறத்தாழவும், எடுத்துக்காட்ட முடியாது. இந்த விதிமுறைக்குத் துலங்கும் குழந்தைகளில் அவர்களுடைய துலங்கல் எங்கிருந்து பெறப்படுகிறது. குழந்தையின் இயக்கத் துலங்கல் உள்ளார்ந்த வினை ஆற்றலால் எவ்வளவு பாதிக்கப்பட்டிருக்கிறது என்றும், எவ்வளவு சூழ்நிலையால் பாதிக்கப்பட்டிருக்கிறதென்றும் கூறமுடியாது. சூழ்நிலையைப் பொறுத்த பகுதியை எடுத்துக் கொள்ளாமல் விட்டுவிட்டோமானால், துலங்கலுக்கு என்ன உள்ளார்ந்த உள இயல் மதிப்புக் கொடுக்க வேண்டுமென்று எவரால் தீர்மானிக்க முடியும்!

ஒவ்வொரு ஆளுமையிலும் இரண்டு பிரிவுகள் இருப்பதை நாம் உணர வேண்டும். ஒன்று தனிப்பட்ட இயற்கையாகத் தானே இயங்கும் வினையாற்றல். இந்த வினையாற்றலால் சூழ்நிலையில் இருந்து தனிப்பொருளை எடுத்துக்கொண்டு ஆளுமை அந்தரங்கத்தில் விரிவு படுத்தியும், ஆக்கியும், இன்னும் பெருக்கவும் செய்யும் பொழுது பண்பாக்கப்படுகிறது (characterised). மற்றொரு பகுதி இவைகளை எல்லாம் செய்யக்கூடிய வெளிப்படைக் கருவியாகும். எடுத்துக்காட்டாக நாலு வயதில் அறுபத்து நான்கு வண்ணங்களை இவை இவை என்று கண்டறியக்கூடிய குழந்தை இருக்கிறான். வண்ணங்களைக் கண்டுணரும் சிறப்பான தன்மையை அவன் பெற்றிருப்பதாகக் காண்கிறான். அவைகளைத் தன் மனத்தில் வரிசைப் படுத்துவதிலும் இத்திறமை வெளியாகிறது. இத்துடன் அவனுக்குத் திறமை உருவாகத் தேவைப்படும் வழிவகைகளையும் பெற்றிருந்திருக்கிறான் என்றும் காட்டுகிறான். அவன் அறுபத்து நான்கு வண்ணப்பலகைகளை வைத்துக்கொண்டு யாருடைய குறுக்கீடுமின்றித் தானாக ஓய்வு நேரத்தில் இத்திறமையானது உள்ளே பதியும்வரை தேவைப்பட்ட பயிற்சியைச் செய்துகொண்டு வந்திருக்கிறான்.

உள இயல் சார்ந்த ஆக்கக் கூறு ஆகிய (phychical factor) P என்பது இரண்டு ஆக்கக் கூறுகளின் கூட்டலாகும். ஒன்று அகம் சார்ந்தது ; மற்றது புறம் சார்ந்தது.

$$P = I + E$$

இவைகள் தெரியாததும் நேரடியாக அளக்க முடியாத ஆக்கக் கூறும் ஆன 'I' என்பதை 'X' என்பதால் குறிப்பிடலாம்.

$$P = \times + E$$

மேலே குறிப்பிட்ட விதத்தில் அறுபத்துநான்கு வண்ணங்களையும் தன் விருப்பம்போல் பயிற்சிசெய்து பார்க்கும் வாய்ப்புப் பெற்றிருந்த ஒரு குழந்தையையும், பழுப்பும் சாம்பல் நிறமுமே நிறைந்த ஓர் ஏழைச் சூழ்நிலையில் தனியாக விடப்பட்டு மந்தமாகவும், உற்று நோக்கும் திறம் பெறாதவனாகவும் காணப்படும் மற்றொரு குழந்தையையும் ஒப்பிட்டுப்பார்த்தால், சிறப்பான ஓர் உளஇயல் வேற்றுமையை நாம் காண்போம். அத்தகைய வேற்றுமை அவ்வளவு உள்ளார்ந்ததல்ல. முதல் குழந்தையைப் போல் இரண்டாம் குழந்தைக்கும் அதே சூழ்நிலை வாய்ப்பு அமைத்துக்கொடுக்கப்பட்டிருந்தால் அவனும் அந்த அறுபத்துநான்கு வண்ணங்களைத் தெரிந்து கொண்டிருப்பான். இந்த நிலையில் நாம் அளிக்கும் தீர்ப்பு வெளிக்காரணத்தை ஒட்டினதின் அடிப்படையில் தோன்றினதாகுமே யொழிய உள்ளார்ந்த சக்திகளின் அடிப்படையானதாகாது. நாம் உண்மையாக இரண்டு சூழ்நிலைகளை மதிப்பிடவேண்டுமேயன்றி இரண்டு தனிப்பட்ட குழந்தைகளைப்பற்றி அன்று.

தனியாரின் வேற்றுமைகளை நாம் மதிப்பிடுவதற்கு இரண்டு குழந்தைகளும் ஒரே வளர்ச்சிக்குரிய புறப்பொருள்களைப் பெற்றிருந்திருக்க வேண்டும். இந்த எடுத்துக்காட்டில் ஒரே வயதில் அவர்கள் இருவரும் ஒரே மாதிரி அறுபத்து நான்கு வண்ணங்களின் வேறுபாடுகளை ஆய்ந்தறிய முடியாதவர்களாய் இருந்தார்களேயானால், அதாவது அவர்களில் ஒருவன் முப்பது வண்ணங்களை மட்டும் வேற்றுமை கண்டு பிடிக்க முடிந்தால் உண்மையான உள இயல் வேற்றுமை ஒன்று தெளிவுறும். இத்தாலி நாட்டில் பின் தங்கிய அல்லது குறைபாடுடைய (backward or deficient) குழந்தைகளின் நுண்ணறிவு மட்டம் எவ்வளவு என்று ஆய்ந்தறிவதற்குப் பரிசோதனை முறை சார்ந்த உளஇயலில் உயர்ந்த நிபுணர் ஒருவர் கூறும் தேர்வுகள் பலவற்றில் இது ஒன்றாகும். அதாவது வரிசையாக உள்ள கன சதுரங்களில் எல்லாவற்றிலும் பெரியதையும், சிறியதையும் குழந்தையைக்கொண்டு தேர்ந்து எடுக்கச் சொல்லுதல் ஆகும். இதே நோக்கத்துடன் அளிக்கப்பட்ட அனேகமாக எல்லாத் தேர்வுகளோடு இதுவும் பண்பாடும் கல்வியும் குழந்தையை எவ்வளவு அளவுக்குப் பாதித்திருக்கிறதென்பதைப் பொருட்படுத்தாமலே எடுத்துக்கொள்ளப்பட்டது. நுண்ணறிவின் நெருங்கிய சொந்த வினையாற்றலின் அறிகுறி என்றே மெச்சப்பட்டது. என்னுடைய முறையைக் கையாண்ட குறைபாட்டுக் குழந்தை ஒருவன் இந்தத் தேர்வை ஏற்றுக்கொண்டானால் அவன் புலன் தீட்டிக் கருவிகளுடன் நீண்டகாலம் பழக்

கப்பட்ட புலன் பயிற்சி அனுபவத்தால் எது எல்லாவற்றிலும் பெரிய கனசதுரம் என்று எளிதில் தேர்ந்தெடுத்து விடுவான். உள இயலார் தம்முடைய தனிப்பள்ளிக் கூடங்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்ட குழந்தைகளை விட முன்பு குறைபாடடைந்த இக் குழந்தைகள் வெகு எளிதில் தேர்ந்தெடுத்து விடுவார்கள். என்னுடைய குறைபாடுடைய குழந்தைகள் வயதில் மற்றச் சாதாரணக் குழந்தைகளை விடச் சிறியவர்களாயிருக்கலாம். நுண்ணறிவிலும் மற்றவர்களைவிடப் பின் தங்கியவர்களாயும் இருந்திருக்கலாம். ஆதலால் இவர்களுக்கு அளிக்கப்பட்ட தேர்வு இருவகைக் கல்வி போதனையை அளந்திருக்கும். இரு குழந்தைகளுக்கு இடையே உள்ள உளஇயல் சார்ந்த வேற்றுமை கள் வயதினுலும், நுண்ணறிவு வளர்ச்சியினுலும் உண்மையாக இருந்திருந்தும், இவை தேர்வினுல் ஆய்ந்தறிய முடியாமல் அடி யோடு மறைந்து கிடந்திருக்கிறது.

மனிதன் ஆளுமையாலும் கல்வியாலும் ஒருமயப்படுத்தப்பட்ட வன். கல்வி என்பது அவனுடைய வாழ்க்கையில் அவன் பெறுகின்ற பல அனுபவத் தொடர்களை உட்கொண்டது. இவ்விரண்டும் ஒரு தனி யாரிடம் இருந்து வெவ்வேருகப் பிரிக்க முடியாது. தேட்டம் அல்லது முயன்று பெறப்பட்ட பொருள் இல்லாத நுண்ணறிவு மட்டும் ஓர் அருவமாகி விடுகிறது. தனி ஒருவன் சூழ்நிலையிலிருந்து விலகி நிற்க முடியாது. இந்த உண்மை எல்லா உயிர்ப்பிராணி களுக்கும் பொருந்தும். அதேபோல் உளஇயல் வாழ்க்கைக்கும் சாலப் பொருந்தும். எப்படி? சூழ்நிலையில் அடங்கி இருப்பவை மனிதனுடைய தன் வளர்ச்சி அனுபவத்துக்குத் தானே கற்பிக்கும் சாதனைகளாக அமைந்திருக்கின்றன. இந்தச் சூழ்நிலை இவனுடைய இன்றியமையாத பகுதி ஆகும். உண்மையாக இதுவே தனியார் என்றும் சொல்லிவிடலாம். எனினும் உளம் சார்ந்த தனியார் (Psychical individual) அவருடைய சூழ்நிலையல்லர் என்பதையும் அவருடைய வாழ்வே அவர் ஆவார் என்பதையும் நாம் அனைவரும் அறிவோம்.

$P=X+E$ என்ற சுருக்க விதி முறையில் ‘X’ என்பது தனியாள் வாழ்வின் உள்ளார்ந்த பகுதியாகும். தனி ஒருவனுக்கு இந்த ‘X’ இருப்பதாகக் கூறலாம். ஆனல் ‘X’ ஐப் பற்றி நேரடியாக அறிய வேண்டுமானுல் Pயும் Eயும் இன்னது என்பதை அறிவது இன்றி யமையாததாகும்.

ஒரு தேர்வு நடத்துபவரோ அல்லது உள்ளார்ந்த பலன்களைப் பயன்படுத்தி உளஇயல் சார்ந்த அளவுகளைக் கணக்கிடுவதாக எண்ணிக் கொள்பவரோ, உண்மையாக இரண்டு தெரியாத

பொருள்களின் கலப்பையே அளக்கிறார். தனியாருக்கு அது அப் பாற்பட்டது அல்லது புறம்பிருப்பதால் புது ஆய்வின் பலனைச் செல்லுபடியாக்காமல் செய்துவிடுகிறது.

வண்ணங்களின் புலன்காட்சி (perception), இசை ஓசைகள், நெடுங்கணக்கின் எழுத்துகள், அல்லது சூழ்நிலையை உற்றுநோக்கிக் குறைபாடுகளைக் கண்டுபிடிக்கும் திறமை அல்லது இயக்கங்களின் ஒன்றிணைப்பு, மொழி, இன்னும் இவை போன்ற தனிப்பட்ட விஷயங்களில் தனி வேற்றுமைகளை ஆய்ந்தறிய வேண்டுமானால் முதலில் நமக்குத் தேவைப்படுவது 'நிலையான தனிப் பொருள்' ஒன்றாகும். சூழ்நிலையால் அளிக்கப்படுகின்ற வளர்ச்சிக்குரிய புறப் பொருள் சாதனங்களே அவை.

ஆசிரிய இயலுக்கும் உள இயலுக்கும் இடையே உள்ள எளிமைக்கும் தெளிவுக்கும் உள்ள வேற்றுமை தானாகவே வெளிக்காட்டுகிறது. தனியாரின் தன்மானத்தையும் உரிமை யையும் மதிப்பதுடன் வளர்வதற்கு உதவிபுரியும் சாதனை களையும் அவை எவ்வாறு பயன்படுத்தப்பட வேண்டுமென்ற முறை பற்றியும் ஆசிரிய இயல் பரிசோதனைகள் மூலம் தீர்மானிக்கிறது. ஆனால், உள இயல் சராசரி எதிர்வினைகளை (reactions) அல்லது இனத்தின் தனி எதிர்வினை அல்லது தனியாரின் தனி எதிர் வினையை ஆராய்கிறது. இவை இரண்டும் ஒரே விஷயத்தின் இரு பண்புக் கூறுகளாகும் (aspects). இதுதான் மனிதனுடைய வளர்ச் சியும் ஆகும். தனியாரும், சூழ்நிலையும் இரண்டு துணைக் கூறுகள் X-ம், E-ம்; உளஇயல் சார்ந்த உள் பொருளின் விளைபொருள் ஆகும்.

அறநெறி ஒழுங்கைப் பற்றித் தனிப்பட்ட உளஇயல் சார்ந்த பரிசோதனைகள் ஏதாவது பயனளிக்க வேண்டுமானால் அக வினை யாற்றல்கள் ஒழுங்கு பெற்றபின் தொடர்ந்து, உற்று நோக்கப்படு வதை அடிப்படையாகக் கொள்ளல் வேண்டும். ஏனென்றால் ஒரு குழப்பத்தின்போது ஒரு தீர்மானத்தில் எளிதில் பிழை ஏற்படக் கூடும். மனநோய் மருத்துவத்தில் (Clinical Psychiatry) அல்லது குற்றவாளி நோய்க்குணநூல் (Criminal Pathology) ஆகியவற்றில் ஆராய்ச்சிக்காகச் சோதிக்கப்படுபவர் தக்க சூழ்நிலையிலும், உடல் நலமும் கட்டுப்பாடும் பொருந்திய இடத்திலும் வைக்கப்படுகிறார் கள். இத்தகைய சூழ்நிலையில், குறிப்பிட்ட காலவரையில் இருக்க வைத்து அவரை உற்று நோக்கி வருகின்றனர். வளர்ந்துவரும் சாதாரணத் தனியாரிடம் இம்மாதிரி நடந்து கொள்ளும் பாங்கு இன்னும் பரந்ததும், சீர்மையுடையதும் ஆகும். இந்த நிலையில் வெளிச் சூழ்நிலையில் ஒழுங்குடன் இருக்கும்படி அவர்களுக்கு

வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். இது மட்டும் போதாது, குழந்தையின் அந்தரங்கக் குழப்ப நிலையைக் குறைத்து ஒழுங்கை அமைத்து அதன்பிறகு நீண்ட நேரம் அவனை உற்றுநோக்க வேண்டும்.

எம்முடைய பள்ளிக்கூடங்களுக்கு வந்த குழந்தைகளில் இரண்டு அக்கறையூட்டும் எடுத்துக் காட்டுகளை இங்குத் தருகிறோம். ரோமாபுரியில் என்னுடைய இறுதி அகில உலகப் பயிற்சியை அளித்து வந்தபோது அவர்கள் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்க்கப்பட்டனர்.

## இரு குழந்தைகளின் பண்புக் கூறுகள்
## (Aspects of the two children)

**உற்றுநோக்கு நேரத்தில் இவர்கள் ஆசிரியர்களின் வகுப்பறையில் மனித இன ஆராய்ச்சிக்குரிய உற்றுநோக்குக்காக வைக்கப்பட்டிருந்தனர்.**

மாணவர்களுக்கிடையே வேண்டிய அளவுக்கு ஆரவாரம் இருந்தது. சிலர் பேசிக் கொண்டிருந்தனர். வேறு சிலர் சிரித்துக் கொண்டிருந்தனர். அறையின் நடுவில் அடியீடுமான 'பெடோ மீட்டர்' (Pedometer) இருந்தது. இரண்டு குழந்தைகளின் நடத்தை ஒன்றைப்போல் மற்றொன்றிருந்தது. அவர்கள் வெவ் வேறு இடங்களில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். பின்னல் சட் டத்தை வைத்துக்கொண்டு விளையாற்றி வந்தனர். பக்க அறைக் குத் தாமே சென்று இச் சட்டங்களைக் கொண்டுவந்தனர். அவர் கள் அந்த இரைச்சலைக் கேட்டு அந்தப் பக்கம் தலை திருப்பவில்லை; சிரிப்பிலும் கலந்து கொள்ளவில்லை. ஒரு வேலையில் ஈடுபட்டவன் எவ்வாறு காலத்தை வீண்போக்காமல் அக்கறையோடிருப்பானோ அவ்வாறிருந்தனர். அவர்களை அழைப்பதற்காக ஒரு சிறு சைகை காட்டினால் அவர்கள் உடனே ஆச்சரியமான பாங்கில் கீழ்ப்படிந்த னர். தம் வேலையை உடனே அப்படியே விட்டுவிட்டனர். கவர்ச்சி அடைந்தது போல் புன்னகையுடன் சென்றனர். கீழ்ப் படிவதில் அவர்கள் இன்பம் அடைந்ததுபோல் காட்டிக்கொண்ட னர். இந்தப் போக்கு தாங்கள் ஏதோ வேலை செய்ய முடியும் என்ற நினைவினால் தோன்றிற்று. அவர்கள் செய்வதற்கு விரும்பிய ஒன்றினை ஒருவர் அழைத்தவுடன் அப்படியே விட்டுவிட்டு இது வரை செய்து வந்ததை விட இன்னும் உயர்ந்த ஒன்றினைச் செய் யப்போவதில் ஒரு தனி மகிழ்ச்சி கண்டனர். இவர்களை அளக்கும் கருவியாகிய 'பெடோ மீட்டரின்'மேல் மிகவும் சாக்கிரதையாய்த் தங்களை நிறுத்திக் கொண்டனர். உடலின் நிலையில் ஏதாவது சிறு

மாறுதல் தேவைப்படும் போது அவர்களுடைய செவிக்குள் முணு முணுத்தால் போதும். உடனே தேவைப்படுகிற சிறிதும் கண் டறிய முடியாத அசைவையும் மிகமிகத் துல்லியமான முறையில் செய்தார்கள். தங்களுடைய மனமாரச் செய்கின்ற இயக்கங் களைக் கட்டுபடுத்த முடியும்; வேண்டியபடி திருப்ப முடியும். அவர்கள் செவியில் விழுந்த வார்த்தைகளின் பொருளை உணர்ந்து வினையாற்றலாக மாற்ற முடிந்தது. அவர்கள் கீழ்ப்படிய இது உதவிற்று. அவர்களுடைய அந்தரங்கத்தில் ஒரு விசித்திர வெற்றி யென மாறிற்று. அளப்பது முடிந்த பிறகு வேறெதுவும் கூறப்பட வில்லை. சில விநாடி நேரம் எதிர்பார்த்த வண்ணம் காத்திருந்த னர். பிறகு நுண்ணறிவு தோன்ற ஒரு கடைக்கண் பார்வையும் ஒரு குறுநகையும் ஏதோ வணக்கம் கூறுவதுபோல் காட்டிவிட்ட னர். அவர்கள் புரிந்துகொண்டனர். தாமாகவே தம்முடைய முன் இருந்த இடத்துக்குத் திரும்பிச் சென்றனர். பழைய பின்னல் சட்டத்தை எடுத்து வேலை தொடங்கச் சென்றனர். உடனே அவர்கள் திரும்பவும் தேவைப்பட்டனர். மறுபடியும் அதே இயக் கங்கள் அவர்களால் திரும்பவும் செய்யப்பட்டன.

சாதாரணமாக அந்த வயதுக் குழந்தைகள் (சுமார் நாலரை ஆண்டு) தனியாக விடப்பட்டால் என்ன செய்வார்கள் என்று நாம் எண்ணுகிறோம்? அங்குமிங்கும் அலைவார்கள். தாங்கள் அறியாமலே எல்லாப் பண்டங்களையும் கவிழ்த்து விடுவார்கள், தங்களுடைய ஏறுமாறான நடத்தைக்கு (caprice) கீழ்ப்படியும் ஒருவரைத் தேடுவார்கள் அல்லது 'ஒழுங்காக இருங்கள்' என்று கடுமையான ஆணை இடுபவனைத் தேவைப்படுவார்கள். இவை களை ஒப்பிடும் பொழுது இந்த இரு குழந்தைகளிடமும் அந்தரங்க முழு நிறைவைக் காண்கிறோம். இவ்விருவருக்கும் 'தொழில்' ஒரு பழக்கமாகவும் 'கீழ்ப்படிதல்' ஒரு வியப்பூட்டும் கைக்குச் சிக்கின பொருளாவது போலும் ஆகியிருக்கின்றன. அந்த அளவுக்கு அவர்கள் வளர்ச்சி பெற்றிருக்கின்றனர்.

மனித இயல் சார்ந்த (anthropometric measurements) அளவு கள் அவ்விரு குழந்தைகளில் ஒருவனை 'O' அளவுகளில் சாதாரண மாக இருந்தான் என்று காட்டின. (எடை, உடலுயர்வளவு, உடல் முண்டப்பகுதி நீளம்). மற்றவனை 'A' சாதாரண அளவுக்குத் தாழ்ந்தவனாக இருந்தான்.

இவ்விரு குழந்தைகளும் ஒழுங்கிழந்த நிலையில் அல்லது கட்டுப் பாடிழந்த நிலையில் எவ்வாறு நடந்து கொண்டனர் என்பது பற்றி ஓர் ஆசிரியர் குறித்ததைக் கீழே காணலாம்.

O : தன் தோழர்களிடம் வன் செயல் (violent), கொந்தளிப்பு (turbulent), உட்பகை (spiteful) ஆகியவைகளைக் காட்டினான். எந்தச் செயலாற்றலிலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக மற்றவர் செய்வதையே பார்த்துக்கொண்டு இருக்கிறான், பிறகு அவர்கள் செய்வதில் குறுக்கிடுகிறான். அல்லது தனியாருக்கு அளிக்கப்படும் பாடத்தைத் தானும் வந்து இகழ்ச்சியும் நன்மையில் நம்பிக்கையிழந்த முகக் குறிப்புடனும் கேட்கிறான். குழந்தையைப்பற்றித் தந்தை 'அவன் வீட்டில் வன்மையாகவும், வீறுப்புடன் அடங்காதவனாகவும் இருக்கிறான்' என்று கூறுகிறார்.

A : இவன் அமைதியானவன். ஆனால் எப்பொழுதும் இவனுக்குத் தன் தோழர்களை வேவு (spying) பார்ப்பது ஒரு மனப் பிணி.(mania). ஒவ்வொரு சிறு தொழிலிலும் கெட்டது, சரியில்லை என்று சிறிதளவும் தனக்குத் தோன்றினால் உடனே போய் ஆசிரியரிடம் அதைச் சுட்டிக் காட்டிக் கொடுத்துவிடுவான்.

இரண்டு குழந்தைகளும் மிகவும் ஏழைகள். 'O' பெரும்பாலும் பெற்றோர்களால் கைவிடப்பட்டவன்.

தொழில் புரிவதில் தங்களை ஒழுங்கு படுத்திக் கொண்ட இதே குழந்தைகளைப் பற்றி ஆசிரியர் பிறகு தாம் கண்ட கருத்துகளின் தீர்ப்பை இவ்வாறு தெரிவிக்கிறார்.

O இதுவரை வீட்டில் காட்டிவந்த வன்செயல் எல்லாம் ரொட்டிக்குப் போராடுவதில் முடிந்தது. தந்தை மிகவும் ஏழை. அத்துடன் குழந்தையைக் கவனிக்காமல் கைவிடும் குணம் உடையவன். குழந்தைக்கு ரொட்டி கொடுக்க மறுத்தான். குழந்தை சும்மா இருக்கவில்லை ; அழவும் இல்லை. தனக்கு உரிய ரொட்டியின் பகுதியைப் பெற தன்னிடமிருக்கும் திறமைகள் அனைத்தையும் இடைவிடாமல் பயன்படுத்திப் போராடினான். 'குழந்தைக்கு ஏன் ரொட்டி கொடுக்க மறுக்கிறீர்கள் ?' என்று ஆசிரியர் கேட்டபோது, 'ஏனென்றால் அவன் (குழந்தை) தின்ற பிறகு இன்னும் வேண்டுமென்று கேட்கிறான்' என்று விடை அளித்தார்.

பள்ளிக்கூடத்தில் இந்தக் குழந்தை ஒரு குழுவிலிருந்து மற்றொரு குழுவுக்கு ஓடினான். ஒரு பாடத்திலிருந்து மற்றொரு பாடத்துக்கு ஓடினான். மற்றவர்களைத் தொந்தரவு செய்தான். வழியில் இருப்பது எதையும் பொருட்படுத்தவில்லை. தனக்குத் தேவையான தெய்விக உணவைப் பெறப் பழைய முறையையே கையாண்டான்.

இந்தக் குழந்தையிடம் தான் வாழ்வதற்கான அளவு கடந்த மன உறுதி காணப்படுகிறது. அதாவது தன்னைக் காத்து நிலை பெறச் செய்து கொள்ளும் பாங்கே அவனிடம் தீவிரமாக வளர்க் கப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

அவனுடைய வாழ்க்கைக்கு ஆதரவு கிடைத்தவுடன் அவன் அமைதி பெறுவதுடன் சிறப்பாக மற்றவர்களிடம் இனிமையாக வும் பிறரைப் புண்படுத்தாமலும் நடந்து கொண்டான். அவன் ஏதாவது ஒரு செயலைப்பற்றிக் கொண்டாலோ அல்லது பூர்த்தி செய்தாலோ அப்பொழுது மகிழ்ச்சி அடைந்து, சுற்றிலும் திரும்பி, அன்புடன் தன் தோழர்களை நோக்கி, தன் விரல்களைத் தன் உதட் டுக்கு நேர் வைத்து முத்தம் கொடுப்பது போலப் பாவனை செய் வான். ஒழுங்கும் கட்டுப்பாடும் பெற்ற மற்றக் குழந்தைகளைப் பற்றி ஆசிரியர் குறிப்பிடும் பொழுது அவர்கள் 'தொழில்' புரிகின்றனர் என்றும், ஆனால், 'O' என்ற குழந்தை 'தொழிலும் அன்பும் காட்டுகிறான்' என்றும் குறித்திருந்தார்.

வெப்ப உணவு ஏற்பாடு செய்யப்படுவதற்கு முன்பெல்லாம் குழந்தைகள் தினந்தோறும் அவரவர்களுடைய மதிய உணவைக் கொண்டு வந்தனர். அது பல வகைகளில் ஒன்றுக்கொன்று வேறு பட்டது. இரண்டு மூன்று குழந்தைகளிடம் வேண்டிய உணவிருந் தது. இறைச்சி, பழங்கள் முதலியன கொண்டு வந்திருந்தனர். 'O' என்பவன் இவர்களில் ஒருவன் பக்கம் உட்கார்ந்திருந்தான். மேசை ஏற்பாடாக்கப் பட்டிருந்தது. 'O' தன் தட்டில் வைத்துக் கொள்வதற்கு அவன் போராடிச் சம்பாதித்த ரொட்டியைத் தவிர வேறொன்றும் இல்லை. தன்னுடைய நண்பர்களைக் கடைக் கண்ணால் பார்ப்பான். அவன் எப்பொழுது சாப்பிடத் தொடங் குவான் என்று கவனித்துத் தான் சாப்பிடுவதையும் ஒழுங்கு படுத்திக் கொள்வான். அவனிடம் பொறாமைக் குறி எதுவும் காட்டப்படவில்லை. தன்னுடைய ரொட்டியை மெதுவாகவும் கம்பீரமாகவும் உண்டு வந்தான். அடுத்தவன் உண்டு தீர்ப்பதற்கு முன் தான் தன் ரொட்டியைத் தின்று விடக்கூடாதென்று பார்த் துக் கொண்டான். அடுத்தவன் இன்னும் நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது தனக்கு உண்பதற்கு ஒன்றுமில்லையே என்ற எண்ணம் அடுத்தவனுக்கு வராதபடி பார்த்துக் கொண் டான். இவன் தன்னுடைய ரொட்டியை மெதுவாகவும் கருத்து டனும் சிறுகச் சிறுகக் கடித்துத் தின்றான்.

தன்மானம் — சுயமரியாதையில் — கௌரவத்தில் என்ன உணர்ச்சி! தன்னுடைய பசிப்பிணிக்கு ஆன பேராசைக்கு இடம் கொடுக்காமல், தன் உடல் வளர்ச்சிக்கு அடிப்படையாகத்

தேவைப்படுவதையும் மறவாமல், தனக்கு இன்றியமையாது வேண்டியதையும் போராடி வெற்றிபெறச் சேகரித்ததையும் மனத்தில் இருத்திக் கொண்டு நடந்து கொண்டான். இத்துடன் அவனிடம் அந்தத் தனிப்பட்ட உணர்ச்சியும் தோன்றிற்று. அவனுடைய முக இயக்கத்தில் அன்பு ததும்ப வெளியாயிற்று. கைம் மாறு கருதாத பொது மென்மைப் பண்பும் அவனிடமிருந்து பொங்கி வழிந்தது.

இத்தகைய குழந்தையின் உடல் அளவுகளைக் கணக்கிடும் பொழுது இவ்வளவு மோசமான உணவு உண்டவனிடம் நாம் எதிர்பார்ப்பதற்கு மாருகத் தன் வயதுக்குத் தக்கவாறு சாதாரணக்குழந்தைகளிடம் காணப்படும் மனித இயல் அளவுகளும் (anthropological measurements) தன் உடலின் எடையும் காட்டினன். வறுமையில் பிறந்து திக்கற்றவனுய் இருந்தும் அவன் தன்னைத்தானே காத்துக் கொண்டான். இவனுடைய உடல் சாதாரணமாக இருந்து வருவதும் இவனுடைய வீர முயற்சியால் ஆனதே. இதுவும் ஆச்சரியமானதுதானே!

A இந்தக் குழந்தை எப்பொழுதும் அமைதியாகவும் மௌனமாகவும் இருந்தது. அவன் சீக்கிரத்தில் வினை ஆற்றும் போக்கில் இறங்கினன்; ஒழுங்காஞன். எதையும் செய்ய இவன் விரும்பினன்; செய்வன திருந்தச் செய்தான். எந்த வேலையிலும் தன்னை ஊன்றிப் பதிவு செய்தவன்போல் அக்கறையுடனும், விடாமுயற்சியுடனும் நடந்து கொண்டான். சாதாரணப் பள்ளிக்கூடங்களில் 'நல்லொழுக்கமான புத்திசாலிக் குழந்தை' என்று கருதப்படுபவன் போல் ஆனன். பெரும்பாலும் அவன் உணவேதும் இல்லாமலே பள்ளிக்கூடத்துக்கு வந்தான். அவனுடைய நல்ல போக்கு எதிர்ப்புக்காட்டாத வகையில் இருந்தது. அத்தன்மை அவனுடைய வாழ்வுக்கே ஆபத்தாகி விட்டது. தன் உடல் நலத்துக்கு அவசியமாய் வேண்டும் உணவு இன்மையை ஓர் எதிர்ப்பும் இல்லாமல் ஏற்றுக் கொண்டான். தனக்கு அளிக்கப்பட்டு வந்த உளவாழ்வு சம்பந்தப்பட்ட துணைப்பொருள்களிடம் இருந்து நிறைந்த அளவில் இலாபம் பெற்றுன். ஆனல், அவனலேயே அவைகளை வெற்றி பெற்றிருக்க முடியாது. ஒழுங்கேற்பட்ட காலத்துக்கு முன்னல் அவனுடைய நற்குணம் எவ்வாறிருந்ததுவோ அவ்வாறு ஒழுங்கு நிலைபெற்ற பிறகும் இருந்தது. அவன் புரட்சியையும் காட்டவில்லை; விரிவடையவும் இல்லை. அவனுடைய மனித இயல் ஆராய்ச்சி சம்பந்தமான அளவுகள் சாதாரண அளவுக்குச் சற்றுக் குறைவாகவே இருந்தன. இவன் ஒரு குற்றவாளிபோல் தன் வாழ்க்கைப் பாதையில் இறங்கியிருக்கிறுன் என்பதை இக் குறிப்பு

கள் முன்பே எடுத்துக்காட்டியிருந்தன. 'பிறரால் காப்பாற்றப் படவேண்டுபவர்' குழுவைச் சேர்ந்தவனாகிறான் இவன்.

இவனுடைய அறநெறிப் போக்கின் சிறப்பியல் 'வேவு பார்த் தலா'கும். ஆசிரியர் இவனை உற்று நோக்கும் பொழுது அவன் மற்றவர்களைப்போல் சும்மா வேலை செய்யவில்லை. ஆனால் அவன் அவளிடம் அடிக்கடி வந்து தான் செய்வது சரியா இல்லையா என்று கேட்டுப்போவான். பொருள்களை வைத்துக் கொண்டு விளையாற் றும்போது மட்டும் அல்ல இந்தப் போக்கு. அவன் பெற்ற ஒவ்வொரு அறநெறிப் பண்பிலும் கூட இப்படியேதான் ஐயம் தீர்த்துக் கொள்ள அணுகுவான். அவனுடைய முக்கியமான மனக்கவலை என்ன ? 'தான் செய்வது சரியா தப்பா?' பிறகு அவன் சரியானதைச் சிறந்த சரிநுட்பத்துடன் செய்து முடிக்க முயற்சி செய்வான். அவன் வேவு பார்க்கும் தன்மையைப் பற்றி ஆசிரியர் கண்ட குறிப்பில் அவனுக்குத் தோழர்களிடம் எவ்வித வெறுப்பும் காட்டவில்லை என்று குறிப்பிடுகிறார். அவன் அவர்களைக் கவனத்துடன் உற்று நோக்கி வந்தான். பிறகு தன்னைப்பற்றி எவ்வாறு சொல்லிக் கொள்வானோ அவ்வாறே பிறரைப்பற்றியும் எடுத்துச் சொல்வான். 'இவன் இப்படிச் செய்தான். அவன் அப்படிச் செய்தான். அது சரியா, தப்பா' என்று கேட்பான். பிறரிடம் எது தவறு என்று தீர்ப்பளிக்கப்பட்டதோ அது தன்னி டம் தோன்றாதபடி குழந்தை எச்சரிக்கையுடன் நடந்து கொண் டான்.

வேவு பார்க்கின்ற சார்வான நாட்டமாக (proclivities) இது வரை தோற்றம் அளித்ததெல்லாம் உண்மையாகப் பார்க்கப் போனால் குழந்தையினுடைய தனி அறிவு நிலையில் (conscious) முனைந்து நிற்கும் ஒரு பிரச்சினையின் வெளித் தோற்றமேயாகும். 'சரியா தப்பா ? என்ற பிரச்சினை அவனுடைய குறுகிய அளவு அனுபவம் போதியதாகத் தெரியவில்லை. மற்றெல்லோருடைய அனுபவங்களையும் அறிந்து கொண்டு அதனால் தானும் பயன் படுத்திக் கொள்ளலாம் என்று கருதினான். எந்தச் செயல்கள் தவறானவை, எவை தவறல்லாதவை என்றறிய விரும்பினான். தவறானதை நீக்கித் தவறில்லாதனவற்றைச் செய்வதென்ற ஒரே கருத்துத் தன்னை ஆழ்ந்து கவர்ந்திருப்பதுபோல் தோன்றிற்று. இவனுடைய ஆசையெல்லாம் இந்த ஒன்றேதான்போல் இருந்தது. சில சமயங்களில் பொது மக்கள் ஒருவருடைய சிறப்பைப் பற்றிக் கூறும்பொழுது 'இவ்வுலகில் வாழ இவன் ரொம்ப நல்லவன்' என்பார்கள். அதே மூட நம்பிக்கை நமக்கு இங்கு நினைவூட்டு கிறது. இங்குக் கூறப்பட்ட கதியை அடைவதற்கே குழந்தை A பிறந்திருக்கிறது போலும். தன் உடலுக்கு இன்றியமையாத

தேவைகளைப்பற்றி அவன் பொருட்படுத்தவில்லை. அதேபோல் மனம் சார்ந்த தேவைகளைப் பற்றியும் அக்கறை காட்டவில்லை. நன்மை செய்வதே அவனுடைய ஜீவநாடியாயிருந்தது. சமூகம் அத்தகைய மனப்பாங்கினைக் கவனித்து அவ்வளவு நொய்ம்மை உள்ளங்களைப் பாதுகாக்காவிடில் வானுலகத்தினை நோக்கியவாறு தேவதூதர்கள்போல் இவர்களும் இளம் வயதில் மரணப்பாதையில் அடி வைத்து உயிர் நீக்குகின்றனர்.

இந்த இரண்டு எடுத்துக்காட்டுகள் சிஞோரினு மக்ரோனி (Signorina Macchroni) அம்மையாரால் தரப்பட்டவை. மேலோ டியாக ஏற்படும் ஒரு தீர்ப்பை இவை திருத்துகின்றன. சாதார ணப் பள்ளிக்கூடமாயிருந்தால் என்னவாகி இருக்கும்? அவர்களு டைய குணம் இத்தகையதெனப் பதிவு பெற்றிருக்கும். ஒரு குழந்தை வன்செயலாளன் (violent) என்றும், மற்றவன் வேவு பார்ப்பவன் (Spy) என்றும் பதிவு பெற்றிருக்கும்.

ஆசிரியைகள் இவ்விரு சொற்களை (வன்செயலாளர், வேவு பார்ப்போன்) வேறு வகையில் மதிப்பிட்டனர். ஒருவனை வீரன் (hero) என்றும் மற்றவனைத் தேவதூதன் (angel) என்றும் கூறினர். புதுக்கண் கொண்டு நோக்கிப் புது மதிப்பிடுவதற்குக் காரணமா யிருந்ததும் விஞ்ஞானமே. இம் மதிப்பீடு அக் குழந்தைகள் வாழ்ந்த சூழ்நிலையில் இருந்த பலருடைய உள்ளங்களையே தொட்டுவிட்டது. இதைக் காணும்போது 'அன்பினுல்' பெற்ற தீர்ப்பே அறிவினுல் பெற்ற தீர்ப்பாகும் என்று நாம் உறுதியாகக் கூறமுடியும். தீர்ப் பளிப்பதில் ஏசுநாதருடைய கருணை இங்கு எடுத்துக்காட்டப் படுகிறது.

* * *

உளம் சார்ந்த செயல் ஒரு கொள்கையுடன் தொடங்குகிறது. அதன் விளக்கம் குழந்தை வாழ்கிறது; மற்றவை அனைத்தும் அதன் விளைவாக வருகின்றன.

அடிப்படை வாழ்க்கையின் இந்தச் செயல் உள்ளார்ந்த ஆளுமையின் முனைவாக்கமூட்டுதலாகத் (polarisation) தானே வெளியாக்கிக் கொள்கிறது. படிகம்[1] ஒரு முனையில் உருவா வதைப் போல இது இருக்கிறதெனலாம். இந்தப் புள்ளியைச் சுற்றிலும் ஒரே வகைப்பொருள் இருப்பதுடன் கலக்கப்படாத சூழ் நிலையும் இருப்பின் உறுதியான உருவம் தானுக உருவாகிறது (the difinitive form composes itself).

[1] நிறைசெறிவு கரைசல் (saturated solution) ஒன்றில் தொடக்கத்தில் ஒரு நுண்ணிய உப்புப்படிகம் தோன்றுகிறது. பிறகு அதைச்சுற்றிலும் பல படிகங்கள் தோன்றுகின்றன. —மொழிபெயர்ப்பாளர்.

இந்தத் தொடக்கச் செயல் தனிப்பட்ட கவன நிறைவுடன் திரும்பவும் செய்யப்பட்ட பணியாகும்.

என்னுடைய வாழ்க்கை வரலாறு சம்பந்தமான வரைபட அட்டவணையில் (biographical chart) பல பாகுபடுத்திய நீண்ட குறிப்புகளை நான் தரவில்லை. விளக்கம் தருவதற்கு உபயோகித்த கட்டிணைப்புக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட 'உள இயல் சார்ந்த நுண் ஆய்வுக்கு வழிகாட்டி' (guide to psychological observations) என்றதையே குறிப்பிட்டிருக்கிறேன். இந்த முறைப் படி உற்றுநோக்கி ஆராய்வதில் பழக்கம் பெறுதவர்கள் இந்த வழிகாட்டியால் ஒரு பயனையும் பெற இயலாது. மாணவர்களைப் பற்றித் தற்போது ஆயும் கருத்துகளுக்கு முழுமையும் அப்பாற் பட்டது. இந்த உள இயல் சார்ந்த ஆய்வுகள். ஆனால், இம் முறை யில் பழக்கப்பட்டவர்கள் எந்த எடுத்துக்காட்டின் உதவியின்றியும் புரிந்து கொள்வார்கள்.

எமது ஆசிரியர்களுக்கும் ஒரு துறைச் சொல் (terminology) இருக்கிறது. அதைக்கொண்டு ஒருவருக்கொருவர் புரிந்து கொள்வார்கள். சாதாரணமாகக் கையாளப்படும் தெளிவுரை இங்குத் தேவையில்லை. ஏனென்றால் உண்மையாக வளர்ச்சி சார்ந்த நடத்தையில் நேரடியாகக் காணப்படுவதை அப் பதங்கள் சரிவர விளக்கம் தருவதில்லை. 'குழந்தை வளர்கிறது, முன்னேறு கிறது, நல்லவன், குறும்புக்காரன்' என்றெல்லாம் குழந்தைகளைப் பற்றிக் குறிப்பிடுவதில்லை. அவர்கள் உபயோகிக்கும் ஒரே சொற் றொடர் என்னவென்றால் குழந்தை கட்டுப்பாடடைந்து வருகிறான் அல்லது கட்டுப்பாடடையவில்லை (becoming disciplined or is not becoming disciplined). உள்ளார்ந்த ஒழுங்கையே அவர்கள் எதிர்பார்க்கின்றனர். மற்றவை அனைத்தும் இந்த அடிப்படைக் கொள்கை இருப்பதும், இல்லாததும் பற்றியே இருக்கிறது.

வெறும் 'வளர்ச்சி' என்பதை விட இது இன்னும் ஆழ்ந்த கருத்தைத் தூண்டிவிடுகிறது. உயிர் இனம் வளர்கிறது என்று கூறுவது மேலோடியான ஒரு மதிப்பீடாகும். அவன் வளர்வது தெளிவுதான். ஆனால் ஒழுங்கும் சீரும் பொருந்திய பண்டங் களால் ஒழுங்கமைதி அந்தரங்கத்தில் வளர்ந்து வருகிறது என்ற உட்கருத்தைக் கண்டு கூறுவதே வளர்ச்சியைக் கூறுவதாகும்.

எடுத்துக்காட்டாக ஒரு விலங்கின் கரு உருவாகும்பொழுது அது வளர்கிறது. அதன் வளர்ச்சியை உற்று நோக்குபவர்களுக்கு வெளித் தோற்ற வளர்ச்சியைக்காட்டிலும் உள் வளர்ச்சியின் அற்புதம் நன்கு விளங்கும். உள்ளே செல்களின் (சிற்றறைகளின்) அற்புதக் கூட்டுகள் தோன்றுகின்றன. சில ஒன்றுகூடி இலை

உருவம் பெறுகின்றன. இது மடங்கிப் பிறகு சிறு குடலை உருவாக்குகிறது. மற்றச் சில கூடி நரம்பு மண்டலத்தை உருவாக்குகின்றன. ஒரு கூட்டு தனியாக்கிக் கொண்டு கல்லீரலைத் தோற்றுவிக்கின்றன. இவ்வாறு பல பாகங்கள் ஒழுங்குபடுத்தப் படுவது மேலும் மேலும் தெளிவுபடுகிறது. ஒவ்வொரு தனித் தனி செல்களின் கூட்டமைப்புடன் இவ் வளர்ச்சி சீர்படுகிறது. இனிமேல் நடைபெற இருக்கும் உடல் உறுப்புகளின் வேலைகள் இந்த செல்கள் தம்மை எவ்வாறு ஒன்ற அமைத்துக் கொள்ளும் என்பது பற்றி இருக்கிறது.

முக்கியமான விஷயம் கரு வளர்வதல்ல. ஆனால் அது நேரினப் படுத்துதல் ஆகும் (co-ordinates). வளர்ச்சி என்பது ஒழுங்கினால் அமைகிறது. அந்த ஒழுங்கு உயிரையும் வாழ்விக்க உதவுகிறது. தன்னுடைய அந்தரங்க உறுப்புகளை நேரினப்படுத்தாத கரு உயிர்ப் புடையதன்று. இங்கு வாழ்க்கையின் உள்துடிப்பு (impulse) மட்டுமல்ல. வாழ்க்கையின் அற்புதத்தையே—மாயையே காண் கிறோம். வாழ்க்கையின் ஜீவாதார நிலைபெறுதலுக்கு அந்தரங்க ஒழுங்கின் வளர்ச்சி இன்றியமையாததாகும். இந்த வாழ்க்கை நிலையில் வாழவேண்டியதற்குத் தேவையான உள்துடிப்பைப் பெற்றிருக்கிறது.

உள இயல் சார்ந்த ஆய்வுக் குறிப்பு அட்டவணையில் காணப் படும் இயல் நிகழ்ச்சிகளின் சாரம் குழந்தையின் தெய்விக ஒழுங் கின் படிப்படி வளர்ச்சியைக் குறிப்பதாகும்.

**உள உற்று நோக்குக்கு வழிகாட்டி—தொழில்** (Guide to psychological observation) தொழில் அல்லது பணி :—குழந்தை ஒரு பணியில் நீண்ட நேரம் எப்பொழுது ஈடுபடுத்திக் கொள்கிறான்.

அந்தப் பணி என்ன ? அதனுடன் எவ்வளவு .நேரம் ஈடுபடு கிறான் என்று குறிக்கவும் (அதைச் செய்து முடிக்கும்பொழுது என்ன தாமதமாகச் செய்கிறான்; திரும்பத் திரும்பச் செய்கிறானா ?)

ஒரு குறிப்பிட்ட பணியில் ஈடுபடுத்திக் கொள்ளும்போது அவனுடைய தனிச்சிறப்புப் பண்புக் கூறுகள் (peculiarities).

ஒரே நாளில் எந்தெந்தப் பணிகளில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறான். எவ்வளவு விடாமுயற்சியுடன் ஈடுபடுத்திக் கொள் கிறான்.

தன் முயற்சிக் காலப்பிரிவு (periods of spontaneous industry) இருக்குமேயானால், அத்தகைய காலப்பிரிவு எத்துணை நாள்கள் நீடிக்கின்றன,

முன்னேறுவதற்குத் தன் ஆசையை எவ்வாறு வெளிப்படுத்துகிறான் என்பதையும் அறிந்துகொள்ளவேண்டும்.

எந்தப் பொருள்களை அவைகளின் வரிசைப்படி எடுத்துக் கொண்டு இடையறாது செய்துவருகிறான்.

தன்னுடைய கவனத்தைக் குலைக்கக் கூடிய தூண்டுதல்கள் சூழ்நிலையில் இருந்தும் ஊக்கம் குன்றாத விடாமுயற்சிப் பணியில் இறங்கியிருத்தல் காணப்படுகிறதா?

அவனுடைய கவனம் வேண்டுமென்று குறுக்கிட்டுக் கலைக்கப் பட்டிருந்தால் முன்போல் அவன் திரும்பவும் பணிபுரியத் தொடங்குகிறானா ? என்பதைத் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

நடத்தை அல்லது ஒழுகலாறு : குழந்தையின் செயலாற்றலில் ஒழுங்கு இருக்கிறதா இல்லையா என்று குறிக்கவும்.

அவனுடைய ஒழுங்கிலா வினையாற்றல்கள் எவை ?

தொழிலின் இயல் நிகழ்ச்சி வளர்ச்சி அடையும் பொழுது அவனுடைய நடத்தையில் மாறுதல்கள் நிகழ்கின்றனவா என்று குறிக்கவும்.

ஒழுங்கு பெற்ற தொழில்களை நிலைபெறச் செய்யும்பொழுது கீழ்க்கண்டவை நடைபெறுகின்றனவா என்று குறிக்கவும்.

மகிழ்ச்சிக் குரல் (crises of Joy)
அமைதி இடைவேளைகள் (intervals of serenity)
அன்பு வெளிக்காட்டுதல் (manifestation of affections)

தன் தோழர்களின் வளர்ச்சியில் குழந்தை எடுத்துக் கொள்ளும் பங்கு.

கீழ்ப்படிதல் அழைப்பு ஆணைக்கு குழந்தை இணங்குகிறானா? என்றும்,

நுண்ணறிவு முயற்சியுடன் மற்றக் குழந்தைகளின் பணியில் இக் குழந்தை எப்பொழுது சேர்ந்து பணியாற்றுகிறான் என்றும் குறிக்கவும்.

அழைப்பு ஆணைக்குக் கீழ்ப்படிதல் எப்பொழுது ஒழுங்கு நிலை பெறுகிறது என்று குறிக்கவும்.

எப்பொழுது குழந்தை ஆவலுடனும் மகிழ்ச்சியுடனும் கீழ்ப் படிகிறான் என்று குறிக்கவும்.

1. தொழில் வளர்வதற்கும், 2. நடத்தை மாறுதலுக்கும் கீழ்ப்படிதலின் சாயல்கள் எவ்வெவ் வகையில் சம்பந்தப்பட்டிருக்கின்றன என்று குறிக்கவும்.

# 4. ஆசிரியரை ஆயத்தமாக்குதல்

குழந்தையின் உளஇயல் வளர்ச்சி ஓர் இயற்கையான காணு தற்கரிய நிகழ்ச்சியாகும். இவைகளைப் பரிசோதனை மூலமாக உற்று நோக்க வேண்டுமென்றால் பள்ளிக்கூடம் அதன் நடைமுறை யில் இருக்கும் பொழுதே மனிதனுடைய உளஇயல் மரபு பற்றிய ஆய்வுக் கூடமாக மாறி விடுகிறது. வருங்காலத்தில் விரைவில் அது உள இயலாரின் ஒரு மிகச் சிறந்த ஆய்வுக் களமாக மாறி விடும். அத்தகைய ஒரு பள்ளிக் கூடத்தை உருவாக்குவதென்பது, குழந்தைகளுக்கு இன்னும் மேலான முறையில் கற்பிப்பதோடல் லாமல், ஒரு புத்துயிர் பெற்ற விஞ்ஞானத்துக்குத் தேவைப்படும் பொருள்களையும் உருவாக்குவதாகும். இயற்கை விஞ்ஞான ஆராய்ச்சி மாணவர்களுக்குத் தமது ஆய்வுக் கூடங்களில் தாங்கள் ஆராய வேண்டிய பொருள்களைத் தயாரிப்பதற்கென்று ஓர் இயக் கம் வேண்டியிருக்கிறது என்பதை யாவரும் அறிவர். ஓர் எளிய சின்னஞ் சிறு சிற்றறையின் (simple cell) இயக்கத்தைக் உற்று நோக்க வேண்டுமானால் அதற்கு ஓர் உட்குழிவான கண்ணாடித் தகடு தேவை என்றும், அந்தக் குழிவில் ஒரு சிறு துளி தொங்கும் வசதி பெற்றதாக இருக்கவேண்டும் என்றும், இந்த உயிருள்ள சிற்றறைகளை மூழ்க விடுவதற்கு அன்று ஆயத்தமாக்கப்பட்ட கரைதிரவங்கள் தேவை என்றும், அப்பொழுதுதான் அச் சிறு உயிரணுக்கள் தம் சீவசக்தியைத் தொடர்ந்து நடத்த முடியும் என்றும், சிறு சீவராசிகளை வளரவிடும் கரைபொருள்களை ஆக்கப் பல மண் வகைகளையும் முன்கூட்டியே வைத்திருக்க வேண்டும் என்றும் இவை போன்ற பல தேவைகள் அவசியம் என்பதும் தெளி வாகும். இவைகளுக்காகத் தொழில் புரிவதற்கென்று சில 'ஆயத் தக்காரர்கள்' இருக்கிறார்கள். பேராசிரியருக்கு இவர்கள் துணை வர்களும் அல்லர்; அல்லது உதவுவோர்களும் அல்லர். ஆனால், இவர்கள் ஒரு வகையில் பணித்துறையாளர்களாக இருந்தனர்.

உயர்ந்த வேலைக்காரர்கள் என்று கருதப்பட்டனர். பிறகு இவர்கள் உயர்ந்த தொழிலாளிகள் என்றனர். தற்காலத்தில் இவர்கள் பெரும்பாலும் விஞ்ஞான இயல் பட்டம் பெற்றவர்களாகவே இருக்கின்றனர். ஏனென்றால் இவர்களுடைய பணியானது எளிதன்று. மிகவும் நுட்பமான பணி இயற்ற வேண்டியிருக்கிறது. அவர்கள் உயிர் நூல், உடல் நூல், வேதி நூல் ஆகியவற்றின் அறிவு பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். ஆராய்ச்சியில் ஈடுபடும் பேராசிரியர்களைப் போல் எவ்வளவுக் கெவ்வளவு அறிவும் பண்பும் பெற்றிருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு விஞ்ஞான முன்னேற்றமும் வேகமாகவும் நிலையுள்ளதாகவும் இருக்கும்.

இயற்கை விஞ்ஞான ஆய்வுக் கூடங்களில் எல்லாவற்றிலும் உள இயல் ஆராய்ச்சிக் கூடம் ஒன்றில் மட்டும் எக்காரணம் பற்றியோ கவனிக்கப்படவேண்டிய பொருள்களை ஆய்வதற்கென்ற ஓர் அமைப்பு அவசியமில்லை என்று ஒதுக்கி விட்டிருக்கின்றனர். இது ஒரு விந்தையே! இன்று ஓர் உள இயலாரை அழைத்து உமது துணைவரின் வேலைக்கு ஏற்பாடு செய்யுங்கள் என்று சொன்னால், அவர் நினைப்பதெல்லாம் ஆய்வுக் கருவிகளை ஆயத்தம் ஆக்குவதுதானே என்று நினைப்பர். பௌதிக இயல் ஆய்வுக் கூடங்களில் கருவிகளை எடுத்து வைப்பது போல் இவர் நினைப்பார்.

ஆனால், உயிருடன் இயங்குபவர் ஒருவர் புது நிகழ்ச்சி ஒன்றைத் தோற்றுவிக்கப் போகிறார் என்பது இவர் மனத்தில் படாது. எனினும், கேவலம் ஒரு சிறு சிற்றறையையோ, உயிருள்ள ஒரு கிருமியையோ உற்று நோக்க வேண்டுமானால் விஞ்ஞானிக்கு ஒரு துணைவர் தேவைப்படுகிறார். அவ்வாறு உற்றுநோக்கப்படுபவன் கேவலம் கிருமி அல்ல, மனிதனாகவே இருக்கும் பொழுது அதற்குத் தக்க துணைவர் வேண்டுமென்பது மிகவும் இன்றியமையாததன்றோ?

உளஇயலார் தங்களுடைய ஆய்வுக்கு உட்பட்டவரை (subject) எவ்வாறு தயாராக்கலாம் என்று நினைத்தார்கள்? ஆய்வுக்குட்பட்டவரின் உன்னிப்பை ஒரு வார்த்தையால் பெற்று விடலாம் என்றும், அவர்களுடைய பரிசோதனைகளுக்கு அவர்கள் தொடர்ந்து துலங்க (respond) வேண்டுமென்றும் தெளிவு படுத்த எண்ணிவந்தார்கள். அவர்களுடைய வேலைக்கு முன்பின் தெரியாத தற்செயலாக ஆய்வுக் கூடத்துக்கு வந்த தனியாரானாலும் போதும். சிறு குழந்தை ஒரு பட்டுப்பூச்சி பறக்கப் பறக்க அதைப் பிடிக்கிறது. ஓரிரு நிமிடங்கள் உற்று நோக்குகிறது. பிறகு பட்டுப் பூச்சியைப் பறக்க விட்டு விடுகிறது. இதேபோல் தற்கால உள இயலாரும் நடந்து கொள்கின்றனர். உயிர் இயல்

அறிஞர் விஞ்ஞான முறைப்படி அமைந்த ஓர் ஆய்வுக் கூடத்தில் தம்முடைய முன் ஏற்பாடுகளெல்லாம் செவ்வனே நடைபெறுகின்றனவா என்று கவனித்துக் கொள்கிறார். அம்மாதிரி உள இயலார் நடந்து கொள்வதில்லை.

இதற்குமாறாக உள இயல் வளர்ச்சி நமக்கு என்ன காட்டுகிறது? இவ்வளர்ச்சி இன்னும் முற்றுப்பெறாவிட்டாலும் நமது பரிசோதனைகளால் நமக்குக் காட்டுவதென்ன? குழந்தையின் வளர்ச்சியின் போக்கைக் குழந்தைக்கு மிகவும் நுட்பமான வகையில் எடுத்துக்காட்ட வேண்டுமென்பதைத் தெளிவுபடுத்துகிறது. எல்லாவற்றுக்கும் மேலாகக் குழந்தையின் சுதந்திரத்தை மதிக்க வேண்டுமென்பதையும் எடுத்துக் காட்டுகிறது. உள இயல் தோற்றங்கள் வெளியாகி உற்று நோக்கத்தக்க உண்மைகள் மலர்வதற்குத் தகுந்த நிலைமைகள் அமைய வேண்டுமென்பதும் தெளிவாகிறது. இவைகளுக்கெல்லாம் தனிப்பட்ட சூழ்நிலை தேவைப்படுகிறது. சாதாரண இயற்கை இயல் ஆய்வுக்கூடங்களில் காணப்படும் துணைவர்களை விடப் பன்மடங்கு உயர்ந்த ஆற்றல் பெற்ற துணையும் இன்னும் சிறப்பான இயக்கமும் தேவைப்படுகின்றன. விஞ்ஞான முறையில் அமைக்கப்பட்ட குற்றங்குறை இல்லாத பள்ளிக்கூடம் ஒன்றே அத்தகைய ஆய்வுக் கூடமாக முடியும். அத்தகைய பள்ளிக்கூடத்தில் ஆய்வுக் கூடங்களில் காணப்படும் துணைப்பட்டதாரி போல் இருப்பவர் ஆசிரியரே ஆவர்.

மெய்தான். எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இத்தகைய உயர்ந்த விஞ்ஞானக் குறிக்கோளை நிலைப்பெறச் செய்வது அரிதுதான். எனினும், விஞ்ஞானப் பரிசோதனைகள் நடைபெறுவது போல் கருதிப் பள்ளிக்கூடமும், ஆசிரியர்களும் தங்களுடைய முயற்சிகளை எல்லாம் ஒன்று கூட்டி முயல வேண்டும் என்பது வாதத்துக்கு அப்பாற்பட்டது. குழந்தைகளின் உளஇயல் மீட்பு (Psychological salvation) என்பது வாழ்வதற்குத் தேவையான சுதந்திரமும் அதை நடைமுறையிலாக்க வழியும் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. வருங்காலச் சந்ததியாருக்கு அளிக்கப்படவேண்டிய இயற்கையான உரிமைகளாக இவை அமைய வேண்டும். இப்பொழுது நடைமுறையில் காணப்படும் 'கற்பிக்க வேண்டும் என்ற கடமை' மாறி, ஒரு சமூக தத்துவக் கொள்கையாக மாறவேண்டும். 'கற்பிக்க வேண்டும் என்ற கடமை' நாட்டுக்கே ஒரு சுமை என்பது மட்டுமல்ல, எதிர்கால வீரியத்துக்கும் ஒரு சுமையாகிறது. தேசியப் பள்ளிக்கூடங்களில் குழந்தைகளின் உளஇயல் தோற்றப்பாடுகளை உள இயலையே இன்னும் வளம் பெறச் செய்யாவிடின், இயற்கையின் அழகே அதன் முடிவு போல் அவை தாமே தம் முடிவாகின்றன.

ஏதோ ஒரு விஞ்ஞான இயலின் நன்மை கருதிப் புதுப் பள்ளிக் கூடங்களைத் தோற்றுவிக்கலாகாது. ஆனால் வாழ்கின்ற சமூகத்தின் சேவைக்கென்றே அவை உருவாக்கப்பட வேண்டும். ஆசிரியர்கள் தம் கண்முன் மலரும் வாழ்வைக் கண்டு ஆழ நினைந்து மகிழ்ச்சி அடைவார்கள். வெளிப்படையாக விஞ்ஞானத்துறையில் காணப்படும் காட்சியைக் காணாவிட்டாலும் ஓர் உயர்ந்த தெய்விகத் தன் முனைப்பு (holy egoism) போர்த்தப் பட்டவராகி வாழ்கின்ற ஆன்மாக்களுடன் மிகவும் நெருங்கிப் பழகுகின்றவர்களைப் போல் தமது உணர்ச்சிகளையும் உயர்த்தி இன்பம் பெறுகின்றவர்களாகின்றனர்.

இந்த முறைக் கல்வியில் ஆசிரியர் புதுமையாக ஆக்கப் பட வேண்டியிருக்கிறதென்பதற்கு ஐயமில்லை. ஆசிரியையின் ஆளுமையும் (personality) சமூகத்தில் அவர்க்கிருக்கும் செல்வாக்கும் அப்பொழுதே மாறிவிடுகின்றன.

முதல் முதலாகச் செய்த சில தொடர்பற்ற பரிசோதனைகளிலிருந்தே ஒரு புதுவகையான ஆசிரியை உருவாக்கப் பட்டிருக்கிறாள். பேச்சுத் திறமைக்குப் பதிலாக மௌனம் சாதிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறாள். கற்பிப்பதற்குப் பதிலாக உற்று நோக்க வேண்டியவளாகிறாள். தவறு செய்யாத மதிப்புக்குரியவர் என்ற செருக்கு நீங்கிப் பணிவுக்கே அணிகலம் ஆகிவிடுகிறாள்.

* * *

விஞ்ஞான இயல் உலகில் பயன் அளிக்கத் தொடங்கின காலத்தில் கம்பீரமான பேராசிரியர்கள் அடைந்த மாறுதல்களை இப்புதுமை ஆசிரியர்களின் மாற்றமும் நமக்கு நினைவூட்டுகின்றன. அந்தப் பழங்காலப் பேராசிரியர்களில் இன்று என்ன மாறுதல்கள் காண்கிறோம்! கீரி இனத்தைச் சேர்ந்த ஓர் இனத்தின் மயிர்ப்பட்டு ஓரத்தில் தைக்கப்பட்ட நீண்ட மேலாடையை அணிந்துகொண்டு சிம்மாசனம் போன்ற தமது உயர்ந்த இருக்கையில் அமர்ந்து மேலாண்மை உரிமையுடன் பேராசிரியர் பேசினார். மாணவர்கள் இவர் கூறினவற்றை முழுமையும் நம்பினதோடல்லாமல் ஆசான் கூறியதை வேதவாக்கியமாக ஏற்றுக் கொண்டனர். ஆனால், இன்றையப் பேராசிரியரின் தோற்றம் என்ன? தமது உயர்ந்த இருக்கைவிட்டு இறங்கித் தாம் நன்கு பார்க்கப்படுமாறு மாணவர்களை உயர்ந்த நிலையில் அமர வைத்துத் தன்னை மிகவும் தாழ்ந்த பீடத்தை—அதாவது தரையிலேயே நிற்க வைத்துக் கொண்டுள்ளார். 'மாணவர்கள் அனைவரும் அமர்ந்திருக்க இவர் மட்டும் நின்று கொண்டிருக்கிறார். மேலும் பழைய ஆடம்பரக் கவுன்களைக்' கழற்றிவிட்டு ஏதோ ஒரு தொழிலாளி அணியும் பருத்தியால் நெய்த அரைக்கைச் சட்டையை அணிந்து கொண்டிருக்கிறார்.

பேராசிரியரின் ஆராய்ச்சி உண்மைகளைத் தேர்ந்து தாமே சரி பார்க்கும் திறமை பெற்ற பொழுது ஒவ்வொரு மாணவரும் உயர்ந்த முன்னேற்றத் துறையில் புகழ் பெறுவார்களென்று அறிவார்கள். இது மட்டுமன்று, ஒவ்வொருவரும் விஞ்ஞானத்துக்கே ஒரு புதுத்தூண்டுதல் அளிப்பார்கள் என்றும் உணர்வார்கள். புது உண்மைகளைக் கண்டறிந்தவர்கள், புது விஞ்ஞான அறிவுச் செல்வத்தை உருவாக்கினவர்கள் என்ற பட்டியலில் தமது பெயரும் பதிவாக்கிக் கொள்வார்கள் என்று உணர்வார்கள்.

உயர்மதிப்பு, குருபீடம் என்பவை இப் புதுமைப் பள்ளிக் கூடங்களில் மாறி, இரசாயனம், பௌதிகம் அல்லது இயற்கை நிகழ்ச்சிகளின் தோற்றத்தில் அக்கறையாயின. இந்தப் புது அக்கறையில் மற்றவை அனைத்தும் மறைந்தன. ஆய்வுக் கூடத்தின் முழு ஏற்பாடுகளும் ஒரே குறிக்கோளை ஒட்டி அமைக்கப்பட்டிருந்தன. அந்த நிகழ்ச்சிக்கு ஒளி தேவைப்படுமாயின் சுவர்களெல்லாம் கண்ணுடியால் அமைக்கப் பெற்றிருந்தன. இருள் அவசியம் என்றிருந்தால் அந்த ஆய்வுக்கூடம் ஒரு காமராவின் உள் அமைப்புபோல் ஒளிபுகா வண்ணம் கட்டப்பட்டிருந்தது. முக்கியமாகக் கவனிக்கப்படுவது என்னவென்றால் நிகழ்ச்சி தோற்றுவிக்கப்படவேண்டும். அது ஒரு துர்நாற்றமாக இருக்கட்டும். அல்லது நல்நாற்றமாக இருக்கட்டும். ஒரு மின்பொறியாகட்டும் அல்லது கொல்லருடைய குழல்களில் (Geissler's tubes) காணப்பெறும் வண்ணங்கள் ஆகட்டும், ஹெல்ம் ஹோல்ட்ஸின் எதிரொலிப் பெருக்கி அல்லது ஓர் உலோகத் தகடு அதிரும்பொழுது அதன்மேல் தூவப்பட்ட நுண்மையான மணல் காட்டும் பல வடிவ அமைப்புகள், ஒரு இலையின் வடிவம் அல்லது ஒரு தவளையின் தசை சுருங்குதல், கண்ணில் இருக்கும் குருட்டுப்புள்ளி ஆராய்ச்சி அல்லது இருதயத் துடிப்பின் இலயம் ஆகிய இவை ஒவ்வொன்றும் சமமே. ஒவ்வொன்றும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆவலோடு உள்ளத்தைக் கவரும் தேடுதல் என்ன என்றால் அது உண்மையைத் தேடுதலேயாகும். விஞ்ஞானத்திடம் இன்றைய தலைமுறையினர் எதிர்பார்ப்பது இதுவே. பேராசிரியரின் சொற்பொழிவாற்றும் திறன் அன்று. சொற்பொழிவுப் பொருளின் கடுமையைக் குறைக்கவல்ல கம்பீரமான சாடைகள் அல்ல. தேர்ந்து ஆய்ந்து விரிவான உயிரூட்டும் இறுதி வாய் வீச்சுகளும் அல்ல. இவைகளெல்லாம் முன்னொரு காலத்தில் மாணவர்களின் கவனத்தைக் கவர்வதற்கென்று தனிப்பட்ட கலையாகவும், உதவிச் சாதனைகளாகவும் வளர்க்கப்பட்டு வந்தன. தற்கால இளைஞர்களை இயங்க வைப்பது கவனம் அன்று. அறிவின் மேல் உள்ள ஆர்வமே யாகும். இவ்விளைஞர்கள் பல்கலைக் கழக மன்றங்களை விட்டு வெளி

யேறும் பொழுது பேராசிரியருடைய குரலையோ அல்லது அவரு டைய தோற்றத்தையோ நினைவில் இருத்திக் கொள்வதில்லை.

ஆனால் ஆசிரியரிடம் அன்பும், மரியாதையும் இல்லை என்பதல்ல. முன்னெல்லாம் பேராசிரியர் அணிந்து கொண்டிருந்த நீண்ட அங்கியும் (Gown) போலி முடியும் (Wig) ஏளனத்தினால் தூண்டப்பட்ட அச்சத்தையே மாணவர்கள் மனத்தில் தோற்றுவித்தன. ஆனால் இன்று சாதாரணத் துணியால் தைத்த அரைக்கைச் சட்டையை அணிந்து கொண்டு மனப்பணிவுடன் மனித சமுதாய நலனுக்காக உழைக்கும் பெரிய விஞ்ஞானியைக் காணும் மாணவனுடைய உள்ளத்தில் ஆழ்ந்த நன்மதிப்புப் பெறுகிறது. ஆசிரியர்களும் பள்ளிகளும் இதே மாதிரி மாறத் தொடங்க வேண்டும்.

ஒரு பள்ளிக்கூடத்தில் ஒவ்வொன்றும் ஓர் அடிப்படை உண்மையை மையமாகக் கொண்டு இயங்கும்பொழுதும், அந்த உண்மையும் இயற்கையான குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாக (Phenomemon) இருக்கும் பொழுதும், அத்தகைய பள்ளிக்கூடம் விஞ்ஞானத்தின் எல்லைக்குள் புகுந்து விட்டதென்று கருதலாம். அப்பொழுது விஞ்ஞானத்தின் தேவைப்படுகின்ற அந்தச் சிறப்பு இயல்புகளை ஆசிரியரும் பெறவேண்டும்.

விஞ்ஞான பக்தர்களில் அவர்களுடைய அறிவு அளவுக்கப்பாற்பட்ட சிறப்புக் கூறுகளைக் (characteristics) காண்கிறோம். குறிப்பாக இயக்க நூல் வல்லுநர், தாவர நூல் வல்லுநர், விலங்கு நூல் வல்லுநர் முதலியோரின் அறிவின் உள்ளடக்கம் ஒன்றுக்கொன்று முழுமையும் வேறுபட்டிருந்த போதிலும் அவர்கள் ஒவ்வொருவரும் விஞ்ஞான மாணவர்களாவார்கள். பண்டைக்கால மறை நூல் அறிஞர்களினின்று (metaphysician) வேறுபடும் வகையில் சிறப்பு இயல்புகளைப் பெற்றிருக்கின்றனர். இந்தச் சிறப்பு இயல்புகள் அவர்களின் அறிவின் உள்ளடக்கத்தைப் பொறுத்தவை அல்ல. ஆனால் இந்த இயல் நூல்களின் முறையைப் பொறுத்தவையாகும். ஆசிரிய நூலும், மற்ற இயல் நூல்களில் இடம் பெற வேண்டுமெனில் அதுவும் அதனுடைய முறையால் சிறப்பியல் பெறவேண்டும். ஆசிரியையும் தன்னை ஆயத்தமாக்கிக் கொள்ள வேண்டும். அந்நூலின் அறிவு உள்ளடக்கத்தாலன்று. ஆனால் அதன் முறையால்.

சுருங்கச் சொல்லின் ஆசிரியை தன்னுடைய அறிவு வளர்ப்பைவிட உயர் குணத்தால் சிறப்படைந்தவராக இருக்க வேண்டும்.

அடிப்படையான குணம் என்னவென்ருல் உற்று நோக்கும் (observation) திறமை ஆகும். இக் குணம் இன்றியமையாத காரணத்தால் (Positive sciences) கூராய்வு நூல்களென்றும் பிறகு செயல் ஆய்வு நூல்களென்றும் பெயரைப் பெற்று, உற்று நோக்குவதுடன், செய்து ஆய்வதும் இணைந்திருக்கின்றன. தேவையான அறிவும், புலன்களும் பெற்றிருப்பதனுலேயே உற்று நோக்குவதற்குப் போதும் என்று உறுதியாகக் கூறிவிட முடியாது என்பது தெளிவு. இது பயிற்சியால் வளர வைக்க வேண்டிய ஒரு பழக்கமாகும். முன்பின் பழக்கமில்லாத ஒருவருக்கு வானவெளி நிகழ்ச்சிகளை ஒரு தொலை நோக்கியின் மூலம் விளக்கிக் காட்ட முயற்சிக்கும் பொழுதோ, அல்லது நுண்ணோக்காடியின்கீழ் ஒரு சிற்றறையின் நுட்பங்களை எடுத்துக் காட்ட முயலும் போதோ, காட்ட முன்வருவோர் இதைக் காண வேண்டும் என்று எவ்வளவு தெளிவாக வாயார விளங்கக் கூறினுலும், இதுவரை இக் கருவிகளின் மூலம், உற்று நோக்கிப் பழக்கமில்லாதவரால் அவற்றுள் எதையும் காண முடிவதில்லை. 'டிவிரிஸ்' என்பவர் (De Vries) தமது ஆய்வுச் சாலையில் பல நுண்ணிய செடிகளில் திடீர் மாறுதல் அடைந்து, புதுச்செடி இனம் தோன்றும் பேருண்மையைக் கண்டுபிடித்தார். இந்த ஆய்வுச் சாலைக்கு வருவோர்க்கு டிவிரிஸ் அனோதீரா (Aenothera) என்ற நுண்செடி எப்படித் திடீரென்று மாறி இருக்கிறதென்று அதனுடைய மிகமிக நுண்ணிய முக்கிய வேறுபாடுகளையும், அந்த வேறுபாடுகள் இன்னும் முழுமையும் முளைவிடாத செடிகளிலும் காணப்படுவதை எவ்வளவு தெளிவு படுத்தினுலும் வருபவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. ஒரு புதுக் கண்டுபிடிப்பைப் (discovery) பொது மக்களுக்குத் தெளிவு படுத்த வேண்டுமானுல் அது சம்பந்தப்பட்ட சாதாரண விவரங்களை எல்லாம் எடுத்துக்காட்ட வேண்டியிருப்பது எல்லோரும் அறிந்த உண்மை. கண்டுபிடிப்பின் உண்மையான சாரத்தின் நுண்மையான விவரங்களை முன்பின் பழக்கமில்லாதவரால் புரிந்து கொள்ள முடிவதில்லை. ஏனென்ருல் அவர்களால் உற்று நோக்க இயலுவதில்லை.

உற்று நோக்கும் பழக்கம் வேண்டும். விஞ்ஞானத்தைக் கையாள வேண்டுவோர் இதையே உண்மையான முறையாகப் பின்பற்ற வேண்டும். ஒரு நிகழ்ச்சியைக் காண இயலவில்லை என்ருல் அந் நிகழ்ச்சி நடைபெறவில்லை போல ஆகிவிடுகிறது. விஞ்ஞானியைப் பார்க்கும் பொழுது என்ன காண்கிறேம்? தன் முன் காணப்படுவதில் தன்னுல் கட்டுப்படுத்த முடியாத ஓர் அக்கறையில் தன் ஆன்மாவையே பறிகொடுத்த நிலையில் காண்கிறேம்.

உற்று நோக்கப் பழக்கப்பட்டவர்க்கு ஓர் அக்கறை தொடங்கு கிறது. அத்தகைய அக்கறை ஒரு விஞ்ஞானியின் சக்தியை ஆக்குவிக்கும் தூண்டுவிசை ஆகிறது. சிறு குழந்தையில் அந்தரங்க ஒருமைப்பாட்டைச் சுற்றி, முழு உள இயல் பகுதி களும் இணைந்து நடைபெறும். அதேபோல் ஆசிரியரிடமும் கூர்ந்து ஆய்ந்த நிகழ்ச்சியில் அக்கறை தோன்றும் பொழுது அதனடியாக அவருடைய புது ஆளுமையும் தானாகவே உருவாகத் தொடங்கிவிடும்.

பொறுமை போன்ற பல சிறிய பண்புகள் உற்றுநோக்குவ தென்பதில் அடங்கியிருக்கின்றன. ஒரு விஞ்ஞானியுடன் ஒப் பிட்டால் பழக்கப்படாத தனியார் சாதாரணக் கண்ணாலும், 'லென்சின்' (lens) உதவியாலும் காண இயலாத ஒரு குருடனைப் போல் இருப்பதுடன் ஒரு பொறுமையற்றவனைப்போலும் காணப் படுகிறான்.

வான நூல் வல்லுநர் ஒருவர் தம்முடைய தொலைநோக்கியைச் சரியாகக் குவியவைக்காவிடில், தீக்கைபெறாதவனால் (layman) அதுவரை பொறுத்திருக்க் முடியாது. விஞ்ஞானி ஏதோ ஒரு நீண்ட பொறுமையான செயலைத் தாம் செய்து கொண்டிருப்ப தென்று கூட உணராமல் நிகழ்த்திக் கொண்டிருப்பார். அதே சமயத்தில் தீக்கை பெறாதவன் ஆத்திரத்துடன் தடுமாற்றமாக எண்ணிக் கொண்டிருப்பான். 'இங்கு நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் ? இம்மாதிரி காலத்தை நான் வீண்போக்க முடியுமா ?' நுண் நோக்கியாளர் பொதுமக்களின் வருகையை எதிர்பார்க்கும்பொழுது வரிசையாகப் பல நுண்ணோக்கிகளைச் சீராகக் குவிய வைத்துக் காத்துக் கொண்டிருப்பார்கள். ஏனென் றால் பொதுமக்கள் 'உடனே'யும், வேகமாகவும் 'நிறைவாகவும்' பார்க்க விரும்புவார்கள் என்று நுண்ணோக்கியாளர் கண்டுணர் வார்கள்.

ஆய்வுச் சாலையில் உயர்ந்த, விஞ்ஞான உண்மைகளைச்சாதித்து, பல பேராசிரியப் பீடத்துக்குத் தகுதி பெற்றவராய்ப் பல சமூகப் பட்டம் பதவிகளைப் பெற்றும் உள்ள ஒரு விஞ்ஞானி ஒரு திசுவின் சிற்றறைகளை நுண்நோக்காடியில் வைத்துக்காட்ட ஒத்து இணங்கி யிருக்கிறார் என்று நாம் கற்பனை செய்து பார்ப்போம். உலகத்தில் இவ்வாறு நடப்பதுதான் இயற்கை என்றாற்போல் அவர் முழுப் பற்றுடன் நிறைந்த அமைதியோடு இம்மாதிரி தொடங்குவார். சாராயத்தில் காப்பாற்றப்பட்டிருந்த ஒரு திசுவை எடுத்து, அதி லிருந்து ஒரு சிறுபகுதியைத் துண்டித்து எடுப்பார். இந்தச் சிறு பகுதி இனி எந்தக் கண்ணாடிச் சில்லின்மேல் வைக்கப்படுமோ

அந்தச் சில்லேயும் அதன்மேல் மூடப்படும் சிறுகண்ணுடி மூடியையும் (cover slide) கவனத்துடன் கழுவுவார். மேலும், நுண்ணுேக்காடி யின் லென்ஸ்களேயும் அவர் தூய்மைப்படுத்துவார். வைக்கவேண் டிய திசுச் சிற்றறை சரியான குவிய தூரத்தில் இருக்கிறதா என்று சீர்ப்படுத்தி விளக்கம் தர ஆயத்தமாவார். இத்தனேயும் நடந்து கொண்டிருக்கும்பொழுது இதைக் காணவந்த சீமாட்டி, 'மன்னிக் கவும் பேராசிரியர் அவர்களே, மெய்யாக எனக்கு வேருெரு அலுவல் இருக்கிறது...எனக்குச் செய்ய வேண்டியது நிறையாக இருக்கிறது' என்று நூறுமுறை சொல்ல வாயெடுத்திருப்பாள் என்பதற்கு ஐயம் இல்லே. அவள் நுண்ணுேக்கியில் நோக்கியும் ஒன்றும் அவளுடைய கண்ணுக்குப் புலப்படாத பொழுது அவளு டைய புலம்பல் வெறுப்பாகி விடுகிறது. 'எவ்வளவு நேரத்தை வீணுக்கி விட்டேன்!' என்கிருள் அவள். எனினும் அவளுக்கு அப் படிச் செய்ய வேண்டிய வேலே எதுவும் இல்லே. அவளுடைய நேரத்தை எல்லாம் சும்மா வீணுக்கி விடுகிருள். அவளுக்கு இல்லாத குறை, நேரம் அன்று ; ஆனுல் பொறுமை அவளிடம் இல்லே. எவரிடம் பொறுமை இல்லேயோ அவரால் எதையும் சரிவர மதிப்பிட இயலாது. அவருடைய மன உணர்ச்சியையும், மன நிறைவையுமே அவரால் பாராட்ட முடியும். தம்முடைய செயல்களேக் கொண்டே காலத்தை அவர் கணக்கிடுகிருர். தனக்கு மன நிறைவு அளிப்பது முழுமையும் வெறுமையுமாக இருக்கலாம் ; பயனற்றதாக இருக்கலாம் ; சிறுமையாகவும் இருக் கலாம். அவைகளேப்பற்றி அவருக்குக் கவலே இல்லே. அவை அவருக்கு மனநிறைவளிக்கிறது. அவ்வாறு மனநிறைவு அளித் தால் அத்தகைய செயல்கள் காலம் வீணுக்குவதென்று கொள்ளாத வையாகும். அவரால் பொறுக்க முடியாதது என்னவென்ருல், நேரம் வீண் போகிறதே என்று அவருக்குத் தோன்றுவதெல்லாம் நரம்புகளின் மேல் ஏற்படும் ஒரு விறைப்பு. தம்மை அடக்கும் ஒரு தனி நிலே, உடனுக்குடனே பலன் அளிக்காது ஓர் இடைவேளேயில் காத்திருப்பது ஆகியவைகளேயே அவரால் பொறுக்க முடிவதில்லே. இத்தாலிய மொழியில் (aspettare e non venire e'una cosa da morive — (To wait for what does not come is a killing business). 'வராததற்குக் காத்துக் கொண்டு இருப்பது மிகவும் தொல்லே பிடித்த வேலேயாகும்' என்று ஒரு பழமொழி இருக்கிறது. முக்கிய மான வேலே செய்ய வேண்டியிருக்கும் பொழுது நழுவி விடுகிருர் களே, பல வேலேகளில் ஈடுபாடுடையவர்கள் என்று சொல்லிக் கொள்கிருர்களே, அவர்களேப் போன்றவர்களே இந்தப் பொறுமை யற்றவர்கள்.

இத்தகைய மனப்போக்கை மாற்ற ஒரு முழு நிறைவான கல்வி மிகவும் அவசியமாகிறது. வெளி உலகத்தின் முக்கியத்

துவத்தை உயர்ந்த வகையில் மதித்து நம்மை அவ்வுலகுடன் இணைக்க வேண்டுமானால் நம்முடைய மன உறுதியை வென்று கட்டுப்படுத்த வேண்டும். இம்மாதிரியான தயாரிப்பு இல்லாமல் விஞ்ஞானம் தன்னுடைய முடிவுகளைத் தீர்மானம் செய்வதற்குப் பயன்படுத்தப்படும் நுண்ணிய பொருள்களைப்பற்றி நாம் முக்கியத்துவம் அளிக்கமுடியாது.

ஒரு குறிப்பிட்ட செயலில் இடையறாமல் எப்பிழையும் இல்லாமல் ஈடுபட்டு, வெளிப்படையாகப் பார்க்கப் போனால் மிகவும் சிறியதாக இருந்தாலும், அத்தகைய பணியில் அம்மாதிரி ஈடுபடுவது விஞ்ஞானத்துறையில் முன்னேற விரும்புவோருக்கு அது ஒரு மிகவும் சிறந்த பண்பாகும். பௌதிக நூல் விஞ்ஞானி ஒருவர் ஒரு கருவியைச் சரியான மட்ட நிலையில் வைப்பதற்கு என்ன செய்கிறார் என்பதை நாம் நினைவுபடுத்திக்கொள்வோம். எவ்வளவு பொறுமையுடன் அவர் முதலில் ஒரு திருகாணியைத் திருப்புகிறார். பிறகு மற்றொரு திருகாணியைத் திருப்புகிறார். திரும்பத் திரும்ப அவ்வாறே மெதுவாகவும் கவனமாகவும் செய்துவருகிறார். இத்துணை பாடும் எதற்காக ?. ஒரு குறையுமற்ற கிடைநிலையான ஒரு பரப்பைப் பெறுவதற்கே. இந்தக்கடினமான உலோகத்தில் இத்தகைய ஒப்புமை அளவை நிலைநாட்டிய பிறகு, வெப்பத்தின் சிறுமாறுதலும் இதன் நீளத்தை நுண்ணளவும் மாற்றிவிடாதிருப்பதற்கு எவ்வளவு கவனத்துடன் பாதுகாக்கப் படவேண்டுமென்பதைச் சிந்தித்துப் பாருங்கள். இல்லாவிட்டால் கிடைநிலையை அளக்கும் ஒரு விஞ்ஞானக் கருவி எவ்வளவு பயனற்றதாகப் போய் விடுமென்று பாருங்கள். எனினும், செய்யப்படுவதைப் பார்த்தால் எவ்வளவு முக்கியத்துவம் பெற்ற செயலாகக் காணப்படுகிறது, ஓர் அளவையைப் பாதுகாப்பது ! கழுவின பாத்திரத்தில் இன்னும் ஒட்டிக்கொண்டிருக்கும் பொருள் ஏதாவது இருக்கிறதா என்று கண்டறிய விரும்பும் ஓர் இரசாயன நூல் வல்லுநர் சிறு குழந்தையைப்போல் தம்முடைய குப்பிகளை வைத்துக்கொண்டு விளையாடுவது போல் தோன்றுகிறார். அவர் ஆராயவேண்டிய பொருளை ஒரு வாலைக்குள் (retort) நிறைத்துக் கொள்கிறார். அதை முழுவதும் கொட்டிவிடுகிறார். காலிவாலைக்குள் தண்ணீரை நிரப்புகிறார். அந்தத் தண்ணீரில் முதலில் வாலைக்குள் இருந்த பொருளின் அடையாளம் ஏதாவது உண்டா என்று ஆய்கிறார். ஆம், சிறிதளவு இருப்பதாக அறிகிறார். மறுபடியும் வாலையில் உள்ளதை வடித்துவிடுகிறார். புதிதாக நீரால் வாலையை நிரப்புகிறார். மறுபடியும் ஏதாவது முன்போல் அடையாளம் தெரிகிறதா என்று சோதிக்கிறார். இவ்வாறு செய்து பார்த்து ஒவ்வொன்றிலும் கரைதல் விகிதம் என்ன என்று நிர்ணயிக்கிறார். இந்தப் பரி

சோதனையில் எவ்வளவு குறைந்த பொருள் கரைந்திருக்கிறதென் பதே முக்கியமானது. கண்ணுக்குப் புலனுகாத, பயனற்றது என்று தள்ளிவிடக் கூடிய இந்தக் குறைந்த அளவை நிர்ணயிப் பதற்கே அவர் சிறு குழந்தையைப் போல் நடந்து கொண்டார்.

பணிவுத்தன்மை என்பது பொறுமையின் ஒரு பகுதியாகும். எல்லா விஷயங்களிலும் ஒரு விஞ்ஞானி பணிவுடன் விளங்குகிருர். தம்முடைய பேராசிரிய சிம்மாசனத்திலிருந்து இறங்கி, சிறு மேசையின் முன் நிற்பதும், தம்முடைய பாதம்வரை எட்டும் நீண்ட அங்கியை உதறிவிட்டுத் தொழிலாளியின் அரைக் கைச் சட்டையை அணிவதும், வாதத்துக்கு இடம் இல்லாத ஓர் உண் மையைக் கூறும் அதிகாரப் பதவியை விலக்கிவிட்டுத் தம் மாண வர்களுடன் சேர்ந்து ஓர் உண்மையை ஆராய அவர்களை அழைத்து உண்மையைக் கண்டறிந்து நிருபிக்குமாறு கூறுவதும், கடைசி வரை ஒரு கோட்பாட்டை (doctrine) மாணவர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துக்கு மாருக அந்த உண்மையே அவர்களைத் தூண்டிவிடச் செய்ய வேண்டுமென்று முயல்வதும், இன்னும் அவருடைய ஆய்வுக் கூடத்தில் ஆற்றிவரும் பல செயல்களிலும் அவருடைய பணிவுத் தன்மை விளங்குகிறது. தம்முடைய முழுச் சக்திகளையும் உட்கவர்வதற்கும், முழுக்கவ னத்தை ஈர்த்து, முழு நேரத்தையும் செலவழிப்பதில் அவர் சிறிதும் பின்தங்குவதில்லை. சமூக மரியாதைகள் அவர்மேல் குவிக்கப்படும் போதும் அதே போக்கில்தான் நடந்து கொள்கிருர். அவருடைய மெய்யான பெருந்தன்மைக்கும் மெய்யான கௌரவத்திற்கும் அந்தப் பணிவே காரணம் என்று அவர் நம்புகிருர். ஒரு நாட்டின் அமைச்சராகவோ அல்லது பல்கலைக்கழக அங்கத்தினராகவோ பதவி வகித்தாலும், அந்த விஞ்ஞானிக்கு ஒரு நுண்கிருமி, அல்லது ஒரு கழிவு மலசலப் பொருள் அல்லது வேறு எப்பொரு ளானுலும் அவருடைய அக்கறையை ஈர்க்கலாம். தற்கால விஞ் ஞானிகளை 'சிஞ்சிநாடுஸுடன் (cincinnateus) ஒப்பிடக்கூடாது. இந்தத் தொழிலாளிகள் சிஞ்சிநாடுசைப் பலமடங்கு மிஞ்சிவிடு கிருர்கள். ஏனென்ருல், இவர்கள் மனித சமுதாயத்துக்கே புகழை யும் பேரின்பத்தையும் தரக்கூடிய சக்தியைப் பெற்றிருக்கிருர்கள்.

ஆனுல், விஞ்ஞானிகளில் காணப்படும் பணிவின் சிறப்பான தோற்றம் என்னவென்ருல், தன்னலம் மறுத்தற்கு என்றும் ஆயத் தமாயிருத்தலாம். வெளிப்படையான விஷயங்களில் மட்டும் அல்ல, இதுவரை தமதுடைமையாக்கிக் கொண்டு தாம் போற்றி வந்த குறிக்கோள்களும், தம் உள்ளத்தில் வேரூன்றிக்கிடக்கும் நம்பிக்கை போன்ற தெய்விக விஷயங்களிலும் அவர்கள் தன்னலம் பாராட்டுவதில்லை. ஓர் உண்மையை நேராக ஆயும்பொழுது ஒரு

விஞ்ஞானிக்கு முன்கூட்டியே தீர்மானங்கள் ஏதும் இல்லை. அவர் இதுவரை தாமாகப் போற்றி வந்த கருத்துகளின் அடியாகத் தோன்றக்கூடியவைகளையும் விட்டுக்கொடுக்கப் பின் வாங்க மாட்டார். இவ்வாறு அவர் படிப்படியாகப் பிழைகளிலிருந்து தம்மைப் புனிதமாக்கிக் கொண்டு தம்முடைய மனத்தை எப்பொழுதும் புதுமையாகவும், தெளிவாகவும், அப்பழுக்கில்லாத உண்மையுடன் இரண்டறக் கலக்கும் மனப்பான்மையுடன் விளங்குகிறார்.

பள்ளிக்கூட ஆசிரியரை விடக் குழந்தை நோய் மருத்துவருக்குச் சமுதாயத்தில் ஒரு பெருமையும் அதிகாரமும் இருப்பதற்கு இதுதான் ஒருவேளை காரணமாய் இருக்கலாம் அல்லவா? எனினும் அந்தக் குழந்தை மருத்துவர் நோய்வாய்ப்பட்ட குழந்தையின் மல சலத்தில் உண்மை காண்கிறார். ஆனால் ஆசிரியர் குழந்தையின் ஆன்மாவைப் பிழைகளென்னும் திரைகளால் மூடுகிறார்.

ஆனால் ஆசிரியர் குழந்தையின் ஆன்மாவிலேயே உண்மையைத் தேடினால் எப்படி இருக்கும்? இம் முயற்சியின் மதிப்பை வேறெதனுடன் ஒப்பிட முடியும்? இந்த உயர்வு நோக்கத்தை அடைய வேண்டுமானால் அவர் பணிவுப் பண்பின் முறையில் தீட்சை பெற வேண்டும். தன்னலம் மறத்தல் வேண்டும்; பொறுமை மயமாக வேண்டும்; வெறும் பகட்டினடியாகப் பிறக்கும் இறுமாப்பு நீங்க வேண்டும். இவ்வாறு ஆன பிறகு விஞ்ஞானியைப்போல் இவ்வாசிரியரும் தெய்விக உடுப்பை அணிந்துகொண்டு பொது மக்களைப் பார்த்து, 'மற்ற அறிவு நூல்களில் (Science) என்ன கண்டீர்கள்? காற்றுக்கு அசையும் நாணல்களைக் கண்டீர்கள். மெல்லிய ஆடை புனைந்த மக்களைக் கண்டீர்கள். இல்லை, நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கண்டீர்கள். ஆனால் நான் தீர்க்கதரிசிகளைவிட மேலானவன். 'ஆண்டவன் வருகைக்கு ஆயத்தமாக்கிக் கொள்ளுங்கள், அவன் வழியை நேர்படுத்துங்கள்' என்று தன்னந்தனியாக அலறிக் கூக்குரலிடுகின்றவன் நானே.

* * *

பொதுவாக விஞ்ஞானிகள் தாம் ஆயும் பொருள்களுடன் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளாமல் சற்று விலகியிருக்கிறார்கள். மின் சக்தி, இரசாயன சக்தி, நுண்கிருமிகளின் வாழ்க்கை, நட்சத்திரங்கள் போன்றவை அனைத்தும் வெவ்வேறானவை; விஞ்ஞானிக்கு அப்பாற்பட்டவை. ஆசிரியரோ என்றால் இவர்களை விட மிகையானவர். ஆசிரியரின் நோக்கம் மனிதனைப் பற்றியதே. குழந்தைகளின் உளஇயல் வெளிப்பாடுகள் வெறும் நிகழ்ச்சியின் மேல் காட்டும் அக்கறையைவிட இன்னும் அதிகமாக அவ்வாசிரியர் உள்ளத்தில் தூண்டி விடுகின்றன. அவைகளிலிருந்து தம்முடைய வெளிப்பாட்டையே பெறுகிறார். தம்மை ஒத்த ஆத்மாக்களுடன்

தொடர்புகொள்ளும் பொழுது அவருடைய மன எழுச்சிகள் சார்ந்தசைகின்றன. வாழ்க்கை முழுமையும் தம்முடைய பகுதியாய் இருக்கலாம். வாழ்க்கையின் பகுதியல்ல. விஞ்ஞானி தம்முடைய வெளிப்படை நோக்கத்துக்குள்ளாகப் பணிவும், பொறுமையும் தாமே ஊற்றெடுக்க விட்டிருப்பதுபோல், ஆசிரியரும் அக் குணங்கள் தம்முடைய முழு ஆத்மாவையும் போர்த்திக் கொள்ள விடலாம். அந்த நிலையில் அது விஞ்ஞானியின் பொறுமையோ, பணிவோ ஆகாது. ஆனுல் அவை பண்பெல்லாம் நிறைந்த ஒருவரின் நற்குணங்கள் ஆகும்.

ஒரு தொலைநோக்கியின் குழல்களுக்குள் வெளியே உள்ள பரந்த ஒளிக்கற்றைகள் எல்லாம் நெருங்கிக் குவிகின்றன. அதேபோல் ஒரு விஞ்ஞானியின் தெய்விக விரிவும் இங்கு ஓரளவுக்குத் தொடுவானத்தில் சூரியனின் கண்கூசும் பேரொளிபோல் பரவிக் கிடக்கலாம். நற்குணங்கள் என்று கூறப்படுபவை இன்றியமையாத கருவிகளாகும். உண்மையைப் பெறுவதற்கு உதவி புரியும் வழிகளாகும். இந்த உண்மையானது ஒரு 'ப்ரோடோஜோவா' (protozoan) மூல உயிர்வகை—அல்லது மனிதனுடைய ஆன்மாவைப் பற்றியோ பருப்பொருள் சக்தியால் பிணைக்கப்படுவதற்குத் தகுந்த அளவில் விஞ்ஞானியின் அகமகிழ்வு மாறுபட்டுத் தீரும். இவ்விரு உருவங்களுக்கும் ஒரே பெயர் பொருந்தாதது போல் காண்கிறது. பள்ளிக்கூட ஆசிரியருடன் விஞ்ஞானியை ஒப்பிட்டால் விஞ்ஞானி ஓரளவுக்குக் கட்டுக்குள் அடங்கிய வறண்ட மனிதன் என்பதை நாம் உடனே புரிந்து கொள்கிறோம். மனிதன் என்ற அளவுக்கு விஞ்ஞானியின் பெருந்தன்மை மிகவும் உயர்ந்ததுதான். ஆனுல் அதனுடைய அளவு ஒரு விலங்கின் பலத்தையோ அல்லது தாழ்வான வாழ்க்கைச் சக்தியையோ கொண்டதாக இருக்கிறது.

மாணவரும் அவர் ஆராயும் பொருளும் ஒன்ருக இணங்கும் பொழுதுதான் அவ் விஞ்ஞானியினுடைய நற்குணங்கள் மனிதனுடைய தெய்விக வாழ்வுடன் ஒன்றுசேர முடியும். அப்பொழுது அறிவூற்றுக் கேணியாகலாம். அந்த நிலையில் உண்மையான அறிவு இயல் (விஞ்ஞானம்) துறவிகளின் மெய்யறிவுடன் ஒன்ருகலாம். துறவிகளின் நற்பண்புகளுக்கும், விஞ்ஞானியின் நற்பண்புகளுக்கும் இடையே உண்மையான பொருத்த இயக்கம் இருக்கிறது. விஞ்ஞானி தம்முடைய பணிவுத்தன்மையால் பருப்பொருள் இயற்கையுடன் (material nature) தம்மைத் தொடர்பு படுத்திக் கொள்கிருர். ஒரு துறவியும் தம்முடைய பணிவுத் தன்மையாலும், பொறுமையாலும் பொருள்களின் தெய்விகத் தன்மையுடன் தம்மைத் தொடர்புபடுத்திக் கொண்டு, அதன்

காரணமாக முக்கியமாக மனிதனிடம் தொடர்புகொள்கிறார். விஞ்ஞானி தம்முடைய பருப்பொருள் சம்பந்தப்பட்ட தொடர்பு அளவுக்கு நற்பண்பு படைத்தவராக இருக்கிறார். துறவியின் தியாகமும், அவருடைய நுகர்ந்து மகிழ்வதும், இரண்டுக்கும் அளவே கிடையாது. விஞ்ஞானி தாம் ஆராயும் எல்லை வரம்புக்குள் இருப்பதைக் காணவல்லவர்தாம். துறவியோ எனில் தெய்விகத்தைக் காண்பவர் ஆவார். ஆனால் அவர் பருப்பொருள்களையும் அவைகள் இயங்கும் விதிகளையும், மற்றவர்களை விட இன்னும் தெளிவாகக் கண்டு அவைகளுக்கு ஒரு சக்தியை ஊட்டுகிறார்.

உயிர் படைத்த ஒவ்வொன்றும், வியக்கத் தகுந்தது என்று தற்கால விஞ்ஞானிக்குத் தெரியும். மிகவும் பழங்கால உயிரினமும், உருவத்தில் மிகவும் எளிமையாய் உள்ள உயிரினமும் இயற்கையான விதிகளின் போக்கை மிகவும் சுலபமாக நமக்கு விளக்கிக் காட்டுகின்றன. இவ் விளக்கம் மிகவும் சிக்கல் நிறைந்த உயிரினங்களின் போக்கை விளக்குவதற்கு நமக்கு உதவி புரிகின்றன. செயின்ட்ஃபிரான்சிஸ் (St. Francis) என்பவருக்கு இது தெரிந்திருந்தது. 'இன்னும் நெருங்கி வா, என் சோதரியே' என்று தம்முடைய அறைச் சாளரத்தின் கீழ் அருகில் இருந்த அத்தி மரத்தில் 'சிரிப் சிரிப்' என்று ஒலித்துக்கொண்டிருந்த வெட்டுக் கிளியைப் பார்த்துக் கூறினார். எவ்வளவுக் கெவ்வளவு ஓர் உயிரினம் சிறியதாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு ஆக்கும் இறைவனுடைய சக்தியையும், நற்குணத்தையும் முழுமையும் அது மிகத் தெளிவாக்குகிறது.

ஒவ்வொரு நுண்ணிய பொருளும் விஞ்ஞானியின் துல்லியமான கவனத்துக் குரியதாகிறது. ஒரு பூச்சியின் பாதத்தில் உள்ள பகுதிகளின் இணைப்புகளை எண்ணிப் பார்க்கிறார். அப் பூச்சியின் மிகவும் மென்மையான சிறகில் காணப்படும் நரம்பமைப்பைத் தெரிந்திருக்கிறார். சாதாரணக் கண்கள் ஒரு விநாடியும் நின்று கவனிக்காத இடத்தில் இவர் தமக்கு அக்கறையூட்டும் பல பகுதிகளைக் காண்கிறார். செயின்ட் ஃபிரான்ஸிஸும் இவைகளைக் கவனித்தார். ஆனால் அவை அவருள்ளே ஒரு தெய்விகக் களிப்பை எழுப்பி ஒரு வாழ்த்துப் பாடலையும் தோன்றச்செய்தன. 'இந்த நுண்ணிய தெய்விகப் பாதங்களை எனக்களித்தது யார்? ஆரோக்கியமும் எளிதில் இயங்கக் கூடியதுமான எலும்புகளைப் படைத்து, கிளைகிளையாகவும், கப்புக்கப்பாகவும் தாண்டக் கூடிய பாதங்களை யார் கொடுத்தார்கள்? மேலும், எனக்கு இந்தப் படிக் கோளங்கள் போன்ற கண்களை எவர் கொடுத்தது? இக் கண்கள் சுழன்று சுழன்று முன்னும் பின்னும் பார்த்து என்னுடைய எல்லா எதிரிகளையும், கொள்ளைக்காரக் கழுகு, கருங்காக்கை, பேராசை

வாத்து ஆகிய அனைவரையும் கண்டுபிடித்து விடுகின்றன. அவன் எனக்குச் சிறகுகளையும் கொடுத்திருக்கிறான். எத்தகையவை ?, தங்க நிறமும், பச்சையும், நீலமும் (பொன்னும், மரகதமும், நீலமும்) கலந்த மிகமிக மென்மையான திசுக்களால் (tissues) அமைந்தவை இச் சிறகுகள். இவை வானத்தின் நிறத்தையும், என் மரங்களின் வண்ணத்தையும் பிரதிபிம்பிக்கின்றன.

ஆசிரியருடைய பார்வையும், விஞ்ஞானியைப்போல் சரி நுட்பமானதாக இருக்க வேண்டும். அத்துடன் துறவியின் பார்வையைப்போல் தெய்விகத் தன்மை பெற்றதாகவும் இருத்தல் வேண்டும். விஞ்ஞான ஆயத்தமும் தெய்விகத்தன்மை ஆயத்தமும் ஒரு புது ஆன்மாவை உருவாக்க வேண்டும். ஏனென்றால் ஆசிரியருடைய நோக்கும் உடனே உறுதியுள்ளதாகவும் (positive) விஞ்ஞான முறையானதாகவும், தெய்விகத்தன்மை பெற்றதாகவும் இருக்கவேண்டும்.

ஏன் உறுதியும் தெய்விகத் தன்மையும் வேண்டும் என்றால், ஆசிரியை ஆற்றவேண்டிய துல்லியமான பணி ஒன்றிருக்கிறது. உண்மையுடன் உடனடியாக அவர் தம்மை உடன்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்காகத் தயை தாட்சணியமில்லாது கவனிக்க வேண்டி வரும் தன்னிடமுள்ள எல்லா மாயங்களையும் களைய வேண்டும். இந்த மாயைகளெல்லாம் சோம்பிக் கிடந்த மனக்கற்பனைகளால் ஆக்கப்பட்டவையே. அவர் தவறாமல் பொய்யிலிருந்து மெய்யைத் தேர்ந்தெடுக்கும் திறமைபெற வேண்டும். இவர் விஞ்ஞானியைப்போல் நடந்துகொள்ள வேண்டும். விஞ்ஞானி என்ன செய்கிறார் ? அவருடைய ஆராய்ச்சிக்குரிய ஒவ்வொரு பொருளையும் சிறுதுளியும் விடாமல் கவனித்து வருகிறார். ஒவ்வொரு சாதாரணக் கருவாழ்வையும் கவனித்து வருகிறார். ஆனால், கண்ணால் ஏமாற்றப்படும் பொருள்களை நீக்கி விடுகிறார். உண்மையைத் தேடுவதில் மாசுகளும், வெளிப் பொருள்களும் புகுந்து ஏற்படுத்தும் குழப்பங்கள் தோன்றாமல் காத்துக்கொள்கிறார். இத்தகைய மனப் போக்கைப் பெறுவதற்கு நீண்டநாள் பயிற்சி வேண்டும். உயிர் நூல் விஞ்ஞானத்தின் வழியாக உயிர்வாழ்வனவற்றைப் பற்றிப் பரந்த கவனிப்பும் தேவைப்படுகிறது.

ஏன் தெய்விகத் தன்மை நிறைந்தவராக இருக்க வேண்டுமென்றால், அவருடைய கவனிப்பு சக்தியெல்லாம் மனிதனைப் பற்றி ஆராய்வதிலே திருப்பப்படுவதால் ஆகும். இனிமேல் இவர் கவனத்துக்குள் வரப்போகும் மனிதனின் சிறப்பியல்புகளெல்லாம் தெய்விகத் தன்மை நிறைந்ததாகும்.

ஆதலால், விஞ்ஞானம் அளிக்கின்ற பற்பல துணைக் கருவி களைக்கொண்டு உயிரினங்களின் மிக எளிமையானவற்றை முதலில் கவனிக்குமாறு ஆசிரியர்களை 'நான் துவக்கிவைப்பேன். நுண் ணோக்கியாளர்களாக்குவேன் (microscopists). செடிகள் வளர்வது எப்படி என்று அறிவூட்டுவேன். செடிகளின் உடற்கூற்றியலைக் கவனிக்கப் பழக்குவேன். பூச்சிகளைக் கவனிக்கும்படி செய்வேன். உயிர் நூலின் பொதுவிதிகளைக் கற்கவைப்பேன். வெறும் கொள்கை நிலை ஆராய்ச்சியோடு நிற்கவிடாமல் தனித்தனியாகச் சுதந்திரத் துடன் ஆய்வுசாலைகளிலும், இயற்கையின் வெட்டவெளியிலும் ஆராய்ச்சி நடத்துமாறு ஆசிரியர்களுக்கு ஊக்கமூட்டுவேன்.

இவ்வாறு பல வழிகளில் கவனம் செலுத்தும் திட்டத் தொகுதி யில் குழந்தையின் உடலைப்பற்றிய கவனிப்புகள் விட்டுப் போகா மல் இருக்க வேண்டும். எனவே, உயர்ந்த ஒரு பணிக்கு நேர் முகமாகவும் உடனடியாகவும் தேவைப்படுவது என்னவென்றால், குழந்தை உடலுக்குத் தேவைப்படுவன எவை என்பதாகும். அந்த அறிவு குழந்தையின் பிறப்பிலிருந்து அவனுடைய உள வாழ்வு தன்னுடைய உறுப்புகளில் வளர்ந்து நம் செயலாற்றல் களுக்கு இயங்கும் சக்தி பெறும் வயது வரையாகும். ஏதோ உடற்கூறு இயல், உடல் இயல், உடல்நலம் ஆகியவைகளைப் பற்றிக் கருத்தளவில் ஏதோ கற்றுக்கொள்வது என்பதை நான் குறிப்பிடவில்லை. நான் குறிப்பிடுவது குழந்தைகளிடம் இவை களைச் செயல் முறையில் அனுசரித்து, அவர்களின் வளர்ச்சியை நெருங்கிக் கவனித்து, அவர்களுக்கு இனிமேல் இன்னின்ன தேவைப் படும் என்பனவற்றை முன்கூட்டியே காணும் திறமையை ஆசிரியர் பெற வேண்டுமென்று நான் கருதுகிறேன். வேறு வகையில் ஆசிரியர் உயிர்நூல் இயலின் முறைகளைப் பின்பற்றித் தம்மை ஆயத்தமாக்கிக் கொள்ளவேண்டும். இயற்கை நூலையும் மருத் துவ நூலையும் கற்றுக்கொள்கின்ற மாணவர்கள் வாழ்க்கை சம்பந்தப்பட்ட தனிப்படிப்பைத் தொடங்குவதற்கு முன்பு ஆய்வுச் சாலைகளில் அவர்களுடைய முதல் பரிசோதனைகளைச் செய்கிறார்கள். அவர்கள் இறங்கும் துறைகளில் ஆசிரியர்களும் எளிய வகையிலும் (simplicity) புறப்பொருள் தன்மையுடனும் (objectivity) தங்களை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். அதே போல் நமது பல்கலைக் கழகங்களில் விரிந்ததும் மிகச்சிக்கலானது மான அறிவியல்களைக் கற்க வேண்டியவர்கள் தொடக்கத்தில் ஒரு கலப்பை (infusion) ஆயத்தமாக்குவதிலோ அல்லது ஒரு ரோசாத் தண்டின் குறுக்கு வெட்டு முகத்தைத் தயாராக்குவதிலோ, காலம் செலவழித்து நுண்ணோக்காடியில் அவர்கள் உற்றுநோக்கும் பொழுது, ஓர் அற்புதத்தைக் காணும்போது உண்டாகும் மன எழுச்

சியை அவர்கள் அனுபவிக்க வேண்டும். இந்த அதிசயம் தூங்கிக் கொண்டிருக்கும் உணர்ச்சி விழிப்பு நிலையை எழுப்பி, வாழ்க்கையின் புரியாத புதிர்களைப் புரிந்துகொள்ளும் வகையில் கட்டுக்கு மீறின ஊக்கத்துடன் ஈர்க்கிறது. இதுவரை பள்ளிக்கூடங்களில் பளுவான வறண்ட அச்சுப்புத்தகங்களையே நாம் படித்துப் பழகியிருக்கிறோம். இப்பொழுது இயற்கை அன்னையின் புத்தகமே நமது உள்ளத்தின் முன் திறந்து காட்டுவது போல் உணர்ந்தோம். அதனுடைய அற்புதங்களும், நிகழக்கூடிய ஆக்கங்களும், அளவு கடந்தவை. நமக்குள் மறைந்து கிடக்கின்றதும் புரிந்து கொள்ள முடியாததுமான உயர்ந்த விருப்பங்களுக்கு இணக்கம் காட்டுகிறது (respond).

புதுமை ஆசிரியரின் புத்தகமும், இதுவாகத்தான் இருக்க வேண்டும். பச்சைக் குழந்தையின் வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்ற ஆசிரியைக்கு இதுதான் பாலபாடமாக இருக்க வேண்டும். அத்தகைய தயாரிப்பு அவளுடைய ஆழ்ந்த மனத்தில் வாழ்க்கை இலட்சியம் இதுவென்று உருவாக்கி விடவேண்டும். இத்தூண்டுதல் அவளை அடியோடு மாற்றியமைக்க வேண்டும். அவளிடத்தில் தனி இயக்கத்தையும் (activity) உளச்சார்பையும் (aptitude) தோற்றுவித்து அவளுடைய பணிக்குத் திறமை பெற்றவளாக மாற்றிவிடும். அவள் ஒரு தெய்விக சக்தியாகவும் தாய்ச்சக்தியாகவும் மாற வேண்டும்.

ஆனால், இவைகளெல்லாம் ஆயத்தத்தின் ஒரு பகுதியே ஆகும். செடி கொடிகளையும், விலங்குகளையும் உற்று நோக்குகின்ற விஞ்ஞானிகள் அவைகளின் இயற்கை உருவையும் (morphology) இயற்கையான உடலியக்கத்தையும் (physiology) கண்டு மனநிறைவு அடைகின்றனர். அந்த விஞ்ஞானிகளைப்போல் ஆசிரியர் வாயிற்படியிலேயே நின்று விடலாகாது. குழந்தை நோயை ஆராய்கின்ற மருத்துவ நிபுணர் நோய்க்குறி நூலை ஆராய்வதில் முக்கிய நோக்கம் கொண்டவராகவும் இருத்தலாகாது. அந்த விஞ்ஞானத் துறைகளின் முறைகளெல்லாம் ஓரளவுக்கு உட்பட்டவை என்று ஆசிரியர் உணரவேண்டும் (ரோமன் கதோலிக்க மாதா கோவிலில் பூசாரி சன்னிதிக்கு வரும்போது ஒரு வேதமந்திரம் பாடப்படும்.) அதுபோல் ஆசிரியரும் முதல் மந்திரத்தைப் பாடிக்கொண்டு வாழ்க்கை ஆலயத்தில் காலடி எடுத்து வைக்கிறார். அந்தப் படிக்கட்டுகளும், தெய்விகக் கோபுரத்தை அடைகிறது. ஆசிரியை அந்த நிலை மேலே ஏறிட்டுப் பார்த்து இந்தப் பல விஞ்ஞானங்களால் அலங்கரிக்கப்பட்ட கோவிலில் தான் ஒரு பூசாரி என்று உணர வேண்டும்.

ஆசிரியையுடைய எல்லையானது இன்னும் பரந்தது; மிகவும் அற்புதமானது. அவர் 'மனிதனின் அந்தரங்க வாழ்க்கையை'

உற்றுநோக்கும் தருவாயில் இருக்கிறார். வறண்ட நிலங்களில் உயிர்ப்பொருளின் (organic matter) அற்புதங்கள் நிறைந்திருக்கின்றன. இந்த நிறைவைப் பற்றித் தெரிந்தால் மட்டும் ஆசிரியருக்குப் போதாது. சமுதாயத்தின் சரித்திரமும், மதங்களின் சரித்திரமும், இவைகளின் தெய்விகப் பழக்கங்களெல்லாம் ஆசிரியன் உட்கொண்டு தன்மயமாக்கிக்கொள்ளத் தேவைப்படுகின்றன. கலை, அன்பு, தெய்விகத் தன்மை ஆகியவற்றின் உன்னதத் தோற்றங்களே அவர் இனி உற்று நோக்கப் போகும் வாழ்க்கையின் சிறப்பியல் தோற்றங்களாகும். அவர் உற்றுநோக்கப் போவது மட்டும் அன்று, அந்த வாழ்க்கைக்குத் தொண்டு புரியவும் போகிறார். தனக்கு இது ஒன்றும் புதிதல்ல. ஆதலால் கவர்ச்சியற்றதும், வறட்சியானதுமன்று. எல்லா மக்களிடமும் காணப்படும் நெருங்கிய தொடர்புடைய வாழ்க்கை ஆகும் அது. மனிதனுடைய மெய்யான வாழ்க்கை அதுவே யாகும்.

வெட்ட வெளியில் இயற்கையை உற்று நோக்குகிறான் விஞ்ஞானி. அதுவே அவனுடைய ஆய்வுச்சாலை ஆகிறது. ஆசிரியருடைய இயற்கைக் காட்சி ஆய்வுச் சாலையில் மனித வாழ்க்கையின் அந்தரங்கத்தை ஆராயப் போகிறார். குழந்தைகளின் வளர்ச்சி பெருக உதவி புரியும் துணைக்கருவிகளை உபயோகித்துச் சுதந்தரத்துடன் குழந்தைகள் வாழக்கூடிய பள்ளிக்கூடங்களே அவ்வாசிரியருடைய ஆய்வுச்சாலையாகும். ஆசிரியரிடம் அக்கறை என்பது தூண்டடப்பட்டு குழந்தையின் தெய்விகத் தோற்றப்பாடுகளைக் காணும் பொழுது அமைதியான மனமகிழ்ச்சியைப் பெற்று, குழந்தைகளின் நடத்தையை மேலும் மேலும் கவனிக்க வேண்டுமென்ற மனநிறைவு எளிதில் பெறாத ஊக்கமும் பெறும்பொழுது, தாமும் சமயத்துறையில் முதல்முதலாகச் சேர்த்துக் கொள்ளப்படும் பக்தனைப்போல் முதல் படியில் நுழைவு பெற்றிருக்கிறார் என்பதை உணர்வார்.

அப்பொழுது அவர் ஓர் 'ஆசிரியராகத்' தொடங்குவார்.

# 5. சூழ்நிலை

ஆசிரியர் மாறுபடுவதுடன் பள்ளிக்கூடத்தின் சூழ்நிலையும் மாற்றப்பட வேண்டும். வளர்ச்சிக்குரிய புறப் பொருள்களைச் சாதாரணப் பள்ளிக்கூடங்களில் வாங்கி அறிமுகப்படுத்தினால் மட்டும் அது புதுப்பித்தலின் முழுமையும் ஆகிவிடாது. பள்ளிக் கூடம் குழந்தைகள் தன்னுரிமையுடன் வாழும் இடமாக மாற வேண்டும். அந்தரங்க வளர்ச்சியின் நெருங்கிய தெய்விக விடுதலை யாக மட்டும், இந்தச் சுய உரிமையோடு மட்டும் நின்றுவிடக் கூடாது. மிகவும் சிறந்த வாய்ப்புகள், அவனுடைய இயங்கா உறுப்புகளுக்கும் இயங்கும் வினையாற்றல்களுக்கும் குழந்தையின் முழுமையும் வளர்வதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் மாற்றப்பட வேண்டும். குழந்தையின் வாழ்வுக்கு நல்லதென்று உடல் நூல் இதுவரை கண்டுபிடித்ததெல்லாம் அதில் காணப்பட வேண்டும். குழந்தைகள் அணியும் ஆடைகள் துப்புரவாகவும், அவர்கள் எளிதில் ..இயங்குமாறு இடந்தருவதோடு தாங்களே அணிந்து கொள்ளும் வகையில் அவை அமைந்திருக்க வேண்டும். குழந்தை களின் ஆடையில் புதுச் சீர்திருத்தம் ஆக்குவதற்குக் குழந்தை இல் லத்தைப் போல் பொதுவான இடம் வேறெதுவும் சிறந்ததாக இருக்க முடியாது.குழந்தையின் உடல்நலமும் உண்ணும் உணவைப் பொறுத்திருக்கிற தென்பதைப் பலர் அறியச் செய்வதற்கும் குழந்தை இல்லத்தைப்போல் வேறெதுவும் இருக்க முடியாது. அழகும் தகுதியும் வாய்ந்தவை அவ்வளவு விலை உயர்ந்தவையல்ல. உண்மையாகத் தேவைப்படுவது எளிமையும் நவநாகரிகமும். ஆதலால் மேலீடான தன்மைகளே விலை மதிப்பை அதிகமாக்கி விடுகிறது. இவை தவிர்க்கப்பட வேண்டியவையே. இத்தகைய பயிற்சிகளை அனுசரித்தால் எவ்வளவோ சிக்கனமாக வாழலாம் என்பதை மக்களைக்கொண்டு உணரவைத்தோமானால் அது ஒரு பெரிய சமுதாயச் சீர்திருத்தமாகும்.

மேலே குறிப்பிட்டவை தொடக்கத்தில் தோன்றிய குழந்தை இல்லத்தைப்போல் குழந்தைகளின் பெற்றோர் வாழ்கின்ற கட்டங்களிலேயே நிறுவப்பட்ட இல்லங்களுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும்.

சுதந்திரம் நிறைந்த பள்ளியில் சில குறிப்பிட்ட தேவைகள் வேண்டுமென்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். இதற்குமுன் உடல்நிலை நல்வாழ்வு எவ்வாறு குழந்தைக்குப் பயன் அளித்து வந்ததோ அதேபோல் உளநிலை நல்வாழ்வும் தன் பணியைச் செய்து வர வேண்டும். தற்காலப் பள்ளிக்கூடங்களின் அறைகளின் அளவு உடல்நலத் தேவையை ஒட்டி விரிவாக்கப்பட்டது. அதில் கூடி இருக்கும் குழந்தைகள் அனைவர்க்கும் நல்ல மூச்சு விடுவதற்கு ஏற்பக் கிடைக்கும் அளவைக் கன அளவில் நிர்ணயித்தனர். அதேபோல் மலங்கழியும் இடவசதி அதிகரிக்கப்பட்டது. குளிக்கும் அறைகள் கட்டப்பட்டன. மேலும் உடல்நிலை நல்வாழ்வுக்குத் தரை காரை போட்டதாக இருக்க வேண்டும் என்றும், அடிச் சுவர்கள் கழுவக் கூடியதாக இருக்க வேண்டும் என்றும், மத்திய வெப்ப ஏற்பாடும், உணவு அளிப்பதும் முக்கியமெனவும் கருதப்பட்டது. தோட்டங்களும் பரந்த மொட்டை மாடிகளும் குழந்தையின் ஸ்தூல உடல் நல்வாழ்வுக்கு இன்றியமையாதவை என்று ஏற்கெனவே ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளன. அகலமான சாளரங்கள் வெளிச்சத்தைத் தாராளமாக உள்ளே நுழைய வைக்கின்றன. உடற்பயிற்சிக்கான பெரிய 'ஹால்களும்' அவைகளில் விலை உயர்ந்த பல சிக்கலான உடற்பயிற்சிக் கருவிகளும் அமைக்கப் பெற்றதாய் இருக்கின்றன. இறுதியாக மிகமிகச் சிக்கலான மேசை நாற்காலி அமைப்புகளும் தோன்றியிருக்கின்றன. இந்தக் கைமேசைகள் (desks) இரும்பும் மரமும் இணைந்த அசலான ஓர் இயந்திரமாகும். இந்த இயந்திரத்திற்குப் பாதம் தாங்கும் படியுண்டு. குழந்தை இயங்காமல் இருப்பதற்கும், அவ்வாறு இயங்காமல் இருப்பதால் ஏற்படக்கூடிய குறைபாடுகள் நேரிடாதபடி இருப்பதற்கும் இந்த இயந்திர 'டெஸ்க்குகள்' தாமே சுற்றிலும் திரும்பக் கூடிய அமைப்பைப் பெற்றிருக்கின்றன. பள்ளிக்கூடச் சுகாதாரம் என்ற போலிக் கொள்கையின் அடிப்படையில் பிறந்த ஒரு விபத்தான விளைவாகும் இது. தற்காலம் விஷ வித்துகளாகிய கிருமிகளை (microbes) அடியோடு ஒழித்துக்கட்டி மனித வாழ்க்கைக்கு வழி திறக்கும் திறவுகோலைக் காண முயற்சி செய்யும் யுகமாகும். இதன் வெற்றியைத் தற்காலப் பள்ளிக் கூடங்களில் காணப்படும் பொருள்கள் ஒரே வெண்மைநிறம் பெற்றிருத்தலும், எப்பொருளும் கழுவப்படக்கூடிய தன்மை பெற்றிருப்பதும் காட்டுகின்றன.

உள நல சுகாதாரம் இன்று பள்ளிக்கூட வாசலில் முன்வந்து நிற்கிறது. தன்னுடைய புதுமை நல்லொழுக்க போதனையுடன் நிற்கிறது. முதலில் வெற்றியுடன் புகுந்த உடல் நல சுகாதாரத்தை விட இது எந்த விதத்திலும் சிக்கனத்தில் மிக்க பளுவைத் தரக் கூடியதன்று.

எனவே, புதுத் தேவைக்காகப் பள்ளிக்கூட அறைகள் விரிவாக்கப்பட வேண்டியிருக்கிறது. சுவாசிப்பதற்காகவும், மத்திய வெப்ப ஏற்பாட்டிற்காகவும் (central heating) சாளரங்களைத் திறந்துவைக்க வேண்டியிருக்கிறது. இவைகளுக்காக அறைகளின் கன அளவு அதிகரிப்பு பார்க்கப்போனால் மிகவும் குறைந்த அளவே ஆகும். ஆனால், நாம் இங்குக் கூறி வந்த அறையின் விரிவு குழந்தை தானாகச் சுதந்திரத்துடன் நடமாடத்தக்க விரிந்த இடமாக இருத்தல் வேண்டும். குழந்தை எப்படியும் அறைக்குள் ஓடி ஆடப் போவதில்லை. என்றாலும், அவனுடைய சூழ்நிலையில் காணப்படும் தட்டுமுட்டுச் சாமான்களின் இடையே தங்குதடையின்றி நடமாடத் தகுந்த அளவு இடவசதி அமைந்திருக்க வேண்டும். சீர்மை நிறைந்த முழு நிறைவு ஏற்பட வேண்டுமானால் ஸ்தூல உடல் தேவைக்கான அறையைப் போல் இரண்டு மடங்கு உளத் தேவைக்கான அறை இருத்தல் வேண்டுமெனக் கருதலாம். சாதாரண அறையின் தரையில் பாதி அளவில் எப் பண்டமும் இல்லாமல் காலியாக இருந்தால் நமக்கு என்ன அமைதியான மன நிலை தருகிறது என்று நாம் எல்லோரும் உணர்வோம். இவ்வாறு அமைந்திருந்தால் நாம் அவ்வறையில் எதன்மேலும் மோதிக் கொள்ளாமல் தாராளமாக நடமாட முடியும் என்பதையும் உணர்வோம். நடுத்தரமான அறையில் பல தட்டுமுட்டுச் சாமான்களுக்கிடையே இருந்து மூச்சு விடக் கிடைக்கும் வாய்ப்பைக் காட்டிலும் இத்தகைய அறையில் நல்லுணர்வுணர்ச்சி பெறுவது இன்னும் அதிகமான அளவில் இவ்வறையின் விரிவுக்குப் பொருந்தி ஒட்டியதாக இருக்கிறது.

அதிகம் தட்டுமுட்டுச் சாமான்கள் இல்லாமல் இருப்பதே உடல்நல வாழ்வுக்கு ஒரு சக்தி வாய்ந்த துணையாகும். இந்த நிலையில் உடல்நிலை நலமும், உளநிலை நலமும் இரண்டும் ஒன்றியிருக்கின்றன. எங்களுடைய பள்ளிக்கூடங்களில் பளுவில்லாத தட்டு முட்டுச் சாமான்களை உபயோகிக்கச் சிபார்சு செய்கிறோம். இவை அதற்குத் தக்கவாறு எளிமையாகவும் பெரிய அளவில் சிக்கன முடையதாகவும் இருக்கின்றன. இவை தண்ணீரால் கழுவப்படக்கூடியவையாயிருந்தால் அதனினும் மேலானதாகும். ஏனென்றால் குழந்தைகள் இவைகளைக் கழுவக் கற்றுக் கொள்வார்கள். இவ்வாறு கழுவும் வேலை குழந்தைகளுக்கு மிகவும் விருப்ப

மானது. நல்ல அறிவூட்டும் பயிற்சியும் ஆகும். ஆனால், இவை கள் எல்லாவற்றிலும் முக்கியமானதென்னவென்றால் அவை சித்திரப்பாடான அழகு பெற்றதாய் இருத்தல் வேண்டும் (artistically beautiful). இந்த ஏற்பாட்டில் மேலோடியான வெளி மாற்றத்திலோ ஆடம்பரத்திலோ அழகு தோன்றிவிடாது. ஆனால், தட்டுமுட்டுச் சாமானின் பளுக் குறைவினால் ஏற்படக் கூடிய எளிமையுடன் வண்ணமும் கோடும் நயமும் இசைவும் பெறும்போது உண்மையான அழகு பிறக்கிறது. தற்காலத்தில் குழந்தைகளுக்கு அணிவிக்கப்படும் ஆடைகள் முற்காலத்தவைகளை விட எவ்வளவோ காண இனியதாக இருக்கின்றன. அதே சமயத் தில் மிகமிக எளிதாகவும் இருக்கின்றன. சிக்கனமும்கூட. அதே போல்தான் தட்டுமுட்டுச் சாமான்களும்.

பாலிடானோ (Palidano) என்னும் இடத்தில் 'மார்ச்சீஸ் கார்லோ குரேய்ரி கொன்ஜாகா' (Marchese Carlo Guerrier) Gonzag) என்றதனைக் கொண்டாடுவதற்கு அங்கு ஒரு குழந்தை இல் லம் நிறுவப்பட்டது. அங்குக் கலைச்சுவை பொருந்திய தட்டுமுட்டுச் சாமான்களை ஆராய ஒரு குழுவினைத் தொடங்கி வைத்தோம். இத்தாலி தேசத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்கிலும் அவ்வூரின் கலைப் பொருள் நிறைந்த பண்டகசாலையாகக் காட்சி தரும் என்பது எல்லோர்க்கும் வெளிப்படை. செயல் முறை உணர்ச்சியும் கலை உள்ளுணர்வும் இணைந்து அழகு வாய்ந்த சௌகரியமான பண்டங் களை ஒவ்வொரு இத்தாலியப் பண்டை மாகாணமும் உற்பத்தி செய்தே வந்திருக்கிறது. அநேகமாக இந்த அருமையான திரவி யங்கள் அனைத்தும் சிதறப்பட்டுக் கிடக்கின்றன. இவைகளின் நினைவும் தற்கால நாகரிகத்தில் எல்லாம் ஒரே மாதிரி இருக்க வேண்டும் என்ற மூடக் கொள்கையான உடல் நலப் பாணியின் பேரில் அடியோடு மறைந்து வருகிறது. ஆதலால் 'மரியா மாரைனி (Maria Maraini) என்ற அம்மையார் ஏற்றுக் கொண்டது ஓர் இன்பம் ஊட்டும் பணியாகும். பழங்காலத்தில் தோன்றி வளர்ந்த கலைகளைப் பற்றிக் கூர்ந்து ஆராய்ந்து குழந்தை இல்லத்தின் தட்டுமுட்டுச் சாமான்களிலும் அக் கலைகளைப் புதுப் பிக்க முயன்றனர். நாற்காலி, மேசை, பக்கப் பலகைகள், (side-boards) மட்பாண்டங்கள் முதலியவைகளின் வடிவமும், வண்ண மும் நாட்டுப் புறங்களின் இல்லங்களில் காணப்பெற்ற நெசவுத் துணிகளில் கலைப்பண்புக் கூறுகளையும், எழில் வேலைப்பாடுகளையும் குழந்தையில்லத்தில் புதுப்பிக்க விரும்பினர். இவ்வாறு நாட்டுப் புறக் கலைகளைப் புதுப்பிக்க முயற்சி செய்யும் பொழுது நம்மிலும் ஏழைகளாகப் பண்டைக் காலத்தில் வாழ்ந்தவர்களின் கலைப் பொருள் மறுபடியும் புழக்கத்துக்கு வரும். ஒருவகையில் சிக்கன

வாழ்க்கைக்கும் இது கண் விழிப்பாகவும் இருக்கும். சாதாரணப் பள்ளிக்கூடப் பெஞ்சுகளைவிட இத்தகைய எளிய வனப்பு வாய்ந்த பண்டங்களை உண்டாக்கினுல் இந்தப் பள்ளிக்கூடத் தட்டுமுட்டுச் சாமான்களும் வேண்டாத வெளிப்படை ஜோடனைகளை நீக்கினுல் வனப்பில்லாததும் எழில் பெறும் என்ற உண்மையை வெளியாக்கும். ஏனென்ருல் எழில் என்பது பொருள் பற்றியதன்று. ஆனுல், உற்சாகத்தால் பிறப்பதாகும். ஆதலால் விலை உயர்ந்த சாமானைத் தேட வேண்டியதில்லை. ஆனுல், இந்த நடைமுறைச்சீர்திருத்தத்துக்கு உள்ளுணர்வு சக்திகளை இன்னும் நயமான பண்படையச் செய்ய வேண்டும்.

இத்தாலி நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் அதனதன் விசேடமான கலைப் பரம்பரை இருக்கிறது. இந்த நாட்டுப்புறக் கலைகளைப்பற்றி ஓர் ஆராய்ச்சி நடத்தினுல் புதுப்புது வகையான தட்டுமுட்டுச் சாமான்கள் தோன்றலாம். இவைகளே ஒருவனுடைய ரசிகத் தன்மையை உயர்த்தவும், பழக்க வழக்கங்களைப் பண்படுத்தவும் செய்துவிடலாம். அவை உலக மக்களுக்கு ஒரு வகைக் கல்வியின் மேன்மையை ஒளியூட்டும். ஏனென்ருல் தொன்றுதொட்டு வந்த மக்களின் கலை உணர்ச்சி பண்டை நாகரிகத்துடன் இணைந்துள்ளது. அத்தகைய தற்காலப் பரம்பரை மக்களிடத்தில் ஓர் புத்துயிரை ஊட்டுவிக்கும். தற்கால மக்கள் நோய்க்கு இடங்கொடாதிருக்கும் ஒரே நோக்கத்தில் சிக்குண்டு நம்பிக்கை இழந்த முயற்சியில் உழன்று ஊன்றிய வெறிக் கருத்துடன் தவித்துக் கொண்டிருக்கிருர்கள்.

சாவையே எண்ணிக் கொண்டிருப்பவர்களிடையே பொலிவின்மையும் இருளும் நிறைந்திருக்கின்றன. இவைகளின் நடுவிலிருந்து கலை உயர்ந்து மனிதப் பண்படைவதை நம் கண்ணுரக் காண முடியும். தற்காலத்தில் சுகாதார மனைகள் தோன்றியிருக்கின்றன. அவைகளின் சுவர்கள் வெண்மையாகவும் எளிதில் கழுவி விடத் தக்கதாகவும் இருக்கின்றன. சுவர்கள் வெறிச்சென்றிருக்கின்றன. தட்டுமுட்டுச் சாமான்களும் அலம்பக்கூடியதாகவும் வெண்ணிறமாகவும் இருக்கின்றன. பார்வைக்கு இவை ஒரு மருத்துவ மனையின் தோற்றமளிக்கின்றன. இவை இவ்வாறிருக்க, பள்ளிக்கூடங்களோ எனில், அவை அசல் கல்லறைகளாகக் காட்சி அளிக்கின்றன. அங்குள்ள 'டெஸ்குகள்', கைமேசைகள்— கறுப்புப் பாடைபோல் காண்கின்றன. ஏன் கறுப்பு நிறம் என்ருல், மையின் நிறத்தை ஒட்டி இருக்க வேண்டுமாம். ஏன்? மையின் கறை தெரியாதிருப்பதற்கு. இன்று உலகத்தில் சில பாபங்களும் குற்றங்களும் இன்றியமையாதவை என்று கருதப்படுவதுபோல் மைக்கறை 'டெஸ்கு'மேல் தோன்றுவதும் இன்றியமையாத

தென்று கருதப்படுகிறது. இவை தோன்றுதிருப்பதற்கு வேறு வழி தேடலாம் என்று எவருக்கும் தோன்றவில்லை. வகுப்பறைகள் கறுப்பு டெஸ்குகளையும் வெறும் சாம்பல் நிறச் சுவர்களையும் பெற்றிருக்கின்றன. பிண மனையையைவிட (mortuary chamber) எவ்விதத்திலும் வேலைப்பாட்டழகு பெறுது இருக்கின்றன. குழந்தையின் உள்ளம் வறண்டு சக்தியற்றுக் கிடக்க வைத்துச் சீரணமாக்க இயலாத நுண்ணறிவு உணவை ஆசிரியர் ஊட்டப் பார்க்கிருர். கவனத்தை வேறு வகையில் திருப்பக்கூடிய ஒவ்வொன்றையும் சூழ்நிலையிலிருந்து அறவே நீக்கிவிட வேண்டும். அப்பொழுது தான் ஆசிரியர் தம்முடைய நாவன்மையாலும் சூழலுக்கு ஏற்ற பொருள்களாலும் கட்டுக்கு அடங்காத குழந்தையின் கவனத்தைத் தன்மேல் திருப்புவதில் வெற்றி பெறலாம். அதே சமயத்தில் தெய்விகப் பண்பு கொண்ட பள்ளிக்கூடம் ஓரளவுக்குச் சிக்கனத்தையும் கருத்தில் கொண்டு அதன் சூழ்நிலையில் தோற்றுவிக்கும் எழிலுக்கு எல்லையே கிடையாது. மெய்யாகத் தன் கருமத்திலே கண்ணுயின எக்குழந்தையின் கவனத்தில் எந்த எழில் ஜோடனையும் திசை திருப்ப முடியாது. அதற்குப் பதிலாக எழில் குழந்தையின் கவனத்தை இன்னும் நன்ருக ஒரு முனைப்படுத்துவதுடன் தளர்ந்த உளச்சக்தியையும் மீண்டும் சக்தி பெறச் செய்கிறது. மாதா கோவில்கள் தியானம் செய்வதற்கும், ஆன்மாவின் சாந்தி பெறுவதற்கும் மிகமிகச் சிறந்த இடமாகும். அக் கோவில்களின் எல்லைக்குள் பெரிய பெரிய மேதைகளின் உள்ளக் கிளர்ச்சிக்கு இடம் தந்து அதற்குள் எல்லா அழகையும் படைத்திருக்கின்றனர்.

இத்தகைய சொற்கள் மிகவும் அதிசயமாகத் தோன்றலாம். ஆனுல் விஞ்ஞானக் கொள்கைகளை அனுசரிக்க வேண்டுமானுல் மனித வாழ்க்கைக்குப் பொருத்தமான இடம் எது என்று பார்க்கப் போனுல் அது எழில் நிறைந்த கலைப்பண்பு படைத்த சூழ்நிலையே ஆகும். ஆதலால் மனித வாழ்க்கை கவனிக்க வேண்டிய இடமாகப் பள்ளிக்கூடம் அமைய வேண்டுமானுல், அதனுள் எழில் நிறைந்த பொருள்களைச் சேகரிக்க வேண்டும். பாக்டீரியாக்களை ஆயும் கூடத்தில் அடுப்புகளும் பாக்டீரியாக்களை வளர்க்கப் பல வகை மண்களும் தேவைப் படுவதற்கு மேலே குறிப்பிட்டது ஒக்கும்.

குழந்தைகளுக்கான மேசை நாற்காலி முதலிய தட்டுமுட்டுச் சாமான்கள் பளுக் குறைந்தவையாக இருத்தல் வேண்டும். அவைகள் குழந்தைகள் தாமே தூக்கி இங்கு மங்கும் செல்லக் கூடியவையாக இருப்பதுடன் அவைகளின் வலுவற்ற நிலை கல்வி சம்பந்தமான மதிப்பைப் பெற்றிருக்கிறது. இதே காரணத்தால் குழந்தைகள் கையில் பீங்கான் தட்டுகளும் கண்ணுடிக் குவளைகளும் கொடுக்

கப்படுகின்றன. அக் குழந்தைகள் ஒழுங்கற்று, கட்டுப்பாடற்று முரட்டுத்தனமாக நடந்து கொண்டால் அப் பண்டங்கள் அவர்களை அம்பலப்படுத்திவிடும். இந்த வகையால் குழந்தை தன்னையே கட்டுப்படுத்திக் கொள்ள பழகிக் கொள்கிருன். ஒன்றின்மேல் எதிர் முட்டு முட்டவோ அல்லது கவிழ்த்தவோ உடைக்கவோ செய்யாமல் காத்துக்கொள்கிருன். இவனுடைய இயக்கங்கள் வரவர மென்மை பெறுகின்றன. நாளடைவில் அவன் பரிபூரண சுதந்திரத்துடன் தானே தன்னை அவைகளின் இயக்குநராக நியமித்துக் கொள்கிருன். அதேபோல் தன்னுடைய சூழ்நிலையை உயிர்ப்பிக்கும் அழகு வாய்ந்த மகிழ்ச்சியூட்டும் பண்டங்களைத் தன்னுல் இயன்ற அளவு நாசமாக்காமல் பார்த்துக் கொள்ளப் பழகிக் கொள்வான். இவ்வாறு தன்னுடைய முழு நிறைவில் இன்னும் முன்னேற்றம் அடைகிருன். வேறு வகையாகச் சொல்லப் போனுல் தானே தன் விருப்பார்ந்த இயக்கங்களை முழு நிறைவுடன் ஒன்றுபடுத்திக் கொள்வதைச் சாதித்துக் கொள்கிருன். இசையையும் மௌனத்தையும் இன்புற்ற குழந்தை இசைப் பொருத்தமில்லாத ஒலிகளைத் தன்னுல் இயன்றளவு தடுக்க முயல்வான். ஏனென்றுல் பண்பட்ட தன்னுடைய செவிகளுக்கு அவ்வோசைகள் செவிக் குத்தல்களாகின்றன.

இதற்கு மாருக ஒரு பலசாலியான பணியாளாலும் தனியாக அசைக்க முடியாத இரும்பால் அமைந்த டெஸ்கின்மேல் நூறு முறை மோதிக் கொண்டாலும் அந்தக் கறுப்பு டெஸ்கின்மேல் ஆயிரம் ஆயிரம் மைக் குறிகளைப் படியவிட்டபோதும் ஓர் உலோகத் தட்டை நூறுமுறை விழச் செய்தும் அது உடையாதிருக்கும் போதும் இத்தனை குறைபாடுகள் அடங்கிய கடலில் மூழ்கி அவைகளை உணரச் சக்தி இழந்தவனுகக் கிடக்கிருன். இந்த நிலையில் இவன் உணர முடியாத வகையில் இவனுடைய சூழ்நிலை அமைக்கப்பட்டுக் கிடக்கிறது. ஆதலால் அவனுடைய குற்றங்களைச் சயித்தானுடைய வஞ்சனைப் பாசாங்கில் நடிக்கத் தூண்டி விடுகிறது (Mephistophelian hypoerisy)[1].

**கட்டற்ற இயக்கம்**—சுகாதாரக் கொள்கைப்படி குழந்தைகள் இயங்க வேண்டும் என்பதை எல்லோரும் இன்று ஒப்புக் கொண்டிருக்கின்றனர். ஆதலால், 'சுதந்திரக் குழந்தைகள்' என்று நம்மால் பேசப்படும் குழந்தைகள் பொதுவாக அவர்கள் தம் விருப்பம்போல் நடமாடி ஓடி ஆடக்கூடியவர்களையே நம் மனத்தில் கொண்டு பேசுகிருேம். இன்று மருத்துவர்கள் என்ன சொல்கிருர்கள் ? குழந்தைகள் பூங்காவிலும் திடல்களிலும் சென்று

1 ஜர்மன் நாட்டுக் கதைகளில் வரும் தீய ஆவி அல்லது சைத்தான்.

தாமே தாராளமாக வெட்டவெளிக் காற்றில் நடமாட வேண்டும் என்கிறார்கள். இதை ஒப்புக்கொள்ளாத இக்காலத் தாய்மார்கள் எவரும் இருக்க முடியாது.

பள்ளிக் கூடங்களில் குழந்தைகளுக்குச் சுதந்திரம் அளிக்கப் பட வேண்டும் என்று நாம் பேசும்பொழுது ஸ்தூல உடல் சம்பந் தப்பட்ட சுதந்திரத்தையே நாம் மனத்தில் கொள்கிறோம். சுதந் திரக் கொள்கை பயங்கரமாகத் தன்னுடைய 'டெஸ்கின்'மேல் தாவுவதாகவும் அல்லது சுவர்களுக்கு எதிரே முரட்டுத்தனமாக ஓடி ஆடித்தாக்குவதாகவும் நாம் கற்பனை செய்து கொள்கிறோம். சுதந்திர இயக்கத்துக்குப் பரந்த இடம் வேண்டும் என்றும் நாம் ஒப்புக் கொள்கிறோம். குறுகிய அறைக்குள் அடைபட்டால் பலாத்காரத்துக்கும் குறுக்கிடும் இடையூறுகளுக்கும் இடையே பூசல் அல்லது குழப்பம் ஏற்படுவதாகும். கட்டுப்பாடும் நல்ல தொழிலும் நடைபெற முடியாத அளவுக்கு ஒழுங்கற்ற நிலை ஏற்பட்டு விடும் என்பதும் தெளிவு.

'உளம் சார்ந்த சுகாதாரம்' என்ற விதிப்படி கட்டற்ற இயக்கம் என்பது வெறும் உடல் இயக்கத்தின் சுதந்திரத்தை மட்டும் குறிப்பதில்லை. அவ்வாறு குறிப்பிடுவது மிகவும் பழமை யான கருத்தாகும். குழந்தைகளுக்கு நாம் கூறுவதை ஒரு நாய்க் குட்டிக்கோ அல்லது பூனைக் குட்டிக்கோ சொல்வதாகக் கற்பனை செய்து கொள்வோம். அவைகள் ஓடி ஆடிக் குதிக்கச் சுதந்திரம் பெற்றிருக்க வேண்டும். அவை அவ்வாறு நாம் சொல்லாமலும் செய்கின்றன. அவை பூங்காவிலும் திடலிலும் குழந்தைகளுட னும் குழந்தைகளைப் போலவும் தாராளமாக ஓடி ஆட வேண்டும் என்று சொல்கிறோம். அதேபோல் உடல் இயக்கத்தில் ஒரு பறவையை விடுதலைபெறச் செய்ய வேண்டுமானால், அதற்குத் தகுந்த சில உடல் இயக்கச் சுதந்திர ஏற்பாடுகள் செய்ய வேண்டி வரும். இப் பறவையை வெட்டவெளியில் விடாத போதிலும் அதனருகே ஒரு மரக்கிளையை அமைப்போம். அல்லது அப் பறவை உட்காரக் குச்சிகளைக் குறுக்குமறுக்குமாக வைப்போம். ஏனென்றால், பறவையின் கால்விரல்கள் ஊர்வனவற்றைப் போல தரைமேல் பரப்பி வைத்து நடக்க முடியாதபடி அமைந்திருக் கின்றன. பறவையின் கால் விரல்கள் குச்சியைக் கெட்டியாக இடுக்கிக் கொள்ளும் திறமையையே பெற்றிருக்கின்றன. பரந்த திடலில் விடப்பட்ட ஒரு பறவை தன் விருப்பம்போல் தரைமேல் நடமாடும் என்று நினைப்போம். ஆனால் அப் பறவை மிகவும் துன் பப்படும்.

இது உண்மை என்று ஒப்புக் கொள்கின்ற நாம் ஒரு பறவைக் கும் ஊர்வனவற்றுக்கும் தாமாக இயங்கக்கூடிய வகையுள்ள

சூழ்நிலையை அமைத்துக் கொடுக்கிறோம். பூனைக்கும் நாய்க் குட்டிக்கும் அமைத்துக் கொடுப்பதுபோல் நம் குழந்தைகளுக்கும் சுதந்திர இயக்கத்துக்கு அதே பரந்த இடம் போதும் என்று எண்ணுவது ஒரு தவறான எண்ணமாய் இருக்காதா? தாங்களாக உடற்பயிற்சி எடுக்க விட்டுவிட்டோமானால், பொறுமை இழந்து விடுகின்றனர். ஒருவர்க்கொருவர் சண்டைபோட்டுக் கொள்கின்றனர். அழுகின்றனர். பெரிய குழந்தைகளும் வெறு நடைக்காக நடந்து நடந்து பொறுக்க முடியாத சோர்வுற்றும், புண்பட்டும் அதற்கு ஏதாவது மாற்றாக ஒன்றைப் புதிதாக அமைத்துக் கொள்ள வேண்டுமென்றும் உணர்கிறார்கள். ஓடவேண்டு மென்பதற்காக ஓடுவதில் அவர்களுக்கு ஊக்கம் தளர்ந்து போகிறது. அவர்கள் தம் முயற்சியை வேறு வழியில் திருப்பப் பார்க்கிறார்கள். சிறு குழந்தைகள் குறும்பு செய்கின்றனர். இவ்வாறு சுதந்திரமாக இயங்குங்கள் என்று விடப்பட்ட குழந்தை களின் இயக்கம் நல்ல பலனை அளிப்பதில்லை ; அது வளர்ச்சிக்குப் பயன்படுவதில்லை. பொதுவாக உணவு அருந்தவும் உடலை வளர்க் கவும் ஓரளவுக்கு உதவி புரிகிற தென்பதை மறுக்க முடியாது. அவர்களுடைய இயக்கத்தில் ஒரு கம்பீரம் இல்லை. அவர்கள் வேண்டாத வகையில் துள்ளுகின்றனர். தளர்ந்த நடைபோடு கின்றனர் ; எளிதில் கீழே விழுகின்றனர். பண்டங்களை உடைக் கின்றனர். பூனைக் குட்டிகளைப் பாருங்கள். அவைகள் இலே சாகத் துள்ளுகின்றன; அழகாகத் தாண்டுகின்றன; கம்பீரமாக இயங்குகின்றன. தம் இயக்கத்தை மென்மேலும் நிறைவுபடுத்திக் கொள்கின்றன. இத்துணையும் அதற்கு இயற்கையாகவே இருக் கிறது. குழந்தையின் உடல் இயக்கப் புலன் தூண்டுதலால் வேக மாக முன்னேற வேண்டும் என்ற போட்டியோ அல்லது நிறைவோ பெறவேண்டும் என்ற இயற்கையான தூண்டுதல் காணப்படுவ தில்லை. ஆதலால் பூனைக் குட்டிக்குப் போதும் என்ற இயக்கம் சிறு குழந்தைக்குப் போதாது என்று நாம் தீர்மானிக்க வேண்டி யிருக்கிறது. குழந்தையினுடைய போக்கும் தனிப்பட்டதென்று நாம் ஒப்புக் கொண்டோமானால் அதன் சுதந்திரப் பாதையும் வேறு வகையாக அமையவேண்டும்.

தன் இயக்கத்தில் நுண்ணறிவு படைத்த குறிக்கோள் இல்லாத குழந்தைக்கு அந்தரங்க வழிகாட்டி இல்லாமல் போய்விடுகிறது. ஆதலால் அவனுடைய இயக்கம் அவனுக்குச் சோர்வை ஊட்டு கிறது. ஒரு குறிக்கோளும் இல்லாமல் ஒன்றைக் கட்டாயப் படுத்திச் செய்வதைப் பலர் பொறுக்க முடியாத சூனியமாகக் கொள்கின்றனர். அடிமைகளைத் தண்டிப்பதற்கென்று உண்டாக் கப்பட்ட தண்டனைகளில் எல்லாவற்றிலும் மிகக் கொடியது

என்ன தெரியுமா ? ஓர் ஆழமான குழியை வெட்டச் சொல்கிறது. பிறகு வெட்டி எடுத்த மண்ணைக் குழியில் நிரப்பச் செய்கிறது. இப்படியே திரும்பத்திரும்ப அதையே செய்ய வைக்கிறது. அதாவது ஒரு குறிக்கோளும் இன்றி அதையே திரும்பத்திரும்பச் செய்விக்கிறது ஆகும்.

சோர்வைப் பற்றிப் பல விஞ்ஞான ஆராய்ச்சிகள் செய்திருக்கின்றனர். நுண்ணறிவு சார்ந்த நோக்கத்துடன் வினை ஆற்றப்பட்ட தொழிலால் ஏற்படும் சோர்வு, நோக்கமோ குறிக்கோளோ இல்லாமல் செய்யப்பட்ட அதே அளவு தொழில் தரும் சோர்வை விட மிகமிகக் குறைவு என்று கண்டுபிடித்திருக்கின்றனர். ஆதலால், உளநோய் தீர்ப்பவர்கள் வெட்ட வெளியில் உடற்பயிற்சியை அவ்வளவாகச் சிபார்சு செய்வதில்லை. உடல் உள மீச்சோர்வு (neurasthenic) நேர்மை நிலை ஏற்பட வெட்ட வெளியில் வினை ஆற்றும் அவசியத்தை எடுத்துக்கூறுகின்றனர்.

புதுமைக் கட்டமைக்கும் தொழில்[1]—இந்தத் தொழில் மனோ முயற்சியால் ஆக்கப்பட்டதன்று. ஆனால், இது உள் தசை உறுப்புகளின் இணைப்பால் தோன்றியவையாகும். இந்த வினையாற்றல்கள் ஒரு பண்டத்தை உண்டு பண்ணுவதென்ற நோக்கத்தால் ஆனவையன்று. இவை அப் பண்டங்களைச் சீரான நிலையில் இருத்திவைப்பதைக் குறிக்கும். எடுத்துக்காட்டாகத் தூசி அடிப்பதும், கைம் மேசையைக் கழுவுவதும், தரையைப் பெருக்குவதும், உணவு உண்ணத் தட்டு கோப்பைகளை அடுக்குவதும், உண்ட பிறகு துப்புரவாக்குவதும், மிதி அடிகளைச் சுத்தப்படுத்துவதும், சமக்காளத்தை விரிப்பது போன்றவையும் ஆகும். இவைகளெல்லாம் எசமானனுக்குச் சொந்தமான பண்டங்களைச் சீராக வைத்திருக்கும் ஒரு பணியாளின் தொழிலாகும். இவை ஒரு கைவினைஞர் புனையும் தொழிலுக்கு மாறுபட்டவையாகும். கைவினைஞர் என்ன செய்தார் ? தம்முடைய நுண்ணறிவு முயற்சியால் அப் பண்டங்களைப் படைத்திருக்கிறார். முதலது மிகவும் எளியது ; அது ஒன்றுபடுத்தப்பட்ட இயக்கமாகும். நடப்பதற்கும் குதிப்பதற்கும் தேவைப்படுகின்ற இயக்க ஒன்றிமையை விட உயர்ந்த சிறப்புடைய தன்று. இவை நடப்பது, குதிப்பது போன்ற எளியஇயக்கத்துக்கு ஒரு நோக்கத்தைத் தருகிறது. ஆனால் ஆக்கத் தொழில் என்பதற்குத் தொடக்கத்தில் நுண்ணறிவு படைத்த ஓர் ஆயத்தத் தொழில் தேவைப்படுகிறது. பல சிக்கலான தசை இயக்க ஒற்றுமையைக் கொண்டதோடு பல புலன் உணர்ச்சிப் பயிற்சிகளையும் கொண்டவையாகும்.

[1] Reconstructive work.

முற்கூறியவை சிறு குழந்தைகளுக்குப் பொருத்தமானவை யாகும். இவர்களுடைய இயக்கங்களை ஒன்றுபடுத்த இந்தப் பயிற்சிகள் அவசியமாகின்றன.

இவை அன்ருட வாழ்க்கைப் பயிற்சிகள் என்பவை ஆகும் (Exercise of practical life). 'இயக்கத்தில் சுதந்திரம்' என்ற உளக் கொள்கைக்கு ஒத்ததாகும். பறவை வளர்க்கப்படும் கூண்டில் ஒரு குச்சியை உட்காருவதற்கு வைத்துவிட்ட பிறகு பறவை தானுகவே அதன்மேல் எவ்வாறு உட்கார விட்டு விடுகிருேமோ, அதே போல் இங்கும் குழந்தைகளுக்குத் தேவைப்படும் சூழ்நிலையை அமைத்துத் தந்து, அவர்களுடைய வினையாற்றும் புலன் தூண்டுதலையும், பிறரைப் போல் நடிக்கும் திறனையும் சுதந்திரமாகப் பயன்படுத்த விட்டுவிட வேண்டும். சூழ்நிலையில் காணப்படும் பொருள்கள் குழந்தையின் உடல் வடிவத்திற்கும் வலிமைக்கும் பொருந்தியதாக இருக்கவேண்டும். தானே தூக்கிச் செல்லக் கூடிய இலேசான தட்டுமுட்டுச் சாமான்கள், கைக்கெட்டும் அங்கிகள், தானே திறந்து பூட்டக்கூடிய பூட்டுச் சாவிகள், உருளைகளின் மேல் இயங்கக்கூடிய இழுப்பறைப் பெட்டி (chest), எளிதில் தானே திறந்து மூடக்கூடிய கதவுகள், துணிகளை நழுவ விடாமல் பிடித்துக் கொள்ளும் இடுக்கிகள் அவனுக்கு எட்டும் உயரத்தில் இருத்தல், தன் சிறு கைகள் பிடிக்கக்கூடிய சிறு தூரியங்கள்— 'புருசுகள்' (brushes) தன் உள்ளங்கைக்குள் அடங்கக்கூடிய பருமனை சோப்புத் துண்டுகள், தானே எடுத்து நீரைக் கொட்டக் கூடியதான பேசின்கள் அகன்ற—வாய்க்கிண்ணங்கள் (basins), குட்டையும் மென்மையும் இலேசானதுமான கைப்பிடிகளைக் கொண்ட துடைப்பங்கள், தானே அணிந்து கொள்ளவும் கழற்றவும் கூடிய ஆடைகள் போன்றவைகள் சூழ்நிலையில் இருக்க வேண்டும். இவைகள் குழந்தையை வினையாற்ற அழைக்கின்றன. படிப்படியாகக் குழந்தை தன்னுடைய இயக்கங்களைச் சோர்வின்றி நிறைவுபடுத்திக் கொள்வான். மனிதர்க்குரிய இனிமைப் பண்பும் (grace) சாமர்த்தியமும் (dexterity) பெறுகிருன். பூனைக்குட்டி தன்னுடைய புலன் உணர்வின் (instinct) தூண்டுதலால் இனிய பண்பையும் சாமர்த்தியத்தையும் பெறுவதுபோல் குழந்தையும் இப் பண்டங்களைக் கொண்டு வினை ஆற்றினதின் பயனுல் பெறுகிருன்.

குழந்தை சுதந்திரத்துடன் வினையாற்றத்தக்க ஏற்பாடுகளை அமைத்துக் கொடுக்கப்பட்ட போது, அவன் தன்னை மனிதனுக்கிக் கொள்ளவும் அவை உதவுகின்றன. ஏதோ இயங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இவன் இப் பயிற்சிகளைச் செய்யப் புகுவ

தில்லை. இவனுடைய ஆளுமை சம்பந்தப்பட்ட சிக்கலான அமைப்பை உருவாக்க ஒரு சக்தி வாய்ந்த துணைக்காரணம் இருக்கிறது. சுதந்திரத்துடன் வினையாற்றும் மற்றக் குழந்தைகளுடன் அவன் சமூகத் தொடர்பு கொள்கிறான். இவனுடன் தொடர்பு கொள்கிறவர்கள் இவனுடைய தோழர்கள். இவர்களுடைய வளர்ச்சியைக் காத்து உதவிபுரிபவர்கள் ஒரே மனையில் வசிக்கும் தோழர்கள் ஆவர். தன்மான உணர்ச்சியைப் பெற்று, தன் சூழ்நிலையைக் காத்து, தானே ஆட்சிகொண்டு, அதனால் தானே மன நிறைவு பெறுகிறான். இவைகளெல்லாம் சுதந்திர இயக்கத்தால் (liberty of movement) தொடர்ந்து பெறப்படுகின்ற மன்பதையின் துணைக்காரணங்களாகும் (coefficients of humanity). இவ்வாறு தன்னுடைய ஆளுமை வளர்க்கப்படுகிறது என்பதை உணரும் குழந்தை இத்தகைய வினையாற்றல்களில் இடையறாத தொழில் புரிந்து வருகிறான். இவைகளைச் செய்துவரத் தேவைப்படும் தொடர்ந்த உழைப்பையும், இவைகளை நிறைவேற்றும் பொழுது கிடைக்கும் நுண்ணறிவு கலந்த இன்பத்தையும் அடைகிறான். இத்தகைய ஒரு சூழ்நிலையில் அவன் தானே பணியாற்றுகிறான் என்பதற்கு ஐயமில்லை. அவன் தூய காற்றுள்ள திடலில் சுவாசிக்கும் பொழுதும், தன் உறுப்புகள் கட்டுக்கடங்காமல் தாராளமாக இயங்கும் பொழுதும், தன்னுடைய உடல் வளர்ச்சிக்கும், உறுப்புகளின் உறுதிக்கும் பாடுபடுவதுபோல் மேலே குறிப்பிட்டவைகளை அவன் செய்யும் பொழுது தன்னுடைய தெய்விகப் பகுதிக்கும் அரண் வகுத்துக் கொள்கிறான் எனலாம்.

# 6. கவனம்

குழந்தையின் தெய்விக வளர்ச்சிக்கு ஒத்த சூழ்நிலைக்குள் விட்ட குழந்தையின் இயல் நிகழ்ச்சி என்னவாயிருக்கும் என்று எதிர்பார்க்க முடியும். திடீரென்று ஒரு பொருளின்மேல் அவனுடைய கவனம் திரும்பும். அப் பொருள் எதற்காக அமைக்கப் பட்டிருந்ததோ அம் முறையில் அதைப் பயன்படுத்துவான். திரும்பத் திரும்பப் பலமுறை அதையே செய்து கொண்டிருப்பான். ஒருவன் ஒரு பயிற்சியை இருபது முறை செய்வான். மற்றொருவன் நாற்பது முறையும் வேறொருவன் இருநூறு முறையும் செய்வான். தெய்விக வளர்ச்சியுடன் இணைக்கப்பட்ட செயல்களில் இந்த இயல் நிகழ்ச்சி (Phenomenon) தொடக்க நிகழ்ச்சியாக எதிர்பார்க்கப் படலாம்.

இவ்வாறு வினையாற்றலில் ஈடுபடச் செய்யும் உள் தூண்டுதல் என்ன? அது ஒரு பூர்விக உள் தூண்டுதலாகும் (Primitive internal impulse). ஒருவகையான தெளிவற்ற தெய்விகப் பசி உணர்ச்சி எனலாம். இந்தப் பசி உணர்ச்சியைத் தணிக்கவே குழந்தையின் தெளி அறிநிலை குறிப்பிட்ட ஒரு பொருளின்மேல் திருப்பப் படுகிறது. பிறகு மெதுவாக அடி மூலமானதும் சிக்கல் வாய்ந்ததுமான நுண்ணறிவின் திரும்பத் திரும்பச் செய்யும் பயிற்சியில் இறங்க விட்டு விடுகிறது. நுண்ணறிவு ஒப்பிடுகிறது; தீர்ப்புக் கூறுகிறது; தேர்ந்தெடுக்கிறது; பிழை திருத்திக் கொள்கிறது. மர உருளைகளை வைத்துக்கொண்டு வேலை செய்யும் பொழுது அததற்குப் பொருத்தமான துளைகளுக்குள் அந்தப் பத்து உருளைகளையும் பொருத்துவதும், நீக்குவதுமாக இருக்கிறான். இடைவிடாமல் முப்பது நாற்பது முறை தொடர்ந்து செய்கிறான். பிழை ஏற்படும்போது ஒரு பிரச்சினையைத் தானே கிளப்பிக் கொள்கிறான்; விடுவித்தும் கொள்கிறான். அவனுக்கு அதில்

மென்மேலும் அக்கறை உண்டாகுமாயின், அவன் அப் பரி சோதனையைத் திரும்பத் திரும்பச் செய்கிறான். தன்னுடைய உள வினையாற்றலின் சிக்கலான பயிற்சிகளை அவன் நீடிக்கச் செய் கிறான். இவ்வாறு செய்யும் பொழுது அவனுடைய அந்தரங்க வளர்ச்சிக்கு வழி வகுக்கிறது.

இந்த வளர்ச்சியை அந்தரங்கப் புலன் காட்சியால் (internal perception) அறிவதால் என்னவோ இந்தப் பயிற்சிகள் இன்பம் ஊட்டுவதாகவும், அதே தொழிலை நீண்ட நேரம் செயலாற்றவும் உந்துகிறது. தாக விடாயைத் தணிக்கத் தண்ணீரைப் பார்த் தாலும், உதட்டில் வைத்தாலும் மட்டும் போதாது. தாகமான வன் நிறையாகப் பருக வேண்டும். அதாவது அவனுடைய அங்கம் ஏற்றுக் கொள்ளும் அளவுக்குக் குடிக்க வேண்டும். அதே போல் இத்தகைய உளப் பசியையும் உளத் தாக விடாயையும் தணிக்கப் பொருள்களை அறிய ஆர்வம் இருந்தாலும் (curiosity) பண்டங்களைப் பற்றிய வருணனைகளைக் கேட்டால் மட்டும் போதாது; அந்தரங்க வாழ்வின் தேவைக்குத் தகுந்த அளவு பெற் றும் முழுமையும் பயன்படுத்தவும் தேவைப்படுகிறது.

எல்லா உள இயல் சார்ந்த அமைப்புக்கும் கல்வியின் முக்கிய இரகசியத்துக்கும் இவ்வுண்மை வெளிப்படையாகத் தோற்றமளிக் கிறது. வெளிப்படையாகக் காணப்படும் பொருள்கள் ஒரு வகை உடற்பயிற்சிக் கூடம் (gymnasium) போல் இருக்கிறது. அதில் உள்ளச் சக்தி பயிற்சி செய்கிறது. அத்தகைய அந்தரங்கப் பயிற்சிகள் அடிப்படையில் செயலாற்றலின் குறிக்கோளும் முடிவும் ஆகும். ஆதலால் உருளைகள் உருவங்களைப் பற்றிக் குழந்தைக்கு அறிவூட்டுவதற்காக அமைந்ததென்றோ அல்லது செருகு பலகைகள் வடிவங்களைப்பற்றி அவன் புரிந்து கொள் வதற்கென்றோ திட்டமிடப்பட்டவை என்றோ கொள்ளலாகாது. இவை போன்ற மற்றவைகளின் நோக்கம் குழந்தை தன் வினை யாற்றலைச் செய்யத் தூண்டுவதற்கென்றே ஏற்பட்டவையாகும். இந்த உபகரணங்களால் தெளிவான அறிவை உண்மையாகப் பெறுகிறான். இவைகளைத் தெளிவுடன் நினைவுபடுத்திக் கொள் வதும் அவனுடைய ஒருநிலைத் தீவிர கவனத்தைப் பொறுத் திருக்கிறது. இது அவசியமாக ஏற்படக்கூடிய பலன். நிச்சயமாக இவை உருவங்கள், வடிவங்கள், வண்ணங்கள் முதலியவைகள் பற்றிய புலன் உணர் அறிவாகும். இவ்வாறு பெறப்படுவது இத்தகைய அந்தரங்கப் பயிற்சிகளை இன்னும் பரந்ததும் உயர்ந் ததுமான முன்னேற்றத் துறைகளிலும் பலன் அடைய இடம் அளிக்கிறது.

இதுவரை மூன்று நான்கு வயதுக் குழந்தைகளைப்பற்றி உள இயலார் என்ன கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்? கவனம் ஒரு நிலையில் இல்லாமை என்பது குழந்தையின் பாங்கு என்று எல்லோரும் ஒரே குரலில் கூறி வந்திருக்கிறார்கள். அக் குழந்தைகள் எதைக் கண்ட போதும் அதன்மேல் கவனத்தைத் திருப்புகின்றனர் என்றும், ஒரு பண்டத்திலிருந்து மற்றொரு பண்டத்துக்குக் கவனத்தைத் தாண்ட விடுகின்றனரென்றும், ஒரு பொருளின் மேலேயே ஒருமுனைப்போடு இருக்க இயலாதவர்களென்றும், இவர்களுடைய கவனத்தை ஒருநிலையில் இருக்க வைக்கச் செய்வதுதான் கல்வி கற்பிப்பதில் பெரிய முட்டுக்கட்டை என்றும் கருதிவருகின்றனர். வில்லியம் ஜேம்ஸ் என்பவர் (William James) கூறுகிறார்: 'குழந்தைகளிடத்தில் கவனம் ஓரிடத்தில் நிற்காது; இங்குமங்கும் அலைகிறது. இதை அனைவரும் அறிவார்கள். ஆதலால் அவர்களுடைய முதல் பாடமே மிகவும் கடுமையாக்கி விடுகிறது. எந்தப் பொருளைக் கண்ணுற்றாலும் அவன் அறியாமலே அவனுடைய கவனம் அங்குத் திரும்பி விடுகிறது. குழந்தை தனக்கு உடையவன் போலல்லாமல் கண்களுக்குப்படும் ஒவ்வொரு பண்டத்துக்கும் உடையவன்போல் மந்தமான பண்புடன் தோன்றுகிறான். இதை எப்படியாவது நடைபெறாதிருக்கச் செய்வதே ஆசிரியரின் முதல் கடமையாகும். இங்குமங்கும் அலைந்து திரிகின்ற கவனத்தை மறுபடியும், மறுபடியும் திரும்பச் செய்வதில் நியாயம், அநியாயம், நற்பண்பு, மன உறுதி ஆகியவற்றின் ஆணிவேர் அடங்கியிருக்கிறது எனலாம். இந்தத் திறமையை மேம்படுத்தும் ஒரு கல்வி முறையே மிகச் சிறந்த முறையாகும்.

பண்டம் விட்டுப் பண்டத்தின் மேல் அலைந்து திரியும் கவனத்தை மனிதன் தன் சக்தியால் ஒருநிலைப்படுத்த என்றும் வெற்றி பெற்றதில்லை.

உண்மையாகப் பார்க்கப்போனால் எங்களுடைய பரிசோதனைகளில் சிறு குழந்தையின் கவனத்தைச் செயற்கை முறையால் எந்த ஆசிரியரும் ஒருநிலைப்படுத்தியதில்லை. ஒரு பண்டமே அவனுடைய கவனத்தை ஒருநிலைப்படுத்திற்று. ஏதோ ஓர் அந்தரங்கத் தூண்டும் உணர்ச்சி அவ்வாறு செய்திருப்பதுபோல் தோன்றுகிறது. குழந்தையின் வளர்ச்சிக்குத் தேவைப்படும் பண்டங்களின்மேல் மட்டும் அந்த உணர்ச்சி திருப்பப்பட்டிருக்கிறது போலும். அதே போல் அன்று பிறந்த குழந்தை பால் குடிக்கும் பொழுது பல சிக்கலான ஒன்றி இயங்கும் தசைகளால் அச் செயலைச் சாதிக்க முடிகிறது. குழந்தையின் நனவில்லாத உண்டித் தேவையை ஒட்டியே அந்த முதல் வினை ஆற்றப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட

காரியத்துக்கென்று நனவுடன் சாதிக்கப்பட்ட சாதனையன்று (பால் குடித்தலைக் குறிக்கிறது).

அன்று பிறந்த குழந்தையால் குறிப்பிட்ட நோக்கத்துடன் தன் மனம் அறிந்து இயங்கும் செயல் ஆற்றி. வைக்க முடியாது. குழந்தையின் வாயின் அசைவுகள் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று குழந்தையால் இயங்கவைக்க முடியாது. அதேபோல் குழந்தையின் உளச்சக்தி சார்ந்த முதல் இயக்கத்தை ஆற்றவைக்க இயலாது.

ஆதலால் முதல்முதலாக வெளிப்படையான தூண்டுதல் பொருள் ஒன்று தேவைப்படுகிறது. அதுதான் தாயின் முலை. அவள் முலைப்பால் உள்ளச் சக்தியைத் தூண்டிவிடுகிறது. அதன் பிறகுதான் அற்புதமான இயல் நிகழ்ச்சி நடைபெறுவதைக் காண் கிறோம். குழந்தையின் முகத்தில் தீவிரமாக ஒருமுனைப்புடன் ஒன்றின்மேல் கவனம் செலுத்தும் தோற்றத்தைக் காண்கிறோம்.

மூன்று வயதுக் குழந்தை ஒரே பயிற்சியை ஐம்பது முறை திரும்பத் திரும்பச் செய்வதைப் பாருங்கள். அவனைச் சுற்றிலும் பலர் நடமாடிக் கொண்டிருக்கின்றனர். ஒருவர் பியோனோவை வாசித்துக் கொண்டிருக்கிறார். குழந்தைகள் சேர்ந்து பாடிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், இவைகளில் எதுவும் அவனுடைய ஆழ்ந்த கவனத்தைக் கலைக்க முடியவில்லை. அதேபோலத்தான் பால் குடிக்கும் குழந்தையும் தாயின் தனத்தை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறான். வெளிச் சலசலப்பொன்றும் அவனைக் கலைப் பதில்லை. அவன் திருப்தி அடைந்த பிறகுதான் விட்டு விலகுகிறான்.

இத்தகைய அற்புதத்தை இயற்கைதான் சாதிக்கிறது.

உளஇயல் சார்ந்த வெளித் தோற்றங்கள் இயற்கையில் வேர் ஊன்றியிருக்கின்றன என்றால் இயற்கையைப் புரிந்து கொள்வதற் கும் இயற்கைக்கு உதவிபுரிவதற்கும் அதன் தொடக்கப் பருவத் தில் அதைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது அவசிய மாகிறது. அவை மிகவும் எளியவை. அவைதாம் உண்மையை வெளியாக்க வல்லமை பெற்றுள்ளன. அந்த உண்மை இனிமேல் வரக்கூடிய இன்னும் சிக்கலான வெளித் தோற்றங்களைப் பற்றி பொருள் அறிந்து கொள்ள உதவிபுரியும். இதையே பல உளஇயலார் செய்துள்ளனர் என்பது உண்மையே. ஆனால், அவர்கள் ஆய்முறை உளஇயலின் (Experimental Psychology) பகுத்தாய்கிற முறைகளை (analytical methods) உபயோகித்து உயிர்நூல் விஞ்ஞானம் வாழ்க்கையைப்பற்றி எந்தக் கட்டத்தில் தொடங்கி ஆய்ந்தறிந்தனரோ அங்கிருந்து ஆய்முறை இயல்

தொடங்கவில்லை. உயிர்நூலார் தாம் ஆய்கின்ற விலங்குகள் சுதந்திரமானதும் தத்தம் இயற்கையான வாழ்க்கையில் வாழ விட்டுத் தம் ஆய்வைத் தொடங்கினர்கள். ஃபேப்ரே (Fabre)[1] தாம் ஆய்ந்த பூச்சிகளைத் தத்தம் சூழ்நிலையில் சுயேச்சையாய்த் தம் போக்கில் வாழவிட்டார். அவைகளுடைய தொழில் எதையும் தம் நடமாட்டத்தால் குறுக்கிடாதபடி கவனித்துக் கொண்டார். இவ்வாறெல்லாம் செய்யாமல் பூச்சிகளைப் பிடித்துக் கொண்டு வந்து தம் அறையில் விட்டுப் பரிசோதனைகளுக்கு உட்படுத்தியிருந் தால் பூச்சி வாழ்க்கையின் அற்புதத்தை வெளி உலகுக்கு அறிவித் திருக்க முடியாது.

நுண்மம ஆராய்ச்சியாளர் (bacteriologists) நுண்மங்களைப்பற்றி ஆயும்பொழுது இயற்கையாக அவை வாழும் சூழ்நிலைபோல் அமைத்துக் கொண்டனர். அவை உண்ணும் உணவையும் தட்ப வெப்ப நிலையையும் அவ்வாறே பொருந்தவைத்தனர். அந்த நுண்மங்கள் இயற்கையாகவும் சுதந்திரத்துடனும் வாழ விட்ட னர். அந்த நிலையில் அவை தத்தம் குணதிசயங்களையும் போக்கு களையும் உருக்காட்டின. இவ்வாறு ஆய்வதை ஒரு தனி முறை யாக அவர்கள் வகுத்துக் கொண்டனர். இதற்குப் பதிலாக அவர்கள் ஒரு குறிப்பிட்ட நோயின் நுண்மங்களை நுண் நோக்கியின் கீழ்ச் சிறைப்படுத்தி ஆயப் புகுந்திருந்தார்களானல் என்ன நேர்ந் திருக்கும்? கோடான கோடி மக்களின் உயிரைக் காப்பாற்றியும் பல நாடுகளைத் தொத்து நோய்களின்று காத்தும் வருகின்ற ஒரு விஞ்ஞானம் இன்று தோன்றி இருந்திருக்காது.

உயிரினங்களை ஆயவேண்டும் என்றால் அவைகளுக்கு வாழச் சுதந்திரம் அளிப்பது உண்மையான அடிப்படையாகும்.

குழந்தைகளின் கவனத்தை ஆராய வேண்டுமானல் சுதந்திரம் என்பது பரிசோதனையின் நிபந்தனை யாகும். குழந்தை கவனத்தின் புறத்தூண்டுதல்கள் (stimuli of infant attention) முக்கியமாகப் புலன் உணர்ச்சி சம்பந்தமானவை என்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். பொறியுறுப்புக்குள் இசைவுபடுத்திக் கொள்கின்றன (accommodation). இந்த இசைவுபடுத்தலுக்கு உடல் இயல் சார்ந்த ஒரு சக்தி வாய்ந்த உடன் இணை துணையும் (concomitant) இருக்கிறதென்பதையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். இந்த இசைவுபடுத்தல் என்பது சிறு குழந்தையிடம் இன்னும் நிறைவுப் பெறப்படவில்லை. இது இயற்கை வகுத்த

[1] Fabre-பிரான்ஸ் தேசத்தில் வாழ்ந்த உயிர்நூல் வல்லுநர். பூச்சிகள் போன்ற உயிரினங்களின் வாழ்விடத்துக்குச் சென்று பொறுமையாக உற்று ஆய்ந்து பூச்சி வாழ்க்கையை எடுத்துக்காட்டியவர்.

விதிப்படி இனிமேல்தான் வளர்ச்சிப்பெற வேண்டியிருக்கிறது. வளர்ந்து கொண்டு வரும் இசைவுபடுத்திக்கொள்ளும் திற னுக்குப் பொருந்தாத ஒரு புறத்தூண்டுதலைச் செய்விக்கும் ஒரு பொருள் கவனத்தை ஈர்த்து நீடிக்கச் செய்ய இயலாது. இது மட்டும் அல்ல; சோர்வையும் உண்டாக்கிக் கண், செவி போன்ற உறுப்புகளின் இசைவுபடுத்தலையே பாழாக்கிவிடும். தானாக ஒரு பொருளைத் தேர்ந்தெடுத்து அப் பொருளை வைத்துக்கொண்டு தொடர்ந்து வினையாற்றி வருகின்ற ஒரு குழந்தையிடம் என்ன நடைபெறுகிறது? நிறைந்த தீவிரக் கவனத்தைக் காண்கிறோம். இது எவ்வாறு நமக்குத் தெரிகிறது? குழந்தையின் முகத்திலுள்ள தசைகளின் அசைவினால் அறிகிறோம். குழந்தை இன்பம் பெறுகிற தென்று அவ்வசைவுகள் காட்டுகின்றன. நல்ல ஆரோக்கிய முறையில் நடைபெறுகிறதற்கு இன்பம் ஓர் அறிகுறியாகும். உடல் உறுப்புகளுக்குப் பயன் அளிக்கத்தக்க பயிற்சிகள் இருக்கு மிடத்தில் இன்பமும் இருக்கும்.

கவனத்துக்குக் கற்பனை மையங்களின் (ideative centres) தயாரிப்பும் தேவைப்படுகிறது. புறப்பொருளுடன் இந்த மையங் கள் இணையும் வகையில் தயாரிப்புப் பெற வேண்டியிருக்கிறது. அதாவது அந்தரங்க உளத்தழுவல் தேவைப்படுகிறது (Psychical-adaptation). புறத்தூண்டுதல் ஏற்படும் பொழுது அந்தரங்கப் போக்கினால் மூளையின் மையங்களும் தூண்டப்பட வேண்டும். ஒரு விருந்தினரை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவருக்கு, விருந் தினர் வெகு தொலைவில் வரும்போது இவர் கண்ணுக்குத் தெரிந்து விடுகிறார். எப்படி? இவர் கண்கள் பார்ப்பது மட்டுமல்ல; இவர் அவருடைய வருகையை எதிர்பார்த்த வண்ணமாக இருந்த கார ணத்தினாலும் ஆகும். தொலைவில் வந்து கொண்டிருக்கும் விருந் தினரைக் கவனிக்க வேண்டி வந்தது. ஏனென்றால் முன் கூட்டியாக அந்த நோக்கத்துடன் மூளையின் மையங்களும் தூண்டப்பட்டு விட்டன. இது போன்ற வினையாற்றல்களால் ஒரு வேடன் அடவி யில் அவன் வேட்டையாடும் விலங்கின் மிக நுண்மையான அசை வையும் உணர்ந்துவிடுகிறான். கதவைத் திறக்கும்பொழுது இரண்டு சக்திகள் நடைபெறுகின்றன. ஒன்று கதவைத் தட்டுதல். மற்றொன்று 'திற' என்று உள்ளிருந்து உந்தும் சக்தி. இதேபோல் மூளைச் சிற்றறையின்மேல் இரண்டு சக்திகள் வேலை செய்கின்றன. உள்ளிருக்கின்ற சக்தி வேலை செய்யாவிட்டால் வெளித் தூண்டுதல் என்ன செய்தாலும் கதவு திறக்காது. அந்த நிலையில் மிகவும் சக்தி வாய்ந்த தூண்டுதலும் கவனிக்கப்படாமல் போக வேண்டி யதுதான். எதையோ நினைத்துக்கொண்டு போகிறவன் ஆழ் கெவியில் இறங்கிவிடலாம். ஒரு கருமத்திலேயே கண்ணும்

கருத்தாய் இருப்பவன் தெருவில் முழங்கும் கொட்டு மேளத்துக்குச் செவிடனுகலாம்.

கவன ஒருமுனைப்பு (central action) உள இயல் சார்ந்ததும் தத்துவம் சார்ந்ததுமானவைகளின் மதிப்புக்குக் காரணம் கூறு கிறது (factor). ஆசிரியக்கலையில் மிகவும் நிறைந்த நடைமுறை மதிப்பாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. ஆசிரியக் கலையின் முக்கிய நோக்கத்தைச் சுருங்கச் சொன்னுல் ஆசிரியர் கூறப் போவதை ஆவலுடன் எதிர்பார்க்கும் கவனத்தை ஆயத்தமாக்குவதையே குறிப்பிடுகிறது எனலாம். 'திற' என்னும்போது, 'கதவைத் திற' என்று கூறுமாப் போல் அந்தரங்கத்திலுள்ள சக்திகளின் ஒத்துழைப்பைப் பெற்று விடுவதாகும். இதுவரை தெரியாததும், கைக்கு எட்டாததுமான ஒன்று அக்கறையைத் தூண்ட முடியாதல்லவா ? ஆதலால், போதனு முறையின் அடிப்படைக் கொள்கைப்படி தெரிந்ததிலிருந்து தெரியாததைப் படிப்படியாக அறிந்து கொள்வதாகும். எளியதிலிருந்து கடினமானதற்குப் போதலாகும். முன் கூட்டியே இருக்கின்ற 'தெரிந்தது' இனிமேல் வரப் போவதற்குத் தூண்டி விடுகிறது. இதுவரை தெரியாத புதுமைக்குக் கதவு திறக்கிறது. ஏற்கெனவே இருக்கின்ற சுலபமான தொழில் உள் நுழைவதற்குப் புது வழிகளைத் திறந்து கவனத்தை எதிர்ப் பார்க்கும் நிலையில் அமைத்துவிடுகிறது.

ஆசிரியக் கலையின் கொள்கைப்படி ஒருவனுக்குத் தேவைப் படும் 'நல்ல அலுவலகங்களை ஆயத்தம் செய்து கொள்வதுபோல் கவனத்தின் உள இயல் சார்ந்த உடன் இணைதுணைகளின் (the psychical concomitants of the attention) ஒத்துழைப்பைப் பெற லாம். தெரிந்ததையும், இனித் தெரியப் போவதையும் இன்னும் இது போன்றவைகளையும் எவ்வாறு திறமையுடன் கையாளு கிருேமோ அதைப் பொறுத்தே எல்லாம் இருக்கிறது. திறமையான ஆசிரியர் ஓர் இராணுவப் போர்த்திற வல்லுநர் (military stratagist) போல் ஆவர். இராணுவத் தலைவர் என்ன செய்கிருர் ? போரில் நடைபெறவிருக்கும் படைகளின் பாங்கு இவ்வாறு இருக்கவேண்டு மென்று மேசைமேலேயே அமைத்துத் திட்டம் கண்டுவிடுகிருர். மனிதன் மனிதனுக்கே வழிகாட்டுவான். அவனுக்கு விருப்பம் எங் கெல்லாம் செல்லுமோ அங்கெல்லாம் அழைத்துச் செல்வான்.

மேலும், உளவியலைப் பாதிக்கக் கூடிய லௌகிகத் தத்துவ மாக நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. ஹெர்பார்ட் ஸ்பென்சர் (Herbart spencer) கூறுவதென்ன ? மனமானது ஒன்றும் தனக்குள் கொள்ளாத களிமண் போன்றது. வெளிப்பதிவுகள் இதன்மேல் பதிகின்றன. அவைகள் ஏறத்தாழச் சிறப்பான பதிவு

களேயே விட்டுச் செல்கின்றன. அனுபவங்கள்தாம் மனத்தை உருவாக்குகின்றன என்பது ஸ்பென்சருடைய கருத்து. அதே கருத்தைத்தான் இங்கிலாந்தைச் சேர்ந்த அனுபவப் பயிற்சியாளர் களும் (English empiricists) கூறுகிருர்கள். இது மனத்தின் மிக உயர்ந்த வினையாற்றலுக்கும் பொருந்தும். அனுபவம் என்ன செய்கிறதோ அதேபோல் ஆகிருன் மனிதன். ஆதலால் பொருத்த மான அனுபவங்களைத் தரக்கூடிய அமைப்பைப் ஏற்பாடு செய்தால் மனிதனை உருவாக்கிவிடலாம். உயிர்ப் பொருட் கூருன வேதி இயலின் (organic chemistry) அற்புத முன்னேற்றம் தோன்று வதற்கு முன் தொடர்பாகக் கூட்டாய்வுப் பகுப்பாய்வுக்குப் பின் தோன்றின. அப்பொழுது ஒரு கருத்து வெளியாக்கப்பட்டது. இக் கருத்து ஒரு குறிப்பிட்ட கால வரம்புக்குத்தான் தோன்றிற்று. இதைவிட எந்த வகையிலும் உலோகாயதியான (materialistic) விதத்தில் குறைவில்லாத கருத்து ஒன்று இருந்துவந்தது. ஒரு வகையான கருப்புரதம் (albumen) கூட்டு முறையில் ஆக்கப்பட முடியும் என்ற நம்பிக்கை நிலவிவந்தது. சிற்றறைகளில் காணப் படும் பொருளில் பெரும்பாலானவை கருப்புரதமாகும். மனிதக் கருவும் தொடக்கத்தில் ஒரு சிற்றறை (cell) யாகவே இருக்கிறது. ஆதலால் மனிதனை ஒரு நாள் வேதி நூலாரின் மேசை மேலேயே படைத்து விட முடியும் என்று நம்பிவந்தனர். மனிதனை மனிதன் தான் படைக்க முடியும் என்ற கருத்து வேகமாக ஆன்மத் துறை சாராத எல்லைக்குள் சந்தேகிக்கப்பட்டது. ஆனால் உள இயல் சார்ந்த குள்ளன் (homunseulus) ஆசிரிய இயலின் நடைமுறைக் கொள்கைக்குள் இன்னும் இருந்துவருகிறது.

எந்த வேதிக் கூட்டுப் பொருளும் வெளிப்படையாகத் தெரி யும் அளவு சிற்றறைக்குள் சிறிய ஊன்மத்தின் (protoplasm) நள் ளுயிர்மத்தைத் (Nuclaus) திணிக்க முடியாது. வினையாற்றலுக்கு அது இன்றிமையாததாகும். உள்ளடங்கிய சிவசக்தியை ஊட்ட முடியாது. ஒரு சிற்றறையை ஒரு மனிதனுக வளர்விக்கின்ற அந்த மாயச் சக்தியை ஊட்டமுடியாது.

மருட்சி தரக்கூடிய குழந்தைகளின் கவனம் உள இயல் சார்ந்த மனிதன் தானே தன்னைப் படைத்துக் கொள்ளுவதை ஒட்டிய . விதிகளுக்கு உட்பட்டவனுகிருன் என்று எடுத்துக் காட்டுகிறது.

ஆன்ம வாத (Spiritualistic psychologists) உளஇயலார் கூட் டத்தைச் சேர்ந்தவர் வில்லியம் ஜேம்ஸ் ஆவார். இந்தக் கொள் கையைப் பின்பற்றுகின்ற பெரும்பாலோர் கவனத்துடன் பேர்வழி யின் தன்மையுடன் ஒன்றி இணைந்திருப்பதாகவும் அது ஓர் அற

நெறி சக்திபோலும் சீவன் சம்பந்தப்பட்ட அற்புதக் காரணக் கூறுகளில் ஒன்ருகும் எனவும் கருதுகின்றனர்.[1]

> மனிதனுடைய எண்ணங்களின் மூலாதாரமான அறிவிப்புகளை அவனுடைய நுண்ணறிவு எங்கிருந்து பெற்றது. எனவே, மனிதன் அதை அறிந்தானில்லை. தேனீக்களில் தேனைச் சேகரிக்கும் ஆர்வச் சுறுசுறுப்புப்போல் அவனுடைய பசிகளின் முதல் தோற்றமும் எங்கிருந்து பெற்ருன் என்பதையும் அவன் அறிந்தானில்லை. (தாந்தே—Dante)

மனிதனுடைய உள்ளத்தில் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களின்மேல் ஒரு தனி மனப்பான்மை இருந்துவருகிறது. அது அவனுடைய தன்மையாகவும் குணமாகவும் நிர்ணயிக்கப்படுகிறது. அந்தரங்கச் செயலாற்றல்கள் ஒரு காரணமாக இருக்கின்றன. அவை தாளுக எதிர்வினையாற்றுவதில்லை (react). வெளிப்புறக் காரணக் கூறுகளின் விளைவாக நிலைபெறுகின்றன. நம்மைச் சூழ்ந்துள்ள எல்லாப் பொருள்களும் நம் கவனத்தைச் சும்மா ஈர்ப்பதில்லை. நம்முடைய விருப்பங்களுக்கு ஒத்தவையே நம் கவனத்துக்குள் வருகின்றன. நம்முடைய அக்கறையை எவை தூண்டிவிடுகின்றனவோ அவையே நம் அந்தரங்க வாழ்வுக்குப் பயன்தரக் கூடியவையாகும். வெளியுலகத்தில் உள்ளவைகளிலிருந்து தேர்ந்தெடுத்து அவைகளைக் கொண்டே நம் அந்தரங்க உலகத்தை நமக்குள் படைத்துக் கொள்கிருேம். அவ்வாறு பெறுவதும், நம்முடைய அந்தரங்க வினையாற்றல்களுக்கு ஒத்ததாகவும் இணைந்ததாகவும் இருக்கின்றன. ஓர் ஓவியன் வெளியுலகத்தில் எண்ணற்ற வண்ணங்களைக் காண்கிருன். இசைவாணன் ஓசைகளால் கவரப்படுகிருன். நம்முடைய கவனத்தின் தன்மையே நம்மை இப்பேர்ப்பட்டவனென்று வெளியாக்கிவிடுகிறது. நம்முடைய போக்கு அல்லது இயற்கையாற்ற நாட்டத்தைப்போல் (aptitude) நம்மையே நாம் வெளிக் காட்டிக் கொள்கிருேம். கவனம் அல்ல நம்மை உருவாக்குவது. ஒவ்வொருவனுடைய தனிக்குணம். அந்தரங்க அமைப்பு, ஒருவனுக்கும் மற்ருெருவனுக்கும் உள்ள வேற்றுமை இவைகளனைத்தும் ஒரே சூழ்நிலையில் வாழ்ந்தவர்களிடம் காண்பது தெளிவு. ஆனுல், ஒவ்வொருவரும் அதே சூழ்நிலையிலிருந்து அவரவருக்குத் தேவைப்படுவனவற்றையே எடுத்துக்கொண்டிருக்கின்ருர். ஒவ்வொருவனும் தன்னுடைய அனுபவங்களைத் துணைக்கொண்டு 'தான்', 'நான்' (ego) என்ற அகந்தையை அமைத்துக் கொள்கிருன். வெளியுலகத்துடன் உறவுகொண்ட இந்த 'நான்' என்பதனை ஒரு குழப்

[1] **Carey's translation, Dante, Purgatoria, canto XVIII.**

பத்தில் இருந்து அமைத்துக் கொள்வதில்லை. ஆனால் அவை தன்னுடைய நெருங்கிய தனிப்பட்ட பாங்கினால் சீரமைக்கப் படுகின்றன; இயக்குவிக்கப்படுகிறது.

உள்ளம் உருவாவதற்கு இயற்கையான சக்திகள் இயக்குவிக்கின்றன என்பதற்கு ஐயம் இருப்பின், சிறு குழந்தைகளிடம் நாம் கண்ட அனுபவங்கள் பொருத்தமான ஐயத் திருத்தமாகும். எந்த ஆசிரியராலும் எத்தகைய புறச் செயற்கைப் பொருளாலும் அத்தகைய அற்புதக் கவனத்தைக் குழந்தைகளிடமிருந்து பிறப்பித்திருக்க முடியாது. ஆதலால், அவை அந்தரங்கத்திலிருந்தே பிறந்திருக்க வேண்டும். மூன்று நான்கு வயதுக் குழந்தைகள் வெளியாக்கிய கருத்தூன்றல் (Concentration) போல் பெரிய மேதைகளிடமே கண்டிருக்கின்றனர். மிகச்சிறப்பான கருத்தூன்றலைப் பெற்றிருந்த [1] ஆர்க்கிமிடீஸ், [2] நியூடன், [3]விட்டோரியோ ஆல்ஃபெயிரி போன்ற மேதைகளின் இளமையை நமக்கு மறுபடியும் காட்டுவிப்பதுபோல் இருக்கிறது எமது குழந்தைகள் காட்டும் சிறந்த கருத்தூன்றல். இந்த மேதைகள் என்ன செய்தனர் அன்று. ஆர்க்கிமிடீஸ் என்பவர் தாம் வரைந்த வட்டங்களை உற்று நோக்கிக் கொண்டிருந்தார். 'சைரகூஸ் என்ற நகரை எதிரிப்படை கைப்பற்றிவிட்டது; முன்னேறுகிறது ; தப்பித்துக் கொள்ளுங்கள்' என்ற செய்தியைக் கேட்டும் செவிடர் போல் தமது கணித வரைபடங்களையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தார். இறுதியில் எதிரிப்படையினர் அவரைக் கொன்றனர். நியூடன் என்பவர் தம் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தவர் உணவருந்த மறந்து விட்டார்.[4] விட்டோரியா ஆல்ஃபெயிரி ஒரு கவி புனைந்து கொண்டிருந்தார். அதே சமயத்தில் அவருடைய சாளரத்துக்கு எதிரே ஒரு கல்யாணக் கூட்டம் கோலாகலமாகக் கூச்சல் போட்டுக் கொண்டு சென்றது. ஆனால், இவர் காதுகள் இவைகள் அனைத்துக்கும் செவிடாகவே இருந்தன.

ஓர் ஆசிரியர் எவ்வளவு திறமைசாலியாக இருந்த போதிலும், அல்லது அக்கறையூட்டக் கூடியவராய் இருந்த போதிலும், இத்தகைய மேதைகளின் சிறப்பியல் வாய்ந்த கவனத்தைத் தூண்டியிருக்க முடியாது. அல்லது அமைதியான பல அனுபவங்களின் தொகையாலும் அவ்வளவு சிறந்த உளம் சார்ந்த சக்திகளைத் தோற்றுவிக்க முடியாது.

[1]Archimedes. [2] Newton. [3] Vittoria Alfieri.

[4] கையில் கடியாரத்தைக் கொடுத்து முட்டையைக் கொதி தண்ணீரில் போட்டுச் சில நிமிடங்கள் கழிந்த பிறகு வெந்த முட்டையை எடுத்து உண்ணும்படி சொல்லியிருந்தாள் மனைவி. ஆனால், இவர் கடியாரத்தைத் தண்ணீருக்குள் போட்டுவிட்டு முட்டையைக் கையில் பிடித்துக் கொண்டு தம் ஆய்வில் ஈடுபடுவதைக் கண்ட மனைவி திகைத்துப் போனாள்—மொழிபெயர்ப்பாளர்.

தன்னுடைய கவனத்தின் கவாடங்களைத் திறந்து விடக்கூடிய ஒரு தெய்விகச் சக்தி குழந்தையின் உள்ளத்தில் இருக்குமேயானால், தனக்கு முன் தலைதூக்கி நிற்கும் பிரச்சினை என்பது 'சுதந்திரம்' என்ற பிரச்சினையே ஆகும். அவனுடைய மனத்தைப் படைப் பிக்கவல்ல ஆசிரியக்கலை சார்ந்த பிரச்சினை யன்று. உள்ளம் தேவைப்படுகின்ற பசியாற்றத்தக்க உணவைப் புறப் பொருள் களைச் சூழ்நிலையில் அமைத்துத் தருவதும் மிகவும் நிறைந்த அள வுக்கு குழந்தை தானாக வளர்வதற்குச் செய்துகொண்டிருக்கும் அதன் முயற்சிகளைக் கண்டு மதித்துஅதற்குச் சுதந்திரம் அளிப்பதும் ஆகிய இரண்டுமே தர்க்க ரீதியாகக் காணப்படும் அடிப்படை யாகும். இந்த அடிப்படையிலிருந்து ஒரு புது ஆசிரியக்கலை பிறக்க வேண்டும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வேதி நூலார் 'குள்ள மனிதனைப்' படைத்து விடுவோம் என்றார்களே அது போன்ற முயற்சி அன்று இனிமேல் ஆக வேண்டியது. 'டயாகெனெஸ் ராந்தலைக்' கையில் பிடித்துக் கொண்டு (the lantern of Diogenes) மனிதனைத் தேடுவதாகும். குழந்தையின் மூல முதலான (Primordial Psychical requirements) உளத் தேவைப்பாடுகள் என்ன என்று ஆய்வதற்கு ஒரு விஞ்ஞான ஆய்வு அமைக்கப்பட வேண்டும். அப்பொழுது சிக்கலான சீவாதார இயல் நிகழ்ச்சிகள் வளர்வதை நம் கண்முன் காண்போம். மூளை, இரப்பை, தசைகள் ஆகியவை நன்கு போஷிக்கப்பட்ட குழந்தையிடம் எங்ஙனம் ஒன்றாய் இணைந்து வளர்கின்றனவோ அம்மாதிரியே இங்கும் நுண்ணறிவு, இயற்றிநிலை, நற்குணம் (intelligence, will, character) ஆகியவை ஒன்றி இணைந்து வளம் பெறுகின்றன.

உளம் சார்ந்த முதல் பயிற்சிகளுடன் ஒன்றின் முதல் அறிதல் களும் (cognitions) குழந்தையின் மனத்தில் பதிந்துவிடும். அப்பொழுது அறிந்தது (Known) அவனுள் பதியத் தொடங்கும். தனக்கு ஏற்கெனவே இருக்கின்ற (instinctive interest) புலன் உணர்வு அக்கறைக்கும் முதல் வித்திட வழி வகுக்கும். இது நடை பெறும்பொழுது ஒருவகையான நிலை தானே அமைத்துக் கொள் கிறது. போதனா முறைக் கலைக்கு அடிப்படை என்று இந்நாள் ஆசிரிய இயலார் கருதிவருகின்ற 'கவனத்தின் இயக்கம்' (mechanism of attention) என்றதனுடன் இது ஒத்திருக்கிறது. அறிந்ததிலிருந்து அறியப்போவதும், சாமானியத்திலிருந்து சிக்க லானதும், எளியதிலிருந்து கடினமானதும் ஆகிய இவை ஒவ் வொன்றும் ஒரு குறிப்பிட்ட நிலையிலிருந்து மற்ற நிலைக்குத் திரும்பவும் நிகழச் செய்யப்படுகிறது. ஆனால் அது தனிச் சிறப் பியல்புகளுடனும் அவ்வாறு திருப்பி நிகழச் செய்யப்படுகிறது.

அறிந்ததிலிருந்து அறியாததற்குப் படிப்படியாக முன்னேறுதல் என்பது ஒரு பண்டத்திலிருந்து மற்றொரு பண்டத்திற்குப் போவதில்லை. ஆசிரியர் ஒரு கருத்தை ஒரு மையத்திலிருந்து விரிவாக்குவதில்லை. ஒரு குறிப்பிட்ட நோக்கமுமின்றிப் பண்டங்களை ஒரு சங்கிலிபோல் தொடுக்கிறார். குழந்தையின் மனம் ஆசிரியர் பால் இணைந்திருந்தாலும் இங்கு மங்கும் நோக்கமின்றித் தாவி அலைகிறது. ஆனால், அதற்கு மாறாக இங்கு என்ன காண்கிறோம்? அறிந்தது குழந்தையின் உள்ளத்தில் கருத்துகளின் பல்கூட்டு முறையாகத் (Camplex System of ideas) தானே அமைத்துக் கொள்கிறது. உண்மையாக இந்தக் கூட்டை உயிர்ப்புடன் தானே கட்டுவித்துக் கொள்கிறது. அதுவும் ஓர் உளஇயல் சார்ந்த போக்கின் தொடர்பில் அமைத்துக்கொள்கிறது. அந்தரங்க அமைப்பு (internal formation) அல்லது உள வளர்ச்சி என்பதைத் தம்முன் பிரதிபலிப்பதுபோல் இருக்கிறது இம் மாற்றமெல்லாம்.

அத்தகைய முன்னேற்றத்தைப் பெற வேண்டுமானால், குழந்தைக்கு ஒழுங்குடன் பல்கூட்டுப் புறப் பொருள்களை அவனுடைய இயற்கையான புலன் உணர்வுகளுக்குத் தக்கவாறு அறிமுகப் படுத்தி வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாகப் புலன் உணர் பொருள்களில் படிப்படியானவை இருக்கின்றன. அவை அவனுடைய இயற்கையான கவனத்தை ஈர்க்க வல்லவை. வண்ணம், வடிவம், ஒலி, தொடு உணர்ச்சி, பாரப்பண்பு முதலியன இதில் சிலவாகும். இவை ஒவ்வொன்றையும் வைத்துக்கொண்டு நெடு நேரம் பயிற்சி செய்யும் பொழுது அவனுடைய உளஇயல் சார்ந்த ஆளுமையை (Psychical Personality) ஒழுங்கு படுத்திக் கொள்கிறான். அதே சமயத்தில் பொருள்களைப் பற்றித் தெளிவானதும் ஒழுங்கானதுமான அறிவையும் பெற்று விடுகிறான்.

இக்காரணத்தால் இனிமேல் அவன் காணும் புறப்பொருள்கள் அனைத்தும் உருவங்களையும், வடிவங்களையும், வண்ணங்களையும், மென்மை, கடுமை, பாரம் போன்ற பண்புகளையும், பெற்றிருந்த போதிலும் இவை அனைத்தும் இவனுடைய மனத்திற்கு ஒன்றும் புதிதல்ல. இந்தப் பொருள்களை எதிர்பார்க்கும்படி ஏதோ ஒன்று அவனுடைய நனவிலிருந்து கொண்டு அவனை ஆயத்தமாக்கி வைத்து விடுகிறது. அப்பொருள்களை அக்கறையுடன் வரவேற்க அழைக்கிறது.

மூல முதலில் தோன்றின மனத்தின் உள் தூண்டுதல் (Primitive impulse) அவனுடைய கவனத்தைப் புறப் பொருள் களின்மேல் திருப்புகிறது. அத்துடன் அறிவையும் இணைத்து

விட்ட பொழுது உலகத்துடன் வேறு தொடர்புகளையும் பெற்று விடுகிறுன். வேறு வகையான அக்கறையையும் பெறுகிறுன். மூல முதல் புலன் உணர்வு வகையுடன் இணைக்கப்பட்டிருந்தவைகள் போன்றதல்ல இவை. இவை நுணுகிக் காணக்கூடிய ஓர் அக்கறை யாகின்றன. இவை நுண்ணறிவை வென்றதின் அடிப்படையில் தோன்றியவையாகும்.

இந்தப் புதுமை வெற்றிகளெல்லாம் அடிப்படையில் உளஇயல் சார்ந்த தேவைகளுக்கு மிகமிக ஆதாரமானவை என்பது உண்மையே. ஆனுல், இப்பொழுது நுண்ணறிவுப் பகுதியும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. உள் தூண்டுதலை தெளிஉணர் நிலையில் தானே வகுத்துக் கொண்ட வேட்பாக அடியோடு மாற்றிக் கொள்கிறது (Voluntary quest).

பழைய ஆசிரியக் கலையின் எண்ணப்படி அறியாததைப்பற்றி அறிவதற்குக் குழந்தையின் கவனத்தைத் திருப்ப வேண்டுமாளுல் முதலில் அறிந்ததின்மேல் கவனம் இணைக்கப்பட வேண்டும் என்றிருந்தது. அப்பொழுதுதான் அவனுடைய அக்கறையை இனி அறிவிக்கப்படப் போகின்ற புது அறிவுக்கு வெல்ல முடியும். எமது பரிசோதனை கண்ட பிறகு இவன் பற்றுவது பல்கூட்டு இயல் நிகழ்ச்சிகளில் ஏதோ ஒரு தனிப்பட்டதையே ஆகும்.

இனிமேல் அறியப்போவதின் மேல் திருப்பக்கூடிய அக்கறை யாக இருக்குமாறு அறிந்தது இருப்பின், அது இயற்கையின் போக்கை ஒட்டிப் பெறப்பட்டிருக்க வேண்டுமென்பது அவசிய மாகிறது. அப்பொழுது முன்கூட்டிப் பெற்ற அறிவு இனிக் காணப்போகும் வரவரச் சிக்கல் வாய்ந்ததும் மாபெரும் முக்கியத் துவம் பெற்றவைகள் போன்றதின் மேலும் அக்கறை பிறக்கும். இவ்வாறு வளர்க்கப்பட்ட பண்பாடு இத்தகைய ஆக்குவிக்கும் இயல் நிகழ்ச்சிகள் அளவு கடந்து தொடர்ந்து நடைபெற வாய்ப் பளிக்கிறது.

மேலும், இந்தப் பண்பாடே மனத்துக்குள் ஓர் ஒழுங்கை அமைத்து விடுகிறது. ஆசிரியர் அவருடைய தெளிவான எளிய பாடத்தைக் கற்பிக்கும் பொழுது, 'இது நீளம், இது குட்டை, இது சிவப்பு, இது மஞ்சள் என்று இவ்வாறு இன்னும் பிறவற்றைக் கூறுகிருர். ஒரு வார்த்தையைக் கொண்டு உணர்ச்சிகளின் ஒழுங்கைத் தெளிவாகப் பதிய வைத்து விடுகிருர். ஒவ்வொன்றை யும் வகுத்து வரிசைப் படுத்தி விடுகிருர். ஒவ்வொரு மனப்பதிவும் மற்றதிலிருந்து தெளிவான வகையில் வேறுபாட்டைப் பெற்றிருக் கிறது. அப் பதிவு அதற்கென்று தீர்மானிக்கப்பட்ட ஒரு தனி இடத்தை மனத்தில் பெற்றுவிடுகிறது. வேண்டும்பொழுது ஒரு

வார்த்தையால் அந்தப் பதிவைத் திரும்பவும் மனத்துக்குள் வர வழைத்துக் கொள்ளலாம். ஆதலால், இனிமேல் புதிதாகப் பெற்ற மனப்பதிவுகள் தாறுமாறாகவோ கலந்தோ எறியப்பட மாட்டா. அவை ஒவ்வொன்றும் அதற்கு உரிய இடத்தில் பதிய வைக்கப்படும். அதே சமயத்தில் நன்றாக அடுக்கிவைக்கப்பட்ட ஒரு நூல் நிலையப் புத்தகங்கள்போல் இவை முன் பெற்ற பதிவு களுடன் பக்கம் பக்கமாகத் தக்க இடங்களில் முறையாகப் பதிக்கப் பெறும்.

இவ்வாறு மனமானது இனிமேல் இன்னும் அறிவைப் பெற வேண்டியதைப் பெறத் தகுந்த தூண்டும் சக்தியைத் தன்னுள் பெற்றிருப்பதுடன் ஒரு நிலைபெற்ற ஒழுங்கையும் அமைத்துக் கொண்டிருக்கிறது. புதுப் புறப் பொருள்களால் எண்ணற்ற வகையில் தொடர்ந்து சிறப்படையச் செய்யும் பொழுதும் இது நிலை பிறழாதிருந்து வரும். இது வளர்ந்து வலிமை பெறப்பெற அது தன்னுடைய நடுநிலை அமைதியையும் (equilibrium) தளர விடாமல் நிலைபெறச் செய்கிறது. குழந்தைகள் பண்டங்களை வைத்துக்கொண்டு தொடர்ந்து [1]ஒப்பீடு செய்தலும், மதிப்பிடு தலும், தேர்வு செய்தலும் உட்படப் பெற்றவைகளுடன் தர்க்க ரீதியில் இன்னும் ஒன்றோடொன்று நெருங்கிய உறவு கொள்ளச் செய்கிறது. அவ்வாறு பெறப்படும் முடிவுகள் ஒரே வினைத் திறமும் காரணத் திட்ப நுட்பமும், சிறப்பான உணர்வாற்றலின் வேகமும் ஆகும். ஒழுங்கும் வினையாற்றலும் செறிந்த இடத்தில் 'குறைந்த முயற்சி விதி' (law of minimum effort) என்பது உண்மை யாகக் கையாளப் படுகிறது.

உடலில் வளரும் கரு உதர விதானத்திற்கும் நுரை ஈரல் களுக்கும் இடையில் உள்ள இடத்தில் ஒரு வளைவை அமைத்துக் கொள்கிறது. இவ் வளைவுக்குக் காரணம் நுரைஈரலின் விரிந்த அசைவே ஆகும். அதேபோல் தானாகத் தோன்றும் பயிற்சி களால் ஆளுமைச் சுதந்திரத்துடன் தன்னைத் தானே ஒழுங்கு படுத்திக் கொள்கிறது. அதனால் அந்தரங்க ஒன்றுதல் (internal co-ordination) உடல் தழுவல் போல் நிலைபெறப்படுகிறது.

ஆசிரியை இந்த இயல் நிகழ்ச்சிகளை வழிதிருப்புகிறாள். அவ் வாறு செய்யும்பொழுது குழந்தையின் கவனத்தைத் தன் பக்கம் திரும்பச் சொல்லாமல் எச்சரிக்கையாகத் தன்னைக் காத்துக் கொள்கிறாள். ஏனென்றால் வருங்கால முழுமையும், அவனுடன் கூர்ந்த ஒருமுனைப்பைப் பொறுத்திருக்கிறது. இயற்கையாகத் தோன்றும் இயல் நிகழ்ச்சிகளில் தான் குறுக்கிடுவதைத் தடுத்தும்

[1] Comparison, judgement, choice.

குழந்தையைப் புரிந்து கொள்வதிலுமே ஆசிரியரின் கலை இருக்கிறது.

அன்று பிறந்து குழந்தையின் உணவு பற்றியும் முதல் முதலில் தோன்றின ஒன்றி இணைந்த ஆன்மாவின் வினையாற்றல்கள் பற்றியும் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இவை போன்றது வாழ்க்கையின் ஒவ்வொரு பருவத்திலும் திரும்பத் திரும்பத் தோன்றும். ஒவ்வொன்றும் தேவைப்பட்ட திருத்தங்களுடன் தோன்றும். இந்தத் திருத்தங்களும் அதிகரிக்கின்ற இயல் நிகழ்ச்சிகளின் பல கூட்டமைப்பைப் பொறுத்திருக்கின்றன.

உடல் தேவைக்குத் தக்க உணவைப் பற்றி இன்னும் கொஞ்சம் ஆய்ந்து பார்ப்போம். பல் முளைத்திருக்கின்ற குழந்தையின் இரைப்பை நீரை உண்டு பண்ணும் சக்தியையும் பெற்றிருக்கிறது. ஆதலால் படிப்படியாக முன்னதை விட இப்பொழுது குழந்தைக்குக் கலப்பு உணவு தேவைப்படுகிறது. அவன் வயது வந்த மனிதனாகும் பொழுது தற்கால சமையற் கலையால் சமைக்கப்படும் பலவகை அறுசுவை உண்டிகளையும் விரும்புகிறான். உடல் நலத்துடன் வாழ வேண்டுமானால் தன்னுடைய உறுப்புகளுக்கு நெருங்கித் தேவைப் படுவனவற்றை அவன் உட்கொள்ள வேண்டும். அவன் அதிகச் சத்துவாய்ந்த உணவுகளையோ, அல்லது பழக்கத்தில் இல்லாததையோ, பொருந்தாததையோ, நச்சுப் பொருள்களையோ உட்கொண்டானானால் அதன்பலன் உடல் மெலிதலும் தானே தனக்குள் நச்சை உட் கொள்ளுதலும் நோயை வருவித்துக்கொள்வதும் ஆகும். குழந்தை பால்குடிக்கும் பருவத்திலும் அதனுடைய முதல் சில ஆண்டுகளிலும் உட்கொள்ளும் உணவு பற்றி ஆய்வுகள் நடத்தினதின் பயனாக உணவூட்டம் சார்ந்த உடல் நலம் (alimentary hygiene) பிறந்தது. இது குழந்தைக்கு மட்டுமன்று வயது வந்தவனுக்கும் பயன் ஆயிற்று. குழந்தைபற்றிய உடல் நல அறிவு பிறக்காத காலத்தில் இந்த ஆராய்வுகள் எல்லோரும் ஒரே மாதிரி பாதிக்கப்படுகிற அபாயங்களை எடுத்துக்காட்டின.

உள இயல் வாழ்விலும் இதேபோல் ஒன்றுள்ளது. குழந்தையை விட மனிதன் ஒப்புமை இல்லாத அளவுக்குச் சிக்கலான வாழ்வைப் பெற்றிருக்கிறான். ஆனால், அவனுக்கும் கூட அவனுடைய இயற்கைக்குத் தேவைப்படுவதற்கும் அவனுடைய உள்ளம் போஷிக்கப்படும் பாங்குக்கும் எப்பொழுதும் ஒரு பொருத்தம் இருக்கவேண்டும். அந்தரங்க வாழ்வின் சட்டமானது மனிதனுடைய உடல் நலத்தை எப்பொழுதும் வளர்விக்கும்.

இப்பொழுது கவனத்தைப்பற்றி ஆராயப் புகுவோம். இயற்கைக்கும் உட்தூண்டுதலுக்கும் இடையே ஒரு பொருத்தம் இருக்கிறதென்பது பழைய நம்பிக்கை. அதாவது வாழ்க்கையின் அடிப்படையே நிலைபெற வேண்டும். அவை எவ்வளவு மாறுதலைப் பெற்றாலும் பெரிய குழந்தைகளைப் பொறுத்த அளவில் அவை அனுசரிக்கப்பட வேண்டும். அவைதான் கல்விக்கு அடிப்படையாகவும் இருக்க வேண்டும்.

சில 'நிபுணர்கள்' சொல்கின்ற எதிர்ப்புக்கு நான் ஆயத்தமாக இருக்கிறேன். குழந்தைகள் எந்தப் பொருள் பற்றியானாலும் கவனம் செலுத்தத் தெரிந்துகொள்ள வேண்டும். அவர்களுக்குக் கசப்பாய் இருப்பதைக் கூடக் கவனிக்கத் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் நடைமுறை வாழ்க்கையில் இத்தகைய முயற்சிகள், வேண்டியிருக்கத்தான் செய்கிறது.

இந்த மறுப்புத் தெரிவிப்பதற்கு அடிப்படைக் காரணம் ஒரு சார்பெண்ணம் ஆகும். நல்ல வேளையாக அது நடைமுறைப் பழக்கத்திலிருந்து நீக்கப்பட்டுவிட்டிருக்கிறது. எதுபோல் என்றால் முன்பெல்லாம் நல்ல குடும்பத் தந்தைமார் 'குழந்தைகள் எதையும் சாப்பிட்டுப் பழக வேண்டும்' என்று சொல்லும் பழக்கம் இருந்து வந்தது. அதேபோல் அறநெறிப் பழக்கமும் அதனுடைய உரிமையுள்ள இடத்துக்குப் புறம்பாக வைக்கப்படுகிறது. இவ்வாறு செய்வது ஓர் ஆபத்தான குழப்பம் ஆகும். நல்ல வேளையாக, இப்பொழுதெல்லாம் இத்தகைய கருத்துகள் அவ்வளவாக இல்லை. இக் கருத்துகள் பரவியிருந்த காலத்தில் மதிய உணவில் குழந்தைகள் விரும்பாத ஒரு உணவுப் பொருளை மறுத்தார்களானால் முதிர்ந்தோர் அவர்களை நாள் முழுதும் பட்டினி கிடக்க வைப்பார்கள். அவர் மறுத்த உணவுப் பகுதியைத் தவிர வேறு எதையும் தொட விட மாட்டார்கள். உண்ண விரும்பாதது வரவரக் குளிர்ந்து போய் இன்னும் அருவருப்பைத் தரக்கூடியதாக ஆகிவிடும். இறுதியில் குழந்தையின் இயற்றிநிலையின் உறுதியிழந்து அவனுடைய முரண்பட்ட உளப்போக்கும் (caprice) முறிந்து போய்க் கிண்ணத்திலுள்ள (குளிர்ந்துபோன உணவைக் கடும்பசியின் தூண்டுதலால் விழுங்கி வைக்கிறான். 'என்னுடைய மகன் வாழ்க்கையில் வெவ்வேறு சூழ்நிலையில் இருக்கவேண்டிய நிலை ஏற்பட்டால் அவனுக்கு எவ்வகை உணவு கிடைத்தாலும் அவன் சாப்பிடுவான். அவன் பேராசை உள்ளவனாகவோ முரண்டு பிடிப்பவனாகவோ இருக்க மாட்டான்' என்று தர்க்கம் செய்கிறார் தந்தை. அக் காலத்தில் இனிப்புகள் குழந்தைக்கு ஆகாதென்று மறுக்கப்பட்டன. (குழந்தைப் பருவத்தில் அதிகம் சர்க்கரை தேவை. ஏனென்றால் தசைகள் தாம் வளரும் பருவத்தில் நிறையாகச்

சர்க்கரை தேவைப்படுகிறது). பேராசையை எவ்வாறு வெல்வ தென்று கற்பிப்பதற்கும் குறும்பு செய்யும் குழந்தைகளைத் திருத்து வதற்கும் மிகவும் எளிய முறை என்னவென்றால், இரவில் உணவு இன்றிக் குழந்தையைப் பட்டினியாகத் தூங்கவிடுவது.

அதேபோல் வாழ்க்கையில் முக்கியமான விஷயங்களில் குழந் தைகளின் கவனம் செலுத்தப்படுகிறது. குழந்தைகள் இவை களைக் கட்டாயம் கவனித்துத் தீர வேண்டும் என்பவர்கள் குழந் தைகளுக்கு விருப்பம் இல்லாதவைகளின்மேல் கவனம் செலுத்தச் சொல்லி கட்டாயப் படுத்துகின்றனர். ஆனால், உள இயல் சார்ந்த ஊட்டத்தில் வாய்க்கு உருசி அற்றதும் குளிர்ந்து போனதுமான உணவின்மேல் பசியின் புறத்தூண்டுதல் செலுத்தப்படுவதில்லை. [பட்டினி கிடந்த குழந்தை இறுதியில் குளிர்ந்த உணவை எப் படியோ உண்ணவேண்டி வந்ததுபோல் இங்கு நடைபெறுவ தில்லை.] ஆதலால் பரிமாறப்பட்ட உளஇயல் சார்ந்த உணவு சீரணமாவதற்கு மிகவும் கடினமாக இருக்கும் காரணத்தால் அவனை மெலிவாக்குவதுடன் நஞ்சையும் அவனுள் ஊட்டி விடுகிறது.

வருங்காலத்தில் ஏற்படக் கூடிய பல வாழ்க்கை மாறுதல் களுக்குத் தேவைப்படும் வலிவுடைய உளச் சக்தியை ஆயத்தம் செய்வது இவ்வாறன்று. குளிர்ந்த உணவை உண்டும், பட்டினி யாகவும் உறங்கப் போன குழந்தையின் உடல் மோசமாக வளர்ந் தது. ஆனால், இதே குழந்தை பெரியவனாகும் பொழுது தன்னுள் பல மனநிறைவு பெறாத போக்குகளைத் தன்னுள் அடங்கிக் கிடப் பதை உணர்கிறான். தன் வாழ்வில் இவை தன் சுதந்திரத்திற்கு இன்பம் ஊட்டும் வாய்ப்பென்று கருத்தில்கொண்டு அளவு கடந்து உண்கிறான்; பருகுகிறான். தற்காலம் நன்முறையில் வளர்க்கப்பட்ட பையனுடன் மேற்கூறிய பையனை ஒப்பிட்டுப் பார்ப்போம். பொருத்தமான உணவை உட்கொண்டவன் வலிவு கொண்ட உடலைப் பெற்றான். மீதூண் விரும்பாதவனாகிறான். உடல்நல வாழ்வுக்கே உண்கிறான். மது உண்பதை நீக்குகிறான். அளவு கடந்து உண்பதையும் தீவினையூட்டும் உணவினைப் புசிப்ப தினையும் தவிர்க்கிறான். தற்கால மனிதன் பல தொத்து நோய் களிலிருந்து பல வழிகளில் தன்னைக் காத்துக் கொள்கிறான். முயற்சி செய்வதற்கு ஆயத்தமாயிருக்கிறான். எவ்விதத்திலும் கட்டாயப்படுத்தப் படாமலும் போட்டிப் பந்தயங்களின் கடுமை யைச் சமாளித்துக் கொள்கிறான். துருவங்களைக் கண்டு பிடிப்பதும், உயர்ந்த மலைச் சிகரங்களைத் தொடுவதும் போன்ற பெரிய முயற்சி களைச் சாதிக்கிறான்.

அதேபோல்அறநெறிப் போராட்டமாகிய கடுங்குளிர் பாலை களை அஞ்சாமல் எதிர்க்கக் கூடியவன் தெய்விகச் சிகரங்களை அடை வான். அத்தகையவனுடைய இயற்றிநிலை உறுதியாக இருக்கும். அவனுடைய உளச் சக்தி நல்ல சமநிலை பெற்றதாக இருக்கும். அவனுடைய தீர்மானங்களும் உடனடியாகவும் நிலை தளராததாக வும் இருக்கும்.

எவ்வளவுக் கெவ்வளவு ஒருவனுடைய அந்தரங்க வாழ்வு நேர்மையாக வளர்ந்து இயற்கையின் முன் யோசனைக்கு இணங்கத் தன்னை ஒழுங்குபடுத்திக் கொள்கிறானோ, எவன் ஒருவன் தன்னை ஒரு தனியாளாக ஆக்கிக் கொள்கிறானோ, அவ்வளவுக் கவ்வளவு இன்னும் சிறந்த வலிவுள்ள மனோ திடமும் நிலை பிறழாத மனமும் அவனுக்கு அளிக்கப்படும். ஒரு போராட்டத்திற்கு ஆயத்தமாக வேண்டும் என்றால் பிறப்பிலிருந்தே போராடியிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால் வலிவுடையவனாக இருக்க வேண்டும் என்பது அவசியமே. வலிவுடையவன் ஆயத்தமாக இருக்கிறான். எந்த வீரனும் அந்த வீரச்செயலைச் செய்வதற்குமுன் அவன் வீரனாக இருக்கவில்லை. நமக்காக வாழ்க்கை வைத்திருக்கின்ற சோதனைகள் எதிர்பாராதவைகள்; திடீரென்றவை. அவைகளைச் சமாளிக்க எவரும் நம்மை நேரடியாக ஆயத்தமாக்க முடியாது. விசையாற்றலுடைய ஆன்மாவினால்தான் எதற்கும் ஆயத்தமாக இருக்க முடியும்.

உயிர் உள்ள ஒன்று வளரும் தருவாயில் இருந்து வரும் பொழுது அந்தத் தனிப் பருவத்துக்குத் தேவைப்படும் வாய்ப்பினை அளித்தல் மிகவும் முக்கியமானதாகும். அப்பொழுதுதான் அத னுடைய நேர்மையான வளர்ச்சிக்கு நிச்சயமாக உத்தாரம் அளிக்க முடியும். கருவுக்குக் குருதி ஊட்டப்பட வேண்டும். அன்று பிறந்த குழந்தைக்குப் பால் ஊட்டப்பட வேண்டும். கருப் பையில் வளரும் சிசுவுக்குத் தேவைப்படும் புரதப் பொருளும், பிராண வாயுவும் நிறைந்த குருதியில் குறைவேற்பட்டால், அல்லது நச்சுப் பொருள்கள் அச்சிசுவின் திசுக்களில் திணிக்கப்பட் டால், வளரும் குழந்தை நேர்மையான வளர்ச்சியைப் பெறாது. இந்தச் சத்திழந்த தொடக்கத்தில் வளர நேர்ந்த குழந்தைக்குப் பிறகு எவ்வளவு பாதுகாப்பு அளித்தாலும் அது வலிமை பெறவே பெறாது. கைக்குழந்தைக்குப் போதுமான பால் கிடைக்காவிட் டால் வாழ்க்கையின் ஆரம்ப கட்டத்தில் ஏற்பட்ட உண்டிக்குறைவு வாழ்நாள் முழுவதும் நிரந்தரமான ஒரு தாழ் நிலைக்குள் ஆழ்த்தி விடுகிறது. பாலூட்டும் போது அவன் நடக்க ஆயத்தம் ஆக்கிக் கொள்கிறான். எங்ஙனம்?...படுத்து மணிக்கணக்காக அமைதியாக உறங்குவதில் நடக்க ஆயத்தமாக்கிக் கொள்கிறான். பால் குடிப்ப

தால்தான் குழந்தைக்குப் பல் முளைக்கத் தொடங்குகிறது. அதே போல் பறவைக் குஞ்சுகளும் தம் கூட்டில் பறந்து பறக்க ஆயத்த மாக்கிக் கொள்வதில்லை. உணவு தயாரிக்கப்பட்ட வெதுவெதுப் பான சிறு முட்டைக்குள் அசைவற்றுக் கிடக்கும் போது ஆயத்த மாகி வருகிறது. வாழ்க்கைக்கு ஆயத்தமாவதெல்லாம் மறைமுக மாகவே.

பறவைகளின் கம்பீரமான பறத்தலும், கொடிய விலங்கு களின் கொடுமையும் அல்லிசைப் புள் (Nightingale) ளின் இனிய குரலும், வண்ணத்துப் பூச்சியின் விவித வண்ண அழகும், ஆகிய இயற்கையின் இயல் நிகழ்ச்சிகளின் பீடிகை கூடு அல்லது குகையின் இரகசியமான இடத்திலோ அல்லது அசைவற்ற புழுக்கூட்டின் நெருங்கிய உறவிலோ ஆயத்தமாகிறது. வளர்ந்து கொண்டிருக் கும் உயிரினத்துக்கு எல்லாம்வல்ல இயற்கை வேண்டுவது ஒன்றே. அது அமைதி. மற்றவையெல்லாம் இயற்கை அன்னையே அளிக் கிறுள்.

அங்ஙனமாயின் குழந்தையின் சக்தியும் ஒரு வெது வெதுப் பான கூட்டினைத் தேவைப்படுகிறது. அங்கு அதனுடைய உண்டி நிச்சயமாகக் கிடைக்கும். அவ்வாறு அளிக்கப்பட்ட பிறகு அதன் வளர்ச்சியின் அற்புத வெளிப்பாடுகளுக்காக நாம் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கவேண்டும்.

கல்வியின் குறிக்கோள் யாது? மிகக் குறைந்த அளவு சிரமத்துட னும், கூடுமான அளவு எல்லா நிறைவுகளுடனும் மனிதனுக்குள் மறைந்து கிடக்கும் சக்திகளை வளர விடுவதாகும். இந்தப் பலனைப் பெற வேண்டுமானல், வளர்ச்சிப் பருவத்தின் பாங்குக்குப் பொருத்த மான புறப்பொருள்களைக் குழந்தைக்கு அளிப்பது அவசியம் ஆகிறது.

# 7. இயற்றிநிலை

குழந்தை தன் முன் தோற்ற மளிக்கும் பல பண்டங்களில் தனக்குப் பிடித்த ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் பொழுதும், ஒன்றைப் பக்கத்துத் தட்டிலிருந்து எடுத்து மறுபடியும் அதன் முன் இருப் பிடம் சேர்க்கும் பொழுதும், அல்லது தன்னுடைய தோழனுக்குக் கொடுக்கச் சம்மதிக்கும் பொழுதும், துணைக்கருவிகளில் தான் விரும் பிப் பணியாற்ற நினைத்த ஒன்றை அதைத் தற்போது கையில் வைத் துக் கொண்டிருப்பவன் திரும்ப இடம் வைக்கும்வரை காத்துக் கொண்டிருக்கும் பொழுதும், ஆழ்ந்த அக்கறையுடன் ஒரே பயிற்சியை நெடுநேரம் செய்துகொண்டிருக்கும் பொழுதும், இந்தத் துணைக்கருவிகள் காட்டிக்கொடுக்கும் பிழைகளைத் தானே திருத்திக் கொள்ளும் பொழுதும், 'மௌனபாடத்தின்'போது அவனுடைய எல்லாத் தூண்டுதல்களையும், இயக்கங்களையும் அடக்கிவைத்திருந்து தன்னுடைய பெயர் கூப்பிடப்படும் பொழுது எழுந்து, அடி எடுத்துவைக்கும்போது ஓர் ஓசையும் கேட்காதபடி யும், தட்டுமுட்டுச் சாமான்களின்மேல் மோதிக்கொள்ளாமலும், அம் மோதலினால் ஓசை கேட்காமல் இருக்கச் செய்யவும் காத்துக் கொள்ளும் பொழுதும் அவன் தன் இயற்றிநிலையின் பல வினை களைச் செய்து வருகிறான். இயற்றிநிலைப் பயிற்சிகள் அவனிடம் இடைவிடாமல் இருந்துவருகிறதென்றே நாம் கூறிவிடலாம். இன்னும் சொல்லப் போனால் அவனுடைய போக்குகளில் துணைக் கூறாக உண்மையாகத் தொடர்வது அவனுடைய இயற்றி நிலையே யாகும். இந்த இயற்றிநிலையானது அந்தரங்க அடிப்படையான மெய்ம்மை (fact) ஆகிய நீடித்த கவனத்தால் கட்டமைக்கப் படுகிறது.

இயற்றிநிலையின் சில துணைக்காரணங்களையும் சற்று ஆராய் வோம்.

இயற்றிநிலையின் முழுவெளித் தோற்றம் இயக்கத்தில் (Movement) அடங்கி இருக்கிறது. நடக்கும் போதும், தொழில் புரியும் போதும், எழுதும்போதும், கண்களைத் திறந்து பார்க்கும் போதும், ஒரு காட்சியை வேண்டாமென்று பார்க்க மறுக்கும் போதும், இவை போன்ற வேறு எந்தத் தொழிலைச் செய்யும் போதும், இவை அனைத்தும் இயக்கத்தால் நடைபெறுகிறது. இயக்கத்தைத் தடுத்து அடக்குவதற்கும் இயற்றிநிலை பயன்படுத் தப்படுகிறது. சினத்தின் ஒழுங்கற்ற இயக்கங்களைக் கட்டுப்படுத்து வதும், வேறு ஒருவன் வைத்துக்கொண்டிருக்கும், நமக்கு விருப்ப மான பண்டத்தைத் தட்டிப் பறிக்காது தன்னை அடக்கிக் கொள் வதும் தன் விருப்பார்ந்த செயல்களாம். ஆதலால், இயற்றிநிலை என்பது வெறும் இயக்கத்தை நாடும் தூண்டுதல் அன்று. ஆனால், இயக்கத்தை நுண்ணறிவுடன் நடத்திவைக்கும் ஒன்றுகும்,

முழுவதும் நிறைவு பெருத செயல் இல்லாமல் இயற்றி நிலையின் எந்த வெளிப்படுத்திக் காட்டுதலும் நடைபெருது. எவன் ஒரு நல்ல காரியம் செய்யலாம் என்று எண்ணிச் செய்யாமல் விட்டு விடுகிருனே, எவன் தான் செய்த குற்றத்திற்கு மன்னிப்புக் கேட்கலாம் என்று நினைத்து அதற்கு வேண்டிய முயற்சி ஏதும் செய்யாதுவிட்டு விடுகிருனே, எவன் ஒருவரைப்போய்ப் பார்த்து விட்டு வரலாம் அல்லது ஒரு மடல் எழுதலாம் என்று நினைத்து அவைகளைச் செய்யாது விட்டு விடுகிருனே, அவன் இயற்றி நிலையின் எவ்விதப் பயிற்சியையும் நிறைவேற்றுவதில்லை. நினைத்தும் விரும்பியும் மட்டும் இருந்தால் போதாது. செயலே கணக்கில் வைக்கப்படும்.[1] நரகத்துக்குப் போகும் பாதை நல்ல உட்கருத்துகளால் பாவப்பட்டிருக்கிறது.

விருப்பத் துணிவாற்றலின் (volition) வாழ்வே செயலின் வாழ்வாகும். நம்முடைய எல்லாச் செயல்களும் [2] உள் தூண்டுதல் [3] தடையுணர்ச்சி ஆகிய இரண்டு சக்திகளின் முடிவையே குறிக் கின்றன. பல முறை செய்து செய்து இந்த முடிவு அநேகமாகப் பழக்கமாகவும் நனவில்லாமல் நடைபெறுவதாகவும் ஆகிவிட லாம். சாதாரணமாக நற்பழக்கத்தில் வளர்ந்த மரியாதையுடைய மனிதன் என்று கருதப்படுபவருடைய பழக்கப்பட்ட நடையை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். நம்முடைய தூண்டுதல் ஒருவருடைய வீட்டுக்குப் போய் அவருடைய நலம் விசாரித்து வரலாம் என்று இருக்கலாம். நம்முடைய நண்பரை நாம் தொந்தரவு செய்யக்கூடும் என்று தெரிந்ததும் நாம் போக வேண்டும் என்ற உள் தூண்டுதலை அடக்கிக் கொண்டு போகாமல்

[1] The way to Hell is paved with good intentions. [2] impulse, [3] inhibitiors.

இருந்துவிடுகிறோம். நாம் வரவேற்பு அறையில் அமர்ந்திருக்கும் போது மதிப்புக்கு உரிய ஒருவர் உள்ளே நுழையலாம். நாம் உடனே எழுந்து நிற்கிறோம். இந்த அம்மையாரைப்பற்றி நாம் அவ்வளவாக ஈர்க்கப்படவும் இல்லை. இருந்த போதிலும் நாம் வணங்கி அவர் கையினை முத்தமிடுகிறோம்.[1] பக்கத்திலிருப்பவர் புசித்துக் கொண்டிருக்கும் தித்திப்பு நமக்கு மிகவும் பிடித்ததாக இருக்கிறது. ஆனால், இந்த உண்மையை வெளிப்படுத்தவிடாமல் நம்மை காத்துக் கொள்கிறோம். நம்முடைய உடலின் இயக்கங்கள் அனைத்தும் நம்முடைய தூண்டுதல்களாலோ களைப்பினாலோ ஆணைகளுக்கு உட்பட்டவை அல்ல. அவை அனைத்தும் நாம் எது தகுதி வாய்ந்தது எனக் கருதுகிறோமோ அவைகளின் உண்மையான வெளிக் காட்டலே ஆகும். சமுதாய வாழ்விலே உள் தூண்டுதல் இல்லாமல் நம்மால் ஒன்றும் செய்ய இயலாது. அதே சமயத்தில் தடையுணர்ச்சி இல்லாவிடில் நம்மால் திருந்திக் கொள்ளவோ திருப்பவோ, நம்முடைய உள் தூண்டுதல்களைப் பயன்படுத்திக் கொள்ளவோ இயலாது.

இரண்டு எதிர்எதிர் சக்திகளுக்கு இடையில் ஏற்படும் எதிரிடைச் சமநிலையானது பல தொடர்ந்த பயிற்சிகளின் வினைப் பயனாகும். இப் பயிற்சிகள் நமக்குள் பதிந்து கிடக்கும் பண்டைப் பழங்கங்களாகும். இவைகளைச் செய்வதற்காக நாம் எந்த வித முயற்சியும் செய்யவேண்டு மென்று தோன்றுவதில்லை. அவைகளை நிலைபெறச் செய்வதற்கு எதிர்வாதமும் அறிவும் துணைவேண்டுவதில்லை. இந்தச் செயல்கள் அனைத்தும் வெகுவாக மறிவினைகளாகி விடுகின்றன. எனினும் நாம் எடுத்துக்கூறின வினைகள் எவ்விதத்திலும் மறிவினைகளாகா. இவைகளை உண்டாக்குவது இயற்கையன்று. ஆனால், செயல் பழக்கங்களே. சில விதிகளை இப்படித்தான் அனுசரிக்க வேண்டும் என்றும் அவைகளை அவசர அவசரமாகக் கற்பிக்கப்பட ஒருவர் என்ன செய்வார் என்பதும் நமக்கு நன்கு தெரியும். அனேகதரம் அவர் பிழை செய்வார்; செய்வதற்கு மாறாக வேறொன்றைச் செய்து விடுவார். ஏனென்றால் குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் தேவைப்படுகின்றதும் தம் விருப்பம் போல் இயங்கும் ஒன்றிய செயல்களும் செய்ய வேண்டியிருக்கிறது. அதுவும் தன்னுடைய நனவின் ஆணைக்குட்பட்டு அதே நெருக்கடியான சந்தர்ப்பத்தில் இதைத்தான் செய்ய வேண்டுமென்ற விதி இருக்கிறது. நினைவுபடுத்தி இச் செயலைச் செய்ய முடியுமா, நல்ல மரியாதையைப் பழகி வந்தவருடன் இவர் போட்டிபோட முடியுமா? இயற்றிநிலை தன்னுடைய நீடித்த முயற்சிகளை நினைவின் எல்லைக்கு அப்பால் சேகரித்து வைத்துவிடுகிறது. அல்லது

[1] சில அயல் நாட்டு மரியாதை காட்டும் பழக்கம்.

அதனுடைய கடைசி எல்லை வரம்பின் மேலாவது பதிய வைத்து விடுகிறது எனலாம். நனவை இதில் சிக்காதபடி விட்டு விடுகிறது. அப்பொழுதுதான் நினைவானது புது முயற்சிகளைச் செய்து புதுத் திறமைகளைச் சேர்த்துக் கொள்ள முடியும். நனவின் அறிகுறியைக் காணும் பழக்கங்களில் இயற்றிநிலையின் உருவத்தை நாம் கருத முன் வருவதில்லை. வெளிப்படையாக அனுசரிக்கப்பட வேண்டிய நற்பழக்க விதிகளுக்கு நனவு இசைவுதராத நிலையில் இருக்கிறது. இவ்வாறு நடிக்கின்ற கற்றறிந்த ஒருவனை முழு மனிதன் எனலாம்; நல்ல மனநலம் கொண்டவன் என்றும் கருதலாம்.

பல தழுவல்களை ஒழுங்குபடுத்தி ஆளுமை உருவாக்கப்படுகிறது. நோய் ஒன்றினல்தான் இந்த ஆளுமையைச் சின்னபின்னப் படுத்த முடியும். நல்ல குலத்தில் பிறந்தவனைப் பண்பிலா முறையில் நடக்க உந்த முடியும். நரம்புத் தளர்ச்சி[1] பெற்றவன் ஒருவன் அறிவுப் பிறழ்ச்சியின்[2] சாயலைக் காட்டும்போது அவன் நற்பழக்கம் பெருதவன்போல் முதலில் காட்சி அளிக்கலாம்.

ஆனல், எவன் ஒருவன் நற்பழக்கத்தின் வரம்புக்குள் தன்னை வைத்துக் கொள்கிருனே அவன் நேர்மையான மனிதன் (Normal-man) ஆவான். அவனை இயற்றிநிலைபெற்ற மனிதன் என்று கூற முன்வர மாட்டோம். அத்தகையவனுடைய நனவு அடிக்கடி சோதனைக்குட்படுத்தப்படுகிறது. நனவின் எல்லை வரம்பில் சேர்த்து வைத்திருந்த இயக்க விசைகளுக்கு இனிமேல் விருப்பத் துணிவாற்றல் மதிப்பு (volitive value) பெறுவதில்லை.

குழந்தை தன்னுடைய ஆயுத பலத்தை முதல்முதலாகப் பரீட்சை பண்ணிப் பார்க்கிருன். இதற்கு முன் வர்ணித்த மனிதனைவிட இவனுடைய ஆளுமை வேறுபட்டது. முதிர்ந்தோருடன் ஒப்பிடும்போது இவன் சமநிலை பெருத விலங்கென்றே கருதப்பட வேண்டும். பெரும்பாலும் தன்னுடைய தூண்டுதல்களுக்கு இரையாகி விடுபவனுக இருக்கிருன். சில சமயங்களில் மிகவும் கொடிய[3] தடையுணர்ச்சிகளுக்கும் ஆளாகி விடுகிருன். இயற்றி நிலையின் இரண்டு எதிரிடைகளும் இன்னும் இணைந்து ஓர் ஆளுமையாகவில்லை. உளஇயல் சார்ந்த கருவில் இந்த இரண்டு பகுதிகளும் தனித்தனியாகத்தான் இருக்கின்றன. மிகவும் முக்கிமானது என்னவென்றல் இந்த இரண்டின் சேர்க்கை. இந்தத் தழுவல் நடைபெற வேண்டும். நனவின் வரம்பு எல்லையில் இவை இரண்டும் தாங்கும் அரைக்கச்சைபோல் தன்னை நிலைபெறச் செய்ய

[1] neurasthenic. [2] Paranoia. [3] inhibition.

வேண்டும். ஆதலால் கூடுமானவரையில் செயல்படக் கூடிய விளையாற்றல்களைச் சீக்கிரத்தில் புகுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஏனென்றால் அத்தகைய வளர்ச்சிக்கு இது தேவைப்படுகிறது. இதன் நோக்கம் குழந்தையைப் பிஞ்சிலே பழுத்தவனாக்க அன்று. ஆனால், அவனுடைய விருப்பத் துணையாற்றல் சக்திகளைப் பயிற்சிசெய்ய அவனைத் தூண்டி விடவேண்டும். எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் தூண்டுதலுக்கும் தடையுணர்ச்சிக்கும் இடையே ஓர் எதிர்எதிர் தொடர்பு ஏற்பட வேண்டும். இந்த ஆக்கம்தான் அவசியமாகக் கருதப்படுகிறது. இந்த அமைப்பே அவசியமாகிறது. இதனுடைய விளைவைப் பற்றி அன்று. ஏனென்றால், இந்த ஆக்கத்தால் அதே பலனை வெளிப்படையாகப் பெறலாம்.

ஒரு குறிக்கோளுக்காகச் செய்கின்ற வழிவகையே இது. குறிக்கோள் என்ன? குழந்தை மற்றக் குழந்தைகளுடன் கலந்து விளையாற்றல் வேண்டும். தினசரி வாழ்க்கைப் பழக்கங்களில் இயற்றிநிலையின் 'உடற் பயிற்சியை'ப் (gymnastics) பழக வேண்டும். எந்தக் குழந்தை ஒரு தொழிலில் முழுமையும் உட்கவரப்படுகிறதோ அவன் தன் தொழிலைச் சாதிப்பதற்குத் துணை புரியாத இயக்கங்களையெல்லாம் தடுத்துக்கொள்கிறான். தசைகளின் ஒன்றுதலை இவன் தேர்ந்தெடுக்கிறான். இவ்வாறு செய்ய இவனால் முடியும். தளராது செய்கிறான். அவ்வாறு செய்வதில் அத்தகைய ஒன்றுதலை நிரந்தரமாக இருக்கும்படி செய்கிறான். ஒன்றுதலில்லாத கூட்டுத் தூண்டுதல்களுக்கு ஆளாகின்ற ஒரு குழந்தையின் ஒழுங்கற்ற இயக்கங்களுக்கும் இதற்கும் வேற்றுமை உண்டு. பிறருடைய தொழிலை மதிக்கும் பொழுதும் பிறர் கையிலிருந்து ஒரு பொருளை அபகரித்துக் கொள்ளாமல் பொறுமையாக அப்பொருளுக்குக் காத்துக் கொண்டிருக்கும் பொழுதும் தன் தோழர்களின் மேல் மோதிக் கொள்ளாமல் நடமாடும் பொழுதும், அவ்வாறு நடக்கும் பொழுது அவர்களுடைய பாதங்களை மிதிக்காமல் இருக்கும் பொழுதும், மேசையைக் கவிழ்த்தாதிருக்கும் போதும் தன்னுடைய விருப்பத் துணிவாற்றலின் சக்தியை ஒழுங்குபடுத்திவருகிறான். உள் தூண்டுதலையும், தடையுணர்ச்சிகளையும் சமநிலைக்குக் கொண்டு வருகிறான். இத்தகை போக்கினால் சமூக வாழ்க்கைப் பழக்கங்களுக்கு வழிவகுக்கிறான். இத்தகைய நிலைமையை உண்டு பண்ணுவதற்குக் குழந்தைகளைப் பக்கம் பக்கமாக அசைவற்று உட்கார வைப்பதில் பயன் காண முடியாது. அவ்வாறு செய்யின் குழந்தைகளிடம் ஒருவர்க்கொருவர் சமூகப் பழக்கம் ஏற்பட முடியாது. சிறு குழந்தைகளின் சமுதாயப் பழக்கம் வளர்வதில்லை.

தங்குதடையின்றி ஒருவரோடொருவர் பழகும்போது தன்னால் இயங்கக் கூடிய சக்தியைப் பிறர் இயக்கத்துக்கு ஏற்றவாறு ஒத்துக்கொடுப்பது மெய்யாகப் பழக்கத்தில் தானே கொண்டு வரப்பார்க்கும் பொழுதுதான் சமூகப் பழக்கங்கள் (Social habits) நிலைநாட்டப்படலாம். எந்தெந்தச் செயல்கள் செய்யப்பட வேண்டுமோ அவைகளை ஒதுக்கிவைப்பதனால் இயற்றிநிலையை ஆக்குதல் என்றும் நடைபெறாது. குழந்தையிடம் கம்பீரமாக நடந்து கொள்ளும் திறமை வேண்டுமானால், வெறும் 'மரியாதை பற்றிய கருத்துகளோ[1]' கடமைகளும் உரிமையும்[2] பற்றியோ சொல்லளவில் நின்றுவிட்டால் போதாது. சொல்லளவு போது மென்றால் 'பெதோவனுடைய சில்வழி இசைப்பா[3] சொனாட்டா' ஒன்றினை ஒரு கவனமுடைய குழந்தையிடம் இவ்வாறு பியானோ வின் மெட்டுகளை அமுக்கக் கை குறிப்பிட்ட முறையில் அசைத் தால் இசை பிறக்கும் என்று ஒரு நிமிடம் விளக்கம் கொடுத்தால் போதுமே. இத்தகைய விஷயங்களில் அமைத்தலே முக்கிய மானது. இயற்றிநிலையின் சக்தி பயிற்சியால் நிலைபெறுகிறது.

இளமையில் ஆளுமையை உருவாக்குவதற்குத் தேவைப்படும் எல்லா இயக்க நுட்பங்களையும் ஒழுங்குபடுத்துவது கல்விக்கு மிகவும் பெரிய மதிப்பை அளிக்கிறது. இயக்கமும் உடற்பயிற்சி யும் குழந்தைகளுக்கு இன்றியமையாதன. ஏனென்றால் எந்தெந் தத் தசைகள் பயிற்சிக்குட்படுத்தப் படவில்லையோ அவை தசைக ளால் இயங்கக்கூடிய பல்வேறு அசைவுகளைச் செய்யும் திறமையை இழந்துவிடுகிறது. இந்த உண்மை எல்லோருக்கும் தெரியும். அதேபோல் உளஇயல் வாழ்வுக்கும் ஒரு வகையான உடற்பயிற்சி தேவைப்படுகிறது.

பயிற்சி அளிக்கப்படாத உறுப்பு எளிதில் இனிமேல் குறைபாடு உடையதாக வழிவகுத்துக் கொள்ளலாம். தசையில் மெலிந்த வன் அசைவற்றுக் கிடக்கவே விரும்புவான். அபாயம் வரும் பொழுது அவன் செயலாற்றச் சக்தி அற்றவனாய் அழிவான். சாதாரணப் பள்ளிக்கூடத்தில் குழந்தைகள் அசைவற்றுத் தத்தம் இருப்பிடங்களில் உட்கார வைக்கப்பட்டிருப்பார்கள். அவர்கள் ஆசிரியருடைய உரையாற்றலை மௌனமாகக் கேட்டுக்கொண்டோ அல்லது கேட்பதாக நடித்துக்கொண்டோ இருப்பார்கள். இத் தகைய பள்ளிக்கூடத்திற்கு போய்ச் சேரும் இயற்றிநிலையில் மெலிந்தும் ஹைபோ பியூலிக் (hypobulic) அல்லது அபூலிக் (abulic) மனத்திட்ப இழப்பு ஆகவும் இருக்கின்ற குழந்தை மற்றக் குழந்தைகளோடு எளிதாகத் தன்னை தழுவச் செய்து கொள்வான். இம்மாதிரிக் குழந்தைகளில் பலர் நரம்புக் கோளாறு என்று மருத்

[1] ideas of politeness. [2] rights and duties. [3] Sonata by Beethoven.

துவ நிலையங்களைப் போய் அடைவர். அவர்களுடைய பள்ளிக்கூட ரிபோட்களில் பார்த்தால், 'நடத்தை-மிகச் சிறந்தது; படிப்பில் முன்னேற்றம் இல்லை' என்று பொறிக்கப்பட்டிருக்கும். இம் மாதிரிக் குழந்தைகளைப்பற்றிச் சில ஆசிரியர்கள் இதோடு நிறுத்தி விடுகின்றனர். 'அவர்கள் எவ்வளவோ நல்லவர்கள்.' இவ்வாறு கூறி, அவர்கள் போக்கில் எந்தக் குறுக்கீடும் நடைபெறாமல் காப் பாற்றி வருகின்றனர். புதை மணல் போல் தங்களை விழுங்கும் பல வீனத்தில் புதைந்து போகும் அளவுக்குத் தொந்தரவு செய்யாமல் விடப்படுகின்றனர். வேறு குழந்தைகளிடம் அவர்களுடைய உட் தூண்டுதல் வலிவு பெற்றதாய் இருக்கிறது. இவர்கள் குழப் பத்தை உண்டாக்குகிறவர்கள் என்று பெயர் வாங்கினவர்கள். இவர்கள் பேரில் 'போக்கிரி' என்று பொறிக்கப்பட்டிருக்கும். அவர்கள் எவ்வகையில் போக்கிரிகள் என்று கேட்போமானால், பெரும்பாலான விடை என்னவென்றால், 'அவர்கள் சும்மா இருக்க மாட்டார்கள்' என்பதுதான். இந்தப் பொங்கும் சக்தி பெற்றவர் களுக்கு இன்னும் வேறு பேர் அளித்து விடுகின்றனர். 'தோழர் களிடம் சண்டைபோடுகிறார்கள்.' அவர்களுடைய சண்டை அநேகமாக இப்படித்தான் இருக்கும். தங்களுடைய தோழர்கள் பதுமைபோல் இயங்காமல் இருப்பதைக் கண்டு சகிக்க முடியாமல் தன்னுடன் தொடர்பு கொள்ள எல்லா முயற்சிகளாலும் தோழனை அழைப்பதாகும். இதல்லாமல் உள்தடை சக்தி நிறைந் திருக்கும் குழந்தைகளும் இருக்கின்றனர். அவர்களுடைய பீதி இயல்பு (timidity) மிகவும் பெரிது. கேட்ட வினாவுக்கு இன்ன விடை அளிக்கலாம் என்ற அளவுக்குத் தங்கள் மனத்துக்குள் தீர்மானிக்கும் திறமை அற்றவர்கள்போல் காண்பார்கள். புறத் தூண்டுதல்கள் பலவற்றின் பிறகு ஒருவாறு பேசத் துணிவார்கள், ஆனால், மெல்லிய குரலில் பேச முயற்சி செய்வார்கள்; பிறகு கண்ணீர் வடிப்பார்கள்.

இந்த மூன்று வகைக் குழந்தைகளிடம் தேவைப்படும் உடற் பயிற்சி (gymnastic) என்னவென்றால், தங்குதடையற்ற செயல். எப்பொழுதும் அக்கறை ஊட்டுகின்ற பிறருடைய இயக்கங்களே அபூலிக் (abulic) இனத்துக்குப் பொருத்தமான கிளர்ச்சியூட்டுத லாகும். ஒழுங்கான பயிற்சிப் பாதையைப் பின்பற்று இயக் கத்தைத் திருப்பினால், மிகவும் துடிதுடிப்புள்ள குழந்தையின் அடக்கும் சக்தியை வளர்க்கச் செய்கிறது. அடக்கும் சக்தியால் மிகவும் பாதிக்கப்பட்ட குழந்தை இதுவரை அடிமையாக இருந்து இப்பொழுது தானாக விருப்பம்போல் தனிமையாகத் தன் சொந்தத் தூண்டுதலால் நடிக்கும்போது, அதாவது எல்லா விதமான அடக்குதலின் புறத்தூண்டல்களினின்றும் அவன் விலக்கப்படும்

பொழுது, இரண்டு விருப்பத் துணிவாற்றல்களுக்கு இடையே சம நிலை காண்கிறுன். இதுதான் எல்லா மக்களுக்கும் காப்பாற்று வழி. எளியவன் வலிவு பெறுகையில் வலிவுடையவன் இன்னும் முழு நிறைவு (Perfection) பெறுகிறுன்.

உட்தூண்டுதலுக்கும் உட்தடைக்கும் இடையே இருக்கும் நடு நிலையானது உடல் நோயாளரிடையே காணப்படும் சாதாரண அக்கறையூட்டும் உண்மை. இதில் மட்டும் அல்ல ஓரளவுக்குக் கம்மியாகச் சாதாரண மக்களிடம் காணப்படுகிறது. வெளிப் படையான சமுதாய வாழ்வில் கல்வியின் குறைபாடுகளை அடிக்கடி காண்கிறேமே அதேபோல்.

உட்தூண்டுதல் குற்றவாளிகளைத் தூண்டி மற்றவர்களுக்குத் தீங்கு விளைவிக்கச் செய்கிறது. சாதாரண மக்களும் எவ்வளவு முறை தாம் அறியாமல் செய்த பிழைக்கு வருத்தம் தெரிவித்துக் கொள்கின்றனர். அவர்களுடைய நரம்பு அதிர்ச்சியால் அவர் களுக்கே வருத்தமூட்டும் பலன்களை விளைவித்திருக்கின்றன. சாதா ரணமாக உட்தூண்டுதலுக்கு ஆளாகின்றன. அநேகமாகத் தனக்குத்தான் தீங்கு விளைவித்துக் கொள்வான். தன் உத்தியோ கத்தில் சமாதானம் பண்ணிக் கொள்கிறுன். தன்னுடைய திறமைகளை முழு வெற்றி பெற அசக்தனுகி விடுகிறுன். துர் அதிர்ஷ்டம் ஒன்று தன்னைப் பிடித்து அதிலிருந்து தப்பித்துக் கொண்டிருப்பவன்போலவும் தன்னை ஒருவித அடிமைபோலவும் இருப்பதாக அவன் உணர்கிறுன்.

தன்னுடைய உட்தடை சக்திகளுக்கு ஆளானவன் உடல் கோளாறு படைத்த அடிமை; ஆடாமலும் அசையாமலும் பேசா மலும் இருக்கிறுன். ஆனுல், உள்ளூர அவனுக்கு இயங்க வேண்டும் போலிருக்கிறது. கலை, தொழில் போன்றவைகளில் ஈடுபட வேண்டும். ஆசைப்பட உந்தும் ஆயிரம் உட்தூண்டல் களுக்கு வழி திறக்கப்படாமல் அவன் ஆன்மாவை அரித்துக் கொண்டே இருக்கிறது. தன்னுடைய அவல நிலையைப் பற்றி அருமையான சொற்பொழிவு நடத்த வேண்டும் என்ற ஆவல், வாய் திறக்க முடியாமல் தடை பெறுகிறது. ஒரு மருத்துவரிடம் இருந்து தக்க உதவி பெறவோ, ஒரு நல்ல மனதுடையவரிடம் இருந்து பரிவைப் பெறவோ முடியாமல் போய்விடுகிறது. அவனு டைய உதடுகள் பூட்டுப் போடப்பட்டவைபோல் இருக்கின்றன. உயிருடன் புதைக்கப்பட்டவனைப்போல், பயங்கரமாக ஒடுக்கப் பட்டவன்போல் தன்னை எண்ணிக் கொள்கிறுன். எத்துணை சாதாரண நேர்மை மக்கள் இதே அனுபவம் பெறுகின்றனர். அவர்களின் வாழ்க்கையில் ஏதோ ஒரு நன்னிமித்தமான சந்தர்ப்

பத்தில் அவர்கள் முன்வந்து தம் திறமையைக் காட்டியிருக்க வேண்டும். ஆனால், அவர்களால் செய்ய முடியாமல் போயிற்று. தங்களுடைய கஷ்டமான நிலை மாறுவதற்கு உண்மையான முயற்சி செய்திருந்தால் எவ்வளவோ அனுகூலமாய் இருந்திருக்கும் என்று ஓராயிரம் முறை அவர்கள் எண்ணியிருப்பார்கள். ஆனால், அவர்களுடைய நெஞ்சம் அடைபட்டிருந்தது. வாயும் ஊமைபோல் கிடந்தது. எத்துணை துடிப்புடன் ஓர் உத்தம உள்ளத்துடன் பேசியிருக்கலாமே, என்னைப் புரிந்து கொண்டிருப்பார்களே, ஒளி காட்டியிருப்பார்களே, ஆறுதல் அளித்திருப்பார்களே, என்றெல்லாம் எண்ணியிருப்பார்கள். ஆனால் அந்த உத்தமரை நேரில் கண்டபொழுது ஒரு வார்த்தையும் வாய் திறந்து பேச முடியாதவர்களாகி விட்டனர். பல நாள் விரும்பி எதிர்பார்க்கப்பட்டவர் நேரில் கண்டு தூண்டினாலும், கேள்வி கேட்டாலும், தங்கள் உட்கருத்தென்ன என்று பேசச் சொன்னாலும் அந்தரங்க வேதனை ஒன்றுதான் மிச்சம். 'பேசு! பேசு!' என்று உள் தூண்டுதல் நனவின் ஆழத்திலிருந்து என்னதான் தூண்டிக் கொண்டே இருந்தாலும் உட்தடையானது விளக்க இடங்கொடாத ஒரு கடின பொருள் போலும் இணங்காதது போலும் இருந்தது.

சுதந்திரப் பயிற்சிகளால் இயற்றி நிலையைக் கற்பிக்க முடியும். இந்தப் பயிற்சியால் உட்தூண்டுதலும் உட்தடுப்பும் ஒன்றுக்கொன்று சரிப்படுத்திக்கொள்ளும். இதில்தான் அத்தகையவனுக்கும் குணம் காணலாம். இந்தக் குணம் பெறத் தருணம் எது? இயற்றிநிலை உருவாகிக் கொண்டிருக்கும் பருவம்.

* * *

அம்மாதிரி சமநிலை நனவு நிலையின் வரம்பில் ஒரு தனி இயக்க நுணுக்கங்களுடன் அமைத்துக் கொள்கிறது. இது லௌகிக மனிதனைத் தானே தன் குணத்தைத் திருத்திக்கொள்ளச் செய்கிறது. 'இயற்றிநிலை உடைய மனிதன்' என்று கூறப்படுவதற்கு இது எவ்வகையிலும் பொருத்தமன்று. விருப்பத்துடன் பல சாதனைகளை ஏற்படுத்திக் கொள்வதற்கு நனவு (consciousness) சுதந்திரத்துடன் இருக்கிறது என்று மேலே குறிப்பிட்டோம். மிகவும் நாகரிகமும் செல்வாக்குமுடைய சீமாட்டியானவள் இயற்றி நிலை இல்லாதவளாக இருக்கலாம்; நற்பண்பு இல்லாதவளாகவும் இருக்கலாம். வெளிப்படை விஷயங்களில் மட்டும் கவனம் செலுத்தக்கூடிய இயக்குவிக்கும் இயற்றி நிலையைப் பெறக் கூடுமளவுக்கு மிகவும் தீவிரமான இயக்க விசையை அவள் பெற்றிருக்கலாம்.

மனிதனுக்கு மனிதனுடைய மேலோட்டியான உறவு தானாக இயங்கும் அடிப்படைக் குணத்தைப் பொறுத்திருக்கிறது. இது மட்டுமல்ல சமுதாயமே அந்த அடிப்படைப் பண்பின்மேல் கட்டப் பட்டிருக்கிறது. இந்தப் பண்புக்குத் தொடர்ச்சி (continuity) என்று பெயர். மனிதன் தொடர்ந்து வேலை செய்து ஒரு சராசரி அளவுக்குள் உற்பத்தி செய்ய முடியும் என்பதன் அடிப்படைக் கொள்கையின்மேல் சமுதாயம் அமைக்கப் பட்டிருக்கிறது. இந்த அளவின்மேல் ஒரு மக்களின் 'பொருளியல் சார்ந்த சமநிலை[1]' ஆக்கப்படுகிறது. ஓரினத்தின் பெருக்கமானது பெற்றோர்கள் திரு மணம் செய்துகொண்டு தொடர்புடன் வாழ்வதனால் ஆகிறது. இவ்வாறு இனத்தைப் பெருக்குவதற்கு சமூக உறவு தேவைப் படுகிறது. குடும்பமும் இனப் பெருக்கமும் ஆகிய இவ்விரண்டும் சமூகத்தைத் தாங்கும் பீடங்கள். அவை மிகவும் சிறந்த விருப்பத் துணிவாற்றல் என்ற பண்பின்மேல் நிற்கின்றன. அது தான் மாறாத் தன்மை அல்லது பிடிவாதம் (constancy or-Persistence).

இந்தப் பண்பானது அந்தரங்க ஆளுமையின் குறுக்கீடற்ற உடன்பாட்டினை விளக்குவதாகும். இது இல்லாவிடில் வாழ்க்கை ஒரு கிளைக் கதைகளின் பல தொடர்களாகி விடும்; அல்லது ஒரு பெருங்குழப்பம் ஆகிவிடும். அது ஓர் உடல் தன் பல்வேறு சிற்றறைகளாகச் சிதறிப் போனால் எப்படி இருக்குமோ அதுபோல் ஆகிவிடும். தன்னுடைய பொருளைத் தன்னுடைய வகைத் திடீர் மாற்றங்களில் (mutation) எல்லாம் நிலைபெறச் செய்கின்ற ஓர் உறுப்பு அமைதி (organism) பெறாமல் சிதறி விடுகிறது. இந்த அடிப்படைப் பண்பு தனிப்பட்டவரின் உணர்ச்சிக் கனிவைத் தழுவு கிறது. அவனுடைய கருத்துகளை நடத்தி வைக்கிறது. இந்த நிலையில் இதைச் சிறப்புப்பண்பு[2] அல்லது நற்குணம் என்று நாம் கூறி வந்துள்ளோம். பிடிவாதமாக இருப்பவன்தான் நற்பண்புடை யவனாவான். தான் சொன்ன வாக்கை நிலைபெறச் செய்பவன், தன் நம்பிக்கைகளைக் கைவிடாதவன், தன் பற்றாசைகளைக்[3] கடைப் பிடிப்பவனே நற்பண்புடைய மனிதன்.

பிடிவாதத்தின் பல்வேறு பகுதிகளின் தொகை மிகச் சிறந்த சமுதாய மதிப்புடைய விளக்கமாகிறது தொழிலில் பிடிவாதம்.

ஒரு தீயோன் தன்னுடைய தீய உட் தூண்டுதலுக்கு இடந் தருவதற்கு முன், தன்னுடைய பற்றாசைகளைக் கைவிடுவதற்கு முன், அவன் வார்த்தையைத் தருவதற்கு முன், மனிதனுடைய ஆன்மாவை மேம்படுத்தக் கூடிய எல்லா நம்பிக்கைகளையும் பாழாக்குவதற்கு முன், அவன்மேல் ஒரு கறை ஏற்படுத்திக்

[1] economic equilibrium. [2] character [3] affection

கொண்டான். அக் கறையினால் அவன் சிதறி விட்டான் என்றும், சமூகத்திலிருந்து மறைந்துவிட்டான் என்றும் ஆகிவிடுகிறான். அந்தக் கறை என்ன? சோம்பல், தொழிலில் தொடர்ந்து ஈடுபடாத் தன்மை. யோக்கியமாகவும் நல்லொழுக்கத்துடனும் வாழ்கின்ற ஒருவன் மூளைக் கோளாறுகளால் துன்புறுவதற்கு முன்பு, எவ்விதக் கொடுமையான உட்தூண்டுதலுக்காளாவதற்கு முன்பு, நன்னடத்தையில் ஒழுங்கீனம் அல்லது வெறிப் பிதற்றல் தோன்றுவதற்கு முன்பு, அவனுக்கு முன்னெச்சரிக்கை தருகிற நோய்க்குறி ஒன்று தெரிந்துவிடுகிறது. அவனால் இனிமேல் எந்தத் தொழிலிலும் தொடர்ந்து ஈடுபட முடிவதில்லை. ஒரு பெண் சுறுசுறுப்பாக உழைப்பவளாயிருந்தால் அவள் நல்ல இல்லக் கிழத்தி ஆவாள் என்றும், நல்ல தொழிலாளியாக இருப்பவன் இனித் தனக்கு இல்லக்கிழத்தியாகப் போகிறவளுக்கு நல்ல வருங் காலத்தை அளிக்கும் நன்னெறியாளன் ஆவான் என்றும் உலகப் பொதுமக்கள் நம்பி வருகின்றனர். இந்த நற்குணமானது வெறும் திறமை மட்டும் அன்று. அது தளராமையையும் விடா முயற்சியையும் குறிக்கிறது. எடுத்துக்காட்டாகப் பல அழகான சாமான்களைச் செய்யக்கூடிய போலிக் கலைஞன் திறமை பெற் றிருப்பினும் தொழில் புரியும் இயற்றிநிலை பெறாதவனாக இருப் பின் அவன் மனைவிக்குத் தகுந்த நல்ல தோழன் என்று கருதப்பட மாட்டான். அவன் பொருளீட்டத்தக்க பண்டங்களை ஆக்கத் திறமையற்றவன் என்று எல்லோராலும் கருதப்படுவதோ டல்லாமல் அவன் சந்தேகத்துக்குள்ளாவான். அவன் ஓர் அபாயகர மான மனிதன் என்று எல்லோராலும் கருதப்படுவான். அவன் ஒரு கெட்ட கணவனாகவோ, தந்தையாகவோ அல்லது குடி மகனாகவோ ஆகி விடலாம். இதற்கு மாறாக மிகவும் அடக்கம் உடைய ஒரு தொழிலாளியிடம் வாழ்க்கையில் பாதுகாப்பும், இன் பமும் பெறக்கூடிய பண்புகளின் பகுதிகளும் குடிகொண்டிருக்கின் றன என்பதற்கு ஐயமில்லை. பண்டைக்காலத்தில் ரோமாபுரிக் காரர், 'அவள் இல்லத்திலிருந்து கம்பளம் நூற்றாள்' என்று கூறின புகழ் மாலையின் பொருள் இதைத்தவிர வேறு எதாக இருக்க முடியும்? அதாவது நற்குணம் வாய்ந்த பெண்டிர் என்றும், உல கத்தை கட்டி ஆளுவோருக்குத் தக்க தோழி என்றும் இப் புகழுரை குறித்துவந்தது.

சிறு குழந்தை தன்னுடைய உள வாழ்க்கையை ஆக்குவிக்கும் முதல் கட்டத் தொழிலில் விடாமுயற்சியை நிலை நாட்டுகிறான். இந்தச் செயலால் அந்தரங்க ஒழுங்கு, சமநிலை, ஆளுமையின் வளர்ச்சி முதலியவைகளைத் தோற்றுவிக்கிறான். ஏதோ அற்புத மான உள்வெளிப்பாட்டின் காரணத்தால் உண்மையாக மனிதன்

எவ்வாறு சமூகத்திற்குத் தன்னையே பயன் தரும் முறையில் அர்ப் பணித்துக் கொள்கிறான் என்றும் குழந்தை எடுத்துக்காட்டுகிறான். தன்னுடைய பயிற்சியில் தளராமல் குழந்தை ஈடுபடுகிறான். ஒரு முனைப்புடன் அத் தொழிலிலேயே இறங்கிக் கிடக்கிறான். இவ்வாறு செய்வதால் குழந்தை நிலைபெறும் மனிதனை விளக்கம் செய்து கொண்டிருக்கிறான்; நற்குணமுள்ளவனை ஆக்கிக் கொண்டிருக் கிறான்; மனிதர்களிடை மதிக்கப்படுபவை அனைத்தையும் தன்னுள் படைத்துக்கொள்கிறான்; அடிப்படையான வெளிக்காட்டுதலின் சிகரம்போல் தொழிலில் தளராமை என்ற திறனையும் உருவாக்கிக் கொண்டிருக்கிறான். குழந்தை எந்தப் பணியைத் தேர்ந்து எடுத்துக்கொண்டாலும் சரி, அவன் அதையே தொடர்ந்து செய்து கொண்டிருந்தால் போதும். தொழில் முக்கியமல்ல. உள இயல் சார்ந்த மனிதனைப் படைப்பதற்குத் தொழில் அல்லது வினையாற்றல் பயன்படுவதே மதிப்புடையதாகும்.

தான் முன்கூட்டி இதைப் புகுத்த வேண்டும் என்று திட்ட மிட்டுக் குழந்தை ஈடுபட்டிருக்கின்ற தொழிலில் குறுக்கிடுகிறவன், கணக்குப் போட்டுக் கொண்டிருக்கும் குழந்தை அப் பாடத்தை நிறுத்திவிட்டுப் பூகோளம் கற்க வைக்கின்றவன், அது போன்ற இன்னும் சிலவற்றைச் செய்யும்போது குழந்தையின் பண் பாட்டினை நல்வழிப்படுத்த வேண்டும் என்று கருதுகிறான். குறிக் கோளினைச் சாதிக்க வேண்டிய முறையுடன் குழப்பிக் கொள் கிறான். தற்பெருமைக்காக மனிதனையே அழித்து விடுகிறான்.

* * *

தொடர்ந்து வினையாற்றல் என்பது இயற்றி நிலைக்கு அடிக்கல் என்றால் செயலின் இயற்றி நிலையின் மிகச் சிறப்பான அம்சம் தீர் மானம் (decision) ஆகும். நமக்குத் தெரிந்து எந்தக் காரியத்தை யாவது சாதிக்க வேண்டுமானால் நாம் ஒரு தீர்மானம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. தீர்மானம் என்பது தேர்வின் முடிவாகும். பல தொப்பிகள் பெற்றிருந்தோமானால் வெளியே செல்லும்போது அணிவது எது என்று தீர்மானிக்க வேண்டியிருக் கிறது. அந்தப் பழுப்புத் தொப்பியா, அல்லது சாம்பல் நிறத் தொப்பியா என்பது பிரச்சினை இல்லை. பழுப்பானாலும் சரி, சாம்பல் நிறமானாலும் சரி. ஆனால், இரண்டில் ஏதாவது ஒன் றினைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. அவ்வாறு தேர்ந் தெடுப்பதற்கு நம் உட்கருத்துகள் இருக்கவேண்டும். அக் கருத்து பழுப்பை விரும்புகிறதா, அல்லது சாம்பலை விரும்புகிறதா? இறுதி யில் ஏதோ ஒரு உட்கருத்து வெல்லும். அப்பொழுது தேர்ந்தா யிற்று. தினந்தோறும் தொப்பியை எடுத்து அணிந்து கொள்

கின்ற நெடுநாள் பழக்கம் ஒரு வகையில் நம் தேர்வுக்கு உதவி புரிய லாம். நமக்குள் எந்த எந்த உட்கருத்துகள் தூண்டப்பட்டன வென்றோ எது தடுமாறிற்று என்றெல்லாம் நம் நெஞ்சார அறியோம். எல்லாம் ஒரு வினாடிக்குள் நடைபெற்று விடுகிறது. முயற்சியின் பதிவு எதுவும் விட்டுவிட்டுப் போவதில்லை. காலைக் குத் தகுந்தது, பிற்பகலுக்குப் பொருத்தமானது, நாடகம் அல்லது போட்டிப் பந்தயங்களுக்கு அணியத்தக்கது இது என்று நாம் தொப்பிகளைப் பற்றிய கருத்து ஏற்கெனவே பெற்றிருப்பது நம்மை மனக் குழப்பத்திலிருந்து காத்துக்கொள்கிறது.

ஒரு பரிசுப் பொருள் வாங்க ஒரு குறிப்பிட்ட தொகை செல வழிக்க வேண்டுமென்றிருந்தால் அப்பொழுது நடைபெறுவது இது போலிருக்காது. பல பண்டங்களினிடையே எதைத் தேர்ந்தெடுக் கலாம் என்ற கேள்வி பிறக்கிறது. வாங்க வேண்டிய பொருளைப் பற்றித் தெளிவான கருத்து நாம் பெற்றிராவிடின், நமது வேலை மிகவும் கவலைக்குரியதாகி விடுகிறது. கலை நிறைந்த ஒரு பொருளைத் தேர்ந்தெடுக்க நாம் கருத்தில் கொள்ளலாம். ஆனால், நமக்குக் கலையைப்பற்றி அவ்வளவாக ஒன்றும் தெரியாது. நம்மை ஏமாற்றி விடுவார்கள் என்று அஞ்சுகிறோம். நம்மைக் கண்டு அவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற ஐயமும் கூட. மேலும், பழக்கத்தில் எதை வாங்குவார்கள் என்றும் நமக்குத் தெரியாது. சரிகை ஆடையா அல்லது வெள்ளிக் கிண்ணமா எது பொருத்த மான பரிசாக இருக்கும். இவைகள் எல்லாவற்றையும் பற்றி யாராவது ஒருவர் நமக்கு விளக்கம் தந்தால் நல்லது என்று கருது கிறோம். அப்படியே அவர்களுடைய ஆலோசனையைத் தேடிப் போகிறோம். அவர் கூறும் ஆலோசனையை நாம் ஏற்றுக்கொள் வோம் என்பதில்லை. உண்மையைக் கூறப்போனால் அந்த ஆலோசனை நம் அறியாமை குறித்தது. நம் அறிவு அல்லது கருத்து தெளிவுபெறுவதற்கு ஒரு துணை வேண்டியிருந்ததே யொழிய நம்முடைய இயற்றி நிலையைத் தூண்டிவிடும் முயற்சிக் கல்ல. விருப்பத்துணிவாற்றல் (volition) என்ற ஒன்றினைக் காப்பு விழிப்புடன் நமக்கென்றே வைத்துக் கொள்கிறோம். தீர்வு காண் பதற்கு இன்றியமையாது வேண்டப்படும் அறிவு (knowledge) வேறு, இதுவேறு. இரண்டு மூன்று பேர் கூறிய ஆலோசனைக்குப் பிறகு நாம் எடுக்கும் தேர்வு முடிவில் நம்முடைய சொந்தப் பதிவும் பெற்றிருக்கும். அது நம்முடைய 'தான்' (ego) என்றதின் தேர்வாக அமையும்.

விருந்தினருக்குச் சமைக்க வேண்டிய உண்டி இன்னது என்று தீர்மானிக்க வேண்டிய மனையாட்டியின் நிலையும் இதையே ஒக்கும். ஆனால் அங்கு அவளுக்கு அதுபற்றிய முழு அறிவு இருக்கிறது.

இன்ன சுவை என்பது பற்றியும் அவள் நன்கு அறிவாள். ஆதலால், அவள் தீர்மானமும் மகிழ்ச்சியுடன் இருக்கும். பிறருடைய உதவி ஏதும் இல்லாமலும் இருக்கும்.

ஆனல் தீர்மான முடிவெடுப்பது என்பது ஒவ்வொரு விஷயத்திலும் 'அந்தரங்க முயற்சி' (internal labour) என்பதை எவர்தான் அறியமாட்டார்கள். அந்த முயற்சி உண்மையான முயற்சி. ஆதலால், வலிவற்ற இயற்றிநிலே கொண்டவர் அதை எப்படியாவது தட்டிக்கழிக்கப் பார்ப்பார்; தமக்குத் தொல்லேயூட்டுகிறதென்று ஒதுக்கப்பார்ப்பார்; தீர்ப்பெடுக்கும் பொறுப்பை இல்லாள் முடிந்தால் சமையல்காரருக்கு விட்டுவிடுவாள். அங்கி ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் பொழுது எத்துணேயோ உட்கருத்துகள் தோன்றலாம். அவைகளில் ஒன்றினேப்பற்றி முடிவெடுக்க முடியாத நிலேயில் அதைத் தையல்காரருக்கே விட்டுவிடலாம். தையல்காரரும் பார்க்கிருர். நீண்ட யோசனேயின் பேரில்தான் முடிவெடுப்பார்கள் என்பதையும் உணர்கிருர். ஒரு குறிப்பிட்ட சமயத்தில், 'இதை எடுத்துக்கொள்ளுங்கள்; உங்களுக்கு மிகவும் பொருத்தமானது' என்கிருர். அம்மையாரும் 'சரி' என்று ஒப்புக் கொள்கிருர். அந்த அங்கி அவருக்குப் பிடித்ததென்ற காரணத்தாலன்று அவர் ஏற்றுக் கொண்டது. தீர்மானம் எடுக்க வேண்டிய தொல்லேயினின்று தாம் தப்பித்துக் கொள்வதற்கே அவர் சரி என்கிருர். நம்முடைய வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து தீர்மானம் எடுக்க வேண்டிய பயிற்சிக்ள் நிறைந்தனவாகவே இருக்கின்றன. வீட்டைப் பூட்டிவிட்டு வெளியே போகும் பொழுது இந்தச் செயல்பற்றி நமக்குத் தெளிவான நினேவு இருக்கிறது. வீடு நன்ருகக் காக்கப்படும் என்ற உறுதியும் இருக்கிறது. நாம் இனிப் போகலாம் என்று தீர்மானம் செய்கிருேம். அவ்வாறே முன்னே நடந்து செல்கிருேம்.

இத்தகைய பயிற்சிகளில் எவ்வளவுக் கெவ்வளவு நாம் உறுதியாக இருக்கிருேமோ அவ்வளவுக் கவ்வளவு மற்றவைகளிலும் நாம் சுதந்திரம் பெற்றவர்களாக இருக்கிருேம். கருத்துகளில் ஒரு தெளிவு, தீர்மானம் செய்கின்ற போக்கின் பழக்கம் ஆகியவை நமக்குச் சுதந்திர உணர்ச்சியை அளிக்கிறது. நம்மைத் தாழ்வு படுத்தும் வகையில் அடிமையென நம்மைக் கட்டுப்படுத்தும் மிகக் கனமான சங்கிலி நம்மால் நாமே தீர்மானம் செய்ய முடியாத தன்மையும், அடிக்கடி பிறருடைய கருத்தைத் தேடுவதும் ஆகும். 'பிழை செய்து விடுவோமோ என்ற அச்சம்' ஏதோ காரிருளில் சிக்குண்டது போன்ற உணர்ச்சி, நம்மால் கண்டறிய முடியாத பிழையைச் செய்வதால் விளேயக் கூடியவற்றை நாம் பொறுத்துக் கொள்ளவேண்டுமே என்ற எண்ணம் சங்கிலியால் கட்டுண்ட

நாய்போல் நாம் பிறர் பின்னுல் திரிய வேண்டியிருக்கிறது. இப்படியே போகப் போக நாம் மோசமான சார்பு நிலை அல்லது பிறர் உதவியை எதிர்பார்க்கும் நிலையை அடைவோம். இனிமேல் ஒரு மடலையும் அஞ்சலுக்கு அனுப்ப முடியாது. அல்லது பிறர் அபிப்பிராயத்தைத் தேடாமல் ஒரு கைக்குட்டையை வாங்க முடியாது.

ஆனல், இத்தகைய மனம் பெற்றவர் ஒருவருக்கு உடனடியாகத் தீர்மானம் எடுக்கவேண்டிய நெருக்கடி ஏற்படும் சமயத்தில் அவரால் எடுக்கச் சக்தியற்று இருக்கிருர். தம்மிலும் வலியுள்ள இயற்றிநிலை உடையார் வேருெருவருடன் சார்பு கொள்கிருர். அந்த நிலையில் நாம் காண்பதென்ன? ஐயகோ! நம்மால் கண்டறிய முடியாத அடிமைத் தனம் பெறுகிருர். அது ஒரு பேய்க் கனவுபோல் அச்சுறுத்தும் நிலையாகி விடுகிறது. இதில் சிக்குண்டவர் படுகுழியின் நேர் முதல் அடி எடுத்து வைத்து விட்டார். இயற்றிநிலையில் மெலிந்தவர் அக் குழியில் படிந்து அழியும் ஆபத்துக் குள்ளாகிருர். அவ்வாறே எவ்வளவுக்கெவ்வளவு குழந்தைகள் தம் சொந்த இயற்றிநிலையைத் தாமே பயிற்சி செய்ய விடாமல் அடிமைப் படுத்தப் படுகிருர்களோ அவ்வளவுக்கவ்வளவு எளிதாகத் துன்ப நெருக்கடிக்கு ஆளாகி விடுவார்கள். தற்கால உலகம் அத் துன்ப நெருக்கடியால் நிறைந்திருக்கிறது.

ஒன்றைத் தடுப்பதற்கு வலிமை தருவது ‘அறநெறிப்பார்வை’ (Moral vision) அன்று; இயற்றி நிலைப் பயிற்சியே ஆகும். இப் பயிற்சியும் அன்ருட வாழ்க்கையில் காணவேண்டியிருக்கிறது. குழந்தைகளைப் பெற்ற ஒரு தாயார் குடும்பப் பணியில் ஓயாது ஈடுபட்டிருக்கிருள். தினசரி வாழ்க்கைச் சம்பவங்களைப்பற்றித் தீர்மானம் எடுத்த பழக்கம் பெற்றிருக்கிருள். ஓர் அறநெறி சார்ந்த ஐயப்பாட்டை நெருக்கடி நேரிடும் காலத்தில் பிள்ளை பெருத ஒருத்தி, இல்லத்தில் பணிகளில் ஈடுபடாமல் தனக்கு இன்பமூட்டும் இல்லச் சோம்பேறியாக வாழ்ந்து, தனக்குப் பதிலாக தன் கணவனின் இயற்றிநிலையையே தனதாக ஏற்றுக் கொண்டவளைவிட வெற்றிகரமான தீர்மானத்திற்கு வரக் கூடியவளாக இருப்பாள். எனினும், இரண்டு மாதரும் ஒரே அறநெறிப் பார்வையைப் பெற்றிருக்கலாம். முதல் பெண் கணவனை இழக்க நேர்ந்தால் வியாபாரத்தில் நன்ருகப் பழகிக் கொள்வாள்; தன்னுடைய கணவன் நடத்திவந்த வாணிபத்தைத் தானே ஏற்று நடத்தி வருவாள். அதே சூழ்நிலை இரண்டாமவளுக்கு ஏற்படின், அவள் பாதுகாப்பு ஒன்றைத் தேடுவாள்; எல்லாம் பேரழிவுக்கு உட்படுத்திலுைம் படுத்திவிடலாம். அறநெறி முத்தி அடைவதற்கு உறுதி வேண்டப்படின், ஒருவன் தன்னையே

எதிர்பார்க்க வேண்டும் என்ற அவசியம் ஏற்படுகிறது. ஏனென்றால் அழிவுகாலத்தில் நாம் தனியாகத்தானே இருக்கிறோம். வலிமை என்பது ஒரு கணத்தில் பெறப்படுவதன்று. சண்டை போட வேண்டிவரும் என்றுணர்ந்தவன் குத்துச் சண்டை போட்டு வலிமையையும் திறனையும் பெற ஆயத்தமாக்கிக் கொள்கிறான். அவன் கைகளைக் கோத்துச் சும்மா வீற்றிருப்பதில்லை. ஏனென்றால் அவன் முறியடிக்கப்படுவான் அல்லது உடலின் நிழல்போல் தன்னை ஒவ்வொரு கட்டத்திலும் வாழ்க்கை முழுவதிலும் காக்க வல்ல ஒரு வலியவனுடைய துணையை எதிர்பார்க்க வேண்டுமென்பதை அவன் நன்கு அறிவான். நடைமுறையில் இது இயலாத காரியம்.

'ஒரு சிறு விநாடி எங்களை வெல்ல வைத்தது'[1]

என்று தாந்தேயின் நரகம் (Dante's Inferno) என்ற ஏட்டில் இருப்பதாக ஃபிரான் சிஸ்கா (Francesca) என்பவர் எடுத்துக் கூறுகிறார்.

மருட்சி அல்லது ஆசை நம்மை வெல்லாமல் இருக்கவேண்டுமானால் அறநெறி வெடிவேட்டுகள் ஒன்றின்மேல் ஒன்று திடீரென மோதிக் கொள்ளாமல் இருக்கவேண்டும். அவ்வாறு மோதினாலும் அது உட்புக முடியாத வலிமைபெற்ற சுவர்களுடைய கோட்டையின்மேல் விழட்டும் அந்தக் கோட்டை எவ்வாறு கட்டப்பட்டிருக்கிறது ? ஆதிகாலத்திலிருந்து, அக் கோட்டைச் சுவரின் அடிக்கல் நாட்டின நாளிலிருந்து, ஒவ்வொரு கல்லாக ஒன்றின்மேல் ஒன்றாக வைக்கப்பட்ட சிறுசிறு கற்களால் கட்டப்பட்ட வலிவு பெற்ற கோட்டைச் சுவராகும் அது. தளராத தொழில், கருத்துகளில் தெளிவு, நனவு உள்ளத்திலுள்ள ஒன்றுக்கொன்று எதிர்க்கும் உள்நோக்கங்கள், வாழ்க்கையின் ஒவ்வொரு நுண்மையான காரியங்களிலும் மிகவும் எளிய விஷயங்களிலும் அவ்வப்போது எடுக்கப்படும் தீர்மானங்கள் ஒருவருடைய செயலாற்றலில் படிப்படியாக நிறைந்த திறமை பெறுதல், பலமுறை செய்துசெய்து தானே எதையும் செய்யக்கூடிய, செய்ய வழிகாட்டக் கூடிய திறமை படிப்படியாக உயர்தல் போன்ற இவைகளே ஆளுமை என்ற கோட்டை கட்டப் பயன்படும் பருத்த கற்களாகும். இந்த ஆளுமைக் கோட்டைக்குள் அறநெறி, பண்டைக்கால இளவரசி எக்காலமும் காவலர் சூழ எப்படி வாழ்ந்து வந்தாளோ [2] அதே போல் குடியிருக்கலாம். இந்த இடைக்காலக் கோட்டைக்குள் அகழிகளும் வானளாவிய கோபுரங்களும் இருந்தன. எப்பொழுதும்

[1] One single moment served to conquer us.
[2] 'lady the chatelaine'.

எதிர்படையைத் தாக்க, தம் கோட்டையைக் காக்க ஆயுதம் ஏந்திக் காவலர் காத்துவந்தனர். அதில் வாழ்ந்த இளவரசி எப்பொழுதும் கோட்டைத் தலைவியாக வாழ வாய்ப்பு அமைக்கப் பட்டிருந்தது. அதேபோல் ஒழுக்கப் பண்பு அல்லது நன்னடத்தை (morality) குடிபுக வேண்டிய மனையொன்று அமைக்கப் பெற வேண்டுமானால், உடலையும் ஒரு வகையில் கட்டுக்குட்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக மது அருந்தாமையாகும். புறத்திலிருந்து அகத்துக்குள் கொள்ளும் நச்சுகளில் முதன்மையானது மது. இது உடல் வலிமையைக் குன்றச் செய்துவிடுகிறது. நாமே உற்பத்திசெய்து நாமே உட் கொள்ளும் நச்சாகிய கரியமில வாயுவை மறுபடியும் சுவாசிக் காதிருக்க வெட்ட வெளியில் நடமாட வேண்டும். நம் தூல உடலைப் புனிதமாக வைத்துக்கொள்வதற்கு இவை எல்லாம் தேவைப் படுகின்றனவென்றால், உள்ளம் இழந்த வலிவை மீண்டும் பெற, உயிரூட்ட, இயற்றிநிலையானது எவ்வளவு தொடர்ந்து பயிற்சிபெற வேண்டுமென்பதைச் சிந்திக்கவேண்டும்.

தாங்களே கற்பித்துக் கொள்ளும் வகையில் ஒப்பிடுதல் தீர்ப் பளித்தல் ஆகிய உள்ளார்ந்த சிக்கலான வினையாற்றல்களைக் குழந்தைகள் தூண்டி விடுகின்றனர். மேலே குறிப்பிட்டன வற்றைச் செய்யும்பொழுது எம்முடைய சிறு குழந்தைகள் தம்முடைய இயற்றிநிலையை அவர்களே கட்டுவித்துக் கொள்கின் றனர். இவ்வாறு செய்யும்பொழுது தங்களுடைய நுண்ணறிவு அமைப்பை ஒழுங்குடனும், தெளிவுடனும் உருவாக்கச் செய்கின் றனர். அவரவரே எந்தத் தீர்மான முடிவையும் செய்யும் வகை யில் ஆயத்தமாக்க வேண்டிய அறிவாகும் மேலே குறிப்பிட்ட செயல்கள். இதனால் பிறருடைய யோசனைகளுக்கு அடிமை யாகாமல் சுயமாக எண்ணித் தீர்மானிக்கும் திறம்பெறுகின் றனர். அவர்களுடைய தினசரிப்பணி ஒவ்வொன்றைப் பற்றியும் தக்க முடிவெடுக்க வல்லவர்களாகின்றனர். ஒன்றை எடுப்பதா வேண்டாமா என்று தீர்மானிக்கின்றனர். ஓர் இசையின் தாளப் போக்கிற்கு இசைந்து நடிப்பதா என்று தீர்மானிக்கின்றனர். மௌன பாடத்தைப் பின்பற்றும் போது தம்முடைய ஒவ்வொரு இயங்கும் உட் தூண்டுதலையும் கட்டுக்குள் வைக்கின்றனர். தங்க ளுடைய ஆளுமையை உருவாக்கும் ‘இடையறா வினையாற்றல்’ எல்லாம் தீர்மானத்தால் இயங்கவைக்கப்படுகிறது. தொடக் கத்தில் இருந்துவந்த குழப்பத்துக்குப் பதிலாக இது நடைபெறு கிறது. முந்தின குழப்ப நிலையில் நடத்தை எல்லாம் உட் தூண்டு தலின் விளைவாய் இருந்தது. அவர்கள் அகத்தில் படிப்படியாகச் சுயமான வாழ்வு ஒன்று உருவாகிவருகிறது. ஐயமும் ஓஞ்சிப்பு

அல்லது பீதி இயல்பும் (timidity) மறைகின்றன. இத்துடன் பழைய மனக் குழப்பமான இருளும் மறைகிறது.

ஒழுங்கும் தெளிவும் மனத்துக்குள் முதிர்ச்சி அடைவதைத் தடைசெய்து மனத்துக்குள் அர்த்தங்கெட்ட கருத்துகளைத் திணித்தோ அல்லது பல பாடத் தொகைகளை மனப்பாடம் செய் வித்தோ அவனே தீர்மானம் செய்யவிடாமல் நாமே அவனுக் காகச் செய்தோமாஞல் நாம் விரும்புகின்ற இயற்றிநிலை வளர்ச்சி என்பது வளர்வது அரிது. இந்த முறைகளை அனுசரித்து, 'குழந் தைக்குத் தன்னுடைய இயற்றிநிலை என்று ஒன்று இருக்கக் கூடாது' என்னும்போதும், 'நான் இயற்றிநிலை கொள்கிறேன்' என்பது எல்லாம் பொய் என்று சொல்லும்போதும் அவர்கள் கூற்றில் ஓரளவுக்கு உண்மை இருக்கத்தான் செய்கிறது. அவர்கள் மெய் யாகக் குழந்தைப் பருவ இயற்றிநிலையை வளரவிடாமல் தடுக் கின்றனர். தங்களுடைய வினையாற்றல்கள் அனைத்தையும் அடக்கி ஒடுக்கும் ஒரு சக்தியை அந்த நிலைமையில் குழந்தைகள் உணர்ந்து கொள்கின்றனர். அவர்கள் பீதி இயல்பைப் பெறுகின்றனர். முழுமையும் நம்பிக்கைக் கொண்ட வேருருவருடைய ஆலோச னையைக் கேட்டு அவர்களுடைய ஒப்புதலைப் பெற்ருலொழிய தாங்களே எக்காரியத்தையும் செய்யப்புகத் தைரியமில்லை. 'இந்தப் பழங்கள் என்ன நிறம்?' என்று ஓர் அம்மையார் ஒரு குழந்தையை வினவினர். அக்குழந்தைக்கு அப் பழம் சிவப்பென்று நிச்சயமாகத் தெரியும், ஆஞல் ஒஞ்சிப்பும்[1] (timidity) நரம்புக் கோளாறுமுடைய அக் குழந்தை விடை பகர்ந்தால் தப்போ சரியோ என்று ஐயப்பட்டு மெல்லிய குரலில், 'என்னுடைய ஆசிரியரைக் கேட்கிறேன்' என்றது.

இயற்றிநிலையின் இயக்க நுட்பங்களில் (The Volitive Mechanism) தக்க தீர்மானத்தை முடிவுசெய்யக்கூடிய மிகத் திறமையைப் பெற ஆயத்தமாக்குகின்ற விருப்பத் துணிவாற்றல் சார்ந்த இயக்க நுட்பமானது ஒன்ருகும். அது வேருென்றுடனும் கலக்காமலே மதிப்புப் பெற்றதாகும். ஆதலால் அது தாஞகவே தன்னுள் வலுப்பெறப்படவேண்டும். இயற்றிநிலையின் மற்றைய பகுதியில்லாமலே உடல் நோய் இயல் நமக்கு எடுத்துக்காட்டு கிறது. மனித ஆளுமையாகிய கவிகை மாடத்தைத் தாங்கும் தூண் ஆகிறது அது. ஐய நோய் என்பது (mania of doubt) மிகவும் தாழ்ந்து நலிந்து உள நோயால் பீடிக்கப் பட்டவர்களிடம் அடிக்கடி காணப்படும் பகுதியாகும். அறநெறிக்கு ஒவ்வாத சில செயல்களையும் தீய வினைகளையும் செய்யுமாறு உந்துகின்ற ஊன்றிய வெறிக்கருத்துகள் (obsessions) சில சமயங்களில் இதற்கு முந்திக்

[1] எளிதில் மருளும் இயல்பு; பீதி இயல்பு.

கொள்கின்றன. எளிதானதும் உண்மையானதுமான சில ஐயுறு நோய்கள் இருக்கலாம். இவை தீர்ப்பெடுக்க முடியாத நிலையைச் சார்ந்தன. இவை தொடர்ந்த வேதனைகளைத் தோற்றுவிக்கின்றன. அது எவ்வித அறநெறி சார்ந்த சிறுவிடுபாடுகளைத் (lapses) தோன்றச் செய்யாவிடினும் மனச் சாட்சிக் குத்தலின் அடியாகவும் பிறக்கலாம். நரம்புக்கோளாறுக்கு என ஏற்படுத்தப்பட்ட ஒரு மருத்துவ நிலையத்தில் 'ஐயப்பிணி' படைத்த ஒருவனைக்கண்டேன். இதற்கு அறநெறி அடிப்படை இருந்தது. இந்த நோயாளி ஓர் ஆண்மகன். அவனுடைய தொழில் வீடுவீடாகக் சென்று குப்பை எல்லாம் சேகரிப்பதாகும். அவனுடைய மனத்தில் ஓர் ஐயப்பாடு விடாமல் இருந்துவந்தது. அவன் தேடி எடுக்கும் குப்பைக் கூடைகளில் தப்பித் தவறி ஏதாவது விலையுயர்ந்த பொருள் கிடந்திருக்குமோ என்பது அவனுடைய ஐயம். அவ்வாறிருப்பின் அப் பொருளை அவன் அபகரித்து விட்டதாகப் பழி வருமே என்ற அச்சம். இந்தப் பரிதாபமான மனிதன் தான் சேகரித்த மூட்டையுடன் போவதற்கு முன் படிக்கட்டுகளெல்லாம் மறுபடியும் ஏறி ஒவ்வொரு கதவாக மறுபடியும் தட்டினான். ஒருவேளை தெரியாமல் ஏதாவது விலை உயர்ந்த பொருள் அவரவர் குப்பைக் கூடையில் விழுந்திருக்கலாமோ என்று கேட்டான். இல்லை என்ற உறுதி மொழி பெற்ற பிறகு சென்றான். ஆனால், மறுபடியும் முன்போல் திரும்பி வந்து மறுபடியும் கதவுகளைத் தட்டித்தட்டி முன்போலவே அவன் கேள்வி கேட்டான். இப்படியே செய்வது அவனுடைய போக்காகிப் போய்விட்டது. அவனுடைய இயற்றிநிலையை பலப்படுத்த மருத்துவரை வழி கேட்டான். பாவம்! கூடைகளில் எந்த விதமான மதிப்புடைய பொருளும் இல்லை என்று திரும்பத் திரும்ப நாங்கள் சொன்னோம். இது விஷயமாக அவன் இனிக் கவலையற்றிருக்கலாம் என்று கூறினோம். வேறு ஏதாவது முன்னீடுபாடு (preoccupation) ஏதுமில்லாமல் தன்னுடைய வாணிபத்தை நடத்தலாம் என்றும் விளக்கினோம். பிறகு அவனுடைய கண்களில் நல்ல எதிர்பார்ப்பைக் குறிக்கும் ஒளி சுடர்விட்டது. 'நான் இனிமேல் கவலையற்றிருக்கலாம்' என்று சொல்லிக்கொண்டே சென்றான். மறு விநாடியில் திரும்பி வந்தான். 'அப்படியானால் நான் இனிமேல் கவலையற்றிருக்கலாமா?' என்று வினவினான். நாங்கள் மறுபடியும் உறுதி கூறினோம், அவனுக்கு. 'ஆம், நிச்சயமாகக் கவலை இல்லை' என்றோம். அவனுடைய மனைவி அவனை அழைத்துக் கொண்டு சென்றுவிட்டாள். தெருவில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிற்பதையும், தன் மனைவியுடன் வாதாடுவதையும், தப்பித்துக் கொண்டு மறுபடியும் பெரிய சலசலப்புடன் வருவதையும் சாரளத்தின் வழியாக நாங்கள் பார்த்தோம். மறுபடி

யும் கதவின்முன் வந்து நின்றான். மறுபடியும் 'அப்படியானால் நான் கவலையற்றிருக்கலாமா ?' என்று வினவினான்.

ஆனால், எத்துணை முறை நேர்மையானவர்கள் தங்கள் உள்ளத்தில் இத்தகைய கோளாறின் நோய் வித்துகளைப் புதைத்து வைக்கின்றார்கள்! ஓர் எடுத்துக்காட்டுப் பாருங்கள். வெளியே புறப்படுகிறான் ஒருவன்; கதவைப் பூட்டுகிறான்; ஆட்டிப் பார்க்கிறான். சில அடிகள் சென்ற பிறகு ஒரு ஐயம் தோன்றுகிறது. கதவை நன்றாக மூடினானா என்ற ஐயம். அவன் அவ்வாறு செய்தான் என்பதை நன்கு அறிவான். கதவை ஆட்டிப் பார்த்ததும் நினைவிருக்கிறது. ஆனாலும், அவனால் அடக்கமுடியாத ஒரு தூண்டுதலால் உந்தப்படுகிறான். அவனும் அவ்வாறே திரும்பப் போய்க் கதவு சரியாகப் பூட்டப்பட்டிருக்கிறதா என்று பார்க்கப் போகிறான். இரவில் படுக்கப் போவதற்கு முன் தங்கள் படுக்கைக்கு அடியில் பூனை போன்ற ஏதாவது விலங்கு இருக்கிறதா என்று கட்டாயம் பார்க்கின்ற குழந்தைகள் இருக்கின்றனர். அப்படி ஒன்றும் அங்கில்லை. என்பதைக் காண்கின்றனர். அங்கு இல்லை என்பதையும் நன்கு புரிந்துகொள்கின்றனர். எலும்புருக்கிநோய் (tubercular bacilli): இந்தக் கிருமிகளும் ஒருவகைச் சிறுசிறு லிம்ஃப் (lymphatic glands) கிரந்திகளில் மறைந்து கிடக்கின்றன. உடல் முழுதும் மெலிந்து வலிவற்றுக் கிடக்கிறது. குறும்பு ஏதோ மறைந்து கிடக்கிறது. அதனால் அவ்வளவு தொந்தரவு ஏதும் இல்லை. முகத்தினுடைய வெளிர்நிறத் தோற்றம் தாற்காலிகமாக மஞ்சளினால் மறைக்கப்படுகிறதே அதேபோல்.

இயற்றிநிலையானது வினையாற்றலின் மூலம் தன்னை வெளிக்காட்ட வேண்டுமென்றும், அவ்வாறு செய்வதும் உடலே தக்க திறமையுடன் செய்யவேண்டுமென்றும் நாம் நம்பினோமானால் அதனுடைய இயக்க நுட்பத்தால் (mechanism) அது உருவாக்கப்படும் பயிற்சி தேவைப்படுகிறது என்பதை நாம் புரிந்துகொள்வோம்.

உடலமைப்பில் உள்ள இச்சா தசைகளில்—வரி வரியான தசைகளில் ஏற்படக் கூடிய இயக்க இணக்கம் (co-ordination of movement) போல் இயற்றிநிலை உருவாவதிலும் நிறைவான ஒற்றுமை இருக்கிறது. நம்முடைய இயக்கத்தில் சரி நுட்பம் அல்லது துல்லியம் (precision) ஏற்படவேண்டுமானால் பயிற்சி இன்றியமையாதது என்பது தெளிவு. முதல் பயிற்சிகள் இல்லாமல் நாம் நடனமாட முடியாது என்பது அறிவோம். கைக்கு உரிய இயக்கப் பயிற்சிகளைச் செய்யாமல் பியானோவை நம்மால் வாசிக்க முடியாது என்பதும் அறிவோம். ஆனால் இதற்கு முன் அடிப்படையான

இயக்க இணக்கங்களாகிய இடம் விட்டுப் பெயர்தலும் (ambulatin) பற்றிப்பிடித்தலும் (prehension) குழந்தைப் பருவத்திலிருந்து நிலைபெற்றிருக்க வேண்டும். இயற்றிநிலையை வளர்ப்பதற்கும் இம்மாதிரியான படிப்படி ஆயத்தங்கள் தேவை என்பது நமக்கு அவ்வளவு தெளிவாக இல்லை.

நம்முடைய உடலில் உள்ள தனிப்பட்ட உடல் தொழில் சம்பந்தமான தசை அமைப்புகள் மனமார்ந்த தசைகள் (Voluntary muscles) அனைத்தும் ஒரே மாதிரி இயங்குவதில்லை. அவை இரண்டு இரண்டு எதிர்எதிராகவே இயங்குகின்றன. சில கையை உடலிலிருந்து வெளியே நீட்டப் பயன்படுகின்றன. வேறு சில அருகில் வர மடக்கப் பயன்படுகின்றன. சில முழங்காலை மடக்க வும், வேறு சில நீட்டவும் பயன்படுகின்றன. அவை தம் இயக் கத்தில் எதிரானவை. உடலின் ஒவ்வொரு இயக்கமும் எதிர் எதிரான தசைகளின் கூட்டத்தாலே ஆயிருக்கின்றன. அவ்வாறு இயங்கும் பொழுது இப்பொழுது ஒன்றும் பிறகு மற்றொன்றுமாகப் பணி ஆற்றிவருகிறது. அவ்வாறு செய்யும்பொழுது மிகச் சிறந்த உடனுழைப்பு (collaboration) நடைபெறுகிறது. அவ்வாறு நடை பெறும் போது சக்தி வாய்ந்தாகவும், கம்பீரமாகவும் அழகாகவும் இயங்கும் திறமை நம்மில் தோன்ற வழிவகுக்கப்படுகிறது. கம்பீரமான உடல் போக்கை நாம் அமைத்துக் கொள்வதோடு இசையில் காணப்படும் தாள இசைபோல் இன்பமயமான இயக்க மும் தோற்றுவிக்கப்படுகிறது.

இந்த எதிர்எதிர் சக்திகளை நெருங்கி இணக்கம் பெறச் செய்யவேண்டுமானால், தேவைப்படுவதெல்லாம் ஒன்றே ஒன்று தான். அது இயக்கத்தில் பயிற்சி இயக்கத்தைக் கற்பிக்கலாம். உண்மையே. ஆனால், இயற்கையான ஒத்து இசைவு ஏற்கெனவே நடந்தேறிய பிறகேதான் முடியும். அப்பொழுது போட்டிப் பந்தயங்கள், நாட்டியம் போன்றவைகளுக்குத் தேவைப்படும் தனிப்பட்ட இயக்கங்களைத் தூண்ட வைக்கலாம். இந்த இயக்கங் களும் திரும்பத் திரும்பப் பயிற்சிசெய்யப்பட்டு வரவேண்டும். அப்பொழுதுதான் நடிப்பவர் புது இயக்க நுணுக்கங்களைத் தானே கற்பனை செய்து கொள்ளமுடியும். கம்பீரம் அல்லது நயமும் விரை வியக்கமும் (grace and agility) கூடிய இயக்கங்களில் மட்டு மல்ல வலிமை சம்பந்தப்பட்ட இயக்கங்களிலும் நடிகர் தாமே பல முறை வினையாற்ற வேண்டியிருக்கிறது. இயற்றிநிலையானது இங்கு நிச்சயமாகத் தன் வேலையைச் செய்கிறது. போட்டிப் பந்தயம் அல்லது நடனமாடுதல், அல்லது தற்காப்புக்கலை, விளையாட்டுகளில் கலந்து கொள்ளுதல் ஆகியவற்றில் நடிகர்

பங்கெடுத்துக் கொள்ள விரும்புகிருர். ஆனுல் இயற்றிநிலே பெற அவர் இடைவிடாது பயிற்சி செய்திருக்க வேண்டும். அப்பொழுது தான் இயக்கத் துணிவாற்றல் சார்ந்த செயல் (volitive act) முடிவாகத் தீர்மானிக்க வேண்டிய துணைக் கருவிகள் ஆயத்தமாக இருக்கலாம். இந்தத் துணைக் கருவிகளுக்கு அது ஆணை பிறப்பிக்கும் இயக்கம் என்பது எப்பொழுதும் விருப்பத்தோடானதே. முதல் முதலில் தசை இணக்கத்தால் இயக்கம் ஏற்பட்டபோதும், புதுப்புது இயக்கங்களே உண்டுபண்டுவதற்காகப் பயிற்சிகளே அமைத்துக் கொண்ட போதும் விருப்பத்தால் ஆன இயக்கங்களே ஆகும். சுருங்கக் கூறினுல் இயற்றிநிலே சேனைத்தலைவன்போல் நடிக்கிறது. நன்ருக ஒழுங்குபடுத்தப்பட்டும் கட்டுப்பாடுடனும் சிறந்த திறமையும் பெற்ற போர் வீரர்கள் போலும் தலைவனின் ஆணையைத் தசைகள் கீழ்படிந்து நிறைவேற்றுகின்றன. தசைகள் நிறைவு பெறப்பெற இந்தத் தசை இயக்கத்தை எதிர்பார்க்கும் விருப்பம் சார்ந்த இயக்கமும் தன் சக்தியில் திறம் உயர்ந்து கொண்டே போகிறது. இந்த உயர்வுக்குத் துணை புரியும் வகையில் தசைகளும் தக்க நிலேயை அமைத்துத் தருகின்றன.

குழந்தையின் விருப்பம் சார்ந்த இயக்கத்தைக் கற்பிக்க வேண்டும் என்று மனத்திற் கொள்வோம். அவ்வாறு செய்வதற்கு முதலில் உறுப்புகளே இயங்க விடாமல்[1] 'சிமெண்ட்' போன்ற பசையால் மூடி, தசைகளெல்லாம் இயக்க சக்தி இழக்கச்செய்து பக்கவாதம் அடைந்ததுபோல் ஆக்கிவிடுவோம். பெறவேண்டிய பலன்களெல்லாம் இந்த முறையில் பெற்ற பிறகு கோமாளிகள் கழைக்கூத்தர், குத்துச்சண்டை வீரர்கள், மல்லர்கள் முதலியவர் களின் வாழ்க்கை வரலாறுகளைக் குழந்தைக்கு எடுத்துக்காட்டி, அவனும் அவர்களேப் பின்பற்றி நடந்து கொள்ளவேண்டும் என்று ஊக்கம் அளித்தால் அந்தக் குழந்தையும் அவ்வாறு திறமை பெறுவான் என்று எவருக்காவது எண்ணம் தோன்றினுல், அதைப் போன்ற நம்ப முடியாத பேதைமை வேறு எதுவும் இருக்க முடியாது.

எனினும் குழந்தையின் இயற்றிநிலேயைக் கற்பிப்பதற்கு இதேபோல்தான் செய்கிருேம். முதலில் அதை (இயற்றிநிலேயை) துடைத்தெறிகிருேம். அல்லது நாம் கூறுவதுபோல் முறித்து விடுகிருேம். இயற்றிநிலேயின் ஒவ்வொரு பகுதியையும் வளர விடாமல் தடைசெய்து விடுகிருேம். அதற்குப் பதிலாக குழந்தையின் எல்லாவற்றுக்கும் நம்மை அங்குத் திணித்துக் கொள்கிருேம். நம்முடைய இயற்றிநிலேயால் அவனே அசைவற்றிருக்கவோ இயங்கவைக்கவோ செய்கிருேம். அவனுக்கு இது

[1] 'எலும்புகளே முறித்து விட வேண்டும் என்று நான் சொல்ல விரும்பவில்லே' என்கிருர் அம்மையார்.

வேண்டும், வேண்டாம் என்று தீர்மானம் செய்வது நாமே. இத்துணையும் செய்த பிறகு மனத்தில் எண்ணினால் போதாது. செயலாற்றல் வேண்டும் ('to will is to do'). இயற்றிநிலை என்றால் செய்தல் என்று அவனுக்குப் பாடம் சொல்லி மன நிறைவடைகிறோம். அவன் கற்பனைக்காக மாயக்கதைகளும், வீரர் வரலாறும், இயற்றிநிலை கொண்ட மாபெரும் அரக்கர்கள் பற்றியும் அவனுக்குச் சொல்கிறோம். அவர்கள் செயல்களை மனப்பாடம் செய்யச் சொல்கிறோம். அவர்களைப்போல் இவர்களும் இயற்றிநிலை தூண்டப் பெறுவார்கள் என்றும் நம்புகிறோம். இவ்வளவும் செய்தால் வேறொன்றும் தேவையில்லை. மாயம் தன் வேலையை முடித்துவிடும் என்று நம்புகிறோம். இதெல்லாம் நாமே நம்மை ஏமாற்றிக் கொள்கின்ற மாயை.

நான் குழந்தையாய் இருக்கும்பொழுது தொடக்கப் பள்ளிக்கூடத்திற்குப் போய் வந்தேன். அங்கு ஒரு நல்ல ஆசிரியை இருந்தார். எங்களைக் கண்டால் அவருக்கு நிரம்பப் பிடிக்கும். நாங்கள் ஆடாமலும் அசையாமலும் அவரவர் இருப்பிடத்தில் எங்களை இருக்கவைத்துவிட்டு அவர் ஓயாது உரையாற்றிக் கொண்டிருப்பார். அவர் முகத்தில் இரத்த ஓட்டம் இல்லாதவர்போல் இருந்தார்; களைத்தும் போயிருந்தார். சிறந்த மாதர்கள் வரலாற்றினை நாங்கள் மனப்பாடம் செய்யவேண்டும் என்பது அவருடைய நம்பிக்கையான கருத்து. முக்கியமாக வீர மாதர்களைப் பற்றி எண்ணுவார். அவ்வாறு செய்வதாலும் நாங்களும் அவ்வீரமணிகளைப் போல ஆவோம் என்பது அவருடைய நம்பிக்கை. அநேக வாழ்க்கை வரலாறுகளைப் படிக்கவைத்தார். எத்துணை வகையில் புகழ் பெறலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக இவ்வாறு படிக்கவைத்தார். நாங்களும் வீர மாதர்களாகலாம் என்றும், அவர்களில் பலர் இருந்திருக்கின்றனர் என்றும் எடுத்துக்காட்டி வந்தார். இவ்வாறு எங்களை ஊக்குவிக்கும் வகையில் தினந்தோறும் எடுத்துக்கூறிவந்த சொற்பொழிவு ஒரே மாதிரியாகவே இருந்தது. 'நீங்கள் கூடப் பிரசித்தி பெற்றவர்களாக முயற்சிசெய்ய வேண்டும். நீங்களும் புகழ்பெற்றவர்களாக விரும்பமாட்டீர்களா?' என்று அவர் கேட்க நான், 'இல்லை இல்லை' என்று ஒருநாள் 'சப் என்று சொல்லிவிட்டேன். 'நான் ஒரு நாளும் அவ்வாறு செய்யமாட்டேன். எதிர்காலக் குழந்தைகளைப் பற்றி நான் மிகவும் அக்கறை கொள்கிறேன். இருக்கின்ற வாழ்க்கை வரலாற்றுப் பட்டியலுக்கு இன்னும் ஒரு புதியதைச் சேர்க்க நான் விரும்பவில்லை' என்றும் சொல்லிவிட்டேன்.

* * *

கடைசியாக நடைபெற்ற அனைத்துலக ஆசிரிய இயல், உள இயல் சம்பந்தப்பட்ட மாநாட்டுக்குப் பல நாட்டுக் கல்வித் துறை

வல்லுநர் வந்திருந்தனர். 'இளைஞர்களிடம் நற்பண்பு இல்லாதது மனித குலத்துக்கே அபாயம்' என்று எல்லோரும் ஓரேமனமாகத் தம் கருத்தை வெளியிட்டனர். மனித இனத்தில் நற்பண்பு இல்லை என்பதல்ல; ஆனால் பள்ளிக்கூடம் உடலைக் கோணலாக்கி உள்ளத்தைப் பலவீனமாக்குகிறது என்பதே உண்மை. இப்பொழுது வேண்டியதெல்லாம் விடுதலை (liberation). அப்பொழுது மனிதனுடைய உள்ளார்ந்த சக்திகளெல்லாம் மலர்ச்சி பெறும்.

நம்முடைய உறுதியான இயற்றிநிலையை எங்ஙனம் உபயோகிப்பது என்பது ஓர் உயர்ந்த பிரச்சினை. அதுவும் ஓர் அடிப்படைக் கருத்தை ஒட்டியதாக இருக்கிறது. அதாவது இயற்றிநிலை ஒன்றிருக்கிறது. அது வளர்க்கப்பட்டிருக்கிறது; வலிவும் பெற்றிருக்கிறது. இயற்றிநிலையின் வலிமையைக் குழந்தைகள் கற்றுப் பாராட்டவேண்டியதற்குக் கொடுக்கப்படும் உதாரணங்களில் விட்டோரியா அல்ஃபியரி (Vittorio Alfieri) என்பவருடைய வாழ்க்கை வரலாறும். அவர் தம்முடைய முதுமைப் பருவத்திலேதான் கல்வி கற்கத் தொடங்கினார். ஆரம்பத்தில் கற்க வேண்டிய சில அக்கறையூட்டாத சப்பென்ற விஷயங்களை நிறைந்த முயற்சியால் கற்றுக்கொண்டார். இதுவரை சாதாரணமான வாழ்க்கையில் இருந்துவந்தவர் லத்தீன் இலக்கணத்தைக் கற்கப் புகுந்தார். பட்டம் பெறும்வரை அவர் விடாமல் கடைப்பிடித்து வந்தார். அவருடைய தீவிர உழைப்பால் இலக்கிய மேதை என்ற பட்டப்பேர் பெற்று எம் நாட்டுப் புலவர்களில் ஒருவரும் ஆனார். அவர் எவ்வாறு மாறுதல் அடைந்தார் என்பதைச் சில சொற்றொடர்களால் சொன்னார். அதையே ஒவ்வொரு இத்தாலிய ஆசிரியையும் குழந்தைகளுக்கு எடுத்துக் கூறுகின்றனர். 'நான் மனத்தில் உறுதியாக எண்ணித் துணிந்தேன்; இடை விடாது எண்ணித் துணிந்தேன்; என்னுடைய முழுப் பலத்துடனும் எண்ணித் துணிந்தேன்.'

விட்டோரியோ அல்ஃபியிரி எண்ணித் துணிவதற்கு முன் அவர் காதலித்த ஒரு சமுதாயச் சீமாட்டிக்கு அடிமையானார். அவள் ஏறுமாறானவள். அல்ஃபியிரி தம்முடைய ஆசைக்கு அடிமையாய் இருப்பதால், தம்முடைய வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்வதாக உணர்ந்தார். ஓர் உட்தூண்டுதல் அவரைத் தாமே உயர்த்திக் கொள்ளுமாறு உந்திற்று. தனக்குள் புதைந்து கிடக்கின்ற பெரிய மனிதனை உணர்ந்தார்; இன்னும் விரிவு பெறாத சக்திகள் நிறைந்திருப்பதை எண்ணினார். ஆனால், அவை உள்ளார்ந்தவை; வெளிப்படையாக இன்னும் காட்சி அளிக்காதவை; விரிவானவை. உவகையுடன் இந்த் மறைந்து கிடந்தனவற்றை வெளிச்சத்துக்குக் கொண்டுவந்திருப்பார். அவைகள் உள்

ளிருந்து அழைக்கும் குரலுக்கு இணங்கியிருப்பார். அவைகளுக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருப்பார். ஆனால் அவருடைய அன்புக் கிழத்தியிடமிருந்து ஒரு வாசனை ஓலை வந்தது. அன்று நடைபெறவிருக்கும் நாடக அரங்கில் தனி அறையில் தன்னுடன் வீற்றிருந்து களிக்குமாறு அழைத்திருந்தாள். அன்று மாலை முழுவதும் வீணாகிவிடும். இந்தத் தூண்டுதலுக்கு இடங் கொடுக்கக் கூடாதென்றுதான் இருந்தார். ஆனால், அந்தச் சீமாட்டி இவர்மேல் பொழிந்த சக்தி அவருடைய இயற்றி நிலையையே வென்றுவிட்டது. எப்படியோ நாடகத்துக்குச் சென்றார். மிகவும் தாழ்ந்த பண்பு காட்டும் நாடகம். அவளருகில் உட்கார்ந்திருக்கும் பொழுது அவருக்குக் கோபமும் களைப்பும் பொத்துக் கொண்டு வந்தது. தமக்குள் படு வேதனையாகவே இருந்தது. இறுதியில் இந்த அழகான சீமாட்டியை அவர் வெறுப்பதாக உணர்ந்தார்.

அவருடைய திண்ணம் வெளிப்படையில் உருவெடுத்தது. இருவருக்கும் இடையே வென்று சமாளித்தற்கரிய தடை ஒன்றை நிர்மாணித்துக்கொள்ள உறுதிகொண்டார். அவர் இதுவரை வளர்த்துவந்த அழகான சடையை அறுத்து எறிந்துவிட்டார். நற்குலத்தில் பிறந்தவருக்கு அக்கால அடையாளம் அந்தச் சடை ஆகும். அதில்லாமல் வெளியே புறப்படுவது வெட்கக்கேடு. பிறகு தம்மைத் தம் நாற்காலியோடு கயிற்றால் தாமே கட்டிக் கொண்டார். பல நாள்கள் அதில் ஆத்திரம் பொங்கக் காலங் கழித்தார். ஒரு வரிகூட அவரால் வாசிக்க முடியவில்லை. அவர் உடல் அசையாமல் ஓரிடத்தில் கிடந்தது. அவருடைய காதலியை அவசரமாக நெருங்க வேண்டும் என்று உள்தூண்டுதல் இருந்த போதும் வெளியே சென்றால் நாலுபேர் நகைப்பார்களே என்ற எண்ணம் ஒன்றே அவரை வெளியேறாமல் தடுத்தது.

இவ்வாறு அவர் எண்ணித் துணிந்தார். எப்பொழுதும் எண்ணித் துணிந்தார்; தம் முழுப்பலத்துடனும் எண்ணித் துணிந்தார். அவருடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் மனிதனைச் சுதந்திரத்துடன் விரிவடைய விட்டுவிட்டார். இப்படி இவர் தம்மைப் பயன் இன்மையிலிருந்தும் அழிவிலிருந்தும் தாமே காத்துக் கொண்டார். அவருடைய அழியா நிலைக்காகத் தாமே பாடுபட்டார்.

இதைப் போலவே குழந்தைகளிடத்திலும் அவர்களுடைய இயற்றிநிலையைக் கற்பித்துச் சில பண்புகளைத் தோற்றுவிக்க நாம் விரும்புகிறோம். மனிதனை அழிக்கும் வெட்டி இடம்பங்களிலிருந்து (Vanity) தம்மைக் காத்துக்கொண்டு அந்தரங்க வாழ்வு விரிவடை

யத் துணை புரியும் தொழில்களில் ஈடுபட்டு, மென்மேலும் தொழில்களைத் தாமே ஏற்றுக்கொள்ளச்செய்து, அவர்களுடைய அழியா நிலைக்குத் தாமே உழைக்கும்படி செய்ய விரும்புகிறோம்.

இந்த அன்பும் கவலையும் கொண்ட ஆசை நல்ல காப்புடன் அவர்களை நம் பின் அழைத்துச் செல்லச் செய்கிறது. தன்னைத்தான் காத்துக்கொள்ளக் கூடிய சக்தியொன்று குழந்தை உள்ளத்தில் குடிகொண்டிருக்க வில்லையா? குழந்தை மனமார நம்மிடத்தில் அன்பு காட்டுகிறான். தன்னுடைய பிஞ்சு மனத்தால் காட்டக் கூடிய பக்தியுடன் நம்மைப் பின் தொடர்கிறான். எனினும் அவனுடைய அந்தரங்க வாழ்வை நடத்தி வைக்கும் ஒன்று அவனுள் இருக்கிறது. அது அவனுடைய விரிவாக்கும் சக்தியாகும். இந்தச் சக்திதான் பண்டங்களைத் தொட்டுப் பார்த்து அவை என்ன என்று அறிய வைக்கிறது. அப்பொழுது நாம் என்ன சொல்கிறோம்? 'தொடாதே' என்கிறோம். அவன் இங்குமங்கும் நடமாடித் தன் சமநிலை காணப் (equilibrium) பார்க்கிறான். அப்பொழுது நாம் 'சும்மா இரு' என்கிறோம். அறிவைப் பெருக்க நம்மை அவன் கேள்வி கேட்கிறான். 'நச்சாதே' என்கிறோம் நாம். நம் அருகே அவனுக்கு ஓரிடம் ஒதுக்கிவைக்கிறோம். தோல்வி அடைந்து வலிவிழந்து நாடகம் காணப்போய்த் தனி அறையில் (box) உட்கார்ந்து கொண்டிருந்த அல்ஃபியரி (Alfieri) போல் ஏதோ சில சோர்வூட்டும் பொம்மைகளின்முன் குழந்தையை இருக்கச் செய்கிறோம். அவன் நம் போக்கினைப் பற்றிக் கீழ்வருமாறு நினைக்கலாம்: 'அவளுக்கு அவ்வளவு அன்பு காட்டுகிறேன்! அவள் ஏன் என்னை நிர்மூலமாக்கப் பார்க்கிறாள்? (annihilate) ஏன் என்னை அவளுடைய ஏறுமாறான நடத்தையால் ஒடுக்குகிறாள்! என் உள்ளத்தில் இருக்கும் விரிவடையக் கூடிய சக்தியை வளரவிடாது தடுப்பது அவளுடைய தாறுமாறான போக்குகள் போலும். நான் அவளை நேசிக்கிறேன் என்ற காரணத்துக்காக என்னை வீணானதும் களைப்பூட்டுவதுமான பண்டங்களோடு தனியாக ஒதுக்கித் தள்ளி விடுகிறாளே' என்றெல்லாம் குழந்தை நினைக்கலாம்.

இவ்வாறு குழந்தை தன்னைக் காத்துக் கொள்ள வேண்டுமானால் அவனுடைய உள்ளச்சக்தி விட்டோரியா அல்ஃபியரி (Vittoria Alfieri) போல் வலிவு பெறவேண்டும். ஆனால் அநேகமாக அவனால் அது முடிவதில்லை.

குழந்தை ஒரு பலியாள் என்றும் நாம் அவனை இல்லாதபடி ஆக்குகிறோம் என்றும் உணர்வதில்லை. அவனுடைய வெறுமையான தன்மையிலிருந்து (nullity) ஓர் ஆணையால் அவனிடம் இருந்து அனைத்தையும் கேட்கிறோம். நாம் எல்லாம் வல்லவன்

என்ற பெயரால் அவ்வாறெல்லாம் செய்கிறோம். முதிர்ந்தோனே (adult man) நமக்குத் தேவை என்றால் அவ்வாறு அவனை முதிர விடாமல் முதிர்ந்தோனாக வேண்டும் என்கிறோம்.

விட்டோரியோ அல்ஃபியிரியின் வரலாற்றினைப் படித்த பலர் தங்களுடைய மக்களிடத்தில் அவரிடம் (விட்டோரியோ) கண்டதை விட இன்னும் மேலான போக்கினை எதிர்பார்க்கலாம். தலை முடியை அறுத்துக் கொள்வதும் நாற்காலியில் கட்டுண்டு கிடப்பதும் போன்ற புறத் தடைகள் தேவைப் படாமலிருக்கலாம் என்று எண்ணியிருக்கலாம். ஒரு தெய்விக சக்தியே அவனுடைய வேண்டாப் போக்கினைத் தடுத்திருக்கும் என்றும் எதிர்பார்த்திருக்கலாம். எம்முடைய பெரும் புலவர் ஒருவர் ரோமன் லுக்ரீஜியா (Roman Lucrerzia) ரோமாபுரியின் கற்புக்கரசியைப் பற்றிப் பாடும்பொழுது தற்கொலை செய்து கொண்டதைக் கண்டிக்கிறார். அவள் அவ்வாறு தற்கொலை செய்து கொள்வதை விட இன்னும் உயர்ந்த நன்னெறியைக் கடைப்பிடித்தவளாக இருந்திருந்தால் அந்தக் கற்பழிப்புத் துயரத்தினாலேயே அவள் உயிரிழந்திருக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறார்.

அறநெறி நோக்கங்களை உடைய தந்தை தம்முடைய மகன் வலிவு பெற்று அறநெறிப்பயன் பெறுமளவுக்கு உயரப் பெரும்பாலும் அத் தந்தை தம்மையே இக் கேள்வி கேட்டுக் கொண்டிருக்க மாட்டார். அநேகமாக மகனுடைய இயற்றிநிலையை முறித்துத் தம்முடைய இயற்றிநிலைக்கு அவனை அடிமையாக்கி வைத்த தந்தையாகவே இருக்கலாம். எந்த இவ்வுலகத் தந்தையாலும் அத்தகைய உயரத்துக்கு உள்ளச் சக்தியை உயர வைக்க முடியாது. மனிதனுடைய உள்ளத்தில் மௌன குரலில் பேசுகின்ற அந்த மாயக் குரலால்தான் அவ்வாறு நிறைவேற்ற முடியும். இயற்கையின் விதிக்கு எதிராகக் கிளம்பும் குரல் உரத்த கடுங்குரலாக இருக்கிறது. பெற்ற தந்தை மற்றொரு உயிரினத்தை ஒடுக்கி அடக்கித் தனக்குப் பணியச்செய்ய விரும்புவதுபோல் இவனுடைய மௌனத்தைக் கலைக்கிறது. அம் மௌனம் எத்தகையது ? தெய்விகத் தொழில்களான அமைதி, விடுதலை என்பவை உருவாக்கும் நிலைக்களம் அது. 'வலிவுள்ள மனிதன்' இல்லாவிடில் எல்லாம் வீண்.

ஒரு பாதிரி செயின்ட் டெரிசா (Saint Teresa) என்பவர் முன்னிலையில், 'கார்மிலைட் நன்' (Carmelite Nun)[1] ஆக விரும்பும் ஓரிளம் நங்கையை நிறுத்தி, இவள் தெய்விக குணம் பெற்றவள்

[1] பாலஸ்தீனத்தில் (Palestine) 11ச்சீல் கார்மெல் மலையருகே தொடங்கப் பெற்ற சபையைப் பின்பற்றி இரந்துண்டு வாழும் நியதியுடைய துறவு நங்கை.

என்று அறிமுகப் படுத்திவைத்தார். செயின்ட் டெரிசா என்பவர் இளம் பாதிரியை நோக்கி, 'பாதிரியாரே நம் ஆண்டவன் இந் நங்கைக்குப் பக்தி அளித்திருக்கிறார். ஆனால் இவளுக்குத் தீர்ப் பளிக்கும் திறமை இல்லை. இனிமேலும் அவள் அதைப் பெறாள். அவள் எப்பொழுதும் நமக்கு ஒரு சுமையாகவே இருப்பாள்' என்று கூறினார்.

தற்கால இறைமை நூலாரில் (Theologians) மிகச் சிறந்தவர் ஒருவர் ஜோன் ஆஃப் ஆர்க் (Joan of Arc) என்ற வீர மாதினைப் புனிதத் திருமுறையில் சேர்க்கலாமா (Canonisation) என்ற சங்க நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்ள அவளுடைய ஆளுமை பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சிகள் செய்தார். 'அவள் என்ன ஒரு தெய்விக ஆற்றலுக்கு அடிமையானவள்தானே. தெய்விக உற்சா கத்துக்கு ஆளான வெறும் மாதுதானே' என்று கூறப்பட்ட மறுப்புக்கு அவர் அளித்த ஆணித்தரமான உத்தாரம்: 'எவரும் தம்மையே ஏமாற்றிக் கொள்ள வேண்டாம். மனிதனுக்குப் பாற்பட்ட ஒரு சக்திக்கு ஜோன் ஆப் ஆர்க் கண்மூடின இயங்காத ஒரு கருவியாக இருந்தாள் என்று எண்ண வேண்டாம். பிரான்ஸ் தேசத்துக்கு (பிரிட்டனின் ஆட்சியினின்று) விடுதலை பெறச் செய் தவள் தன்னுடைய முழுஆளுமையும் தன் கைக்குள் அடக்கி வைத்திருந்தாள். இதன் உண்மையை நிரூபிக்க எண்ணித் துணி வதிலும் துணிந்தபின் கருமம் செய்வதிலும் தன்னுடைய சுதந்திரச் செயலைக் காட்டினாள்' என்றும் எடுத்துக் கூறினார்.

கல்வி கற்பிக்கும் ஆசான் ஒருவருடைய பணி என்ன என்று நான் நம்புகிறேன்? முதலாவது குழந்தையின் சக்திகளைக் காத்து, அவை கள் தம்மை வெளிப்படுத்துவதைத் தடுத்து ஒடுக்காமல், தக்க வழியில் செல்லத் திருப்பி விடுதலும் ஆகும். குழந்தையின் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் சக்தியுடன் கலக்க மனிதனை இணைப்பதும் அச் சக்தி அவன் மூலமாகவே பணியாற்ற வைப்பதும் ஆகும்.

# 8. நுண்ணறிவு அல்லது விவேகம்

குழந்தையினுடைய விடுதலையைச் செய்யவைக்கும்—திறந்து வைக்கும் 'சாவி'—கல்விக்குத் தேவையான சூட்சுமத்தை இயங்க வைக்கும் சாவி—எது என்று ஓரளவு சிந்தனைசெய்து பார்ப்போம்.

தங்குதடை இல்லாமல் இங்குமங்கும் இயங்கக் கூடிய குழந்தை, அவ்வாறு இயங்கும் பொழுது தன்னையே நிறைவுபடுத்திக் கொள்கிறான். அக் குழந்தை தன்னுடைய இயக்கங்களில் ஒரு நுண்ணறிவு நோக்கம் பெற்றிருக்கும். தன்னுடைய அந்தரங்க ஆளுமையைத் தானே விருத்தி செய்யக் கூடியவனும் குறிப்பிட்ட நேர அளவில் ஒரே பணியில் இடைவிடாது ஈடுபடக் கூடியவனும், அத்தகைய அடிப்படை இயல் நிகழ்ச்சிகளில் தன்னை ஒழுங்கு படுத்திக் கொள்ளக் கூடியவனும் ஆன அப்பேர்ப்பட்ட குழந்தை ஒரு நுண்ணறிவினால் நிலைபெறச் செய்யப்படுவதுடன் தொடர்ந்து வழிகாட்டப்படவும் ஆகிறான். இதின்றி இவன் பணியில் தொடர்ந்து ஈடுபடுவது, அந்தரங்க அமைப்பு, அவனுடைய முன்னேற்றம் ஆகியவை நடைபெறுவது இயலாதது. அடிமைப்பட்ட குழந்தையை, நாம் படிப்படியாக வழிகாட்டி நடத்தி வைப்பதை நாம் தடுக்கும் பொழுதும், நம்முடைய சொந்த முயற்சியை அவன் மேல் திணிக்காமல் குழந்தைக்கு விடுதலை அளிக்கும் பொழுதும், அவனுக்குப் பொருத்தமானதும், அவன் வளர்ச்சிக்குத் தகுந்தது மான புறப்பொருள்கள் சூழ்நிலையில் விட்டுவிடும் பொழுதும், அவனுடைய சொந்த நுண்ணறிவின்கீழ் அவன் நடந்துகொள்ளுமாறு நாம் நம்பிக்கையுடன் அவனை விட்டு விடுகிறோம். அவனுடைய இயங்கும் வினையாற்றல்கள் குறிப்பிட்ட இயக்கங்களில் ஈடுபட வழி காட்டும். அவனே தன் கைகளையும் முகத்தையும் கழுவிக் கொள்வான்; அறையைப் பெருக்குவான்; தட்டுமுட்டுச் சாமான்களில் தூசியடிப்பான்; தன் ஆடைகளை மாற்றிக் கொள்வான்; கம்பளத்தை விரிப்பான்; உண்டி உண்ணத் தட்டுகளை எல்லாம்

மேசை மேல் அடுக்குவான்; செடிகளை வளர்ப்பான்; விலங்குகளைப் பாதுகாப்பான். தன்னுடைய வளர்ச்சிக்கு உகந்ததைத் தேர்ந்தெடுப்பதுடன் அதிலேயே தொடர்ந்து ஈடுபடுவான். புலன் உணர்ச்சி சார்ந்த ஒரு புறப்பொருளினுல் ஈர்க்கப்பெற்று விடுகிருன். அது ஒரு பொருளினின்று மற்ெருரு பொருளின் வேற்றுமை காணச் செய்கிறது. தேர்ந்தெடுக்கப் பகுத்தறியத் தன்னையே திருத்திக் கொள்ளவும் செய்கிறது. இவ்வாறு பெறப்படுபவை அந்தரங்க வளர்ச்சிக்குக் காரணமாய் இருப்பதுடன் இன்னும் முன்னேற்றம் அடைவதற்கு வலிவுடைய உந்து சக்தியாகவும் இருக்கிறது. இவ்வாறு எளிய பொருளிலிருந்து சிக்கலான பொருளுக்குப் போகும் வகையில் அவன் ஒரு பண்பாட்டினைப் பெறுகிருன். மேலும் தன்னுடைய அந்தரங்க ஒழுங்கமைப்பினுல் தன் பண்பினையும் ஒழுங்குபடுத்திக் கொள்கிருன். இந்த அந்தரங்க ஒழுங்கும் தான் பெற்ற திறமைகளைக் கொண்டு (Skills) தானே உருவுபெறுகிறது.

ஆதலால் ஒரு குழந்தையைத் தனியே விட்டுவிடும்பொழுது, அவனுடைய நுண்ணறிவின் பாதுகாப்பில் விட்டு விடுகிருேம். எல்லோரும் பொதுவாகக் கருதப்படுவடுவதுபோல் அவனுடைய புலன் உணர்வின் (instinct) பாதுகாப்பில் விட்டுவிடுவதாக நினைக்கிருர்களே அப்படியன்று. புலன் உணர்வு என்று சொல்லும் போது விலங்குகளைச் சார்ந்த புலன்உணர்வையே குறிக்கிருேம். குழந்தைகளை நாய்க்குட்டிகள் போலும் பிற வீட்டு விலங்குகள் போலும் கருதுவது பழக்கமாய்ப் போய்விட்டது. விடுதலைக் குழந்தை என்ருலே நாய் குரைப்பதையும் குதிப்பதையும் தித்திப்புகளைத் திருடுவதையுமே நம் நினைவுக்குக் கொண்டுவருகிருேம். விலங்கைப் போல் நடத்தப்படும் குழந்தை வம்பு செய்கிருன். இத்தகைய புண்படும் நிலைமையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தற்காப்பு ஏற்பாடுகளை அமைத்துக் கொள்ளப் பார்க்கிருன். இவைகளை யெல்லாம் பார்த்துப் பார்த்து இவன் நடத்தைகளெல்லாம் கெட்ட புலன் உணர்வுகளால் நடைபெறுகின்றன என்று முடிவு கட்டி விடுகிருேம். இவனை உயர்த்தும் எண்ணத்தால் இவனை முதலில் செடிகளுக்கும் மலர்களுக்கும் ஒப்பிடுகிருேம். செடிகள் எப்படி இயங்காதோ அதேபோல் இவர்களும் இங்குமங்கும் இயங்காதவண்ணம் செய்து விடுகிருேம். அதே உணர்ச்சிகளுக்கு ஆளாக்குகிருேம். அவனை அடிமையாக்கி விடுகிருேம். ஆனுல் அவன் தெய்விகப் பரிமளம் வீசும் செடியாவதில்லை. வேறு மாற்று வழி இல்லாத காரணத்தால் அவன் அப்படித்தான் இருப்பான் என்று நம்புகிருேம். படிப்படியாக ஒழுக்கக் கேட்டின் அறிகுறிகள் 'மனிதப் பொருள்' (human substance) எனத் தோன்றி உணர்ச்சி புண்பட்டு உயிரிழக்கிறது.

ஆனால், அவனுடைய சொந்த நுண்ணறிவின் மற்போர்க்கள நிறுவனத்தின் (palestra) கீழ் நாம் விட்டு விடும் பொழுது அவனுடைய மாதிரியே அடியோடு மாற்றமடைகிறது.

விடுதலையைப் பற்றி நாம் ஆராயும் பொழுது இத்தகையதைப் பற்றியே நாம் புதுக் கருத்துகளை அமைத்துக் கொள்ள வேண்டும்.

மனிதனுடைய சமூக விடுதலை சம்பந்தமான பிரச்சினைக்கும் நுண்ணறிவு ஒரு திறவுகோலாக இருக்க வேண்டுமென்று நான் நம்புகிறேன். அண்மையில் 'எண்ணத்தின் சுதந்திரம்' என்று மேலோடியாகப் பேசப்படுவதை நிறையாகக் கேட்டிருக்கிறோம். குழந்தைகளைப் பற்றிய சார்பெண்ணங்கள் போல் (prejudices) சிலவற்றால் இவ் விஷயம் மறைக்கப்பட்டிருக்கிறது. மனிதன் தன் எண்ணங்களை தன் விருப்பம்போல் எண்ண விட்டுவிட்டால், அவன் விடுதலை பெற்று விடுவான் என்று கருதப்பட்டிருந்தது. ஆனால், அவனால் எண்ண முடியுமா? அவ்வாறு எண்ணும் சுதந்திரம் பெற்ற காலத்திலே மூளை நரம்புக் கோளாறுகளும் பரவியிருக்கவில்லையா? எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்கும் சமூக சுதந்திரத்தை அளிக்க வேண்டும் என்று கருத்தாய்வு கொண்டதும் அதே காலம் அல்லவா?

இப்பொழுது ஓர் எடுத்துக்காட்டைப் பார்ப்போம். ஒரு நோயாளியிடம் சென்று 'உனக்கு நோய் வேண்டுமா அல்லது ஆரோக்கியம் வேண்டுமா?' என்று கேட்டால், அவ்வாறு ஒன்றைச் செய்ய அவன் சுதந்திரம் பெற்று விடுவானா? கல்லாத ஒரு விவசாயிடம் நல்ல நோட்டையும் கள்ள நோட்டையும் கொடுத்து எது வேண்டுமானாலும் எடுத்துக்கொள் என்று சுதந்திரம் அளித்தால் அவன் எடுத்துக்கொள்வான். கள்ள நோட்டைத் தேர்ந்தெடுத்தால் அவன் சுதந்திரம் பெறவில்லை; அவன் ஏமாற்றப்பட்டான். நல்ல நோட்டைத் தேர்ந்தெடுத்தானானால் அப்பொழுதும் அவன் சுதந்திரம் பெறவில்லை. அவன் அதிர்ஷ்டசாலி. அவனுக்கு இது நல்ல நோட்டு இது கள்ளநோட்டு என்று கண்டுபிடிக்கக் கூடிய அறிவு பெற்ற போதுதான் சுதந்திரம் பெற்றவனாகிறான். நல்லது கெட்டது என்று பகுத்தறிவது மட்டுமல்ல; அவை ஒவ்வொன்றுக்கும் சமூகத்தில் என்ன மதிப்புண்டு என்பதையும் தெரிந்திருக்க வேண்டும். அந்தரங்க அமைப்பைத் தரும் போதுதான் ஒரு மனிதன் சுதந்திரம் பெறுகிறான். சமூக அனுமதிக்கும் இது அப்பாற்பட்டது. அந்த அனுமதிப்பெல்லாம் சுதந்திரத்தின் புற வெற்றியே யாகும். மனிதனுடைய சுதந்திரம் அவ்வளவு சுலபமான பிரச்சினையாக இருந்தால் கபோதியை, 'பார்' என்றும் செவிடரை, 'கேள்' என்றும் வெறும் சட்டம் போட்டுத்

திக்கற்ற மன்பதையை (humanity) நல்ல உடல் நலத்துக்குத் திரும்பக் கொண்டுவந்து விடலாமே.

நாம் நம்மையே ஏமாற்றிக் கொள்ளாதவர்களாயிருந்தால், ஒரு நாள் மனிதனுடைய அடிப்படையான உரிமைகளெல்லாம் அவனே அமைத்துக் கொண்டவைகளே ஆகும் என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். அது தடையற்ற தளை நீங்கப் பெற்ற சுதந்திரம். தன்னுடைய சூழ்நிலையிலிருந்து தன் வளர்ச்சிக்குத் தேவையானவற்றைத் தானே தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் இருக்க வேண்டும். சுருங்கச்சொல்லின் ஆளுமை சம்பந்தமான சமூகப் பிரச்சினைகளுக்கான அடிப்படையான பரிகாரத்தை நாம் கல்வி ஒன்றினால் பெறமுடியும்.

குழந்தைகள் எமக்குக் காட்டினது ஆழ்ந்து அறிவூட்டத் தக்கனவாகும். அவர்களுடைய அந்தரங்க அமைப்பின் இரகசியத் துக்கெல்லாம் திறவுகோல் நுண்ணறிவு அல்லது விவேகம் என்றும் அந்த நுண்ணறிவினாலேதான் அந்தரங்க அமைப்பும் ஏற்படுகிற தென்றும் குழந்தைகள் எமக்குக் காட்டினர்.

நுண்ணறிவின் ஆரோக்கியமானது முதன்மையான முக்கியத் துவம் பெற்று விடுகிறது. நுண்ணறிவை அந்தரங்க அமைப்பி னுக்குத் துணைப்பொருள் என்றும் வாழ்க்கையின் மையம் என்றும் ஒப்புக் கொண்டோமானால், அதை இனிமேல் ஐயுறு நோக்கத்தில் வீணாக்கவோ அல்லது பகுத்தறிவு இல்லாமல் ஒடுக்கி அழிக்கவோ முடியாது.

குழந்தைகளின் உடல் சம்பந்தப்பட்ட பற்கள், நகங்கள், முடி போன்றவைகளின் நலத்துக்காக விலையுயர்ந்த நீண்ட சிகிச்சைகளை யும் செய்து வருகிறோம். இதற்குச் செய்வதைவிட வருங்காலத் தில் குழந்தைகளின் நுண்ணறிவு நலம்பற்றி இன்னும் அறிவுட னும், விரிவானதுமான சிகிச்சைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. குழந்தையின் முடி சம்பந்தமான அபாயத்தைப் பற்றி நன்கு அறிந்து, அதற்கு வேண்டிய மருந்துகளைத் தேடுவதில் எவ்வளவோ கவலை கொள்ளும் தாயைப் பற்றி நாம் சிந்திப்போமானால், அவள் தன்னையும் அறியாமல் அக் குழந்தையின் நுண்ணறிவை ஒடுக்கி அடிமையாக்கி விடுவாள். தற்காலத்தில் வாழ்க்கைக்கு வேண்டிய மீமிகைப் பொருள்களும் (super fluities) தேவைப்படு பொருளும் பற்றி நமது போக்கு இவ்வளவு வேற்றுமை பெற்றிருக்குமே யானால், நாகரிகத்துக்கு அழைத்துச் செல்லும் பாதை நீண்டதாக இருக்க வேண்டும் என்பதை நாம் உடனடியாக ஒப்புக்கொள்ள வேண்டும்.

*   *   *

நுண்ணறிவு என்பது என்ன? பெரிய தத்துவ நூலார் கூறும் மிக உயர்ந்த வரையறைகளை (definition) விட்டுவிட்டு மனத்தைத் தானே உருவாக்கிச் சூழ்நிலையுடன் தொடர்பு கொள்ளவல்ல வினையாற்றல்கள் சம்பந்தமான மறிவினை (reflex) கூடிச் சேரும் இயல்பு (associative) திரும்பவும் செய்தல் ஆகியவைகளை இங்கு ஆராய்வோம். ஒன்றுக்கொன்றுள்ளதின் வேற்றுமை காணும் நனவே ஒவ்வொரு நுண்ணறிவுச் செயலின் தொடக்கம் ஆகும் என்கிறார் 'பெயின்' (Bain) என்பவர். தனித்திறமையின் வேற்றுமையினை மதிப்பிட்டுக் கண்டறிவதே மனத்தின் முதல்படியாகும். வெளியுலகத்தை உணரும் தொழில்களின் அடிப்படை புலனுணர்வு அல்லது உளப்பாடு ஆகும் (sensation). இயன்மை (facts) களைச் சேகரித்து ஒன்றுக் கொன்றுள்ள வேற்றுமையைக் காண்பது நுண்ணறிவு அமைப்பதின் முதல் செயற் பாங்கு (proess) ஆகும். நுண்ணறிவைப் பற்றிய பாகுபாட்டிற்குள் இன்னும் கொஞ்சம் சரிநுட்பமும் (preaision )தெளிவும் புகுத்தப் பார்ப்போம்.

நுண்ணறிவு வளர்கிறதென்பதற்கு அறிகுறியாக நமக்குக் காட்டுகின்ற முதல் சிறப்பியல் காலத்துடன் (time) ஒட்டியிருக்கிறது. இந்த முதல் சிறப்பியலைப்பற்றிப் பாமர மக்கள் மிகத் தெளிவாய் உணர்ந்திருக்கிறார்கள். பொதுவாக விரைவு அல்லது வேகம் என்று நுண்ணறிவுக்கு ஓர் இணை பொருட் சொல்லாக (synonymous) பொதுவாகக் கூறுகின்றனர். புலனுணர்வுக்கு ஒத்தபடி நடத்தலும் எண்ண இயைபிலும் ஒன்றுபற்றித் தீர்ப்புக் கூறும் திறமையிலும் விரைவு காண்பது நுண்ணறிவு தன்னை வெளிப்படுத்தும் முக்கியமான தோற்றங்களாகும். இந்த விரைவு என்பது சூழ்நிலையிலிருந்து பதிவுகளைப் பெறுவதும், பெற்ற பதிவுகளை விரிவுபடுத்துவதும் உள்ளத்தில் தோன்றிய விளைவுகளை வெளிப்படுத்துவதும் ஆகிய திறமையைக் குறிக்கும். மன உடற் பயிற்சி போல் (Mental gymnastics) இந்த வினையாற்றல்கள் அனைத்தும் பயிற்சிகளால் பெறலாம். பல புலன் உணர்வுகளை ஒன்று கூட்டி, ஒன்றுக்கொன்று இணைவுபடுத்தி, அவைகளிலிருந்து தீர்மானித்து, இவைகளைத் தங்குதடையின்றிப் பிரயோகிக்கும் பழக்கத்தைப் பெற்று, உள இயலார் கூறுவதுபோல் இவைகளை எடுத்துச் செல்லும் கால்வாய்களும் ஒன்றோடொன்று இணைக்கப்படும் கால்வாய்களும் வரவர இன்னும் ஊடுருவத் தக்கதாயும் எதிர் வினையாற்றும் (reaction) நேரம் இன்னும் குறுகலாகவும் ஆக்கப்படவேண்டும். விவேகமுள்ள தசைஇயக்கத்தில் எவ்வாறு பலமுறை ஒன்றையே செய்யும்பொழுது அதன் இயக்கம் இன்னும் நிறைவு படுவதோடு வேகமாகவும் செயல்படுகிறதோ அதுபோல் இங்கும் நடை பெறுகிறது. பள்ளிக் கூடத்தில் உள்ள விவேகக் குழந்தை, ஒன்றைப் புரிந்து கொள்வதுடன், வேகமாகவும் புரிந்து

கொள்கிறுன். அதே விஷயத்தைச் செய்வதற்கு இரண்டு ஆண்டுகள் எடுத்துக்கொள்கிற குழந்தையை முட்டாள் அல்லது மந்த மான குழந்தை என்கிறேம். விழிப்புடைய (quick) குழந்தையின் முன் எதுவும் தப்புவதில்லை (nothing escapes him) என்று பொது வாகச் சொல்கிறுர்கள். அவனுடைய கவனம் எப்பொழுதும் விழிப்புடன் இருந்து வருகிறது. ஒவ்வொரு உட்தூண்டுதலையும் பெற ஆயத்தமாக இருக்கிறுன். நுண்மையான தராசு சிறு எடையையும் காட்டி விடுவதுபோல் இவனுடைய உணர்ச்சியுள்ள மூளையும் மிகவும் எளிய உணர்ச்சியையும் ஏற்றுக்கொள்ளும். ஒன்றேடொன்று இணைவுபடுத்துவதிலும் அது வேகமாகச் செய் கிறது. 'மின்னல் வேகத்தில் புரிந்து கொள்கிறுள்', 'நொடிப் பொழுதில் எல்லாம் கிரகித்துக் கொள்கிறுன்' என்பனவெல்லாம் அவன் சரியாகப் பிழையின்றிக் கருதுதலைக் குறிக்கும்.

இப்பொழுது விவேக இயக்க நுட்பத்தைத் தூண்டிவிடக்கூடிய பயிற்சி 'தற்பயிற்சி'யாகத் தான் (atni-exercise) இருக்க முடியும். வேருெருவர் நமக்காகப் பயிற்சி செய்து நம்முடைய திறமையை நாம் பெற வைப்பதென்பது நடைபெற இயலாத தாகும்.

புலன் சார்ந்த பயிற்சிகள் நமது குழந்தைகளின் மத்திய வினை யாற்றல்களைத் தூண்டி வலிமைபெறச் செய்கின்றன. புலனுணர் வும் புறத் தூண்டுதலும் தனித்தனியாகப் பிரிக்கப்படும் பொழுது குழந்தை தன்னுடைய நனவில் இவைபற்றித் தெளிவான புலன் காட்சி (perception) பெறுகிறுன். வெப்பம் தட்பம், சுரசுரப்பு வழவழப்பு, பளு பளுக் குறைவு, ஒலி இரைச்சல் ஆகிய அனைத்தை யும் அவன் உணர்கிறுன். முழு மௌனத்தை அனுசரிக்கும் போது, அவன் தன் கண்களை மூடிக் கொள்கிறுன். ஒரு வார்த்தை முணுமுணுத்த குரலுக்காக ஆவலுடன் எதிர்பார்க்கிறுன். இவனுடைய உள்ளக் கவாடத்தை வெளியுலகம் வந்து தட்டுவது போலிருக்கிறது. மேலே குறிப்பிட்ட மௌன பாடம் பிறகு சூழ் நிலையின் நிறைவில் பல உளப்பாடுகள் கலந்திருக்கும் பொழுது, இரண்டும் இணைந்து ஒன்றுக்கொன்று இணைந்து தூண்டிவிடப் பட்ட வினையாற்றல்களை இன்னும் உறுதியாக்கி விடுகின்றன. தான் வரைந்த வடிவங்களுக்கு வண்ணம் தீட்டுவதில்[1] தன்னை மறந்து கொண்டிருக்கும் குழந்தை இதற்கு விளக்கம் தருகிறது. இசை ஒலியைக் கேட்டுக்கொண்டே மிக அழகான வண்ணங்களைத் தேர்ந்தெடுப்பான். மற்றெருவன் தன்னுடைய களிப்பும் கம்பீர மும் கொண்ட பள்ளியின் பூ மலர்ச் செடிகளையுடைய சூழ்நிலையைச்

[1] Inset drawing என்ற உலோகத்தகடுகளைக் கொண்டு பற்பல ஜியோ மித்ரி வடிவங்களை வரைந்து அவைகளுக்குத் தன் விருப்பம் போல வண்ணம் தீட்டும் பயிற்சியைக் குறிக்கிறது.

சிந்தித்துக்கொண்டு அவனுடைய பாடல்களைப் பிழையின்றி இனிமையாகப் பாடுவான்.

தாமே கற்கின்ற போக்கினைத் தொடங்கின பிறகு முதல் முதலாக எமது குழந்தைகளிடம் தலைகாட்டும் சிறப்பியல்பு என்ன வென்றால் அவர்களுடைய எதிர்வினைகள் (reactions) இன்னும் கூர்மையான ஆயத்தத்தைப் பெறுகிறது. இன்னும் வேகமாகப் பெறுகிறது. புலன் உணர் தூண்டுதல் இதற்கு முன்னெல்லாம் அவன் முன் தோற்றம் அளித்த போது, அதை அவன் கவனிக் காமல் கூட இருந்திருப்பான்; ஊக்கம் இழந்த அக்கறையைக் காட்டியிருப்பான். ஆனால் இப்பொழுது ஒள்ளியதாக (Vividly) உணரப்படுகிறது. பண்டங்களுக்கு இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் எளிதில் காணப்படுகின்றன. அப்பொழுது, அவைகளைப் பயன்படுத்தும் பொழுது, ஏற்படக்கூடிய பிழைகளை வேகமாகக் கண்டுபிடித்துத் தீர்மானித்துத் திருத்தப்படுகின்றன. பொறி சார்ந்த பயிற்சிகளை இந்த அடிப்படையான முதல் விவேகப் பயிற்சிகளைக் குழந்தை செய்து மத்திய நரம்பு இயக்க நுட்பத்தை (central nervous mechanism) தட்டி எழுப்பிச் செயல்படச் செய்து விடுகிறான்.

எமது குழந்தைகள் சோம்பலற்றவர்கள். சுறுசுறுப்புடனும் வேகமாகவும் விளையாற்றுகின்றனர். மெல்லிய குரலில் அழைத் தாலும் அவர்கள் செவி கேட்கும் உணர்ச்சி பெற்றிருக்கின்றனர். அவர்கள் இதுவரை சூழ்நிலையில் கண்ட பொருள்களின் மேலும் அவர்கள் செய்து வந்த கருமங்களின்மேலும் காட்டிவந்த கவனத் தில் எள்ளளவும் குறையாத கவனத்துடன் கூப்பிட்ட நம்மிடம் வேகமாக ஓடிவர ஆயத்தமாக இருக்கின்றனர். இந்தக் குழந்தை களை மற்ற பள்ளிக் கூடங்களில் உள்ள கழிமடிமை (torpid) கொண்ட குழந்தைகளுடன் ஒப்பிடுவோம். அவர்கள் நடமாடுவதி லும் இயங்குவதிலும் பொலிவு இல்லை. தூண்டுணர்வுகளுக்கு உணர்ச்சி காட்டாது மந்தமாக இருக்கின்றனர். தாமாகவே ஒன்றோடொன்று தொடர்பு கொண்ட கருத்துகளை எண்ணச் சக்தி யற்றவர்கள். இவைகளையெல்லாம் பார்க்கும் பொழுது நாம் வாழும் இக் காலத்தைப் பண்டைக் காலத்துடன் ஒப்பிடுவதுபோல் இருக்கும். நமது சமுதாயத்துடன் பண்டைச் சமுதாயச் சூழ் நிலையை ஒப்பிட்டால், அது நிதானமாக நடந்தது. நாம் காலத்தை எப்படி வீணாக்காமல் பயன்படுத்துவது என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறோம். முற்காலத்தில் அஞ்சல் முறை வண்டி அல்லது கெடி வண்டி என்று (stage coach) குதிரை வண்டியில் நெடுந்தொலைவு போகவேண்டுமானால், மாற்றிமாற்றிப் போக வேண்டியிருந்தது. ஒரே வண்டி முழுமையும் போய்ச்

சேர முடியாது. இன்று மோட்டார் வண்டியிலும், விமானத்திலும் பயணம் செய்கிறோம். குரல் ஒன்றுதான் தொலைவிலிருந்து செய்தி அனுப்பும் சாதனமாக இருந்த காலமும் உண்டு. இப்பொழுது தொலைபேசி மூலமாகப் பேசுகிறோம். மனிதர்கள் முன்னெல்லாம் ஒருவரையொருவர் கொன்றனர். இப்பொழுது ஒரே அடியாகப் பலரைக் கொல்கின்றனர். இதையெல்லாம் காணும்பொழுது 'உயிரினத்துக்கு மதிப்பும்' 'ஆன்மாவுக்கு மதிப்பும்' தருகின்ற அடிப்படையில் நமது நாகரிகம் அமைக்கப் படவில்லை என்பதை உணரச்செய்கிறது. அதற்கு மாறுதலாகக் காலத்துக்கு மதிப்புக் கொடுக்கும் வகையில் நமது நாகரிகம் அமைக்கப் பெற்றிருக்கிறது. வெளிப்படையாகத்தான் நமது நாகரிகம் தன் வழியைக் கடைப்பிடித்திருக்கிறது. இன்னும் வேகம் அதிகரித்திருக்கிறது. இயந்திரங்களைப் பெருக்குவதைத் தூண்டி விட்டிருக்கிறது.

ஆனால், இந்த நாகரிக முன்னேற்றத்துக்குத் தக்க அளவு மனிதன் ஆயத்தமாக்கப் படவில்லை. தனிப்பட்ட ஒவ்வொருவரும் முறையாகத் தம் போக்கை வரவர இன்னும் விரைவுபடுத்திக் கொள்ளவில்லை. இந்தப் பயங்கர உலகத்துக்குக் குழந்தைகள் ஒன்றும் புதிய மனிதர் அல்ல. இன்னும் சுறுசுறுப்பானவர்கள், இன்னும் துள்ளி எழக்கூடியவர். இன்னும் அதிக விவேகம் பெற்றவர்கள் மாற்றிப் புதுப்பித்துக் கொண்ட மனித ஆளுமை எல்லா எதிர்பாராத சம்பவங்களைச் சமாளித்துக் கொள்ளும் வகையில் தன்னை உயர்த்திக் கொள்ளவில்லை. வெளியுலகம் புதிதாகக் கண்டு பிடித்தவை அனைத்தையும் தன்னுடைய நலத்துக்குப் பயன் படுத்திக் கொள்ளும் அளவுக்கு ஆளுமைக்குத் திறமை போதாது. கழி மடிமை வாய்ந்த மனிதன் நேரத்தையும் பணத்தையும் சிக்கனம் செய்யத் தெரிந்து கொண்டிருக்கிறான். இந்த நாகரிகத்தில் ஆனால் அவனுடைய ஆன்மா அல்லது உள்ளம் ஏமாற்றப்பட்டு ஒடுக்கப்பட்டுக் கிடக்கிறது. அவனே உருவாக்கிய புது உலகத்துடன் ஒத்துத் தன்னையே சீர்திருத்திக் கொள்ளானேயாகில், அவன் அந்த உலகத்தினாலேயே ஒருநாள் அழிக்கப்படுவான் என்ற அபாயம் இருக்கிறது.

* * *

எமது குழந்தைகளிடம் காணப்படும் விரைவான எதிர் வினைகள் வெறும் விவேகத்தின்வெளித் தோற்றங்கள் மட்டுமல்ல. அவை அவர்கள் பயின்ற பயிற்சிகளை மட்டுமல்லாமல் அவர் களுடைய உள்ளத்தில் நிலைபெறச் செய்யப்பட்ட ஒழுங்கினையும் குறிக்கிறது. இந்த நெருங்கிய புதுமை ஒழுங்குபடுத்துதலே (rearrangement) விவேக அமைப்பின் மிகத் தெளிவான அறிகுறியாகும்.

எதிர் வினையின் வேகத்துக்கு உண்மையான திறவுகோல் எது என்று சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், அது ஒழுங்கு (order) ஆகும். ஒழுங்கு பெறாத மனத்துக்கு ஓர் உணர்ச்சித் தூண்டுதலை உணர்வதும் நன்றாகக் காரணங்களுடன் ஆற்றின ஒரு விளக்க உரையை விரிவுபடுத்தும் ஒரே கஷ்டத்தைத்தான் கொடுக்கும். சமூக சம்பந்தப்பட்டதும் பிறவும் அமைப்பு முறையும் ஒழுங்குமே வேகமாக முன்னேற வைக்கிறது.

ஒன்றினை வேறுபடுத்திக் கண்டறிதலே விவேகத்தின் சிறப்பியல்பாகும். வேறுபடுத்திக் கண்டறிதல் என்பதுடன் ஒழுங்கு படுத்துதலும் இணைந்திருக்கிறது. மேலும், வாழ்க்கையில் அது ஆக்கத்துக்கு (creation) ஆயத்தமும் ஆக்குகிறது.

ஆக்கத் தொழில் அதனுடைய விரிவடைதலை ஒழுங்கில் காண்கிறது. இதே கருத்தை வேத நூலில் காண்கிறோம். ஆண்டவன் தயாரிப்பு ஏதும் இல்லாமல் படைக்கத் தொடங்கவில்லை. இந்தத் தயாரிப்பு முன்னிருந்த குழப்பத்தில் ஒழுங்கினைப் புகுத்துவதாகும். 'ஆண்டவன் இருளிலிருந்து ஒளியைப் பிரித்தான். அவன் சொன்னான். "நீரெல்லாம் ஓரிடத்தில் கூடட்டும். வறண்ட தரை தோன்றட்டும்." மனத்தின் நனவுப் பகுதியில் பல நிறைந்திருக்கலாம். ஆனால் அங்கு மனக்குழப்பம் அல்லது ஒழுங்கில்லாமை நிலவியிருந்தால் அங்கு விவேகம் தோன்றுவதில்லை. வெளிச்சத்தைத் திருப்பி விட்டால் பொருள்களைக் கண்டறிய முடியும். அதற்கு ஒப்பிடலாம் விவேகத்தின் தோற்றமும். 'ஒளி உண்டாகுக!' என்றான் ஆண்டவன்.

எனவே நனவுள்ளத்தில் பதிந்துள்ள உருவங்களை ஒழுங்கு படுத்தும்பொழுது விவேகமும் வளர்ச்சி பெற நாம் உதவி புரிகிறோம் என்று நாம் பாரபட்சமில்லாமல் கூறலாம்.

முன் கூட்டியே உலகத்தைக் கண்டிருக்கின்ற மூவாண்டுக் குழந்தையின் மன நிலையைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டும். எவ்வளவோ பண்டங்களையும் நிகழ்ச்சிகளையும் பார்த்து எத்துணை முறை அவன் அப்படியே உறங்கிப் போயிருக்கிறான். முழுதும் சலித்துப்போய் நடப்பதென்பது அவனுக்குத் தொழில் புரிவதாகும் என்பதை எவ்வளவு பேருடைய கவனத்துக்குத் தோன்றியிருக்கும். கேட்பதற்கும் பார்ப்பதற்கும் உதவிபுரியும் அங்கங்களாகிய செவியும் கண்ணும் இன்னும் தக்க முறையில் முழு உணர்ச்சியை ஏற்றுக் கொள்ளும் வகையில் வளர்ச்சி பெறவில்லை. ஆதலால், அவனுடைய உறுப்புகள் செய்கின்ற பிழைகளை அவன் இடைவிடாது திருத்திக்கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. தன்னுடைய கண்ணால் திருத்த முடியாத பிழையை அவன் கரங்

களால் சோதித்துத் திருத்த வேண்டியிருக்கிறது. இதெல்லாம் அவனுக்குப் பெரிய தொல்லை. ஆதலால் உணர்ச்சி நிறைந்த இடங்களில் அவன் மிகையாகத் தூண்டப்படும் பொழுது சோர் வுற்று அழத் தொடங்குகிறான். அல்லது அப்படியே தூங்கிப் போய் விடுகிறான்.

மூவாண்டுக் குழந்தை தன்னுடைய உள்ளத்தில் ஒரு பளுவான குழப்பத்தைச் சுமந்து கொண்டு போகிறான்.

ஏராளமான புத்தகங்களைச் சேர்த்து ஒன்றின் மேலொன்றாகப் போட்டு ஓர் ஒழுங்கையும் அமைக்காது, 'அவைகளை வைத்துக் கொண்டு நான் என்ன செய்ய?' என்று கேட்கும் மனிதனுக்கு ஒப்பிடலாம். இக் குழந்தையையும் அந்த மனிதன், 'எனக்கு ஒரு நூல்நிலையம் இருக்கிற'தென்று சொல்லும் வகையில் அவன் எப்பொழுது அந் நூல்களை ஒழுங்கு படுத்துவான்?

புலன் சார்ந்த பயிற்சிகள் (sensory exercise) என்று நாம் கூறும் பயிற்சிகளால் பொருள்களில் வேற்றுமை காண்பதற்கும் ஒழுங்குபடுத்துவதற்கும் வழிவகுத்துத் தருகிறோம். உண்மையாக எமது புலன் சார்ந்த புறப் பொருள்கள் பொருள்களைப் பகுத்து, அப் பொருள்களின் தன்மைகளை வெளியாக்குகிறது. கன உருவங்கள், வடிவங்கள், வண்ணங்கள், பரப்புகளின் மென்மையோ சுரசுரப்போ, பளு, வெப்பம், நாற்றம், இரைச்சல், ஒலி ஆகிய பல தன்மைகளை வெளிக்காட்டுகின்றன. பண்டங்கள் முக்கிய மில்லை; பண்டங்களின் பண்புதான் முக்கியமானவை. இந்தப் பண்புகள் ஒவ்வொன்றும் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டு, அவ்வப் பண்டங்களால் அறிவிக்கப்படுகின்றன. நீளம் குட்டை, மொத்தை சன்னம், பெரிது சிறிது, சிவப்பு மஞ்சள் பச்சை, வெப்பம் தட்பம், பளு பளுக்குறைந்தது, சுரசுரப்பு வழவழப்பு, வாசனை பெற்றது, ஒத்தொலிக்கக் கூடியது (resonant) போன்ற பண்புகளைப் பெற்ற பொருள்கள் படித்தர வரிசைப் படுத்தப் பட்டிருக்கின்றன. இந்தப் படித்தர வரிசை ஒழுங்கை நிலைநாட்டு வதற்கு முக்கியமானது பண்டங்களின் இயற்பண்புகள் (attributes) ஒவ்வொன்றும் குணத்தில் வேறுபடுவதோடு அளவிலும் வேறு படுகிறது. அவை உயரத்தில் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம். அல்லது தாழ்வில் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம்; கெட்டியில் அதிகமாகவோ குறைவாகவோ, இலேசில் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம். ஒலியில் பல சுருதிகள் இருக்கின்றன. வண்ணத்தில் பல செறிவுகள் இருக் கின்றன. வடிவங்களும் ஒன்றோடொன்று ஒத்திருந்தாலும் சாயல்களில் பல படித்தரவரிசை இருக்கலாம். சுரசுரப்பு வழவழப்புத் தன்மைகளும் எவ்வகையிலும் வரம்பற்றதல்ல.

புலன் உணர்ச்சிகளைக் கற்பிப்பதற்கு என்று அமைக்கப் பெற்ற புறப்பொருள்கள் (material) இந்தப் பொருள்களில் வேற்றுமை காண உதவுகின்றன. இணைசேர்ப்பதிலும், வரிசைப்படுத்துவதிலும் பல பயிற்சிகளைக் கையாண்டு இரண்டு உணர்வுத் தூண்டுதல்களின் ஒற்றுமையைக் கண்டறியக் குழந்தைக்கு உதவி புரிகிறது. பிறகு வெளிப்படையான ஒரு பொருளின் வரிசையைப் பற்றிக் கவனிக்குமாறு கற்பிக்கப் புகும்பொழுது குழந்தை அவைகளில் காணும் ஒன்றுக்கொன்றுள்ள வேற்றுமையை உணர்கிறான். இலேசு, கெட்டி, நீளம், குட்டை ஆகிய பண்புகளை அறியும் பொழுது புகழ்கிறான்.

கடைசியில் வெவ்வேறு இயற்பண்புகளின் படிவரிசையைத் தெரிந்து கொள்கிறான். வரிசைப் பிரகாரம் அடுக்குகிறான். எடுத்துக்காட்டாக ஒளிப்புலன் சம்பந்தமான வண்ணப் பலகைகளை, அதனதன் வண்ணச் செறிவின் ஏற்றத் தாழ்வுக்கு இணங்க வரிசைப்படுத்துகிறான். ஒரு சுருதிக்குள் அடங்கிய எட்டு சுரங்களை ஒலிக்கும் மணிகளை[1] வரிசைப்படுத்துதல். நீள அளவைக் காட்டும் பொருள்கள் தசம விகிதத்தில் படி வரிசையாக இருக்கின்றன. அல்லது பருமன் சென்டிமீட்டர் விகிதத்தில் அமைந்திருக்கின்றன.

இந்தப் பயிற்சிகளெல்லாம் குழந்தைக்குக் கவர்ச்சிகரமாக இருக்கின்றன. அவைகளை அவர்கள் எண்ணற்ற முறை திரும்பத் திரும்பச் செய்வதை நாங்கள் கண்டிருக்கிறோம். ஒவ்வொரு கைப்பற்றப்பட்டது—கற்றுக் கொண்டதன்மேல் ஆசிரியர் ஒரு சொல்லால் பெயரை முத்திரை இட்டுவிடுகிறார். இவ்வாறு வகைபடுத்துதல் முடிவடைகிறது. இறுதியில் அது ஓர் அட்டவணையைப் பெறுகிறது. அதாவது அந்த இயற்பண்பினையும் அதன் பிரதி பிம்பத்தையும் ஒரு வார்த்தையில் கவனத்துக்குக் கொண்டு வரலாம்.

எல்லாப் பொருள்களையும் அதனதன் இயற்பண்பினைக் கொண்டுதான் அறிய முடியும். இவைகளைப் பாகுபடுத்த வேண்டுமானால் எல்லாவற்றையும் அறிந்த பிறகே அடிப்படையான ஒரு வரிசைப்படுத்தும் ஒழுங்கினை ஏற்படுத்த முடிகிறது. குழந்தைக்கு இனிமேல் உலகம் ஓர் குழப்பமாகக் காட்சி அளிப்பதில்லை. ஒழுங்காக அமைக்கப்பட்ட நூலகத்தட்டுகளை அவன் மனம் ஒத்திருக்கிறது. அல்லது ஒரு சிறந்த கண்காட்சி நிலையம் போலிருக்கிறது. ஒவ்வொரு பொருளும் அதற்கென்றே ஏற்பட்ட இடத்தில்

[1] இப்பொழுதெல்லாம் அத்தகைய மணிகள் சரி நுட்பத்துடன் செய்ய இயலாத காரணத்தால் நம் நாட்டில் அவைகளுக்குப் பதிலாக ஒலிப் பெட்டிகள் (Noise boxes) உபயோகிக்கப் படுகின்றன. இப்பெட்டிகள் குழந்தைகளின் உள்ளங்கையில் அடங்கக் கூடிய நீள் உருளைகளாகும்.

இருக்கும். அதன் பொருத்தமான இனத்துடனும் இருக்கும். அவன் பெறுகின்ற ஒவ்வொரு கைப்பற்றப்பட்ட பொருள்களும் வெறும் பண்டசாலேயில் கிடத்தப்படுவதுபோல் அல்லாமல் அதற்கு இருக்க வேண்டிய இடத்தில் இடம் பெறும். இந்த முதல் ஒழுங்குபடுத்துதல் கலேக்கப்பட மாட்டாது. ஆனல், புதுப் பொருள்களால் இன்னும் சிறப்படையலாம்.

ஒரு பொருளுக்கும் மற்ருெரு பொருளுக்கும் இடையே காணப் படும் வேற்றுமைகளேக் கண்டறியும் திறமை பெற்றுவிட்ட குழந்தை விவேகத்தின் அடிக்கல் நாட்டி விட்டான். சூழ்நிலேயில் காணப்படும் பொருள்களேத் தேடுவதற்குக் கைப்பற்றப்பட்ட எந்த அந்தரங்க உட்தூண்டுணர்ச்சி உதவி புரிகிற தென்பதைப் பற்றித் திரும்பக் கூற வேண்டியதில்லே. இனிமேல் தன் சூழ்நிலேயிலுள்ள பொருள்களேக் குழந்தைதெரிந்துகொள்கிருன். வானம் நீலமாக இருக்கிறதென்று மிகுந்த உளத் துடிப்போடு உணரும் போதும், அவனுடைய கை மென்மையாய் இருக்கிறதென்று உணரும் போதும் சாளரம் நீண்ட சதுரமாய் இருக்கிறதென்று உணரும் போதும் அவன் உண்மையாக வானத்தையோ, கையையோ, அல்லது சாளரத்தையோ புதிது புதிதாகக் கண்டுபிடித்து விட வில்லே. ஆனல் அவன் தன்னுடைய கருத்துகளே மனத்தில் அடுக்கி மனத்தின் ஒழுங்கில் இந்த ஒவ்வொன்றும் எங்கிருக்கின்றன என்று கண்டுகொள்கிருன். அந்தரங்க ஆளுமையில் இது ஒருநிலேயான சமநிலேயை நிர்ணயிக்கிறது. அவ்வாறு ஆக்கம் பெற்ற ஆளுமை அமைதி, வலிமை இன்னும் புதிதைக்கண்டுபிடிக்கும் சாத்தியக் கூறு போன்றவைகளே உண்டாக்குகிறது. இது எதுபோல் என்ருல் தங்களுடைய தொழில்களே ஒன்றைச் செய்த தசைகள் உடலே நல்ல சம நிலேயில் இருக்க உதவிபுரிகிறது. எல்லா இயக்கத்தை யும் எளிதில் நடத்தி வைக்கத் தேவைப்படும் அந்த நிலே பெறுதலே யும் பாதுகாப்பையும் பெறுவதற்கு ஒப்பும். மேலும் நன்கு ஒழுங்கு படுத்தப்பட்ட கண்காட்சி நிலேயத்தில் தேடி வருகிறவரின் நேரத்தையும், வலிமையையும் மட்டுப்படுத்துகிறது. ஆதலால், சலிப்பில்லாமல் இன்னும் அதிகப்படியான தொழிலேக் குழந்தை செய்யலாம். மேலும், ஒரு தூண்டுதலுக்குக் குறைந்த நேரத்தில் எதிர் வினே காட்டலாம்.

* * *

புறப்பொருள்களே இன்னதென்று பகுத்தறிந்து, பாகுபடுத்தி மனத்தில் ஏற்கெனவே ஒழுங்குபடுத்தியதை முன்னிட்டுப் பெயர்ப் பட்டியலே ஏற்படுத்துகிருன். இது உடனே விவேகமும் பண்பாடும் ஆகின்றன. பொதுமக்கள் கருத்தும் இதுவே. ஓர் எழுத்தாள னுடைய பாணியைக் கொண்டு இன்ன எழுத்தாளன் என்ருே

அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்தின் இலக்கியச் சிறப்பியல் இது என்றோ ஒரு கற்றறிந்தவன் சொல்லிவிடும் போது அவனை, 'இலக்கிய அறிவாளி அல்லது இலக்கிய விவேகி' என்கிறோம். அதேபோல் ஓர் ஓவியன் திரைமேல் வண்ணங்களைத் தீட்டும் பாங்கினைக் கண்டதும் ஓவியன் இவன் என்று சொல்லி விடுகின்றவரும், ஒரு சிறு சின்னத்தை வைத்துக்கொண்டு அதை உருவாக்கிய சிற்பி எந்தக் காலத்தைச் சேர்ந்தவன் என்று கூறுவோரும் அவரைக் கலையில் விவேகி' என்பர். விஞ்ஞானியும் அங்ஙனமே. அவன் பொருள்களைக் கூர்ந்து கவனிக்க வல்லவன். ஒவ்வொரு நுண்மையான பகுதிக்கும் உரிய மதிப்பைத் தருகிறான். ஆதலால், ஒன்றுக்கொன்றுள்ள சிறப்பியல்பு வேற்றுமைகளை உணர்கிறான். பாகுபடுத்துகிறான். அவனுடைய மனத்தில் அமைந்துள்ள ஒழுங்கைப் போல் விஞ்ஞானி பொருள்களை இனம்பார்த்து அறிந்து கொள்கிறான். ஒரு வித்து, கிருமி, ஒரு விலங்கு, அல்லது ஒரு விலங்கின் கழிபொருள் ஆகிய இவை அவனுக்கு ஒரு புதிர் அல்ல. வேதி நூலார், இயற்பியலார் (Physicist), மண்ணூலார் (Geologist), புதைபொருள் ஆராய்ச்சியாளர் (archaeologist) இவர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் அதையே கூறலாம்.

இலக்கியவான், விஞ்ஞானி, சுவைத்திற வல்லுநர் (connoisseur) ஆகியோரைப் படைப்பது பொருள்கள் பற்றி அவரவர் நேர்முகமாகச் சேர்த்துவைக்கும் அறிவுத் தொகை அன்று. அவருடைய மனத்தில் அவ்வளவு அறிவையும் ஏற்பதற்குத் துணையாக இருக்கும் அவருடைய ஒழுங்குபடுத்தப்பட்ட மனமேயாகும். இதற்கு மாறாகப் பண்படாதவர் பொருள்கள் பற்றி நேர்முக அறிவைப் பெற்றிருக்கிறார். இத்தகையவர் இரவில் பெரும்பகுதி நூல் ஓதுவதில் காலம் போக்கும் சீமாட்டியாக இருக்காலம்; அல்லது தன்னுடைய தோட்டத்தில் இருக்கும் பல்வேறு செடி வகைகளின் வித்தியாசங்களை உணர்கிற தோட்டக்காரனாக இருக்கலாம். அம்மாதிரிப் பண்படாதவருடைய அறிவு ஒழுங்கு பெறுதது மட்டுமன்று, அது அந்தந்தப் பொருள் சம்பந்தமான தகவல் பற்றியதாகவே இருக்கும். ஆனால், விஞ்ஞானியின் அறிவு எல்லையற்றது. ஏனென்றால், பொருள்களின் பண்பியல்புகளைக் கொண்டு அவைகளை வகைப்படுத்தும் திறமை பெற்றிருக்கிறார். ஆதலால், அனைத்தையும் அவர் கண்டறிய முடியும். இது இந்த இனத்தைச் சார்ந்தது. இன்ன இன்ன உறவு கொண்டது, இதனுடைய தொடக்கம் இது...என்றெல்லாம் இவரால் எடுத்துக்கூற முடியும். அந்தந்தப் பொருள் தன்னைப் பற்றி விளக்கக்கூடியதைவிட இந்தச் செய்திகள் மிகச் சிறந்தனவாகும்.

இப்பொழுது நமது குழந்தைகள் கலையின் சுவைத்திற வல்லுநர் போலவும் விஞ்ஞானி போலவும் வெளியுலகத்தில் காணப்படும்

பொருள்களை அவைகளின் இயற்பண்புகளால் கண்டறிந்து பாகு படுத்துகின்றனர். ஆதலால், அவர்கள் எல்லாப் பொருள்களிட மும் உணர்ச்சி காட்ட வல்லவர்கள். ஒவ்வொன்றில் அவர்களுக்கு என ஒரு பயனைப் பெற்றதாகக் காட்சி அளிக்கிறது. பண்படாத குழந்தைகள் என்றால் அவர்கள் பண்டங்களின் முன் குருடர் போலும் செவிடர் போலும் நடமாடுவார்கள். நல்ல கலைக் காட்சியின் முன் முட்டாள் சும்மா நடந்து செல்கிறான். சிறந்த இசை விழாவில் பங்கு கொள்கின்ற இசை அறிவு பெறாதவன் இசை இன்னதென்று அறியாமலும் கேட்டு இன்புறாமலும் பொம்மைபோல் அமர்ந்து இருக்கிறான்.

தற்போது நடைமுறையில் இருந்துவரும் கல்வி முறை நம்முடைய முறைக்கு எதிர்மாறான வழியில் செல்லுகிறது. தானாக இயங்கும் வினையாற்றல்களை முதலில் ஒழித்துக்கட்டி விட்டுப் பண்பு இயல் பல இணைந்த பொருள்களைக் குழந்தைகளுக்கு நேரடியாக அறிமுகப்படுத்துகின்றனர். ஒவ்வொரு பண்பியல் பற்றியும் அவனுடைய கவனத்துக்குக் கொண்டு வருகின்றனர். ஒரு துணையும் இன்றி, ஓர் ஆணையுமின்றிக் குழந்தைகள் இத்துணைப் பொருள்களின் தொகையிலிருந்து தனித்தனியாகப் பண்புகளைப் பிரித்து உணர்வார்கள் என்று குழந்தைகளிடம் எதிர்பார்க்கிறார் கள். இவ்வாறு தானாக இருந்த (passive) உயிர்ப்பற்ற மந்தமான குழந்தையிடம் ஒரு செயற்கைக் குழப்பத்தை உண்டுபண்ணி விட்டனர். இயற்கையாக உலகம் அளிக்கக்கூடிய குழப்பத்தை இவர்களால் ஏற்படும் குழப்பம் இன்னும் அதிக அளவைப் பெறு கிறது.

இப்பொழுது நடைமுறையில் இருப்பது பொருட்பாட முறை ('objective' method). இதன் பிரகாரம் ஒரு பொருளை அறிமுகப் படுத்தி, அதற்குரிய எல்லா இயல் பண்புகளும் எடுத்துக்கூறப்படு கின்றன; வருணிக்கப்படுகின்றன. இது நினைவூட்டும் முறையைப் போன்றதே (mnemonic method). அந்த முறைப்படி கண்முன் இல்லாத பொருளின் பண்பு விளக்கம் பெறும். இங்கு கண் முன் இருக்கும் பொருளின் இயல்பண்பு விளக்கம் பெறுகிறது. புலன் உணர்வு சார்ந்ததில் சற்று வேறுபாடு பெற்றதே இந்த முறை. கற்பனை ஒன்றைக் கொண்டே அப் பொருளை மறுபடியும் உருவாக்கிக்கொள்ள முயலுவதைவிட இங்குப் புலன் உணர்வுகள் குறுக்கிடுகின்றன. பொருள்களின் தனிப்பட்ட பண்புகளை நன்றாகக் கவனத்தில் இருத்திக்கொள்ளச் செய்வதற்கே இவ்வாறு செய்யப்படுகிறது. மந்தமான மனம் அறிமுகப்படுத்தப்பட்ட அந்தந்தப் பொருள்களுக்கே உரிய பிரதி பிம்பங்களை ஏற்றுக் கொள்கிறது. இப் பிம்பங்கள் ஒரு வித ஒழுங்கு படுத்தாமலும்

அப்படியே மனத்தில் அடைக்கப் பட்டிருக்கின்றன. உண்மையாக ஒவ்வொரு பொருளுக்கும் எண்ணற்ற இயற் பண்புகள் இருந்து வருகின்றன. பொருட்பாடம் நடத்தும்போது அப் பொருள்கள் தோன்றிய வரலாறும் அவைகளின் முடிவுக் குறிக்கோளும் அனேக மாக விளக்கப்படுவதுண்டு. மனமானது ஏழுலகமும் சுற்றிவர வேண்டியிருக்கிறது. காப்பியைப் பற்றிய பொருட் பாடத்தை எடுத்துக் காட்டாகப் பார்ப்போம். ஒரு கிண்டர் கார்டன் பள்ளிக் கூடத்தில் நானே இப் பாடத்தை நேரில் கண்டேன். அந்தப் பொருள் வருணிக்கப்படுகிறது. அதனுடைய பருமன், வண்ணம், உருவம், அதன் வாசனை, சுவை, வெப்பம், எல்லாம் பற்றி கூறப்படுகிறது. பிறகு அந்தச் செடியை வருணிக்கத் தொடங்குகிறார் ஆசிரியர். அது எம்மாதிரி ஐரோப்பாவுக்குக் கடல் கடந்து கொண்டு வரப்பட்டது என்றெல்லாம் கூறிவிட்டு, முடிவில் ஒரு சாராய விளக்கை ஏற்றுகிறார்; தண்ணீரைக் கொதிக்க விடுகிறார். கொட்டைகளை அரைக்கிறார்; பானத்தை ஆயத்தமாக்குகிறார். மனமானது பரந்த வெளியெல்லாம் திரிந்து வந்தாயிற்று. ஆனால், பொருள் பற்றியது இன்னும் முடிந்த பாடில்லை. காப்பியினால் ஏற்படக்கூடிய கொந்தளிப்புப் பயனும், காப்பிக் கொட்டையிலிருந்து எடுக்கப்படும் கேஃபின் (caffeine) என்ற நச்சுப் பொருளும் இன்னும் பிறவும் பற்றியும் சொல்லிக் கொண்டே போகலாம். இத்தகைய பாகுபாடு சிந்தின எண்ணெய் தண்ணீரின் மேல் படருவதுபோல் பரவலாகச் சென்று இறுதியில் மறைந்தே போகும். இதன் முடிவு எவ்வகையிலும் பயனளிப்ப தில்லை. இவ்வாறு பாடத்தைக் கேட்டிருந்த குழந்தை ஒன்றினைப் பார்த்து, 'அப்படியானால் காப்பி என்பது என்ன' என்று வினவினோமானால், 'அது என்னால் நினைவு படுத்த முடியாத நீண்ட கதை' என்று விடை உரைத்தாலும் உரைக்கலாம். ஒரு தெளிவற்ற உட்கோள் (notion) [அப்படி முழுமையும் என்னால் கூற முடியாது] குழந்தையின் மனத்தைச் சோர்வுறச்செய்து தடையூட்டி விடுகிறது. இது போன்றவைகளைக் கண்டு வெடிப்புடன் துடிதுடிக்கின்ற மனமாக மாற்றிக்கொள்ளச் சக்தியிழந்ததாகி விடுகிறது. குழந்தை எடுத்துக்கொள்ளும் முயற்சி அதிகப்படியானால், காப்பியின் வரலாற்றினை நினைவுக்குக் கொண்டு வருகின்ற முயற்சிகள் மட்டும்தான் இவனுடைய மனத்தில் எண்ண இயைபுகள் (association) உருவானாலும் அவை தொடர்ச்சியின் இயைபாகும். அவனுடைய மனம் உரையாற்றும் ஆசிரியரிடமிருந்து காப்பி கடந்து வந்த மாகடலைத் தாண்டும், பிறகு ஒவ்வொரு நாளும் மேசைமேல் வைக்கப்பட்ட கோப்பைகளில் ஊற்றப்படும் காப்பிப் பானத்துக்குச் செல்லும். சோம்பல் மனம் தன்னுடைய மந்தமான இயைபிலிருந்து பிரிந்தபோது எங்கெல்லாம் எப்படி

யெல்லாம் அலைந்து திரிகிறதோ அதேபோல் இந்தக் குழந்தையின் மனமும் ஒரு குறிக்கோளும் இன்றி அலைந்து திரியும்.

இத்தகைய பகற்கனவில் குழந்தைகள் தம் மனத்தைப் பறி கொடுத்து விடுகின்றனர். அந் நிலையில் அவர்களுடைய மனத்தி னுள் அந்தரங்க வினையாற்றலின் அடையாளம் ஏதும் இல்லை; தனி வேறுபாடுகளும் இல்லை. பொருட்பாடத்துக்குட்பட்ட குழந்தைகள் வெறும் ஏற்கின்ற பொருள்களாகவே இருக்கின்றனர். இதே கருத்தை வேறு வகையிலும் கூறலாம். புதுப் பண்டங் களைத் தொடர்ந்து அடுக்கும் பண்டசாலை ஆகிறது. அம்மாதிரிக் குழந்தையின் மனமும் அமைகிறது.

ஒரு பொருளின் பண்புகளைக் கண்டறியும் நோக்கங் கொண்ட எந்த வினையாற்றலும் தூண்டப்படுவதில்லை. அவைகளைப் பற்றிக் குழந்தை தானே எந்தக் கருத்தையும் பெற முடியாது போகிறது. இந்தப் பொருளில் காணப்படும் பண்புக்கும் இனிவரப்போகும் பொருளில் காணப்படும் பண்புக்கும் உள்ள பொதுத் தன்மையை உணரக்கூடிய சாத்தியக்கூறும் இல்லை. எந்தக் குறிப்பிட்ட சிறப் பியலில் ஒரு பொருளானது மற்றொன்றோடு ஒத்திருக்கிறது. அதனுடைய பயனில் எவ்வாறு ஒத்திருக்கிறது என்றெல்லாம் உணர்ந்து கொள்ளும் சக்தியில்லை.

ஒப்புடைமையால் (Similarity) வெவ்வேறு பொருள்களின் பிம்பங்களை அல்லது படிமங்களை இயையச் செய்யும் பொழுது அவைகள் அனைத்திலும் காணக்கூடிய பொதுப் பண்பினை நாம் பிரித்தெடுக்க வேண்டும். எடுத்துக்காட்டாக இரண்டு நீள் சதுரப் பலகைகள் ஒரே மாதிரி இருக்கின்றன என்று சொல்லும் பொழுது இப் பலகைகளில் காணப்படும் பல பண்புகளில் இருந்து இதைப் பிரித்தெடுக்கின்றோம். அவைகளெல்லாம் மரத்தால் ஆனவை; பாலிஷ் பூசப்பட்டவை; மென்மையானவை; வண்ணம் தீட்டப்பட்டவை; ஒரே வெப்பமுடையவை: இன்னும் பிற அந்தப் பலகைகளின் பண்புகள். அவைகளிலிருந்து இந்த வடிவப் பண்பினை மட்டும் நாம் பிரித்தெடுக்கிறோம். அவை எல்லாம் வடிவத்தில் ஒரே மாதிரி இருக்கின்றன. இவற்றை உணர்ந்த பிறகு, இவற்றால் இன்னும் பல பண்டங்கள் நமக்கு நினைவூட்டப் படலாம். மேசையின் மேல்பரப்பு, சாளரம் முதலியன. இதைப் பெறுவதற்கு முன் இந்தப் பொருள்களில் காணப்படும் பல்வேறு இயல் பண்புகளிலிருந்து நீள் படிவ வடிவத்தை மட்டும் அருவ மாகப் பிரித்தெடுக்கும் திறம் மனம் முதலில் பெறத்தக்கதாக இருத்தல் வேண்டும். இந்தக் கேள்வியில் மனத்தின் வேலை சுறு சுறுப்பாக இருக்கவேண்டும். பொருளை அது பாகுபடுத்துகிறது.

அதிலிருந்து குறிப்பிட்ட இயற்பண்பினைப் பிரித்தெடுக்கிறது. இந்தத் தீர்மானமான இயற்பண்பினைத் துணையாக வைத்துக் கொண்டு அதே இணைப்பால் பல பண்டங்களைக் கூட்டுவிக்கிறது. ஒரு பொருளில் காணப்படும் பல இயற் பண்புகளிலிருந்து ஒரு குறிப்பிட்ட தனி இயற்பண்பினைத் தேர்ந்து எடுக்கும் திறமை இல்லாவிடின் ஒப்பிடுதல், ஒன்றுபடுத்தல் (Similarity, Synthesis) இன்னும் விவேகத்தின் எல்லா உயர்தர வேலைகளும் நடைபெறுவது இயலாததாகும். மேலும், இதுதான் விவேகப்பணி. ஏனென்றால் விவேகத்தின் முக்கியமான பணி பண்டங்களைப் படம் பிடிப்பதல்ல (Photograph); ஒரு படப்புத்தகம்போல் தாள்களை ஒன்றின்மேல் ஒன்று வைப்பதல்ல; அல்லது நடைப்பாதைக் கற்களைப்போல் பக்கம் பக்கமாக அடுக்குவதும் அல்ல. அம்மாதிரி ஒன்றின்மேல் கொட்டி வைப்பது விவேகப் போக்கின்மேல் விளைவிக்கப்படும் கொடுமையான தீய செயலாகும். விவேகம் ஒழுங்கையும் பகுத் தறிவையும் தன் சிறப்பியல்புகளாகப் பெற்றிருக்கிறது. பண்டங் களில் மிகச் சிறப்பாகப் புதைந்து கிடக்கும் சிறப்பியல்புகளைக் கண்டறிந்து பிரித்தெடுக்க வல்லது. இவைகளைக் கொண்டுதான் விவேகம் தன்னுடைய உள் அமைப்பை உருவாக்கிக் கொள்கிறது.

ஆசிரியக்கலை சார்ந்த துணைக்கருவிகளைக் கொண்டு (Pedagogic aid) பண்டங்களின் இயற்பண்புகளை உணர்ந்து இப்பொழுது நம் குழந்தைகளின் மனமானது ஒழுங்குபடுத்தியும் இனப்படுத்தியும் தெரிந்து கொண்டிருக்கிறது. அவர்கள் பாகுபடுத்திய எல்லா இயற் பண்புகளுக்குத் தக்கவாறு கூர்ந்து கவனிப்பதுடன் வேறன்மை (identity), வேற்றுமைகள் (differences), ஒப்புமைகள் (resemblance) ஆகியவைகளையும் தெரிந்து கொள்கின்றனர். புலன் சார்ந்த பண்டங்களில் காணப்படும் இதுபோன்ற பண்பு களைக் கண்டறிய இவ் வேலை எளியதாகவும் தானாகவே செய்யும் திறமையையும் பெறச் செய்துவிடுகிறது. அதாவது ஒரு பண்டத் தின் பல்வேறு பண்புகளைக் குழந்தை எளிதில் கண்டு கொள்ளவும், குறித்துக் கொள்ளவும் முடியும். எடுத்துக்காட்டாகச் சில பண்டங்கள் வடிவில் ஒன்றுபோல் இருக்கின்றன என்றும் வண்ணத் தில் ஒத்திருக்கின்றன என்றும் அவனால் எளிதில் அறிய முடிகி றது. ஏனென்றால், 'வடிவமும் வண்ணமும்' முன்கூட்டியே குறிப் பிட்ட இனமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், ஒற்றுமை யைக்கொண்டு அந்தப் பொருள்களைத் திரும்பவும் மனத்துக்குக் கொண்டுவருகின்றனர். இந்த இயற்பண்புகளை வகைப்படுத்துதல் (classification) ஒருவகைத் திசை காட்டும் காந்தக்கல் (loadstone) போன்றது. நிச்சயமான சில பண்புத் தொகையின் கவர்ச்சி கரமான சக்தி, இந்தப் பண்புகளைப் பெற்ற சாமான்கள் இக் கவர்ச்சியால் ஈர்க்கப்படுகின்றன; ஒன்றோடொன்று இணைகின்

றன. இதுதான் ஒப்பனை (similitude) இணைவாகும். இது பெரும் பாலும் உயிர்ப்புத் திறமற்றதாக இருக்கும் (mechanical). புத்த கங்களெல்லாம் பிரிஸம் (prism) உருவம் பெற்றிருக்கின்றன என எமது குழந்தை ஒன்று சொல்லலாம். இவ்வாறு தீர்மானமாகச் சொல்வது திடீரென்று பிறந்துவிடவில்லை. மிகவும் சிக்கலான செயற்பாங்கினுல் பெறப்பட்டதே. ஏற்கெனவே அவனுடைய மனத்தில் பிரிஸத்தின் வடிவம் தெளிவாகப் பதிந்து, அவ்வாறு உருவம் பெற்றவை எவை எவை சூழ்நிலையில் இருக்கின்றனவோ அவையெல்லாம் தனக்குள் ஈர்க்கப்பட்டிராவிடில், இந்தத் தீர்மானத்துக்கு வரமுடியுமா? அம்மாதிரியே வெண்மை நிறக் காகிதத்தின்மேல் கறுப்பு நிற அடையாளங்களைக் காணும் பொழுது அவனுடைய மனத்துக்குள் பல வண்ணங்கள் பாகு படுத்தி ஒரு முழுமையாக்கப் பட்டிருப்பதால் கவரப்படுகிறுன். அது குழந்தையைப் 'புத்தகங்கள் அச்சிடப்பட்ட வெள்ளைக் காகிதங்கள்' என்று சொல்ல வைக்கும்.

இந்த உயிர்ப்புள்ள தொழிலில்தான் ஒன்றுக்கொன்று வேறு பாடுகளைத் தோற்றுவிக்கும். இதுபோன்ற பொருள்களை வேறு எந்தெந்த இயல் பண்புகள் ஈர்க்கும்? ஒப்புமை ஒன்ருக இணங்கு வதற்கு அங்குள்ள எந்தச் சிறப்பியல்புகள் தேர்ந்தெடுக்கப்படும்? ஒரு குழந்தைக்கு ஒரு திரைச்சீலை மெல்லிய பச்சையாகத் தோன்ற லாம். மற்ருெரு குழந்தைக்கு அதே திரைச்சீலை நிறையில் இலேசாக இருக்கலாம். ஒரு குழந்தைக்கு ஒரு கையின் வெண்மை தோன்றலாம். மற்ருெரு குழந்தைக்கு அதே கையின் மென்மை யான மேந்தோல் தெரியலாம். ஒரு குழந்தைக்குச் சாளரம் நீள் சதுரமாகவும், மற்ருெரு குழந்தைக்கு வானத்தின் நீலத்தைக் காண்பதற்கு ஏற்பட்ட இடைவெளியெனத் தோன்றலாம். அங்கு அமைந்திருக்கும் சிறப்பு இயல்புகளில் எதைத் தேர்ந் தெடுப்பது என்பது இயல்பான தேர்வு (natural selection) ஆகி, அவர்களுடைய உள்ளார்ந்த போக்குகளுடன் ஒன்றிவிடுகிறது.

இம்மாதிரியே ஒரு விஞ்ஞானியும் தம் இணைவுகளுக்கு மிகவும் பயன்படும் பண்புகளைத் தேர்ந்தெடுப்பார். ஒரு மனித இன நூலார் (anthropologist) மனித இனத்தின் வேறுபாடு காணத் தலையின் வடிவத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்வார். மற்ருெரு வர் மெய்த்தோலுக்கடியில் காணும் நிறமியைத் (pigment) தேர்ந்தெடுக்கலாம். இவ்விரண்டில் ஏதாயினும் நம் நோக்கத் துக்குப் பயனளிக்கும். ஒவ்வொரு மனித இன நூலாரும் மனிதனுக்குரிய வெளிச் சிறப்பியல்புகள் பற்றி மிகவும் தெளிவான அறிவு பெற்றிருக்கின்றனர். ஆனுல், முக்கியமான விஷயம் என்ன வென்ருல் இனப்படுத்தலுக்கு அடிப்படையான பொருந்திய சிறப்

பியல்பைத் தேர்ந்தெடுப்பதேயாகும். அதாவது பல சிறப்பு இயல்புகள் அதனதன் ஒப்புமைக்குத் தக்கவாறு பகுதிபகுதியாக அமைக்கப் பயன்படும் ஒரு சிறப்பியல்பைத் தேர்ந்தெடுப்பதாகும். முழுமையும் நடைமுறையில் ஈடுபடும் ஒருவர் மனிதனை விஞ்ஞானக் கண்கொண்டு பார்ப்பதற்குப் பதிலாக பயனெறி முறைக் கோட் பாட்டுக் (utilitarian) கண்கொண்டு பார்ப்பார். தொப்பி செய் கின்றவர் மனிதனுக்குரிய சிறப்பியல்புகள் பலவற்றில் தலையின் அளவை மட்டும் பிரித்து எடுத்துக்கொள்வார். ஒரு பேச்சாளர் தாம் பேசும் பேச்சுக்கு எவ்வளவு செவிசாய்க்கும் தன்மை பெற் றிருக்கிறார்கள் என்ற கண்கொண்டு பார்ப்பார். வேண்டியதைச் சாதிப்பதற்குத் தேர்வுதான் (selection) அடிப்படையான முக்கி யத்துவம் பெற்றதாகும். தெளிவற்றதிலிருந்து நடைமுறைக்கு வருவதற்கும் நோக்கமற்ற சிந்தனையிலிருந்து செயலுக்கு வரு வதற்கும் தேர்வே முக்கியமாகத் தேவைப்படுகிறது.

ஆக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் ஒரு கட்டுப்பாட்டு விதி யுடன் இருந்து வருவதே அப்பொருளின் சிறப்பியல்பாகும். நம் முடைய உளஇயல் புலன் சார்ந்த அமைப்பு ஒரு தேர்வின் அடிப் படையில் தோன்றியதாகும். புலன்களின் பணிகள் என்ன? ஒரு குறிப்பிட்ட துடிப்புகளுக்கே இயங்குவதைத் தவிர வேறென்ன? கண் ஒளியைக் கவர்கிறது; செவி ஒலியைச் செவி மடுக்கிறது. (கேட்கிறது). மனத்தின் உள்ளடக்கத்தை அமைக்கும் பொழுது முதல்படி என்னவென்றால், நடைமுறையில் அவசியம் கட்டுப் பாட்டுடன் இருப்பதைத் தேர்ந்தெடுப்பதாகும். இருந்தபோதிலும் புலன்கள் தேர்ந்தெடுக்கும் சாத்தியக் கூறுகளில் இன்னும் வரம்பு களைச் சுமத்திக்கொள்கிறது. அந்தரங்கத் தேர்வின் வினையாற்றலை ஒட்டியும் நடக்கச் செய்கிறது. எனவே, நம் கவனம் நிர்ணயிக்கப் பட்ட பண்டங்களின்மேல் திருப்பப்படுகிறது. எல்லா பொருள் களின் மேலும் அல்ல. செய்யத்தக்க பல செயல்களில் இதைத் தான் உண்மையாகச் செய்ய வேண்டுமென்று தேர்ந்தெடுப்பது விருப்பத் துணிவாற்றல் ஆகும் (Volition).

இதே முறையில் விவேகத்தின் மாபெரும் பணி சாதிக்கப் படுகிறது. இனம் ஒத்த கவன வினையாலும், உள்ளார்ந்த இயற்றி நிலையாலும் ஒரு பொருளின் முக்கிய சிறப்பியல்புகளைப் பிரித் தெடுக்கிறது. அந்த வகையில் அவைகளின் படிமங்களை இணைத்து நனவு மனத்தின் முன்னிலையில் வைக்கிறது. வேண்டாத வெட்டிச் சுமை பலவற்றைக் கவனிக்க மறுக்கிறது. அந்தச் சுமை இருந்தால் உருவம் தெரியாமல் போய்க் குழப்பத்தையும் உண்டுபண்ணும். ஒவ்வொரு சிறந்த அறிவாளியின் மனமும் இன்றியமையாததை மேலீடானதிலிருந்து பிரிக்கத் தெரிந்து கொள்கிறது. மேலீ

டானதை ஒதுக்கி விடுகிறது. அவ்வாறு செய்யும் பொழுது அதனுடைய சிறப்பியல்பினைப் பெறச் செய்கிறது. அவை தெளிவு, மென்மை, உயிருட்டும் வினையாற்றல்கள் தன்னுடைய ஆக்கத் தகும் வாழ்வுக்குப் பயன் அளிப்பவைகளைப் பிரித்தெடுக்கத் திறமை பெற்றிருக்கிறது. இவ்வண்ணம் ஒழுங்கமைதி பெற்ற அண்டத்தில் உய்தி அல்லது பேரின்பப் பேறு (Salvation) பெறுகிறது. இந்தச் சிறப்பியல் வாய்ந்த வினையாற்றலில்லாமல் விவேகம் தன்னைப் படைத்துக் கொள்ள முடியாது; எந்தப் பொருள் மேலும் கவனம் நிலைபெறுமல் இங்குமங்கும் திரிவது போல், எந்த நிலையான செயலையும் செய்யத் தீர்ப்பெடுக்காத இயற்றிநிலைபோல் இருக்கும்.

ஆண்டவன் தன்னுடைய தொழிலை ஊறுபடுத்தாமல் ஒரே சமயத்தில் உலகத்திலுள்ள நுண்ணிய பகுதியையும் காண முடியும் என்று நம்மால் சுற்பனை செய்து கொள்ளக் கூடும் என ஜேம்ஸ் (James) கூறுகிருர். ஆனுல் நம்முடைய மனித கவனம் அவ்வாறு சிதறடிக்கப் பட்டால் எல்லாப் பொருள்களையும் ஏதோ ஒரு வெற்றிடத்தில்தான் ஆழ்ந்து சிந்தனை செய்ய முடியும். எந்தக் குறிப்பிட்ட வினையையும் ஆற்ற வாய்ப்புப் பெறுமல் போய்விடும்.

வரம்பை நிர்ணயிக்காமல் எதையும் நம்மால் கருத முடியாதென்பது வாழ்வின் சிறந்த இயல் நிகழ்ச்சிகளில் ஒன்ருகும். ஒவ்வொரு உயிர் வாழ்வனவற்றுக்கும் ஒரு வடிவமும் உயர்த்தியும் (stature) இருக்கப்பட வேண்டுமென்பது அந்த மாய விதியாகும். கனிப்பொருள் (minerals) அப்படியல்ல. அவை எண்ணற்ற வடிவம் பெற்றவை;, பக்கங்களையும் பெற்றுள்ளன. அதேபோல் நம்முடைய உளவாழ்விலும் அது பிரதிபலிக்கப்படுகிறது. அதன் வளர்ச்சி, அது தானே படைத்துக் கொள்ளுதல் எல்லாம் இன்னும் மென்மேலும் துல்லியமும் (precise) படிப்படியான கவனமும் தவிர வேறென்ன? இவ்வாறு தொடக்கக் குழப்பத்திலிருந்து நம்முடைய உளச் சிறப்பியல்புகள் படிப்படியாக உருவாக்கப்படுகின்றன; செதுக்கவும் படுகின்றன.

ஒரு பொருளைப் பற்றி ஒரு கருத்தை உருவாக்குதல், தீர்ப்புக் காண்பது, வாதிப்பது போன்றவற்றிற்குத் தேவைப்படும் திறமை எப்பொழுதும் இந்த அடித்தளத்தைக் கொண்டதாகும். ஒரு தூணின் சாதாரணப் பண்புகளைக் குறித்த பிறகு தூண்களெல்லாம் தாங்குவதற்கமைந்தனவே என்ற பொது உண்மையைப் பிரித்தெடுக்கிருேம். இந்தக் கூட்டிணைப்பு (synthetic) கருத்துத் தேர்வுப் பண்பின் அடித்தளத்தின் மேலானது. அங்ஙனமே நம் தீர்ப்பில் 'தூண்கள் நீள் உருளை போன்றவை' என்று கூறிவிட

லாம். தூண்கள் குளிர்ந்தவை அவை கடினமானவை, கார்பனேட் ஆஃப் லைம்மால் (carbonate of· lime) ஆனவை. இன்னும் பிற பண்புகளை நாம் கூறியிருக்கலாம். ஆனால் அவைகளுக்குப் பதிலாக ஒரே ஒரு பண்பினை (அவை சிலிண்டர் அல்லது நீள் வடிவம்) மட்டும் எடுத்துச் சொன்னோம். இவ்வாறு தேர்ந்தெடுக்கும் திறமையே தர்க்கம் செய்ய உதவுகிறது. எடுத்துக்காட்டாகக் குழந்தைகளுக்குப் பிதாகோரஸ் விதியைப் (the theorem of Pythagras) பற்றி அறிமுகப் படுத்தும் போது, குழந்தைகள் அதில் அடங்கிய பல உலோகத் தகடுகளைக் கையில் எடுத்துப் பள்ளங்களில் பூட்டுகின்றனர். நீள் சதுரம் ஒரு ராம் பஸுக்கு (reetangle, rhombus) க்குச் சமம் என்ற உண்மையிலிருந்து தொடங்க வேண்டும். இதை அவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். அதேபோல் ஒரு சதுரமும் அந்த ராம்பஸுக்குச் சமம் என்றும் உணர்ந்திருக்க வேண்டும். இந்த உண்மையின் புலன் காட்சியே (pereeption) இதற்கடுத்த தர்க்கத்துக்குப்போக இடம் தருகிறது. ஆதலால், சதுரமும் நீள் சதுரமும் ஒன்றுக்கொன்று சமமாகின்றன. இந்த இயல் பண்பினைக் கண்டுணர்ந்து தீர்மானிக்க முடியாதிருந்தால் மனம் எவ்வித முடிவுக்கும் வந்திருக்க முடியாது. இரண்டும் ஒரே மாதிரி இல்லாத உருவங்களுக்கிடையே பொதுவாகக் காணப்படும் இயல் பண்பினைப் புதிதாகக் கண்டுபிடிக்கும் வெற்றியை மனம் பெற்றிருக்கிறது. இந்தப் புதுக் கண்டுபிடித்தல் பல தீர்மானங்களுக்கு வழி காட்டுகிறது. இந்தத் தீர்மான முடிவுகளால் பிதாகோரஸ் விதி இறுதியாகக் காட்டப்படும்.

* * *

இப்பொழுது இயற்றிநிலையைப்போல் உட் தூண்டுதலும் உள் அடக்கு சக்திகளும் முறையாகப் பயிற்சி பெறுவதைத் தீர்மானம் முன்கூட்டியே ஏற்றுக்கொள்கிறது. அது தனிப்பட்டவன் தானே செய்துகொள்ள வேண்டும். பழக்கம் நிலைபெறும் வரை செய்து வரவேண்டும். அதேபோல் விவேகத்திலும் இணைத்தல் தேர்தல் தனியார் தன்னுடைய செய்வினைகளால் பயிற்சி பெற்று வரவேண்டும். இவ்வாறு பெறும்பொழுது புறப்பொருள்கள் வழி காட்டி உதவுகின்றன. சில குறிப்பிட்ட கருத்துகளைத் தவிர்த்தும் சிலவற்றைத் தேர்ந்தெடுத்தும் அவன் தன் வளர்ச்சியைப் பெறச் செய்து கொள்கிறான். இவன் இவ்வாறு மனப்பழக்கங்களைப் (Mental habits) பெறுகிறான். அவை தனியாரின் சிறப்பியல்புகளைக் குறிக்கும். மனத்தால் ஆக்கக் கூடிய எல்லா அந்தரங்க வினையாற்றல்களின் அடிப்படையில் கவனத்தின் இயல் நிகழ்ச்சி காட்டுவதுபோல் தனியார் போக்கு அல்லது இயற்கை (Nature) என்று ஒன்றிருக்கிறது.

பிறருடைய வாதங்களை (reasoning) நாம் புரிந்துகொள் வதற்கும் நாமே வாதமிடுவதற்கும் சந்தேகம் ஏதுமில்லாத வகை யில் அடிப்படையில் வேற்றுமை இருக்கிறது. ஓவியன் ஒருவன் ஒரு சூழ்நிலையை வண்ணம், வண்ணப் பொருத்தம் (harmony), வடிவம் முதலியவற்றைப் பற்றித் தன்னுடைய அன்றைய கருத்து நிலவரத்தைப்போல் காண்கிறான். இதற்கும் ஒருவன் தானாகத் தன்னுள் அமைத்துக் கொண்டிருக்கிற கலையுணர்ச்சி (aesthetic sense) நிலைபெறும்படி வெளியுலகத்தை ஒரு குறிப்பிட்ட நோக்கத் துடன் காண்பதற்கும் வேற்றுமை இருக்கிறது. பழந்துணிகள் ஒரு பையில் திணிக்கப்பட்டிருக்கின்றன. சில வெளியேயும் தொங்கிக் கொண்டிருக்கின்றன. இத்தகைய மூட்டை ஒன்றைத் தோளின் மேல் போட்டுக்கொண்டு வீதி வீதியாய் ஒருவன் விலை கூறிக் கொண்டிருக்கிறான். இந்தக் காட்சியை நம் கண் முன் வைத்துக் கொண்டு பின் வரும் கருத்துகளை ஆய்வோம். இந்தப் பை போல் ஒருவருடைய மனத்துக்குள் யூகிளிட் (Euclid) தீர்வாய்வு முடிவுகள் (problem), ராஃபெல் என்ற ஓவிய மேதையின் ஓவியப் படிமங்கள், சரித்திரம், பூகோளம் முதலியவைகள் பற்றிய கருத்துகள், இலக்கியத்தின் பாங்கு போன்ற அனைத்தும் ஒன்றாகக் குழம்பி அவை எவ்வாறு கிடந்தால்தான் என்ன என்ற மனக் கவலை ஏதுமின்றி அதை ஒரு பாரமாகக் கொள்வதும் உண்டு. அந்த மூட்டையில் பல பொருள்கள் கலந்து சுமந்து செல் வதற்குப் பதிலாக அதே பொருள்களை ஒழுங்கான இல்லத்தில் ஓர் அறையில் ஒழுங்காக அடுக்கி வைத்தால் எப்படி இருக்கும். அதேபோல் மேலே குறிப்பிட்ட பல அறிவுகளைத் தன் வாழ்க் கைக்குப் பயன் தரும் வகையில் தன்னுடைய நன்மைக்கும் உதவிக்கும் உதவும்படி செய்தால் இப் பொருள்கள், இக் கருத் துகள் இனிமேல் அவனுக்குப் பெரிய சுமையாகத் தோன்றுவ தில்லை. அடைக்கப்பட்ட பையில் இருப்பதுபோல் இக் கருத்துகள் ஒழுங்கில்லாமல் மனத்தில் நெருங்கிக் கிடப்பதில்லை. சில மனங்கள் பல அறிவுத் துணுக்குகள் அந்தப் பைபோல் திணிக்கப் பட்டுக் கிடக்கின்றன. வேறு சிலர் மனத்தில் இதைக்காட்டிலும் மிகக் கூடுதலாக இருக்கலாம். ஆனால், அவை ஒன்றோடொன்று கலங்காமல் அதனதன் ஒழுங்குப்படி, பயன்படி. இசைவுடன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன.

வேறு ஒருவர் தம்முடைய விளக்கத்தால் ஒன்றை நமக்குப் புரிய வைப்பதற்கும் நாமே அப் பொருளைப் புரிந்து கொள்வதற்கும் உள்ள வேற்றுமை மலைக்கும் மடுவுக்கும் உள்ளதுபோன்றது. ஒன்று மெழுகின்மேல் பதியவைக்கப்பட்ட படிவம்; கலைக்கப்பட்டு வேறொரு படிவம் உருவாக்கப்படலாம். மற்றொன்று பளிங்குக் கல்லில் சிற்பி ஒருவன் தானே செதுக்கி ஓர் உருவம் அமைக்கிறான்.

மேலே குறிப்பிட்ட இருவகை மனமும் இவ் விருவகை வடிவத்தை ஒக்கும். தானே புரிந்து கொள்பவன் எதிர்பாராத பதிவுகளைப் பெறுகிறான். அவனுடைய நனவு உள்ளம் விடுதலை பெற்றது போலும் தன் உள்ளத்திலிருந்து ஒரு ஒளி தோன்றுவதாக உணர்கிறான். புரிந்து கொள்வது என்பது வெறும் விருப்பு வெறுப்பின்மையல்ல; அசட்டை மனப்பான்மையல்ல. அது ஏதோ ஒன்றின்தொடக்கம் ஆகும். சில வேளைகளில் தனக்குள் புதுப் பித்துக்கொள்ளும் வாழ்வின் தொடக்கமாயிருக்கலாம். விவேக உள்ளெழுச்சியை விட வேறு எந்த மன எழுச்சியும் மனிதனுக்கு அவ்வளவு பயனளிப்பதில்லை. நல்ல பயனளிக்கக் கூடிய ஒன்றினை ஒருவன் புதிதாகக் கண்டுபிடிக்கும் பொழுது மனிதரில் காணப் படும் பேரின்பத்தைப் பெறுகிறான். சாதாரணமாகப் புரிந்து கொள்பவனும் பெரிய மகிழ்ச்சியை அடைகிறான். தன்னுடைய கடுமையான தொல்லைகளிலிருந்து கரையேற உதவி புரியலாம். ஒருவன் ஒரு பெரிய இடரினால் துன்புறுகிறான். அவனுக்கு இருக்கும் இடரையும் பிறர் படும் துன்பத்தையும் தானே புரிந்து கொண்டானால் அல்லது அவன் படும் துயர்களின் காரணங்களை உணர்ந் தானாகில் அவன் ஓர் ஆறுதலைப் பெறுகிறான். 'பேரின்பப் பேற்றின் உணர்ச்சி' பெறுகிறான். குழப்பமான இருளில் புதைந்து கிடந்த வனுக்கு ஆறுதல் அளிக்கும் ஓர் ஒளிக்கற்றை அவன்முன் தோன்று கிறது. இருள் சூழ்ந்த வேளையில் தப்பிக்க வழி காண்பதே கடின மான விஷயம். நன்றியுள்ள நாய் ஒன்று இறந்த எசமானனுடைய கல்லறையின்முன் தன் உயிரை விடுகிறது. ஆனால், தனது ஒரே மகனை இழந்த தாய் தன்னுடைய மகனின் கல்லறையின் அருகே உயிருடன் இருக்கிறாள். இவ்விரண்டையும் சிந்தித்துப் பார்ப் போம். இரண்டுக்கு மிடையே காணப்படும் வாதத்தின் ஒளியே வேற்றுமையைத் தருகிறது. நாயினால் இது விஷயமாக வாதிக்க முடியாது. அதனுடைய துயரத்தைத் தீர்க்கவல்ல எந்த ஒளிக் கதிரும் அதனுடைய இருள் நிறைந்த விவேகத்துக்குள் நுழைய முடியாது.

ஆனால் விதி என்ற பொது நியாயமும் காலம் சென்றவனின் உயிர்ப்புடைய நினைவும் தாயைக் காக்கிறது. படிப்படியாக, மறதியாலன்று. அது ஒன்றுதான் விலங்கைக் காப்பாற்ற முடியும். அதாவது எசமானனை மறந்தால்தான் நாய் சாகாமல் இருக்க முடியும். உலகத்துடன் தொடர்பு கொண்ட விவேகம் துன்புறும் உள்ளத்துக்கு ஆறுதல் அளிக்கிறது. அத்தகைய ஆறுதலை வறண்ட சொற்பொழிவாற்றும் பேராசிரியரிடமிருந்து பெற முடியாது. நம்முடைய உள்ளத்தின் நிலைமையுடன் பரிவு காணாத ஒரு கற்ற கற்றறிஞரின் கருத்துகளை மனப்பாடம் செய் தால் ஆறுதல் கிடைக்காது. சிந்தித்துப் பார். 'ஒரு கொள்கை

யிலிருந்து வலிமை பெறு' என்று கூறும் போது என்ன நினைக்கிறோம். என்றும் காரண காரியத்தை உணரவிருக்கும் விவேகமானது தன்னையே உருவாக்கி நற்பேறு பெறும் பணியில் விவேகத்துக்குச் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டுமென்று கருதுகிறோம்.

சாவின் அபாய நிலையில் இருக்கும் பொழுது நுண்ணறிவு புரிந்து கொள்வதில் நம்முடைய விமோசனத்தை நிரூபிக்குமானால் அப்பொழுது மனிதனுக்கு என்ன இன்ப ஊற்றை அளிக்காது!

'திறந்த மனம்'—'மனத்திறவு'—என்று நாம் கூறும் பொழுது, ஆக்கும் இயல் நிகழ்ச்சியைக் (creative Phenomenon) குறிக்கிறோம். வெளியிலிருந்து பலாத்காரத்தால் ஏற்படுத்தப்பட்ட பதிவின் வலியிழந்த பலனைக் குறிப்பதில்லை. மனம் திறத்தல் என்பது சுறுசுறுப்பான புரிந்து கொள்ளும் திறன் அல்லது செயல் திறனுடைய உணர்வாற்றல் (active comprehension) என்பதனைக் குறிக்கும். இது பெரிய உள்ளெழுச்சி நடைபெறும் போது தொடர்ந்து வருகிறது. ஆதலால் இது ஒரு தெய்விக நிகழ்ச்சியாக உணரப்படுகிறது.

சுவையற்ற பாடங்களைக் கேட்டுக் கேட்டு மனம் நொந்த ஒரு தாயில்லாக் குழந்தையை எனக்குத் தெரியும். அவளால் படிக்கவே முடியவில்லை. சொல்லிக் கொடுத்த பாடங்களையும் அவளால் புரிந்து கொள்ள இயலவில்லை. தனிமையான வாழ்க்கையில் இயற்கையான அன்பைப் பெற முடியாதது அவளுடைய மனச் சோர்வினை இன்னும் அதிகப்படுத்திற்று. அவளுடைய தந்தை அவளை ஓரிரண்டாண்டுகள் வெட்டவெளி நிறைந்த நாட்டுப் புறத்தில் மிலேச்சன் போல் வாழட்டும் என்று தீர்மானம் செய்தார். மறுபடியும் நகரத்துக்குக் கொண்டுவரப்பட்டாள். சிறந்த பேராசிரியர்களின் நேர்முகப் பாதுகாப்பில் விடப்பட்டாள். அவள் படித்தாள்; கற்றாள். ஆனால், செயலற்றவள் போல் சுறுசுறுப்பின்றிச் சோர்வுற்றிருந்தாள். அடிக்கடி அவளுடைய தந்தை 'உன்னுடைய மனம் மறுபடியும் திறந்திருக்காதா?' என்று கேட்பதுண்டு. அவளும் எப்பொழுதும் 'எனக்குத் தெரியாது, நானறியேன்' என்றே பதிலுரைத்து வந்தாள். 'நீங்கள் சொல்வது என்ன?' என்றும் கேட்பாள். ஏதோ என்னுடைய வாழ்க்கையில் எதிர்பாராத வகையில் எப்படியோ அவள் என்னுடைய பாதுகாப்புக்குள் வர நேர்ந்தது. அப்பொழுது நான் மருத்துவக் கல்லூரியில் மாணவியாக இருந்துவந்தேன். ஆசிரியக்கலை பற்றிய முதல் ஆராய்ச்சியை நடத்தினேன். அது பற்றி இங்குக் கூறின் விரியும். கூறினால் அது அக்கறையூட்டவல்லதுதான். ஒருநாள் அந்தப் பெண்ணும் நானும் ஒன்றாய் இருந்தோம். அவள் ஆர்

கானிக் கெமிஸ்ட்ரி (organic chemistry) பாடத்தில் ஈடுபட்டிருந்தாள். அதை விட்டு வந்து என்னைப் பார்த்தாள். அவளுடைய கண்களில் ஒளி மிளிர்ந்தது. 'இங்கே அது இருக்கிறது; நான் புரிந்து கொண்டேன்' என்றாள். பிறகு அவள் எழுந்தாள். உரத்த குரலில், 'தந்தையே தந்தையே என்னுடைய மனம் திறந்து விட்டது' என்று உரத்த குரலில் கத்திக்கொண்டு வெளியேறி விட்டாள். அப்பொழுது அவளுடைய முன் வரலாறு அறியாத நான் திகைத்துப் போனேன்; துடிதுடித்தேன். அவள் தந்தையின் கரங்களைப் பற்றிக் கொண்டாள். 'நான் இப்பொழுது சொல்ல முடியும். ஆம், ஆம். அது என்ன என்று முன்பெல்லாம் புரிந்து கொள்ளவில்லை. என் மனம் திறந்து விட்டது' என்றாள் அப் பெண். அந் நேரத்தில் தந்தையும் மகளும் சேர்ந்து அவர்கள் பெற்ற இன்பத்தைக் கண்டபொழுது வாழ்வின் நல்லூற்றுகளெல்லாம் என் மனத்துக்குள் தோன்றின. விவேகத்தை அடிமைப் படுத்துவதால் இந்த நல்லூற்றுகளை நாம் அழித்து விடுகிறோம்.

ஆம் ஒவ்வொரு விவேக வெற்றியும் எமது குழந்தைகளுக்கு இன்பப் பெருக்கு ஊற்றாகும். இந்த இன்பத்துக்குத்தான் அவர்கள் பெரும்பாலான வகையில் இணைவு தெரிவிக்கின்றனர். இழிந்த இன்பங்களை வெறுக்கச் செய்கிறது. இந்த இன்பத்தின் சுவையைக் கண்ட பிறகு எமது குழந்தைகள் தித்திப்புகளையும் பொம்மைகளையும் வீண் இடம்பங்களையும் வெறுத்தனர்.

அவர்களைப்பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்வோர் கண்களுக்கு அவர்களை மாண்புமிக்கவர்களாக்குவது இதுவே.

மனிதனைக் காட்டுமிராண்டியிலிருந்து வேறு படுத்தக்கூடிய பேரின்பமே அவர்கள் பெறும் இன்பம். துயரத்திலிருந்தும் அருளிலிருந்தும் அழியாதபடி அவ்வின்பம் நம்மைக் காக்கவல்லது.

எங்களுடைய முறை குழந்தையின் இன்பத்தைப் பெற முயற்சிக்கிறதென்றும், அது தெய்விகமானது அழியாதது என்றும் முயற்சியின்மேல் கண்டனம் தெரிவிக்கப்படுகிறது. இழிவாகப் பேசப்படுகிறது. அவ்வாறு நிந்திக்கப்படுவது எங்கள் முறையன்று. குழந்தையே. இந்த நிபந்தனையின் சாரம் குழந்தையின்மேல் திணிக்கப்படும் பொய்க் குற்றச்சாட்டாகும். குழந்தையை ஒரு விலங்கின் மட்டத்தில் வைத்து எல்லோரும் பேசுகின்றனர். அவனுடைய இன்பம் எல்லாம் மிகைபட உண்பதிலும், சோம்பலிலும் இன்னும் பிற மோசமானவைகளிலுமே இருப்பதாகக் கருதப்படுகிறது. மேலே குறிப்பிட்ட எதுவும் குழந்தையின் இன்பத்தை மணிக்கணக்காகவும் நாட்கணக்காகவும் ஆண்டுக்கணக்காகவும் நிலைபெறச் செய்ய முடிவதில்லை, அவன் எப்பொழுது கலைத்துறை

வகை சார்ந்த அல்லது பண்பு நயமுடையவை சார்ந்ததின்மேல் இன்பம் பெறும்போதுதான் அதிலே அவன் நிலைத்துப் போகிறான்; இன்பத்துடன் வாழ்கிறான். அந்த இளம் பெண் தந்தையை நாடி அவள் ஆண்டுக்கணக்காக இருளில் உழன்று கிடந்ததின் முடிவைப் பிரகடனம் செய்ய வந்தாளே அத்தகைய இன்பத்துக்கு இதை ஒப்பிடலாம்.

ஒரு மேதை ஒரு பேருண்மையைக் கண்டு பிடிக்கும் பொழுது அது அவருடைய விவேக சோதியைக் காட்டுகிறது. இயற்கையாக உள வாழ்வின் இயல் நிகழ்ச்சியைக் குறிக்கிறது. இந்த மேதை யினிடம் காணப்படுவது உயிரோட்டமுடைய (Vigorous life) வாழ்வின் வெளிக் காட்டலாக இருக்கலாமல்லவா? இந்த உயிரோட்ட வாழ்வு பல விபத்துகளிலிருந்து மேதையின் தனிப் பட்ட முறையில் எப்படியோ தப்பிப் பிழைத்தது. ஆதலால் மனிதனுடைய உண்மையான தன்மையை அதுவே வெளிக் காட்ட லாமல்லவா? அவரைப் போலவே பொதுமக்களிலும் எங்கும் காண முடியும். எல்லா மக்களும் சிறிதளவிலோ பெருமளவிலோ ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பதாகத் தோன்றலாம். குழந்தை தன்னை உயிர்ப்புடன் உருவாக்கிக் கொள்ளக் கையாளும் வழிகளும் உண்மையாக மேதை ஒருவன் கையாளும் வழிபோல ஒத்திருக்கின்றன. அவனுடைய சிறப்பியல்புகளாவன: உட்கவரப் பட்ட கவனம், சிறந்த ஒரு முனைப்பு, தன்னுடைய சூழ்நிலையில் காணக்கூடிய பல தூண்டுதல்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளுதல் ஆகியவை. இவை அனைத்தும் அறநெறி வினை யாற்றல்களை வளர்ப்பதற்கு நெடுங்காலம் தீவிரமாகச் செய்து வரும் முயற்சியை ஒக்கும். மேதையிடம் காண்பதுபோல் குழந் தையிடம் தோன்று பலன் பெருதிருப்பதில்லை. விவேக நெருக் கடிக்கும் வேகமான அந்தரங்க வளர்ச்சிகளுக்கும் இதுதான் ஊற்றாகும். இவைகளனைத்துக்கும் மேலாக 'வெளிப்படை வினை யாற்றல்' (External activity) தொழிலில் தன்னை வெளியாக்கிக் கொள்கிறது.

எந்த மனிதன் தன்னுடைய கட்டுகளை அறுத்தெறிந்துவிட்டுத் தன் சுதந்திரத்தை நிலைபெறச் செய்கிறானோ, தான் வென்ற மனித குலக் கொடியைப் பொதுமக்கள் கண்முன் பறக்க விடுகிறானோ அவனேதான் மேதை எனப்படுவான்.

அவரவர் வாழ்ந்து வந்த காலத்தில் தம்மைக் கட்டியிருந்த கட்டுகளிலிருந்து தாமே விடுதலை பெற்ற மனிதர்கள் என்ன என்ன நற்பண்புகளையெல்லாம் வெளிக்காட்டினார்களோ அவை எமது குழந்தைகளிடம் காணக்கூடும். அவ்வகையைச் சார்ந்தது

விழுமிய தெய்விகப் பண்பான கீழ்ப்படிதலாகும். இவ்வகையான கீழ்ப்படிதல் பெரும்பாலான மக்களுக்குத் தெரியாது. துறவிகளுக்கு மட்டுமே தெரியும். அவர்களும் அநேகமாக அதைச் சொல்லளவிலேதான் அறிவார்கள். மாமுனிவர்கள் எடுத்துக் காட்டினவைகளின்மேல் ஊன்றிய சிந்தனை செலுத்துகிறார்கள். அவைகளும் வலிவுடைய அந்தரங்கத் துறவி மடங்களில் வாழ்க்கையை உருவாக்குவதற்கே செய்கின்றனர். இவர்கள் இனிமேல் அறநெறி மடத்தில் வாழப் போகின்றவர்கள். முறைப்படி தியானம் செய்யப் போகின்றவர்கள். இவர்கள் அனுசரிக்கின்ற முறையும் இவர்களுடைய உள வாழ்க்கையை உரப்படுத்துவதற்கே ஆகும். துறவிகளைத் தவிர மற்றவர்கள் தியானத்தை அனுசரிப்பதில்லை. இயற்றிநிலையுடன் கற்பதற்கும் தியானத்துக்கும் உள்ள வேறுபாட்டினை அறிவது எளிதல்ல. பல நூல்களைத் தொடர்ந்து படிப்பதால் நம்முடைய சக்தியையும் எண்ணும் திறமையையும் கலைத்து விடுகிறதென்பது தெளிவு. ஒரு செய்யுளை மனப்பாடம் செய்ய வேண்டுமானால் அதை மனத்தில் பதியவைக்கும் வரை திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்க்க வேண்டும்; ஆனால் இதெல்லாம் தியானம் ஆகாது.

'தாந்தே' புனைந்த ஒரு செய்யுளை மனப்பாடம் செய்பவனும் வேதநூலின் செய்யுள் ஒன்றின்மேல் தியானம் செய்கின்றவனும் வெவ்வேறு பணியாற்றுகின்றனர். காவியத்தை மனப்பாடம் செய்கின்றவனுடைய மனத்தில் பதிந்து ஓரளவுக்கு மனத்தை அழகுபெறச் செய்யும்; நீடித்திருக்கும் அடையாளம் ஏதும் பெற்றிருக்காது. ஆனால் தியானத்துக்கு எடுத்துக் கொண்ட வேதநூல் செய்யுள் தியானம் செய்கின்றவனையே மாற்றி உயர்த்திவிடும். தியானம் செய்கின்றவன் தன் மனத்தில் காணப்படும் எல்லாப் படிமங்களையும் கூடுமானவரை அகற்றிவிடுகிறான். தியானப் பொருளின்மேல் முழுச் சிந்தனையும் செலுத்துகிறான். எல்லா உள் வினையாற்றல்களின் போக்கு ஒருமுகப் படுத்தப்படுகிறது (Polraised). இந்த வினையாற்றல்களை முனிவர்கள் அல்லது துறவிகள், 'மனத்தில் அடங்கிய எல்லா சக்திகள்' என்று அழைப்பதுபோல் அவைகளை ஒருமுகப்படுத்துகின்றனர்.

தியானத்தில் எதிர்பார்க்கப்படும் பலன் என்ன? அந்தரங்க வலிமையாகிய கனி. ஆத்மா அல்லது உள்ளம் வலிமை பெறுகிறது; ஒருமைப்படுகிறது; இயங்கும் சக்தி பெறுகிறது; சுறுசுறுப்படைகிறது. அது இதுவரை எந்த வித்தைச் சுற்றி ஒரு முனைப்போடு இருந்து வந்ததோ அவ் வித்தின்மேல் வினையாற்றி அதைப் பழுக்க வைக்கலாம்.

தங்களுடைய இயற்கையான வளர்ச்சியைப் பின்பற்றும் எமது குழந்தைகள் கையாளும் முறையும் தியானம். வேறு எந்த வழியும் அவர்களை அவ்வளவு நேரம் ஒவ்வொரு தொழிலிலும் ஈடுபடுத்தியிருக்க முடியாது. அந்தரங்க முதிர்ச்சியையும் அதன் காரணமாக அவ்வாறு பெற்றிருக்கவும் முடியாது. ஒரு பொருளை வைத்துக்கொண்டு தொடர்ந்து வேலை செய்யும் குழந்தையின் நோக்கம் 'கற்றல்' அன்று. அவர்களுடைய அந்தரங்க வாழ்வுக்குத் தேவைகளால் அவர்கள் அப் பொருள்களிடம் ஈர்க்கப் படுகின்றனர். இந்த வாழ்வு இதன் துணையால் ஒழுங்குபடுத்தப் படவேண்டும்; வளர்ச்சி அடையப்பெறவேண்டும். இந்த வகையில் அவர்கள் நடந்துகொண்டு அவர்களுடைய 'வளர்ச்சியை' நடத்திக்கொண்டே போகின்றனர். இது ஒரு பழக்கம். இந்தப் பழக்கத்தால் அவர்களுடைய விவேகத்தைப் படிப்படியாக ஒருமைப்படுத்தி மேலும் வளம் பெறச் செய்கின்றனர். அவர்கள் தியானம் பண்ணும்போது முன்னேற்றப் பாதையில் அவர்கள் இறங்குகிறார்கள். இந்த முன்னேற்றப் பாதை தொடரும்; முடிவில்லாதது.

பொருள்களின்மேல் தியானம் செய்த பிறகே எமது குழந்தைகள் 'மௌன பாடத்தை' இன்புறும் திறமை பெறுகிறார்கள். உணர்ச்சிப் பதிவுகள் ஏற்றுக்கொள்ளும் நயம் பெற்ற பிறகு அவர்கள் இயங்கும் பொழுது ஒரு வித சப்தமும் செய்வதில்லை. கோணலானதும் விகாரமான எந்த நடத்தையும் காட்டாமல் தடுத்துக் கொள்கின்றனர். ஏனென்றால் அவர்கள் இதுவரை ஒரு முனைப்புடன் உள்ளத்தை நடத்தி வந்ததின் கனியைச் சுவைக்கின்றனர்.

இந்த வகையில் அவர்களுடைய ஆளுமை ஒருமைப்படுவதுடன் வலிவும் பெறுகிறது. இந்த நோக்கத்தைப் பெற சில பயிற்சிகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. அவை வெளியுலகத்தை இன்னும் சரி நுட்பத்துடன் உணரும் வகையில் படிப் படியாக அமைக்கப் பெற்றிருக்கின்றன. கூர்ந்து கவனித்தல், வாதாடுதல், புலன் உணர்ச்சிகள் நிலைபெறத் தாமே செய்கின்ற தொழில்களைக் கொண்டு திருத்திக்கொள்ளல் ஆகிய இவைகளுக் கெல்லாம் பயிற்சி உதவுகிறது. அவர்களே வினையாற்றுகின்றனர். அவர்களே பொருள்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். அவர்களே தங்களுடைய தொழிலில் ஊக்கம் குன்றாமலிருக்கின்றனர். சூழ்நிலையின்மேல் தங்கள் மனத்தைப் பதியவைக்கும் சாத்தியக் கூறைப்பெற அவர்களே முயலுகிறார்கள். ஒவ்வொருவரும் அவரவர் உள்ளத்தில் தோன்றும் இயங்கும் சக்திக்குக் (motor power) கீழ்ப்படிகின்றனர். அவர்கள் ஓராசிரியரால்

கலவரப்படுவதில்லை. ஆசிரியர்கள் பொதுவாகவே அவர்களை டவி உயர்ந்தவர்கள். அவளுடைய சிறந்த விவேகச் செல்வத் தால் வாழ்க்கையைத் தொடங்கவிருக்கும் குழந்தைகளின் குறுகிக் கொண்டிருக்கும் வறுமையை மிரட்டி அச்சுறுத்துகிருர். ஒளி காட்டுவதற்குப் பதிலாக இருள் வீசுகிருர்; இளைப்பாற விடுவதற்கு மாருகத் தளர்ச்சியை ஊட்டுகிருர். ஆனுல் அவளுடன் அவர்கள் அமைதியுடன் வாழ்கின்றனர். அவள் ஒரு பூசாரி மாதுபோல் இருக்கிருள். எனினும், அவள் அவர்களுடைய பணியாள். சில சிறந்த கான்வென்டுகள்போல் (convent) தன்னடக்கம், எளிமை, தொழில் ஆகியவை சூழ்நிலையாகின்றன. இங்கு இவன் தியானம் பண்ணுவான். ஒரு நாள் இவனுடைய உள்ளத்தில் பார்வையின் (vision)[1] தெளிவைக் காண்பான் உண்மையை ஏற்கும் உணர்ச்சியையே பெற்றுவிடுகிருன் எனலாம்.

வேறு ஒரு குறிக்கோளுக்காக, ஆனுல் அதே வழியாக மௌனத்துக்கு இடையில் அறநெறி மடம்போல் எளிமையும் அடக்கமும் சூழ வாழ்க்கையின் தொடக்கத்திலேயே கடவுட் பற்றைப் பெறும் உணர்ச்சியைப் பெறுகின்றனர்.

பல ஆண்டுகளுக்கு முன் வாழ்க்கையின் பொது உண்மைகளை வெளியிட்டனர் என்று எனக்கு முதலில் தோன்றிற்று. இவ்வுண் மைகளைப் பெரும்பாலும் விவேகிகளிடமும் சமூகத்தில் தெய்விக எண்ணம் கொண்ட மேலோரிடமே நாம் நடை முறையில் காணக் கொடுத்து வைத்திருக்கிறேம். அதே காரணத்தால் அக் குழந் தைகள் அதே சமயத்தில் மனித சமூகத்தை நனவிலா வகையில் ஒடுக்கித் தாழ்த்தும் வகையையும் வெளியாக்கினுர்கள். விவேகம் படைத்த ஒரு பெண்ணுடன் அதைப்பற்றி நீண்ட நேரம் பேசி னேன். என்னுடைய கருத்துகளில் மிகவும் அக்கறை காட்டினுள். நான் கூறியதைத் தொடுத்து விரிவுடைய தத்துவ ஆராய்ச்சி நூலாக வெளியிடவேண்டும் என்று கவலையும் தெரிவித்தாள். நான் அதெல்லாம் சோதனைக் குட்பட்ட போக்கு என்று கூறின போது அக் கருத்தை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. குழந்தைகளைப் பற்றிக் கூறினபோது அவள் பொறுமை இழந்த வள் போலிருந்தாள். 'ஆம். இக் குழந்தைகளைப்பற்றி எல் லாம் எனக்குப் புரிகிறது. விவேகத்தில் அவர்கள் பல மேதைகள் போல்வர். பண்பில் பல தேவதூதர்கள் போல்வர்' என்றனள். பிறகு கொஞ்சம் முயற்சிசெய்து இணங்க வைத்தேன். எங்க ளுடைய இல்லத்துக்கு வந்து நேரடியாகத் தானே பார்க்கும்படி சொன்னேன். ஒப்புதல் தெரிவித்தாள். என் இரு கரங்களையும்

[1] தெய்விகக் காட்சி உரு.

பற்றிக்கொண்டு அக்கறையும் அன்பும் கூடி என் முகத்தை உற்று நோக்கினுள். 'எந்த வேளையிலும் நீர் உயிர் நீப்பிர் என்பதை எண்ணிப் பார்த்ததில்லை; உடனே எழுதித் தள்ளுங்கள். பரபரப் புடன் ஓர் உயில்[1] (விருப்பாவணம்) எழுதுவதுபோல் கண்ட உண்மைகளைச் சுருக்கமாக விவரித்துவிடும். இந்த இரகசியத்தை உம்முடன் உமது கல்லறைக்குக் கொண்டுபோகாதபடி இப் பொழுதே தீட்டிவிடும்' என்ருள்.

எனினும் நான் அப்பொழுது சிறந்த உடல்நலத்துடன் தான் இருந்தேன்.[2]

* * *

மேதைகள் பல புதுமைகளைக் கண்டறிந்திருக்கின்ருர்கள். அதனுல் எண்ணம் பற்றிப் புது வழிகள் திறக்கப்பட்டிருக்கின்றன. நம் நலனுக்கும் சமூக வளர்ச்சிக்கும் தேவைப்படும் புது ஊற்று களைப் படைத்திருக்கின்ருர்கள். அத்தகைய மேதைகளின் மன உழைப்பை ஆய்வோமாளுல், அவர்கள் படைத்தனவெல்லாம் சாதாரணமான அல்லது இடைத்தரமானவர்களுக்கு (mediocrity) இவை அப்பாற்பட்டவை அல்ல என்று ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. ஒப்புடைமையின் (similarity) இணையாக்கும் சக்தியானது உயர்ந்த அளவில் மேதையினிடம் காணப்படுகிறது. இதுதான் மேதையினுடைய இன்றியமையாத பண்பாகும் என்கி ருர் பெயின் (Bain). ஒன்றைப் புதிதாகக் கண்டு பிடிககும் பொழுது அதன் மையத்தில் நிகழ்வதென்ன? சரி நுட்பமாக ஒன்றினைக் கூர்ந்து கவனிப்பதும் எளிய முறையில் காரண காரியத் தைக் காண்பதுமே (வாதாடுவதும்) ஆகும். இவைகளைச் சாதிக்கப் பெரும்பாலோர் தாம் தக்கவர்களென்றே கருதுவார்கள். சிறப் பாக நடைபெற்றது என்ன? கிடைக்கப்பட்ட சான்றுகளை ஒழுங் காக வரிசைபடுத்துவதே யாகும். இந்தச் சான்றுகள் புதி தாகக்கண்டு பிடித்தவரைத் தவிர வேறெவர் கண்களிலும் படவில்லை.

நனவில் உள்ள இயன்மை (fact) யைப் பிரித்துத் தனியாக ஒதுக்கும் வினைத்திறத்தை (faculty) மேதை பெற்றிருக்கிருர். இருட்டறையில் ஒரு தனிக் கதிர் ஒரு வைரக்கல்லின் மேல் பாய்வதுபோல் மற்றப் பண்புகளிலிருந்து இந்த ஒன்றை மட்டும் பிரித்தெடுக்கும் வினைத்திறம் பெற்றிருக்கிருர். இந்த ஒரு கருத்து நனவு நிலையில் (consciousness) ஒரு முழுப் புரட்சி யைத் தூண்டிவிடுகிறது. எல்லா மனித சமூகத்திற்கும் மாபெரும் சிறப்புடையதை ஆக்கவல்லதாயிருக்கும்.

1 will. 2 என் தோற்றத்தில் அண்மையில் சாகப்போவதாக எக்குறியும் அவர் கண்டிருக்க முடியாது.—மொழி பெயர்ப்பாளர்.

எனவே, சாதாரணப் பொருள்களின் தீவிர தனி முறைச் சிறப்புடையதே (significance) முக்கிய காரணக்கூறு (factor) ஆகுமே யன்றி இயல்பு கடந்த பொருளன்று. ஒருசீரான ஆற்றல் (homogeneoes) களத்திலுள்ளதிலிருந்து தனித்துப் பிரித்தலே யன்றிப் பண்டங்களின் உள்ளார்ந்த மதிப்பன்று. அற்புதமான இயல் நிகழ்ச்சியை நிர்ணயிக்கிறது. ஒருவேளை ஆயிரம் ஆயிரம் புலனுணர்வுக் காட்சிக்கு (perceptions) இடையில் இரத்தினக்கல் இருந்திருக்க வேண்டும். பல பயனற்ற இடைஞ்சலான பொருள்களுக்கு மத்தியில் கிடந்திருக்க வேண்டும். எவருடைய கவனத்தையும் இதுவரை அக் கல் கவர்ந்ததில்லை. இத்துடன் சடத்துவமும் (inertia) வேலை செய்யத் தொடங்கிற்று. வறண்ட பரந்த சுவர்களுக்குள் புதுப் பொருள்களை உள்ளே தொடர்ந்து துளைக்க வைத்தது. ஒன்றைப் புதிதாகக் கண்டுபிடித்தவுடன் மற்றவர்களில் பலர் அதே உண்மையைத் தம்முன் இருந்ததாக உணர்வார்கள். ஆனல், இந்த விஷயத்தில் மதிப்புடையது அந்த உண்மையன்று. அதை மதிப்பிட்டு வினையாற்றலுடன் இணைக்கக் கூடிய சக்தி பெற்ற மனிதனே மதிப்புக் குரியவன் ஆவான்.

தெளிவற்ற நனவு நிலையின் குழப்பத்தில் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட உண்மை முன்கூட்டியே இருந்திருக்கிறது என்பது பெரும்பாலும் இல்லை. புதிதாகத் தோன்றும் ஒளி எளிதெனினும் மனத்துக்குள் புகுவதற்கு வழி கிடைப்பதில்லை.

அது ஓர் அதிசயம் என்றும் ஏமாற்றம் என்றும் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. பிறகு சில காலம் கழிய வேண்டியிருக்கிறது. புதுமை உள்ளே புகுவதற்கு ஏற்ப விவேகத்தின் ஒருமைப்படுத்தல் (co-ordination) வேண்டற்படுகிறது. எனினும் வருங் காலத்தில் ஒரு நாள் அது படிகம் போலத் தெளிவு எனக் கருதப் படும். (உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகிவிடும்.) அதிலிருந்து (உண்மையிலிருந்து) பின்வாங்குவது மனிதனுடைய இயல்பல்ல. ஆனல், அவனுடைய பிழைகளே பின்வாங்கின. இந்தப் பிழைகள் மனிதனை ஆக்கும் சக்தியற்றவனுகச் செய்வதோடு உள்ளே ஏற்றுக் கொள்வதற்கும் மறுப்புக் காட்டுக்கின்றன. நமக்கு நல்வழி காட்டின முன்னணி வீரர்களை அடிக்கடி கொடிய இடர்களுக்கு ஆளாக்கியிருப்பதையும் கேட்டிருக்கிறோம். இதற்குக் காரணம் தம்மை அறியாத ஒருவகை நன்றியின்மை என்று கூற வேண்டும். அந்த நன்றியின்மையும் ஒரு தெய்விக இருளின் (அஞ்ஞானம்) கனியாகும்.

கிருஸ்டாஃபர் கொலம்பசின் தர்க்கம் என்ன? உலகம் கோளமாக இருந்தால் எவன் ஒருவன் ஓரிடத்தில் இருந்து புறப்பட்டு

நேராகப் போய்க் கொண்டிருந்தானேயானுல், அவன் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேருவான் என்பது அவர் கருத்து. விவேகத் தொழிலின் தொகையாகிய இது மனித குலத்துக்கு ஒரு புதிய உலகத்தைத் தந்தளித்தது.

கொலம்பசுடைய வழியில் ஒரு பெரிய கண்டம் இருந்திருப்பதும், அவன் தன் சாவினைக் காணுமல் புதுக்கண்டத்தை கண்டு பிடிப்பதும் சூழ்நிலையில் தற்செயலாக ஏற்பட்ட ஊழின் (முன்பே வகுத்தமைக்கப்பட்ட நிகழ்ச்சிக் கோவை) செயலாகும். சில சமயங்களில் இதுபோன்ற வியக்கத்தக்க சிறுசிறு பரிசுகளையும் சூழ்நிலை சிறிய தர்க்க வாதங்களுக்கு அளிக்கிறது.

இந்த மாபெரும் வெற்றிகளைத் தந்தது நிச்சயமாக மனித விவேகத்தின் தீவிர உழைப்பாலன்று. முழு நனவு நிலையைக் கருத்து அடைந்த வெற்றியே ஆகும். மேலும், அந்த வெற்றிக்கு மதிப்புக் கொடுக்கும் வகையில் அம் மனிதனின் வீர அஞ்சாமையும் ஆகும். இந்தக் கருத்தை முதலில் எண்ணினவனுக்கு ஏற்பட்ட பெரும் தொல்லை என்ன வென்ருல், தன்னுடைய எண்ணம் நிறைவேற வேண்டித் தனக்கு உதவி புரியுமாறும், கப்பல்களும் துணைவர்களும் தருமாறும் பிறரை நம்பச் செய்வதில் இடையருத முயற்சியாகும். வெற்றி பெற்றது கொலம்பசுடைய கருத்தன்று. ஆனுல், அவனுடைய நம்பிக்கையே வெற்றிக்குக் காரணம்.

எளிமையான தர்க்க வாதம் கொலம்பசின் உள்ளத்தினுள்ளே விவேகத்தைவிட இன்னும் சிறப்பான ஒன்றைத் தூண்டிவிட்டு, அதிகம் கல்லாத ஒரு சாதாரண மனிதனின்மூலம் ஒரு நாட்டரசிக்கு ஒரு புது உலகத்தைப் பரிசளிக்கச் செய்துவிட்டது.

கால்வானியின் (Galvani) மனைவி காய்ச்சல்பட்டுக்கிடந்தாள். அந்தக் காலத்தில் அனுசரிக்கப்பட்டுவந்த முறைப்படி தோலுரித்த தவளையைக் கொண்டு சாறு ஒன்று காய்ச்சிக்கொண்டிருந்தார். அன்று மழை பெய்துகொண்டிருந்தது. சாளரக் கம்பியின்மேல் செத்த தவளைகளைத் தொங்க விட்டிருந்தார். தவளையின் கால்கள் தாமாக மடங்குவதைக் கண்டார். ‘செத்த தசைகள் மடங்க முடிந்தால், ஏதோ வெளியிலிருந்து ஒரு சக்தி உள்ளே நுழைந்திருக்க வேண்டும்’ இது தான் அந்த மேதை—புதிதாகக் கண்டு பிடித்த அப் பெரியாரின் மனத்துக்குள் தோன்றின எளிய தர்க்கம். இந்தச் சக்தியைத் தேடப் புகுந்தார். அவர் செய்த பரிசோதனைகளில் தன்னுடைய மின்கலங்களின் துணைக்கொண்டு பூமியிலிருந்து மின் சக்தியைத் திருகி எடுத்தே விட்டார். உண்மையாகவும் உரு

வகமாகவும்[1] திருகிவிட்டார் எனலாம். ஆம். மாபெரும் முன்னேற்றத்தைக் காட்டும் ஓர் ஒளி வீச்சை—மின்னுதலைக் கண்டே விட்டார். ஓர் அற்பமான செத்துப்போன தவளைக்கால் இயங்குகின்ற செயலின் மேல் ஆழ்ந்த கவலையைக் காட்டினர். வேறு எக் கருத்தையும் உட்புகுத்தாமல் அமைதியுடன் ஆய்ந்தார். அந்த ஒரே பிரச்சினையின் மேல் தம் மனத்தை ஆழ்ந்து ஊன்ற வைத்தார்; 'ஏன் அது இயங்கிற்று' என்று சிந்தித்தார். நமது நாகரிகத்தின் மாபெரும் வெற்றிகளில் ஒன்றாகிய இதைக் கண்டுபிடிக்க இவர் அனுசரித்த நீண்ட முறை இதுவே.

இதேபோல் கலிலியோ[2]வின் புதுக் கண்டு பிடிப்பும் அப்படியே. பீசா நகர மாதா கோவிலில் நின்று கொண்டிருக்கும் பொழுது தொங்கும் விளக்கொன்றின் ஊசலைக் கவனித்தார். எல்லா அசைவுகளும் ஒரே குறிப்பிட்ட கால வரம்புக்குள் நடைபெற்றன என்பதைக் கண்டார். ஊசலின் சரிசமமான அசைவு மக்களுக்குக் காலத்தை அளக்கும் கருவியையும், வான நூலாருக்குப் பல உலகங்களை அளப்பதற்குத் தேவைப்படும் முதல் அளவைகளையும் இவ்வாறு தோற்றுவிக்க வழி வகுத்தார்.

மரத்தடியில் படுத்துக்கொண்டிருந்த நியூடன் மேல் ஓர் ஆப்பிள் பழம் விழுந்த கதையும் எவ்வளவு எளிமையானது! தமக்குள் அவர் என்ன நினைத்தார்? 'அந்த ஆப்பிள் ஏன் விழுந்தது? பொருள்கள் புவியீர்ப்பினுல் ஈர்க்கப்படுவதும் பேரண்டத்தில் இருக்கும் ஈர்ப்புச் சக்தியும் பற்றிய விதியைப் பிறர் அறியச் செய்வித்ததின் எளிய தொடக்கம் அந்தச் சிறு நிகழ்ச்சியே ஆகும்.

பேப்பின் (Papin) என்பவரைப் படிக்கும் பொழுது, அவருடைய கலைப்பண்பு பற்றி நாம் வியப்படைகிறோம். அவர் காலத்தில் கற்றுணர்ந்த பெரியோர்களின் திருக்கூட்டத்தில் ஒருவராக அவர்க்கு இடம் அளித்தனர். மருத்துவர், உடல்நூல் வல்லுநர், கணக்கியலார் (எண்ணர்) என்னும் சிறப்படைந்திருந்தார். ஜெர்மனி, இங்கிலாந்து ஆகிய நாட்டின் பல்கலைக் கழகங்கள் இவருக்குச் சிறப்புப் பட்டங்கள் வழங்கினர்கள். இவையெல்லாம் இருப்பினும் உலக மக்களுக்கும் அத்துடன் அவருடைய பெருமைக்கும் மதிப்பளித்தது யாது? அடுப்பின்மேல் கொதி நீருக்காக வைத்திருக்கும் பாண்டத்தினுடைய நீளக் கைப்பிடி யுடைய உலோக வேவுகல மூடி (saucepan) நீராவியின் மேலே தூக்கப் பட்ட சம்பவத்தை இவர் கவனிக்க நேர்ந்ததேயாகும். 'மூடியை மேலே தூக்கும் நீராவியின் சக்தி ஒரு பிஸ்டனையும் உந்து தண்டினை

[1] literally and figuratively. [2] Galileo.

யும் உந்தி ஓர் இயந்திரத்தின் இயங்கும் சக்தி (motor power)' என்று சிந்தித்தார். தொடர்ந்து நடத்திவைத்தார். பேப்பி னுடைய புகழ் பெற்ற கலத்தின் மூடி ஒரு மந்திரக்கோல் போல் ஆகிவிட்டது. மனித சரித்திரத்தில் மக்கள் தொடர்ந்து செய்த முயற்சியின் பயனால் இன்று களைப்பில்லாமல் பிரயாணம் செய்கி றோம். மாபெரும் கண்டு பிடிப்புகளின் சரித்திரம் எவ்வளவு எளிய சம்பவங்களிலிருந்து தொடங்கியிருக்கின்றன! உலகம் முழு வதிலும் அற்புதங்களை விளைவித்திருக்கின்றன.

புலனாகாத இரண்டு நுண்மையான சிற்றறைகள் ஒன்றுகூடி சிக்கல் நிறைந்த உயிர்களைப் படைக்கின்றன. மேலே குறிப் பிட்டவை இவைகள் தொடக்கத்துக்கு ஒக்கும். ஒன்றினை உற்று நோக்கி உணர்தலும் உற்றுணர்ந்ததைத் தர்க்க ரீதியாக இணைப்ப தும் மிக உயர்ந்த விவேகத்தின் தொழிலாகும். இந்தத் தொழில் கவனத்தின் ஒரு தனிப்பட்ட தன்மையுள்ள சக்தியாகும். கவனம் என்பது ஒரு வகையான தியானத்தைக் கையாண்டு ஒரு பொருளின் மேல் மனத்தை நிலையிருக்கச் செய்கிறது. இந்தத் தியானம் ஒரு மேதையின் சிறப்பியல் அடையாளமாகும். உயிரளிக்கும் சிற்ற றைகள் எவ்வாறு அந்தரங்கத்தில் குடிகொண்டதின் விளைவோ அதேபோல் மேதையிடமும் வினையாற்றல்கள் நிறைந்த அந்தரங்க வாழ்வைக் காண்கிறோம். சாதாரண மக்களின் மனப் போக்குக் கும் அத்தகைய மேதைகளின் மனத்துக்கும் உள்ள வேறுபாடு அவரவர்களின் உருவத்திலில்லை. அவர்களின் சக்தியில் இருக் கிறது. அந்த இரண்டு விவேகப் பொறிகளும் மிகுந்த சுறுசுறுப்பு வாழ்விலிருந்து பிறக்கின்றன. அவர்களைச் சிறந்த அற்புதமாக்கு கின்றன. வலிமை, சுதந்திரம் பெற்ற ஆளுமைகள் தொடர்ந்து செயலாற்றவும் தம்மையே தியாகம் செய்யக்கூடிய தன்மையும் கொண்டவைகளிலிருந்து தோன்றியிராவிடில் அவ்விரு விவேகப் பணிகளும் மந்தமானதும் கவனிக்கத் தேவையற்றதுமாக நின்று போயிருக்கும். தெய்விக மனிதனை எவையெல்லாம் வலுப்படுத்து கின்றனவோ அவையெல்லாம் அவனை மேதையின் அடிசுவட்டைப் பின்பற்றச் செய்யும்.

விவேகத்தைப் பொறுத்தமட்டில் அது சாதிக்க வேண்டிய பணி மிகவும் எளியதே. ஆனால், அது தெளிவுபடுத்தப்படுகிறது. தேவையில்லாததும் மேலோடியானதுமான சிக்கல்கள் நீக்கப்பட்ட தாகவும் இருக்கும். **கண்டு பிடிப்பதற்கு வழிகாட்டி எளிமை.** உண்மையைப்போல் எளிமையும் வெறுமையானதாக இருக்க வேண்டும்; புனைவற்றதாக இருக்கவேண்டும் (naked). தேவைப் படுவது மிகச் சிறிதே. இந்தச் சிறியதும் சக்திவாய்ந்த ஒருமை யாக வேண்டும். மற்றவையெல்லாம் தற்பெருமையே ஆகும்.

எவ்வளவுக்கெவ்வளவு இந்த இடம்பம் இருக்கிறதோ, அதாவது பயனற்ற வில்லங்கங்கள் மனத்தைத் தடைகளால் மூடுகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு சக்தியின் ஒளி இருட்டாக்கப் படும். அதனுடைய சக்திகள் சிதறப்படும். வாதம் செய்யவும் வினையாற்றவும் இயலாதபடி ஆக்கிவிடும். உண்மையைக் காணவும் முடியாதபடி ஆகிவிடும்.

* * *

பலர் தனித்தனியாகச் செய்த பிழைகளைத் தொகுத்து வேகமாக அவைகளைப்பற்றி ஆராய்வது நமக்கு அக்கறையூட்டுவதாகும். எளிய ஒரு புதுக் காண்டலின் முன்னேற்றத்தை அப் பிழைகள் தடுத்திருக்கின்றன. புண்பட்டிருக்கும் மனிதர்களுக்கு அளிக்கப்படும் உதவியும் தடைபெற்றிருக்கின்றன. ஐயம் ஏதுமிலா உண்மைகளையும் விடாமல் பொய்யென்று மறுக்கச் செய்திருக்கின்றன. ஏன் மறுத்தார்களென்றால், இவை பொதுவாக எல்லோர்க்கும் தெரியாத காரணத்தால்.

மலேரியா நோய்பற்றி எவ்வாறு கண்டுபிடிக்கப் பட்டதென்று சற்றுச் சிந்திப்போம். ராஸ் [1] (Ross) என்ற ஆங்கிலேயர் பறவைகளிடம் இந்த நோய் இருப்பதாகவும கிராஸி (Grassi) என்பவர் மனிதனிடம் அதே நோய் இருப்பதாகவும் கண்டனர். மலேரியா நோயை உண்டாக்குவது பிளாஸ்மோடியம் (plasmodium) என்ற கிருமி என்றும் கண்டுபிடித்தார் கிராஸி. இந் நோயால் பீடிக்கப் பட்ட மனிதனும் விலங்குகளும் ஒருவகைக் கொசுக்களால் கடிக்கப் படுகின்றனர் என்றும் கண்டார். இந்தக் கண்டுபிடிப்புக்கு முன் விஞ்ஞானம் இருந்த நிலை என்னவென்று சற்று ஆராய்வோம். லெவரான் (Laveran) என்பவர் 1880ஆம் ஆண்டில் ஒரு விலங்கினத்தைச் சார்ந்த நுண் உயிரி (micro-organism) இரத்தத்தில் காணப்படும் சிவப்பு அணுக்களின்மேல் பாய்ந்து (red corpuscles) சுரத்தை உண்டாக்குகிறதென்றும், அந் நோய் உண்டாகும் பொழுது அந்த நுண் உயிரியும் தன்னுடைய வாழ்க்கை வட்டத்தையும் காட்டுகிறதென்றும் எடுத்துக்காட்டினர். இதன் பிறகு செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் இவ்வுண்மை சரி என்றும் ஒப்புக் கொள்ளச் செய்தன. 'பிளாஸ்மோடியம் மலேரியா' (plasmodium malariae) என்ற பதம் பொதுமக்கள் வாய்ச்சொல்லாகி விட்டது. விலங்கின் நுண் உயிரியல் பெருக்கம் எவ்வாறு நடைபெறுகிறது ? ஒன்று இரண்டாகவும், இரண்டு நான்காகவும், இப்படியே தன்னுடல்களைப் பகுத்துக்கொண்டே தம் இனத்தைப் பெருக்கிக் கொள்கின்றன. இவ்வாறு செய்துகொண்டு போகும்போது இவை பால் வேற்றுமையுடைய இரு உருவங்களை உண்டாக்கி

[1] இவர் இந்திய ராணுவத்தில் உயர்பதவி ஏற்ற மருத்துவர்.

(sexual forms) விடுகின்றன. இவை ஆண் என்றும் பெண் என்றும் குறிக்கப்படலாம். இவ்விரண்டும் இணைந்து ஒன்ருகிப் பிறகு முன்போல் ஒன்று இரண்டாகவும் இரண்டு நான்காகவும் அப்படியே பெருக்கிக் கொண்டு போகின்றன. மறுபடியும் பால் வேற்றுமை உடைய நுண் உயிரிகளை உண்டாக்கிக் கொள்கின்றன.

மலேரியாக் காய்ச்சலிலிருந்து தாமாகத் தேறினவர்களுடைய இரத்தத்தை லெவரான் பரிசோதனை செய்துபார்த்தார். அவர்களுடைய இரத்தத்தில் பிளாஸ்மோடியாவின் வட்ட வட்ட உருவங்கள் காணப்படவில்லை. ஆனுல், பிறை வடிவமாகவும் சுற்றிலும் கதிர்மேல் நீட்டிக் கொண்டிருப்பதாகவும் கண்டார். இவைகளைப் பிளாஸ்மோடியாவின் வேற்றுருவம் என்றே நம்பினுர். இவைகளால் நோயை உண்டாக்க முடியாதென்றும் இவை ஊனமடைந்தவை, சலித்துப் போனவை, இதுவரை செய்துவந்த தொழிலால் இனித் தம் பணியாற்ற இயலாத அளவுக்குத்தளர்ந்து சோர்ந்து போனவை என்றும் ஆணித்தரமாகக் கூறிவிட்டார். இந்த உயிர்ப் பொருளை 'லெவரானின் சீரழிந்த உருவங்கள்' (Laveran's degenerative forms) என்று அழைக்கலாயினர். மலேரியா ஒருவரிடமிருந்து மற்றவருக்குப் போகும் நெறி 1900 ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்டது. அதன் பிறகு லெவரானின் சீரழிந்த உருவங்கள் அந்தக் கிருமியின் வாழ்க்கை வட்டத்தில் பால் வேறுபாடு சார்ந்த தனிக்கிருமி என்றும், இவையும் இன விருத்தி வட்டத்தையுடையதென்றும் கண்டார். மேலும், இவ்விரண்டு பால் வேறுபாடுடைய சிற்றறைகள் மனிதனுடைய இரத்தத்தில் ஒன்ருக இணையச் சக்தி பெருமல் கொசுவின் உடற்குள்ளேயேதான் இணைந்து புது உயிர்ப்பொருளை ஆக்கவல்லது என்றும் கண்டுபிடித்தார். 'அந்த இரண்டு பால் சார்ந்த வடிவங்களை ஏன் லெவரான் புரிந்துகொள்ளவில்லை ?' அவர் கண்களுக்கு ஏன் புலப்படவில்லை ? விலங்கு இனத்தைச் சார்ந்த நுண்ணுருவ உயிர்ப்பொருளின் இணைவைத் தேடிப் பார்க்கவில்லை ?' இந்தக் கேள்விகளெல்லாம் நம்மிடம் பிறக்கும் கேள்விகளே. அவருடைய மனத்தில் ப்ரோடோஜோவா (protozoa) வின் (நுண்ணிய ஓரணு உயிர்) முழு வளர்ச்சி வட்டத்தை வைத்திருந்தாரேயானுல், அவைகள் அவர் கண்களுக்குத் தென்பட்டிருக்கும். மோரெல் (Morel) என்பவரின் மனித இனச் சிதைவு[1] என்ற கொள்கை வெளியாக்கியிருந்தது. இவருடைய (லெவரான்) மனக் கற்பனையில் ஆழ்ந்த பதிவினைச் செய்திருக்கும்போலும். பழய கொள்கையிலிருந்து தாவி, பிளாஸ் மோடியம் பற்றிப்புது விளக்கம் தருவதென்பது ஒரு மேதையின் சாதனையென்றே கூறவேண்டும். இந்த 'மேதையின் சாதனை' கனவுக் கற்பனையுடன் பொதுவிதி (genera-

[1] Morel's theories of degeneration of man.

lisation) ஆக்கியது லெவரானுல் உண்மையைக் காணமுடியாமல் செய்து விட்டது போலும். இத்தகைய பிழைகளில் ஒரு வகை யான இறுமாப்பும் கவலை இன்மையும் கூடியிருப்பது தெளிவு.

மேலும், இதைவிட இன்னும் கருத்தார்ந்த மற்றொன்று நம்மை வியப்படையச் செய்கிறது. உலகத்தின் பல்வேறு நாடு களிலும் உள்ள ஆயிரமாயிரம் மாணவர்கள் லெவரானின் பிழை யைக் கண்மூடிக்கொண்டு ஒப்புக்கொண்டனர். அவர்களுள் ஒருவர்கூட 'புரோடோ ஜோவா' வின் வாழ்க்கை வளையத்தைப் பற்றித் தாமாகச் சிந்திக்கத் தவறிவிட்டார். அவர்களுள் ஒருவ ராவது அந்த இயல் நிகழ்ச்சி பற்றிச் சொந்தத் தனி முறையில் ஆராய்ச்சி நடத்தும் சுதந்திரம் பெறுமல் இருந்தார். இது என்ன மனம் சார்ந்த ஜடத்துவம்! (inertia) இந்த ஜடத்துவம் ஏன் மனித னுள் தோன்ற வேண்டும்? இந்தச் சீடர் ஒவ்வொருவர் மனத் திலும் 'பிளாஸ் மோடியத்தின்' பால் சார்ந்த உருவங்கள் பற்றிய பிரச்சினை எழுந்திருந்த போதிலும் அது இன்னும் விடுவிக்கப் படாததுபோல் அப்படியே கவலையற்று விட்டுவிட்டனர். நிச்சய மாக வருங்காலத்தில் இது பெறப் போகும் பெருமை பற்றியும் விஞ்ஞான முன்னேற்றம் பற்றியும் இவர்களுக்கு உள்ளுணர்வு (intuition) தோன்றவில்லை. இந்தப் பிரச்சினை ஒரு பெரிய தடங்கல் என்றும் இவர்கள் மனத்துக்குத் தோன்றி இவர்களுடைய கவ னத்தை ஈர்க்கும் வகையில், 'என்னை விடுவி' என்று கேட்டிருந் தால், அதை விடுத்திருந்தால் மனித குலமே நன்மை பெற் றிருக்குமே என்ற எண்ணங்கள் எதுவும் அவர்களின் மனக்கண்முன் உதயமாகாமற்போனது ஏனோ?

அந்தச் சீடர்கள் அக்கறை காட்டாமல் லெவரானின் 'மேதை யின் முயற்சி' (effort of genius) என்றதை அவர் பின்னுலேயே கூறிக்கொண்டு வந்தார்கள். அவைகள் சீரழிந்த உருவங்கள். ஒரு பயனற்ற முயற்சி. நனவில்லாமல் அவரவர்களுடைய சுய உரிமைகளைத் தாமே ராஜினுமாகச் செய்த மனிதர்களின் கூட்டம் அதிகரித்ததுதான் மிச்சம்.

உயிர்நூல் சம்பந்தமாக வேறோர் உண்மையும் பெறப்பட் டிருந்தது. அதாவது இரத்த ஓட்டம் பல குழல்களில் பாய்ந்து வந்து வெளியே செல்ல முடியாத ஒரு அடைபட்ட இரத்த ஓட்ட முறை என்றும், இதற்கு வெளியே பரவியிருக்கும் சளிச்சவ்வின் மேல்-தோலிழைமம் (epithelium) தாவரக் கிருமிகள்போல் துளைக்க முடியாத எந்தத் திடப் பொருளையும் தன் பரப்புக்குள் புகவிடாது என்பதும், இன்னும் சிறப்பாக வட்ட 'புரோடோஜாக்களை' விடாது என்பதும் அறிஞர்களுக்குத் தெரிந்திருந்தன. ஏன் இவ்

வட்ட 'புரோடோஜோவா' உள் நுழைய முடியாதென்ருல், இவை மைக்குரோபுகளை (microbes) விடப் பெரியவை; பொருளில் மென்மையானவை. இந்தத் தெளிவானதும் நன்கு எடுத்துக்காட்டப் பட்டதுமான உண்மை மாணவர்களுக்கு ஒரு பிரச்சினையைத் தூண்டிவிட்டிருக்க வேண்டும். மலேரியா புரோடோஜோவா இரத்த ஓட்டத்துக்குள் எவ்வாறு புகுந்தன? ஹிப்போகிரேடஸ் (Hippocrates), ப்ளினி (Pliny), செல்சியஸ் (Celsius), கேலென் (Galen) ஆகியோர் காலம் தொட்டு மலேரியா என்ற நோய் சதுப்பு நிலங்களில் தோன்றும் நச்சுக் காற்ருல் வந்ததென்றும், காலை மாலையிலுள்ள கெட்ட காற்றினுல் வந்ததென்றும் நம்பப்பட்டு வந்திருக்கிறது.[1] மலேரியாவின் உண்மை கண்டுபிடிப்பதற்கு முன், சில ஆண்டுகளுக்கு முன் கூட 'யூகலிப்டஸ்' (eucalyptus) தைலம் தரும் தேவதாரு வகை[2] மரங்கள் ஏராளமாகப் பயிராக்கப்பட்டன. அவ்வாறு செய்வதால் அம் மரங்கள் சூழ்நிலையில் உள்ள காற்றை வடிகட்டிக் கிருமிகளைக் கொல்லவும் செய்யும் என்றும் நம்பி வந்தார்கள். 'பிளாஸ் மோடியா' காற்றிலிருந்து எங்ஙனம் குருதி ஓட்டத்துக்குள் நுழையும் என்று எவரும் கேள்வி கேட்கவில்லையே! சிறந்த விவேகப் பணியாற்றலில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருந்தவர்களைப் பீடித்த பகுமந்தம் (torpor) எந்த இனத்தைச் சார்ந்தது? இங்கு ஒரு பிரமாண்டமான விவேகம் காணப்பட்டது. ஆனுல், தனித்தன்மை அற்றது.

ஒரு வகைக் கொசு பறவைகளைக் கடித்து மலேரியாக் கிருமிகளை உடலுக்குள் புகுத்தி விடுகிறது ஊசிபோல் என்ற உண்மையை ராஸ் (Ross) கண்டு பிடித்தார்.

பார்க்கவேண்டுமே ஆச்சரியத்தை! இறுதியாக அடிப்படையான தர்க்கவாதம் கிளம்பிற்று. அதிலிருந்து உண்மையின் அறிவு வெளியாயிற்று. 'பறவைகளின் உடலுக்குள் கொசுக்கடியால் மலேரியாக் கிருமிகள் செலுத்தப்பட முடியுமானுல், மனிதனுக்கும் அதுவேதானே நடக்கும்.'

இந்த எளிய வாதம் அம்புபோல் பாய்ந்து உண்மையை வெளிப்படுத்தி விட்டது. மலேரியா பரவி இருந்த இடங்களில் நல்ல காற்றும் செழிப்பு மண்ணும் இருக்கத்தான் இருந்தது. அந்தக் காற்றைக் காலை மாலையில் உட்கொள்ள முடியும். கொசு கடிக்காதவர் உடல் நலத்தோடு இருக்க முடியும். மலேரியாவால் பீடிக்கப்பட்ட கணக்கிலாக் குடியானவர்கள் கொசுக்கடி தவிர்க்

[1] Mal-aria–bad air-கெட்ட காற்று–இது பெயர்க்காரணம்.

[2] நீலகிரித் தைலம் தரும் மரங்கள் நீலகிரி, கொடைக்கானல் போன்ற இடங்களில் அன்று பயிராக்கப்பட்டும் பெரியபெரிய மரங்களாகி எண்ணெய் எடுக்கவும் விறகுக்கும் தட்டுமுட்டுச் சாமான் செய்யவும் பயன்படுகிறது.

கும் வலைகளைப் பயன்படுத்திக் கொண்டால் காப்பாற்றப்பட்டும் சீர்மைப்பட்டுமிருப்பார்கள் என்ற உண்மைகளை விட வேறு எதுவும் வியக்கத்தக்கதில்லை போலிருந்தது. முதல் வியப்பதிர்ச்சி (stupefaction) ஏற்பட்ட பிறகு, உண்மையை நம்பத் தொடங்கின வுடன், எல்லா விவேவிகளிடமிருந்தும் கூப்பாடு கிளம்பிற்று. ‘இதற்குமுன் எங்களால் இது எப்படிக் கண்டு பிடிக்காமல் போயிற்று? புரோடோஜோவாவின் சுழற்சி எல்லார்க்கும் தெரிந்த உண்மை. குருதி ஓட்டம் நுண் உயிர்களுக்கு உள்ளே நுழைவு தராது என்று எல்லோரும் இதுவரை பிரகடனம் செய்து வரவில்லையா? குருதி குடிக்கும் பூச்சி ஒன்றினுல்தான் குருதிக்குள் நோய்க் கிருமியைத் திணிக்க முடியும் என்று கருதுவது இயற்கை தானே!’ இப்படி ஐயப்பாட்டுக் குரல்கள் கிளம்பின.

தங்களுடைய குருவை அவர் இன்னுரென்று கண்டுணர் வதற்குள் மறைந்ததை அறிந்த சீடர்கள் ஒருவருக்கொருவர், ‘அவர் வேதத்தை விளக்கிக் கூறினபோது நமக்குள் நம் உள்ளம் சுடர்விட்டெரியவில்லையா?’ என்று பேசிக் கொண்டார்கள் என்று கூறப்படுகிறது. அதேபோல் இங்கும் எத்துணை மாணவர்கள் கண்முன் புகழ் நடந்து பரவி இருப்பதைக் கண்டு மகிழ்ந்தும், கண்டுபிடிக்கவில்லையே என்று நொந்தும் போனவர்களும் இருந் தனர்.

பலர் இப்படி நினைத்துக் கொண்டிருந்திருக்கலாம்: ‘எவ்வளவு கடினமாக உழைத்து வந்திருக்கிறோம். எமது மனத்தின்மேல் படு சுமையைச் சுமத்தினோம். எனினும் நமக்கு ஒன்றே ஒன்று வேண்டி யிருக்கிறது. நாம் அடக்கத்தோடும் எளிமையாகவும் இருந் திருக்க வேண்டும். ஆனுல், தனி உரிமை பெற்றிருந்திருக்க வேண்டும். இவைகளுக்கு மாருக நம் உள்ளத்தில் இருளை நிரப்பி வைத்தோம். நம்மைக் காண வைக்கும் ஒளிக்கிரணம் நமக்குள் ஊடுருவிச் செல்ல இயலாமற் போயிற்று.’

சில கீழ்தரமானபிழைகளைக் காண்போம்: கிரேக்க நாகரிக காலம் தொட்டு விண்ணிலிருந்து கற்கள் விழ முடியுமென்று அநு பவத்தால் அறிந்து வந்திருக்கின்ருர்கள். விண் வீழ் கற்கள் பற்றிப் பழங்காலச் சீன ஏடுகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இடைக்காலத்திலும் தற்காலத்திலும் விண் வீழ் கற்கள்பற்றிய செய்திகள் அடிக்கடி வந்து கொண்டே இருக்கின்றன. இத்தகைய இயல் காட்சிகள் பற்றிச் சென்ற காலச் சரித்திர ஏடுகளில் அற்புத மான தகவல்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. விண்ணிலிருந்து 1942 ஆம் ஆண்டில் விழுந்த கல் ‘மாக்சிமிலியன்’ ஜர்மன் நாட்டு மாமன்னனுக்குத் துருக்கி நாட்டின்மேல் படையெடுக்கக் கிருத்துவ

நாட்டினரைத் தூண்டிவிட ஒரு சாக்குக் கிடைத்தது. எனினும், இந்த இயல் நிகழ்ச்சி பதினெட்டாம் நூற்றுண்டு வரை விஞ்ஞானிகளால் ஒப்புக் கொள்ளப்படவில்லை. பெரிய விண் வீழ்களில் ஒன்றுனது அக்ரம் (Agram) என்றதன் அருகில் 1751 ஆம் ஆண்டில் விழுந்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அதன் எடை 40 கிலோ கிராம். வியான்னுவிலுள்ள கனிப் பொருளியல் (mineralogical) சார்ந்த பொருட் காட்சியில் அமைக்கப் பெற்றுப் பட்டியலிலும் குறிப்பிடப்பட்டது. இதைப் பற்றி ஸ்டூட்ஜ் (stutz) என்ற கற்றறிஞர் 1790 ஆண்டில் கூறுகிருர்; 'இயற்கை சரிதை (தாவர இயல்-விலங்கு நூல்-கருப்பொருள் நூல்) ஆகிய நூல்களின் தொகைபற்றி அறியாதவர்கள் விண்ணிலிருந்து இரும்பு விழுந்திருக்கிறதென்று நம்பலாம். கற்றறிந்த ஜெர்மன் மக்களும் இதை 1751 ஆண்டில் நம்பியிருந்திருக்கலாம். அக் காலத்தில் இயற்கை சரிதை (natural History) இயற்பியல் (Physics) போன்றவைகளைப்பற்றிப் பொதுவாக எவர்க்கும் ஒன்றும்தெரியாதல்லவா? ஆனுல், நம் காலத்தில் அத்தகைய கட்டுக்கதைகளுக்கு இடம் தர எண்ணுவதும் மன்னிக்கப்படமாட்டாததேயாகும்'.

அதே ஆண்டில் (1790) விண் வீழ் கல் ஒன்று 10 கிலோ கிராம் நிறையுடன் கேஸ்கனி(Gascony)யில் விழுந்தது. பலர் இதைக் கண்டனர். அதிகார பூர்வமாக முந்நூறு பேர் கையொப்பமிட்ட ஓர் அறிக்கை அகாடமி ஆஃப் பாரி (Academy of Paris) க்கு அனுப்பப்பட்டது. அதற்கு வந்த பதில், 'இத்தகைய முட்டாள்தனமான செய்தி அதிகார பூர்வமான பத்திரம் பெறுவது மிகவும் வேடிக்கையாக இருக்கிறது.'[1]

விட்டன் பர்கிலுள்ள சிலாட்னி[2] (Chladni of Wittenberg) என்பவர் விஞ்ஞான முறையில் ஓசை ஆய்வியல் துறைக்குத் தந்தை என்று கருதப்படுவார். இவர் இத்தகைய இயல் நிகழ்ச்சியில் நம்பிக்கை தெரிவித்தார். விண் வீழ் கற்கள் இருக்கின்றன என்று அவர் கருத்தைத் தெரிவித்தபோது அவரை, 'ஒவ்வொரு விதியையும் அறியாதவர், தாம் உலக நன்னெறிக்கு விளைவிக்கும் தீங்கினைப் பற்றிச் சிந்திக்காதவர்' என்னும் குற்றப் பழிக்கு ஆளாக்கினர். கற்றறிந்தோர் ஒருவர், 'நானே விண்ணிலிருந்து இரும்பு வீழ்வதைக் கண்டிருந்தாலும் அதை நம்பியிருக்க மாட்டேன்' என்று கூறினுர்.

[1] ஒரு பெரிய இயற்பியலார் (Fysicist) இந்த வேடிக்கையில் பங்கு கொள்ள முடியாதவராய் இவ்வாறு எழுதினுர். சாதாரண மக்களின் பிதற்றலுக்கு ஒரு முனிசிபாலிடி அரசாங்க ஒபபந்தம்போல் மதிப்புக்கொடுப்பதும், நடக்க முடியாத ஒரு காரியத்துக்கு நம்பத்தக்க அத்தாட்சிப்பத்திரம் தருவதும் வருந்தத் தக்கது.

[2] சிலாட்னியின் மணல் கோலங்கள் புகழ் பெற்றவை—

மொழி பெயர்ப்பாளர்,

'தொடமுடிந்தாலொழிய நான் நம்பமாட்டேன்' என்று சொன்னாரே செயின்ட்தாமஸ் (St. Thomas), அதைவிட இது இன்னும் நம்ப முடியாத தாகும். பத்தும், நாற்பதும் கிலோ கிராம் எடையுள்ள இரண்டு இரும்புத் துண்டுகள் இருக்கின்றன. தொட்டுப் பார்த்துக் கொள்ளலாம். எனினும், அந்தக் கற்றறிந்தவர் 'தொட்டாலும் நான் நம்பமாட்டேன்' என்கிறார்.

ஆதலால், நம்புவதற்குப் பார்த்தால் மட்டும் போதாது. நம்பிக்கைதான் காண உதவுகிறது. நம்பிக்கையை உண்டாக்கும் பார்வையன்று. வேத நூலில் கண்ணில்லாதவன் 'என்னைப் பார்க்கவையுங்கள்' என்று அவன் ஈனக்குரலில் அழுதபொழுது, அவன் நம்பிக்கையை வேண்டினான். ஏனென்றால் ஒருவனுக்குக் கண்ணிருந்தும் காணமுடியாது போகலாம் என்பதை அவன் அறிந்திருந்தான்.

சான்றுக்குள் அடங்காததை உளஇயல் ஏற்றுக்கொள்வதில்லை. அதைவிட ஆசிரிய இயல் விதியில் இன்னும் குறைவாகவே எடுத்துக் கொள்ளப்படுகிறது. எனினும், இவை போன்றவை உள இயல் சார்ந்த உண்மைகள் மட்டரகமாக இருப்பினும் அவை கெட்ட பெயரெடுத்தவை (notorious). எடுத்துக்காட்டாக அந்தரங்கத்தில் கவனத்தின் ஒத்துழைப்பு இல்லையேல், தூண்டுதல் புலன்களை எவ்வகையிலும் ஈர்க்காது. இது போன்ற ஆயிரம் அனுபவங்கள் உள்ளே நுழைந்து பொது அறிவின் தொகையை உண்டு பண்ணுகின்றன. ஒன்றைக் காண்பதற்கு அப் பொருள் நம் கண்முன் இருந்தால் மட்டும் போதாது. நாம் நம்முடைய கவனத்தையும் அதன்மேல் செலுத்த வேண்டும். அந்தத் தூண்டுதலை வரவேற்க அந்தரங்க தயாரிப்பும் தேவைப்படுகிறது.

இதைவிட உயர்ந்ததாகவும் முழுமையாகவும் அறநெறி சார்ந்த துறையில் இதேபோல் ஒன்று நடைபெறுகிறது. ஓர் உண்மைக்கு வேண்டிய நம்பிக்கையின் முன் ஆயத்தமும் கூடியிரா விட்டால் ஒரு கருத்து நனவுக்குள் வெற்றிகரமாக உள்ளே நுழைய இயலாது; நெஞ்சறி நிலைக்குள் நுழைய இயலாது (consciousness). இதில்லாமல் கடுமையாகவும் கொடுமையாகவும் ஆரவாரத்துடனும் விடாமல் தட்டிக்கொண்டே இருக்கலாம். ஆனால், கவாடம் திறக்கப் படாதே கிடக்கும். நெஞ்சறிநிலையானது விடுதலை பெற்றிருப்பதுடன் எதிர் நோக்கப் பெற்றதாகவும் இருக்க வேண்டும். முன்கூட்டியே ஆயத்தமாக்கப் பட்டிராத துறையில் நுழையப் பார்க்கும் ஓர் உண்மையைப் பல எண்ணங்களின் குழப்பத்தில் சிக்குண்ட ஒருவனால் ஏற்றுக் கொள்ள இயலாது.

கவனத்துக்கும் பொறிகள் பற்றிய புலனுணர்வுக் காட்சிக்கும் (sensory perception) உள்ள தொடர்பு ஓரளவில் குறைந்த முக்கியத் துவம் பெற்றது. அதுபோலவே இந்த உண்மை மற்ற உளஇயல் சார்ந்த உண்மைகளிலும் ஒத்திருக்கிறது. அறநெறித் துறையில் நன்கு உணரப்பட்ட உண்மைகளிலும் இது ஒத்திருக்கும். நம்பிக்கை இல்லாத இடத்தில் ஒருண்மை எவ்வளவு நன்ருகத் தெரியப்பட் டிருந்தாலும் அதை விளக்கியும் எடுத்துக் காட்டினுலும் அது வீண்தான். உண்மைக்கு நெஞ்சம் திறக்கப்பட வேண்டுமானுல் அங்குத் தேவைப்படுவது சான்றன்று; ஆனுல் நம்பிக்கை. அந்தரங்க வினையாற்றல்கள் தத்தம் கதவுகளைத் திறந்து விடாத வரை புலன்களே ஏற்கப் பயனற்றதாகி விடுகின்றன. இயேசு நாதரின் அற்புதச் செயல்களில் பெரும்பாலானவைகளைப் பற்றி விவரித்து முடிக்கும் பொழுது, 'அவைகளைப் பார்த்த பலர் நம்பி ஞர்கள். விருந்துக்கு அழைத்ததாகக் கூறப்படும் நீதிக்கதையில் (parable) அவரவர் பணியில் ஆழ்ந்து ஈடுபட்டுக் கொண்டிருந்த வர்கள் விருந்தினை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இது ஒருண் மையை விளக்குகிறது. விவேகத் துறையிலும் நடைபெறுகிற ஒன்றுக்கு இது சான்ருக நிற்கிறது. சிக்கல் வாய்ந்த கருத்துகளில் முன் ஈடுபாடு கொண்டிருக்கிற கவனம் தெளிவான ஐயமற்ற உண்மையை உள்ளே நுழைய ஏற்றுக்கொள்ள மறுக்கின்றது. இதே காரணத்திஞல்தான் இயேசுநாதர் வருகைக்குமுன் முன்வரு தூதர்[1] ஒருவர் வேண்டியிருக்கிறது. அதே காரணத்திஞல் இயேசு நாதரின் உபதேசத்தையும் புதுக் கருத்துகளையும் எளிய மக்களும் முன் ஈடுபாடுகளால் தம்மேல் பெரும் பாரம் தாங்காமல் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இவ்வாறு ஏற்க வல்லவர்கள் உள்ளத்தின் இயற்கையான சிறப்பியல்புகளை அழியாமல் காத்தவர்களாகவும், தூய்மையுடன் எப்பொழுதும் எதிர்பார்த்த வண்ணமாகவும் இருந்திருக்கின்றனர்.

ஹார்வி (Harvey) என்பவர் குருதி ஓட்ட முறையை 1628ஆம் ஆண்டு கண்டுபிடித்தார். உடல்நூல் அக்காலத்தில் அதிகமாக அறியப்படாமல் இருந்தது. மருத்துவம் அனுபவ வைத்தியமாக முழு ஆதரவுபெற்று வந்தது. பாரியின் (Paris) மருத்துவத் துறையின் பல்கலைக்கழக கலையியற்குழு (Faculty of medicine of Paris) குருதியோட்டத்தை நம்ப மறுத்து விட்டது என்பது எல்லோர்க்கும் தெரிந்த பேருண்மை. ஹார்வி எவ்வளவு பரிசோ தனைகளால் விளக்கிக் காட்டினுலும் குழு அவரைத் துன்புறுத் தியது; பழித்துக் கூறிற்று. டயாஃபோரியஸ் (Diaforius) என்ப

[1] இயேசு நாதர்க்கு முன் வாழ்ந்து, அவர் வருகைக்கு முன் அறிவிப்பாள ராக அமைந்த தீக்கையாளர் யோவான் (John the Babtist).

வர் கூறுவதைப் பார்ப்போம்: 'என்னுடைய மகனைப் பற்றி எந்த உண்மை எனக்கு மன நிறைவு அளிக்கிறது? நம்முடைய முன்னோர் கருத்துக்கு நன்றியுள்ளவனாக இருந்து இந்த நூற்றாண்டில் கண்டு பிடிக்கப்பட்ட போலிக் கண்டுபிடிப்புகள் பற்றிய தர்க்கங்களை எப்பொழுதும் புரிந்து கொள்ள மறுப்பதுடன், அவர்கள் கூற்றுக்கு செவி சாய்க்காமல் இருப்பதுவே—அதிலும் முக்கியமாகக் குருதி யோட்ட முறையை ஏற்காமலிருப்பதுவே என் மனத்துக்கு மகிழ்ச்சி தருகிறது.'

* * *

தண்டெலும்பி (Vertebrates)யின் கரு வளர்ச்சியில் மூளைத் தாள்கள் (germinative foliations) பற்றிக் கண்டு பிடித்ததின் வரலாறு மனிதனால் குறிக்கப்பட்ட பத்திரங்களில் மிகவும் கருத் தூட்ட வல்லதாகும். முன் அமைத்தல் கொள்கை (Theory of-preformation) 1700 ஆம் ஆண்டில் தலைமுறை பற்றிய பல கருத் துகளில் இக் கருத்து தீவிரமாக ஏற்கப்பட்டு வந்தது. அதாவது கரு அணுவில் நுண்ணிய உறுப்புகள் முழுமையும் உருவாகியிருக் கின்றனவென்றும் அவை வரவர மடல் விரிவதுபோல் விரிந்து ஒன்றுக்குள் ஒன்றிருப்பது அளவு கடந்த முறையில் பெருகிவிடும் என்றும் கருதி வந்தனர். இந்தக் கொள்கை எல்லா உயிரினங் களுக்கும் பொருந்தும் எனக் கொள்ளப்பட்டது. விலங்கு, தாவரம், மனிதன் இக் கருத்தின் சொந்த வாதத்தால் இதைக் காட்டிலும் மிகப்பரந்த கருத்துக்குக் கொண்டுபோய் விட்டது. அதாவது ஒன்றுக்கொன்று உட்படுதல் (mutual inclusion). இந்தக் கொள்கைப்படி எல்லா உயிர் பெற்ற உயிரினங்களும் முன்னுருப் பெற்றவை (Performation) யானதால் அவை ஒவ்வொன்றும் படைப்புக் காலம்தொட்டு இருந்திருக்க வேண்டும் என்றும், ஒன்று மற்றொன்றுக்குள் மடங்கியிருக்க வேண்டும் என்றும் கருதப் பட்டது. எல்லா மனித குலமும் ஏவாளின்[1] (Eve) கருவில் தோன்றியிருக்க வேண்டும் என்று நம்பி வந்தனர். லியூவென் ஹேயிக் (Leewenhoek) என்பவர் 1677ஆம் ஆண்டில் நுண்ணோக்கி யின் துணைக்கொண்டு விந்தணு (ஆண் கரு உயிர்மம்-பெண் கரு முட்டைக்குப் பொலிவூட்டும் ஆண் கருச்சத்து)வைக் கண்டு பிடித்தார். ஒவ்வொரு ஆண் அணுவும் அதனுள் ஒரு நுண்ணிய மனித உருவத்தைப் பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்து இதிலி ருந்து பிறந்தது. சிறு மனிதன்-குறளன் (homunculus) என்ற கருத்துத் தோன்றிற்று. அது உண்மையாயின் ஆதாம் (Adam) உலக மக்கள் அனைவரையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருந்தான் என்றும், ஏவாள் அவ்வாறு பெறவில்லை என்றும் முடிவு கட்டினர்.

[1] விவிலிய மரபின்படி மனித இனப் படைப்பின் முதல் பெண்.

அதனால் பதினெட்டாம் நூற்றுண்டில் இரு வேறுபட்ட கருத்துகள் நிலவி வந்தன. 'கருவுரு முட்டைக் கோட்பாடுடையர்' (Ovulists) என்றும், 'நுண் உயிரினக் கோட்பாடுடையர்' (animalculists) என்றும் இருசாரார் இருந்தனர்; இருவரிடையே இருந்து வந்த கருத்துப் பிளவை ஒத்த வகையில் தீர்த்து வைக்க எதனாலும் முடியாமல் போயிற்று. இந்த இரு கட்சியிலும் பெருமை வாய்ந்த விஞ்ஞானிகள் தம் பெயர்களை உரிமைப் படுத்திக் கொண்டனர். ஸ்பாலன் ஜானி (Spallanzani) என்பவரும் லீப்னிட்ஜ் (Leibnitz) என்பவரும் எடுத்துக்காட்டு ஆவர். தலைமுறைக் கொள்கையை (principles of generation) ஆத்மாவுக்கும் பொருந்தும் என்றனர். 'ஒரு நாளைக்கு மனிதனுடைய ஆத்மாக்களாகப் போபவை முதல் உயிரணுவில் இருந்திருக்கின்றன. இவைகளை முதலில் பிறப்பித்த ஆதாமிடம் நன்கு ஒழுங்கு படுத்தப் பட்ட உயிரினங்களாக இருந்திருக்க வேண்டும். அதாவது படைப்பின் ஆதியிலிருந்தே இருந்திருக்க வேண்டும் என்றும் நான் நினைக்க வேண்டியிருக்கிறது' என்று லீப்னிட்ஜ் கூறுகிறார்.

ஹாலர் (Haller) என்பவர் கருவுருமுட்டைக் கோட்பாடுடையவர் (ovulist). அவர் உடல் நூல் பற்றிய ஒரு நூல் எழுதியிருந்தார். அதன் பெயர் 'எலிமென்டா ஃபிஜியாலாஜியா' (Elementa physiologiae), 'உடலியலின் மூல தத்துவம்'. இந் நூலால் அவர் ஓர் உடல் நூல் வல்லுநர் என்ற பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தார். அவர் தாம் கொண்ட கருத்தைத் தீவிரமாகப் பரவச் செய்தார். அந் நூலில் அவர் குறிப்பிட்டது, 'எதுவும் புதிதாகப் படைக்கப்படுவதில்லை. மனித உடலின் எந்த உறுப்பும் வேறெந்த உறுப்புக்கு முன்னதாகப் படைக்கப் படுவதில்லை. எல்லா உறுப்புக்களும் ஒரே சமயத்தில் உருவாகின்றன.[1] கிருத்துவ வேத நூல் தழுவும் அண்டப்பிறப்பினை மனத்தில் இருத்திக்கொண்டு ஏவாள் கருவில் அடுக்கப்பட்ட மக்கள் எண்ணிக்கையைக் கணக்கிட்டுப் பார்த்தார். அவருடைய கணக்குப்படி ஏவாள் கருவில் இருநூறு ஆயிரம் மில்லியன் மக்கள் (200000000000) அடங்கியிருந்திருக்க வேண்டுமென்று முடிவு கட்டினார். 1759ஆம் ஆண்டில் நிலவியிருந்த கருத்து இத்தன்மையாய் இருந்தது. அந்த ஆண்டில் ஸி. எஃப். உல்ஃப் (C.F. Wolff) என்பவர் பரம்பரை பற்றிய கருத்தடங்கிய நூல் ஒன்றை (Theoria generations') வெளியிட்டார். கோழிகளின் கருவைப் பரிசோதனை செய்த பிறகு புது உறுப்புகள் முன் தோன்றியவை (preformed) அல்ல என்றும் அவை முழுமையும் தாமே உருவாக்கிக் கொள்கின்றனவென்றும்,

[1] Nulla in corpore animale pars ante aliam facta est et omnes simul creatae existunt (Nothing is created anew, no part of the human body is made before any other part, all are created at the same time.)

அவை ஒன்றுமில்லாததிலிருந்து தொடங்குகின்றன என்றும், அதாவது ஒரு நுண் சிற்றறையிலிருந்து தொடங்குகின்றன என்றும், அந்தச் சிற்றறையும் எல்லா தொடக்கச் சிற்றறைபோல் மிகவும் எளிமை கொண்டதென்றும் எடுத்துரைத்திருந்தார். ஒவ்வொரு தனி உயிரினமும் உண்மையாகத் தோன்றுகிறது என்ற எளியநிகழ்ச்சியை எடுத்துரைத்து விளக்கம் தந்தார். ஒரு தனிச் சிற்றறை பிளவுபட்டு இரண்டாகி, பிறகு நான்காகி, எட்டாகி அப்படியே பெருகிக்கொண்டு போகின்றன. இவ்வாறு முளைத்த சிற்றறைகள் இரண்டு மூன்று மடிப்புகளாக மாறுகின்றன. இவை தாம் மூல மடிப்புகள் (primitive folioles). இதிலிருந்து எல்லா அங்கங்களும் வளர்ச்சி பெறுகின்றன. அன்னக் குழலில் தொடங்குகிறது. இந்தத் துணிபுரை வெறும் கற்பனைக் கொள்கையன்று (fanciful theory). மிகவும் நம்பக்கூடிய கவனிப்புகளடியாகப் பிறந்த உண்மைகளை ஒன்று சேர்க்கப்பட்ட மெய்யான வருணனையே ஆகும் என்று உல்ஃப் எழுதுகிறார்.

இவர் காலத்தில் வாழ்ந்த எல்லா விஞ்ஞானிகளும் நுண்ணோக்கியை உபயோகித்திருக்க வேண்டும். கோழியின் முட்டையை அதாவது கோழியின் கருவைப் பரிசோதனைக்கு எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். தனி ஒருவன் எவ்வாறு தோற்றான் என்ற பிரச்சினைக்கு அக்கறை காட்டாமல் இருந்திருக்கவும் முடியாது. ஆனால், இவர்கள் விஷயத்தில் இவர்களுடைய கற்பனையின் மிகுந்த சிக்கல் நிறைந்த முயற்சிகளைக் கிளப்பி விட்டு விட்டது. இவர்களை எண்ணப்போரில் இருதரத்து எதிரிகளாக ஆக்கி விட்டது. எவராவது இதைப் பரிசோதனை செய்து கூர்ந்து கவனிக்க அச்சமின்றி முன்வருவாரா ? பிலிஸ்டைனுடன் (Philistines) சாம்சனும் (Samson) அழித்துக் கொண்டாரே அதேபோல் பரிசோதனை செய்யத் துணிபவர்களும் தம் உயிரையும் எதிரி உயிரையும் பணயம் வைத்துவிட்டே அம் முயற்சியில் இறங்கத் துணியவேண்டும். அவர் (உல்ஃப்) கண்டுபிடித்துக் கண்டதை விளக்கம் தந்ததில் ஏதாவது உண்மை இருக்கலாம். அது மறுபடியும் நேரிடலாம் என்று எவராவது சற்றுச் சிந்தித்தார்களானால், எவராவது ஒருவர் இந்த வழியில் அஞ்சாமல் தூண்டப்பட்டிருப்பார்கள். அது சரியானதாக இருந்தால் அது ஒரு மாபெரும் புகழ்பெற்ற வழியாகியிருக்கும். எதிர்காலக் கண்டுபிடிப்புகளுக்கும் தனிச் சிறப்புகளுக்கும் வழி திறந்திருக்கும். ஆனால் அவ்வாறாகவில்லை. எல்லோர் மனத்தையும் திரண்ட மூடுபனி மூடிவிட்டது. கண்ணைப் பறிக்கின்ற உண்மை என்ற ஒளி அதை ஊடுருவிச்செல்ல இயலவில்லை. ஆதலால் கரு நூல் சார்ந்த எல்லா முன்னேற்றமும் தடைபெற்றது.

ஐம்பது ஆண்டுகள் கழிந்தன. உல்ஃப் ஏழையானார். துன்புறுத்தப்பட்டார். தம்முடைய தாயகத்தை விட்டு வெளியேற்றப்பட்டார். பெட்ரோகிராடில் (Petrograd) வறுமையில் உயிர் நீத்தார். பேண்டரும் (Pander) எர்னஸ்ட்வான் பேயர் (Ernest von Baer) ஆகிய இருவரும் பிளாஸ்டோ டெர்மிக்ஃபோலியேஷன் (blasto dermic foliation) கரு மூலத்தாளின் மடிப்புகள் என்ற புனைகருத்து அல்லது கோட்பாட்டினைக் (theory) கைப்பற்றிக் கொண்டனர். பிறகு விஞ்ஞான உலகம் உண்மை மனத்தால் உணர்ந்தது என்ற சான்றினை ஏற்றுக்கொண்டது. கரு நூல் ஆராய்ச்சியைத் தொடங்க வைத்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் மேல் பரந்த ஒளியை வீசச் செய்தது.

மிகவும் தெளிவான ஓர் உண்மையைக் காண ஏன் மக்கள் ஐம்பது ஆண்டுகள் கழிய வேண்டியிருந்தது? இந்த ஐம்பது ஆண்டு இடைவெளியில் என்ன நேர்ந்து விட்டது ? உல்ஃபின் சாதனைகள் மறைந்தே போயிருந்தன. அவைகளால் எவரும் பாதிக்கப்பட்டிருக்க மாட்டார்கள். இதற்கு முன் தங்களால் காண முடியாததை இப்பொழுது கண்டனர். அவர்களுடைய உள்ளத்தில் ஒரு முதிர்ச்சி தோன்றியிருக்க வேண்டும். உள்ளப்பக்குவம், உள முதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும். அதன் காரணத்தால் அவர்களுடைய தெய்விகக் கண்கள் திறக்கப் பட்டிருக்க வேண்டும். அதன் பிறகு அவர்கள் கண்டனர். அவருடைய கண்கள் மூடியிருந்தபோது சான்று பயனளிக்கவில்லை. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நேரடியாகத் தாக்கியிருந்தால் சக்தியெல்லாம் துளைக்கமுடியாத எதிர்ப்பின்மேல் மோதித் தானே வலிவிழந்து போயிருக்கும். ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு உண்மை தானே உருக்காட்டிக் கொண்டது. எளிதில் எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. எதிர்ப்பில்லாமலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பொது மக்களின் உள்ள் முதிர்ச்சி பற்றி இவ்வுண்மையை எவ்வாறு பாதிக்கிறதென்று வாதிக்கலாம். ஆனால் தனியாருடன் கொண்டுள்ள சம்பந்தம் பற்றியது நம் கேள்விக்கு அப்பாற்பட்டது. தெளிவான ஓர் உண்மையைக் காண முடியாத தனியாரை முதிர்ச்சி அடைய விட்டு விடவேண்டும். சான்றினைக் காண வம்பு பண்ணுவது மிகவும் கசப்புத் தன்மையாகவும் சோர்வூட்டுவதாகவும் இருக்கும். ஆனால் முதிர்ச்சி தோன்றிய பிறகு காண்பவன் ஊக்கம் நிறைந்தவனுகிறுன். கனுன் (canaan-Land of promise) என்ற செழிப்பான நாட்டில் திராட்சைக்கனி காய்த்தது போல் காட்சி அளிப்பான்.

சார்லஸ் டார்வின் (Charles Darwin) என்பவர் 1859ஆம் ஆண்டில் தம்முடைய நூலாகிய உயிரின மலர்ச்சியில் (The Origin of Species) பரிணாமக் கொள்கை அல்லது உயிரினத் தோற்றக் கோட்பாட்டினை வெளியிட்டார். அக்காலத்தவர்களின் எண்ணத்தின் மேல் இவர் கொள்கை எவ்வாறு பாதித்ததென்பதை அவர் உணர்ந்திருந்தார். 'என்னுடைய கோட்பாடு ஒரு தத்துவ இயலைத் தோற்றுவிக்கும்' என்று அவரே தன் குறிப்பேட்டில் எழுதியிருக்கிறார். 'வாழ்க்கை போட்டி' (struggle for life) என்றும் 'இயல் தேர்வு விளைவு' (Natural selection) என்ற இரு கோட்பாடுகளையும் டார்வின் வெளியாக்கியிருந்தார். அக்காலத்தில் லமார்க் என்பவர் (Lamareck) ஒவ்வொரு உயிரினமும் சூழ்நிலைக்குத் தக்க முறையில் தழுவிக் கொள்வதால் புதுப்புதுச் சிறப்பியல்கள் தற்செயலால் உண்டாகின்றன என்ற கோட்பாட்டினை வெளியிட்டிருந்தனர். டார்வின் கருத்துகள் அறிஞர் பலரிடமும் பரவியிருந்த காரணத்தால் லமார்க்கின் கோட்பாடும் பரவச் செய்யப்பட்டது. டார்வினுடைய கருத்தும் இத்துடன் இணைந்தது. உள் கருத்தில் ஒன்றுபட்டது. இந்தக் கோட்பாடுகள் சிருஷ்டி ஆக்குதலையும் அதன் முடிவுகளையும் பற்றிய கருத்தை ஒதுக்கிவைத்தன. ஆன்மாவின் அழியாத் தன்மையை அடியோடு மறுத்தனர். இத்தகைய புரட்சியின் விளைவு என்னவாய் இருக்கலாம் என்று கற்பனை செய்துகொள்ளலாம். பல நூற்றாண்டுகளாக ஆன்மாவே வாழ்க்கையின் குறிக்கோளாக இருந்து வந்தது. வாழ்க்கையின் அடிப்படையே ஆட்டம் கொடுக்கும்படி செய்வித்தபோது, மனச்சான்று என்பதின் வாழ்வே அதிர்ச்சி பெற்றுவிட்டது. இவ்வாறு அழிக்கவே தோன்றின கோட்பாட்டினை மறுக்க வேண்டுமென அக்கறையுடைய முயற்சி இருந்திருக்க வேண்டுமென்று கற்பனை செய்துகொள்ளலாம். அவ்வாறு செய்வதற்கு அவர்களுக்கு வேறு எக்காரணமும் இல்லாவிட்டாலும் ஆழமாக மனித இனத்தில் பதிந்து கிடக்கும் பழைய நம்பிக்கைகளைக் காக்க வேண்டும் என்ற ஓர் இயல்புணர்ச்சி ஒன்றே போதுமே!

பல தலைமுறையாகப் பல்கலைக் கழக மாணவர்களாக வந்தவர்கள் நெஞ்சத்தில் ஆழ்ந்து பாய்ந்து நல்ல பதிவைத் தந்த இரு புரட்சிக் கோட்பாடுகளைப் பற்றிச் சற்று ஆராய்வோம். 'உறுப்பில்லாமல் வினை இல்லை'[1] என்பது ஒரு கோட்பாடு. இள மாணவர்களில் மிக்க ஊக்கத்தை ஊட்டிய மற்றொரு கோட்பாடு 'வினை, உறுப்பை உருவாக்குகிறது.' 'என்ன! உறுப்பில்லாமல் வினை இல்லையா?' வினையும் உறுப்பில்லாமல் இருக்க இயலாது. எனி

[1] There can be no function without an organ. The function creates the organ.

னும், புதிதாகப் படைக்கும் வகையில் உறுப்பில்லாமல் வினை தீவிரமாக இருக்க முடியும். எந்தக் கோட்பாட்டிலும் இவ்வளவு முனைப்பானதும் (glaring) தெளிவானதுமான மறுப்பு இதுவரை இருந்ததில்லை.

டார்வின் கொள்கையும் லமார்க்கின் கோட்பாடும் அவசரப் பட்டுக் கற்றுக்கொண்டன என்றோ, பல வேதாந்தக் கொள்கை வரிசையாகக் குழப்பிக் கொண்டார்களென்றோ சொல்லிவிட முடியாது. ஏனென்றால் டார்வின் தத்துவம் தன்னை மற்ற எல்லாக் கருத்துகளிலிருந்து பிறக்கப்பட்டதென்று தனியாக ஒதுக்கிக் கொண்டிருக்கிறது. பகல் வெளிச்சம் இரவின் இருளை அகற்றுவதுபோல் இவர் வெளியிட்ட கருத்தைக் கொள்ளலாம். மாணவர்கள் அதைப்பற்றிக் கருத்து ஊன்றிப் படிக்கின்றனர். ஒரு புது அறநெறியையும் புதுமனச் சான்றினையும் அமைக்க ஆவலுடன் இருக்கின்றார்கள். ஆதலால் இந்த இரு கோட்பாடு களும் ஆர்வமற்றோ சோர்வுற்றோ கற்கப்படவில்லை. மேலும், அவை இரண்டும் ஒன்றாய் இணைந்து நெஞ்சுக்குள் நுழைந்து அதனதன் போக்கில் ஊக்கத்தைத் தூண்டிவிட்டன. இவ்வளவு வெற்றிகரமான எதிர்ப்பின் இடையில் ஓர் உலகத்தைத் அழித்து விட்டு மற்றொன்றை ஆக்குவதாகத் திட்டமிடப்பட்டது.

இறுதித் தீர்மானம் இதுவாகும். ‘நாமெல்லோரும் வெறும் விலங்குகள். விலங்குகளுக்கும் நமக்கும் அப்படிப் பார்க்கப் போனால் வேற்றுமை அதிகம் இல்லை. நாம் எல்லோரும் வால் இல்லாக் குரங்குகள் (apes). ஆனால் நம்முடைய மிகப் பழங்கால முன்னோர்கள் மண் புழுக்களே.’ இவைகளை நிரூபிக்க என்ன ஆர்வ முனைப்புடன் (ardour) பேராசிரியர்கள் தம் ஆசனங்களில் இருந்த படியே மனிதனுடைய உளஇயலைப் பாகுபடுத்த முயன்றார்கள். நாம் எவ்வளவு முயற்சிதான் செய்தாலும் விலங்குகளில் இல் லாதது எதுவும் நம்மில் இல்லாமலில்லை என்று அவர்கள் எடுத் துரைத்த போது மாணவர்கள் என்ன ஊக்கத்துடன் அவர்களைப் புகழ்ந்து கைதட்டி ஆரவாரித்தனர். மனக் கோளாறு நூல் வல்லுநர் புறுக்களின் மூளையையும் குரங்குகளின் மூளையும் நீக்கிப் பிறகு புண் ஆறினபிறகு அவைகளை அகில உலக உள இயல் கூட் டத்தில் கண்காட்சியில் வைத்தார்கள். அவைகளின் உள இயல் சார்ந்த எதிர்வினைகள் எவ்வாறிருக்கின்றன என்று மிகக் கூர்ந்து கவனம் செலுத்தி வந்தனர். அவைகளினுடைய உடலின் போக் கினையும் அவைகள் உணரும் திறமையையும் வினையாற்றலையும் இது போன்ற பிறவற்றையும் எல்லாம் ஆய்ந்து காட்டி வந்தனர். மூளை இல்லாத ஒரு விலங்கு மனிதனுடைய உளஇயல் ஆராய்ச்சிக்

குப் புதுத் தெளிவூட்டும் என்று எல்லோரும் உண்மையாகவே நம்பினார்கள்.

இது நேர்க்காட்சி வாத காலம் (Positivisma)[1] என்பதை நினைக்கும் பொழுது, அதாவது தொட்டுப் பார்த்தாலொழிய எதையும் நம்ப முடியாது என்றவர்களைக் குறிக்கிற கோட்பாடு என்பதை எண்ணிப் பார்க்கும் போது, இந்தச் சிந்தனை நம் மனத்தில் ஆழ்ந்த பதிவை உண்டுபண்ணுகிறது. அப்பொழுது விவேகமும் உள்ளம் போல் அபாயங்களால் அச்சுறுத்தப்படுகிறது. அது அடியோடு மறைக்கப்படலாம். அதனால் உள் உணர இயலாத மறுப்புகளையும் தவறுகளையும் நிரப்பி வைத்திருக்கலாம். கவனத்தில் வராத ஒரு தனித் தவறினால், பிழையினால் அது புதுவகையான துடிதுடிப்பில் கொண்டு போய் விடலாம். ஒரு மனித நிலை விலக்கம் ஆகும் (mortal aberration). உள்ளத்தைப்போல் (spirit) இதுவும் தன்னைக் காக்கத் தனி வழி பெற்றிருக்கிறது. அது காப்பாற்றப்பட வேண்டும். நீடித்திருக்கச் செய்ய வேண்டும். இல்லையேல் அது அழிந்து விடும். அதற்கு வேண்டிய பக்க பலம் புலன்கள் சார்ந்தவை அன்று. உள்ளத்தைப்போல் ஆத்மாவைப் போல் அது தொடர்ந்து தூய்மையாக்கப்படல் வேண்டும். டோபியாசின் மீன்கள் (fish of Tobias) தம் கண்களின் பார்வை இழந்த நிலையை தாமே குணப்படுத்திக் கொள்வதுபோல் தூய்மைப் படுத்திக்கொள்ள வேண்டும். உடலுக்குத் தேவையான தற்பாதுகாப்பினைச் சுகாதாரம் அல்லது உடல் நூல் கற்பிக்கிறது. அதனால் நம் நகங்களைத் துப்புரவாக வைப்பது போன்ற பல பணிகளில் நம்முடைய காலத்தில் பெரும்பகுதி கழிந்து போய் விடுகிறது. அந்தப் போக்கு அந்தரங்க மனிதனிடம் காட்டப்பட வேண்டும். அப்பொழுது அதனுடைய ஆரோக்கியமும் முழுமையும் (integrity) நிலைபெறும்.

விவேகத்தைக் கற்பிப்பதன் (education of the intellegence) நோக்கம் இதுவாக இருக்க வேண்டும். விவேகத்தை அதனுடைய தனிப்பட்ட நோய், மரணம் சம்பந்தப்பட்ட அபாயங்களிலிருந்து காப்பதாகும். மேலும், அதனுள் அடங்கியிருக்கும் குற்றங்களை அதனின்று அகற்றுவதும் ஆகும். அது கற்றுக் கற்றுக் களைப்படையச் செய்தோமானால் நாம் விவேகத்தைக் கற்பிக்க முடியாது. தற்காலத்தில் இது தெளிவாகப் புலனாகிறது. நரம்புக் கோளாறும் பைத்தியமும் நிறைந்து இருக்கின்றன. ஆரோக்கியமானவர்கள் என்று கருதப்படுபவர்களிடையும் பைத்தியத்தின் விளைவுத் தோற்றங்கள் திடீரெனத் தோன்றலாம். மனித குலம் முழுவதையுமே அழித்துவிடும் அச்சத்தையும் தோற்றுவிக்கலாம்.

[1] **அகஸ்ட் காம்டே (Auguste Camte) என்பவரின் மெய்விளக்கக் கோட்பாடு.**

நாம் குழந்தையைப் பாதுகாக்கையில் அவனைப் பல பொருள்களைக் கற்க வைக்க வேண்டும் என்ற ஆவலால் வசப்படுத்த இடம் தராமல் விவேகம் என்று அழைக்கப்படும் ஒளிவிளக்கை அவன் உள்ளத்தில் என்றும் எரிந்து கொண்டிருக்கும்படி முயற்சி செய்ய வேண்டும். இந்த நோக்கத்துக்காக முன் காலத்துக் கற்புக் கன்னிகையர் போல் (vestals of old) கூர்ந்து கவனம் செலுத்தினோமானால் சீரிய பலனை இந்தச் சிறந்த தொண்டின் மூலம் அடையலாம்.

# 9. கற்பனை

அறிவியலின் படைக்கும் கற்பனைத்திறன் உண்மையை அடிப் படையாகக் கொண்டது.—சென்ற நூற்றாண்டில் தபால் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தவர்களையும், எண்ணெய் விளக்கு உபயோகித்துக் கொண்டிருந்தவர்களையும் பார்த்து, ஒருநாள் நியூயார்க் நகர் நள்ளிரவில் ஒளிமயமாய் இருக்கும் என்றும், நடுக்கடலில் உற்றுழி உதவி (succour) வேண்டுமென்று மக்கள் கேட்பார்களென்றும், அவர்களுடைய செய்தி தரைமேல் இருப் பவர்களுக்குப் புரிந்து கொள்ளும் என்றும், அவர்கள் ஆகாயத்தில் பறப்பது கழுகையும் மிஞ்சிவிடும் என்றும் கூறியிருந்தோமானால், நம்முடைய முன்னோர்கள் நம்மைப் பார்த்து அவநம்பிக்கையுடன் புன்னகை பூர்த்திருப்பார்கள். அவர்களுடைய கற்பனை இவைகளை எண்ணவிட்டிருக்காது. அவர்களுக்குத் தற்கால மனிதன் ஏதோ வேறுலகத்து மனிதன் போல் தோன்றியிருப்பான்.

ஏனென்றால், தற்கால மனிதர்களின் கற்பனைகளெல்லாம் விஞ்ஞானம் அல்லது அறிவியல் நூலின் (Science) நேர்முகப் பரிசீலனை அடிப்படையாகக் கொண்டது. ஆனால், பழங்கால மக்கள் தம் மனத்தை மெய்ம்மையிலா உலகத்தில் திரிய விட் டார்கள்.

இந்த ஓர் உண்மை உலக அமைப்பினையையே மாற்றிவிட் டிருக்கிறது.

மனிதன் கற்பனைக் கோட்டை கட்டுவதில் தன்னை இழக்கும் பொழுது—மறக்கும் பொழுது—அவனுடைய சூழ்நிலை எம்மாதிரி மாறுதலையும் பெறாமல், இருந்தது இருந்தபடியே நின்றுவிடும். ஆனால், உண்மையுடன் தொடர்பு கொண்டு கற்பனை தொடங்கும் பொழுது, எண்ணம் தொழில்களைப் படைக்கத் தொடங்குகிறது. அவைகளால் வெளியுலகம் உருமாற்றம் பெறுகிறது. மனித

னுடைய எண்ணம் ஒரு மாபெரும் சக்தியைப் பெற்றுவிட்டது போல் ஆகிறது. ஆக்கும் சக்தி (the power to create) படைக்கும் சக்தியைப் பெற்று விடுகிறது.

இறைவனுடைய எண்ணம் இப்படித்தான் இருக்கும் என்று இவ்வாறு கற்பனை செய்து கொள்கிறோம். எல்லா ஆக்குதலும் தெய்விக எண்ணமே. அவ்வெண்ணம் தன்னையே மெய்யுரு வாக்கும் சக்தி பெற்றது. இறைவன் எண்ணினான்—காண்க! ஒளி, படைப்பின் ஒழுங்கு, உயிரினங்கள் எல்லாம் தோன்றின.[1]

தற்கால மனிதன் இயல்நூல் முறையால் (method of positive science) எண்ணத்தின் இரகசிய அடையாளத்தைக் கண்டுபிடித்து விட்டவன் போல் தோன்றுகிறான். அது அவனை அறநெறியில் திருப்புகிறது. அந் நெறி அவனுடைய மெய்யான தன்மையை வேத நூலில் காட்டியது போல் வெளிக்காட்டுகிறது. 'மனிதனை எம்முடைய சாயலிலும் எம்மைப் போலும் ஆக்குவோமாக.'

மனித விவேகமும் இங்ஙனம் உரைத்தது: 'ஒளி இருக்கக் கடவது!' என்றான். உடனே ஒரு மாய ஒளிர்வு, தொட்டால் வந்து போகும் ஒளிர்வு தோன்றிற்று. இயற்கையின் படைப் பிலுள்ள எல்லாப் பறவைகளையும் விட உயரத்தில் ஆகாயத்தில் பறக்க என்று நினைத்தான். அப்படியே பறக்கிறான். 'நடுக்கடலில் திக்கு முக்காடும் மாலுமிகளின் ஈனக்குரல் மாயமாய்ப் பறந்து ஓசைப் படாமல் தெரிவான இடங்களில் சேர்க்க என்று எண்ணினான்; அப்படியே ஆயிற்று. 'மனிதர்களுடைய தேவைக்கு நிறைந்திருக்கும் வகையில் பொருள்களும் தாவரங்களும் தம் வகையில் பெருகுக' என்று நினைத்தான். அப்படியே பொருள்கள் பெருகின. மலர்களும் காய்கனிகளும் காய்த்துக் குலுங்கின.

ஆக்குதலிலிருந்து தொடங்கும் பொழுது கற்பனை படைக் கிறது. அதாவது ஏற்கெனவே இருக்கின்ற உண்மையைக் கற்பனை தன்னுள் ஏற்றுக்கொண்ட பொழுது அப்பொழுதுதான் அது மாபெரும் காரியங்களைச் சாதித்திருக்கிறது.

விண்ணில் பறக்க விருக்கும் ஒரு கழுகின் சிறகுக்கடியில் சிறு குஞ்சு மறைந்து கிடக்கிறது. கழுகு இதை மிக உயரத்தில் கொண்டு போகும் பொழுது தாய்க் கழுகினிடமிருந்து குஞ்சு விடு வித்துக் கொள்கிறது. இன்னும் உயரத்தில் தன் முயற்சியாலேயே பறக்கிறது. மனிதனும் அவ்விதமே முதலில் இயற்கையை இறுகப் பற்றிக் கொள்கிறான். தீவிர ஊகக் கோட்டைகளால் இயற்கை யுடன் ஒட்டிக் கொள்கிறான். அவளுடன் உண்மையைத் தேடி

[1] கிருத்துவ நூலில் படைப்புப் பற்றிக் கூறப்படுவது.

விண்ணில் கிளம்புகிறான். பிறகு அவளிடமிருந்து விடுவித்துக் கொள்கிறான். கற்பனை, இயற்கை சாதித்ததை விட இன்னும் அதிகமாகப் படைத்து விடுகிறது. இந்த வகையில் இறைவ னுடைய குணங்களை மனிதன் பிரதிபலிக்கிறான். பண்டைக்கால மனிதன் காணாத வகையில் சீரும் சிறப்பும் புகழும் வாய்ந்த அற்புதங்கள், நம்பத்தகாத மாயங்கள் இவனிடமிருந்து தோன்று கின்றன. கழுகில்லாத குஞ்சு, இதைக் கனவிலும் கருதியிருக்க முடியாது.

'முதற்பெரும்' பாவம் என்பது இந்த அழிவில்லா-நிலை பேறுடைய கதையின் உருவக் கதை. மனிதன் தனக்குத்தானே வினையாற்ற விரும்பினான். இறைவனுக்குப் பதிலாகத்தானே இயங்க எண்ணினான். இறைவனிடமிருந்து விடுவித்துக்கொண்டு தானே படைக்க விரும்பினான். இதன்பின் அவன் ஆற்றலற்றான்; அடிமையானான்; துயருற்றான்.[1]

உண்மைக்குப் புறம்பே தானாக இயங்கும் மனம் ஒரு வெற்றி டத்தில் பணிபுரிகிறது. அதனுடைய ஆக்கும் சக்தி உண்மையின் மேல் பணியாற்றும் ஒரு வழிவகையாகும் (means). ஆனால் வழி வகையை முடிவுடன் குழப்பிக் கொண்டால் அவ்வளவுதான்; அது வழி தவறிவிட்டது.

இம்மாதிரியான விவேகத்தின் பாவம் என்பது மூலப் பாவத்தை ஒக்கும்.[2] வழிவகையை முடிவுடன் குழப்புதல், இது ஒவ்வொரு வகையிலும் சடத்துவத்தின் உந்து சக்தி (force of inertia) என்று பல முறை வடிவெடுத்து காட்டுகிறது. இது உளவியல் வாழ்வில் பரவியிருக்கிறது. வழிவகை என்பது எளிது; சுலபமானது; புரியக் கூடியது. மனிதன் இந்த வழிவகையைத் தன்னுடைய பல நடத்தைகளில் முடிவுடன் குழப்பிக் கொள் கிறான். எடுத்துக்காட்டாக பேருண்டியை மறைப்பதற்குச் சத்துள்ள உணவு உட்கொள்ளுதல் என்றும் 'பசி' என்பது அதன் முடிவு என்றும் கொள்ளப்படும் பொழுது, உடலானது ஆரோக் கியத்திலும் தூய்மையிலும் தன்னைப் புதுப்பித்துக் கொள்வதற்குப் பதிலாக நச்சு மயமாகி விடுகிறது. அதேபோல் இனப்பெருக்கத் திலும் பால்சார்ந்த உணர்ச்சிகளே முடிவெனக் கருதி வாழ்க்கை யைப் புதுப்பிக்க வேண்டுமென்பதை மறந்து விட்டால், இனம் சீர் கெடுவதுடன் மலட்டுத்தன்மையும் தோன்றி விடுகிறது. மனிதனும் தன்னுடைய எண்ணத்தின் ஆக்கும் திறமை கொண்ட சக்தியை உண்மையின் அடிப்படையில் வைக்காமல் எண்ணத்துக்கே பயன்

[1] கிருத்துவ நூல் கூறுவது.

[2] original sin.

படுத்திக் கொண்டானுனல் தான் விவேகத்துக்கு அவ்வாறு இழைத்த பாவம் செய்தவனுகிறுன். அவ்வாறு செய்யும் பொழுது, ஒரு பொய்யுலகத்தைப் படைத்துக் கொள்கிறுன். பிழைகள் நிறைந்த உலகத்தைப் படைத்துக் கொள்கிறுன். இறைவனைப் போல் வெளியுலகத்தை ஆக்கும் வல்லமை இழந்தவனுகிறுன்.

இவ்வாறு இயல்நூல் (Positive Science) எண்ணத்தின் மீட்பை யும் அதனுடைய மூல பாவத்திலிருந்து தூய்மையாக்கப்பட்ட தையும், உளஇயல் சார்ந்த சக்திகளைக் குறிக்கும் இயற்கையான விதிகளுக்குத் திருப்பிச் செல்வதையும், நமக்கு எடுத்துக்காட்டு கிறது. வேதநூலில் குறிப்பிட்ட மனிதர்களைப் போன்றவர்கள் விஞ்ஞானிகள். எகிப்து நாட்டிலிருந்து விடுதலை பெற்ற மக்கள் செழிப்பான இஸ்ரேல் நாட்டை (Land of promise) போய்ப் பார்த்து வரலாம் என்று அனுமதிக்கப்பட்டார்கள். அவர்கள் திரும்பும்பொழுது இருவராலும் தூக்கமுடியாத அவ்வளவு பளு வான திராட்சைக் குலைகளுடன் வந்தனர். பார்த்தவர்கள் கண்கொட்டாது வியந்து நோக்கி நின்றனர்.

அங்ஙனமே இன்று விஞ்ஞானிகளும் செழிப்பான உண்மை என்னும் நாட்டுக்குள் நுழைந்திருக்கின்றனர். அங்கு இயற்கை யின் உண்மையை அறியும் இரகசியம் இருக்கிறது. எல்லா மக்களும் காணும் வகையில் அற்புதமான பழங்களுடன் திரும்பி யிருக்கின்றனர். இரகசியம் மிகவும் எளியது. கூர்ந்து கவனித்தல், முன்மதி (Prudence), பொறுமை ஆகியவை அடங்கியவைகளை அடிப்படையாகக் கொண்ட சரிநுட்பமான முறையாகும். எல்லா மக்களும் இந்த இரகசியங்களில் பங்குபெற அனுமதிக்கப்படலாம். இவை போன்ற ஒழுக்கம் அல்லது நலன்கள் தங்களுடைய நெருங் கிய தெய்விக-அறநெறி வாழ்வுக்குத் தேவைப்படும் மறை பொருளை (Occult) ஒக்கும்.

புத்தாய்வு செய்வோர் மட்டும் உள்ளே புகவும் மற்றவர்கள் புறத்தே நின்று இயங்காமல் அவர்கள் உழைப்பால் பெற்ற பலனை ஏன் இன்புற வேண்டுமென்று கேள்வி கேட்கலாம்.

ஏனென்றல், இயல்நூலின் முறையானது மனிதனை உண்மை அறியும் பாதையில் அழைத்துச் செல்கிறது; உண்மைகளைச் சேகரிக்க வைக்கிறது. அவைகளைக் கொண்டு தன்னுடைய சொந்தக் கற்பனையை உருவாக்கச் செய்கிறது. அது ஓர் ஏக போகத் தனி உரிமை பெற்றது. தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலரின் தனி உரிமை அது.

விவேக மீட்பைக் குறிக்கும் முறையே எல்லா மனித குலத்தையும் சீரமைப்பதற்கு உபயோகப்படும் முறையாய் இருத்தல் வேண்டும். புதுத் தலைமுறையை ஆக்குவிக்கும் முறை.

வேதநூல் கதையில் வருபவர்கள் தூதர்கள்; செழிப்பு நாட்டில் இருப்பதைக் கண்டு நமக்குக் கூற இருக்கும் சான்றினர் ஆவர். அந்த நாட்டில் இனி அனைவரும் புகுவார்கள். அதே போல் இங்கும் நடைபெறுகிறது. எல்லா மக்களும் விஞ்ஞான முறையின்கீழ் பாதிக்கபட வேண்டும். ஒவ்வொரு குழந்தையும் தானே முயற்சி செய்யவேண்டும். கூர்ந்து கவனித்துத் தன்னை உண்மையுடன் இணைத்துக் கொள்ளவேண்டும். இந்த வகையில் கற்பனையின் பறத்தல் இன்னும் உயரமான நிலையிலிருந்து தொடங்கும். விவேகமும் அதற்குரிய இயற்கையான படைப்புக் கால்வாய்களுக்குத் திருப்பப்படும்.

கலை சார்ந்த கற்பனைக்கும் அடிப்படை உண்மையே—பெரிய விஞ்ஞானக் கண்டு பிடிப்புகள் அனைத்தும் பிறப்பதற்குத் துல்லிய கூர்ந்து ஆய்வும் எளிய தர்க்க வாதமும் தேவைப்படுகின்றன. விவேகத்தின் பணி இவை மட்டுமல்ல; இதைவிட உயர்ந்த தொழில் இருக்கிறது. சில விஞ்ஞானக் கண்டு பிடிப்புகள் நடைபெற்றபோது, 'நானும்கூட இதைச் சாதித்திருக்க முடியும்' என்று சொல்வதுபோல இங்கு எவரும் அவ்வாறு கூறிவிட முடியாது.

தாந்தே, (Dante), மில்டன் (Milton), கோதே (Goethe), ராஃபெல் (Raphael), வாக்னர் (Wagner) ஆகியவர்கள் அற்புதத்தில் சாலச் சிறந்தவர் விவேகத்தின் மாயங்கள், கூர்ந்து கவனித்தல், தர்க்கமிடுதல் என்ற வெறும் போக்குகளினுல் ஆனவர்கள் தாமே என்று ஒதுக்கி விடமுடியாது. எனினும், ஒவ்வொருவருக்கும் அவரவர்க்கான கலைக் கற்பனையின் பங்குண்டு. அவனுடைய மனத்தால் அழகு வாய்ந்தனவற்றைப் படைக்கும் திறமை உள்ளுணர்வால் பெற்றிருக்கிறுன். இந்த உள்ளுணர்வு நன்கு வளர்ந்தால் எல்லாவகைக் கலைப்பொருள் செல்வமும் எங்கெங்கு சமூக வாழ்வு நிறைந்திருந்ததோ, எங்கெங்கு விவேகம் அமைதிச் சூழ்நிலையில் முதிர்ச்சி அடையக் காலம் இருந்திருந்ததோ, அங்கெல்லாம் தங்கத் துணுக்குகள் போல் சிதறிக் கிடந்தன. பண்டையோர் பற்றிய சின்னங்களைச் சேகரித்து வைத்திருக்கும் ஒவ்வொரு மாகாணத்திலும் அந்தந்த ஊரின் கலை நிறைந்த கைத்தொழில் பண்டங்களும், கலைப்பொருள்களும் இருக்கின்றன. தட்டுமுட்டுச் சாமான்கள், பாட்டுகள், நாடோடிப் பாடல்கள் போல்வனவும் அவ்வூரின் கலையைக் காட்டும். அந்தரங்க மனிதனின் பல்வேறு படைப்புகள் அவனை மலரச் செய்கின்றன. ஒளி விளங்கும் சிப்பி

எங்ஙனம் தனக்குள் சிப்பியின் பசை உடலை அடக்கி வைத்திருக் கிறதோ அதேபோல் இவனுடைய விவேகத் தேவைகளுக்கான சக்தியைக் காத்துக்கொள்கின்றன.

புறப்பொருள் உண்மையைக் கூர்ந்து கவனிக்கும் தொழி லுடன் ஆக்கும் தொழிலும் இருக்கிறது. இத் தொழில் மனிதனைத் தரையிலிருந்து எடுத்து வேறோர் உயர்ந்த உலகுக்குக் கொண்டு போகிறது. ஒவ்வோர் ஆன்மாவும் அதனதன் வரம்புக்கு ஏற்பப் பெறும்.

எனினும் ஒன்றுமில்லாததிலிருந்து மனிதன் கலைப் பொருள் களைப் படைக்கிறான் என்று எவரும் கூற மாட்டார்கள். படைத் தல் என்பது உண்மையில் ஒன்றுகூட்டுதலாகும். மனத்தின் ஆதியில் சேகரிக்கப்பட்டவைகளை வைத்துக் கொண்டு படைக்கப் பட்டதாகும். அவ்வாறு சேகரிப்பது எங்ஙனம்? புலன்களால் சூழ் நிலையிலிருந்து திரட்டப்பட வேண்டும்? பண்டையர் மூதுரை இந்தப் பொதுக் கருத்தைத் தொகுத்துக் கூறுகிறது. 'புலன்களில் இல்லாததெதுவும் விவேகத்தில் இல்லை.'[1] நம்முடைய புலன்களுக் குத் தம்மை மெய்யாக அறிமுகப் படுத்திக் கொள்ளாத எதையும் நாம் கற்பனை செய்து கொள்ள இயலாது. நம்முடைய நினைவாற் றலுக்கும் குறிப்பிட்ட வரம்பு இருக்கிறது. இந்த ஒப்புக் கொண்ட வரம்புக்கு அப்பாற்பட்டதை விளக்கம் தர நமது மொழியும் பயனற்றதாகிப் போய்விடும். மைகல் ஏஞ்சலோ (Michelangelo) என்ற ஓவிய மேதையால் இறைவனை ஒரு தாடியுடைய கிழவன் வடிவம் அல்லது வேறு எவ்வடிவத்திலும் கற்பனை செய்ய முடிய வில்லை. நரகத்தில் உள்ள படு துன்பங்களை நினைக்கும் பொழுது நெருப்பைப்பற்றி பேசுகிறோம். வீடுபேற்றை ஒளி நிலவும் இடமாக எண்ணுகிறோம். குருடர்களாகவும் செவிடர்களாகவும் பிறந்தவர்கள், தங்களால் உணர இயலாதுபோன உணர்ச்சிகளைப் பற்றி எவ்விதத் தெளிவான கருத்துகளும் பெற முடியாது. பிறவியிலே குருடர்களாயிருந்தவர்கள் வண்ணங்களை ஓசைகளுடன் ஒப்பிட்டுக் கற்பனை செய்து கொள்கிறார்கள் என்பதைப் பலர் அறிவர். எடுத்துக்காட்டாகச் சிவப்பைத் தாரையின் ஓசை எனவும், நீலத்தை இனிய பிடிலின் ஓசை எனவும் கற்பனை செய்து கொள் கின்றனர். இனிய இசையின் வருணனைகளைப் பற்றிப் படிக்கும் பொழுது வண்ணத்தால் தீட்டப்பட்ட உயர்ந்த ஓவியங்களின் எழிலைக் கற்பனைசெய்து கொள்கின்றனர். கவிகளும் ஓவியர்களும் தத்தம் மனப்பாங்கில் (temperament) சிறப்பாகப் புலன்கள் சார்ந்தவர்களாகவே இருக்கின்றனர். தனிப்பட்டவரின் கற்பனைக்கு

[1] Nihil est in intellectu quod Prius non fuerit in sensa (There is nothing in the intellect which was not first in the senses)

ஒரு தனி உருவம் அளிக்க எல்லாப் புலன்களும் ஒரே அளவில் அளிப்பதில்லை. ஆனால், சில புலன்கள் அடிக்கடி மற்றவை களைவிட அதிகமாக இருக்கின்றன. இசைவாணர்கள் கேட்டல் தொடர்புடையவர்கள் (audilory) உலகம் வெளிப்படுத்தும் ஓசை களைக் கொண்டு உலகத்தை வருணிக்கத் தோன்றும். காட்டில் நிலவும் மௌன நிலையில் 'நைட்டிங்கேல்' (Nightingale) என்ற பறவையின் இன்னிசை, நாட்டுப்புறத் தனி அமைதியில் கொட்டும் மழையின் முழக்கம் ஆகியவை இன்னிசை புனையும் மேதைகளுக்குப் பெரிய ஊக்கம் அளிக்கும் சம்பவங்களாக அமையலாம். நாட்டுப் புறத்தின் பாதையை வருணிக்கின்ற சிலர், அதனுடைய மௌனத் தையும் ஒலிகளையுமே பற்றிக் கூறுவர். வேறு சிலருக்குக் கவர்ச்சி தருவது முக்கியமான பார்வையாக இருக்கலாம். அவர்கள் புலனுக்குப் படுவதெல்லாம் பொருள்களின் வடிவமும் வண்ணங் களுமேயாகும். அதற்கு மாறாக இயக்கமாகவோ, வளையும் தன்மையாகவோ, தூண்டு விசையாகவோ, மென்மையின் தொடு புலன் உணர்ச்சியாகவோ, கடுமையின் உணர்ச்சியாகவோ இருக்க லாம். அப்பொழுது கற்பனையின் வருணனையின் தொகையின் பெருமளவு தொடுபுலனும், தசை உணர்புலனும் அதிகப்படியான பங்குபெறும்.

புலன் சாராத பதிவுகளைப் பெற்றவர்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய அறநெறிவாழ்வு, நிறைந்த செறிவைப் பெற்றது. அவர்கள் அந்தரங்கப் பதிவுகளைப் பெற்றிருக்கின்றனர். அவை அவர்களுடைய கற்பனையால் பெறப்பட்ட பலன் என்று கூறி விட முடியாது. அவை எளிய வகையில் உயரப்பட்ட உண்மைக ளென்றே ஒப்புக் கொள்ளவேண்டும். அவைகள் உண்மை என்பது சாமானிய பொருள்களின்மேல் காட்டப்படும் உள் நோக்கினால் மட்டுமல்லாமல், அவர்களுடைய ஆளுமையின் மேல் அவை பாதிப் பதாலும் அறியலாம். தெரிசா என்ற பெண் துறவியர் (Saint Teresa) கூறுகிறார். 'இறைவனால் அருளப்பட்ட திருவெளிப் பாடுகள் தெய்விகப் பலன்களை ஆத்மாவுக்குள் நிறைப்பதிலிருந்து அவைகளை ஒன்றிலிருந்து மற்றொன்றெனத் தெரிந்துகொள்ள முடியும். அவைகளைப் பின்தொடர்ந்து, ஒளி பகுத்தறிவுக் கூர்மை ஆகும் (discernment) மெய்யறிவு (wisdom). ஆனால், இத்தகையோர் தம் புலனுக்குள் புகாத உணர்ச்சிப் பதிவுகளை வருணிக்க விரும்பினார்களானால், அவர்களின் புலன்களின் பதிவு சார்ந்த மொழியையே துணை தேடவேண்டும் நிலைமை ஏற்படு கிறது. பிளஸெட் ரெய்மாண்டு ஆஃப்கேபுவா (Blessed Raymond of capua) கூறுகிறார். 'எனக்கு ஒரு குரல் கேட்டது, அது காற் றில் ஒலிக்கப்படவில்லை. அவை என்னுடைய உள்ளத்தில் பதிந் தன. ஆனால் என் செவிகளில் பதியவில்லை. எனினும் அக் குரல்

புறத்திலிருந்து எனக்கு வந்திருந்தாலும் அதைவிட இன்னும் தெளிவாகப் புரிந்துகொண்டேன். இந்தக் குரல் சொன்னதை என்னால் திரும்பக் கூறமுடியவில்லை. அதற்கு ஒலியில்லை; குர லென்றே அழைக்கிறேன். இந்தக் குரல் சொற்களை உருவாக்கிக் கொண்டது. என்னுடைய உள்ளத்திற்கு அளித்தது.' தெரிசா என்ற துறவியார் வாழ்க்கையில் இதுபோன்ற பல நிகழ்ச்சி வருணனைகள் காணப்படுகின்றன. அவர்தம் கண்களால் பாராததும் உள்ளத்தால் கண்டதுமான நிகழ்ச்சிகளைப் புலன்சார்ந்த தக்க பொருத்தமில்லாத மொழியால் எடுத்துக் கூறுகிறார்.

இந்த உட்பதிவுகள் துறவிகளிடத்திலும் மற்றவர்களிடத்திலும் நடைபெறலாம். (இந்த உட்பதிவுகள் துறவியின் பண்பைக் குறித்திடவேண்டுமென்பதில்லை.) பித்தர்களுடைய மனத்தில் மாயக்காட்சி அல்லது மருட்சி (hallucination) தோன்றுகின்றது. இவ்விரண்டு வகைக்கும் உள்ள வேற்றுமை தெளிவாகக் காணப்படுகிறது. பித்தனில் (Cerebral cortex) பெரிய மூளையின் உள்ளூரி—(மூளை மேலுள்ள சாம்பல் நிறப்பொருள்) யின்மேல் துடிதுடிப்புண்டாகிறது. இதனால் புலன்சார்ந்த நினைவாற்றலால் (Memory) பதிவு செய்யப்பட்ட பழய படிவங்கள் மறுபடியும் உருப் பெறுகின்றன. புறத்ததான புலன்சார்ந்த சிறப்பியல்புகளுடன் அங்கு அவை ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இந் நோயால் துன்புறுபவன் தன் கண்களாலே இந்த புனைவுருத் தோற்றங்களைப் பார்ப்பதாக மெய்யாக நம்புகிறான். அவனைத் தொடர்ந்து வதைக்கும் குரல்களைக் கேட்பதாகவும் நம்புகிறான். அவன் உடற்கோளாறால் பீடிக்கப்பட்ட பலியாள். அவனுடைய முழு ஆளுமையும் உறுப்புகளின் சிதைவு என்ற அறிகுறியைக் காட்டுகிறது. இவை உள இயல் சிதைவுக்கு உடனிணைத்துணையாம்.

மிகவும் அபூர்வமாக நடைபெறும் தெய்விக உளப்பதிவுகள் மிகச்சிலவே, இவைகள் அருட்தூய்மைக்கு (sanctity) உதவிகள் என்று கருதாமல், இவ்வுட்பதிவுகள் இயல் திட்டவாதக் கோட்பாளர் (teleologist) போன்ற சிறப்பாய் வறிஞர்களுக்கும் (specialist) 'ஆங்கில உள இயல் ஆராய்ச்சிக் கழக' (English Society of Psychical Research) அங்கத்தினர் போன்றவர்க்கும் விட்டுவிடுவோம். இவை கல்வித்துறைக் கருத்துகளுக்குள் நுழைவதில்லை. நம்முடைய ஆய்வுக்கு விவேக வினையாற்றல்களுக்காகக் கட்டியமைக்கும் ஒரு பொருள் இருக்கிறது. புலன்கள்பற்றியது.

கற்பனை என்பது புலன் சார்ந்த அடிப்படைதான் பெற்றிருக்க முடியும்.

பொருள்களின் பண்புகள் அனைத்திலும் உள்ள ஒவ்வொரு தனிப்பகுதியின் வேறுபாடுகளைத் துல்லியமாய் உணர்வதற்கு புலன்சார்ந்த கல்வி ஆயத்தம் ஆக்குகிறது. இம் முயற்சிப் பொருள்களையும் இயல் நிகழ்ச்சிகளையும் பற்றிக் கூர்ந்து கவனிப்பதன் அடிக்கல். இவை நம் புலன்களில் தம்மை உருக்காட்டிக் கொள்கின்றன. இத்துடன் கற்பனைக்குத் தேவைப்படும் பொருள்களைத் தேர்ந்தெடுக்க நமக்கு உதவிபுரிகின்றன.

கற்பனைப் படைப்புக்கும் வெறும் தெளிவற்ற உருத்திட்பமற்ற துணையிருப்பதில்லை. அதாவது, ஒளி, வண்ணம், ஓசை, ஊறு போன்றவைகளின் பதிவுகளிடையே கடிவாளம் அற்றுத் திரிகின்ற கற்பனைக்குத் திரையன்று. ஆனால், அது உண்மைக்கு உறுதியாகத் தொடர்பு கொண்ட ஒரு படைப்பாகும். படைக்கப்பட்ட வெளியுலகத்தின் உருவங்களுடன் எவ்வளவுக்கெவ்வளவு இறுதியாகக் கடைப்பிடித்துக் கொள்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதன் அகப்படையின் மதிப்பு உயர்ந்திருக்கும். பொய்யானதும் மீமானிடமானதும் (super human) ஆன உலகத்தைக் கற்பனை செய்யும்பொழுதும் அந்த உண்மைகளை நினைவூட்டும் வரம்புக்குள் கற்பனை அடங்கிக் கொள்ளவேண்டும். மனிதன் படைக்கிறான். ஆனால் அவன் ஆழ்ந்து கிடக்கின்ற புலனால் அறியக்கூடியதும் தெய்விகமயமானதும் ஆனவைகளை எடுத்துக்காட்டாக அமைத்துக்கொண்டே படைக்கிறான்.

திவினா காமிடியா (Divina Commedia) என்ற இலக்கியம் மிகச் சிறப்பு வாய்ந்தது. இதன் ஆசிரியக் கவியின் மனத்தில் அடிக்கடி புலனால் உணரக்கூடிய தெளிவான உவமைகள் இவருடைய கற்பனையுடன் ஒப்பிட்டுக்கூறக் கையாளுவதைப் பல இடங்களில் காண்கிறோம்.

> ‘புறாக்களைப்போல் அன்பின் ஆசையால் அழைக்கப்பட்டு, விரிந்து பறந்து அவைகளின் இனிய கூட்டுக்கு உறுதியாகத் திரும்பக் காற்றைப்பிளந்து, மனத்திட்பத்தால் அலைந்து, உந்தப்படுகின்றது. இவ் வண்ணம் ‘டிடோ’ (Dido)[1] என்ற பறவை இருந்த இனக்கூட்டத்திலிருந்து தொடங்கித் தூய்மையற்ற காற்றில் அவை வேகமாகச் செல்கின்றன.[2]
>
> உழைத்து உழைத்து மூச்சுத் திணறிப்போகும் மனிதன் போல் கடலில் இருந்து தப்பிக்கரையேறிப்

[1] மறைந்துபோன அன்னப்பறவை போன்ற பறவை.

[2] Careys translation of Dante's Inferno, Canto V.

பரந்த விபத்து நிறைந்த பாலை நிலத்தை நோக்கி நின்று இருப்பதுபோல், என் உள்ளமும் சக்தியிழந்து அச்சத்தால் உழன்று, இதுவரை எவரும் தாண்டாததும் வாழப் பெறாததுமான பூசந்தியைக் கண்டேன்.[1]

செம்மறியாடு அதன் கூட்டத்திலிருந்து பிரிந்து ஒன்றொன்றாகவோ, சோடி சோடியாகவோ, மும்மூன்றாகவோ, முன் செல்கின்றன. அதே சமயத்தில் மற்றவை கண்ணையும் மூக்கையும் தாழ்த்தி அச்சத்துடன் நின்று முன் சென்ற ஆடு செய்வதையே தானும் செய்யும். அது நின்றால் மற்றவையும் அதைச் சூழ்ந்து எளிமையாகவும் அமைதியாகவும் காரணத்தை ஆயாமலும் நின்றன. அது அதிர்ஷ்டமான கூட்டம். உள்ளடக்கத்துடனும் நடையில் நயமும் பெற்ற கூட்டம். அக் கூட்டத்தின் முதலில் நின்ற ஆடு மெதுவாக அசைந்து செல்வதைக் கண்டேன் அதேபோல்.'[2]

அரை ஒளி ஊடுருவல் (trans lucent) செய்யும் வழவழப்புக் கண்ணாடிபோல் அசையாத தெளிவான ஆழத்தில் பாயாத அலைபோல் அதனுடைய அடித்தளம் இருண்டிருப்பதால், பதிந்துள்ள தனிச் சிறப்புக் கூறுகளின் உருவங்கள் மங்கலாகத் திரும்பி வருகின்றன. வெண்மை நெற்றியில் பதிக்கப்பட்ட ஆணிமுத்து கண்ணுக்குபடுகிறது. இத்தகைய அனேக முகங்கள் பேச ஆவலுடன் இருப்பதைக் கண்டேன்.[3]

தாந்தேயின் உருவங்கள் எண்ணற்றவை; அற்புதமானவை. ஆனால், ஒவ்வொரு விழுமிய எழுத்தாளனும் பேச்சாளனும், கற்பனைக் கனிகளைத் தான் கண்ட மெய்க்காட்சிகளுடன் அடிக்கடி பிணைக்கிறான். அவனைப் பார்த்து, 'என்ன கற்பனையும் அறிவும் படைத்த மேதை! அவனுடைய கருத்து என்ன தெளிவு! என்ன உயிர்த்துடிப்பு!' என்றெல்லாம் கூறுகிறோம்.

ஒரு முயலைப் பின் தொடர்ந்த வேட்டை நாய்களின் கூட்டம் மானம் கெட்டுத் தலைகவிழ்ந்து, வால்தொங்கி, தன் எசமானனிடம் திரும்பி வருவது போல, அந்தக் கொந்தளிப்பான இரவில் கூலிப்படை 'டான்ரோட்ரிகோ' (Don Rodrigo) வின் கோட்டைக்குத் திரும்பி வந்தன.[4]

[1] Carey's translation of Dante's Inferno, Canto I.
[2] ,, ,, ,, purgatorio, Canto III.
[3] ,, ,, ,, paradiso, Canto III.
[4] Manzoni, I Promessi sposi.

கற்பனை என்பது உண்மையான உருவங்களுக்குள் அடங்கியுள்ளது. இந்த அளவும் உருவமும்தான் மனத்தின் படைப்புக்குச் சக்தி அளிக்கிறது. கற்பனையைப் பயன்படுத்தும் எழுத்தாளனுக்குத் தான் கண்ட புலன் காட்சி சார்ந்த பல கூர்ந்து கவனிக்கப் பட்ட அனுபவங்கள் தன்னுள் மலிந்து கிடக்க வேண்டும். இவ்வாறு மலிந்தவை எவ்வளவுக் கெவ்வளவு துல்லியமாகவும் பிழையற்றும் இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவனுடைய படைப்பும் அவ்வளவு விறுவிறுப்பாக இருக்கும். பித்தர்கள் விசித்திரப் பாணியில் நம்ப முடியாதவைகளைப் பற்றிப் பேசுகிறார்கள். அதனால், அவர்களுக்கு நிறைந்த கற்பனை இருக்கிற தென்று நாம் கூறி விடுவதில்லை. எண்ணத்தின் துடிதுடிப்புக் குழப்பத்திற்கும் உருவகம் பொதிந்த கற்பனையின் சொல்வன்மைக் கும் பரந்த இடைவெளியிருக்கிறது. முதலில் புறப் பொருள் களின் உண்மையாகவும் துல்லியமாகவும் உள்ளுணரும் சக்தி அறவே இழந்தவர்களாக இருக்கின்றனர். அவர்களால் விவேகத் தைக்கொண்டு உறுப்புகளால் படைக்கச் சக்தியற்றவர்களாக இருக்கின்றனர். இரண்டாவதில் இரண்டும் பக்கம் பக்கம் ஒன்றோ டொன்று நெருங்கின உருவங்கள் போல் இணைந்திருக்கின்றன.

கற்பனைப் பேச்சின் மதிப்பு இவ்விரு நிபந்தனைகளைக் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. உபயோகிக்கப்படும் உருவங்கள் தனக்குச் சொந்தமானதாக இருக்கவேண்டும். கற்பனை செய்பவனே உண்மை யானதையும் கற்பித்ததையும் இணைக்க வேண்டும். அவைகளின் இணைப்பு நேர்மையாகவும் ஒத்திசை பெற்றதாகவும் இருக்கும் வகையில் இவனுடைய திறமையும் அதற்கு இணங்கியிருக்க வேண்டும். மாற்றாருடைய கற்பனைகளைச் சரிபடிவம் (copy) செய் தாலும் திரும்பக் கூறினாலும் அவன் எதையும் சாதிப்பதில்லை. ஆதலால், ஒவ்வொரு கலைஞனும் கூர்ந்து கவனிப்பவனாக இருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. விவேகத்தின் பொதுத் தன்மையைப் பற்றிப் பேசும்போது, கற்பனையை வளர்ப்பதற்கு ஒவ்வொருவரும் இயல்பான உண்மையுடன் நேரடித் தொடர்பு இருக்க வேண்டியது இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

கலையிலும் அவ்விதமே ஓவியன் தன் உருவத்தைக் கற்பனை செய்துகொள்கிறான். அவன் சரிபடிவம் ஆக்குவதில்லை. அவனே படைத்துக் கொள்கிறான். இந்தப் படைப்பும் மனத்தின் பல னாகும். அம் மனமும் மெய்யைக் கூர்ந்து கவனிப்பதில் வேரூன்றி யது. சூழ்நிலையில் காணப்படும் வண்ணத்தையும் வடிவத்தையும் எளிதில் கூர்ந்துணரும் பண்பு பெற்றவனாக இருக்க வேண்டும். மசிவியல்பு பெற்றவனாக (susceptibility) இருக்க வேண்டும். அவைகளின் இசைகளையும் வேறுபாடுகளையும் உணரவல்லவனாக

இருக்க வேண்டும். தன்னுடைய கூர்ந்துணரும் சக்தியை மேம் படுத்துவதாலே ஓவியன் தன்னை நிறைவுபடுத்திக் கொள்கிறான்; சீர்படுத்திக் கொள்கிறான். ஒப்பற்ற ஓவியத்தைப் படைக்கிறான். அழியாப் புகழ் பெற்ற கிரேக்கரின் கலை கூர்ந்து கவனிப்பதை அடிப் படையாகக் கொண்டது. அக் காலத்தில் மக்கள் உடல்மேல் நிறைந்த அளவு ஆடைகளைப் போர்த்தாதிருந்தது அன்றிருந்த நாகரிகம். அதனால் ஓவியர்கள் மனித உருவத்தைப்பற்றித் தங்கு தடையின்றிச் சிந்திக்க வாய்ப்புக் கிடைத்தது. அவனுடைய உணர்ச்சி வாய்ந்த கண்கள் எழில்நிறைந்த உடலையும் அதில்லாமல் நல்லிசைவு பெறாத உடலையும் கண்டுணர முடிந்தது. ஒரு மேதை யின் உள்தூண்டுதல் இதுவரை மனத்தின் புலன் சார்ந்த பண்ட சாலையில் தேர்ந்தெடுக்கப்பட்ட தனித்தனி அழகுகளைக் கொண்டு எடுத்துக்காட்டாகத் தனிச் சிறப்பு வாய்ந்த ஒப்பிலா உருவத்தைப் படைக்க முடிந்தது. பல வண்ணப்பட்டையில் பல வண்ணங்களை ஒட்டவைக்கிறோம். ஓவியன் படைக்கும் பொழுது பல வண்ணப் பட்டைபோல நிச்சயமாகச் செய்வதில்லை; முழுமைக்கு உரிய பகுதி ஒன்று தொகுத்துச் சித்திரவர்ண உருவம் படைப்பதில்லை (mosaic).[1] உள்ளகிளர்ச்சியின் ஆர்வ முனைப்பால் ஒரு புதுமையான முழு உருவத்தைக் காண்கிறான். அது அவனுடைய மேதைத் தன் மையினடியாகப் பிறக்கிறது. ஆனால், இதுவரை தன்னுள் சேர்த்து வைத்திருந்த பல சிறு துணுக்குகள் இதை ஊட்டி வளர்க்கப் பயனா கின்றன. தாய் வயிற்றில் வளரும் குழந்தைக்கு எவ்வாறு உதவு கிறதோ அதுபோல்.

ராஃபாயல், (Raphael) என்பர் இத்தாலிய ஓவிய மேதை *(1483-1520)*. 'டிராஸ்டிவரி' (Trastevere) என்பது ரோமாபுரியில் உள்ள மிகவும் அழகான பெண்மணிகள் கூடுமிடம். இயேசு நாதரின் தாயை ஓவியத்தில் வடிக்கத்தக்க உருவத்தைத் தேட 'ராஃபாயல்' அடிக்கடி அங்குப் போவதுண்டு. அங்கு ஃபோர்னரினா வும் (Fornarina) அவருடைய காட்சி மாதிரிகளையும் (Model) காண நேரிட்டது. ஆனால் அவர் மதோனா (Madonna—இயேசு நாதரின் தாய்) வைத் தீட்டும் பொழுது உருவெடுத்தது அவ ருடைய உள்ளத்தின் படிவம் ஆயிற்று. 'மைக்கலாஞ்சிலோ'[2] என்பவர் மாலைப் பொழுதெல்லாம் விண்ணை நோக்கியவாறே காலத்தைக் கழித்தார் என்று சொல்லபடுகிறது. 'எதை உற்றுப் பார்க்கிறீர்கள்?' என்று பிறர் கேட்டால், 'நான் ஒரு மாடக் கோவிலைக் காண்கிறேன்' என்று விடை பகர்ந்தார். இந்த உரு வத்தை அடிப்படையாக வைத்து,—அவ்வளவு அருமையாகத் தம் உள்ளத்தில் உருவாக்கியதைக் கொண்டு, உலகப்புகழ் பெற்ற

[1] மொஸே என்பவர் எழுதிய சித்திரவண்ண வடிவம்.

[2] **Michelangelo.**

செயின் பீட்டர் குவிமாடம் (Cupola of St. Peter's) ரோமாபுரியில் உருவெடுக்கப் பெற்றது. அவருடைய கட்டடக்கலை அதற்கு வேண்டிய பொருள்களை ஆயத்தமாக்கியிராதிருந்தால் மைக்கலாஞ்சிலோவின் மனத்திலும் இக் கோவில் பிறந்திருக்காது.

எந்த மேதையும் முழுக்க முழுக்கப் புதுமையாக எதையும் படைத்திருக்க முடியவில்லை. ஓவியத்தில் அதிகம் உபயோகிக்கப் படும் சில உருவங்களை நினைத்தால் போதும். தரையிலிருந்து மேலே கிளம்பக்கூடிய சில பளுவானதும் விசித்திரமானதுமான உருவங்களை மனிதனுக்குத் தோன்றிய கற்பனையை யொட்டிப் படைத்துக் கொண்டிருக்கின்றான். சிறகு படைத்த தேவதூதனின் உருவம் இன்னும் நிலைபெற்று வருவதை நினைக்கும் போது எனக்கு வியப்பூட்டுகிறது. இதை வேறு எந்த ஓவியனும் சீர்திருத்தி வேறொன்று அமைத்துக் கொள்ளவில்லை. மனிதனை விட இன்னும் அதிகமாகத் தெளிவான (diaphanous) உடல் சார்ந்த எடை இல்லாமலும் இருக்கும் ஒரு மனிதனைக் குறிக்க நமக்கு உறுதியான உடலைப் பெற்றவர்கள் தம் முதுகின்மேல் பரந்த இறக்கைகளைப் பெற்றதுடன் அவைகளின் மேல் அடர்ந்த சிறகுகளையும் கொண்டவர்களாய்க் காட்சியளிக்கின்றனர். ஒரே உயிரினத்தில் எண்ணு தற்கு அரிய வேறுபாடுகளை உடைய உரோமமும் சிறகுகளும் ஒருங்கே காணப்படுவது விந்தையிலும் விந்தையே! இது மனிதனுக்கு ஆறு உறுப்புகளை அளித்தது போலிருக்கிறது. கைகால்கள், இரு இறக்கைகள்; ஒரு பூச்சிக்கு இருப்பதுபோல் ஆறு உறுப்புகளாகின்றன. இந்த அற்புதக் கருத்து புற உருவம் பெறப் படைப்புப் பெற்றுவிட்டது. ஒரு கலைக் கருத்து என்கின்ற முறையில் அல்ல, நிச்சயமாக சொல் வறுமையினால் தேவதூதர்கள் பறப்பதாகப் பேசுகிறோம் அல்லவா? ஏனென்றால் நமது மொழி மனித இனமொழி; நம் மண்ணுலகத்துத்தன்மை பொருந்தியது. தேவ தூதர்களின் பண்பினை நம்மால் கற்பனை செய்ய இயலாது. கன்னி மரியாளிடம் தேவதூதன் வந்து இயேசு திருப்பிறப்பு உணர்த்திய காட்சியை (Annunciation) ஓவிய வடிவில் தீட்டும் பொழுது தேவ தூதனை ஜோதியாகவும், மென்மையாகவும் நிலையற்ற உருவமாகவும் காட்டியவர் மிகச்சிலர் என்று உறுதியாகக் கூற வேண்டும்.

உண்மைக்கு எவ்வளவு அணுகியிருக்கிறதோ (approximate) அவ்வளவுக்கு ஓவியமும் முழுநிறைவு பெற்றிருக்கும்.

விருந்தினரை வரவேற்கும் அறையில் யாராவது ஒருவர் நம்மைப் பாராட்டினால், அப் பாராட்டு உண்மையாக நம்மிடமுள்ள நற்பண்புகளில் ஒன்றினை அடிப்படையாகக் கொண்டு அதைத் தொடுவதாயின் நாம் சரியான மனநிறைவுடை

கிறோம். ஏனென்றால், நம்மைப்பற்றிக் கூறியது பொருத்த மானது. அவர் நம்மைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறார். நம்மை மனமாரப் புகழ்கிறார் என்றும் முடிவு கட்டலாம். அக் காரணத்தால் அவரை நினைத்துக் கொள்கிறோம். அவர் சூட்சும மானவர்; விவேகம் படைத்தவர். அவருடைய தோழமைக்கு நாமும் கொண்டு கொடுப்புப் பாங்கினைக் (reciprocate) காட்ட நினைக்கிறோம். ஆனால், நம்மிடமில்லாத பண்புகள் புகழப் பட்டால் அல்லது நம்முடைய மெய்ப் பண்புகளைத் திருத்தியோ, மிகைபடச் செய்தாரேயானால் நாம் வெறுப்புடன் எண்ணுகிறோம். 'என்ன பண்பு நய மற்றவர்!' என்கிறோம். இதற்கு முன் அவரைப் பற்றி நினைத்து வந்ததைவிட இன்னும் பாசமற்ற முறையில் கொள்ள எண்ணுகிறோம்.

தாந்தேயினுடைய ஈரேழ் வரிப்பாட்டின் விழுமிய நடை, பியாட்ரிஸ் (Beatrice) என்ற துறவியின் நெஞ்சை ஆழமாகவும் உறுதியாகவும் தொட்டிருக்க வேண்டும்.

வழியும் வணக்கம் தெரிவிக்கும் பொழுது
என்னுடைய சீமாட்டி என்ன சாந்தமாகவும்
என்ன தூய்மையாகவும் இருக்கிறாள்!
நாக்கு நடுக்குறுகிறது. சொல்வதற்கேதுமில்லை.
மகிழ்ச்சியுடன் காண்கின்ற கண்கள் தாங்காதிருக்கலாம்.
எனினும் அவள் கேட்கும் புகழ் மாலைக்கிடையே கவலையற்று
அடக்கத்துடன் நடக்கிறாள். அவளுடைய அணிவகுப்புக்கு
மோட்ச லோகத்திலிருந்து அனுப்பப்பட்ட உயிரினம் போல
உலகத்தில் நின்று நிச்சயமான ஒரு மாயை நிலை பெறச்
[செய்வது போல்,
மனிதர் கண்களுக்கு எவ்வளவு இன்பக் காட்சி அளிக்கிறாள்!
கண்ணால் கண்டதுமே இருதயத்தின் ஆழத்தில்
ஓர் இனிமை தோன்றுகிறது. இதற்குச் சான்று வேறெதுவும்
[வேண்டா.
அவளுடைய உதடுகளுக்கிடையில் இருந்து அன்பு நிறைந்த
ஆறுதலின் சாரம் இயங்குகிறது. ஆன்மாவுக்கு என்றும்
சொல்லிக் கொண்டிருக்கிறது—' நெடுமூச்செறி.'[1]

இந்த மற்றொரு ஈரேழ்வரிப்பாடல் தன்மானமும் மென்மையு மான பெண் உள்ளம் படைத்த துறவியிடம் வேறு வகையான பதிவுகள் ஏற்பட்டிருக்க வேண்டும். இந்தப் பாடலில் பொருத்தம் இல்லாததும் மிகைபடக் கூறப்படும் உருவ அலங்காரங்களும்

[1] Rossetti's translation, Dante's Vita nuova, XXVI.

நிறைந்திருப்பதால் அது முரடாகவும் சொற் பகட்டு உடையதாக வும் இருந்தது.

உன் வழிப்போக்கில் உனக்கு வணக்கம் தெரிவிக்கிறவனுக்கு
உன்னுடைய வணக்கமும், உன்னுடைய கடைக்கண்
நோக்கும் சாவினை அளிக்கிறது.
என்னுடைய எதிரியை நேசி, என் கதியைக் கருதாதே.
அவன் ஆறுதல் அளித்தால் கொள்ளும் கவலை ஒன்றுமில்லை.
குறித்த இடத்திற்கே அவனுடைய அம்பு நேராய்ப் பாய்ந்தது.
என்னுடைய இதயத்தில் பாய்ந்து இரண்டாகப் பிளந்தது.
சாவை நேருக்கு நேர் காண்பவனைப்போல் நான் இருந்தேன்.
வார்த்தை ஒன்றும் பேசவில்லை—அவ்வளவு பெரியதாய்
இருந்தது என்னுடைய வேகும்புண்.
உயர்ந்த கோபுரத்தின் சாளரத்தினூடே
வெடிகுண்டு பாய்ந்து உள்ளிருப்பவர்களனைவரையும் அழிப் [பதுபோல்,
அம்பும் என் கண்ணுக்குள் பாய்ந்தது.
வாழ்வும் சக்தியும் இழந்த அந்த நேரத்தில்
மனிதத்தைப் போல் நையாண்டி செய்யும்
பித்தனை மனிதனைப் போல் அங்கு நின்றேன்.[1]

கற்பனையின் மெய்யான அடிப்படை உண்மையானால், அவை களைப்பற்றி உட்பதிவு கொள்ளல் கூர்ந்து கவனித்தலின் துல்லியத் துடன் (exactness) தொடர்பு கொண்டிருந்தால், குழந்தைகளின் சூழ்நிலையில் காணப்படுபவைகளை உற்றுணரும் வகையில் அவர்கள் ஆயத்தம் ஆக்கப்பட வேண்டியது இன்றியமையாதது. ஏனென் றால், அவர்களுடைய கற்பனைக்குத் தேவைப்படும் பொருள்களை அனுபவங்களைக் கூட்டி வைக்க. குறிப்பிட்ட தெளிவான வரம்புக்குள் வாதமிடுதலும் (விவேகத்தின் பயிற்சிகளும்) ஒன்றிலி ருந்து மற்றொன்றின் வேறு பாட்டினைக் கண்டறிதலும் ஆகியவை கற்பனைக் கட்டடத்துக்கென ஒரு 'சிமென்ட்' காரையை ஆயத்தம் செய்கிறது. ஏனென்றால், இவை எவ்வளவுக்கெவ்வளவு இன்னும் அழகாகவும் நெருங்கியும் ஒருருவாக இணைக்கப்படுகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு தனிப்பட்ட படிவங்களின் இணைப்பில் அதிக நியாயம் பெற்றவையாய் இருக்கும். மிகைப்படுத்தியும், நயமற்ற போக்கில் புதிதாகக் கற்பனை செய்கின்ற குழந்தையை நல்ல வழியில் கொண்டு விடுவதில்லை.

உண்மையான ஆயத்தம் என்பது பாத்திகளைத் தோண்டுவ தும், அவ்வாறு தோண்டும் பொழுது விவேகத்தின் படைப்பால்

[1] GuiniZelli,

பொங்கி எழுகின்ற தண்ணீரும் ஆகும். அந்தப் பொங்குதலும் புன்னகையும் கம்பீரமும் பெற்ற நதிகள் போலும் ஆகும். ஆனால், அது அந்தரங்க ஒழுங்கமைப்பை அழித்து விடாத அளவுக்குப் பெருக்கெடுக்காமலும் இருக்கும்.

அந்தரங்கத்திலிருந்து பெருக்கெடுக்கும் படைப்பாகிய ஊற்று களைத் தோற்றுவிப்பதென்ற விஷயத்தில் நாம் சக்தியற்றவர்களாக இருக்கிறோம். தானாக வெடித்து வரும் ஒரு வினையாற்றலை எக் காரணம் பற்றியும் குறுக்கிடாதிருப்பதும், கண்ணுக்கும் தெரியாத ஏதோ துளித்துளியாக வடியும் ஊற்றாயிருந்தாலும் அதை அடைக் காதிருப்பதுமே நம்முடைய வேலையாகும்.' 'ஒரு விவேகத்தைப் படைத்து விடுவோமென்'று ஏன் நாமே நம்மை ஏமாற்றிக் கொள்ள வேண்டும்? 'கூர்ந்து கவனித்துப் பொறுத்துப் பார்ப் பதைத் தவிர' நம்மால் வேறென்ன செய்ய முடியும்? தரையி லிருந்து துளிர்த்து முட்டிக் கொண்டு தலை நீட்டும் புல்லையும், தன்னைத்தானே பிளந்து கொண்டு இனம் பெருக்கிக் கொள்ளும் கிருமியையும் நாம் கூர்ந்து கவனித்துக் காத்திராமல் அப் பணியை நாம் உந்திவிட முடியுமா? இவ்வாறே குழந்தையிடமும் கற்பனை என்பதைப் பற்றிச் சிந்திக்கற்பாலது.

சோதி நிறைந்த ஒரு மாளிகை எங்ஙனம் தோன்றுகிறது? அதனுடைய அடித்தளம் ஆழ்ந்த இருளில் உறுதியாகப் புதைந் திருக்கிறது. மேற்காணும் பகுதி சோதி மயமானது, கட்புல னுக்கு எட்டியது. அதுபோலப் படைக்கும் கற்பனையும் மணல் வீடு போலும், மாயை போலும், தவறுதலாகவும் இராமல் இருந்து விவேகம் அழியாமல் இருக்க வேண்டுமானால், 'பாதத் தைப் புதை மணல்மேல் வைக்காமல் கெட்டியான தரைமேல் வைப்பதாகும்.'

குழந்தைகளில் **கற்பனை**.—குழந்தைகளிடம் தெளிவான கற்பனை உண்டு என்பது பொதுவாக எல்லோரும் கொண்ட நம்பிக் கையாகும். ஆதலால், இயற்கையால் அளிக்கப்பட்ட இந்தத் தனிப் பேற்றினை வளர்க்கத்தக்க கல்வி ஒன்றினை அமைத்துக் கொள்ள வேண்டும்.

குழந்தையினுடைய மனப்பாங்கு நம்முடையதைப் போன்ற தன்று; நம்முடையது திட்டவட்டமான வரம்புக்குள் அடங்கியது. அவன் இவ் வரம்பைக் கடக்கிறான். மாய உலகத்தில் அலைந்து திரிய ஆசைப்படுகிறான். இந்தப் பண்பு நாகரிகமற்ற மக்களிடை யேயும் காணப்படுகிறது.

குழந்தைத் தனமான சிறப்பியல்களைக் கண்டு பொது மக்களிடம் ஓர் உலோகாயதி சார்ந்த (Materialistic) கருத்து பரவப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அது மதிப்பிழந்து விட்டது. அது என்ன? 'தனி உயிர் வளரும் பொழுது அவ் வளர்ச்சியில் தன் இன வளர்ச்சியையே காட்டி விடுகிறது' என்ற கொள்கை (Ontogenesis sums up philogenesis). மனிதனுடைய வாழ்வு மனித நாகரிகத்தையே நடித்துக் காட்டி விடுவதுபோல் குழந்தைகளிடமும் காட்டு மிராண்டிகளிடமும் காணப்படும் சிறப்பியல்கள் காணப்படுகின்றன. ஆதலால் குழந்தையின் கவர்ச்சியும் அற்புதமானதும், மனிதனுக்கப்பாற்பட்டதும், பொய்யுமானதுமானவைகளிடம் ஈர்க்கப்படுகிறது.

இவைபோன்ற விஞ்ஞான மாயப் பறத்தலில் நம் மனத்தைச் செல்ல விடாமல், இம்மாதிரி எளிய முறையில் கருத்தை வெளியிடலாமே? குழந்தையைப் போல் இன்னும் முதிர்ச்சி அடையாத ஓர் உயிரினம், நம்முடைய மனப்பாங்கின் முதிர்ச்சியைவிடக் கம்மியாகவும், காட்டு மிராண்டிகளுடைய மனம்போலும் ஒத்திருக்கிறார்கள் என்று கூறி விடலாம். சிலர் குழந்தையின் போக்கைக் காட்டு மிராண்டிகளின் போக்கென விளக்குகின்றனர். இவர்களுடைய விளக்கத்தை நாம் குறுக்கிடாமலிருந்த போதிலும் இந்தக் காட்டுமிராண்டித் தனமும் நிலையற்றது என்றும் அதற்குப் பதிலாக மற்றொன்று தோன்ற வேண்டுமென்றும் கருதுகிறோம். காட்டுமிராண்டித் தனத்தைக் குழந்தை மீறும் வகையில் (கல்வியும்) உதவி புரிய வேண்டும். காட்டுமிராண்டித்தனத்தை வளர்க்க உதவி புரியவோ அல்லது அந்நிலையிலேயே நீடித்திருக்கவோ செய்யக் கூடாது.

குழந்தையிடத்தில் நாம் காணும் அரைகுறை வளர்ச்சி ஒவ்வொன்றும் காட்டுமிராண்டியிடம் காணப்படும் சிறப்பியல்களுக்கு ஒக்கும். எடுத்துக்காட்டாக மொழியில் தன் உள்ளக் கருத்தைத் தெளிவாக எடுத்துக்கூற முடியாத வறுமை, உருவச் சொற்கள் (Concrete forms), புலனால் உணரக்கூடிய பொருள்களைக் குறிக்கும் பதங்கள்—ஒரே சொல் பல நோக்கங்களுக்கும் பயன்படுவதுடன் பல பொருள்களைக் குறிப்பதற்கும் பயன்படுமாறு பொது விதி ஆக்குதல் வினைச் சொற்களில் சொல் உருமாறுபாடு (inflection)கள் இல்லாமையால் குழந்தை வினைப் பொது நிலையையே (infinitive)[1] கையாளுதல் போல்வன ஆகும். இக்காரணத்தால் குழந்தை தன்னுடைய முற்கால மக்களைப்போல் காட்டுமிராண்டி காலத்தில் நீடித்திருக்கவோ அல்லது அக்

[1] **வினைக் கருத்தினை எழுவாய்க்குப் பயனிலை ஆக்காமல் காட்டும் வினை வடிவம்—செயவெனும் எச்ச வடிவம்.**

காலத்தை நீடித்து நடித்துக்காட்டும் வகையில் அவனுடைய மொழி வளர்ச்சியைப் பண்டையர் மொழி அளவில் இருக்கக் கட்டுப் படுத்தவோ வேண்டும் என்று எவரும் கூறமாட்டார்கள்.

பொய்க்காட்சிகளே மலிந்து கிடக்கும் பொருள் பற்றிய கற்பனை உலகில் சிலர் என்றும் கிடக்க நம் குழந்தைகள் என்ன செய்கிறார்கள்? அதற்கு மாறாக அவர்கள் வேறுவகை மக்கள் இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றார்கள். அவர்களுடைய மனக்களிப்பெல்லாம் பெரிய கலைகளிலும், நாகரிக விஞ்ஞானப் படைப்புகளிலும் உயர்ந்த மனக்கற்பனையால் உண்டாக்கப்பட்ட பொருள்களின் மேலும் செல்கிறது. இந்த உயர்ந்த கற்பனை என்பது நம்முடைய குழந்தைகளின் விவேகம் வளம்பெற வளர்வதற்கென்றே அமைந்திருக்கிறது. மங்கலான பனிபடர்ந்தாற் போலிருக்கும் குழந்தையின் மனப்பருவம் போலி மாயக் கருத்துகளைக் கொண்டு கவரப்படுவது இயற்கையே. ஆனால், அவன் நம் வாழ்வை நம் சாதனைகளைத் தொடர்ந்து நடத்தப் போகிறவன் என்பதை நாம் மறந்திடலாகாது. அக் காரணத்தால் அவன் நம்மிலும் மேம்பட்டவனாக வேண்டும். அதற்காகக் குறைந்த பட்சம் நம்மால் இயன்றளவு அதிகப்படியான உதவி புரியவேண்டும்.

குழந்தைகள் சில பொருள்களில் காணப்படாத நற்பண்புகள் அப் பொருள்களுக்கு இருப்பதாகக் கற்பனை செய்துகொள்கிறார்கள். வேறு ஒரு தூண்டுதலும் இல்லாமல் இவ்வாறு கற்பனை செய்துகொள்வது குழந்தையின் மனமே ஆகும். அவ்வாறு செய்துகொள்வது குழந்தைமையின் பொருத்தமான கற்பனைப் படைப்புக்கு நல்லதே என்று உலகு எங்கும் நம்பப்படுகிறது.

தந்தையின் கைத்தடியை எடுத்துக் கொண்டு குதிரையெனக் கற்பனை செய்துகொண்டு சவாரி செய்வதுபோலும், சவுக்கால் அடிப்பதாகவும் கற்பனை செய்துகொள்ளும் குழந்தையை யார் தான் பார்த்திருக்க மாட்டார்கள்? குழந்தையின் கற்பனைக்கு இங்கு ஒரு சான்று காண்கிறோம். நாற்காலிகளையும் கையுடைய நாற்காலிகளையும் வைத்துக்கொண்டு என்ன நேர்த்தியான கோச்சுவண்டி அமைத்து விடுகிறார்கள்! என்ன இன்பம் பெறுகிறார்கள்! ஒரு சிலர் வண்டிக்குள் உட்கார்ந்து கொண்டு சன்னல் வழியாக எட்டி எட்டிக் கற்பனையான நிலக்காட்சியைக் காண்கிறார்கள். சிலர் கைதட்டியும் கூட்டத்துக்கு வணக்கம் தெரிவிக்கிறார்கள். சிலர் நாற்காலியின் முதுகின்மேல் உட்கார்ந்து கொண்டு காற்றில் குதிரைகளை அடிப்பதுபோல் கையாட்டுகிறார்கள். மேலே குறிப்பிட்டது கற்பனைக்கு மற்றோர் சான்று.

செல்வாக்குடைய குழந்தைகளைச் சற்றுக் கவனிப்போம். அவர்களுக்கு அடக்கமான மட்டக் குதிரைகள் உண்டு. வழக்க மாகக் கோச்சு வண்டிகளிலும் மோட்டார் வண்டிகளிலும் போவார்கள். ஒரு கோலை வைத்துக்கொண்டு குரடாவால் ஓங்கி ஓங்கி ஆவேசத்துடன் அடித்துக்கொண்டிருக்கும் குழந்தையைப் பார்த்துச் செல்வந்தக் குழந்தைகள் மதிக்காமல் மட்டமாகவே நினைத்து விடுகிறார்கள். இயங்காத நாற்காலிகளில் ஏறிச்செல்வ தாகக் கற்பனை செய்து இன்புறும் குழந்தைகளைக் கண்டு அவர்கள் வியப்படைகிறார்கள். அம்மாதிரிக் குழந்தைகளைப் பார்த்துச் செல்வந்தர் குழந்தைகள் என்ன சொல்கிறார்கள்? ‘அவர்கள் ஏழைகள். அவர்களுக்குக் குதிரைகளுமில்லை, வண்டிக் காரரும் இல்லை. அதனால்தான் அவர்கள் அவ்வாறு நடந்து கொள்கிறார்கள்.’ முதிர்ந்தோன் தன் நிலைக்குப் பின் வாங்கிக் கொள்கிறான்; குழந்தை ஒரு மாயையைக் கற்பித்துக் கொள் கிறது. இது கற்பனைக்குச் சான்று அன்று; மனநிறைவு பெறாத ஆசையைக் குறிக்கிறது. இயற்கையால் அளிக்கப்பட்ட அளிப் புடன் இணைக்கப்பட்ட வினையாற்றலன்று. தெளிஉணர்நிலை சார்ந்த உணர்ச்சி வறுமை (sensitive poverty) யின் வெளிக்காட்டு தலாகும். பணக்கார குழந்தையைக் கற்பிக்க வேண்டுமானால் அவனுடைய மட்டக் குதிரையை விலக்கிவிட்டு ஒரு கோலை அவனி டம் ஒப்படைக்க வேண்டும் என்று எவரும் கூறமாட்டார்கள் என்பது உறுதி, அல்லது ஏழைக் குழந்தை தன் கோலைக் கொண்டு மனநிறைவு பெறுவதைத் தடுக்க வேண்டும் என்பதும் அவசிய மில்லை. ஓர் ஏழை பிச்சையெடுத்து வயிறு வளர்ப்பவன். உண் பதற்கு வறண்ட ரொட்டியைத் தவிர வேறொன்றுமில்லை. அடித் தளத்தில் சமையலறை கட்டியிருக்கிறான் பணக்காரன். அத னின்று மணமோடு கூடிய அறுசுவை உண்டியின் மணம் எட்டு கிறது. ஏழையின் நாசிக்குத் தன்னுடைய ரொட்டியுடன் நேர்த்தி யான தின்பண்டங்களையும் சேர்த்து உண்பதாகக் கற்பனை செய்து கொள்கிறான். இவனை யாரால் தடுக்க முடியும்? அந்த அறுசுவை உண்டியெல்லாம் அந்த பாக்கியஞ் செய்தவர்களுக்கே என்று ஆனவை. அந்த பாக்கியவான்களின் கற்பனைச் செயலாற்றல் வளர்வதற்கு அவர்களுடைய சுவைப் பொருள்களை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக அதன் நறுமணமும் ரொட்டியும் கொடுத்தால் போதும் என்று எவரும் கூற முன்வரமாட்டார்கள்.

ஓர் ஏழைத்தாய்; தன் குழந்தையிடம் மட்டற்ற அன்பு கொண்டவள். அக் குழந்தைக்குப் பசியாற அவளிடம் இருந்தது அந்த ரொட்டி ஒன்றே; வேறெதுவும் அவளிடமில்லை. அந்த ரொட்டியை இரண்டாக்கினாள். ‘இது ரொட்டி; இது இறைச்சி’ என்று தொடர்ந்து சொல்லிக்கொண்டு கொடுத்தாள்.

குழந்தையின் கற்பனையை வளர்க்க எந்தத் தாயும் 'குழந்தைக்கு உண்டியைக் கொடுக்க மறுக்கமாட்டாள்.

ஒரு குழந்தை எப்பொழுது பார்த்தாலும் மேசைமேல் தன் விரல்களை அழுத்தி அழுத்தி பியானோ வாசிப்பதுபோல் கற்பனை பண்ணிக் கொண்டிருப்பான். அக் குழந்தைக்குப் பயிற்சி செய்ய பியானோ கொடுக்கலாமா ? அது அபாயம் விளைவிக்குமா ? என்று என்னை ஒருவர் கேட்டார், 'ஏன் அபாயம் விளைவிக்க வேண்டும் ?' என்று நான் திருப்பிக் கேட்டேன். 'ஏனென்றால் நான் பியானோவைக் கொடுத்தால் அவன் இசை கற்றுக் கொள்வான். உண்மை. ஆனால், அவனுடைய கற்பனை இனிமேல் பயிற்சி பெறாது போய் விடும். அவனுக்கு எது சாலச் சிறந்ததென்று எனக்கே புரியவில்லை' என்றார்.

ஃப்ரோபெல்லி (Froebel) னுடைய சில விளையாட்டுகள் இந்த நம்பிக்கையைக் கொண்ட அடிப்படையில் அமைந்திருக்கின்றன. மரக்கட்டைக் ஒன்றைக் குழந்தை கையில் கொடுத்து 'இது ஒரு குதிரை' என்கிறார் ஆசிரியர். பிறகு மரக்கட்டைகள் ஒரு வகை ஒழுங்கில் அடுக்கப்படுகின்றன. 'இது ஒரு குதிரை லாயம் (கொட்டடி). இப்பொழுது குதிரையைத் தொழுவத்தில் விடுவோம்' என்கிறார். ஆசிரியர். பெரியவர்—ஆசிரியர் கட்டைகளை வேறு விதமாக அடுக்குகிறார். அக் குழந்தைக்கு'க் கூறுகிறார்: 'இது ஒரு கோபுரம்; இது கிராம மாதா கோவில்' என்கிறார். அப்படியே இன்னும் பல. இத்தகைய பயிற்சிகளில் பொருள்கள் (கட்டைகள்) குதிரை என உபயோகிக்கப்பட்ட கோலைப்போல் கற்பனை செய்துகொள்ள அவ்வளவு இடம் தருவதில்லை. குழந்தை தன் குதிரை மீது தாவி ஏறி இரு கால்களுக்குகிடையே வைத்துக் கொண்டு எட்டி நடக்கமுடியும்; அடிக்க முடியும். இத்தனையும் ஓடிக் கொண்டே செய்யமுடியும். கோபுரங்களையும் மாதா கோவில்களையும் கட்டுவதுடன் குதிரைகளையும் உருவாக்கும் பொழுது குழந்தையின் மனத்துக்குள் ஏற்படும் குழப்பம் உச்சநிலை அடைந்துவிடுகிறது. மேலும், இந்த நிகழ்ச்சியில் பிற தூண்டுதலின்றித் தானாகக் கற்பனை செய்துகொள்வதும் தன் மூளையை வினையாற்றச் செய்வதும் குழந்தை அன்று. ஏனென்றால் அந்த வேளையில் ஆசிரியர் கூறிக்கொண்டு வருவதையே குழந்தை ஆழ்ந்து சிந்தித்து வர வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறான். குதிரை லாயமே மாதா கோவிலாக மாறிவிட்டதாகக் குழந்தை மெய்யாக நம்புகிறானா அல்லது அவனுடைய கவனம் எல்லாம் வேறெங்காவது அலைந்து திரிந்ததா என்பதைத் கண்டறிவது அரிது. அவனுக்கு இயங்கவேண்டும் என்ற ஆசைதான். ஆனால் அவனால் இயலாது. முன்னெல்லாம் ஓடும் படம் ஓட ஓட ஒருவன் நிகழ்ச்சி

யைப் பற்றி மற்றவர் கேட்கும் வகையில் தொடர்ந்து சொல்லிக் கொண்டே போவான் (இது பேசும் படம் தோன்றுவதற்கு முன்). இங்கு நடைபெறுவதும் அத்தகையதே. ஆசிரியர் சொல்லிக் கொண்டே போகும் பொழுது குழந்தை அதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டே வரவேண்டும். ஆசிரியர் தொடர்ந்து படிவங்களைச் சொல்லிக்கொண்டே போகிறார். ஆனால், இவை அனைத்தும் மரக் கட்டைகளாகத் தனித் தனியாக இருக்கின்றன. எல்லாக் கட்டை களும் ஒரே அளவுள்ளவை!

இந்த முதிரா மனங்களில் என்ன வளர்க்கப்படுகிறது. இத் தகைய கல்வி முறையால் மனம் இவ்வாறு குறிப்பிட்ட வகையில் உருவாக்கப்படுகிறது என்று புரிந்து கொள்வதற்கு இது போன் றவை என்ன முதிர்ந்தோர் உலகில் காண்கிறோம். ஒரு மரத்தை அரியாசனமாக எண்ணிக் கொண்டு அரசு கட்டளைகளை விடுப் பவர்கள் இருக்கின்றனர். போலிப் புலன்காட்சிகளால் (false perceptions) சிலர் தங்களை இறைவன் என்றே கருதுகின்றனர்; அல்லது இதை விட அச்சம் தரும் வகையானது 'மருட்சி' அல்லது போலி எண்ணங்கள் (illusions) பொய்யான வாதத்துக்குத் தொடக்கமும், உடன் இயங்குகிற(concomitant) 'சன்னி' அல்லது வெறிப்பிதற்றலான மூளைக் கோளாறும் ஆம். பித்தர்களால் எதையும் படைக்க இயலாது. அதேபோல் இயங்காத கல்விக்குள் ஆழ்த்தப்பட்ட, தண்டிக்கப்பட்ட, குழந்தைகளாலும் ஒன்றும் படைக்க இயலாது. அக் கல்வி குழந்தைகளின் மனநிறைவு பெறாத ஆசைகளின் களங்கமற்ற தோற்றங்களை மனப்பிணியாக வளப்பதால் அவர்களுக்கும் பிறருக்கும் பயன்தரும் எப் பொருளை யும் படைக்கச் சக்தியற்றவர்களாய் இருக்கின்றனர்.

நம்பத்தகாத மாயப் பொருள்களை மெய் என்று குழந்தைகளை ஏற்றுக்கொள்ள வைப்பதால் அவர்களுடைய கற்பனையை வளர வைக்கிறோம் என்று நாம் ஏதோ கருதிக் கொள்கிறோம். எடுத்துக் காட்டாக இலத்தீன் நாடுகளில் கிருஸ்துமஸ் ஒரு விகாரப் பெண்ணாக உருவகப்படுத்தப் படுகிறது. அவள் பீஃபானா (Befana) என்பவள். அவள் சுவர்களின் வழியாகவும் புகைக் கூண்டிலிருந்தும் கீழிறங்கி வருவதாகவும், நல்ல குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொம்மைகளையும், கெட்ட குழந்தைகளுக்கு நிலக்கரிக் கட்டிகளையும் விட்டுப்போவாள் என்று கற்பனை செய்யப் பட்டு வருகிறது. ஆனால், இதற்கு மாறாக ஆங்கிலோ சாக்ஸன் நாடுகளில் கிருஸ்துமஸ் ஒரு கிழவனாகவும் பனி பூசப்பட்டவனாக வும், குழந்தைகளுக்காகக் கூடை நிறையப் பொம்மைகளைத் தூக்கிக் கொண்டு இரவில் வீட்டுக்குள் நுழைகிறவனாகவும் கற்பனை செய்யப்பட்டு வருகிறது. நம்முடைய கற்பனையால் வரும் பயனைக்

கொண்டு குழந்தைகளின் கற்பனை எங்ஙனம் வளர்ச்சி பெறும்? கற்பனை செய்து கொள்வது நாமே; குழந்தைகளன்று. தாங்கள் கற்பனை செய்யவில்லை என்று அவர்கள் நம்புகிறார்கள். ஏமாளித் தனம் (credulity)—எதையும் எளிதில் நம்பும் தன்மை—முதிர்ச்சி அடையாத மனத்தின் சிறப்பியல்பு என்பது உறுதி. அத்தகைய மனத்துக்கு உண்மையின் அனுபவமோ அது பற்றிய அறிவோ கிடையாத குறை உண்டு. பொய்ம்மையிலிருந்து மெய்ம்மையை யும், விகாரத்திலிருந்து அழகினையும் இயலுவதைப் பிரித் தெடுக்கும் விவேகத்தைக் குழந்தைகள் பெற்றாரில்லை.

அப்படியானால் நம் குழந்தைகளிடம் ஏமாளித் தனத்தையா வளர்க்க விரும்புகிறோம்? ஏனென்றால், அந்த வயதில் அவர்கள் இயல்பாக அறியாமலும் முதிராமலும் இருக்கின்றார்கள். முதிர்ந் தோர்களிடமும் ஏமாளித்தனம் இருக்கலாம்; உண்மை. ஆனால், அது விவேகத்துடன் வேறுபட்ட முறையில் இருக்கிறது. அது (ஏமாளித்தனம்) அதனுடைய அடித்தளமும் அன்று; அதன் பலனும் அன்று. விவேக இருளில்தான் ஏமாளித்தனம் முளைவிடு கிறது. இந்தப் பருவங்களைத் தாண்டி விட்டோம் என்று நாம் பெருமைப்படுகிறோம். ஏமாளித்தனத்தைக் காட்டுமிராண்டியின் அடையாளம் எனப் பேசுகிறோம்.

இதோ பதினேழாம் நூற்றாண்டில் நடைபெற்ற காரசாரமான வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்பு ஒன்று. பாரிஸ் நகரில் பான்ட் நியூஃப் (The Pont Neuf in Paris) என்பது கால் நடைக்காரர்க்கு நெடும் பாதையாகவும் மெல்லுலாக்காரர்க்கு இளைப்பாறும் இட மாகவும் அமைந்திருந்தது. நாடோடிப் போலி மருத்துவர்களும் பகடிகளும் பொதுமக்கள் கூட்டத்தில் கலந்து திரிந்து வந்தார்கள். அவர்களில் ஒரு பகடி ஏராளமான பணம் சம்பாதித்து வந்தான். 'சீனாவிலிருந்து வந்த மருந்து' என்று சொல்லி, ஒரு மருந்தை விற்று வந்தான். அம் மருந்து கண்களைப் பெரிதாக்கும் என்றும் வாயின் அளவைக் குறைக்கும் என்றும், குட்டை மூக்கை நீட்டி விடும் என்றும், நீண்ட மூக்கைக் குறுக்கி விடும் என்றும் எடுத்துக் கூறினான். 'தி சார்ட்டைன்' (De Sartine) என்ற போலீஸ் உயர் தலைவர் அங்கே வந்தார். அவனைக் கைதி ஆக்குவதற்கு முன் கேட்டார்.

'மாரியாலோ, நீ எப்படி இவ்வளவு பேரையும் ஈர்க்கின்றாய்? எப்படி இவ்வளவு தொகையையும் சம்பாதித்துக் கொள்கிறாய்?' என்று அதிகாரி கேட்டார்.

அதற்கு அந்தப் பகடி, ஐயா!, ஒரு நாளில் எத்தனை பேர் இந்தப் பாலத்தைக் கடப்பார்கள் என்று நினைக்கிறீர்களென்று அதிகாரியைக் கேட்டான்.

தி சார்ட்டைன் அதற்கு, 'பத்து அல்லது பன்னிரண்டாயிரம்' என்று விடை அளித்தார்.

இதைக் கேட்ட பகடி, 'சரி ஐயா அவர்களில் எத்தனை பேர் விவேகிகள் இருப்பார்கள்' என்று நினைக்கிறீர்கள்' என்று மறுபடியும் கேட்டான்.

ஒரு நூறு என்றார் காவலரின் தலைவர்.

பகடி இதைக் கேட்டதும், 'அந்த மதிப்பீடு தாராளமான சலுகை. அதை அத்துடன் விட்டு விடுவோம். எஞ்சிய ஒன்பதாயிரத்துத் தொள்ளாயிரம் பேரிடமே என்னுடைய வாழ்க்கையை நடத்த நம்பி இருக்கிறேன்' என்றான்.

அந்தக் காலத்துக்கும் நம் காலத்துக்கும் நிலைமை எவ்வளவோ மாறிவிட்டிருக்கிறது. இப்பொழுது விவேகிகள் அதிகமாகி இருக்கின்றனர். ஏமாளிகள் குறைந்து விட்டனர். கல்வி ஏமாளிகள் பால் திரும்பாமல் விவேகிகளிடம் திரும்ப வேண்டும். ஏமாளித் தனத்தைத் தழுவி நடக்கும் கல்வி மணலின்மேல் கட்டப்பட்டது போல் ஆகும். எனக்கு ஒரு நிகழ்ச்சி தெரியும். நம் சமுதாயத்தில் ஆயிரம் ஆயிரம் முறை இவ்வாறு நடந்திருக்கலாம். இரண்டு மன்னர் குலப் பெண்கள் இருந்தார்கள். அவர்கள் கன்னிமார் (கான்வெண்ட்) பள்ளிக்கூடத்தில் படித்து வந்தார்கள். தீயவழியில் செல்லாதிருக்கவும், இடம்பவாழ்க்கை நடத்தாதிருக்கவும் அவர்கள் காக்கப்படுவர் என்று அங்கு விடப்பட்டிருந்தினர். ஆனால், அவர்கள் விதி அங்கேயே இழுத்துச் சென்றது. உலகம் முழுவதும் ஏமாற்றும் கபடர்கள் நிறைந்த தென்றும் அவர்களைக் கன்னிமார் நம்ப வைத்தனர். நம்மை மற்றவர்கள் புகழும் பொழுது அவர்களுக்குத் தெரியாமல் ஒளிந்து கேட்டோமானல் அது தீவிர கண்டனம் ஆகும். அவர்களுக்கு வயது வந்தது—சமூகத்துக்கு அவர்களை அறிமுகப்படுத்தி வைக்க வேண்டிய வயது—தாய் பல விருந்தினரை அழைத்திருந்தாள். அது ஒரு மாலை நேர வரவேற்பு நாள். இரண்டு வயதுவந்த இளவரசிகளும் அன்று தான் முதல் முதலாக மற்றவர்களுடன் அளவளாகப் போகின்றனர். இந்த இரு அழகிய பெண்களைப்பற்றி அளவுகடந்த புகழைப் பொழிந்தார்கள் விருந்தினர். விருந்தை வரவேற்கும் அறையில் ஒதுப்புறம் ஒன்று பெரிய திரைச்சீலையால் மறைக்கப்பட்டிருந்தது. அவர்கள் சென்ற பிறகு விருந்தினர் இனி அவர்களைப்பற்றி எவ்வாறு பேசிக் கொள்வார்கள் என்று அறிய ஆவல் கொண்டார்கள். இருவரும் ஒருவருக்கும் தெரியாமல் நழுவிக்கொண்டு திரைக்குபின் மறைந்து கொண்டனர். பொதுவாகக் கூடியிருந்த

வர்களின் மனத்தைக் கவர்ந்து வந்த இருவரும் மறைந்தவுடன் இதுவரை அவர்கள் முன்னிலையில் கட்டுக்கு ஓரளவு மீறுமல் புகழ்ந்து வந்தவர்கள் இப்பொழுது அப் புகழ்ச்சியை இருமடங்கு ஆக்கினுர்கள். அந்தச் சமயத்தில் இன்னதென்று வருணிக்க முடியாத ஒரு திடீர் உணர்ச்சி வேறுபாட்டினை அடைந்ததாக அப் பெண்கள் என்னிடம் கூறினுர்கள். இதுவரை அந்த 'நன்கள்' பெண் துறவிகள்—மாடக்கன்னிமார்—தங்களை நம்பவைத்ததெல் லாம் பொய் என்று உணர்ந்தார்கள். அப்பொழுதே மதத்தைக் கைவிட்டார்கள். சமூக இன்பங்களில் ஈடுபடுவதாகத் தம் மனத் தில் உறுதி கொண்டார்கள். 'இதற்குப் பிறகு எங்களுடைய வாழ்க்கையை நாங்களே புதுப்பித்துக் கொள்ள வேண்டிய தாயிற்று; மறுபடியும் மதத்தின் உண்மையைத் தழுவ வேண்டிய தாயிற்று. சமூகத்தின் பகட்டழகின் வெறுமையும் நாங்களே புரிந்து கொண்டோம்' என்று அவர்கள் கூறினுர்கள்.

ஏமாளித்தனம் அனுபவம் பெறப்பெற மெதுவாக மறைந்து விடுகிறது. மனம் முதிர்ச்சி அடையும் பொழுது போதனை இந்த நோக்கத்துக்கு உதவிபுரிகிறது. மக்களைப் போல் நாடுகளிலும் நாகரிக முன்னேற்றமும் ஆன்மாவின் முன்னேற்றமும் ஏமாளித் தனத்தை ஒருவாறு குறைக்கப் பார்க்கிறது. அறிவு என்று சாதாரணமாகக் கூறப்படுவது அறியாமையாகிய இருளைப் போக்கு கிறது. வெற்றிடமாகிய அறியாமையில் மாயக் கற்பனை எளிதில் உலவுகிறது. ஏனென்ருல் அது இன்னும் உயர்ந்த மட்டத்தில் செல்ல உதவி புரியும். தாங்கி எதுவும் இல்லாத காரணத்தால் ஹெர்குலீஸின் தூண்கள் என்று கூறப்பட்டவை (Pillars of Hercules) ஜிப்ரால்டர் கடலிடுக்கில் (Straits of Gibralter) இரு புறம் உள்ள பாறைகள் மகாசமுத்திரங்களின் கவாடங்களான போது மறைந்து விட்டன. சிவப்பு இந்தியர்களை அமெரிக்கர் களின் மக்கள் ஆட்சி உணர்ச்சி தங்களுடைய நாகரிகப் பள்ளிக் கூடங்களில் வெள்ளையர்களோடு சமமாக ஏற்றுக் கொள்கிறது. இந்த நிலையில் எந்த கொலம்பஸும் சிவப்பு இந்தியர்களைப் பார்த்து, 'வானமே என் சொல்லுக்கு அடங்கும். என் உத்தரவுப் படி சூரியன் தோன்ருமல் இருள் ஆக்கும்படி கூறுவேன்' என் றுரைத்து அவர்களை நம்பவைக்க இயலாது. ஏனென்ருல் வெள்ளை யர்களைப்போல் இவர்களுக்கும் கிரகணங்கள் தோன்றுவது எங் ஙனம் என்று நன்கு தெரியும்.

ஏமாளித்தனத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் இந்த மாயக் கற்பனையைக் குழந்தைகளிடம் நாம் வளர வைக்க வேண்டுமா? அது நிலை பெறுவதில் நிச்சயமாக நம்மில் எவர்க்கும் விருப்பம் இல்லை. 'குழந்தை இப்பொழுது மாயக் கதைகளை

நம்பமாட்டேன் என்கிறுன்' என்று கேட்கும் பொழுது, உண்மை யாக மகிழ்ச்சியடைகிறேம். அப்பொழுது, 'அவன் இனிமேல் ஒரு குழந்தை அல்ல' என்கிறேம். நடைபெற வேண்டியது இதுவே. இதை நாம் எதிர்பார்க்கிறேம். அவன் இக் கதைகளே நம்பாத நாளும் வரும். இந்த முதிர்ச்சி ஏற்பட்டால், நாம் இவ்வாறு நம்மைக் கேட்டுக்கொள்ள வேண்டும். 'அதற்கு உதவி புரிய என்ன செய்திருக்கிறேம்; நேர்மையாகவும் வலிவாகவும் இந்த மெல்லிய மனம் வளர்வதற்கு என்ன ஆதரவு தந்திருக் கிறேம்?' அறியாமையிலும், மாயையிலும் குழந்தை இருக்கும்படி நாம் எவ்வளவு முயற்சி செய்து வந்தாலும் இத்துணைக்கும் மீறிக் கொண்டு தானே அவ் விடுக்கண்களேத் தாண்டிவிடுகிறுன். குழந்தை தன்னேயும் நம்மையும் மீறி விடுகிறுன். வளர்ச்சியின் அந்தரங்க சக்தியும் முதிர்ச்சியும் அவனே எங்கு உந்துகின்றனவோ அங்கு அவன் செல்கிறுன். அவன் ஒரு வேளே நம்மைப் பார்த்துக் கூறலாம்: 'எங்களே எவ்வளவு துன்பங்களுக்கு ஆளாக்கினீர்கள்! எங்களே மேலோங்கச் செய்வதே ஏற்கெனவே அரிதான காரியமாய் இருந்தது. நீங்கள் வேறு எங்களே அடக்கி ஒடுக்கினீர்கள்.' குழந்தை களின் இயலில் பல இல்லாதிருத்தல். அக் காரணம்பற்றிப் பல் முளேக் காமலிருக்கக் குழந்தைகளின் ஈறுகளே அமுக்கி வைத்தால் எப்படி இருக்கும்? அல்லது, தொட்டில் குழந்தை முதலில் நிற்பதில்லாத காவணத்தை வைத்துக்கொண்டு குழந்தையின் உடல் நேராக நிற்க விடாமல் தடுத்தோமாளுல் எப்படி இருக்கும்? இவ்விரு எடுத்துக்காட்டுகள் போலிருக்கிறது நாம் குழந்தைகளிடம் நடந்து கொள்வதும். குழந்தைப் பேச்சில் காணப்படும் வறுமையை வேண்டுமென்றே நாம் நீடிக்க வைக்கும் போது மேலே குறிப் பிட்டது போல் ஒன்று செய்து கொண்டிருக்கிறேம் என்பது உறுதி. பேசப்படும் சொற்களில் அடங்கியிருக்கின்ற வெவ்வேறு ஒலிகளே அவன் கூர்ந்து தெளிவாகக் கேட்டுணரச் செய்யவும், பேசுவோர் வாய் அசைவுகளேக் கவனிக்கவும் குழந்தைக்கு வழி வகுத்து உதவி புரியாமல் நாம் என்ன செய்கிறேம்? அவன் தொடக்கத்தில் பேசும் மொழியையே நாமும் பின்பற்றுகிறேம்.[1] முதல் முதலாகப் பேசத்தொடங்குகிறவர்கள் போல் சகர தகரப் போலி ஒலிப்பு களேப் (lisping) பின்பற்றுகிறேம்; குழந்தைக்கு இடுக்கண்ணும் முயற்சித் தொல்லேயும் கூடிய வளர்ச்சிப் பருவத்தை நாம் இன்னும் நீடிக்க வைக்கிறேம். அவ்வாறு செய்யும் பொழுது அவனேச் சோர் வுற்ற குழந்தை நிலேமைக்குப் பிடித்துப் பின்னே தள்ளிவிடுகிறேம்.

[1] நாம் குழந்தைப் பேச்சில் குழந்தையிடம் பேசக்கூடாது தூய உச்சரிப் புடன் தான் பேசவேண்டும். இன்னும் நடக்கவராத குழந்தையின் முன் நாம் நொண்டிக் காட்டியா குழந்தைக்கு நடை பழக்குகிறேம்? —மொழிபெயர்ப்பாளர்.

கற்பனேயைக் கற்பித்தல் என்பதிலும் இன்று அதே போலவே நாம் நடந்துகொண்டு வருகிறோம்.

சில வருடங்களுக்கு முன் குழந்தையை மேலும் கீழும் தூக்கிப் போட்டு அது சிரிப்பதைக் கண்டு பெரியவர்கள் மகிழ்ச்சியுறுவது பழக்கத்திலிருந்து வந்தது. இப்பொழுது அவ்வாறு செய்வது நல்லதல்ல என்றும் இறுதியில் பெரிய விபத்தினே விளேவிக்கும் என்றும் குழந்தை உடல் நலம் அறிந்தவர்கள் கண்டனம் செய் திருக்கின்றனர். அதேபோலக் குழந்தைகளின் மாயை, அறி யாமை, முதிரா மனத்தின் பிழைகள் முதலியவைகளேக் கண்டு நாம் வேடிக்கையாக மகிழ்ச்சி பெறுகிறோம். பார்க்க போனுல் கிருஸ்துமஸ் பண்டிகையைப்பற்றியும் குழந்தைகளின் ஏமாளித் தனத்தைப்பற்றியும் விளேயாட்டுப் போக்கு மகிழ்ச்சி அடைவது நாமே. உண்மையை நாம் ஒப்புக் கொண்டோமானுல் ஏழை மக்களுக்கு மருத்துவ நிலேயத்தில் மேலோடியாக அக்கறை காட்டிய சீமாட்டியை ஒத்தவர்களாவோம். அவர் என்ன கூறினுர் பாருங்கள்: 'இனிமேல் நோய்வாய்ப்பட்ட குழந்தைகள் இல்லாவிட்டால் நான் மன மகிழ்ச்சி இழப்பேன்.' நாமும் இப்படிக் கூறலாம்: 'குழந்தைகளுடைய ஏமாளித்தனம் இல்லேயேல் எங்களுடைய வாழ்விலிருந்து பெரிய மகிழ்ச்சி பறிக்கப் பட்டது போலிருக்கும்.'

'பண்டைக் காலத்தில் சில குற்றவாளிகளின் உடல் வளர்ச்சி யின் போக்கை நடை பெறுமல் குறுக்கிட்டுக் கோணல் வடிவு பெற்ற குள்ளர்களாக்கி மன்னர்கள் கண்டு விளேயாட்டுக் களிப் படைய வைத்தார்கள். அதே போல் குழந்தைகளின் ஒரு வளர்ச்சிப் பருவத்தை நம்முடைய விளேயாட்டு மகிழ்ச்சிக்காகச் செயற்கை முறையால் குழந்தையின் வளர்ச்சியைத் தடுப்பது தற்காலத்தில் நடை பெறுகிற அசாக்கிரதையான தவறுதலாகும். இவ்வாறு எடுத்துக்காட்டுடன் கூறுவது கடுமையாகத் தோன்ற லாம். ஆனுல், மெய்யான நிகழ்ச்சியை ஆதாரமாகக் கொண் டது. அதைப்பற்றி நாம் நம் நெஞ்சார அறிய வில்லே. உண்மை எனினும் நாம் குழந்தைகளா என்ன?' என்று நாம் ஒருவரோ டொருவர் கூறும்பொழுது முதிர்ச்சி அடையாத பருவத்தைப் பற்றி நிறைந்த கண்டனத்தோடு கூறி வருகிறோம். குழந்தையால் இயங்க முடியாத பருவத்தில் காணப்படும் குறைபாடுடைய நிலேயை எண்ணி அவனுடைய முதிர்ச்சியை வளர விடாமல் தடுப்பதையோ தணிப்பதையோ விட்டு, அவன் தன் வெற்றிப் பாதையில் வளர்ந்து முன்னேறுவதைக் கண்டு மன மகிழ்ந்து வளரச் சுதந்திரம் அளித்தோமானுல், அவனேப் பற்றி இயேசுநாதர்

கூறியது போல், 'முழுநிறைவு ஆகவேண்டுமென்று கொள்பவன் குழந்தையைப் போல ஆகவேண்டும்?' என்று நாமும் கூறுவோம்.

குழந்தையின் கற்பனை என்பது மனத்தின் முதிரா நிலையும் அவனை நாம் விட்டுவிடுகின்ற ஏழ்மைத் தன்மையும் அவன் தன்னைக் காண்கின்ற நிலையில் அறியாமையும் கூடின தொகுப்பாயின், முதலில் நாம் செய்யவேண்டியது யாது? தான் ஒன்றுக்கு உரிமையுடையவன் என்று அவன் உணர்ந்து மகிழ்வுறுமாறு அவனுக்கென்ற தனிச் சூழ்நிலையை அமைப்பதும், உண்மையை அடிப்படையாகக் கொண்ட அனுபவங்களால் அவனுடைய அறிவையும் இன்னும் சிறப்பாக்குவதாலும் ஆகும். இவைகளை நாம் அவனுக்கு அளித்த பிறகு சுதந்திரத்தில் அவன் முதிர்ச்சி அடைய அவனை விட்டு விட வேண்டும். அவனுடைய கற்பனையின் வெளித் தோற்றங்களை நாம் அவனுடைய வளர்ச்சிச் சுதந்திரத்திலிருந்தே எதிர் பார்க்கலாம்.

நம்மில் சிலருக்குச் சொந்தமாக ஒன்றுமே இல்லை. அதனால் அவர் மற்ற அனைவருக்கும் அடிமை. அவனுடைய வறுமை நீங்கச் செல்வாக்கடையச் செய்வதே முதற்கடமையாகும். அப்படியானால் எல்லாக்குழந்தைகளுக்கும் குதிரைகள், வண்டிகள், பியானோக்கள் தர வேண்டுமா என்ற கேள்வி பிறக்கலாம். இல்லை இல்லை! சிக்கலான வாழ்வு சம்பந்தப்பட்ட பரிகாரம் என்றும் நேர்முகம் அல்ல. ஒன்றும் சொந்தமாகப் பெறாத குழந்தை, கிடைக்காத பொருளைப்பற்றிக் கனவு காண்கிறான். அநாதை கோடியைக் கனவு காண்கிறான். ஒடுக்கப்பட்டவன் அரியாசனத்தைக் கனவு காண்கிறான். ஏதோ ஒரு பொருளைத் தனக்கென்று பெற்றுள்ளவன் அப்பொருளுடன் தன்னை ஒட்ட வைத்துக் கொள்கிறான். இவ்வாறு செய்வதும் நிலைநாட்டவும் குறித்த அளவுக்கு அதிகப்படுத்துவதற்குமேயாகும்.

வேலையில்லாத் திண்டாட்டத்தில் உழல்பவன் இளவரசனுவதாகக் கனவு காண்பான். ஆனால், பள்ளிக்கூட ஆசிரியர் தலைமை ஆசிரியராகக் கனவு கண்டார். அங்ஙனமே தனக்குச் சொந்தம் என்ற ஒரு வீடும், துடைப்பங்களும், ரப்பர்களும், சட்டிகளும், சோப்பும், ஒப்பனை செய்துகொள்ளப் பயனாகும் மேசைகளும் தட்டுமுட்டுச் சாமான்களும் பெற்றிருந்தானானால், அவன் இப்பொருள்களைப் பாதுகாப்பதில் மகிழ்ச்சி அடைகிறான். அவனுடைய ஆசைகளின் கொதிப்பை அடக்கிக் கொள்கிறான். அவைகளிலிருந்து அவன் பெறுகின்ற அமைதி தன்னுடைய அந்தரங்கப் படைக்கும் வினையாற்றல்களுக்கும் தேவையான வாழ்வைத் திறக்க வைக்கிறது.

* * *

'தனக்கே சொந்தம் எனக் கொள்ளும் உண்மையான பொருள் களுக்கு' நடுவில் வாழும் பொழுது, மாயை தற்பெருமையால் தன்னுடைய அருமையான சக்திகள் அழியா வண்ணம் அமைதி பெறச் செய்வதுடன் ஆசைகளை மட்டுபடுத்தவும் செய்கிறது. தனக்குச் சொந்தமான பொருள்களின் சூழ்நிலையில் வசிப்பதாகக் கற்பனை உலகில் வந்தால் அத்தகைய பலன்களைப் பெற்று விட இயலாது. அநாதைக் குழந்தை இல்லத்தின் பொறுப்பாளியாக இருந்த சில ஆசிரியர்கள் என்னிடம் சொன்னார்கள், 'நீங்கள் கூறுகின்ற அன்றாட வாழ்க்கைப் பயிற்சிகளை நாங்களும் எமது குழந்தைகளைச் செய்ய வைக்கிறோம். வந்து பாருங்கள். நான் சென்றேன். சில அதிகாரிகளும் பல்கலைக்கழக ஆசிரியக் கலைப் பேராசிரியரும் கூட இருந்தனர்.

சில குழந்தைகள் ஒரு மேசையின்மேல் விளையாட்டுப் பொருள் களை வைத்துக்கொண்டு அவைகளுக்கென உண்டி படைக்க ஏற் பாடுகள் செய்து கொண்டிருந்தனர். அவர்களுடைய முகத்தில் ஒரு மலர்ச்சியும் காணப்படவில்லை. என்னை அழைத்தவர்களை வியப்புடன் நோக்கினேன். அவர்களுக்கு நடந்தவை மன நிறைவை அளித்ததுபோல் அவர்கள் முகம் காட்டிற்று. விளை யாட்டுக்காக போசன ஏற்பாடு அமைப்பதற்கும் உண்மையான உண்டிக்கு ஏற்பாடு செய்வதற்கும் ஒரு வேற்றுமையும் இல்லை என்று இவர்கள் நினைத்தார்கள் போலும். அவர்களுக்குக் கற்பனை உலகமும் மெய்யுலகமும் ஒன்றுபோலும். இந்த நயமான பிழை குழந்தைப் பருவத்தில் குழந்தை உள்ளத்தில் பதிந்து விட் டால் அது பிறகு ஒரு மனப்போக்காக நிலைபெற்று விடலா மல்லவா? ஒரு வேளை இந்தப் பிழைதானோ என்னவோ ஒரு புகழ் படைத்த இத்தாலிய ஆசிரியக்கலைஞர் என்னிடம் இவ்வாறு கூறக் காரணமாயிருந்திருக்க வேண்டும். 'சுதந்திரம் ஒரு புதுமையா? தயை கூர்ந்து கொமீனியஸைப் (comenius) படியுங்கள். அவரு டைய காலத்திலேயே அது வாதிக்கப்பட்டிருக்கிறது.' நான் அவருக்கு உரைத்த பதில் இது. 'ஆம், பலர் அது பற்றிப் பேசு கிறார்கள். ஆனால், நான் குறிப்பிடும் சுதந்திரம் உண்மையாக உருவாக்கப்பட்டுணர்ந்த சுதந்திரமாகும். அவர் இரண்டினி டைக் காணப்படும் வேற்றுமை புரிந்துகொணடவர் போலில்லை. நான் இப்படிக் கேட்டிருக்க வேண்டும்: 'கோடி என்று பேசுகிற வனுக்கும் கோடியைப் பெற்றிருப்பவனுக்கும் இடையே வேற் றுமை உண்டென்று நம்புகிறீர்களா?' என்று கேட்டிருக்க வேண்டும்.

கற்பனையைக் கொண்டு மனநிறைவு கொள்ளுதலும், நாம் கற்பனை செய்து கொண்டது மெய்யாக இருப்பதாக எண்ணி

அதற்குத் தக்கவாறு வாழ்வதும், மாயையின் பின் ஓடுவதும் உண்மையை உணராதிருப்பதும் எல்லாம் பொதுவாக நடைபெறுபவை. இதைப்பற்றி வருவதை உணர்வதும் அரிது; நம்முடைய விவேத்துக்குள் நயமாக அரிக்கின்ற புல்லுருவிப் புழு ஒன்று நுழைந்து அரிப்பதை நெஞ்சம் உணரும் பொழுது, 'உண்மைக்கு விழித்துக்கொள் மகனே!' என்ற அபாயக் குரல் எழும்புவதும் அரிது.

கற்பனை செய்து கொள்வதற்குச் சக்தி எப்பொழுதும் இருக்கிறது. அது நிற்பதற்கு உறுதியான அடித்தளம் இருந்தாலும் இல்லாவிட்டாலும், கட்டிக்கொள்வதற்குப் பொருள்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், கற்பனுசக்தி இருந்தே இருக்கிறது. ஆனுல் அது உண்மையும் கற்பனை அல்லாததும் ஆகியவைகளிலிருந்து தன்னை விரிவு படுத்தாத பொழுது ஒரு தெய்விக அமைப்பை உருவாக்குவதற்கு மாருக மேலேடு படிவுகளை (incrustations) அமைத்துக் கொள்கிறது. இம் மேலேடுகள் விவேகத்தை நசுக்குகின்றன; ஒளி உட்புகாமல் தடுக்கின்றன.

இத்தகைய பிழையினுல் எத்துணை வலிமையையும் காலத்தையும் மனிதன் இது வரை இழந்து விட்டான், இழந்து கொண்டிருக்கிருன்! தீயொழுக்கம் என்பது நோக்க மின்றிச் செய்வினையின் பயிற்சியாகும். அப் பழக்கம் உடலை உருக்கி நோய்க்குட் படுத்துகிறது. அதேபோல் கற்பனையும் மெய்ம்மையால் நிலைபெற இயலாமல் விவேகத்தையே விழுங்கிப் பித்தனுடைய சிறப்பியல்கள் போல் ஆகி நிலை பெற்று விடுகிறது.

**கட்டுக்கதையும் மதமும்.**—மாயத்தை அடித்தளமாகக்கொண்டு கற்பனையைக் கற்பித்தால் அது குழந்தையின் உள்ளம் மதசம்பந்தமான கல்வியை ஏற்க ஆயத்தமாகும் என்று அடிக்கடி கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். நாங்கள் கையாளுகின்றது போல் மெய்ம்மையை அடிப்படையாக வைத்து அனுசரிக்கப்படும் கல்வி முன் கூறியதற்கு மாருகச் சத்தற்றதாகவும் தெய்விக வாழ்வின் ஊற்றுகளை வறளச் செய்வதாக இருப்பதாகவும் கூறப்படுகிறது. அத்தகைய வாதத்தை அறநெறியார் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். நம்பிக்கையும் கட்டுக் கதையும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை போல் என்பதை அவர்கள் அறிவார்கள். ஏனெனில், கட்டுக்கதை என்பதில் மெய் இல்லை; நம்பிக்கை என்பது மெய்ம்மையின் மென்னய உணர்ச்சியாகும் (Sentiment). அது மனிதனைச் சாவு வரையும் தொடர வேண்டும். மதம் என்பது நம்பமுடியாத மாயக்கற்பனையின் பெருக்கமன்று; மெய்ம்மைகளில் மிக மேன்மை

யானது. மதப்பற்றுடையவனுக்குத் தனி மெய்ம்மை. அதுதான் அவன் வாழ்க்கைக்கு ஊற்று; அடித்தளமும் கூட. மதம் தழுவாத வன் கற்பனையற்றவனென்று உறுதியாகக் கூறிவிடலாகாது. அந்த ரங்க சமநிலை பெருதவனுவான் எனலாம். மதம் தழுவுகின்றவனு டன் ஒப்பிட்டால் இவன் அமைதியில் குறைவுடையவன். வறுமை வந்த காலத்தில் குறைந்த வலிமையுடையவன். இது மட்டுமல்ல இவனுடைய சொந்தக் கருத்துகளிலே முடிவுகாணுதவனுக இருப் பான். அவனை விட இவன் மெலிந்தவனுகவும் மகிழ்ச்சியற்ற வனுகவும் தோன்றுகிருன். மெய்ம்மைக்குப் புறம்பே தனக்கென ஓர் உலகை படைத்துக் கொள்ளக் கற்பனையைக் கைப்பற்றுகிருன். அவன் அந்தரங்கத்திலிருந்து டேவிட் (David) அவரின் குரலில் உரக்கப் பேசுகிறது. 'என்னுடைய ஆன்மா— உள்ளம் இறை வனுக்குத் தாக விடாய் கொள்கிறது. இறைதாகம் எடுக்கிறது.' அவனுடைய மெய்ம்மை வாழ்வின் குறிக்கோளைக் கற்பனை ஒன்றையே துணைக்கொண்டு அடைய விரும்பினுல் மிக முக்கிய மான முயற்சி வேளையில் அவன் பாதம் புதை மணற்குள் இறங்கு வதை உணரலாம்.

கிருத்துவத் திருத்தொண்டர் (apostle) ஒருவர் ஆன்மாவை மதத்தால் வெல்ல வைக்க விரும்பும் பொழுது, மனிதன் தன் தடுமாறும் பாதங்களைக் கடும்பாறைமேல் பதியவைக்க எண்ணும் பொழுது, அவர் அறிவுக்கு மன்ருடுகிருர்; புரிந்து கொள் என்று மன்ருடுகிருர். கற்பனைக்கு மன்ருடவில்லை. ஏனென்ருல், ஏதோ ஒன்றைப் புதிதாக ஆக்குவது அவருடைய பணி அல்ல என்று அவருக்குத் தெரியும். ஆனுல், அவனுடைய இருதயத்தின் ஆழத்தில் உறங்கிக்கிடப்பதை உரக்கக் கூறுவதே அவர் பணி என்று உணர்வார். வெண்பனி (Snow) யால் புதையுண்டவன் தன் உயருடம்பிலிருந்து உதறிவிட வேண்டும். மூடின பனியால் பொம்மை பண்ணிச் சூரிய வெப்பத்தால் அதை உருக விடுவதல்ல. இவனும் இவனுடைய வலிவற்ற வாழ்விலிருந்து மருளை—மயக் கத்தை—உறக்கத்தைக் கலைத்து உதற வேண்டும்.

நம்ப முடியாத கற்பனைகள் மதத்துக்குள் ஊடுருவுகிற தென்பது உண்மை. ஆனுல், அது பிழை என்ற வேடத்தில் அவ் வாறு செய்கிறது. நடுக்காலத்தில், எடுத்துக் காட்டாகத் தொத்து நோய்கள் மிகவும் எளிமையாகத் தெய்வ தண்டனையால் ஏற்பட் டவை என்று கூறப்பட்டது. இன்று அவையெல்லாம் நேரடி யாகக் கிருமிகளால் விளைவன எனப் படுகிறது. பாபினுடைய (Papin) நீராவி இயந்திரம் கொடிய பிரமாண்டமான புதிது புனை தலுக்கு வழிவகுத்தது. ஆனுல், கட்டுக்கதைகளைப் போல

அறியாமை என்ற வெற்றிடத்தில் ஈக்கள் போலக் கூடும் சார் பெண்ணங்கள் இவைகள் தாமே.

எல்லா மதங்களும் அறியாமை என்ற தளத்தின்மேல் கட்டப் பட்ட கட்டுக்கதை மாளிகையன்று. அது உண்மையாயின், காட்டு மிராண்டிகள் மதக்கோட்பாடு தழுவியும் நாகரிகமானவர்கள் மதம் அற்றவர்களாகவும் இருக்கவேண்டும். நாம் காண்பதென்ன? காட்டுமிராண்டிகள் உறுதியற்ற மாயக் கற்பனைகள் அடங்கிய மதத்தை முக்கியமாக இயற்கையின் அற்புதமான நிகழ்ச்சிகளின் மேல் காட்டி, அதனுல் தூண்டப்பட்டு, மதத்தைப் படைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனுல், நாகரிகமுள்ளவர்களிடம் சரி யான மதம் இருக்கிறது. அது தூய்மை ஆக ஆக இன்னும் வலி வுடையதாகிறது. உண்மையின் விஞ்ஞானம்—அறிவியல்—இயற் கைக்குள் ஊடுருவிச் சென்று இயற்கையின் மாயங்களை ஊக்குவிக்க வும் விளக்கவும் செய்கிறது.

இப்பொழுது மதபோதனையைப் பள்ளிக்கூடத்திலிருந்து அறவே நீக்கி விடவேண்டுமென்று ஒரு கிளர்ச்சி இருந்து வருகிற பொழுது, கட்டுக்கதைகளை வளர்த்து, அதன் மூலமாக மதத்தை நாம் பள்ளிக்கூடத்துக்குள் நுழைக்க யோசனை கூறலாமா? மதத்துக்கே நேரடியாகக் கவாடம் திறப்பது மிகவும் எளிய விஷயம். நேரடியாக அதனுடைய சோதி ஊடுருவவும் வாழ்க் கைக்கு ஊக்கம் அளிக்கவும் செய்து விடலாமே.

ஆனுல், அது சூரியனைப்போல ஆக்கத்தில் இறங்க வேண்டும். பீஃபானு (Befana) வைப்போல் புகைக்கூண்டின் வழியாகவன்று.

புறச்சமய மதம் (Pagan religion) போன்றவைகளை ஓரளவுக் குக் கட்டுக்கதை ஆயத்தமாக்கலாம். அந்த மதம் தெய்வத்தை எண்ணற்ற குட்டித் தெய்வங்களாகப் பிரித்திருக்கிறது. ஒவ் வொன்றும் வெளியுலகத்தை உருவாக்குகிறது. இது புலன்களால் உணரப்பட்டு அதன் காரணத்தால் மாயைக்கு இடம் தருகிறது. ஆனுல், கட்டுக்கதை என்றும் கிருத்துவ மதத்துக்காக ஆயத்தம் செய்ய முடியாது. கிருத்துமதம் கடவுளை மனிதனுடைய அந்த ரங்க வாழ்வுடன் தொடர்பு கொள்ளச் செய்விக்கிறது. 'வகுக்க முடியாத ஒன்று' மனிதனுல் உணரப்பட்ட விதிகளைச் சட்டங் களாகிய வாழ்க்கை விதிகளைக் கற்பிக்கிறது, அறிவியல்—விஞ் ஞானம் மதத்திற்குப் புறம்பானதாய் இருந்தால், உண்மையைக் கற்றறிதலே நம்மை அதிலிருந்து விலக்கிக் கொள்ளச் செய்கிற தென்று சொல்லிவிட முடியாது. இதுவரை அறிவியல் வெளி உல கத்தை அதனுடைய ஒவ்வொரு பகுதியையும் ஆய்ந்திருக்கிறது; அவர்கள்—அறிவியலார்—ஒரு பரிவுள்ள மத்ததை (sumpathetic

religion) உண்டாக்கியிருந்தார்களேயானால், அந்த மதம் புறச்சமய மதமாக இருக்கலாம். இதுவரை அறிவியல் நம்மால் உணரக் கூடிய உயர்ப்பாகிய புறச்சமய மதம் நம்மிடை கொண்டு வந்திருக் கிறது. அது மனிதனுடைய உள்ளத்தில் ஊடுருருவதில் வெற்றி பெற்று அங்கு வாழ்க்கையின் விதிகளையும், வாழ்வின் உண்மை களையும் தோன்றச் செய்தால், உண்மையான கிருத்துவ சோதி மனிதன்மேல் ஒளிவிடும். அப்பொழுது பெத்லஹேமுக்கு மேல் நின்று வாழ்த்தியதுபோல் குழந்தைகள் அறிவியலுக்கும் நம்பிக் கைக்கும் இடையே சமாதானம் தோன்றத் தேவாரம்—இறைவன் புகழ்—பாடுவார்.

பாலையில் செயின்ட்ஜான் (Saint John) என்பவர் இறைவன் பாதையை நேர்படுத்தி மக்களிடம் காணப்பட்ட கொடிய குற்றங் களையெல்லாம் களைய வைத்தார். இவ்வாறு அந்தரங்க சம நிலையை அளித்து, தெய்விக சக்தியின் மூச்சைத் திணறடிக்கும் கொடிய குற்றங்களை நீக்கி, வரும் மெய்யை வரவேற்க ஆயத்த மாகிறது. மேலும், வாழ்க்கையை அடையாளம் கண்டு கொள் வதற்கும் முடிகிறது.

**பள்ளிக்கூடங்களில் வயது வந்த குழந்தைகளுக்குக் கற்பனை பற்றிக் கற்பித்தல்.**—சாதரணமாகத் தொடக்கப்பள்ளிக் கூடங் களில் கற்பனையைக் கற்பிக்க அனுசரிக்கப்படும் முறை யாது?

பெரும்பாலான பள்ளிக்கூடங்களில் அவர்கள் சாம்பல் வண்ண மாகவும், ஒரு படமும் தொங்கவிடப் படாமலும் இருக்கும் சாள ரங்களின் மேல் வெள்ளைத் திரைச் சீலைகள் இருக்கும். உணர்ச் சிகள் எவ்வகையிலும் எழுச்சியும் மேம்பாடும் பெறுது இவை தடுக்கும். இந்தச் சோர்வூட்டும் சூழ்நிலையின் நோக்கம் வெளித் தூண்டுதல்களால் மாணவனின் உணர்வுகள் இங்கு மங்கும் அலையாமல் தடுக்கப்பட்டுப் பேசிக் கொண்டிருக்கும் ஆசிரியர்பால் திரும்புவதற்கேயாகும். குழந்தைகள் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து கொண்டு மணிக்கணக்காக ஆசிரியர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள். அவர்கள் வரையும் பொழுது மற்றவர்கள் வரைந்ததின் நகலையே வரைய வேண்டும். இயங்கும் பொழுது வேறெருவர் இட்ட கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அவர்களுடைய ஆளுமைகள் அடங்கிக் கீழ்ப்படுவதை யொட்டி மதிப்பிடப்படுகின்றன. அவர்களுடைய மனத்திட் பத்தின் கல்வி படிப்படியாக—முறையாக விருப்பத் துணிவாற்றல் (Valition)கைவிடப்படுவதாகும்.

**கிளபார்டி** என்பவர் (Claparde) கூறுகிறுர். 'பொதுவாக நமது ஆசிரியக் கலை குழந்தைக்கு நிறையாகத் தகவல்களைக்

கொடுத்து அவனை ஒடுக்குகிறோம். இந்தத் தகவல்கள் அவன் நடத்தைக்குப் பயன் அளிப்பதில்லை. அவர்களுக்கு விருப்பம் இல்லாதபொழுது கேட்க வைக்கிறோம். அவர்களுக்குச் சொல்வதற்கொன்றும் இல்லாதபோது பேசவும், எழுதவும், தொடர்ந்து சொல்லவும் கட்டுரை எழுத்வும், கருத்துப் போட்டியிடவும் செய்விக்கிறோம். அவர்களுக்கு இதைப் பார்க்கவேண்டுமென்று தூண்டுணர்ச்சி இல்லாதபொழுது இதைக் கூர்ந்து கவனி என்கிறோம், எதையும் புதிதாகக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆவல் இல்லாத பொழுது காரண காரியத்தை அலசச் சொல்கிறோம். அவர்கள் தாமே விரும்பிச் செய்வதாக எண்ணும்படி அவர்களே முயற்சி செய்யத் தூண்டி விடுகிறோம். இவ்வாறு செய்யும்பொழுது அவனுடைய அகத்தின் (ege) ஒப்புதலைப்பெறுது செய்கிறோம். உள்ளார்ந்த ஒப்புதல் ஒன்றே கடமையைச் செய்யக் கீழ்ப்படிதலுக்கு அறநெறி மதிப்புத் தருகிறது.'

இவ்வாறு அடிமை மட்டத்திற்கு ஆக்கப்பட்ட குழந்தைகள் படிக்கக் கண்களையும், எழுதக் கரங்களையும் ஆசிரியர் கூறுவதைக் கேட்கச் செவிகளையும் உபயோகிக்கின்றனர். அவர்களுடைய உடல்கள் என்னவோ இயங்காமல் இருக்கின்றன. ஆனால், அவர்களுடைய மனமோ ஒன்றின் மேலும் நிலையாக இருக்க முடிவதில்லை. ஆசிரியருடைய மனத்தின் பின் ஓடத் தங்களுடைய மனத்தைத் தொடர்ந்து உந்திக்கொண்டே இருக்க வேண்டும். ஆசிரியருடைய மனமோ அங்கொன்று இங்கொன்றுகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாடத் திட்டத்தைப் பின்பற்றத் தூண்டப்படுகிறார். இந்தத் திட்டம் குழந்தையின் போக்குகளைக் கருத்தில் கொண்டதல்ல என்பது உறுதி. மனம் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. பதிவுகள் தப்பி ஓடுபவை; கனவுபோல் நிச்சயமல்லாதது. குழந்தையின் கண்களின் முன் அவ்வப்பொழுது தோன்றுகின்றன. ஆசிரியர் கரும்பலகை மேல் ஒரு முக்கோணம் வரைகிறார். உடனே கலைத்துவிடுகிறார். அருவம் போல் அந்த விநாடிக்குத் தோன்றி மறைந்த காட்சி அந்த முக்கோணம். அக் குழந்தைகள் முக்கோண உருவத்தைத் தங்களுடைய கரங்களில் ஏந்திப் பார்த்ததேயில்லை. அவர்கள் அதை முயற்சியால் நினைவு படுத்திக்கொள்ள வேண்டிருக்கிறது. இந்த எல்லைக்கோட்டைச் சுற்றி வரிவடிவ இயல் சார்ந்த அருவக் கணக்குகள் இனி அண்மையில் நிறையப் போகிறது. அத்தகைய வரிவடிவம் குழந்தைகளின் உள்ளத்தில் எதையும் சாதிக்க இயலாது. அது உள் உணரப்படவும் செய்யாது. மற்றவைகளுடன் இணைந்து அது என்றும் ஊக்கமூட்ட வல்லதாகவும் இருக்காது. அப்படியேதான் மற்றவைகளிடத்தும், நோக்கம் என்ன களைப்பை

உண்டாக்குவதற்கு, களைப்புக்காகக் களைப்பை உண்டாக்கு வதற்கே பரிசோதனை செய்யும் உள இயல்துறையின் எல்லா முயற்சிகளையும் பார்க்கப்போனால், அவை இந்தக் களைப்பைப் பற்றியே ஆய்ந்திருக்கின்றது நினைவு வரும்.

இந்தச் சூழ்நிலையில் சுதந்திரத்துடன் பயிற்சி செய்யத் தடையுண்டு. அங்ஙனமே தொழிலைத் தேர்ந்தெடுப்பதும் தியானம் செய்வதும் (meditation) ஒவ்வொரு மென்னய உணர்ச்சியும் ஒடுக்கப் பட்டிருக்கிறது. தானாகப் பெறப்பட்ட அனுபவங்களால் விவேகம் பண்படுகின்ற வகையில் உள்ள எல்லாத் தூண்டுதல்களும் விலக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிலைமையில் குழந்தையின் கற்பனையைத் தூண்டிவிடக் கட்டுரை வரையச் சொல்லப்படுகிறார்கள். அப்படியென்றால் அதற்குத் தேவையான பொருள்களில்லாமலே அவன் அதை உருவாக்க வேண்டும். கையில் இல்லாததைக் கொடுப்பதுபோல் வளர விடாமல் இருக்கும்படி செய்துவிட்டு, உள்ளார்ந்த வினையாற்றல்களை பெறப்பார்க்கிறது. உற்பத்தி என்பது எங்ஙனம் தோன்றும். உற்பத்தி பயிற்சிகளால்தான்; 'அடிக்கடி கட்டுரை புனைவது கற்பனையை வளர்ப்பதற்கு'. வெற்றிடத்தில் உள்ள மலட்டுத்தனத்திலிருந்து மிகவும் சிக்கல்வாய்ந்த விவேகப் பொருள்கள் தோன்ற வேண்டுமாம்!

நம்முடைய பள்ளிக்கூடப் பாடங்களில் கட்டுரை என்பது பெரிய தொல்லை என்பதை எல்லோரும் அறிவார்கள். 'எல்லாக் குழந்தைகளும் கருத்தில் வறுமையுற்றவர்கள், ஒழுங்கற்ற மனத்தைப் பெற்றவர்கள், ஒரு வகையிலும் தற்கற்பனை ஆற்றல் (originality) படைத்தவர்களே அல்லர்' என்று எல்லா ஆசிரியர் களும் ஆணித்தரமாக எடுத்துக் கூறுகிறார்கள். கட்டுரை எழுதும் பயிற்சி மற்ற எல்லாவற்றையும்விடத் துன்பம் அளிப்பதாக எப் பொழுதும் இருந்திருக்கிறது. கடப்பாடான (obligatory) தலைப் பொன்று கொடுக்கப்படுகிறது. இதைக் கேட்டவுடன் குழந்தை யின் மனத் தோற்றம் எவ்வாறிருக்கும்! சில மணி காலத்துக்குள் ஒரு கட்டுரையை அவன் வரைந்து ஒப்படைத்து விடவேண்டும். அது அவனுடைய கற்பனையின் விளைவு ஆக இருத்தல் வேண்டும். வேதனை நெஞ்சுக்குள் ஏதோ அடைக்கிறது. கைகள் விறுவிறு என்றிருக்கின்றன. வேக வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் கடிகா ரத்தைக் கண்கள் அச்சத்துடன் பார்த்துக் கொண்டிருக்கின்றன. ஆசிரியரின் நம்பிக்கையற்ற கவனக் கண்காணிப்பு, காவில் வைக் கப்பட்ட தண்டனைக்குரிய குற்றவாளிகளின் நடத்தையை அவர்கள் அறியாமல் அதிகாரி தெரிந்து கொள்வதற்குத் துப்பறி யும் காவலன் இருப்பதுபோல் இங்கு இந்தச் சமயத்துக்கு ஆசிரியர் துப்பறிபவராக மாறிவிட்டிருக்கிறார். இத்துணை இடுக்கண்களி

னிடையில் இறுதிவரையும் குழந்தை வேதனைப்பட்டுக் கொண்டு கட்டுரை புனையவேண்டும். கட்டுரையைக் கொடுக்காதவனுக்கு வந்தது கேடு. இதுதான் முக்கியமான சோதனை. இவனுடைய மதிப்பைத் தானே சுதந்திரத்துடன் காட்டிக்கொள்ள இது ஒன்றே வாய்ப்பளிக்கிறது. இவனுடைய விவேகத்தைப் பிறர் அளந்து பார்க்க இவன் அளிக்கக்கூடிய இவனுடைய சாதனைக்கனி ஆகும் இக் கட்டுரை. இந்த வகையில்தான் நமது இளம் பரம்பரை நரம்புத்தளர்ச்சிக்கும் தற்கொலைக்கும் கூட ஆளாகின்றனர். நம் காலத்துக் கவி 'கார்டுசி' (Carducci) என்பவர் காலமான ஒரு பெரிய வரைப்பற்றி ஓர் இரங்கற்பா பாட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டார். 'உள்ளக்கிளர்ச்சியின்றி வெறும் வேலை இரங்கற்பாபுனைய வைக்காது' என்று வெட்டெனக் கூறி விட்டார். இவ்வாறு மாணவர்கள் விடைபகர முடியாதன்றோ?

தற்காலப் பள்ளிக்கூடங்கள் சிலவற்றில் உளம்சார்ந்த உடல் நலம் (psychical Hygiene) பின்பற்றப்படுகிறது. அங்கு குழந்தை களுடைய சோர்வூட்டும் முயற்சிகளை ஒருவாறு குறைக்க முயற்சி செய்து வருகிறார்கள். படிப்படியாகக் கட்டுரை எழுதிக்கொண்டு போகின்றனர். இவர்கள் கையாளும் முறையை ஆய்வது அக்கறை யூட்டக்கூடியதாக இருக்கும். கட்டுரை என்பது கற்பிக்கப்படுகி றது. [கட்டுரை என்ற பதத்துக்கு இணைந்து உருவாக்குதல் என்ற பொருள் முரண்படக் 'கற்பிக்கப்படுகிறது' என்று கூறப்படுவதைத் தற்போது கவனிக்காமலே விட்டுவிடுவோம்.] ஆசிரியர் கணக்குப் பாடம் நடத்துவதுபோல் எல்லா குழந்தைகளையும் ஒன்று கூட்டிப் பாடம் நடத்துவார்; விளக்குவார். இதற்குக் கூட்டு வாய் மொழிக்கட்டுரை (collective oral composition) என்று பெயர்.

இத்தகைய பாடங்களைக் கற்பிக்க ஆசிரியர்கள் என்னென்ன ஆயத்தங்களைக் கையாண்டார்கள் என்று கூறும் ஏட்டிலிருந்து இந்தத் துறையில் வல்லுநரைக் கொண்டு நமக்கு நேரில் பேச வைத்துக் கேட்போம்.

### இந்த ஆய்வுப் பொருளை இவ்வாறெனக் காட்டுவதற்கு அனுசரிக்க வேண்டிய முறை

எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் சுருக்கமான தொடர் கூற்றினை பார்ப்போம். அதில் மூன்று வளர்ச்சிப்படிகள் இருக் கின்றன. 1. ஏர்னஸ்டோவுக்கு அவன் பாடம் தெரியாது. 2. ஆசிரியர் குழந்தையைக் கடுமையாக வைதார். 3. ஏர்னஸ்டோ அழுதுகொண்டு இனிமேல் நன்றாகப் படிப்பதாக

உறுதி கூறினன். அந்தத் தொடர் கூற்றினைச் சொற்களால் குறிக்க வேண்டுமானல், ஏர்னஸ்டோ அவனுடைய பாடத்தைப் படிக்க வில்லை (முதல் நிகழ்ச்சி, காரணம்); மாணவன் பலனுக்கு எளிதாகப் போவான். அதில் பாக்கி இரண்டு படிகள் இருக்கின்றன. இவை இரண்டும் தோன்றும் வரிசையில் நியாய முறைப்படியும், கால வரிசைப்படியும் இருக்கும். அதற்குப் பதிலாக நாம் ஆய்வுப் பொருளாக இரண்டாவது கட்டத்துக்கு உரியதைச் சுட்டிக் காட்டினேமானல், 'ஆசிரியர் குழந்தையைத் திட்டினர்.' குழந் தையைப் பார்த்துக் காரணத்தைச் சிந்திக்க வைக்கிறேம். மூன்றும் கட்டமும் இரண்டாம் கட்டத்தைத் தொடர்ந்து செல்லச் செய் கிறேம். இதற்கு மாருக ஆய்வுப் பொருளை 'ஏர்னஸ்டோ அழுது இனிமேல் நன்ருகச் செய்கிறேன்' என்று கொடுத்தோமானல், குழந்தை இரண்டாவது கட்டத்துக்குச் சென்றபிறகு, தொடர்ந்து முதல் கட்டத்துக்கும் செல்வான்.

ஆதலால் ஒவ்வொரு சுருக்கமான தொடர் கூற்றின் முதல் கட்டம் ஆய்வுப் பொருள் இதென்று அறிந்துகொள்ள உதவி புரியும்.

முறை : ஆசிரியர் ஆய்வுப் பொருளை கரும்பலகைமேல் எழுதி விடவேண்டும். அந்த ஆய்வுப் பொருளில் மறைமுகமாகக் காட் டப்படும் பலனைப் பற்றிச் சிந்திக்கக் குழந்தைகள் அழைக்கப்பட வேண்டும். (சொல்வதற்கல்ல.) குழந்தைகள் அவரவர்களாக வேலை செய்ய வேண்டுமென்றும் வேறெவரிடமும் உதவி தேடக் கூடாது என்றும் ஆசிரியர் அவர்களுக்குப் புரிய வைக்க வேண்டும். பார்க்கலாம்.

லொய்சா (Louisa) ஒரு கம்பளத் துண்டை அடுப்புக்குள் போட் டாள் (ஆய்வுப் பொருள்). அதனல் ஏற்பட்ட விளைவு ஒன்றினைச் சிந்தித்துப்பார்; என்ன நடந்தது அதன் விளைவால் என்று கூறு.

'கம்பளம் நாற்றம் அடித்தது.' மிகவும் நல்லது நீ திரும்பவும் தொடர் கூற்றினைக் கூறு.

'லொய்சா கம்பளத் துண்டை அடுப்பில் போட்டாள்; கம்பளம் நாற்றமடித்தது? எவராவது இன்னும் ஓர் எண்ணத்தைச் சேர்க்க முடியுமா? இன்னும் ஒரு சாத்தியமான விளைவு ஒன்றை எவரா லாவது சேர்க்க முடியுமா?

ஆசிரியர் லொய்சாவைக் கண்டித்தார்; ஒரு மாணவன் சாளரத் தைத் திறந்தான். ஆசிரியர் மறுபடியும் பயிற்சிகளை A, B, C, என்ற ஆய்வுப் பொருள்களை ஒப்பிக்கிருர். மாணவர்களின் ஒத்

துழைப்பினால் பெற்ற விளைவை அவர்களுடைய பயிற்சி நோட்டுப் புத்தகங்களில் குறித்துக் கொள்ளச் சொல்கிறார்.

ஓர் ஆய்வுப் பொருள் இது என்று ஆசிரியர் கூற, மற்ற எவ்வுதவியுமில்லாமல் மாணவர்களே அதை விரிவுபடுத்த விட்டுவிடலாம்.

ஆய்வுப்பொருள் A—லொய்சா ஒரு கம்பளத் துண்டை அடுப்பில் போட்டாள். (கம்பளம் நாற்றம் அடித்தது. ஆசிரியர் லொய்சாவைக் கண்டித்தார். ஒரு தோழன் கெட்ட நாற்றம் வெளியே போகுமாறு சாளரத்தைத் திறந்து வைத்தான்.)

ஆய்வுப்பொருள் B—ஏர்னஸ்டோ தரை மேல் மைக்கூட்டைக் கவிழ்த்து விட்டாள். (தரைமேல் கறை ஏற்பட்டது. ஆசிரியர் குழந்தையைக் கண்டித்தார். இனிமேல் அதிகம் அக்கறையாக நடந்து கொள்கிறேன் என்று ஏர்னஸ்டோ உறுதி கூறினான்.)

ஆய்வு பொருள் C—எலிஸா கதையை நன்றாகப் படித்தாள். (ஆசிரியர் அவளைப் புகழ்ந்து நல்ல மதிப்பெண் தந்தார். எலிசாவுக்கு ஒரே மகிழ்ச்சி.)

ஆய்வு பொருள் D—மாரியோ அவனுடைய காப்பி நோட்புக்கில் கறை படிய வைத்தான். (ஆசிரியர் அவனுடைய பயிற்சியைத் திருத்திக் கொடுக்க மறுத்து விட்டார்; அவர் அவனைத் திட்டினார். பையன் அழுது கொண்டே வீடு திரும்பினான்.)

இத்துணைக் கூட்டுப் பயிற்சிகளெல்லாம் அளித்த பிறகு ஆசிரியர் சுதந்திரமான ஓர் ஆய்வுப் பொருளைக் கீழ் வருவதுபோல் கொடுக்கிறாள்: மரியாவுக்கு தன் பாடம் நன்றாகத் தெரியும். இதை விரிவுபடுத்த மேலே குறிப்பிட்ட முறையைக் குழந்தைகள் பின்பற்ற வேண்டும். அதாவது அதன் நியாயமான காரணத்தை இரண்டே சொற்றொடர்களால் மாணவர்கள் குறிப்பிட வேண்டும். (ஆசிரியர் 'பத்து' மதிப்பெண் கொடுத்தார்; புகழ்ந்தார்; அவளுடைய உழைப்பில் விடாமுயற்சி செய்ய வேண்டுமென்று ஆசிரியர் அவளுக்குக் கூறினார்.)

சில வேளைகளில் பாடம் கற்பிப்பதற்கு நியாய உட்கருத்தை விட (Purport) உள இயல் சார்ந்த உட்கருத்திருக்கும். அந்த நிலையில் சிறு சிறு எண்ணங்கள் காரணமும் விளைவும் என இணைக்கப்படுவதில்லை. ஆனால் உள இயல் சார்ந்த வினையாற்றல்கள் மூன்று துறைகளாகக் காட்சி அளிப்பதால் இணைக்கப்படுகிறது. அறிதல், உள் உணர்தல், விரும்புதல் (Knowing, feeling, willing) எடுத்துக்காட்டுகள்:

அமீலியா என்னைக் கொஞ்சம் அமோனியாவை முகர வைத்தாள் (முதல் விளைவு உள்ளுணரப்பட்டது—first fact Perceived) என்ன கெட்ட நாற்றம்! (மென்னுணர்வு—sentiment) இனிமேல் நான் முகர மாட்டேன் (விருப்பத் துணிவாற்றல்—Volition).

கிக்கி என் முடியை இழுத்தாள் (fact perceived). என் தோழன் கையை வெடுக்கென்று இழுத்தேன் (விருப்பத் துணிவாற்றல்). அது என்னைத் துன்புறுத்தியது (மென்னுணர்வு).

இம்மாதிரி முறைகளால் ஒவ்வொரு ஊக்கமும் கிரியா சக்தியும் அடியோடு அழிக்கப்படும் என்பது தெளிவு. ஆசிரியர் குறிப்பிட்டதைக் குழந்தை சொற்றொடர் சொற்றொடராகப் பின்பற்ற வேண்டும். இவ்வகையில் சொந்தமாகக் கட்டுரை புனையக்கூடிய திறமையாகிய பொறி ஒவ்வொன்றும் அணைக்கப்படும். முன் போல் படைப்பதற்குப் பொருளில்லாமலிருப்பதுடன் படைக்கும் திறமையே மறையத் தொடங்கி விடுகிறது. நாளைக்கு அவன் மனத்தில் படைப்பதற்குப் பொருள் அகப்பட்டாலும் அதை உபயோகிக்க அவனிடம் உட்தூண்டுதல் காண்பதரிது. அவனுடைய எண்ணங்களும் பள்ளிக்கூட மாமுக்கடைப் பிடிப்பால் (routine) விலங்கு போடப்பட்டு விடும்.

விவேக கல்வி ஆசிரியரால் இந்த முறையில் நடந்தேறுவது ஒரு மோட்டார் ஓட்டியை நினைவூட்டுகிறது. வண்டியின் ஓடும் மோட்டார் இயந்திரத்தை நிறுத்திவிட்டுத் தன்னுடைய கை வலுவால் ஓடவைத்தால் எவ்வாறிருக்கும். இவர் வண்டி தள்ளும் கூலியாளாகி, மோட்டார் வண்டியும் பயனற்று போகும். ஆனால், மோட்டார் வேலை செய்யும் பொழுது உள்ளார்ந்த உந்துவிசை வண்டியை ஓட்டுகிறது. வண்டி ஓட்டி பாதையில் வண்டி ஒழுங்காக ஓடி எந்த இடுக்குகளிலும் அகப்படாமலும், பள்ளத்தில் இறங்காமலும், வழியில் எவர்க்கும் எவ்விதத் தீங்கும் விளைவிக்காமலும் காத்துத் திருப்ப வேண்டும்.

இவ்வாறு வழி காட்டுவது ஒன்றுதான் இன்றியமையாதது. ஆனால் மெய்யான முன்னேற்றம் என்பது உள்ளத் தூண்டுதலால் ஒழிய வேறெவராலும் தோற்ற வைக்க இயலாது.

இதே மாதிரிதான் முதல் இத்தாலிய இலக்கியப் புது மலர்ச்சி தோன்றலாயிற்று. அப்பொழுது தாந்தேயை முதலாகக் கொண்டு உணர்ச்சியின் இருந்திருந்தாற் போன்ற உணர்ச்சி வெளியீடாகப் 'புதிய இனிய பாணி' என்று உருவாயிற்று.

'என்னையும் ஒருவனாக எண்ணிக்கொள். அன்பின் எழுத்தர் என எண்ணிக்கொள். அவர் மூச்சு விட்டால் என் பேனாவை எடுத்து அவர் சொல்லச் சொல்ல எழுது'[1]

எதையும் வெளிப்படுத்துவதற்குமுன் குழந்தை தன்னுடைய அந்தரங்க வாழ்வைப் படைத்துக்கொள்ள வேண்டும். வெளி உலகத்திலிருந்து கட்டுவதற்குத் தேவையான பொருள்களைக் குழந்தை தானாகத் தேடிக் கொள்ளவேண்டும். பொருள்களுக்கிடையில் காணப்படும் நியாயமான இணைப்பைக் காணுவதற்குமுன் அவன் தன் விவேகத்தை நன்கு பயிற்சி செய்விக்க வேண்டும். குழந்தையின் உளவாழ்வுக்குத் தேவைப்படுவதை நாம் அவனுக்கு அளிக்க வேண்டும். பிறகு அவனை ஆக்கச் சுதந்திரமாக விட்டுவிட வேண்டும். அந்த நிலையில் ஒளி படைத்த கண்களுடன் ஒரு மடல் வரைய ஓடி வரும் குழந்தையையோ ஒரு புதுமை ஊக்கத்தைத் தனக்குள் பண்படுத்திக் கொண்டே நடந்து தியானம் செய்கின்ற குழந்தையையோ சந்திப்பது ஒருவேளை அரிதாக இராது.

அந்தரங்கக் குழந்தையைப் பேணி வளர்க்க வேண்டும். அவனுடைய கருத்து வெளிப்பாட்டுக்கு ஆவலுடன் எதிர்பார்த்திருக்க வேண்டும். கற்பனைப் படைப்பு காலங் கடந்து தோன்றுவது ஏன்? ஏனென்றால் அந்தக்காலம் வரை விவேகப் படைப்புக்குரிய அளவு முதிர்ச்சி பெறவில்லை என்பதுதான். சிறு குழந்தைக்கு இருபது ஆண்டு நிறையும் வரை மீசை முளைக்காத காரணத்தால் குழந்தைக்கு மீசை ஒட்ட வைத்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கும் குழந்தைக்குக் கற்பனை உண்டாக்கப் புனைவை அவன்பால் திணிப்பதும்.

## அறநெறிப் பிரச்சினை

தொடக்கத்தில் அறிவியல் ஸ்தூல வாழ்க்கைக்கு வேண்டிய சீர்திருத்தத்தையும், தற்கால உடல்நல விதிகளையும் சமுதாயத்துக்குத் தன்னுடைய நன்கொடையாக அளித்ததென்று கூறினோமல்லவா? அவ்வாறு கூறும்பொழுது அறிவியலின்பால் ஓர வஞ்சனை காட்டியிருக்கிறோம். அறிவியல் உடல் வாழ்க்கையுடன் அறநெறி வாழ்க்கையையும் பற்றி அது கவனித்திருக்கிறது.

நுண்ம ஆய்வு நூல் (Bacteriology) கண்டுபிடித்தது. ஒன்று பற்றிச் சிந்தனை செய்தாலே போதும். சூழ்நிலையில் தொத்து நோய்களை ஏற்றிச்செல்லும் ஊர்திகள் (Vehicles) பற்றி அவ்வியல் கூறுகிறது. மக்கள் சமுதாயத்தின் அக்கறை இனி எதன்மேல்

[1] Carey's translation Purgatorio-Conto XXIV.

செலுத்தவேண்டும். அவ்வறிவு சமுதாயத்தில் எவ்வளவு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறதென்பது விளங்கும். இதற்கு முன் இல்லாத அளவுக்கு இக் கருத்துத் தீவிரமாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. முக்கியமாக ஈரமானதும் துப்புரவு அற்றதுமான இடங்களில் நுண்மம் பெருகுகிறது. வயிறு காய்ந்த மக்கள் மற்றவர்களைவிட எளிதில் நோய்வாய்ப் படுகின்றனர். அவர்கள் அவ்வாறு துன்புறவும் இறக்கவும் பிறப்புரிமை பெறுகின்றனர். அங்ஙனமே மிகக் களைப்படைந்தவர்களும் நோய்வாய்ப் படுகின்றனர். நோய்க்கு ஆளாகி இளமையிலே உயிர் இழப்பதற்கு ஈரமான இடத்திலும் துப்புரவு அற்ற இடத்திலும் வாழ்வதா காரணம்? அது அல்ல நோய்க்குக் காரணம். நுண்மத்தை எடுத்துச் செல்லும் ஊர்திகளைப் பொறுத்திருக்கிறது. நுண்மங்கள் அவை பிறக்குமிடங்களில் இருந்து எல்லாத் திக்குகளிலும் பரவுகின்றன. தூசி, பூச்சிகள், எல்லா உயிரினங்களாலும், ஏன் எல்லாப் போக்குவரவு சாதனங்களாலும் நுண்மங்கள் பரவுகின்றன. அவைகளின் எண்ணிக்கையை நம்மால் எண்ணவும் இயலாது. ஒவ்வொரு நோயாளியும் வியக்கத்தக்க அளவில் நோய்க்கும் மரணத்துக்கும் ஆளாகிறான். ஒரே ஒருவன் ஐரோப்பா முழுவதையும் நோயால் பீடிக்கச் செய்ய முடியும்.

போக்குவரவு சாதனங்கள் நுண்மங்களை மாகடல்களையும், கண்டங்களையும் உண்மையாகவே தாண்ட உதவுகின்றன. அட்லாண்டிக் மகா சமுத்திரத்தைக் கடக்கும் கப்பல்களையும், உலகத்தில் காணப்படும் இரயில் பாதைகளையும் பார்த்தாலே போதும். உலகத்தின் பல்வேறு பாகங்களில் உள்ளவர்களிடம் தொத்துநோய் நுண்மங்கள் எவ்வாறெல்லாம் பரவ முடியும் என்பதை உணரலாம். பொருள்கள் கைத்தொழில் பொருள்களாக மாற்றும் வகைகளை எண்ணினால் நுண்மங்கள் தினந்தோறும் செல்லும் பாதை நமக்கு விளங்கும். இந்த நுண்மங்கள் சமுதாயத்தில் உள்ள எல்லா இனத்தாரையும் நெருங்கி ஒன்று படுத்தி விடுகின்றன. ஏழை நெய்த ஆடையைச் சீமாட்டி அணிந்து கொள்கிறாள். அது இதுவரை அவர்கள் கரம்பட்டதே. அவளுடைய உணவு ஏழைகள் கைப்பட்டு வந்ததே ஆகும். பல முறை அவர்கள் தொடாததை அவள் வாயில் போடுவதில்லை. (நிலைமை அப்படி).

பணக்காரன் மூச்சு விடும் காற்றில் எலும்புருக்கி நோயால் (consumption) பீடிக்கப்பட்ட ஒரு தொழிலாளி தரைமேல் சிதற விட்ட நுண்மங்கள் கலந்திருக்கலாம். தப்பித்துக் கொள்ள வழியே இல்லை. புள்ளி விவரம் இதை உண்மையாக்குகிறது. தொத்து நோயால் உயிரிழப்பவரின் தொகை எல்லா நாடுகளிலும்

மிகவும் அதிகமாக இருக்கிறது. ஏழை—பணக்காரன் என்ற வேற்றுமையில்லை. பணக்காரரை விட ஏழைகள் இருமடங்கு சாகின்றனர் என்பது தெளிவு. இந்தத் தொல்லையிலிருந்து தப்பித்துக் கொள்வது எங்ஙனம்? இனிமேல் தொத்து நோய் பரவும் பிறப்பிடம் இல்லாமல் இருந்தால்—அதாவது உலகத்தில் எங்கணும் உடல் நலம் குன்றிய வாழ்விடம் இருக்கலாகாது. பட்டினியுடனும், தங்கள் வலிமையின் அளவுக்கு மீறிக் களைப் புறும்படி உழைக்காமலும் இருத்தல் வேண்டும். தனி ஒருவன் காப்பாற்றப்பட வேண்டுமானால், மனித இனமே காப்பாற்றப் படவேண்டும். 'மனிதர்களே ஒருவர்க்கொருவர் உதவி புரிந்து கொள்ளுங்கள். இல்லையேல் நீங்கள் அழிவீர்கள்' என்ற ஒரு உயர்ந்தகொள்கை பறை சாற்றுவதுபோல் இருக்கிறது.

பெரிய அளவில் சாவதைத் தடுக்கும் வகையில் உடல் நலத் தொழிலை நடை முறையில் அறிவியல் கொண்டு வந்திருக்கிறதென் பது உண்மை. நகரங்கள் விரிவடைந்து விட்டன. குடி தண்ணீர் வசதி ஏற்பாடாகியிருக்கின்றன. ஏழைகளுக்குக் குடியிருப்பு அமைக்கப்பட்டிருக்கின்றன. தொழிலாளி நலம் காக்கப்பட்டிருக் கிறது. மக்கள் வாழ்க்கையின் தேவைக்குச் சூழ்நிலை அனுகூல மாகவே இருக்கிறது. எந்தத் தரும ஸ்தாபனமும், எந்த அன்பினு லும், பரிவினுலும் இதுவரை இவ்வளவு செய்ததே இல்லை. தான தருமம் என்று கூறப்பட்டனவெல்லாம் அறநெறி நற்பண்பு களென்றே கருதப்பட்டுவந்தன. இதுமுதல் படியாகும். மனித குலத்தின் உடல் நலப் பிரச்சினையைத் தீர்க்க இது போதாதுதான், இதனுடைய எல்லையும் குறுகியதுதான் என்று எல்லாம் நமக்கு அறிவியல் எடுத்துக் காட்டியிருக்கிறது. எனினும், முதல் அடி எடுத்து வைத்திருக்கிறது. சாவுக்கு எதிராகப் போரிடுவதற்கு அதை அனுசரிக்க வேண்டியிருந்தது (தரும சிந்தனை). ஆனால், குறிக்கோளை அடைய வேண்டுமானால் அத்தகைய பணி எங்கும் நிறைந்ததாக இருத்தல் வேண்டும். அது சமூகத்தையே சீர்திருத்த வேண்டும். அப்பொழுது அது சமூக முன்னேற்றம் ஆகிறது. அப்பொழுது ஈவோன், இரப்போன் என்பது இராது. ஆனால் மனித இனமே தன்னுடைய நல்வாழ்வை மேம்படுத்திக் கொண்டு விடுகிறது. எல்லா மக்களும் சோதரர்கள், ஒருவர்க்கொருவர் நேசிக்கட்டும், இடது கை செய்வது வலது கைக்குத் தெரியாதிருக் கட்டும் என்றெல்லாம் சொல்லப்படும் கொள்கை நடைமுறையில் காட்டப்பட்டு விடும்.

மென்னுணர்வுக் காலத்தில் வறுமை ஒன்றைக் கண்டே பணக் காரன் பரிவு கொண்டான். ஏழை தனவந்தனுடைய உணர்வு களைப் பேணிக் கற்பிக்கவில்லை. அந்தக் காலத்தில் 'என் வாழ்வுக்

குத் தேவையானவைகளைக் கொடு. இல்லேயேல் நீ சாவாய்' என்று ஏழை கேட்டிருந்ததானுல், தனவந்தன் கடும் சினம் கொண்டிருப்பான். ஏழை தன்னுடைய அண்ணன் தம்பி என்றே அல்லது அவனுடைய உரிமைகளிலும், சாவின் அபாயத்திலும் தனக்கும் பங்குண்டு என்றே தனவந்தன் புரிந்து கொள்ளாமல் எட்ட நின்றான்.

இன்று அறிவியல் எல்லாவற்றையும் செம்மையான நிலேயில் நிறுத்திவைத்திருக்கிறது. ஈகை என்பது ஒரு அறநெறிக் கொள்கை யாக, மென்மைய உணர்ச்சியாகக் கருதப்பட்டு வந்தது. ஆனுல், இன்று அது நாகரிகத்தின் கொள்கையாவே அமைந்திருக்கிறது.

அறநெறியிலும் உடல் நலம் உட்புகுந்த தனி ஒருவனுக்குத் தன் வாழ்வின் விதிகளே அளித்திருக்கிறது. சிற்றின்பத் தோய்வு (debauchery) இன்று குறைந்திருக்கக் காரணம் அறிவியலாகும். பண்டைக் காலத்தில் சிற்றின்பக் கோட்பட்டாளர்களுக்கென்று (epicurean feasts) விருந்துகளுக்குப் பதிலாக இன்று உடல் நலம் பேணும் உணவுகள் படைக்கப்படுகின்றன. இவை அறிவுடன் தேர்ந்தெடுத்து உடலுக்கு வேண்டியதைத் தக்கமுறையில் சமைக் கப்படுவதால் இவ்வகை உணவு மதிப்புப் பெறுகிறது. கள்ளும் சாராயமும் ஏழைகளேவிடச் செல்வந்தர்களால் அதிகம் விலக்கப் படுகிறது. நம்மை நல்ல உடல் நலத்தில் இருக்க வைப்பதற்கு உண்கிறோம். ஆதலால் அளவுக்கு மீருமலும் நச்சில்லாததுமாய் இருத்தல் வேண்டும். பண்டை அறநெறி இதையே போதித்தது. அது மீதூண் கொள்வதைத் தீயொழுக்கம் என்றது.[1] உண்ணு விர தத்தையும், பட்டினியையும் நல்லொழுக்கங்கள் என்று கருதி வந் தனர். செல்வந்தர் மதுபானத்திற்குப் பதிலாக எலுமிச்சம்பழச் சாற்றைத் தாமே விரும்புவார்கள் என்றே, அல்லது அந்தப் பெரு விருந்துகளெல்லாம் மறைந்து அவைகளேப் பற்றிப் பழங்கால விநோதங்கள் என்ற அளவில் கதையாக வரையப்படும் என்றே, அந்த காலத்தில் எவராவது கற்பனே செய்து கொண்டிருக்க முடியுமா? இல்லே. அது மட்டுமல்ல. தற்காலத் துறவிகளில் எவரும் தமது நற்பழக்கத்தைப் பற்றிப் பெருமைப்படுவதில்லே. அவர்கள் வேத நூலில் குறிக்கப்பட்ட பேருண்மைக்கு இணங்கி நடப்பதுபோல் காட்டிக் கொள்கின்றனர்.

'நீ பட்டினி கிடக்கும் பொழுது கபட வேடதாரி போல் வாடின முகத்தோடிராதே. உன் தலேக்குத் திருநெய்யாட்டு (எண்ணெய் பூசு anoint). பொது மக்களுக்கு நீ பட்டினி கிடப் பதுபோல் காட்டிக் கொள்ளாமல் மறைந்து உன்னே உற்று நோக் கும் இறைவனுக்கு அறிய நடந்து கொள்.'

[1] மீதூண் விரும்பேல் (ஔவையார்)

பண்டை உபதேசியர்களில் ஒருவர் இந்தத் துறவிகளுடன் பேசினாரானால் அவர்களுடைய உரையாடல் அவருக்கு செவியறி வுறுத்தும் மார்கரீத்தா ஆஃப்வாலோய் (Marguerite of Valois) என்பவர் காலத்தில் வாழ்வுக்கும் இன்பத்துக்கும் உரிய கேலிப் பேச்செல்லாம் என்னாயிற்று? பொக்காசியோ (Boccaccio) வைப் பற்றிய கதைகளை ஆங்கிலேயர் சமூகத்தில் தர்க்கம் செய்ய இன்று இயலாது. மார்கரீத்தா ஆஃப் வாலோயைச் சூழ்ந்திருந்த சமுதாய மட்டத்தில் இன்னும் தாழ்ந்தவர்களான எந்தத் தற்கால மேற் குடியாட்டு மக்கள் குழுவினருடன் அவ்வாறு பேச முடியாது. இப்பொழுதெல்லாம் சரியில்லாத-ஒரு சொல்லை உச்சரிப்பதற்கும் அஞ்சுகின்றனர். நம்முடைய உடலில் நடைபெறும் மிக எளிய தொழிலைக் குறிப்பிடுவதற்கோ, அல்லது தோலுடன் நேரடியாகத் தொட்டுக் கொண்டிருக்கிற ஆடைகளின் பெயரைக் கூறுவதற்கோ அஞ்சுகின்றனர். அவர்கள் உயர்ந்த பொருள்கள் பற்றியே பேசு கின்றனர். நமக்குச் சொல்லிக் கொடுக்கக் கூடியவர்களையே சிறந்த உரையாடல் ஆற்ற வல்லவர்கள் என்று கருதுகின்றனர். தங்க ளுடைய உலாக்களில் தாம் கண்ட மக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிக் கூறுகிறார்கள். அல்லது அரசியல் வாதிகள் அன்றைய நிலைமை பற்றி எடுத்துரைக்கின்றனர். அதிகமான சிரிப்போ கேலிக்கூத்தோ கடும் கைச்சாடைகளோ அனுமதிக்கப்படுவதில்லை. ஒவ்வொருவரும் அவரவர்களின் உறுப்புகளை அமைதியாக வைத் திருக்கின்றனர். உரையாடலுக்கு இன்றியமையாத உயிர்ப்பூட்ட வல்லதும் வெறுக்கப் படாததுமான சைகைகளும் விலக்கப்படுகின் றன. குரலும் அயலார் கேட்பதற்கும் அரிதாயிருக்கும் அளவுக்கு ஒலியில் குறைந்து விடுகிறது, 'இவர்கள் செண்ட் பால் (St. Paul) கூறிய போதனையை அளவுக்கு மீறிப் பின்பற்றிவிட்டனர். மண மாகா ஆண் பெண் கல்வி பற்றியும் (fornication) எல்லா மாசுகள் பற்றியும் உங்களிடை ஒரு முறையும் முனிவர்க்குரிய நற்பழக்கம் போல் உரைக்கப்பட வேண்டாம். நமக்கு இணக்கமில்லாத கொச்சை மொழியையோ முட்டாள்தனமான பேச்சையோ நையாண்டி வசை மொழியையோ பகருதல் ஒழிக்க.'

பழக்க வழக்க நடைமுறைகளின் முன்னேற்றத்திலும் உடல் நலமே மறுபடியும் நாண்மரபு கோலத்திற்கு (fashion) வழிகாட்டி யாக இருந்திருப்பதை நாம் காண்கிறோம். பையப்பைய ஆடை களை எளிமையாக்கியிருக்கிறது. நறுமண மயிர்ச்சாந்து (pomatum), ஒப்பனைச் செவ்வண்ணச் சாயம் (rouge) ஆகியவை நீக்கப்பட்டன. கிரினோலைன்' (crinolines)[1] அறவே ஒழிக்கப்பட்டது. இறுக்கு வார்க் கச்சும், ஜோடுகளும் மாறுதல் அடைந்தன. நீண்ட அடைப்

1 குதிரை மயிராலும், சணலாலும் செய்யப்பட்டு விறைப்பாக ஏந்தலாக் கப்பட்ட பழங்காலப் பெண்டிர் உள் ஆடை.

பின் தொங்கல்கள் தெருக்களில் காணுமல் மறைந்தன. ஒரே மாதிரி உடையைப் புகுத்தியிருக்கிறது. இத்துணையும் உடல்நலத்தால் ஏற்படுத் தப்பட்டவை. பண்டைக்காலத்தில் வாழ்ந்தவர் ஒருவர் இன்று நம்மிடையே தோன்றினுராளுல், 'ஏன் இந்த மக்கள் தவக்கோலம் பூண்டனர்! நகை அணியாத மக்கள், தலைமுடி குட்டையாக வெட்டின கோலத்தில் செல்கின்றனர்! மகளிர் தம்முடைய இடம்பம் எல்லாம் மேம்பாடுறச் செய்யும் வகையில் வெறுத்து விட்டுச் செயற்கை முடி அணியாமலும், முகத்தில் வண்ணம் பூசாமலும் கூந்தலைச் சாதாரண முடிச்சுப் போட்டுக்கொண்டு செல்கின்றனர்! சீமாட்டிகள் விலையுயர்வு அதிகமில்லாத ஆடைகளை அணிந்து இருக்கின்றனர்! மிகவும் எளிமையானவை துறவற மடத்தார் அணியும் ஆடை போன்றதாகவும் ஏழைகள் தரித்துக் கொள்ளும் ஆடை போலவும் இருக்கிறதே! வாகனங்கள் கறுப்பாகவும், சவக்கோல வண்டி போலும், பணியாட்கள் அணிவதும் அனுதாபம் குறிக்கும் அடையாள ஆடையாக இருக்கிறதே? வீதிகளில் களியாட்டம் ஏதும் மகிழ்ச்சியூட்டுவதற்கில்லையே? ஒவ்வொருவரும் மௌனமாகவும் சோர்ந்த நடையினராகவும் சென்றுகொண்டிருக்கின்றனரே?' என்றெல்லாம் கேட்பார்.

இத்தகைய காட்சி துறவு பூண்ட காலத்தைக் காட்டுவதன்று ஆனுல் சாதாரண அன்ருட வாழ்க்கையையே குறிக்கிறதென்று —பண்டைக் காலத்தில் அதிகப்படியான இடம்ப வாழ்க்கையைத் தவிர்க்க பிரசாரம் செய்து வந்த மக்களுக்கு—எவரால் நம்பிக்கை ஊட்ட முடியும்?

இவர்களைப் பொறுத்தமட்டில் இந்த நவீன நாகரிக மக்கள் தாங்கள் ஏதோ துன்புறும் வாழ்க்கைக்கு உட்படுத்தப்பட்டவர்களாக எண்ணிக்கொள்வதில்லை. அதற்கு எதிர்மாருகப் பண்டைச் சமுதாயத்தை அச்சமும் வெறுப்பும் கொண்ட கண்ணுடன் காண்கின்றனர். ஆடம்பர ஆடைகளாலும், முகத்துக்குப் பூசிக் கொள்ளும் செவ்வண்ணங்களாலும் மனிதன் அடிமைப்பட்டிருந்ததையும், கட்டுக்கு மீறிச் சிற்றின்பத்தில் மூழ்கினதையும், தொத்து நோய்களால் மாண்டதையும் வெறுக்கிருர்கள். பயனற்ற பல தளைகளிலிருந்து அவர்கள் தம்மை விடுவித்துக் கொண்டிருக்கிருர்கள். வாழ்க்கையில் மேம்பட்ட இன்பத்தைக் கண்டிருக்கிருர்கள். இன்று வாழ்க்கையைச் சுவைமிக்கதாகச் செய்வதற்கு அமைந்துள்ள இன்ப நலம் அனைத்தும் சென்ற நூற்ருண்டுச் சீமான்களுக்குக் கனவிலும் காண இயலாத இரகசியமாக இருந்திருக்கும்.

ஒருவேளை ஒரு காலத்தில் துறவிகளும், உலகத்தில் வாழ்ந்து வந்த மற்றவர்களும், ஒருவர்க்கொருவர் இம்மாதிரி எண்ணிக் கொண்டிருந்திருக்கலாம். உலகப் பற்றுதலைக் களைந்து தற் பெருமையை வெறுத்த துறவிகள் ஓர் இரகசியத்தைப் பெற்றிருந் தனர். இதுவரை அறியப்படாத இன்பங்கள் அதில் அடங்கியிருந் தன. அவர் வாழ்ந்த நூற்றுண்டின் இன்பங்களை எல்லாம் வெறுப் புணர்ச்சியுடன் கண்டனர். அதே சமயத்தில் தங்களை அறியாத மக்கள் உச்சந்தலையில் தொங்கும் போலி முடியிலிருந்து குறுகிய ஜோடுகளில் ஒடுக்கப்பட்ட பாதங்கள் வரை அடிமையாய் இருந் தவர்கள் சாக்காட்டு வழிகளை 'வாழ்வும் இன்பமும்' என்றழைத்து வந்தனர்.

அறிவியல் இன்னும் ஒரு நல்லதைச் செய்திருக்கிறது. அது அறநெறி வாழ்க்கைத் துறையைச் சார்ந்தது. சமூக அறிவியல் (sociology), புள்ளியியல் (statistic methods) முறைகளால் தீயொழுக்கம், குற்றம் ஆகியவை சார்ந்த பிரச்சினைகள் வெளிப் படுத்தப் பட்டிருக்கின்றன. புற உண்மைகள் ஆயப்பட்டிருக் கின்றன. குற்றவாளிகளின் மனித இனநூல் (criminal anthropo- logy) 'தாழ்ந்த வகை (inferior type) பற்றி வெளியாக்கியிருக் கிறது. அவர்கள் தங்கள் சூழ்நிலையில் கண்டபடி அறநெறித் தீமைகளாகிய தொத்து நோய்களுக்கு எளிதில் ஆளாகும் முற்சரிவு (predisposition) வழி வழியாகப் பெற்றிருக்கிறுர்கள் என்று தெளி வாக்கப்படுகிறது. இனச்சிதைவு (degeneration)பற்றி மோரெல்லி (Morel) னுடைய கொள்கைகளும் அதன் தொடர்பாகத் தோன் றிய குற்றவாளிகள் பற்றி லொம்ப்ரோஸோவின் (Lombroso) கருத்துகளும் குழப்பத்துக்குள்—இருளுக்குள் ஒளியைக் கொண்டு வந்திருக்கிறது. என்பதற்கு ஐயமில்லை. இதற்கு முன்பு மனித நற்பண்புக்கும் தீய பண்புக்கும் இடையே கருத்து வேறுபாடு இருந்து வந்தது. இனச் சிதைவின் வகைகள் அனைத்தின் வேர்கள் பெரும்பாலும் நரம்பு மண்டலத்தில் ஊன்றியிருக்கின்றன. அவை களால் ஆக்கப்பட்ட நெறிபிறழ்வான ஆளுமைகளெல்லாம் இயல் பான இனத்திலிருந்து மாறுபடுகின்றன—தடம் திரும்புகின்றன. அவர்களுக்கு வேறு விவேகமும், வேறு அறநெறியும் இருக்கின்றன. போலிப் புலனுணர்வு (perception), போலித்தர்க்கம் (reasoning) மருட்சி (illusion), உள் தூண்டல்கள் (impulses), தயக்கநிலைகள் (irresolutions), மற்றும் ஆர்வ வெறி (crazes) ' ஆகிய இயற்றிநிலை யின் ஒழுங்கற்ற நிலை முதலியவை தோன்றுகின்றன. நெறி பிறழ்ந்த விவேகம் ஒழுங்கான மயக்கங்களை உண்டாக்கிக் கொள் கிறது. இவைகள் எல்லாம் தத்துவ ஞானக் கொள்கைகள் என் கிறேம் (philosophical principles). அதனுல் இவர்களை வழக்க மீறிய சமூகப் பேர்வழிகள் (extra social beings) என்கிறேம்.

பொதுவான நரம்பு வலிமையின்மையும், தொழிலில் அக்கறை காட்ட முயலாத திரியும் விவேகமும் இப்பேர்வழிகளைப் படைக்கச் சக்தியற்றவர்களாக்கி விடுகிறது, ஆதலால் இவர்கள் பிறரால் படைக்கப்பட்டதைக் கொண்டே வாழ்கின்றனர். ஆக்கத் தொழிலில் ஈடுபட விருப்பம் இன்மையும், கொள்ளையும், சூறையும் அடிக்கும் உள்தூண்டுதலும் கூடி இவர்களைச் சூழ்நிலையில் காணப்படும் எல்லாத் தீமைகளையும் உள்ளே கொண்டு குற்றவாளி ஆக்க வழிவகுக்கின்றன. இவர்கள் 'தீயவர்கள்'. ஆனால், நெருங்கி உற்று நோக்கினோமானால், நாம் கவனிக்க வேண்டியது முறை; காணவேண்டியது தீமையன்று. ஆனால் மனத்திரிவு, நோய், சமூகம் இழைத்த பிழைகள், ஆகியவைகளையே நாம் ஆய வேண்டும். நிலைமை அதுவானால் இந்தக் 'கெட்டவர்கள்' தாமாக ஒரு குற்றமும் புரியவில்லை. இந்த இன்பமில்லாச் சூழ்நிலையில் அவர்கள் பிறந்தார்கள். சமூகம் அவர்களை அழிவில் உந்துகிறது. அவர்கள் உண்மையில் 'குற்றவாளிகள்' (Victims) 'பலியாள்' ஆகின்றனர். வரலாறு முழுவதும் துருவி ஆராயும் பொழுது இந்த உண்மை வெளியாகிறது. அவர்கள் வேட்டையாடப்படுகின்றனர். குழந்தைமையிலிருந்து புறக்கணிக்கப்பட்டிருக்கிறார்கள். மனக் குறைபாடும், விருப்பத் துணிவாற்றல் கோளாறுகளும் இருப்பதால், பிறருடைய அன்பைப் பெற முடியவில்லை. இவர்களுடைய உடல் தோற்றமும் கவர்ச்சிகரமானதாகவும் இல்லை. இதுவரை தாயின் அடக்குமுறை அட்டூழியத்திலிருந்து பள்ளிக்கூட அடக்குமுறை அட்டூழியத்திற்கும், இறுதியாகச் சமுதாயத்தின் அட்டூழியத்திற்கும் ஆளாகித் தங்கள் மேல் எல்லா விதத் தண்டனைகளையும் விதித்துக் கொள்கின்றனர்.

'மனித இனத்தின் பிணங்கள்' (dead ones of the race) என்று பெயர் கொடுத்து மோரெல் என்பவர் இவர்களைப்பற்றி வடிக்கும் முதல் சித்திரம் உணர்வூட்டுவதாய் இருந்தது. அவருடைய முதல் தத்துவம் ஒரு நிகழ்ச்சித் தொகையைப் பெற்றிருக்கிறது. மிகவும் துல்லியமாக இராவிடினும் இயல் நிகழ்ச்சியை ஓரளவுக்கு ஒன்று கூட்டிவிடுகிறது. இழிவின் காரணம் மனிதனைப் பாதிக்கும் பொழுது அவன் குறைபாட்டுக் குழந்தைகளைப் பெறுகிறான். இக்குழந்தைகளின் குறை இவர்களைத் தொடர்ந்து வரும் இரண்டு மூன்று தலைமுறைக்குக் கூடுதலாகவே போய்க் கொண்டிருக்கும். இறுதியில் மிகவும் கெட்டழிந்தவர்கள் இனி இனம் பெருகாத அளவில் இந்த இழிவு அடியோடு மறைந்து விடுகிறது. மோரெல் கருத்துப்படி பித்தர்கள், குற்றவாளிகள், காக்காய் வலிப்புடையவர்கள்—(இழுப்பு நோய்) உடையவர்கள், முட்டாள்கள் ஆகியோர் மனித இன அழிவில் வருத்தம் தரும் தொடர் ஆவார்கள். வலிமையுடையவர்களை விட்டு இறப்பவன் உண்மையாக இறப்ப

தில்லை. அவர்களில் தன்னைக் காண்கிறான். இளமை முதிர்ச்சி பெறுகிறது. சீர்கேடுற்றவனே சாகிறான். ஏனென்றால் அவன் இனமே மறைகிறது. அவன் படைத்த ஏதோ மிகச்சில சீர்கெட்ட தலைமுறைகள் 'உயிருள்ள வேதனை'யாகப் பேர் சொல்லிக்கொண்டு எப்படியோ வாழ்கின்றன. உடல் நலமுள்ளவர் நடுவில் இந்தச் 'செத்துக் கொண்டிருக்கும் இனம்' தன்னுடைய வலிமை யின்மையையும், ஏமாற்றங்களையும், இழுப்பு நோய்களையும், எளிதில் சினம் கொள்ளுதலையும், தான் என்ற அகந்தையையும் காட்டிக்கொண்டு இறுதியில் உயிருள்ளவர்களின் சமாதிகளாகிய பயித்தியகாரர் மருத்துவ நிலையத்திற்குள்ளும் சிறைக்கூடத்துக் குள்ளும் போய்ச் சேருகின்றனர்.

என்ன உயிரோவியம்! மனிதனுக்கு என்ன எச்சரிக்கை! ஒரு 'பிழை' அவனுடைய உயிருக்கே உலை வைப்பதாகும். ஏனென்றால் வேதநூலில் சாபம்போல் அது பல தலை முறைகளில் பாய்ந்து இறுதி அழிவுக்குக் கொண்டுவந்து விடுகிறது.

பால் மணம் மாறாக் குழந்தையின்மேல் தண்டனை விழுவ தென்பதை எண்ணும்பொழுது, என்ன கொடுமையாக இருக் கின்றது! நம்முடைய இன்றைய வாழ்க்கையில் எல்லாம் அடங்கி விடுவதில்லை என்பது எவ்வளவு தெளிவு. ஆனால், இந்த வாழ்வுக்கு ஒரு தொடர்ச்சி இருக்கிறது. அப்பொழுது நம்முடைய வாழ்வின் மெய்யான பரிசையோ தண்டனையையோ நாம் பெறுவோம். தேர்தல் பெருமளவு நம் கரங்களிலேயே இருக்கிறது. உடல் வலிமையும், கட்டழகும், இனம் பெருக்கும் உள்ளமகனை விட்டு விட்டுப் போவோமா அல்லது அங்கக் குறைவும், உடல் நலம் குன்றியும், மலடனும், நம்மைப் புரிந்து கொள்ள இயலாதவனும், அன்பு கொள்ளாதவனும் ஆன மகனை விட்டுவிட்டுப் போவோமா? தலைமுறை தலைமுறையாக வரும் உடல் நலமே அறநெறி சார்ந்த உடல் நலத்தின் முக்கிய பகுதியாகும். தனிப்பட்டவரின் வாழ்வு கடைத்தேற வேண்டுமானால் மன்பதை (மனித இனம்)யின் முழு உடல் நலத்தையும் பற்றிக் கவலை எடுத்துக்கொள்ள வேண்டும். இது மெய்யாயின் உடல் நல விதிகளையும் வாழ்க்கை விதிகளையும் தீவிரமாக அனுசரிப்பதால் மனித இனத்தின் கடைத்தேறுதலைப் பெறமுடியும். மதுபானம், எல்லாவித நச்சுப் பொருள்கள், அள வுக்கு மீறி உழைத்தல், உடலுக்குள் தோன்றும் நோய்கள், நரம்பு சக்திகள் சிதறுதல், தீயொழுக்கம், சோம்பல் ஆகியவை சீர்கெட் டழிவதற்குக் காரணமாகும். மனித இனத்தின் கடைத் தேறுத லுக்கு இவ்வழிகளைத் தொடர்ந்து பிரசாரம் செய்து வந்தது அறி வியலே. இம்முறையால் நல்லொழுக்கத்தைப் பற்றிய கருத்தைப் பரவச் செய்தது. இதுவரை 'மன்னிப்பு' என்பது மதம் சார்ந்த

அறநெறியில் கண்ட அறிவு கடந்த சமய உண்மைகளில் ஒன்ருய் இருந்துவந்தது. அறிவியல் அத்தகைய மன்னிப்பை ஆழப் பதிய வைத்தது.

சில ஆண்டுகளுக்கு முன் ஒருவர் எவ்வளவு இரக்கமும், பெருந் தன்மையும் பொருந்தியவராய் இருந்தாலும் சமுதாயப் பண்பற்ற இளங் குற்றவாளி (delinquent) ஒருவனை அறிவியல் நோக்கினது போல் நீதியுடனும், பரிவுடனும் கண்டு இருந்திருக்க முடியுமா? சமூகக் காரணங்களால் ஆன குற்றவாளிக்கு நாம் அனைவரும் பொறுப்பாளி என்று அறிவியல் எடுத்துக்காட்டியிருக்கிறது. தாழ்ந்த தனியவர் செய்த பாவங்களுக்கு நாமே நம்மைக் குற்றம் சாட்டிக்கொள்ள வேண்டும். அவனுடைய மறு பிறப்புக்கு— இழப்பு மீட்புக்கு நம்மால் இயன்ற அனைத்தையும் நாம் செய்ய முன் வரவேண்டும். இந்த உண்மையைத் துறவிகளே தம் உள்ளுணர்வால் (intution) அறிந்திருந்தனர். தம்முடைய மதிப்பை நலனை எல்லோர்க்கும் பொதுவாக அளித்தனர். எல்லோருடைய பொல்லாங்குகளின் பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டனர். செயின்ட் ஜான் கிரைஸோஸ்டம் (St. John Chrysostom) கூறுகிருர்: 'நீங்கள் உலகுக்கே பொறுப் பாளியாவீர்கள். உங்களுடைய கடைத்தேறுதலுக்கு மட்டு மன்று. ஆனுல், அகில முழுவதின் கடைத்தேறுதலுக்கே பொறுப்பாளி ஆவீர்கள். எவன் ஒருவன் இறையருள் வேண்டு கிருனே அவன் மனிதகுலம் முழுவதின் அக்கறைப் பளுவைத் தன் மேல் ஏற்றிக் கொள்ள வேண்டும்.'

ஒரு டேஜஸ் என்பவர் (Tages) நம்முடைய மனித இனத்தின் குறைபாடுகளனைத்தையும் துடைத்துவிட்டு, அதேபோல் எல்லா நோய்களுக்கும், உடல் மெலிவுக்கும், மன்பதையின் துன்புறுவதற் கும் நாம் மந்த உணர்ச்சி காட்டும் வகையில் ஓர் அறநெறியால் நம்மை மாற்றி விட்டிருந்தாரென்ருல், புதுப்பிக்கும் அறிவியல் தோன்றியிருக்கவே முடியாது. விளைவுகள் இன்னவை என்று உணரும் பொழுதுதான் உடல் நலம் குன்றிய காரணங்களை அறிய முடியும். அப்பொழுதுதான் மன்பதையை (மனித இனம்) அழி விலிருந்து காப்பாற்ற முடியும். மரணத்தின் காரணம் நுண்மத் தைப் போல் கண்ணுக்குப் புலனுகாதது; தொட்டறியமுடியாதது; மனத்தால் பற்ற முடியாதது. அமுதத்தைப் பருகுவதாக எண்ணு பவன் நஞ்சினை அருந்தலாம். நோயுற்றவர்களும் இழிவுற்றவர் களும் அவர்களை நமக்கு முன்னெச்சரிக்கையாகக் காட்டிக் கொள் ளாதிருந்தார்களேயானுல், வந்தது அழிவு நமக்கு! நம் அழிவுக்குக் காரணமான அச்சுறுத்தலை நம் நெஞ்சறியாத பிழைகளைச் சோதித் துக் கொள்ள நமக்கு முன்கூட்டி அறிவிக்காது போனுல், வந்தது

அழிவு! மருத்துவ நிலையத்தில் இருக்கும் தொண்டர்கள் நோயாளி களை பாதுகாப்பதுடன் அறிவியல் நின்று விடுவதில்லை. ஆனால், அது சாதாரண மன்பதை, தனக்கு வரப்போகும் அபாயத்தை அறியாத மன்பதையின் நல்ல கவாடங்களைத் திறந்துகொண்டு எதிர்த்திக்கில் சென்றது. அறிவியலின் முடிவுப் பலன் நோயாளியைக் காப்ப தன்று. ஆனால், உலகம் முழுதளாவிய உடல் நலமாகும். நோய் வாய்ப் பட்டவர்கள் அனைவரும் ஓரிடத்தில் கொண்டுபோய் வைக்கப்பட்டு அவர்கள் பேணப்படுகின்றனர். இதனால் நம் முடைய உடல் நலத்துக்கு ஆதரவு அளிக்கிறது. பொதுச் சாவின் எண்ணையும் குறைக்கிறது. இவ்வளவு உடல் நல இன்ப மும் நமக்குக் கிடைப்பது நோயாளிகள் தனித்திருப்பதால்.

இன ஆக்க மேம்பாட்டியல் (eugenics) நமக்குப் புத்துயிரளிப் பதாக உறுதிமொழி தருகிறது. கடந்த காலத்தைவிட இக் காலத் தில் முன்னிலும் நிறைந்த செழுமையும் இன்பமும் கூடிய தலைமுறை தோன்றும் என்ற அகில உலக நம்பிக்கையை ஊட்டு கிறது. இதற்குக் காரணம் மெலிந்த மனத்தினர், காக்கை வலி நோயாளிகள், உடல் நலமற்றவர் ஆகியோர் அனைவரையும் கருணை யின்றி ஓரிடத்தில் கூட்டுவிப்பதால் இந்த உறுதிமொழி சாத்திய மாகிறது. உடல் நலத்தை நாடி இன்னும் நல்லதோர் உலகத்தின் தலைவாசலுக்கு இட்டுச்செல்லும் வழிகளுக்காக நாம் தேட வேண்டியிருந்தது.

மக்களுக்கு இயேசுநாதர் கடைத்தேறும் வழியைக் காட்டும் பொழுது சமூகத்தால் உதறித் தள்ளப்பட்டவர்களைச் சுட்டிக் காட்டினார். அவர்களிடம் பொல்லாங்கின் விளைவுகளெல்லாம் தெற்றெனக் காணக்கூடும். ஏனென்றால், பொல்லாங்கின் கார ணங்களெல்லாம் மிகவும் நுண்மையானவை; தொட்டுணர முடி யாதவை. அவைகளை நேரடியாகக் காண முடியாது. 'செவிகளால் கேட்கிறீர்கள்; புரிந்து கொள்வதில்லை: கண்களால் காண்கிறீர்கள்? பார்ப்பதில்லை?'

மற்றொன்று அதனுடைய நிறைந்த விளைவுகள் தெளி வானவை. மனிதனுடைய கடைத்தேறுதலுக்காக வெறுப்பு மனப்பான்மையில்லாமல் அவர்கள் அனைவரையும் பரிவுடன் ஓரிடத்தில் ஏற்றுக்கொள்ள இயற்றிநிலை ஒப்புதல் செய்ததே பெரிது. செயின்ட் மாத்யூ (St. Mathew) இறுதித் தீர்ப்பின்போது துறக்கப்பட்டவர்கள் காக்கப்பட்டவர்களிலிருந்து பிரிக்கப்படு வார்கள். இறைவன் இரண்டாமவர்களைத் தன் வலக் கைக்கு அழைப்பார். அழைக்கும் பொழுது, 'வாருங்கள் என் தந்தையின் அருள் பெற்றவர்களே! உலகத்தின் அடித்தளத்திலிருந்து ஆயத்த

மாக்கப்பட்ட அருளாட்சியைப் (kingdom) பெறுங்கள். ஏனென்றால், நான் பசித்து வந்தேன். எனக்கு உண்டி (புலால்) அளித்தீர்கள். நான் நீர் வேட்கையுடன் வந்தேன். நீங்கள் பருக நீர் கொடுத்தீர்கள். நான் ஆடையற்று வந்தேன். நீங்கள் ஆடை அணிவித்தீர்கள். நான் சிறைப்பட்டிருந்தேன். நீங்கள் அங்கு வந்தீர்கள்' என்று கூறினர். இதைக் கேட்ட நேர்மையானவர்கள் ஏசுநாதரை வினவினர்கள்: 'பசியுடனும் நீர் வேட்கையுடனும் அல்லது ஆடையின்றியும் நாங்கள் உங்களை எங்குக் கண்டோம்; எங்கு உம்மிடம் வந்தோம்' என்றனர். இவர்கள் ஐயத்தைக் கேட்ட இறைவன், அவர்களுக்குப் பதில் உரைக்கும் வகையில் இவ்வாறு கூறினர்: 'என்னுடைய சோதரரில் ஓர் ஏழைக்குச் செய்தது எனக்குச் செய்தது போல் ஆகும்' என்றார். பிறகு அவர் தம் இடக் கைப்பக்கம் உள்ளவர்களுக்கும் கூறுவார்: 'என்னிடமிருந்து அகலுங்கள் போங்கள் பாவிகளே! அழியா நெருப்பில் கிடங்கள்! ஏனென்றால், நான் பசியுடன் வந்தேன். நீங்கள் உண்டி கொடுக்கவில்லை. நான் நீர் வேட்கையுடன் வந்தேன்; நீங்கள் பானம் தரவில்லை. நோய்வாய்ப்பட்டேன்; சிறைப் பட்டேன்; நீங்கள் என்னை எட்டியும் பார்க்கவில்லை' என்று கூறினர். இதைக் கேட்டதும் அவருக்கு அவர்கள் சொல்கிறார்கள்: 'பசியுடன் நீங்கள் வந்ததை எங்குக் கண்டோம். அல்லது நீர் வேட்கையுடனுகவோ இதுவரை தெரியாதவராகவோ, ஆடையற்றோ, நோயுற்றோ, சிறைப்பட்டோ இருந்ததை எங்கு நாங்கள் கண்டோம். எங்கு உமக்குப் பணியாற்றாது போய்விட்டோம்?' என்று கேட்டனர். 'தனி ஏழை ஒருவனுக்கு என்று நீங்கள் செய்யவில்லையோ அன்று எனக்கும் செய்யவில்லை' என்று இறைவன் கூறினர்.

கிறித்தவரல்லாதார்க்கும் (heathen)[1] கிறித்தவ அறநெறிப் பண்புக்கும், விவேகத் திட்பமுடைய கிரேக்கத் தத்துவத்துக்கும் தற்கால நடைமுறை அறிவியலுக்கும், கலையுணர்ச்சிக் குறிக்கோளுக்கும் வாழ்க்கைக் குறிக் கோளுக்கும் உள்ள வேற்றுமை அதுவே.

* * *

எனவே, அறிவியல் கிறித்தவ மதத்தை ஓரளவுக்கு நம்மைப் புரிந்துகொள்ளும்படி செய்திருக்கிறது. பல நூற்றாண்டுகளாகவும், பல நாடுகளிலும் கிறித்தவ நெறியைப் பின்பற்றிய துறவிகளின் குழு உண்மையான வாழ்க்கையைப் பின்பற்றினர்களென்று நாம் கூறிவிடலாம். ஏனென்றால், அவர்கள் வேறொரு வாழ்வை

[1] கிறித்தவரோ, யூதரோ, இஸ்லாமியரோ அல்லாத புறச்சமயத்தார்.

யும் அறியார். அதையேதான் அறிவியலும் இன்று வெளியாக்கி யிருக்கிறது.

ஒழுங்கில்லாமல் கட்டுக்கு மீறி நடந்துகொண்டிருந்த காலத்தில் இந்தத் துறவிகள் உடல் நலம் அங்கீகரிக்கும் அளவுக்கு நல்ல உணவைப் புசித்தார்கள். ரொட்டியை அப்படியே உண்டனர். சமைக்காத பழம், கறந்த பால், பல காய்கறிகள், சிறிதளவு இறைச்சி, முதலியவை அவர்கள் உண்ட உணவாகும். மிகையாக உண்ணவில்லை. ஆனால், வேளா வேளைக்கு உண்டனர். தூசியும் பிறவும் நிறைந்து கெடுக்கப்பட்ட காற்றுடைய மக்கள் தொகை அதிகமாக உள்ள நகரங்களை விட்டுவிட்டு நாட்டுப்புறத்தில் பரந்த இடத்தில் நிறையாக இடவசதி உண்டான வீடுகளில் வசித்து வந்தார்கள். அவர்கள் ஓரளவுக்குத் தனிமையாக வாழ்ந்தார்கள். முடிந்தால் உயர்ந்த இடத்தில் இருக்கும் குடியிருப்பை விரும்பினார்கள். அவர்களுடைய இன்ப வாழ்க்கை, பஞ்சணை தட்டு முட்டுச் சாமான்களை உபயோகிக்கவில்லை. வெட்டவெளியும், காற்றோட்டமும் கூடிய பரந்த தரையை அவர்கள் விரும்பினார்கள். இறுக்காத ஆடைகள், சௌகரியமான மிதியடிகள், அல்லது வெறும் பாதம், கம்பள மேலங்கி, உடற்பயிற்சி, விவசாயத் தொழில், சுற்றுலா இவைகளெல்லாம் அவர்களைத் தற்கால விளையாட்டுப் பந்தயங்களுக்குத் தேவைப்படும் முன்னோடிகளானார்கள். ஒவ்வொரு 'கான்வென்டும்' அதைச் சுற்றிலும் நற்செயல் செய்து வந்தது. ஏழைகளை வரவேற்றது; நோயுற்றவர்களைப் பேணிற்று; இந்த வில்லங்கங்களற்ற சுதந்திரச் சிறப்புரிமை கொண்ட வாழ்வெல்லாம் ஒரு தனி நிலை என்றும் அது மன்பதைக்கு உறுதியாகப் பயன்படுமாறு வாழவேண்டும் என்றும் எடுத்துக்காட்டிற்று. சமூகத்தில் உயர்ந்த மக்களும், விவேகமுடையவர்களும் எடுத்துக் காட்டாக நின்றனர். பெனிடிக்ட் (Benedict)[1] என்ற துறவியைப் பின் பற்றினவர்கள் வேதநூல் ஏடுகளைப் புதுப்பித்துக் காத்து வந்தனர்; கலைகளைப் பாதுகாத்தனர். செயிண்ட் பெர்னார்டு (St. Bernard)என்பவரின் சீடர்கள் விவசாயத்தைப் பின்பற்றினர். செயிண்ட்ஃ பிரான்ஸிஸின் (Saint Francis) மக்கள் சமாதானத்தைப் பிரசாரம் செய்தனர்.

தற்கால சமூகம் வாழ்க்கையைப் பற்றிய விதிகளால் வழி காட்டப்பட்டும் இவ்வாறு அவ் வாழ்க்கையைக் காப்பதென்று வழிகளைப்புரிந்து கொண்டும் அறநெறி விதிகளை எதிர்நின்று ஏற்றுக்

[1] St. Benedict 529-ல் கண்ட திருமடத்தைச் சேர்ந்த துறவி. அச்சு தோன்றுவதற்குமுன் மென்மையான ஆட்டுத் தோலின்மேல் (Parchment) வேதநூலை மணிமணியாகக் கைப்பட எழுதிவைப்பதை இறைத் தொண்டாகக் கொண்டனர்.

கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. இதெல்லாம் காணும் பொழுது பண்டை ஆன்மாவின் பாலையைப் பசுந்திடல் போல் மறுபடியும் உருவாக்குகிறது. எனத் தோன்றுகிறது.

தற்கால சமுதாயத்தையும் ஒரு கான்வென்ட்டையும் (துறவிமாடம்) துணிந்து ஒப்பிட்டோமானால் முன்னது எத்தகைய கான்வென்ட்டாக இருக்கும்?

இதோ இங்கு ஒரு துறவி மாடம். விதிப்படி சோதரர் உண்கின்றனர்; உடல் நலத்துக்கு ஏற்ற ஆடைகளை அணிகிறார்கள். மொழியில் துல்லியமாக இருக்கிறார்கள். கூச்சல் போடும் சிறு சச்சரவுகளில் ஈடுபடுகிறார் இல்லை. எல்லோருடனும் கூடிவாழ்வதிலேயே அவர்களுடைய முழு அக்கறையும் திரும்புகிறது; தாங்கள் ஆற்றும் நன்கொடைகளை உணர்ச்சி காட்டாமல் வழங்குகின்றனர். அவ்வாறு வழங்குவது அவர்களுடைய திருக்கூட்டத்தின் மரபும் கடப்பாடும் போலும். என்றும் நிலைபெறும் வாழ்வின் மேலும் கடைத்தேறுதல் பற்றியும், இனி எதிர்கால வாழ்வில் பெறப் போகும் பரிசும், தண்டனையும் பற்றித் தியானம் செய்கின்றனர். ஆனால், இவ்வாறு தியானம் செய்யும்பொழுது இவ்வெண்ணங்களால் பாதிக்கப்படாத வகையில் தியானம் செய்கின்றனர். உண்மை என்னவென்றால் அவர்களுடைய நம்பிக்கையை இழந்து விட்டார்கள். ஒருவரை ஒருவர் நேசிப்பதில்லை. பேராசை, சினம், பொறாமை, பெருவிறுப்பு ஆகியவை நிரந்தரமான அமைதியைத் துரத்திவிடுகின்றன. மற்றப் பாவங்களின்கீழ் ஊழலும் ஒழுக்கக்கேடும் முளைக்கத் தோன்றுகின்றன. இன்னும் ஆழ்ந்த அழிவு மெதுவாகத் தலைதூக்கி வருகிறது. ஏனென்றால் தற்கட்டுப்பாடு, கற்புடைமை மறந்துவிட்டன. கிறித்துவ மதத்தின் மிகச் சிறந்த கொள்கை என்பவை வாழ்க்கைக்குக் கண்ணியம் காட்டுதல், அழிவிலா வாழ்க்கையைத் தேடி வைக்கும் தூய்மையை அர்ப்பணிக்கிற—படையல் செய்கிறதெல்லாம் நம்பிக்கையுடன் தூக்கி எறியப்பட்டிருக்கின்றன. விலங்குணர்ச்சியை விட மனித அன்பு மீறவில்லை. எல்லா மக்களிடமும் ஆர்வமிக்க அன்பும், பிறர் பற்றித் தம் அகம் கொள்ளுதல், மெய்ம்மையை வேறெத் தூண்டுதலுமின்றி உணர்தல் ஆகியவை நறுமணம் போல் தானே கமழ வேண்டுமானால், தூய்மை வேண்டும். வாழ்க்கைச் சுடரைத் தீண்டி வைப்பதும், எல்லாவற்றுக்கும் மதிப்புத்தருவதும் அந்த ஆர்வமிக்க மன்பதை அன்பாகிய கனல் அல்லது காதல்[1] ஆகும். செயின்ட் பால் (St. Paul) கூறுகிறார்: 'ஏழைகளுக்கு ஊட்ட என் பொருள்களெல்லாம் அளித்தபோதிலும் என்னுடைய

[1] காதல்— உயர்ந்த கருத்தில் பயன்படுத்தப்படுகிறது. சிற்றின்பத்தைக் குறிப்பதன்று.

உடலையே எரிக்க அளித்தாலும், என்னிடம் மன்பதை அன்பு (charity) இல்லையேல் எனக்கு அதனால் ஒரு இலாபமும் இல்லை. வருங்காலத்தைப்பற்றிச் சோதிடம் கூறும் திறன் இருந்தும், எல்லா மாயங்களின் உண்மையை அறியக்கூடிய திறமை பெற்றும் அறிவெல்லாம் படைத்தும் இருப்பினும் என்னிடம் மன்பதை அன்பு இல்லையேல் நான் ஒன்றும் இல்லை. மக்களின் நாவாலும், தேவர்களின் நாவாலும் நான் மொழிந்தாலும் என்னிடம் மன்பதை அன்பு இல்லையேல் நான் வெறும் ஒலிக்கும் பித்தளைப் பண்டம் போலவும் ஒரு தாளத்தின் கணகண ஒலிபோலும் ஆகி விடுவேன்.'

சீர் கேடுற்ற கான்வென்ட்டுகளில் இதுவரை பெற்றிருந்த மிக மிகச் சிறந்த உயர்ந்த சாதனைகளும், உயர்ந்த துல்லிய நிலையும் இழக்கப்பட்டிருக்கின்றன. சீர்கேட்டில் உழன்றவன் ஒருவன் தன்னிடமுள்ள இறுதியான உயர்ந்த நற்சாதனைகளை முதலில் இழந்துவிட்டுக் கீழானதையே பற்றிக்கொள்வதைப் போல இருக்கிறது மேலே குறிப்பிட்டதும்.

சமூக கான்வென்ட்டில் (Social convent) இதற்கு மாறாக நடை, பெறுவது என்ன? இறுதியான தேர்ச்சிப் பேறுகள் இன்னும் பெறப்படவில்லை. அதுதான் இரண்டுக்கும் இடையே காணப் படும் ஒற்றுமை வேற்றுமை. கிறித்தவ மதத்தை நோக்கிச் சமூக உயர்வு படுத்தல் இப்பொழுதுதான் முதல் அடி எடுத்து வைக்கத் தொடங்கியிருக்கிறது. காதல் போதாது. ஆதலால், மன்பதை யன்புமில்லை. இதெல்லாம் இல்லாமைக்குக் காரணம் நம்பிக்கை யில்லாத காரணத்தால் தோன்றியிருக்கும். வறண்ட சூனியமும் (வெற்றிடநிலையும்) தெய்விக வாழ்வின் வலுக்கட்டாய அடுக்குதல் களும் ஆகும். அறிவியல் மனிதனுடைய உள வாழ்வினை இன்னும் தொடவில்லை. அதனால் சமூகச் சூழ்நிலையும் தன்னுடைய அகண்ட நாகரிக சக்தியால் மனிதனுடைய உயர்ந்த பேறுகளை இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை.

குழந்தைகளுக்கு அறநெறிக்கல்வி புகட்டவேண்டுமென்று ஈடுபடுத்திக் கொள்ளும்போது, நாம் குழந்தைகளை உள்ளூர நேசிக்கிறோமா? அவர்களுடைய நன்னெறியில் நாம் உண்மையாக அக்கறை கொண்டிருக்கிறோமா?—என்னும் கேள்வியை நாமே நம்மைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

நடைமுறையைக் கவனிப்போம். தாய் தந்தையர்களே, உங்களுடைய குழந்தைகளுக்கு நீங்கள் என்ன எதிர்ப்பார்க் கின்றீர்கள்? ஐரோப்பிய யுத்தத்தினால் அவர்கள் உடற்கு விளையும் அபாயத்தை விட அவர்கள் அடையும் தெய்விக அபாயங்கள்

அதிகம். இன்னும் பெரிய போரை நாம் கற்பனை செய்துகொள்ள வேண்டும். உலகமனைத்தும் பாதிக்கப்படுகிற போர். இளைஞர்களை ஈடுபடுத்தும் போர். மீண்டும் பிழைத்து வருபவன் ஓர் அதிசயம் என்று சுட்டிக்காட்டப்படுவான். ஆதலால் உன்னுடைய மக்களைச் சாவுக்காகக் கற்பிக்கிறீர்கள். அப்படியானால் அவர்களைப்பற்றி அதிக கவலை எடுத்துக்கொள்வதால் பயனென்ன? அவர்கள் அண்மையில் சாகப் போகின்றவர்களானால், அவர்களுடைய மென்மையான மயிர், செந்நிற நகங்கள், அவர்களுடைய விரைவு கொண்ட உடலின் மனம் கவரும் அழகு, ஆகியவற்றைப் பற்றிக் கவலை எடுப்பானேன்?

ஆம், குழந்தைகள்மேல் அன்புள்ளவர்கள் அனைவரும் இந்தப் படுகொலைப் போர்மேல் படையெடுக்க வேண்டும். சமாதானத்திற்குப் போரிட வேண்டும்.

மதாம் தீ ஹெரிகோர்ட் (Mme de Hericourt) எழுதிய புத்தகத்தில் (La femme affranchie) பிரஞ்சுப் புரட்சிக் காலக்கொள்கை மிகவும் சொல் திறம் மிக்கதாகக் கூறப்படுகிறது.

'பொய் பேசாதே. ஏனென்றால் தன்னை மதிக்கின்ற ஒருவன் செய்யத் தகாதது அது. திருடாதே. உன்னுடைய பொருளைத் திருடினால் உனக்குப் பிடிக்குமா? அவ்வாறு செய்வது நாணயமற்றது. உன்னிலும் மெலிந்த தோழர்களை ஒடுக்காதே; அவர்களிடம் கடுமையாக நடந்து கொள்ளாதே. தாய்மார்களே! அது பேடித்தனமான நடத்தை என்று உம் குழந்தைகளை நன்னெறிப் படுத்துகின்றீர்கள். இவையனைத்தும் நல்ல கோட்பாடுகள்தாம். ஆனால் பையனுக்கு வயது வந்தபோது தயார் மகனைப் பார்த்து, 'இளமைப் பருவத்துக்குரிய இன்பக் களியாட்டங்களில் மூழ்கு' (sow his wild oats) என்று கூறுகிறாள். இன்பக் களியாட்டத்தில் மூழ்கு என்றால், கற்பிழக்கச் செய்பவனாக வேண்டும் (Saducer); பிறர்மனை நயப்பவனாக வேண்டும். (adulterer); விலைமகளிர் மனையை அடிக்கடி நாடுபவனாக வேண்டும் என்ன? இந்தத் தாய்தானோ தன் மகனைப் பொய் பேசாதே என்று கூறினாள்? தன்னைப்போல் ஒருத்தியைக் கெடுக்க வயதுவந்த மகனுக்குச் சொல்லிக் கொடுப்பவளும் அவளேதானா? வேறு குழந்தையின் பொம்மையைத் திருடக்கூடாது என்று தன் மகனுக்குக் கற்பித்தவளே இப்பொழுது தன்னை ஒத்த வேறொரு பெண்ணின் வாழ்வையும் மானத்தையும் திருடச் சொல்கிறாளா? மெலியோரை வாட்டாதே என்று உபதேசம் செய்த அதே தாய் சமூகம் அடிமையாக்கி விட்ட மக்களை வாட்டுகின்ற கொடியவர்கள் நடுவில் தோழமை கொள்ள மகனுக்கு அனுமதி கொடுக்கிறாளா?

மன்பதையை முரண்வழிச் செல்ல வைக்கும் இழிதொழிலில் தாய்மாரும் எதிர்ப்பு உணர்ச்சியின்றி இசைவு (acquiesce) தெரிவிக்கின்றனர். வெள்ளை அடிமைப் போக்குவரத்தை (White slave-traffic) நிறுத்த இன்று ஓர் உறுதியான சமூக இயக்கம் இருக்கிறது. அதே சமயத்தில் இன ஆக்க மேம்பாட்டியல் (Science of eugenics) தோன்றி வருங்கால மக்களின் உடல் நலத்தைக் காக்க இருக்கிறது.

இவைகளெல்லாம் நேர்த்தியானவை. இப் பிரச்சினைகள் அனைத்திற்கும் அடித்தளத்தில் இருக்கும் பிரச்சினை ஒரு தெய்விக பிரச்சினையாகும். 'இழக்கப்பட்ட'வர்கள், 'வெள்ளை அடிமைகள்' அல்ல; எங்கும் காணப்படும் அழிவும் அடிமைத்தனமும் கூடிய செயலின் பலியாட்களே ஆவர். இத்தகைய தெய்விக அபாயம் ஒன்று நம் தலைமேல் தொங்கிக் கொண்டிருந்தால், இந்த அபாயத்தைத் தடுக்க ஒரு போராட்டம் இல்லாமல் வேறு எந்த வெளிப்படையான உடல் நலம் நம்மைக் காக்க முடியும்? உண்மையை உணர மறுத்துச் சாக்காடு நிலையில் எவர் நீடித்திருக்கிறார்களோ அவர்களே உண்மையாக 'இழக்கப்பட்டவர்கள்' ஆவர்.

எவராவது இந்த அபாயத்தை உணர்ந்தாராயின், இந்த ஓர் உண்மையாலேயே கடைத்தேறத் தானே முட்டுக்கட்டையாக இருப்பதை அறிவான். சமூகத்தால் நிந்திக்கப்பட்டும் தண்டனையால் ஒடுக்கப்பட்டும் இருக்கின்ற வெள்ளை அடிமையென்றழைக்கப் படுபவர் உலகத்தைக் கண்டு பழிவாங்கச் சபதம் கூறுகிறது. மனித இனத்தையே வெட்கக் கேட்டால் மறைக்கப் பார்க்கிறது. ஆனால், உண்மையாக இழக்கப்பட்டவர்கள் அவர்களல்ல— அவர்கள் மட்டுமே அடிமைகளல்ல. இழக்கப்பட்டவன் யார்? நன்றாகக் கல்வி கற்பிக்கப்பட்ட இளைஞன் உளநைவு (remorse) இன்றித் தன்னுடைய இழிநிலையை நெஞ்சார உணராமல், தனக்காக அடிமைப்படுத்தப்பட்ட ஒருத்தியைத் தன் இன்பத்துக்குப் பயன்படுத்திக் கொள்கிறான். மேலும், அவளை அவமதிப்பாகிய திரையால் மூடிவிடுகிறான். தன்னை எச்சரிக்கும் தன் நெஞ்சின் குரலையும் கேட்க மறுக்கிறான். 'உன் சோதரன் கண்ணினுள் சிறு தூசியை ஏன் காண்கிறாய்? உன் கண்களில் உள்ள தூலத்தை (beam) களைந்தெறிக!' என்கிறது அக் குரல். பெரிய விபத்தான அழிவு விளைவுகளிலிருந்து தன் உடலைக் காத்துக்கொள்ள வழி தேடுகிறான். பெரும்பாலும் அவைகளிலிருந்து இவனால் தப்பித்துக் கொள்ள முடியாது. ஆதலால் தன்னையும், தன் இனத்தையும் தற்கொலை செய்து கொள்வதற்கும் ஒரு கைம்மாறு பெறுமல் அந்த ஆபத்துக்கு இணங்குகிறான். எவன் தனக்கும் தன் குடும்ப கௌரவத்துக்கும் சமுதாயத்தில் இடம் பிடிக்கத் தேடுகிறானே அந்த மனிதன் அடிமையாக நலிந்து இருளில் இழக்கப்படுகிறான்.

அவனுடைய தாயும் ஓர் அடிமை. ஏனென்றால் மகனுடைய உடல் நலத்தை அவ்வளவு அக்கறையுடன் வளர்த்துவிட்ட பிறகு அம் மகனைப் பின்பற்ற முடியாத நிலையில் இருக்கிறாள். தன்னுடைய நெஞ்சில் நிறைந்த பேரன்பால் அவனுடைய அறநெறி நலனை விரும்பினாலும் தன் மகன் தன் கைகளை விட்டுப் புறத்தே சாவை நோக்கிச் செல்ல வேண்டிய நெருக்கடி ஏற்படும் பொழுதும், அல்லது அவனுடைய தூல உடலின் சீர்கெட்டழிவுக்குச் சென்று அறநெறிச் சீர்கேட்டைப் பெறும்போதும், அவளால் ஒன்றும் செய்ய இயலாமல் அசையாமல் மௌனமாகக் கூர்ந்து கவனித்து நிற்கும் நிலையில், அவள் ஓர் அடிமைபோல் காட்சியளிக்கிறாள். தன்னுடைய மகனைப் பின்தொடர அவளுடைய தன் மானமும் தூய்மையும் குறுக்கிடுகின்றன என்று மனநோவுடன் சாக்குப் போக்கு சொல்லிக் கொள்ளலாம். அவள் கூறுவதைப் பார்த்தால், 'அதோ என் மகன் காயப்பட்டுக் குருதி வடியக் கிடக்கிறான். ஆனால் நான் அவனைப் பின்பற்ற முடியாது. ஏனென்றால் வழி சகதியாக இருக்கிறது. என்னுடைய ஜோடுகள் மாசடைந்து விடலாம்' என்று அவள் உள்ளம் பேசுவது நமக்கு ஒலிக்கும். உண்மையான தாயின் இருதயம் எங்கே? தாயன்பு, தாயின் மென்னய உணர்ச்சிப் பண்பு (sentiment) இவ்வளவு தாழ்நிலைக்கு வீழுமா? மதாம் தீ ஹெரிகோர்ட் (Madame de Hericourt) என்ன கூறுகிறார்? 'தன் மகன் தன் உள்ளத்தில் உள்ளவாறு சொல்லும் போது, அவள் வெட்கப்படும்படி எதுவும் இல்லாத வகையில் எவள் தன் மகனை வளர்க்கிறாளோ அவளே உண்மையான தாய் ஆவாள்.'

தன் ஆணை உரிமை அனைத்தையும் இழந்த தாய் தன்னையே இழந்தவளாகிறாள்.

தாயின் கௌரவம் என்பது உயர்ந்தது, சிறந்தது, சக்தி வாய்ந்தது. பாருங்கள் பண்டைக்காலத்தில் ரோமன் வாழ்வகச் செவிலி (Roman Matron) கொரியோலேனஸைச் சார்ந்த (of Coriolanus) வெடூரியா என்ற தாய் (Veturia, the mother) தன் மகன் தேசத்துரோகியாகி, வேற்றுப்படைத் தலைவனாகி, ரோமாபுரியின்மேல் படையெடுத்து வருவதாகச் செய்தி கேட்டு காவல் மதில்களைத் தாண்டி நகரத்தைக் கடந்து வலிவுபெற்ற அன்னியர் படைத் தலைவனைப் பார்த்து, 'நீ என் மகனா, அல்லது ஒரு துரோகியா?' என்று உணர்ச்சியுடன் கேட்கிறாள். கொரியோலேனஸின்மொழிகளைக் கேட்டவுடன் அவன் தன்னுடைய இழிவானபொறுப்பினை அத்தருணமே விட்டு ஒழித்தான்.

அவ்வண்ணமே தற்காலத்தில் உண்மையான தாய் தன்னுடைய சார்பெண்ண மதில்களைத் தாண்டி, அடிமை எல்லையைத்

தாண்டித் தன்னுடைய மகனை நேருக்கு நேர் நிற்கும் வகையில் தக்க கௌரவத்தைப் பெற்று, 'நீ மன்பதைக்கு ஒரு துரோகியா யிராதிருப்பாயாக!' என்று எடுத்துக்கூறவேண்டும்.

தன் மகனைக் காக்க வேண்டிய புனிதமான பொறுப்பை இழக்க அந்தத் தாயின்மேல் என்ன நிர்ப்பந்தம் திணிக்கப்பட்டி ருக்கக் கூடும்? தன்னை ஒரு இளைஞனை வாழ விடுவதற்காகத் தன் தாயின் அதிகாரத்தை வெறுக்க இவனுடைய அன்பை என்னதான் அந்த மட்டத்துக்கு வலிமையிழக்கச் செய்திருக்க வேண்டும்?

நமது தண்டனையைத் தீர்ப்பளிக்க வல்லது ஆன்மாவின் அழிவேயொழிய வெளி உண்மைகளல்ல.

* * *

நோக்காடுகளுக்கும், சீர்கேடுகளுக்கும் வெளிக்காரணங்கள் என்ன என்று ஆய்வதைத் தன் வரம்பாக வைத்துக் கொண் டிருக்கிற அறிவியல் உடல்நலம்பற்றி அறிவுறுத்தம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. அதாவது வெளி வாழ்வைக் காத்தல். அறநெறி வாழ்வைக் காத்தலுக்குப் பயனாகியிருக்கிறது. அந்தரங்க மனிதனுடைய உள் வாழ்வைக் (inner life of man) காக்க வேண்டுமென்று ஒரு முனைப்போடிருக்கின்ற அறிவியலி லிருந்து அறநெறி உயர்வை எவ்வளவுக்கு நாம் எதிர்பார்க்கலாம்?

முதல் பகுதி அதாவது உடல் நலம்பற்றிய உண்மைகளைத் துல்லிய ஆய்வுகளின் மூலம் நுணுக்கமாகப் பின்பற்றிக் கிறித் துவக் கோட்பாடுகளை உணரச் செய்திருக்கிறது. அது உண்மை யாயின், அதே விசுவாசத்துடனும் துல்லியமாகவும் ஆய்வு தொடரப்பட்டால் அதேபோல் வெற்றி பெறும். தற்கால நாகரி கத்தில் காணப்படும் சில வெற்றிடக் குறைவை நிறைவுபடுத்தும்.

எம்முடைய (over positive method of education) புற மெய் யுணர்வு சார்ந்த கல்வி முறையில் தோன்றும் புதுத் தலைமுறை மக்களிடம் காணப்பட வேண்டிய அறநெறியும், மதமும் பற்றி நாம் என்ன எதிர்பார்க்கலாம் என்று கேட்பவர்களுக்கு இதுவே நேர்முகமானதும் தெளிவானதுமான விடை என்று நான் நம்பு கிறேன்.

நோய்களுக்குக் காரணம் என்று ஆய்வு மருத்துவம் (experimental medicine) உடல் நல சம்பந்தமான பிரச்சினைகளைத் தீர்த்து வைத்திருக்கிறதென்றால், சாதாரண மனிதனின் உளஇயல் வினை யாற்றல்களைக் கூர்ந்து ஆயும் அறிவியல் (experimental science)

வாழ்வின் மிகச் சிறந்த விதிகளையும் மனிதனுடைய உடல் நலம் பற்றிய விதிகளையும் கண்டுபிடிப்பதற்கு வழி காட்ட வேண்டும்.

இவ்வகை அறிவியல் இன்னும் நிலைநாட்டப் பெறவில்லை. அதை ஆய்வதற்கு ஆய்வாளர்க்குக் காத்திருக்கிறது. அகில உலக உடல் நலம் உடல் நலத்துக்கு வழிகாட்டியாக இருக்கிறது. அது மருத்துவ ஆராய்ச்சிகளால் தோன்றியிருக்கின்றது. அப்படியானல் இந்தப் புது அறிவியலும் ஒரு புது உடல் நலத்தை (Hygiene) ஆரோக்கியத்தை உருவாக்க வேண்டும். அது எல்லா மக்களுக்கும் அறநெறி வாழ்க்கைக்கு வழிகாட்டும் என நாம் எதிர்பார்க்கலாம்.

நோயாளிகள் தனியார் கருணையாலும் பொதுமக்கள் அறத்தாலும் தரும் எண்ணத்துடன் மருத்துவ நிலையங்களில் வைக்கப்பட்டனர். அந்த மருத்துவ நிலையங்களில் அறிவியல் தோன்றிற்று. அதற்கு வழிகாட்டியாக இருந்தது அனுபவ வைத்தியம் (empiricism). இந்தப் புது அறிவியல் எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு முனைப்பாகப் பள்ளிக்கூடங்களில் அனுபவங்களைத் தேடி வர வேண்டும். அதாவது தங்களுடைய சமூக முன்னேற்றத்துக்கெனக் குழந்தைகள் கூடியிருக்கின்ற பள்ளிக்கூடங்களில் கல்வியின் அனுபவங்களைத் துணைக்கொண்டு ஆராய்ச்சி நடத்த வேண்டும்.

அனுபவ முறையைப் படிப்படியாகக் களைந்துவிட்டு, ஆராய்ச்சி மருத்துவத்தைக் கடைப்பிடிக்க என்ன உயர்ந்த கொள்கை அனுசரிக்கப்பட்டது? அனுபவ மருத்துவத்தில் நோய்க்குக் குருதி உறிஞ்சுவதாலும்,[1] கொப்புளம் உண்டு பண்ணுவதாலும் சீலையாலும் குணம் தேடும் முறைகளை அனுசரித்து வந்தனர். ஆய்வு மருத்துவம் இன்னும் உயர்ந்தது. இதுவரை மறந்து கிடந்த பண்டைக் கொள்கைகளை நினைவுறுத்தும் வகையில் எடுத்துக் காட்டியது. பண்டைக் கொள்கையில் புதுமை அறிவனைத்தும் தொகையாய் இருப்பதைக் கண்டனர். அது இயற்கையின் மருத்வது சக்தி[2] (medical force of nature vis medicatrix naturae) உயிருடன் வாழும் ஒவ்வொன்றிலும் இயற்கையாக நோயுடன் போராடி வெற்றி பெறத்தக்க ஓர் இயற்கை சக்தி இருந்து வருகிறது. இதை உற்றுநோக்கினல்தான் பகுத்தறிவு கொண்ட மருத்துவத்தை நாம் உருவாக்க இயலும். மருத்துவரும் மருந்தும் நோயைக் குளைப்படுத்துகிறதென்னும் நம் புலவர் ஓர் அனுபவவாதி. ஆனல், உறுப் பொன்றே குணமாக்க வல்லது என்றும் ஆதலால் நமக்கு இயற்கையால் நம் கடைத்தேறுதலுக்கென்று நமக்கு அளிக்கப்பட்டிருக்கும்

[1] அட்டையைக் கொண்டு நோயாளியின் குருதியை உறிஞ்சும் முறை.
[2] Vis Medicatrix naturac.

சக்தியைக் காத்து அதற்கு உதவி புரிய வேண்டுமென்று அறிந்தவன் ஒரு விஞ்ஞானியாகிறான்.

இயற்கையாகத் தற்காத்துப் புதுப்பிக்கும் சக்திகளைப் பாது காப்பதற்குத் தேவைப்படும் சிகிக்சைகளின் தொகை பகுத்தறிவு மருத்துவத்தில் (Positive medicine) பழைய அனுபவ முறையில் காணப்படுவதைவிட மிகவும் நுண்மையாகவும் பரவலாகவும் இருக்கின்றன.

சென்ற நூற்றாண்டில் ஒரே மருத்துவர் பல பிணிகளுக்கு மருந்து கொடுத்துக் குணப்படுத்தி வந்தார். இன்று நாம் காண்ப தென்ன? ஒவ்வொரு துறைக்கு ஒரு வல்லுநர் தனித்துறை நிபுணர் இருக்கிறார். புதுப் போக்கு நடை முறையில் காணப்படும் அபார மான வேற்றுமைகளை வலியுறுத்த இது ஒன்றே சாலும் (பல நிபுணர்கள் தோன்றியிருத்தல்).

மருத்துவம் இதுவரை அடைந்துள்ள முன்னேற்றங்களை மேலோடியாகக் காண்பது அக்கறையூட்டுவதாக இருக்கும். பிணிகளைக் குணப்படுத்தத் தொடங்கியிருக்கிறது. பிறகு உடலின் நேர்மை வாழ்க்கை விதிகளைக் கண்டுபிடித்து உடல் நலம் வாய்ந்த வர்கள் எங்ஙனம் அந் நலத்தை நிலைபெறச் செய்வதென்றும் காட்டியிருக்கிறது. இந்த நிலையை அடைந்த பிறகு உடல் நலத்தை நிலைபெறச் செய்ய எடுத்துக்கொள்ளும் முறையே நோயைத் தீர்ப்பதற்கும் சாலச் சிறந்ததென்றும் கண்டனர். ஏனென்றால் உடல் நலத்தைக் (Vis medicatrix naturae) கொடுக் கின்ற வாழ்வின் மூல முதலாகும். எடுத்துக்காட்டாக இன்று பகுத்தறிவால் அமைக்கப்பட்ட திட்ட உணவு (diet) உடல் நலத் தைச் சீரான முறையில் வைத்துக் கொள்வதற்கு எல்லோராலும் அனுசரிக்கப்பட வேண்டிய மிக முக்கிய உண்மையும் ஆகும். கீல் வாதம் (gout), பெல்லாக்ரா (pellagra) என்ற ஊட்டக் குறைவால் ஏற்பட்டு, முடிவில் மூளைக் கோளாறில் கொண்டு விடும். தோல் வெடிப்புடைய நோய் வகை, காய்ச்சல், எலும்புருக்கி நோய் அல்லது க்ஷய ரோகம் (tuberculosis), நீரிழிவு (diabetes) போன்ற எல்லா நோய்களுக்கும் அனுசரிக்கப்பட வேண்டிய ஊட்ட முறை மிகவும் முக்கியமானது. லிதிய உப்புக்கள், கேஃபீன், கிரியோ ஸோட் (lithia salts, Caffeine, creosote) என்ற மருந்துகள் ஊட் டத்துடன் ஒப்பிடும் போது பயனற்றவை எனலாம். தற்காலப் போக்கு இந்த நச்சு மருந்துகளை அடியோடு ஏற்றுக்கொள்ள மறுப் பதாகும். அதற்கு மாறாக, ஓய்வு, மருத்துவ உடற் பயிற்சி, நீர் மருத்துவம் முதலியவைகளுடன் சிறப்பாகத் தட்ப வெப்ப நிலை சார்ந்த சிகிச்சையும் அனுசரிக்கப்படுகின்றன. மனநோய் மருத்து

வமும் (Psychaitry) நரம்பு சார்ந்த நோய்க்குறி நூல் (Neuro-Pathology) தொழில் மூலம் குணப்படுத்தும் முறையைக் கையாளுகின்றன. அதாவது மனம் இழப்பதுபோல் இருப்பவர்களுக்கு ஒழுங்கான விவேகம் படைத்த வினையாற்றல்களைக் கொடுத்து, அவைகளில் அந் நோய்ப்பட்டவர்களை ஈடுபட வைப்பதாகும். இந்த வழிகளில் படிப்படியாக முன்னேற்றம் அடையும் பொழுது இயற்கையாகக் குணப்படுத்திக் கொள்ளல் (Natural healing) என்ற கருத்து வெற்றி பெறும். வாழ்வை நிலை பெறச் செய்வதாகிய சக்திகளைப் பற்றிய கருத்துகள் இன்னும் தெளிவுறும்.

இயற்கை ஒன்றுதான் எல்லாவற்றையும் செய்யவல்லது. மருத்துவன் பயனளிப்பவனாக இருக்க வேண்டுமானால், இயற்கையன்னையின் அடிச்சுவட்டினைப் பின்பற்றி இன்னும் அதிகமான நன்றியுணர்ச்சியுடன் தொண்டாற்ற வேண்டும்.

உடல் நலம் எல்லாம் இச் சக்திகளனைத்தும் எவ்வாறு பணியாற்றுகின்றன என்பதைப் பொறுத்திருக்கிறது. இந்தச் சக்திகளின் உண்மையைக் காணும் வகையில் முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும் என்பது இயற்கையே. தடை காப்பு நிலை (immunity) என்பது மருத்துவ ஆராய்ச்சிகளில் மிகவும் சிறந்து பரவிய விஞ்ஞான முறையாகும்.

குருதியில் உள்ள நுண்மமாகிய 'லூகோ ஸைட்' (Leuco-cytes) என்பவை அங்குள்ள நோய் நுண்மங்களை (microbes) தமக்குள் கவர்ந்து செரித்துவிடும் என்றும், மனிதன் தொற்று நோயிலிருந்து காக்கப்படுவான் என்றும் மிச்சினிகாஃப்[1] என்பவர் தாம் கண்டுபிடித்ததாக நம்பின பொழுது இதுவரை எவர்க்கும் புலப்படாத ஒரு மாய இருளைப் போக்க ஒரு தனித் தெளிவான எளிய கிரணம் உள்ளே நுழைந்ததுபோல் இருந்தது. ஆனால், இவருடைய கண்டுபிடிப்பு வெளியானவுடனே இவருடைய கருத்துண்மை பலர் ஆய்ந்த ஆய்வுகளின் விளைவால் கண்டனம் செய்யப்பட்டுத் தரைமட்டம் ஆக்கப்பட்டது. ஏனென்றால் லூகோஸைட்டுகள் உயிருடன் இருக்கும் நுண்மங்களை உட்கவர முடிவதில்லை. உயிர்ப் பொருள்கள் (organisms) சில நிபந்தனைகள் இருந்தால் தான் இந்தச் சக்தி பெற முடியும். எனவே, இந்தச் சிக்கல் இடம் மாற்றப்பட்டது. மேலும் நோய் உண்டாக்குவது நுண்மங்களல்ல. ஆனால், நுண்மங்களின் நச்சுப் பொருள் ஆகும் (Toxin). இவ்வாறு நச்சுப் பொருள்கள் பற்றிய கருத்துகள் கண்டுபிடிப்பதற்கு உண்மையான வழிகாட்டிகளாயின. ஆனால், பெரிய குழப்பக் கடலில் இறங்க ஆரம்பித்து விட்டனர். நமக்குக்

[1] Metchnik off—ரஷ்ய நாட்டினர்.

கிடைக்கக் கூடியவை நோயின் தடை காப்பின் (immunity) நோக்கும் (aspect) இயற்பண்புகளுமேயாம் (attributes). ஆனால், புதிதாகக் கண்டுபிடிக்கும் முயற்சிகள் எல்லா நோக்குகளுக்கும் அடிப்படையாக உள்ளதை இன்றும் அறிவிக்கவில்லை. அது ஒரு மாயமாகவே இருந்து வருகிறது.

இக் காரணத்தால் நோய்த்தடுப்புப் பற்றி மௌனம் நிலவு கிறது. முன்னொரு காலத்தில் எல்லோர்க்கும் தெரிந்த ஒரு பொதுக் கருத்தாக இருந்த அதே கருத்து இன்று பல்கலைக் கழக மாணவர்களும் அருகில் நெருங்காதபடி தனியான துறைகளில் ஒன்றாகி விட்டது.

வாழ்க்கையின் மாயை அதனுடைய ஆதி மூலத்தை மறைத்து வைக்கிறது. ஆனால், தொடர்ந்து தன்னுடைய சக்திகளை விரிவு படுத்திக் கொண்டே இருக்கிறது. இந்த மாயைபற்றிக் கட் டாயமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது என்று உணர வேண்டும். எனவே, அவ்வாறு உணராவிடில் இயற் கையின் சக்திகளை அடிப்படையாகக் கொண்ட மருத்துவ அறிவியல் வளருவதென்பது அரிது.

எல்லா முயற்சிகளின் முடிவில் மறைந்தும் ஆனால், உண்மை யானதுமான உடல் நலத்துக்கும் நோய்க் குணம் மாறுதலுக்கும் காரணமாய் உள்ள முதல் மூலம் இருந்தே இருக்கிறது. அதிலிருந்து என்றும் குறையாத சக்தி துடித்துக்கொண்டு வருகிறது. அது ஒன்றுதான் உண்மை; அந்தச் சக்தி உயிரின் மறு பிறப்புக்குச் சான்றாகும். இந்த மருத்துவ அறிவியலும் இந்த மாயையும் (Mystery) சேர்ந்து ஒன்றாகாமல் இருக்க இயலாது.

ஒருவேளை ஆன்மாவின் ஆரோக்கியத்தையும் கோளாறுகளை யும்பற்றி ஆராயக்கூடிய அறிவியலால் இது வெளியாக்கப்படலாம். ஆன்மாவும்—உள்ளமும்—நோயாலும், சாவாலும் கறை பட முடியும் என்று கண்டுபிடிக்கப்பட்டால், அதற்கு ஆரோக்கிய விதி களும் அதனுடன் (Vis medicatriux Naturae) இருப்பதாக உணர்ந் தால், இந்த அற்புத வாழ்வு சக்தியை மதித்து, அதற்கு உதவி புரியத் தக்க சிகிச்சைகள் பல வழிகளில் பெருக வேண்டும். அதே நேரத்தில் நோய்த்தடுப்பு எங்ஙனம் மருத்துவத்தின் மேல் தன்னை உந்திக் கொண்டதோ அதேபோல் இந்த மாயை மூல முதல் ஊற்றும் தற்கால மருத்துவத்தின்மீது திணித்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது வாழ்க்கையும் அறநெறியும், மதமும் பிரிக்க முடியாத ஒன்றாகிவிடும்.

* * *

இரண்டரை மூன்று ஆண்டுக் குழந்தைகளைப் பற்றி இப்பொழுது கவனிப்போம். அவர்கள் எதையும் தொடுகின்றார்கள். முக்கியமாக அவர்களுக்கு விருப்பமானவைகளைத் தொட்டுப் பார்க்கிறார்கள். மிகவும் எளிய பொருள்களைத் தொட்டுப் பார்க்கின்றனர். ஒரு கன சதுர காகிதம், கனசதுரமைக்கூடு, ஒரு வட்டம், பிரகாசமான மணி போன்றவைகளைத் தொட்டுப் பார்க்கின்றனர். இவைகள் ஒவ்வொன்றும் அவர்களுக்கென்றவை அன்று.'

அப்பொழுது தாயார் வருகிறாள். அவைகளைப் பிடுங்கிக் கொள்கிறாள். கொஞ்சிக் கொண்டும் எடுத்த கைமேல் தட்டியும், 'தொடாதே! போக்கிரி!' என்றும் கத்துகிறாள். பிறர் கவனத்துக்கு வராத இத்தகைய நிகழ்ச்சி ஒன்று ஒரு குடும்பத்தில் நடைபெறும் பொழுது, நான் அங்கிருந்தேன். தந்தை ஒரு மருத்துவர். அவர் தன் மேசையின் முன் உட்கார்ந்துகொண்டிருந்தார். தாய் ஒரு சிறு குழந்தையைத் தன் கரங்களில் ஏந்திக் கொண்டிருந்தாள். சிறு குழந்தை தன்னுடைய சிறு கரங்களை மேசைமேல் வைக்கப்பட்டிருந்த பண்டங்களின் நேர் நீட்டிய வண்ணம் இருந்தான். அந்த மருத்துவர் 'இந்தக் குழந்தை இருக்கிறானே! திருத்த முடியாத போக்கிரி! இவ்வளவு சிறியதானாலும் என்னுடைய பொருள்களைத் தொடாதிருக்க அதன் தாயும் நானும் எவ்வளவு முயற்சி செய்தாலும் இந்தக் குற்றத்தைக் குணப்படுத்த முடியவில்லை' என்றார். 'போக்கிரி! போக்கிரி!' என்று மறுபடியும் கூறினாள் தாய். அவள் குழந்தையின் இரு கரங்களையும் இறுகப் பிடித்துக் கொண்டாள். குழந்தை தன்னைப் பின்னே வளைத்துக் கொண்டு உந்திற்று; உதைக்கவேண்டும்போல் தன் பாதங்களை முன்னே தூக்கிக்கொண்டு இரைந்து கத்திற்று.

குழந்தைகள் மூன்று அல்லது நான்கு வயதாய் இருக்கும் பொழுது இந்தப் போராட்டம் இன்னும் கடுமையாகி விடுகிறது. அவர்கள் தாங்களே செய்யவேண்டும் என்கின்றனர். அவர்களைக் கூர்ந்து கவனிப்பவர்கள் அவர்களுக்கு ஒரு போக்கு அல்லது மனப்பாங்கு இருப்பதாகக் கூறுகின்றார்கள். தாயானவள் இல்லத்தில் பணிசெய்து வந்தால், அதையே தாங்களும் செய்ய வேண்டுமென்று விரும்புகிறார்கள். அவர்களாகவே சமையலறைக்குள் தாயைப் பின் தொடர்கிறார்கள். அவளுடைய பணிகளில் பங்கு கொள்ள விரும்புகிறார்கள். அவளுடைய பொருள்களைத் தொடுகிறார்கள். கள்ளத்தனமாக மாவைப் பிசையவும், சமைக்கவும், துணிகளைத் துவைக்கவும், தரையைப் பெருக்கவும் முயற்சி செய்கிறார்கள். தாய் இவர்களால் சலிப்படைந்து விடுகிறாள். 'சும்மா இரு. அதை அப்படியே விட்டுவிடு; என்னை நச்சுப்படுத்தாதே,

போ' என்று சொல்லிக்கொண்டே இருக்கிறாள். பிறகு குழந்தை ஏதோ பெரிய சப்தம் போடுகிறான். தரைமேல் விழுந்து கை கால்களை உதறுகின்றான். பிறகு எவர்க்கும் தெரியாமல் தன்னால் என்னென்ன செய்ய முடியுமோ அவை அனைத்தையும் கூடிய வேகத்தில் செய்கிறான். அவசர அவசரமாகப் பண்டங்களைக் கழுவும் பொழுது தன்னையே குளிப்பாட்டிக் கொள்கிறான். தடை செய்யப்பட்ட ;கொந்து கறிவாட்டினை (contraband ragout) மறைத்து வைக்கும் முயற்சியில் தரையை மாசுபடுத்திவிடுகிறான். தாயினுடைய சினம், இரைச்சல், கண்டனம் எல்லாம் அதிகரித்துக்கொண்டே போகிறது. குழந்தையின் 'போக்கிரித்தனமும்' அதிகரிக்கிறது. கண்ணீர் விடுகிறான். ஆனால் பெரும்பாலும் உடனேயே மறுபடியும் தொடங்குகிறான்.

எங்குத் தயார் தன் பணிகளைத் தானே செய்கிறதில்லையோ அங்கெல்லாம் குழந்தை விவேகியானால் இன்னும் துர்-அதிர்ஷடம் படைத்தவர்களாகி விடுகிறான். தனக்கு வேண்டிய தொன்றைத் தேடுகிறான். அது கிடைப்பதில்லை. எக்காரணமும் இல்லாமல் அழுகிறான்; திடீரென அடம்பிடிக்கிறான். உணர்ச்சி மீக் கொள்கிறான். ஏனென்று எவராலும் கூறமுடியாது. இதைக் கண்ட சில தந்தைமார் மனமுறிவுடன் வருந்துகின்றனர். 'என் குழந்தை நல்ல விவேகி; ஆனால் குறும்பு! எதுவும் அவனுக்குப் மனநிறைவு அளிக்காது. அவனுக்குப் பொம்மைகள் வாங்கிப் பயனில்லை. அளவுக்கு மீறி அவைகளை உபயோகித்து விட்டான். ஒன்றும் அவனுக்கு பயன் தராது.'

தாய் மிகக் கவலையுடன் கேட்கிறாள், 'என் குழந்தை குறும்பு செய்யும்பொழுதும் கோபம் கொண்டு வம்புபண்ணும் பொழுதும் என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? அவன் ரொம்பக் குறும்புக்காரன். அவன் சும்மா இருப்பதே இல்லை. இனிமேல் அவனிடம் போரிட என்னால் முடியாது.'

'என் குழந்தை நல்லவன், எப்பொழுதும் தூங்குகிறான்' என்று ஒரு தாய் கூறுவதைக் கேட்பது அரிது. ஏந்து குழந்தை அழும்பொழுது அச்சுறுத்தும் குரலில் ஏழைத்தாய் இரைந்து கத்துவதை எவர் கேட்டதில்லை. 'பேசாதிரு, பேசாதிரு. நான் சொல்கிறேன்' என்கிறாள் தாய். குழந்தை அச்சம் அடைவது இயற்கைதானே. அதன் அழுகையை இன்னும் இரட்டிப் பாக்கிக் கொள்கிறது.

உலகத்தில் காலெடுத்து வைத்த மனிதனுடைய முதல் போட்டி இதுவேயாகும். தனக்கு வாழ்வைக் கொடுத்த பெற்

றோரிடமே போராட வேண்டியிருக்கிறது. இவனுடைய குழந்தை வாழ்வு பெற்றோர் வாழ்விலிருந்து வேறுபடுவதால் இந்தப் போராட்டம் நடைபெறுகிறது. குழந்தை இனிமேல் தன்னை உருவாக்கிக் கொள்ள வேண்டும். குழந்தை தன்னுடைய இயக்கங்களை ஒருமயப்படுத்த இங்குமங்கும் இயங்க வேண்டும். இவனுடைய இயக்கங்கள் இன்னும் இவன் வசம் ஆனபாடில்லை. ஆனால் பெற்றோர்கள் நிலை என்ன? அவர்களுடைய விருப்பம் போன்ற இயக்கங்கள் ஒழுங்கு பெற்றிருக்கின்றன. அவர்களுடைய இயக்கங்களை அவர்களால் கட்டுப்படுத்த முடியும். அவர்கள் தம் வேலைக்குப் பிறகு பெரும்பாலும் களைப்புற்றிருக்கின்றனர் போலும். குழந்தையின் பொறிகள் இன்னும் முழு வளர்ச்சி பெறவில்லை. அவர்களுடைய இசைந்து கொடுக்கும் சக்தி (accommodation) இன்னும் போதிய அளவு பெறப்படவில்லை. ஆதலால் பொருள்கள் பற்றியும் இடத்தமை பற்றியும் (இடைவெளியீடு) உணருவதற்குப் பொருள்களைத் தொட்டு உணரும் உதவி தேவைப்படுகிறது. அவனுடைய கரங்களின் அனுபவங்களால் கண்கள் திருத்தப்படுகின்றன. இதற்கு மாறாகப் பெற்றோர்கள் தங்களுடைய பொறிகளை வளம்பெறச் செய்து கொண்டிருக்கிறார்கள். இவைகளால் தொடக்கத்தில் ஏற்பட்டிருந்த போலிகளைத் திருத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தம் பொறிகளைத் தவறான வழிகளில் பயன்படுத்தாமல் இருந்திருந்தார்களானால் புலன்கள் இசைவு சக்திகள் (powers accommodation) முற்றிலும் சீர்பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு வகையிலும் மூளையின் வினையாற்றல்கள் புலன்களைச் சரிநுட்பமான பதிவுகளை ஏற்குமாறு செய்துவிடுகின்றன. அவர்கள் எதையும் தொட்டுணரத் தேவையில்லை. வெளியுலகத்தைப்பற்றி அறியக் குழந்தைகள் ஆவல் கொள்கிறார்கள். பெற்றோர்க்கு வெளியுலகத்தைப் பற்றி மிக நன்றாக ஏற்கெனவே தெரிந்திருக்கிறது.

ஆதலால் இருவரும் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்வதில்லை.

பெற்றோர் தாங்கள் என்ன செய்கிறார்களோ, எப்படிச் செய்கிறார்களோ அதேபோல் குழந்தைகளையும் செய்யவண்டும் என்கிறார்கள். அதிலிருந்து சிறிது பிறழ்ந்தாலும் 'குறும்புத்தனம்' என்று சொல்லி விடுகிறார்கள். தன்னுடன் குழந்தையை இழுத்துக் கொண்டு செல்லும் தாயை எண்ணிப்பாருங்கள். அவள் நடக்கும் பொழுது குழந்தையாகிய அவன் ஓட வேண்டியிருக்கிறது. அவனுடைய கால்கள் குட்டை, அவளுடையதோ நெட்டை. அவனுடையவை மெலிந்தவை; அவளுடையவை வலிமையானவை. அவனுடைய உடல் பளுவையும் உடலுக்கு மீறின தலையையும் அவன் சுமக்க வேண்டியிருக்கிறது. தாயின் உடலும்,

தலையும் தக்க தகவுப் பொருத்த அளவில் பளு குறைந்தும் சிறிதாகவும் (proportion) அமைந்திருக்கிறது. குழந்தை களைத்துப் போயிருக்கிறான், நிற்கிறான், அழுகிறான். தாய், 'வாடா போக்கிரிக் குட்டி ; இந்த முட்டாள் தனமெல்லாம் என்னிடம் நடக்காது. உன்னைத் தூக்கச் சொல்கிறாயா ? சோம்பேறி நாயே ! மாட்டேன் உனக்கு விட்டுக்கொடுக்க மாட்டேன் !' என்கிறாள்.

அல்லது இப்படியும் காண்கிறோம். குழந்தைகள் தரைமேல் உட்காரும் பொழுதும், அல்லது குப்புறப்படுத்துக்கொண்டும் கால்களைக் காற்றில் ஆட்டிக்கொண்டும் தங்களைத் தம் முழங்கைகளால் தாங்கிக்கொண்டும் இருக்கும்பொழுது, 'எழுந்திரு, எல்லாம் அழுக்காக்கிக் கொள்கிறாய், போக்கிரிக் குழந்தை' என்று கூப்பாடு போடுகின்றனர் பெற்றோர்.

இவை அனைத்தையும் இவ்வாறு கூறலாம். முதியவர்களிலிருந்து குழந்தை வேறுபட்டவன். அவனுடைய தலையும் உடலும் அவனுடைய சிறிய ஒல்லியான கால்களுடன் ஒப்பிடுகையில் மிகப் பெரிதாக இருக்கின்றன. ஏனென்றால், இவைதாம் மிகவும் வளரக் கூடியவை. இப்படி உருவாகிறது குழந்தையின் உடல். ஆதலால், குழந்தையால் அதிகம் நடக்க முடிவதில்லை. கீழே படுத்துக்கொள்ள விரும்புகிறான். இவ்வாறு படுப்பதுதான் அவனுடைய உடல் நலத்துக்குச் சாலப் பொருத்தமானது. வளர்ச்சிக்கு அவனிடம் ஓர் அற்புதமான போக்கு இருக்கிறது. வெளியுலகத்தைப் பற்றி முதல் கருத்துகளைப் பெறுகிறான். அவனுடைய கட்புலனையும், செவிப்புலனையும் வலியுறுத்துவதற்காகக் கைகளால் தொட்டுத்தொட்டுப் பார்த்துப் பொருள்களின் வடிவத்தையும், அவைகளின் தொலைவையும் கண்டு கொள்கிறான். அவன் ஓயாது இயங்கிக் கொண்டே இருக்கிறான். ஏனென்றால் அவனுடைய அசைவை இணைத்துத் தனக்குத் தேவைப்படும்படி ஆக்கிக் கொள்ள வேண்டும். ஆதலால் அதிகம் இயங்குகிறான். கொஞ்சமாகவே நடக்கிறான். தரைமேல் தன்னைக் கிடத்திக் கொள்கிறான். எல்லாவற்றையும் தொடுகிறான். இவைகளெல்லாம் இவன் உயிருடன் இருக்கிறான் என்பதற்கும், வளர்ச்சிக்கும் அறிகுறிகளாகும். ஆனால், பெரியவர்கள் என்னென்று நினைக்கின்றார்கள்? 'போக்கிரித்தனம், குறும்பு' என்கின்றனர்.

இது அறநெறிப் பிரச்சினை அல்ல என்பது தெளிவு. இப்பொழுதுதான் பிறந்த மனிதனுடைய தீய போக்குகளைத் திருத்த வழி தேடவில்லை. இது தெளிவாக ஓர் அறநெறி சார்ந்த பிரச்சினையல்ல, எனினும், இது வாழ்வு சார்ந்த பிரச்சினை.

குழந்தை வாழ வழி தேடுகிறது; நாம் அதைத் தடுக்கப் பார்க்கிறோம். அந்த வகையில் பார்க்கப்போனால், நம்மைப் பொறுத்த மட்டில் அது ஓர் அறநெறிப் பிரச்சினையன்று. ஏனென்றால் மற்றவர்களுக்குத் துன்பம் விளைவிப்பதும், மற்றவர்களின் உரிமை எல்லையைக் கடப்பதுமாகிய பிழைகளை நாம் ஆராயப் புகுந்துவிட்டோம். மேலும், நம்முடைய சொந்த இறுமாப்பு, அதாவது தற்பெருமை நம் நடத்தையின் பிழைகளுக்கடியில் மறைந்து கிடக்கிறது. குழந்தைகள் நமக்குத் தொல்லைகள் தருவதால் அவர்கள்மேல் நாம் சீற்றம் அடைகிறோம். நம்முடைய இன்பநலத்தை, நம் சுதந்திரத்தைக் காத்துக் கொள்ள நாம் அவனிடம் போராடுகிறோம். நாம் அநீதியாய் நடந்து கொண்டுள்ளோம் என்று நம் அடி நெஞ்சில் எவ்வளவு முறை உணர்ந்திருக்கிறோம். ஆனால், இந்த மனப்பதிவை நெரித்து விட்டிருக்கிறோம். இந்த சிறு கலகக்காரன் நம்மை நிந்திப்பதில்லை. நம்மிடம் பகைமை எண்ணம் கொள்வதில்லை. அதற்கு மாறாக அவனுடைய வாழ்வின் பகுதிகளாகிய குறும்புத்தனம் எப்படி விடாப் பிடியாக இருக்கிறதோ அதேபோல் அவன் விடாப்பிடியாக நம்மிடம் அன்பு காட்டுகிறான். நாம் செய்தவை அனைத்தையும் மன்னித்து விடுகிறான். நம் குற்றங்களை மறந்து விடுகிறான்; நம்முடன் நெடுநேரம் இருக்க விரும்புகிறான். நம்மை அணைத்துக் கொள்கிறான்; நம் முழங்காலின் மேல் உட்காருகிறான். நம் மார்மேல் உறங்கி விடுகிறான். இதுவும் வாழ்க்கையில் ஒரு வகை. நாம் களைத்துப் போனபோது அல்லது தெவிட்டிவிட்ட நிலையில் இருக்கும் போது அவனை வெறுக்கிறோம். இந்தச் சுயநலத்தின் மிகையைக் குழந்தையின் நன்மைக்கு என்ற பெயரில் ஏய்த்து நடிக்கிறோம். 'அவ்வளவு முட்டாளாக இருக்காதே!' 'போக்கிரி! குறும்பு!' என்ற அவமதிப்பும் நிந்தனையும் நம்முடைய நாவின் நுனியில் இருக்கின்றன. எனினும் குழந்தையின் உருவம் அந்த முழுநிறைவு பெற்ற நன்மை, நற்குணம் என்பதற்கு எடுத்துக்காட்டாக நிற்கலாம். 'எந்தத் தீமையையும் எண்ணாதே; அநீதியில் மகிழ்வுறாதே; எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்; எல்லாவற்றையும் நம்பு; எல்லாவற்றிலும் நம்பிக்கை கொள்' என்றவை அவனுடைய நற்பண்புகளாகத் தோற்றம் அளிக்கின்றன. இவை குழந்தை உருவமாகவே நம் கண் முன் நிற்பதாகவும் கொள்ளலாம். ஆனால், நம்மைப்பற்றி எப்பொழுதும் அவ்வளவு கூறமுடியுமா?

முதிர்ந்தோருக்கும், குழந்தைக்கும் இடையே உள்ள பூசல் அமைதியில் முடிவுகண்டு, குழந்தையின் வாழ்க்கை நிலைமைகளை ஏற்றுக்கொண்டு குழந்தைக்கு உதவி புரிய முயன்றால், முதிர்ந்தோர் இயற்கை அன்னையால் அளிக்கக்கூடிய மிகவும் விழுமிய இன்பத்தை நோக்கி முன்னேற முடியும். அதாவது குழந்தையின்

இயற்கையான வாழ்வினைத் தொடர்ந்து செல்லலாம். மனிதன் மென்மேலும் உருவாவதைக் கண்டு இன்புறலாம். ஒரு ரோசா அரும்பு விரிவது பல செய்யுள்களின் பொது வருணனைக்கு உட்பட்டதென்றால், குழந்தையின் உள மலரும் செய்யுள் எவ்வளவு உயர்ந்ததாக இருக்க வேண்டும்! சொல்லற்கரிய அன்பளிப்பாகிய அற்புதம் நம் அருகே வைக்கப்பட்டிருக்கிறது. ஏன்? இந்த அற்புதம் நம்மைத் தொடரவும் நமக்கு ஆறுதல் அளிக்கவும் நாம் என்ன செய்கிறோம்? பைத்தியம் பிடித்தவர்கள்போல் தெய்வ நிந்தனை செய்து, சீற்றம் கொண்டு நம் பாதத்தின்கீழ் மிதித்து விடுகிறோம்.

* * *

எல்லாவகைத் தண்டனைகளுக்கு உட்படுத்தப்பட்ட போதிலும் குழந்தை தொட்டு விளையாற்ற விருப்பம் கொள்கிறான். அவனுடைய வளர்ச்சிக்குத் தேவைப்படும் பயிற்சிகளைச் செய்வதில் விடாப்பிடியாய் இருக்கிறான். அவன் இவ்வாறு செய்வதில் தன்னுடைய இயற்றிநிலையை காட்டிக் கொள்கிறான். இதைத் தடுக்க பெரும்பாலும் நாம் சக்தியற்றவர்களாக இருக்கிறோம். மூச்சு விடுவதிலும், பசி வந்தவுடன் அழுவதிலும், நடக்க விரும்பிய போது எழுந்திருப்பதிலும் காட்டுகின்ற அதே விடாப்பிடியைக் குழந்தை இதிலும் காட்டுகிறான். தன்னுடைய தேவைகளுக்குப் பொருத்தமான புறப்பொருள்களின் பக்கம் குழந்தை திரும்புகிறான். அவைகளைக் கண்டால் அவனுடைய தசை சார்ந்த பயிற்சிகளிலும், புலன் சார்ந்த பயிற்சிகளிலும் தன்னுடைய சக்திகளை விளங்க வைக்கிறான். அப்பொழுது அவன் மகிழ்ச்சி அடைகிறான். அவ்வாறு அவைகள் கிடைக்காவிடில் தன்னுடைய ஆசைகள் நிறைவு பெறாத பொழுது எவ்வாறு அமைதியற்றவனாகிறானோ அவ்வாறே இங்கும் ஆகி விடுகிறான். பொம்மைகள் அவனுடைய கரங்களுக்குப் போதுமான அளவு பளுவைப் பெற்றிருப்பதில்லை. இலேசாக இருக்கின்றன. கரங்கள் பொருள்களைத் தாக்கியும் இயக்கவும் செய்ய வேண்டிய முயற்சிகளில் ஈடுபட வேண்டும். பொம்மைகள் புலன்களைத் திருப்தி அளிக்க மிகச் சிக்கல் வாய்ந்தவை. புலன்கள் ஓர் உணர்ச்சியைப் பாகுபடுத்தத் தேவைப்படுகின்றன. அவை இடம்பத்தைக் குறிக்கின்றன. பொம்மைகளைப் பொறுத்த மட்டில் அவை உண்மையான வாழ்க்கையின் நிழலுருவையும், நையாண்டிப் போலியையும் (Simulacra & parodies) சுட்டிக் காட்டுகின்றன. இருந்த போதிலும் இவைகளே குழந்தையின் உலகமாகி விடுகின்றன. இந்த உலகத்தில் அவர்களுடைய உள்ளார்ந்த சக்திகள் அனைத்தையும் அவர்களே மனமில்லாமல் கட்டாயமாய் வாட்டிப் பொசுக்கி விட வேண்டியிருக்கிறது. இறுதியில் பண்டங்களைப் பாழாக்கச் செய்து விடுகிறது.

'பொருள்களை உடைத்தெறியும் ஓர் இயற்கை உணர்வு குழந்தைகளுக்கு உண்டு' என்று பொதுவாகக் கூறப்படும் தீர்ப்பினை நல்ல வேளையாகக் குழந்தைகள் கேட்பதில்லை. தங்கள் உடைமைப் பொருள்கள்மேல் அவர்களுக்கு இருக்கும் இயற்கை உணர்வு—அதாவது தன் நலம் கருதுதல் மிகவும் வலிமையுடன் குழந்தைகளில் வளர்ந்திருக்கிறதென்ற மூதுரையையும் குழந்தைகள் அறியார். இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்துண்மைகளாகும். உண்மைநிலை என்ன? குழந்தையிடம் தான் வளர வேண்டும் என்ற அளவுகடந்த புலன் உணர்வு இருந்து வருகிறது. ஆதலால் தன்னை மேலே உயர்த்தித் தன்னை முழு நிறைவாக்க முயற்சிசெய்கிறான். அவனுடைய ஒவ்வொரு வாழ்க்கைப் பருவத்திலும் அடுத்த பருவத்துக்கு வேண்டிய அளவில் தன்னை ஆயத்தமாக்கிக் கொள்கிறான். குழந்தையிடம் சில அதிசய புலன் உணர்வுகள் இருப்பதாக அவன் மீது அபாண்டப் பழி சுமத்துகிறோம். ஆனால், இந்த உண்மையோவெனில், அவை அனைத்தையும் விட மிகவும் புரிந்துக் கொள்ளக் கூடியதாக இருக்கிறது.

குழந்தைகளைத் தாமே தம் விருப்பம்போல் நடந்து கொள்ளக் கொஞ்சம் விட்டுத்தான் பாருங்கள். அவர் அந்த நொடியிலேயே 'மாறுபாடடைந்து விடுகின்றனர்.' குரேரி கொன்ஜாகா குழந்தை இல்லத்தில் (Guerrieri Gonzaga children's House) ஒரு ரகளை செய்யும் குழந்தையாக இருந்தாள். இவளைப் பார்த்து, ஒருத்தியிடம் இவளைப் பழக்க வேண்டியிருக்கிறது என்றார் ஆசிரியர்.'[1] இவளிடம் ஒரு சீப்பு கொடுக்கப்பட்டது. அவ்வளவு தான். எல்லோரிடமும் போக்கிரித்தனமும் கலவரமும் செய்கின்ற குழந்தை உயிர்ப்புடனும் கண்ணைக் கவரும் சிறு பெண் ஆகவும் மாறி விட்டாள். தன்னுடைய தோழியின் கூந்தலை மெத்த மகிழ்ச்சியுடன் மிகவும் எச்சரிக்கையுடன் வாரி விட்டாள்.[2] ஒருநாள் ஒரு பொலிவற்ற சுறுசுறுப்பற்ற குழந்தை தன் கைகளை நீட்டிக்கொண்டு தன்னுடைய சட்டைக் கைகளைக் கீழே இழுத்து விடும்படி கேட்டாள். 'நீயே செய்து கொள்' என்றுதானே சொன்னோம். உடனே அவளுடைய கண்களில் விவேக சோதி விளங்கிற்று. இதுவரை சோர்வுற்ற முகத்தில் இப்பொழுது மன நிறைவும். வியப்பும் கூடிய களை தோன்றிற்று. பிறகு தானே தன் சட்டையின் கைகளை நேர் மகிழ்ச்சியுடன் கீழே இழுத்துவிட்டுக் கொண்டாள். இந்தக் குழந்தைகளுக்கு ஒரு சோப்புக் கட்டியும், சிறு அகல வாய்க்கிண்ணமும் கொடுக்கப்பட்டபோது, எவ்வளவு எச்சரிக்கையுடன் பாத்திரத்திலிருந்த நீரை வடிக்க வைத்துப்

[1] ஏதோ காட்டு விலங்கு போல் பழக்க வேண்டுமென்று கருதினார் போலும்!

[2] ஒரு சீப்பு செய்த மந்திரம்!

பிறகு எங்கு உடைந்து விடுமோ என்ற அச்சத்தில் அதை இருந்த இடத்தில் சேர்ப்பித்தார்கள்! எவ்வளவு அருமையாக சோப்புக் கட்டியை எடுத்து மெதுவாகக் கீழே வைத்தார்கள். பணியெல்லாம் ஏதோ இயங்கும் பொறி சார்ந்த உருவங்களிடை இசைத் துணையுடன் நம்பிக்கையாக ஒப்படைத்தது போலிருந்தது. உருவங்களே குழந்தைகள்; இசையே இவர்களுடைய சொந்த மகிழ்ச்சி.

இந்தக் குழந்தைகள், உடை தரித்துக் கொள்வதிலும், துப்புரவாக்குவதிலும், கழுவுவதிலும், தலை வாருவதிலும், கழுவித் துப்புரவாக்குதல், தங்களுடைய சூழ்நிலையை ஒழுங்குபடுத்துதல் போன்ற பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்கள். இதன் விளைவாக அவர்கள் ஒரு சிறு காகிதத் துண்டினைப் பல ஆண்டுகள் வைத்திருக்கும் அளவுக்கு அவர்கள் பயன் தரும் பொருள்களிடம் காதல் கொண்டனர். தட்டுமுட்டுச் சாமான்களின் மேல் மோதிக் கொண்டு பண்டங்களை உடைப்பதற்கு மாறாக அவர்களுடைய இயக்கங்களை நிறைவாகச் சீர்படுத்திக் கொண்டனர்.

தங்களுடைய கடைத்தேறுதலுக்கென வெற்றியுடன் வேகமாகச் சென்று கொண்டிருக்கின்ற இந்த உயிர் வாழ்வுகளின் அருகில் நம்மை இருத்திக்கொண்டு, நமக்கிடையே தொடங்கியுள்ள போரையும், நாம் முன்கூட்டி உண்டாக்கி வைத்துள்ள அச்சத்தையும் பொருட்படுத்தாமல் குழந்தைகளை நம்முடன் இணைத்துக் கொள்ளத் தேடுகிறோம். நாம் அவர்களிடம் மெதுவாகவும் மருட்டுகின்ற வகையிலும் நெருங்குகிறோம். ஒரு குழந்தை ஒரு பண்டத்தை உடைத்துவிடும் பொழுது இயற்கையாக அது வருந்துகிறது. அதனால் தன் பிழையைத் திருத்திக் கொள்ள முயலும். தன் இயக்கங்களைச் சீர்படுத்திக் கொள்ளப் பார்க்கும். அவனுக்கு ஏன் இந்த வருத்தம் என்று நினைக்கிறோம். இவ் வருத்தம் இருந்திருந்தால் நெறி தவறிய தசைகளுக்கு நாம் இவ்வாறு செய்து விட்டோமே என்று வருந்த வாய்ப்புக் கிடைத்திருக்கும். நாம் உடையாத பொருள்களான தட்டுகள், அகல வாய்க் கிண்ணம் (basin), உலோகத்தால் ஆன பாத்திரங்கள், துணிப் பொம்மைகள், கம்பளத்தாலான கரடிகள், ரப்பர்ப் பொம்மைகள்[1] ஆகியவற்றைக் குழந்தைக்குக் கொடுக்கிறோம். இனிமேல் இவனுடைய தவறுகள் மறைந்து கிடக்கும். தசைகள் செய்கின்ற ஒவ்வொரு பிழையும் குழந்தையின் கண்களுக்குப் புலனாகாது போய் விடும். தான் பிழை செய்வதைக் குறித்து

[1] தற்காலத்தில் வழக்கத்தில் வந்துள்ள பிளாஸ்டிக் பண்டங்கள் —மொழிபெயர்ப்பாளர்.

இனிமேல் வருத்தப்படுவதை உணரான். குற்றம் செய்தோமே என்ற பச்சாதாபம் கொள்ளான். தன்னைச் சீர்படுத்திக் கொள்ள லாம் என்று முயற்சி செய்யான். இனி, அவன் பிழைகளுக்குள் மூழ்கிக் கிடக்க முடியும். பாருங்கள் அவனை, அருவருப்புத் தோற்றம், கடுநடை, முகத்தில் உணர்ச்சியின்றிக் கையில் ஒரு பஞ்சால் திணிக்கப்பட்ட கரடிப் பொம்மை! அவன் இடம்பத்துட னும், பிழைகளுடனும் இறுகக் கட்டப்பட்டுக் கிடக்கிறான். அதனால், எல்லா உணர்வுகளையும் இழந்து விட்டான்.

முதிர்ந்தோன் அவனை இன்னும் அதிகமாக—நெருக்கமாக இணைத்துக்கொள்கிறான்; குழந்தைக்கு அனைத்தையும் செய்து வைக்கிறான்; உடைதரித்து விடுகிறான்; உணவு ஊட்டியும் விடுகிறான். குழந்தையின் விருப்பம் தான் உடைதரிக்கப்படு வதிலும், ஊட்டப்படுவதிலும் இல்லை. அவனுடைய ஆழ்ந்த ஆசை தானே செய்வதற்குத்தான். தன்னை இன்னும் உயர்ந்த நிலைக்கு உந்திக்கொள்ளத் தன்னுடைய சொந்த விவேகத்தைப் பயிற்சி செய்ய ஆவல் கொள்கிறான். முதிர்ந்தோன் எவ்வளவு நயமான வார்த்தைகளால் குழந்தையைத் தன் வசப்படுத்துகிறான். உன்னுடைய முயற்சிகளெல்லாம் உன்னைக் குளிக்கப்படுத்திக் கொள்வதற்கும் உடை தரித்துக் கொள்வதற்குமே ஆகும். இத் துணையும் ஒரு முயற்சியும் இல்லாமல் செய்ய வைத்துக் கொள்ள லாமே! இன்னும் மேலான நிறைவுடனும் எளிமையாகவும் செய்து வைத்துக் கொள்ளலாமே! உன்னால் செய்யக்கூடிய முயற்சி கள் எல்லாவற்றிலும் சாதிக்கக் கூடியதைவிட இன்னும் நூறு மடங்கு உனக்காகச் செய்யப்படும். ஆனால், உன் சுண்டு விரலை நீ ஆட்டினால் போதும். ரொட்டியை நீ உன் வாயில் எடுத்துப் போடக்கூடத் தேவையில்லை. அந்தத் தொல்லையும் உனக்கு வேண் டாம். உனக்குத் தேவைப்படும் உணவு ஊட்டத்தை ஏராளமாக உட்கொள்வாய்.

மனித இனத்தை வீழ்ச்சியிற் சிக்க வைக்கும் தீய சக்தியாகிற பிசாசு தனிக்காட்டில், உலகத்தின் எல்லா மண்டலங்களையும், அவைகளின் மகிமையும் இயேசு நாதருக்குக் காட்டி மயக்க முயன்றபோது, அவன் இதைவிடக் குறைந்த அளவில் கடுமை யாக நடந்து கொண்டிருக்கிறான். 'என் காலில் வீழ்ந்து வணங்கி னால் இவைகளனைத்தையும் உனக்குத் தருவேன்' என்றாள் பிசாசு. அதற்கு இயேசுநாதர், 'சைத்தானே, இங்கிருந்து தொலைந்து போ. ஏனென்றால் எழுதப்பட்டிருக்கிறது: உன்னுடைய தலைவன் ஆண்ட வனை நீ வணங்கக் கடவாய். அவன் ஒருவனுக்கே நீ பணி புரிவாய்!' ஆனால், குழந்தைக்கு இயேசு நாதரைப் போல் அவ்வாறு விடையளிக்கச் சக்தி இல்லை. குழந்தை இறைவனுக்குக்

கீழ்ப்படிய வேண்டும். அவனுடைய இயல்பு வினையாற்றலைக் கோர வேண்டுமென்று ஆண்டவன் விதித்திருக்கிறான். இவன் தன் வாழ்வினை வெற்றி பெற்றதுபோல் இவனுடைய வெற்றியின் குறிக்கோள் இவனை இன்னும் தானே உயர்த்திக் கொள்வதற்கே ஆகும். வெளிப் பகட்டணியும் இன்ப நலமும் பெறுவதற்கன்று. மயக்கப் பார்க்கும் பொழுது அவனால் தடுத்துக் கொள்ள முடியாது. கொடுக்கப்பட்ட பொருள்களைக் கைப்பற்றுதலிலும், வனப்பான கையால் செய்யப்பட்ட பண்டங்களை ஏற்றுக் கொள்வதிலும் நிறுத்திக் கொள்கிறான். அவனுடைய ஆன்மா ஒரு முன்னேற்றத்தையும் அடைவதில்லை. அவனுடைய குறிகோளையே இழந்துவிடுகிறான். பாருங்கள் குழந்தையின் தோற்றத்தை! பொலிவில்லை; தடுமாற்ற நடை; உதவாதவன்; அடிமை! அந்தத் திறமையற்ற தசைகள் தமக்குள் ஓர் அடிமை ஆன்மாவைச் சிறைப்படுத்தி விட்டிருக்கின்றன. முதிர்ந்தோருடன் தொடங்கப்பட்ட பௌதிகப் போட்டிகளைவிட (Physical contests) இந்த அழிவார்ந்த சடத்துவம் (inertia) இன்னும் அதிகமாகக் குழந்தையை அடக்கி ஒடுக்கி விடுகிறது. பாபம் செய்தவன் போல் இவனிடம் சினம் விட்டு விட்டு அடிக்கடி தோன்றுகிறது. தன்னால் உடைக்க இயலாத கரடிப் பொம்மையைக் கடிக்கிறான். குளிப்பாட்டப்படும் பொழுதும் தலை வாரப்படும் பொழுதும் முரட்டுத்தனமாகக் கத்துகிறான். ஆடை அணிவிக்கும்பொழுது எதிர்த்து வம்பு செய்கிறான். சைத்தானால் அனுமதிக்கப்பட்ட இயக்கம் சினத்தின் இயக்கங்கள் ஒன்றே. வரவர அவன் செயலாற்றலற்றப் படுகுழியில் புதைந்து போகிறான். முதிர்ந்தோர், 'குழந்தைகளுக்கு நன்றி என்பதே கிடையாது. இன்னும் அவர்களிடம் உயர்ந்த பண்புகள் தோன்றவில்லை. அவர்களுடைய இன்ப நலத்துக்கே கவலைப்படுகின்றார்கள்' என்று சொல்கின்றனர்.

காலையிலிருந்து இரவு வரை மனநிறைவு பெறாத நான்கு அல்லது ஐந்து குழந்தைகள் ஒன்று சேர்ந்து தகரத் தட்டுகளைக் கொட்டிக் கொண்டும், இரைந்து கத்திக் கொண்டும், பொம்மைகளை வதைத்துக் கொண்டும் கொட்டம் அடிக்கும் பொழுது தாய்மார்களும், செவிலிகளும் பொறுமையாய் இருப்பதை எவர்தான் பார்த்திராதிருக்க முடியும்? அவர்கள் இவ்வாறு கூறிக்கொள்வது போலிருக்கிறது. 'குழந்தைகளெல்லாம் இப்படித்தான்.' இயற்கையாகக் குழந்தைகளிடம் பொறுமை இழத்தலுக்கு மாறாக இன்முகங்கொண்ட ஒரு பரிவு உணர்ச்சி தோன்றி விடுகிறது. அத்தகையவர்களை நோக்கி, 'எவ்வளவு நல்லவர்கள்! எவ்வளவு பொறுமை!' என்று கூறுகிறோம்.

ஆனால், இதேபோல், சைத்தானும் பொறுமையாகவே இருக்கிறான். ஆத்மாக்கள் திறமையிழந்து போரிடுவதையும், அவை

தன் வசப்பட்டவை என்பதையும், இடம்பத்தில் மூழ்கி அவை பல வழிகளில் ஒடுக்கி நசுக்கப்பட்டுத் தம் குறிக்கோளையே மறந்திருப்பதையும், பாபத்தை உணரும் சக்தியை இழந்து விட்டதையும், படிப்படியாக மனிதன் குற்றத்தால் பாதாளத்தில் புதைந்து கொண்டிருப்பதையும், இன்னும் பிறவற்றையும் சார்ந்த வேதனைகளைச் சைத்தானுலும் சிந்திக்க முடியும்; அவன் அந்தச் சிந்தனையில் பொறுமையிழக்காமல் இருக்கிறுன். அவர்களுடைய அழுகைக்கு ஒப்புதல் தெரிவிக்கிறுன். அவனும் கரடிகளையும், ரப்பர்ப் பொம்மைகளையும் கொடுக்கிறுன்; ஊட்டம் ஊட்டுகிறுன்; இன்னும் திணிக்கிறுன். அதாவது உடலை ஊட்டி வளர்த்து அது செய்கின்ற பிழைகளைப் புதுப்புது இடம்பங்களால் மறைக்கிறுன்.

ஐயம் தோன்றுகிறவர்கள் இந்தத் தாய்மார்களையும், செவிலிகளையும் இவ்வாறு கேட்க வேண்டும்: 'அவர்கள் மெய்யாக நல்லவர்கள்தாமா?' இதற்கு இயேசுநாதர் பகர்ந்த விடையினின்று ஒரு கருத்தைப் பெறலாம். 'ஆண்டவனைத் தவிர எவரும் நல்லவர்களல்லர். ஆண்டவன் என்பது உருவாக்குபவனைக் கூறுகிறது; படைப்பவனைக் கூறுகிறது; சிருட்டிப்பவனைக் கூறுகிறது. ஆண்டவனுடைய இயற்பண்பு நன்மை. எவன் ஆக்குகிறுனே, படைக்கிறுனே, சிருட்டிக்கிறுனே அவன் நல்லவன். ஆக்குதலே நன்மை. ஆக்கு தொழில் தன் குறிக்கோளை அடையும் வகையில் எவன் உதவி புரிகிறுனே அவனே நல்லவனுவான்.

* * *

இப்பொழுது பள்ளிக்கூடத்தைக் கவனிப்போம். நல்லவன் போக்கிரி என்பது பற்றிக் கருத்து இங்குத் தெளிவாக இருக்க வேண்டும். ஏனென்முல் ஆசிரியர் வெளியே செல்லும்போது மாணவர்களில் ஒருவரை அழைக்கிறுள். அவர் வகுப்பில் இல்லாதபொழுது யார் யார் நல்லவர் கெட்டவர் (போக்கிரி) என்று கரும்பலகையில் இரண்டு வரிசைகளில் அந்தத் தேர்ந்தெடுக்கப்பட்ட குழந்தை எழுதி வைக்கவேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட குழந்தைக்குச் சரியாக மதிப்பிடும் சக்தி உண்டு. ஏனென்முல் பள்ளிக்கூடத்தில் எவன் நல்லவன், எவன் குறும்புக்காரன் என்று கண்டு பிடிப்பதைப்போல் எளிதாக வேறு எதுவும் இருக்காது. யார் நல்லவன்? எவன் அசையாமல் மௌனமாக இருக்கிறுனே அவனே நல்லவன். எவன் போக்கிரி? எவன் பேசுகிறுனே' எவன் இயங்குகிறுனே அவனே போக்கிரி. இவ்வண்ணம் நடந்து கொள்கிறவர்களைப்பற்றி மதிப்பிட்டால் அதனுல் விளைவது ஒன்றும் பெரிய முக்கியம் வாய்ந்ததல்ல. ஆசிரியர் நல்லது கெட்டது என்று நன்னடத்தைச் சின்னங்களைப் பதிவு செய்வார்; மதிப்பெண்

தருவார் (conduct Mark). இதனால் ஏற்படுவது ஒன்றும் விபரீத மல்ல. சமூகத்தில் நல்லவன் கெட்டவன் என்று தீர்ப்புக் கொடுப் பதுபோல் இதுவும். இது சமூகத்தைப் பாதிப்பது இல்லை. தீர்ப் பினால் தண்டனையோ புகழ்ச்சியோ பெறுவதுமில்லை. அது வெறும் தீர்ப்புதான். ஆனால் 'மதிப்பும்', 'புகழும்' அதைப் பொறுத் திருக்கிறது. அவை நல்ல உயர்ந்த அறநெறி மதிப்புடையவை. பள்ளிக்கூடங்களில் நன்னடத்தை என்பது 'சடத்துவத்தையும்' (Inertia) கெட்ட நடத்தை என்னும் வினையாற்றலையும் (Activity) பொருட்படுத்தும். ஆசிரியர்களின் தலைவரிடமிருந்தும் தோழி களிடமிருந்தும் முழு அறநெறிப் பகுதி சார்ந்ததிலிருந்தும் பரிசும், தண்டனையும் பெறுவதும் ஆகிய இவை அனைத்திடமிருந்து மதிப்புப் பெறுதல் இந்த மதிப்பீட்டைப் பொறுத்திருக்கிறது. சமூகத்தில் காணப்படுவதுபோல இவ்வாறு மதிப்பிடச் சட்டக்கலையறிவு ஒன்றும் தேவையில்லை. இவ்வாறு மதிப்பிடுவோர்க்கென தனி யதிகாரமும் தேவையில்லை. எல்லோராலும் கண்டு மதிப்பிடக் கூடிய ஒன்றினைப் பொறுத்திருக்கிறது. அவை சூழ்நிலையின் மெய் யான அறநெறித் தீர்ப்பாகும். மாணவர்களில் எவர் வேண்டு மானால்—ஏன் பள்ளிக்கூடக் காவலனும் பெயர்களைப் பலகையின் மேல் வரைந்துவிடலாம். உற்று நோக்குமிடத்து இதில் ஒன்றும் மாயமில்லை. அல்லது நடத்தையில் வேததத்துவ நடத்தையேது மில்லை. செயலாற்றப் பெற்றவைகளின் தொகை—வாழ்க்கையின் உண்மையே. தெளிவாகக் காட்சி காணப்படுவதால் எல்லோரும் தீர்ப்பை எளிதில் அதன்மேல் கூறிவிடமுடியும்.

இதற்கு மாறாக இதைவிட இன்னும் முக்கியமான கருத் தாழ்ந்த செயல்கள் இருக்கின்றன. இவைகளின் பலன் அந்தச் சமூகத்தையே பாதிக்க வல்லவை. எல்லோரும் எதிர்பார்க்கக் கூடிய நியாய அநியாயக் கோட்பாடுகளைத் தொடுகின்றன. ஆதலால் அவைகளுக்கு அதிகாரபூர்வமான தீர்ப்பு தேவைப் படுகிறது. இந்தத் தீர்ப்புக்கு மேலே 'அப்பீல்' (மேல் வழக்காடும் உரிமை) கிடையாது. அவசர அவசரமாகக் கூடவைத்த ஒரு மீயுயர் முறை மன்றம் (Supreme Court) போலாகும்.

தேர்வு ஒன்றில் மாணவர்கள் பக்கம் பக்கமமர்ந்து உடனடியாக அந்த இடத்திலே அவர்கள் கற்றறிந்ததற்குச் சான்று தரவேண்டியிருக்கிறது. அதாவது அசலான நியாயம் நிறைந்த பத்திரத்தை எல்லோர்க்கும் தெளிவு தருவனவாயும் எவர்க்கும் கைக்குக் கிடைக்கக் கூடியதாயும் மதிப்பிடுதற்கு உரிய தாயும் இருக்க வேண்டும். எழுதப்பட்டது சொல்வதை எழுதுவ தானாலும் கட்டுரை அல்லது கணக்கு எதுவானாலும் ஒரு குழந்தை மற்றவனுக்கு உதவி புரிவானாயின், அச் செயல் வெறும் குறும்பு,

போக்கிரித்தனம் மட்டுமல்ல; அது ஒழுக்கக் கேடானதாகும். ஏனென்றால் அவன் வினையாற்றலை வெளியாக்கினதுடன் மாற்றானுடைய நன்மைக்கும் காட்டியிருக்கிறான். தண்டனை மிகக் கடுமையானதாயிருக்கலாம். தேர்விலிருந்து விலக்கீடு செய்யப் படலாம். அப்படியானால் ஓராண்டின் முழு முயற்சியும் இழக்கப் பட்டதென்றாகிறது. மறுபடியும் அதே பாடத் திட்டத்தைப் பின் பற்ற வேண்டியதாகிவிடும். மற்றக் குழந்தைக்கு உதவி புரிபவன் அன்புடையவன். அவன் இன்னும் சில திங்கள் கழிந்த பிறகு வேறொரு தேர்வில் வெற்றி பெற அனுமதிக்கப்படலாம். அல்லது பின்தங்கி அவனுடைய வாழ்வில் முழு ஆண்டுப் பாடத்தை மறுபடியும் கற்று வரவேண்டியும் நேரிடலாம். இம்மாதிரி எடுத்துக் காட்டுகள் பல இருக்கின்றன. இந்த அன்பு நிறைந்த குழந்தையின் குடும்பம் மிக ஏழைகளாக இருந்திருக்கலாம். நல்ல முயற்சிகள் செய்து நல்ல வகையில் தன் குடும்பத்துக்குத் தானும் சிறு குழந்தைக் கரங்களால் உதவிபுரியலாம் என்று எவ்வளவோ எண்ணியிருக்கக்கூடும். தன்னுடைய குடும்ப நிலை இக் குழந்தையின் உள்ளத்தில் எவ்வளவு ஆழத்தில் பதிந்து கிடந்திருக்கும் என்று எவரால் யூகிக்க முடியும். திகைத்து நின்ற தோழனிடம் தன்னிடமுள்ளது போன்ற ஏழ்மையும் இருப்பதாக எண்ணியிருக்கலாம். எவ்வளவு முறை தன் மனையில் நடைபெற்ற சண்டை சச்சரவுகளாலோ அல்லது உணவுப் பற்றாக் குறையினாலோ, படுக்கையில் மணிக்கணக்காகக் கிடந்து உறக்கமின்றி உணர்ச்சி வயப்பட்டிருக்கிறான். காலையில் அவனுடைய மனம் குழம்பியிருந்தது. ஒரு வேளை இவனுடைய தோழனின் மனமும் அவ்வாறே தேர்வன்று குழப்பமடைந்திருக்கலாம்.

சில சூழ்நிலை அமைவுகளை (Situations) நாம் புரிந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பள்ளிக்கூட ஆண்டின் ஒவ்வொரு கழிகிற நாளையும் தாய் எண்ணிக் கொண்டே போகிறாள். ஏனென்றால் இந் நாள்கள் அவளுக்குப் பலியான நாள்களேயாகும். நிச்சயமாக மகன் தேர்வில் எவ்வாறு கேள்விகளுக்கு விடை எழுதுவானோ என்று ஏக்க மனத்துடன் கவனித்துக் கொண்டு வருகிறாள். குழந்தை தொலைவில் வரும்பொழுது தன் தலையைச் சாளரத்தின் வழியாக நீட்டி, அவன் முகம் காணப்படும் தொலைவிலேயே 'எப்படி எழுதினாய்?' என்று மிக ஆவலுடன் கேட்கிறாள். தன் தோழனுக்கு உதவி புரிந்த நல்லெண்ணம் கொண்ட குழந்தையின் உள்ளத்தில் அத்தகைய காட்சி ஒன்று தோன்றியிருக்கலாம்.

அவன் இவைகளையெல்லாம் தனக்கே வைத்துக் கொண்டிருக்கலாம். அல்லது அவனுடைய வேலையை இன்னும் சீராக்கியிருக்

கலாம். அல்லது விடைத்தாளை முன்னே கொடுத்திருக்கலாம். உளவியல் சோதனைகளுக்குத் திட்பக் காலக் கணிப்பளவுக் கருவி (Chronometer) என்ற கருவி உபயோகிக்கப்படுகிறது. அது நுண்மையாகக் காலத்தைக் காட்டக் கூடியது. அதே போல் இந்தத் தேர்விலும் செலவழிக்கப்பட்ட காலம் நிமிடத்தில் கணக்கிடப்பட வேண்டுமென்று நியாயம் விதிக்கப்பட்டிருக்கிறது. நியாயம் கடுமையானது. குழந்தையால் திருப்பிக் கொடுக்கப் பட்ட தாளின்மேல் 10·32 நிமிடத்திற்குக் கொடுக்கப்பட்டது என்று ஆசிரியர் எழுதிவிடுகிறார். அப்படியே மற்றொன்றின் மேல் 11·05 நிமிடங்களுக்குக் கொடுக்கப்பட்டது என்று எழுதிவிடுகிறார். இரண்டு தாள்களும் ஒரே மதிப்புப் பெற்றனவாயிருப்பின் அதன் உள்ளடக்கத்தைக் கொண்டு இவையிரண்டும் மற்றவர்களுடைய விடைத் தாள்களைவிட மிகச் சிறந்ததாக இருந்த போதிலும், இவ்விரண்டில் எது எதைவிடச் சிறந்தது என்று கூறமுடியாமல் போகிறது. அந்த நிலையில் சிக்கல் ஏற்படுகிறது. இவ்விரண்டில் எது முதல் என்று தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. இது மிகவும் முக்கியமானது. ஏனென்றால் முதலில் வந்தவனுக்குப் பரிசுண்டு. ஐயம் ஏற்படும்பொழுது காலம் தீர்ப்பளிக்கிறது. ஒரு விடைத் தாள் 10·30 மணிக்கும் மற்றது 10·35 மணிக்கும் திருப்பிக் கொடுக்கப்பட்டது. 10·30 மணிக்குக் கொடுக்கப்பட்ட விடைத் தாள் 'முதல்' என்று தீர்ப்பளிக்கப் பெற்றது. ஏனென்றால் அவனுடன் போட்டியிட்ட மாற்றானை விட இவன் ஐந்து நிமிடங்களுக்கு முன்னதாவே அதே தொழிலை நிறைவு பெற முடித்துத் தந்து விட்டானல்லவா? ஒரு பரிசு அதைப் பொறுத்துத்தான் தீர் மானிக்கப்பட்டது! ஆதலால் ஊக்கம் தளராது கடுமையாய் உழைக்கும் ஒரு குழந்தை தன் தேர்வுகளுக்கு ஆயத்தமாகிக் கொண்டிருக்கும் பொழுது, மிக எச்சரிக்கையுடனிருக்க வேண்டும். இந்தத் தேர்வில் இருவரும் புத்திசாலிகளாகவும் இருவரும் வேக மாகவும் விடையெழுதினார்கள். ஒருவன் மை எளிதில் வடியக் கூடிய நல்ல பேனாவைக் கொண்டு எழுதினான். மற்றவன் அவ்வா றில்லை. ஆதலால் அவன் கவனம் தவறியதால், பரிசையிழந்தான். பேனாவைக் கொடுப்பது பெற்றோர் என்பது உண்மை. கண்டிப் பான நியாயப்படி எல்லோருக்கும் ஒரே மாதிரிப் பேனா இருக்க வேண்டும். ஆனால், இவ்வாறு செய்யும் பொழுது பல நுணுக்க ஐயப்பாடுகளாகிய கடலில் இறங்கவேண்டி வருகிறது. அது நியாத்தையே மறைத்து விடலாம். எந்த நியாயமும் கடுமையா யிருக்கக் கூடாது. ஆனால், நுணுக்க ஐயப்பாடுகள் இல்லாமல் இருத்தல் வேண்டும். மற்ற குழந்தைக்கு உதவி புரிந்த அன்புக் குழந்தை நேரத்தையிழந்தான். ஆதலால் இக் காரணம் ஒன்று பற்றியே அவனுடைய மதிப்பில் ஒரு பகுதியையிழந்தான்.

ஆதலால் அவனுடைய தோழனுக்காகத் தன்னையே தியாகம் செய்துகொண்டான்.

தண்டனையை மட்டுப்படுத்த எந்தச் சலுகைகளும் தளர்ச்சியும் அனுமதிக்கப்படமாட்டாது. குடும்பநிலை, தாயின் நிலை எதுவும் தேர்வைத் தள்ளிப்போட வேண்டாமென்று எதிர்த்து நிற்க முடியாது. மிகவும் கொடிய குற்றவாளிகள் விஷயத்திலும் தீர்ப்பை மட்டுப்படுத்தத் தளர்த்தப் பட்டிருப்பதும் உண்டு. ஆனால், பள்ளிக்கூடம் வேறொரு விஷயம். இங்கு தெளிவான உண்மைகளைப் பற்றிச் செயலாற்ற வேண்டும். ஒருவருடைய மனம் மற்றொருவருடைய மனத்துக்குள் ஊடுருவிச் சென்றிருக்கிறது. ஆதலால், ஒவ்வொரு குழந்தையின் தனித் திறமையை அவர்களுடைய செயலால் மதிக்க முடிவதில்லை. மேலும், தேர்வு என்பது தனித்தனி சோதிப்பதாகும். தள்ளுபடி இறுதித் தேர்வில் நடைபெற்றால் குற்றவாளி முழு ஆண்டுப் பாடத்தையும் மறுபடி படித்துத் தீரவேண்டும். சாதாரணக் குற்றவாளிகளிடம் அப்படி யில்லை. அங்கு மாதங்கள் வாரங்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இங்கு அளவின் அலகு ஓராண்டு. குற்றவாளிகளைப் பற்றிக் கவனிப்பதில் மற்றொன்று இருக்கிறது. அவர்களுடைய குற்றங்கள் தங்களால் தவிர்க்க முடியாத சக்திகளாலும் நிலைமைகளாலும் குற்றம் செய்யத் தூண்டிவிடப்பட்டிருக்கலாம். குற்றம் செய்யப்பட்டிருக்கலாம். நல்லது செய்யாமலிருக்கும்படி தம்மைத் தடுத்துக் கொள்ள முடியாதவர் எவர்தான் இருக்கின்றார்கள்? நன்மை செய்வதென்பது நிச்சயமாக ஒரு தடுக்க முடியாத உள் தூண்டுதல் ஆகாது.

எனவே இத்தகைய வசதிக் குறைவான உட்தூண்டுதல்களைத் தவிர்ப்பதற்காக ஆண்டுதோறும் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து கொள்ளாதிருக்கும்படி பள்ளிக்கூடம் குழந்தைகளுக்குக் கற்பித்து வருகிறது. இன்னும் அதிகப்படியாகச் செய்கிறது. நேரடியாக ஒருவனுக் கொருவன் அறிவித்துக்கொள்வதைத் தடுத்து விடுகிறது. என்ன வேட்டையிது! விவேகமும் நடைமுறையும் உணர்ந்த ஆசிரியர் தக்க சூழ்ச்சி முறையைத் தந்திரமாக உபயோகிக்கிறார். இந்த மறைந்த ஏமாற்றப் போட்டியில் குழந்தை கையாளக் கூடிய எல்லா முறைகளையும் ஆசிரியர் அறிவார். குழந்தைகள் ஒருவரை ஒருவர் விட்டுக் கொடுக்காமலும் ஒருவருக் கொருவர் தெரிந்து கொள்ளவும் இன்னும் எதுவும் செய்ய வல்லவர்கள். ஒரு குழந்தை பாடத்தை ஒப்பிக்கும் பொழுது மற்றொரு குழந்தை தெரியாத இடத்தில் எடுத்துக் கொடுப்பது ஆசிரியர் செவியில் விழும் என்று ஐயப்பட்டால், அவனுக்கு முன் உட்கார்ந்து கொண்டிருக்கும் தோழனொருவன்

அவனுடைய தோள்மேல் திறந்த புத்தகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பான். தெரியாது திணறுகிறவன் எளிதில் படித்துவிட லாம். சூதுவாது நிரம்பிய ஆசிரியர் பிறரிடமிருந்து உதவி பெருமல் இருப்பதற்கு அந்தக் குழந்தையை மேசைகளை விட்டு வெளியே வர வைத்தாராணுல் அவனுடைய தோழர்கள் ஊமைகளும் செவிடர் களும் உபயோகிக்கும் மௌன எழுத்துக் குறிகளை (Deaf and Dumb Alphabet) நெடுங்கணக்கை உபயோகிப்பார்கள். பிறகு ஆசிரியர் கரும்பலகையை உபயோகிப்பதைப் பார்க்கிறேம். இது ஒரு சாக்குப்போக்குத்தான். குழந்தையின் முகத்தைக் சுவர் நேர் திரும்பும்படி செய்வதற்கே இந்த முறை அனுசரிக்கப்பட் டிருக்கிறது. அதே சமயத்தில் அவருடைய சுடர்க்கண் வகுப்புக் குழந்தைகளையே பார்த்துக் கொண்டிருக்கும். இவ்வாறு 'நோயாளி' தனியே ஒதுக்கப்படுகிருன். கெட்டிக்கார ஆசிரியரை ஏமாற்றி எதுவும் செய்துவிட முடியாது. ஒரு குழந்தை ஒரு காகிதச் சுருளை மேசைக்கடியில் மறைத்து நீட்டித் தன் தோழ னுக்கு அனுப்பித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் எதிர்பாராத வகையில் அவர் கண்டுபிடித்து விடுவார். ஒரு குழந்தை மை யொற்றுத் தாளின் மேல் ஏதோ எழுதி மற்றவனுக்குச் சேர்ப்பிக்கும் சமயத்தில் ஆசிரியர் கைப்பற்றி விடுகிருர்.

இக்காரணத்தால் முன்பக்கம் திறந்துள்ள மேசைகளை இனி உபயோகித்தல் நல்லது. இல்லாவிட்டால் மேசைக்கடியிலிருந்து பல பொருள்களை அடுத்தவனுக்குச் சேர்ப்பிக்க வழியுண்டு. மேசைகள் உடல் நலம் பேணுவதாக இருப்பதோடு அறநெறி சார்ந்தவையாயும் அமைந்திருந்தால், அத்தகைய தப்புச் சாக்கு எதுவும் நடப்பது அரிதாயிருக்கும்.

> 'அறநெறிக் கொள்கைப்படி முன்பக்கம் திறந்துள்ள மேசைகளும் குழந்தைகளின் கவனக் கண்காணிப்புக்கு எளிதாகவிருக்கும். ஏனென்ருல் அவர்கள் எப்பொழுதும் பக்கம் பக்கம் உட்கார்ந்து கொண்டிருக்கிருர்கள். ஒரு வித அறநெறித் தொடர்பும் இணைப்பும் ஏற்பட வசதி யில்லை. குழந்தைகள் ஆசிரியரின் ஓயாது ஒலித்துக் கொண்டிருக்கும் சொல் ஓசைகளைக் கேட்டு அவர் களுடைய மூளை திகைத்துப் போய் விடுகிறது. ஒரு குழந்தைக்கும் மற்ருெரு குழந்தைக்கும் ஒரு வித தெய் விகத் தொடர்பும் ஏற்பட வழியில்லை. இந்த வித ஏற்பாடுகளால் குழந்தைகளில் பலர் தன் கைத் தீமை (Onanism) போன்ற தீய ஒழுக்கங்களைக் கற்றுக் கொள் கின்றனர். இப் பழக்கம் பள்ளிக்கூடத்திலேயே தொடங் குகிறது. முதுகெலும்பு வளைதல், பக்கப் பார்வை அதிக

உழைப்பால் ஏற்படும் களைப்பு போன்று குழந்தைகளில் காணப்படும் குறைபாடுகளைப் பற்றி வெளிப்படையாகப் பேசப்படுகிறது. ஆனால், இந்தக் குறைபாட்டை அவ்வள வாகப் பேசுவதில்லை. பள்ளிக்கூடங்களில் குழந்தை களுக்கு ஏற்படும் நோய்களைப் பற்றி அறிவியல் ஆராயப் புகுவதற்கு முன்னரே இந்த நோயைப் பற்றித் தெரிந் திருக்கிறது. உட்கார்ந்த இடத்தில் இருக்கின்ற பழக்கம் இடுப்புப் பள்ளத்தில் குருதியோட்டத்தை ஓரளவு மட்டுப் படுத்துகிறது. இவ்விடத்திலே குருதி தேங்கிப் போகும் படி தூண்டிவிடப்படுகிறது. மேலும், இதைவிட வேறு எவ்வகையில் நரம்பின் சக்திகள் தம்மை வெளிப்படுத்திக் கொள்ள வகையிருக்கிறது? இந்தத் தீமை அச்சந்தரும் வகையில் பரவி விடுகிறது.

ஆனால், திறந்த கைமேசைகளிருந்தால் திருக்குமறுக் குக்கு வழியிராது. செய்யப்படாது என்பவைகளைத் தடுக்க வேண்டிய பல அறநெறி முறைகளும் பள்ளிக் கூடங்களில் மண்டிக் கிடக்கின்றன. ரோமாபுரியிலுள்ள பள்ளிக்கூட்ங்களில் ஒழுங்கும் கவனக்கண்காணிப்பும் நிறைந்திருக்கிறது. குழந்தைகள் சிறுநீர் கழிப்பிடத் திற்கு (Lavatory) போகவும் அனுமதிக்கப்படமாட் டார்கள். 'சிறுநீர் கழிப்பிடம் பிரச்சினை'யால் என்ன ஒழுக்கக் குறைவுகள் ஏற்பட்டன என்பது அனைவருக்கும் தெரியும். ஆசிரியர் பேச்சைக் கேட்டுக் கேட்டுச் சலித்துப் போனாலோ அல்லது உட்கார்ந்து உட்கார்ந்து சலித்துப் போனாலோ குழந்தை வெளியே போக வேண்டு மென்று அனுமதி கேட்பான். இதுவரையிருந்த இடத்தில் இவனுடைய உளச்சக்தியை மேற்கிளம்ப ஒருவாய்ப்பும் கிடையாமலிருந்தது. இப்பொழுது கிடைக்கப்பட்ட தானே விரும்பி அடையப்பட்ட தனியிடத்தில் தன் உள்ளச் சக்தி உயிர்ப்பிக்கும் வகைக்கு அவனால் இந்தச் சிறுநீர்க் கழிவிடத்தில் நெடுநேரம் இருக்க முடியும். குழந் தைகள் நடைக் கூடத்தில் தயங்கித் தயங்கி நிற்கக் கூடாது. இதைக் காவலர் கண்காணித்துக் கொள் வார்கள். இவ்வாறு சிறுநீர்க் கழிப்பிடம் செல்வது கட்டுக்கு மீறினதால் தக்க நடவடிக்கை எடுப்பதாக தீர்மானிக்கப்பட்டது. இப்பொழுது எந்தெந்த மணிக் கணக்கில் அவர்கள் உடற் தேவைப்படி சிறுநீர்க் கழிப்பிடம் செல்ல வேண்டியிருக்குமென்று கண்டு பிடித் திருக்கின்றனர். இக் கணக்கு ஏறத்தாழ இருக்கும்,

குறிப்பிட்ட நேரத்தில் குழந்தைகள் ஆசிரியரின் கண் காணிப்பில் இரண்டு வரிசையாக நிற்க வைக்கப்பட்டு சிப்பாய்கள் போல் நடை போட்டுக் கொண்டு சிறுநீர்க் கழிப்பிடத்திற்குப் போக வைக்கப்படுவார்கள். முதல் வரிசைக் குழந்தைகள் ஒருவர் பின் ஒருவராகச் சிறுநீர்க் கழிப்பிடத்திற்குள் நுழைவார்கள். மற்றவர்கள் நின்று விடுவார்கள். ஆனால் நின்ற இடத்திலே நடைபோட்டுக் கொண்டிருப்பார்கள். உள்ளே சென்றவர்கள் வரவர முன் போல் வரிசையாக நின்று நடை போட்டுக் கொண் டிருப்பார்கள். இந்தச் சந்தர்ப்பத்திற்கு இந்த இயக்கம் பொருத்தமானதென்று தோன்றுகிறது. உடல்தேவைக்கு ஏற்ற மணிக்கணக்கு தீர்மானித்திருப்பதால், எந்தக் குழந்தையும் சாக்குப்போக்குச் சொல்லி இடை நேரத் தில் போக முடியாது என்பது தெளிவு. ஆதலால் இந்த நேரத்தில் இதுவரை நுழையாத நாற்பது ஐம்பது குழந்தை வரிசையில் கடைசியிலிருக்கும் குழந்தை அந்தக் கழிவிடம் எந்த நிலைமையில் காண்பான் என்பது பற்றி நாம் ஒன்றும் கூற விரும்பவில்லை. சுகாதாரக் கொள்கை யெல்லாம் என்ன ஆயிற்று என்றும் நாம் கேட்கவில்லை. கழிவிடங்களின் வெளியமைப்பைக் கவனிப்போம். அவைகளுக்குச் சிறு கதவுகளிருக்கின்றன. மேலும் கீழும் அகலமான திறந்த வெளியிருக்கிறது. இவ்வாறு அடக்க மும் அறநெறியொழுக்கமும் காக்கப்படுகின்றன. இதற் குள் எதைச் செய்ய வேண்டுமோ அந்தக் கடமையைத் தான் செய்ய முடியும். இன்றைய நாகரிகத்தில் அமரு கின்ற ஆசனத்தை நீக்கிவிட்டுத் தரையில் ஒரு பள் ளத்தை அமைத்திருக்கின்றனர். அப்பொழுது உட லோடு தொட வழியில்லை. சுகாதாரமும் சீர் குலையாது. வசதிக் குறைவான நிலைமை இதற்குள் நீண்ட நேரம் தேவைக்கு மேல் இருக்க இடம் தராது. பள்ளிக்கூடங் களிலும் தனியிடங்களிலும் தங்குமனைகளிலும் இம் மாதிரித் தேவைக்கு இதுவே தக்க நடைமுறை ஏற் பாடாய் இருக்கலாமெனத் தோன்றுகிறது.

* * *

சமூக மென்னயவுணர்ச்சி (Social sentiment) வளர்வதற்கு இடம் பள்ளிக்கூடமே. அது குழந்தையின் சமூகம். உண்மையாக இவ் வளர்ச்சி பள்ளிக்கூடத்திலில்லை. குழந்தைகள் ஒருவரோ டொருவர் அளவளாவிக் கொள்வதிலில்லை. மேலே குறிப்பிட்டபடி கல்வி முறையே இந்த மென்னய உணர்ச்சியை வளர்க்கத் திட்ட

மிட்டிருக்கிறது. என்னுடைய முறை பலரறியப் பரவின பொழுது குழந்தைகள் பலர் ஒன்று கூடி ஒருவருக் கொருவர் இணங்கித் தொழில் புரிகின்ற இடத்தைப் பற்றிக் குறிப்பிட்டேன். அப் பொழுது என்னைப் பார்த்துச் சிலர், 'அவ்வாறாயின் ஒவ்வொரு குழந்தையும் தனித்தனியே வினையாற்றி வந்தால், சமூக மென்னய உணர்ச்சி எங்ஙனம் வளரும்?' என்று கேட்டனர். இதிலிருந்து நாம் என்ன தீர்மானமான முடிவுக்கு வரலாம்? சிறுநீர்க்கழிவிடத் திற்குச் செல்வது முதல் அணிவகுப்பு அமைப்பு முறையில் எல்லாக் குழந்தைகளும் ஒன்றை ஒரே சமயத்தில் சேர்ந்து செய்தார் களானால், அது சமூக மென்னய உணர்ச்சியை வளரவைக்கும். என நம்பிக்கை கொள்ள வேண்டியிருக்கிறது. ஆதலால் குழந்தை யின் சமூகம் முதிர்ந்தோர் சமூகத்திற்கு எதிர்மாறானது. முதிர்ந் தோர் சமூகத்தில் என்ன எதிர்பார்க்கப்படுகிறது. அவரவர் தொழிலைச் செய்து கொண்டிருக்கும் பொழுது ஒருவருக்கொருவர் உதவி புரிய வேண்டும் என்றும் நல்ல பழக்கத்துடன் ஒருவருக் கொருவர் தாராளமாக மரியாதை காட்டிக் கொள்ள வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால், குழந்தையின் சமூகத் தில் எதிர்பார்க்கப்படுவது என்ன? உடல் சம்பந்தமான போக்கில் எல்லோரும் ஒரே மாதிரியிருக்க வேண்டும். பொதுவாக இயங்கும் போது ஒன்றாக இயங்க வேண்டும். பிறருக்கு உதவி செய்வது, ஒருவருக் கொருவர் மரியாதையுடன் நடந்து கொள்வது என்ற நற்பண்புகளை காட்டிக் கொள்ளக்கூடாது என்று கொள்ளப்படு கிறது. பிறருக்கு உதவி செய்வதை முதியோர் சமூகம் ஒரு நல் லொழுக்கமெனக் கருதுகிறது. ஆனால், குழந்தைகளுக்குப் பெரிய பிழையாகுமாம்! ஒழுங்குக்கும் கட்டுப்பாட்டுக்கும் விளைக்கின்ற பெரிய குற்றமாம்.

சிறந்த கட்டுக்கதைகளை முடிக்கும்பொழுது இறுதியில் அது அறிவிக்கும் பாடம் என்ன என்று கூறுவது மரபு. அதேபோல் நவீன முறைகளிலும் ஒவ்வொரு பாடத்தையும் முடிக்கும் பொழுது ஓர் அறநெறியைக் குறிப்பிட்டு முடிக்குமாறு ஆசிரியர்கள் கேட்டுக்கொள்ளப்படுவார்கள். அந்தப் பாடம் பறவைகளைப்பற்றியோ வண்ணத்துப் பூச்சியைப் பற்றியோ அல்லது முக்கோணத்தைப் பற்றியோ இருக்கலாம். அது எப். பொழுதும் ஒரு அறநெறியுடனே முடிவுபெற வேண்டும். 'ஆசிரி யர் இந்த வாய்ப்பை நழுவவிடக் கூடாது' என்கிறார் ஆசிரியக் கலை வல்லுநர். பள்ளிக்கூடத்தின் முக்கிய—தலையாய குறிக்கோள் நன்னெறியூட்டுவதேயாகும்.

எல்லா நன்னெறிக்கும் 'ஒருவருக்கொருவர் உதவிபுரிக' என்பதே ஆசிரியக்கலை வல்லுநரின் பல்லவியாகும். இது பள்ளிக்

கூட குழந்தைகளுக்கும் பொருந்தும். 'ஒருவருக்கொருவர் அன்பு கொள்க.' குழந்தைகள் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ள வும் பரஸ்பரம் அன்பு காட்டவும் தூண்டுவதற்காக ஆசிரியர் ஓர் உளஇயல் முறையை மூன்று பிரிவுகளில் அனுசரித்துவருகிருர். புலன் உணர்வு அல்லது பொறிக்காட்சி (Perception), இணைதல் (Association), விருப்பத் துணிவாற்றல் (Volition) அல்லது காரண காரிய முறையைப் பயன்படுத்தலாம். இது ஆசிரியர் விருப்பத் திற்கு விடப்பட்டிருக்கிறது. அவர் அவருடைய வகுப்பைக் கட்டுப்பாடுடனும் நல்வழியிலும் வைத்துக் கொண்டிருக்கவேண் டும். ஏனென்ருல் இவை முக்கியமான அம்சங்களாகும்.

ஆனல் பள்ளிக்கூட அமைப்புக்கு மிகவும் முக்கியமான உறு துணையாக இருக்கும் உண்மை பரிசும் தண்டனையும் வழங்கும் முறையாகும்.

ஆசிரியக்கலை வல்லுநர் தங்களுடைய நடத்துமுறையில் இதை முக்கிய அம்சமாக ஆக்கிக்கொள்கின்றனர். குழந்தைகள் நன்ரு கப் படிக்கவும் நல்ல முறையில் நடந்து கொள்வதற்கும் ஓரளவுக்கு ஒரு தூண்டுதல் தேவைப்படுகிறதென்பதைப் பெரும்பாலோர் ஒப்புக்கொள்வார்கள். ஒரு சிலர் நன்மையை அதன் நன்மைக் காகவே விரும்பவேண்டும் என்ற மனப்பான்மை குழந்தைகளிடம் தோன்றச் செய்யவேண்டும் என்றும் கருதுகின்றனர். தீயதி லிருந்து ஒருவரை விலக வைப்பது கடமையாயிருக்க வேண்டுமே யொழிய தண்டனைக்கு அஞ்சியன்று. இந்தக் கருத்து மிகவும் மேன்மையான தெனினும் சாத்தியமற்றது என்றும் பலர் கூறுவர். தன்னுடைய கடமையைச் செய்யுமாறு தூண்டிவிடலாம் என்று கருதுவது 'ஆசிரியவியல் சார்ந்த முட்டாள்தனம்' என்ருகும். எதிர்காலக் குறிக்கோளை எண்ணி நல் உழைப்பிலும் நன்னடத்தை யிலும் குழந்தை தன்னை நடத்திச் செல்லுவான் என்பது நம்பத் தக்கதன்று. நன்ருகப் படித்துவந்தால் வருங்காலத்தில் உலகத் தில் சமுதாய மதிப்பைப் பெறலாம் என்றெண்ணி அவன் தானுக உழைப்பான் என்று எதிர்ப்பார்ப்பதும் நம்பத்தகாதது. ஏதாவது ஒரு நேரடியான தூண்டுதல் உடனடியாகச் சம்மதம் பெற்ற சின்னம் தேவைப்படுகிறது. தண்டனையின் கடுமையை மிகக் குறைவுபடுத்தவும் பரிசளிப்பதை இன்னும் குறைந்த அளவு பகட்டு ஆரவாரக்காட்சிக்கு உட்படுத்தவும் வேண்டுமென்று பொதுவில் அறிவுறுத்தப்படுகிறது. இத்தகைய சீர்த்திருத்தங்கள் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டிருத்கின்றன. குண்டாந்தடி யடிப்பு, (fustigations) உடல் ஒறுப்பு (corporal punishment) போன்ற தண்டனைகள் அண்மைக்காலம்வரை சிறைக்கூடங்களி லும், மனநோய் மருத்துவ நிலையங்களிலும், பள்ளிக்கூடங்களிலும்

இருந்து வந்தவை. இப்பொழுது பள்ளிக்கூடங்களில் கைவிடப் பட்டிருக்கின்றன. இன்றைய தண்டனைகள் அவ்வளவு கடுமையல்ல. கெட்ட மதிப்பெண், கடிந்துரைத்தல் அல்லது கண்டனம், சாதகமல்லாத அறிக்கையைப் பெற்றோர்க்கு அனுப்புதல், வருகை நிறுத்தல் அல்லது விலக்குதல் (suspension of attendance) போன்றவைகள் அனுசரிக்கப்பட்டு வருகின்றன, பரிசளிக்கும் சடங்கும் காலம் கடந்துவிட்டது. முன் நடந்து வந்த அமைதியான சடங்கில் வெற்றிபெற்ற மாணவர்கள் மேடை ஏறிப் பரிசு வாங்க நிற்பார்கள். இதை வழங்க வந்தவர் சுற்றுப் புறத்தில் சீரும் சிறப்பும் பெற்றவராக இருப்பார். இவர் கையில் இருந்தே அவர்கள் வாங்கக் காத்துக்கொண்டிருக்கின்றார்கள். வழங்குவதற்கு முன் ஊக்கமளிக்கும் வகையில் தக்க சொற்பொழி வாற்றிக் கொண்டிருப்பார். அந் நேரத்தில் குழுமியிருந்த பெற்றோர்—பெரும்பாலும் பெருமையும் உள் துடிப்பும் பெற்றவர்— தங்களுடைய ஒப்புதலையும், மெச்சுதலையும் தமக்குள்ளேயே சொல்லிக்கொண்டிருப்பார்கள். இந்த மேல் பகட்டெல்லாம் ஒழிக்கப்பட்டுவிட்டன. பரிசும் பொருளும் வெற்றி பெற்றவர் பின்னறையில் பணியாட்கள் முன்னிலையில் ஆடம்பரம் ஏதுமின்றி அளிக்கப்படுகிறது.

முக்கியமான விஷயம் என்னவென்றால் தகுதியுள்ள குழந்தை அவனுக்கு உரிய பொருளைப் பெறுவதாகும். முன்பு பதக்கங்கள் வழங்கப்பட்டன. அவைகளைக் குழந்தைகள் தம் நெஞ்சில் குத்திக் கொள்வார்கள். அப் பதக்கங்கள் இப்பொழுது நீக்கப்பட்டுள்ளன. இப்பொழுது அளிக்கப்படுவது ஒரு புத்தகம் அல்லது பயன்தரும் பொருள். நடைமுறைப் பயன் பள்ளிக் கூடங்களிலும் அங்கீகாரம் பெற்றுவிட்டன. நல்ல குழந்தைத்ளுக்கு ஒருவேளை ஒரு சோப்புக் கட்டி, அல்லது மேல் அங்கி தைத்துக் கொள்ளத் துணி போன்றவை வழங்குவோர்க்கும், பெறுவோர்க்கும் இடையே தனிமறைவடக்க மாக நடைபெறும்.

ஆனால், பரிசு ஒன்று தேவைப்படுகிறது. எனினும், ஆசிரிய இயல் வல்லுநர்கள் பரிசும் தண்டனையும் பற்றிய வரலாற்றினைப் பற்றிப் பல கருத்தரங்கங்கள் நடத்தி வந்திருந்த சமயத்தில், எந்த நன்மைக்குப் பரிசு வழங்கப்பட்டு வருகிறது. எந்தத் தீமைக்குத் தண்டனை விதிக்கப்பட்டு வருகிறது என்று எவரும் தம்மை வினவிக் கொள்ளவில்லை. அல்லது குழந்தை ஒன்றைச் செய்யுமாறு உந்தப்படுவதன் முன் அந்தத் தொழில் பற்றியே சற்று ஆய்ந்து அதன் மதிப்பைப் அளவிட்டுப் பார்ப்பதுபற்றியோ எவரும் தம்மைக் கேட்டுக் கொள்ளவில்லை.

இறுதியாகப் பழைய பிரச்சினைக்குப் புது ஆதாரம் ஒன்றை அமைத்துக் கொள்ள வேண்டிய அளவு தெளிவை இந்த பள்ளிக் கூடப் பிரச்சினையை ஆய்ந்த உண்மை முடிவுகள் நமக்குக் கிடைத் திருக்கின்றன. குழந்தைகளை ஒரு பரிசினால் மயக்குவது நல்லதா? அவர்களுடைய நரம்பு மண்டலத்தையே களைப்பாக்கச் செய்து கொள்ள வைப்பதும், கண் பார்வையைக் கெடுத்துக் கொள்ளச் செய்விப்பதும் நல்லதா? இந்த விபத்துக்களைத் தவிர்ப்பதற்காக, அவர்களால் தடுக்க முடியாத கட்டுக்கு மீறின தற்காப்பு இயற்கை உணர்வு சக்திகளால் முயற்சி செய்து கொண்டிருக்கும் பொழுது அவர்களைத் தண்டனையால் தடுப்பது நல்லதா? நம் எல்லோ ருக்கும் உண்மை தெரிந்து விட்டது. இறுதியாகத் தொடக்கப் பள்ளியில் பரிசு பெற்றவர்கள் உயர் நிலைப் பள்ளிக்கு வரும் பொழுது சாதாரணத் திறமையுடையவர்களாகின்றனர். உயர் நிலைப் பள்ளியில் பரிசு பெற்றவர்கள் கல்லூரிகளில் மிகவும் சலித்துப் போனவர்களாகின்றனர். பள்ளிக்கூட வாழ்க்கையில் தொடர்ந்து பரிசு பெற்றுக் கொண்டு வந்தவர்கள் வாழ்க்கைப் போட்டியில் தோல்வியுற்றவர்களாகவே ஆகின்றார்கள்.

இவ்வுண்மையை அறிந்த பிறகு குழந்தை இந்தத் தீய நிலையில் நிலைபெற இருக்குமாறு ஒரு பக்கம் அவனைத் தூண்டி விடுவதும் மறுபக்கம் அடக்கி ஒடுக்குவதும் நன்மைதானா? பள்ளிக் கூட வாழ்வு ஏற்கெனவே விபத்து நிறைந்ததல்லவா? இந்த விபத் துக்குள்ளும் அவர்களை மூழ்கச் சொல்லி நாம் வேறு தூண்டுதல் செய்ய வேண்டுமா? அண்மையில் புத்திசாலிக் குழந்தைகளைப் பற்றியும், முட்டாள் குழந்தைகளைப்பற்றியும் ஆய்வு நடந்தேறி யிருக்கின்றன. மனித இன நூல் வல்லுநர் அறிவியலில் கூர்மதி பெற்றவர். அவர்கள் இப் பிரச்சினையை நல்ல நம்பிகையுடன் ஆராய்ந்திருக்கின்றனர். நிறைந்த மதியுடன் பரிசு பெற்றவர்கள் வடிவு அமைப்பில் உயர்வும், இயற்கையான சிறப்புரிமை கரு வளர்ச்சிலேயே காணப்படுகிறதா, சாதாரணமானவனை விட இன்னும் மேம்பட வளர்ந்த மூளை இருக்கிறதா என்பவைகள் பற்றி ஆராய்ச்சி செய்து பார்க்கத் திட்டமிட்டிருத்கின்றனர். இதற்கு மாறாக மனித இன இயல் சார்ந்த குறிப்புகள் உடலின் தாழ்வு நிலையை வெளிப்படுத்துகிறது. அதாவது வடிவில் தாழ்வு, குறிப்பிடத்தக்க அளவில் குறுகிய நெஞ்சளவுகள், குறைந்த புத்திசாலிகளின் தலையைவிட இவர்களுடைய தலை எவ்விதத் திலும் வேறுபட்டதாகத் தெரியவில்லை. இவர்களுள் பலர் கண் ணுக்குக் கண்ணாடி அணிந்திருக்கின்றனர்.

பிழை எங்குச் செய்துவிடுவேமோ என்ற அச்சத்தால் ஓயா உழைப்புடன் தன்னுடைய பணிகளைச் செய்கிறவனும், அவ்வாறு

பிழை செய்தால் அது வேதனேப்படுத்தும் என்று கருது கிறவனும், உல்லாச நடை போவதையும், சுற்றித் திரிதலேயும், ஒரு மணிகால ஓய்வையும் வேறு வழியில்லாமல் தவிர்த்துத் தன் பாடங்கள் அனேத்தையும் கற்கின்றவனேயும் பற்றிய வாழ்க்கை குறித்து நமக்கு இன்னும் தெளிவான தோற்றம் கிடைக்கிறது. முதலிடம் பெறவேண்டுமென்ற ஏக்கத்தால் பிடியுண்டு, தன் தோழர்களிலும் மேம்பட்ட எதிர்கால வாய்ப்புக்கிடைக்கப் போகிறதென்ற போலித் தோற்றத்தால் தூண்டப்பெறுகிருன். தன்னுடைய நாட்டைக் காக்க வல்லவர்கள்தான் ஒருவன் என்று எண்ணிக்கொள்ளுமாறு நம்பச் செய்த புகழாலும், பரிசுகளாலும் ஊக்குவிக்கப் பெற்று, தன் பெற்ருேர்க்கு ஆறுதல் என்று எண்ணி ஒரு மாயச்சோதியைக் கண்டு கண் கூசுவதுபோல் அக் குழந்தை எதிர்கால வளமற்ற நிலேயை நோக்கி விரைந்து ஓடுகிருன். இவனுடன் வளர்ந்த கவலேயற்ற தோழர்கள் இவர்களுக்கு மாருக நன்ருக வளர்ந்த நெஞ்சைப் பெற்றிருக்கிருர்கள். வகுப்பில் மிக்க களி பொங்கியவர்களாக இருக்கின்றனர்.

வீட்டில் தனிக்குரவர் (tutor) உதவி பெற்ருே, அல்லது கற்று ணர்ந்த தாய்மார் அவர்களின் முன்னேற்றத்துக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளப்பட்டதால் மற்ருெரு வகைக் குழந் தைகள் இருக்கின்ருர்கள். அவர்கள் புத்தி கூர்மையில் மந்தமான வர்கள். அடிக்கடி தண்டனே பெறுகின்றவர்கள். இவர்கள் ஏழைக் குழந்தைகள். இவர்களுக்குத் தத்தம் இல்லங்களில் நல்ல வரவேற்புக் கிடையாது. அவரவர் விருப்பம் போல் எதையும் செய் யலாம் என்று விடப்பட்டவர்கள். இவர்கள் சில வேளேகளில் தெருக்களில் திரிந்துகொண்டு இருப்பார்கள். அல்லது பள்ளிக் கூடம் செல்வதற்கு முன் வைகறையில் தம் வயிறு வளர்ப்புக்காக வேறு ஏதாவது தொழில் செய்துவருவார்கள். நான் நடத்திய ஆய்வினுல் நான் அறிந்த உண்மை இதுவாகும். புகழப்பட்டுத் தேர்வில்லாமல் மேல் வகுப்புக்குச் சென்றவர்கள் நல்ல மதியவுணவு கொண்டு வந்த குழுவினரைச் சார்ந்தவர்களாக இருந்தனர். வகுப்பில் தாழ்ந்த மட்டத்தில் இருந்து தண்டனே பெற்றவர்கள் எந்த மதியவுணவும் கொணராமலோ அல்லது ஒரு ரொட்டித் துண்டைக் கொண்டவர்களாகவோ இருந்த குழந்தைகளாக இருந் தனர்.

பரிசும் தண்டனேயும் பற்றிய மயக்குதலும் இயல் நிகழ்ச்சி பற்றிய காரணம் பற்றி மேலே குறிப்பிட்டது விரிவான எடுத்துக் காட்டென முடிவுகட்டி விடலாகாது. தெளிவான ஒரு பாதை குறிப்பிடப்பட்டிருப்பது உறுதி. இவ்வழியைப் பின்பற்றினுல் உண்மையை நன்குணர இயலும்.

பரிசும் தண்டனையும் வெறும் இறுதியில் தோன்றும் உட்கதை யன்று—இடைவெளியில் நுழைந்த வெறும் சம்பவமன்று. அவை பள்ளிக்கூட அறநெறி அமைப்பினை விளக்குபவையாகும். தோழனுக்குத் தேர்வில் உதவிபுரிந்த குழந்தையை விலக்கி, மறுபடியும் படிக்கவைக்கப்படுகிறான். தற்பெருமை கொள்ளும் ஒருவனைத் தனித்து இருக்கச் செய்கிற ஒரு கல்வி முறையின் தீவிரமான சான்றாக இதைக் கூறலாம். அதேபோல் பரிசும் தண்டனையும், இரண்டும் தீவிர நிகழ்ச்சிகளாய் பள்ளிக்கூடத்தின் ஒழுங்மைப்பின் அடிப்படைக் கொள்கைகளைக் காட்டுகின்றன. முன் மாதிரியாகக் கொள்ளுதல் அல்லது போட்டியிடுதல் (emulation). இதனுடைய கொள்கை என்ன? தங்களைக் காட்டிலும் புத்திசாலிகள் உயர்ந்த மதிப்பெண்ணும், புகழும், பரிசும் பெறுவதைக் கண்டு இவர்களைப் போல் தாமும் ஆகலாம் என்றும், இன்னும் சீராகப் பணியாற்றலாம் என்றும், அத்தோழர்களையும் முந்திக்கொண்டு செல்லலாம் என்றும் தூண்டப்படுவார்கள் என்றும் நம்பப்படுகிறது. இவ்வகையில் ஒரு வகையான இயந்திரம் ஒன்று அமைக்கப்படுவது போலிருக்கிறது. இந்தப் பொறி முழுப் பள்ளிக்கூடத்தைத் தொழில் சம்பந்தம் மட்டிலும் அல்லாமல் முயற்சி செய்கின்ற அளவுக்கு மேலே தூக்கி விடுகிறது. இதில் காணும் அறநெறி நோக்கம் குழந்தைகள் 'துன்புற'ப் பழக்கப்பட வேண்டுமென்பதே.

அதுபோன்ற ஒரு போட்டியை எடுத்துக் கொள்வோம். குழந்தைகளைக் கவனிக்கும் மருத்துவர் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தவுடன், குழந்தைகளின், புலன்களின் மேல் அவருடைய கவனம் சென்றது. அங்குக் குழுமியிருந்த குழந்தைகளில் பலர் ஓரளவுக்குச் செவிடர்களாய் இருந்தார்கள். மற்றவர்களைப்போல் கேட்கத் திறன் இல்லாததால் அவர்கள் விவேகத்தில் குறைந்தவர் போல் தோன்றினர். அதற்குத் தண்டனையாக அவர்கள் வகுப்பில் பின் ஆசனங்களில் உட்கார வைக்கப்பட்டனர். இவர்களுக்குச் சொல்வதை எழுதச் சொன்னால் ஆச்சரியமான பிழைகளைச் செய்தனர். மன்னிக்க முடியாத பிழைகள் அவை. ஒப்ப எழுதக் கூறுதலால் (dictation) இவர்கள் எழுதக் கற்றுக் கொள்ளவில்லை. அதனால் அவர்கள் பலமுறை ஒன்றையே திரும்பத் திரும்பச் செய்யச் சொல்லப்பட்டனர். போட்டியும், தண்டனையும் ஒரே விதத்தில் இரண்டும் ஒரு பயனையும் அளிக்க முடியவில்லை. ஆசிரியரிடம் இருந்து கூடுமான தொலைவில் இருக்க வைக்கப்பட்டிருந்தும் இந்தச் செவிட்டுக் குழந்தைகள் ஒரு முன்னேற்றத்தையும் காட்டவில்லை. உணர்ச்சி மிகுந்த குழந்தைகளும் இருந்தனர்; இவர்களைச் சும்மா இருக்கச் சொல்லி அடிக்கடி தண்டித்தார்கள். நல்ல பண்புடைய தோழர்களைப்போல் ஆகவேண்டும் என்று

எவ்வளவோ ஊக்குவிக்கும் உரைகள் கூறப்பட்டன. பயன் ஏது மில்லை. பல குழந்தைகள் 'அடிஞய்டு' மூக்கடிச்சதை வளர்ச்சி யால் (adenoids) பீடிக்கப்பட்டிருந்தனர். அதனுல் அவர்கள் தம் வாயால் மூச்சு விட்டனர். அவர்களுடைய கவனம் ஒன்றின் மேலும் ஒரு நிலையாக நிற்பதில்லை. அவர்கள் என்றும் கவனிக் காத காரணத்தால் மிகக் குறைவான மதிப்பெண்ணும் தண்டனை யும், பெற்று வந்தார்கள். இந்தத் திறந்த வாய்க் குறையைத் தடுக்க எச்சரிக்கையுடைய ஆசிரியை பயனற்ற முயற்சிகளைச் செய்து வந்தார். வாயைத் திறந்த குழந்தைகளின் விகாரத் தோற்றத்தையும், வாயில் விரலை வைத்துக் கொண்டிருக்கும் குழந்தைகளைப் பற்றிக் கூறுவது மிகவும் பயங்கரம் என்று பல அற நெறிக் கதைகளைச் சொல்லிக் கொண்டே போவார்.

பல சோம்பேறிக் குழந்தைகள் உடற் பயிற்சி வகுப்புக்கு மற்றவர்களைப்போல் போகமாட்டார்கள். ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிவிடுவார்கள். மற்றவர்களுக்கு இவர் நல்ல எடுத்துக்காட்டுகள் அல்லர். அவர்களைப்பற்றி ஆராய்ந்த பொழுது, சோம்பேறிகள் எனக் கருதப்பட்டவர்கள். இருதயக் கோளாறு, இரத்த சோகை, கல்லீரல் கோளாறு ஆகியவைகளால் துன்புற்று வந்தார்கள் என்று விளங்கிற்று. மிகவும் சிறப்பான போட்டிகளுள் ஒன்று உடல் பயிற்சிப்போட்டி. உழைப் பாற்றல் போட்டிகள் (competitions in endurance), வேகத்தில் போட்டிகள் (competitions in speed) குழந்தைகளால் எவ்வளவு நேரம் உடற்பயிற்சி செய்ய முடியுமோ அவ்வளவு நேரம் செய்ய அவர்கள் ஊக்கம் அளிக்கப்படுகின்றனர். அல்லது எவ்வளவு சீக்கிரத்தில் குறிப்பிட்ட தொலைவைக் கடக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் கடக்க ஊக்கம் அளிக்கப்படுகின்றனர். இங்கு முயற்சிதான் பயிற்சியின் அடித்தளம். இப்பொழுது மனித இன ஆய்வு நூல் (anthropological study) இரண்டு வித உடலமைப்பு இருப்பதாகக் கூறுகிறது. ஒன்றில் நெஞ்சு சிறப்புற்றிருக்கிறது. மற்ருென்றில் கால்கள் சிறப்புற்றிருக்கின்றன. நெஞ்சும் சிறப் புற்று நுரையீரலும், இருதயமும் வலிவுற்றிருக்கும் பொழுது, உழைப்பாற்றல் சக்தி வேகத்தைவிடச் சிறந்ததாக இருந்தது. மற்ற வகையில் கால்களின் நீளத்தாலும், நெஞ்சத்தின் குறுக லாலும் வேகம் சிறப்பாகிறது. என்ன போட்டியாலும் ஒரு வகையை மற்ருேர் வகையாக மாற்ற இயலாது. உடல் அமைப்பு வயதுக்குத் தக்கவாறு மாறுதல் பெறுகின்றது. உடல் பயிற்சிகளை ஒழுங்குபடுத்த உடல் அமைப்பு நூல் (morphological study) அடிப் படையாக இருக்க வேண்டும்; போட்டியன்று. உடல் கட்டமை வாகவோ, நோய்களாகவோ உடம்பில் தொடக்கத்தைப் பெற்றி ருக்கும் பொழுது அவைகளை உடலிலே கவனித்துக் கொள்ள

வேண்டும். போட்டியின் மென்மைய உணர்ச்சியால் (sentiment) எந்த அற்புதத்தையும் விளைவித்துவிட முடியாது.

போட்டி குறித்து ஒரு சார்பெண்ணம் மிகவும் ஆழமாகப் பொது மக்களிடை பதிந்திருக்கிறது. மனக்குறைவு உள்ள குழந்தைகளுக்கெனத் தனித் தொடக்கப் பள்ளிக்கூட வகுப்புகள் தேவை என்று நான் 1898ஆம் ஆண்டில் இத்தாலியில் பிரசாரம் செய்து கொண்டிருக்கும் பொழுது, போட்டிக் கோட்பாடு என் மேல் திணிக்கப்பட்டது; நன்ருக உழைக்கின்ற புத்திசாலிக் குழந்தைகளின் எடுத்துக்காட்டால் தனியாகப் பிரித்து வைக்கப் பட்ட மக்குக் குழந்தைகள் ஒரு பொழுதும் பயன் பெற மாட்டார்கள் என்றும், அவ்வாறு தனியாக ஒதுக்கி வைக்கப்பட்ட மூளை சக்தியில் மெலிவு அடைந்த குழந்தைகள் போட்டியின் ஊக்கம் இல்லாத காரணத்தால் அவர்கள் எதையும் சிறிதளவு கூடச் சாதிக்க இயலாதவர்கள் ஆகிவிடுகின்ருர்கள். என்றும் கூறப்பட்டுவந்தது.

ஆனால், போட்டி என்பது ஒரே சமமானவர்களிடம்தான் இருக்க முடியும். போட்டிகள் நடக்கும்பொழுது வீர முதல்வர் களையும் (champions) தேர்ந்தெடுக்கிருர்கள். குறைபாடுடைய குழந்தைக்குப் புத்திசாலியான தோழனின் எடுத்துக்காட்டு தன்னை மானமிழக்கச் செய்யும் செயலாகத் தோன்றும். அவனுடைய தோழர்களின் வெற்றிச் சாதனைகள் இவனுடைய தாழ்வையும், சக்தியின்மையையும் இடைவிடாமல் சுட்டிக் காட்டப்படுகின்றன. ஆர்வச் சுறுசுறுப்புடைய ஆசிரியர், வலிவுள்ள குழந்தையின் சிறப்பு வாய்ந்த எடுத்துக்காட்டைச் சுட்டிக்காட்டிப் பின்தங்கிய குழந்தையை நிந்தித்தும், தண்டித்தும் வரவர அவன் இன்னும் அதிகமாக மனம் உடைந்து போகச் செய்து விடுகிருர். இவனுக்கு ஒளிக்கதிர் கொடுப்பது எது? எதிர்நோக்குக்குக் கணநேரத் தோற் றமாவது அளிப்பதெது? தன்னுல் இயன்ற சக்திக்குள் சாதிக்கக் கூடிய சாத்தியக்கூறு இருக்க வேண்டும். இவ்வாறுள்ள சக்திகள் அவைகளுக்கென்றே உரித்தாய மதிப்பைப் பெற்றிருக்கலாம். வேறொருவருடன் இவனும் போட்டியிடக்கூடிய துறையில் இறங்க ஊக்குவிக்கப் பட்டானுனல், அந்த ஒளியையும் எதிர்நோக்கையும் பெறமுடியும். அப்பொழுது அவனும் மற்றவர்களைப் போலிருப் பான். அவனும் பூரிப்படைவான்; மன நிறைவடைவான். இவனுடைய உள்ளத்தில் இதுவரை மலராது கிடந்த அரும்பு இனிமேல் விரியலாம். சாதாரணக் குழந்தை தேவைப்படுவதை விட இந்தக் குறைபாடுடைய குழந்தைக்கு ஊக்கம் அளித்தலும், ஆறுதலளித்தலும், வினையாற்றலைத் தூண்டுவிக்கும் தூண்டு உணர்ச்சியும் மிகமிகத் தேவைப்படுகின்றன.

தன்னிலும் மட்டமான குழந்தைகளுக்கு எடுத்துக்காட்டாக இருந்த சாதாரணப் புத்திசாலிக் குழந்தைக்கு என்ன நேரிடுகிறது? அவன் யாருடன் போட்டிபோடுகிறான்? அவன் முன்னேறும்படி அழைத்துச் செல்பவன் யார்? மேல் ஏறுவதற்கு எல்லோரும் மேலே இழுத்துச் செல்லப்பட வேண்டுமானால் மற்றவர்களுக் கெல்லாம் மேலாக நிற்பவனை இன்னும் மேலே இழுக்க எவர் இருக்கிறார்கள்? இப்பொழுது இந்தக் கேள்விக்கு இங்கு இடமில்லை. இவன் விஷயத்தில் தூண்டுதலானது பின் நோக்கினதாகவே இருக்கும். தன்னைவிடக் குறைந்து தாழ்ந்தவர்களுடன் போட்டி யிடுவதில் மும்மடங்கு மகிழ்ச்சி பெறும் ஒருவனைப்போல் ஆகிறான். இதை நினைக்கும்பொழுது வாய்ஸின் (Voisin) என்பவர் கூறின வருணனை என் மனத்துக்கு வருகிறது. அவருடைய மருத்துவ நிலையத்தில் பேதைக் குழந்தை—பிறவி முட்டாள் (idiots) ஒருவன் தானே அமைத்துக் கொண்ட ஒரு போட்டியைப் பற்றிக் கூறு கிறார். இந்தப் பையன் மிகவும் நெட்டையானவன். பிறவி முட்டாள்களில் குள்ளமானவர்களையும், தன்னிலும் வயதில் குறைந்தவர்களையும் தேர்ந்தெடுத்துக் கொண்டான். போட்டி யிட்டான். அவனே முதலில் வந்தான். ஒவ்வொரு முறையும் மகிழ்ச்சி பெற்றான். இத்தகைய எடுத்துக்காட்டு வாய்ஸினுடைய மருத்துவ நிலையத்துக்கு மட்டும் தனிச்சிறப்பு அல்ல. பேராசைப் படும் சோம்பேறிகள் அதிகம் களைத்துப் போகாமலும், தங்களை இன்னும் நிறைவு படுத்திக்கொள்ளாமலும் ஒப்பிட்டுப் பார்க்கும் கோட்பாட்டின்மேல் மிகுந்த நம்பிக்கை வைத்து இருப்பவர்கள் அனைவருடைய மனப்பாங்கிலும் .இதைக் காணலாம். பேசத் திறமையற்றவனைத் தனக்கு முன் பேச வைக்க வேண்டுவதையே விரும்புகிறான் நல்ல சொற்பொழிவாளன். ஆடை ஆபரணங்களை அதிகமாக அணிந்து கொள்ள வாய்ப்பில்லாத அழகான பெண்கள் தம்மிலும் அழகில் குறைந்தவர்களுடன் நடமாட விரும்புவதால், தம் அழகைக் காட்டிக் கொள்கின்றனர்.

இந்த இயல்நிகழ்ச்சியை நையாண்டி செய்யும் போக்கில் ஒரு வேடிக்கையான கட்டுக் கதையை நான் படித்திருக்கிறேன். ஓர் ஊரில் ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மூக்கு மிகவும் நீண்டிருந்தது. பொருத்தமற்ற நகையாடத்தக்க மூக்கு அது. அண்டை நாட்டரசன் இந்த நாட்டுக்கு விருந்தினராக வர வேண்டுமென விரும்பினான். இவனுடைய அழகற்ற மூக்கினை அண்டை நாட்டவருக்குக் காட்டிக் கொள்ள வெட்கப்பட்டான்; அப்போது முதல் அமைச்சர் ஓர் உபாயத்தை எண்ணித் தன் னுடைய நடைமுறைத் திட்டத்தை அரசனிடம் எடுத்துரைத்தார். 'அரசே, இந்தச் சந்தர்ப்பத்தில் இங்குச் சாதாரணமாய்க் குழுமி யிருக்கும் சபையோர் கூடாமல் விலகி இருக்கட்டும். நம் நாட்டில்

உள்ள நீண்ட மூக்கர்களை நான் தேடிப் பார்த்துக் கொண்டு வரு கிறேன். தற்காலிகமான அவை அங்கத்தினராக அந் நீண்ட மூக்கர்கள் இருக்கட்டும்' என்றார். அவ்வாறே செய்யப்பட்டது. அரசனுடைய மூக்கும் அங்கு கூடியிருந்தவர்களின் மூக்குகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது சாதாரணமானதுபோல் தோற்ற மளித்தது. இதைக் கண்ட மாட்சிமை தங்கிய அண்டை நாட்ட ரசன் இந்நாட்டு அரச அவை மூக்கில் சிறப்புற்றதெனக் கண்டான். ஆனால், அரசனுக்கு அளவு கடந்த நீள மூக்கு இருந்தது என வந்த அரசன் உணரவில்லை.

பேதைகளுக்குள் நடந்த போட்டியும், அரசவை மூக்கர்கள் பற்றிய கதைகளெல்லாம் நம்மைப் புன்னகை புரிய வைக்கின்றன. ஆனால், சாதாரணமாக நம் குழந்தைகளிடம் ஏற்படும் போட் டிகள் கேளிக்கைக்கானவையல்ல. செவிடாகியும், நோயுற்றும் குறைவடைந்தும் இருக்கின்ற குழந்தைகளுடன் நல்ல உடல் நலம் உடையவர்களைப் பக்கம் பக்கம் வைத்துப் பார்க்கும் பொழுது அவர்கள் தங்களுடைய உயர்வையே உணர்கிறார்கள். ஏழைக் குழந்தைகள், மகிழ்ச்சி அற்றவர்கள், திக்கற்றவர்களுடன் ஒப்பிடப்படும் கற்றறிந்த தாய்மார்களால் உதவிபெற்ற பாக்கியக் குழந்தைகள் தாங்கள் அவர்களுக்கு எடுத்துக்காட்டென உணர் கிறார்கள். ஓயாது உழைக்கின்றவர்கள், பொழுது புலர்வதற்கு முன்பே எழுந்து செய்தித்தாளை விற்றோ, பால் புட்டியை வீடு வீடாகச் சேர்ப்பித்தோ, பள்ளிக்கு வருவதற்கே களைத்துப் போகின்ற குழந்தைகளுடன், நன்றாக உண்டு படுக்கையில் உறங்கி இளைப்பாறி வரும் குழந்தைகளை ஒப்பிட்டால், அவர்கள் இவர் களிலும் உயர்ந்தவர்கள் என்று கற்பனை பண்ணிக் கொள்வதுடன் இன்னும் நன்றாகச் செய்ய அவர்களுக்கு ஒரு தூண்டுதலாக இருப்ப தாகவும் எண்ணி விடுகிறார்கள். இந்த சாதாரணக் குழந்தைகள் அனைவரும் தவறான அறநெறிப் பாதையில் இருக்கின்றனர். ஓர் அநீதியை அவர்கள் நெஞ்சறியாமல் ஏற்றுக்கொள்ள வழிதவறி இழுத்துச் செல்லப்படுகிறார்கள். அவர்கள் ஏமாற்றப்படுகிறார்கள். அவர்கள் மற்றவர்களைவிடச் சிறப்புடையவர்கள் அல்லர். அவர் களுடைய தோழர்களைவிட அதிகப் பாக்கியசாலிகள். உண்மையை உணரவும், நோயுற்றவரிடம் பரிவு காட்டவும், நல்ல வாய்ப்பில் லார்க்கு ஆறுதல் கூறவும், வீரர்களைப் புகழவும் அவர்களுடைய அன்பான உள்ளம் அழைத்துச் செல்லப்பட வேண்டும். இவர் களுடைய நெஞ்சில் இவைகளுக்கு மாறாக இடம்பம், பேராசை, பிழை ஆகிய தீய பண்புகள் புகுந்தால் குற்றம் இவர்களுடைய தன்று.

குழந்தைகளின் உள்ளத்தில் நல்ல கற்பனைகளை உண்டுபண்ண ஆசிரியர் முயற்சி செய்து வருகிறார் என்பது உண்மையே. மனம்

நொந்த வாய்ப்பிழந்த குழந்தைகளைப்பற்றியும் வீரக் குழந்தைகளைப் பற்றியும் நீதிக்கதைகளால் ஆசிரியர் இவர்களுடைய உள்ளத்தைக் கற்பிக்க வைக்கிறார். எல்லாக் குழந்தைகளும் ஒரே மாதிரி கற்றுக் கொள்கிறார்கள். மனித இனத்தின் நல்லுணர்ச்சிகள் பற்றிய நிகழ்ச்சிகளைச் சுட்டிக் காட்டுகிறார். ஆனால், நோயுற்றவர்களும், வாய்ப்பற்றவர்களும், வீரர்களும் தம்மிடையே இருக்கிறார்கள் என்ற உண்மையை எவரும் இன்னும் சிந்திப்பதில்லை. எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்கூடத்திற்குச் செல்பவர்கள் தாமே. ஆனால், ஒருவர்க்கொருவர் தங்களைப் பற்றிப் பிறர்க்கு அறிவித்துக் கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றனர். இங்குக் கூடியிருக்கின்றவர்கள் அனைவரும் நிபந்தனையையும், தண்டனையையும், மானம் இழப்பதையும் பெறுகின்றவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களை விட இன்னும் நல்ல வாய்ப்புப் பெற்றவர்களோ என்றால், அவர்கள் இவர்களுக்கு எடுத்துக்காட்டென அகந்தையுடன் தலைவன் போன்ற நடத்தையைக் காட்டுகிறார்கள். பரிசையும் புகழையும் பெற்றுக் கொள்கிறார்கள். ஆனால், அவ்வாறு பெறுவதில் தங்களுடைய உள்ளத்தையே, நெஞ்சையே—ஆன்மாவையே இழந்துவிடுகிறார்கள்.

இந்த அறநெறிக் குழப்பத்தில் நரகத்தில் உள்ளவன்போல் மனிதன் இறைக் காட்சியை இழந்து விடுகிறான் (loses sight of God). இவனுடைய மதிப்புக்குரிய பண்புகளை வளரவிட்டுத் தன் இருதயத்தை வளம்பெறத்தக்க எந்த வலிமையுடைய சக்தி தூண்டப்படுகிறது? எல்லோரும் இழக்கப்படுகின்றனர். வல்லவரும், அல்லவரும் தங்களைக் காத்துக் கொள்ளக் கூடிய தன் இயற்கை உணர்வு உள்ளவர்கள் ஒரு சிலரே. அவர்கள் பரிசுகள், தண்டனை, மிரட்டல்கள், தொடர்ந்து போட்டியிடச் செய்யும் உந்தல்கள், மோசமான—பொய்யான—ஏய்க்கும் போட்டிகள் ஆகியவைகளிலிருந்து தம்மைக் காத்துக்கொண்டு அவர்களுடைய சக்திகள் இன்னும் தளராமலும், நெஞ்சம் மாசடையாமலும் மன்பதை உண்மைகளை உணரும் திறமையுடன் வெளிவருகின்றனர். வெறும் புகழ்களாலும், அடக்குமுறை அட்டூழியங்களாலும், சிறிதும் பாதிக்கப் படாதவர்களாகி ஆக்குவிக்கும் வாழ்க்கைப் பாதையில் இறங்குகிறார்கள். இப் பாதை உள்ளார்ந்த சக்தியால் அழகையும்—முருகையும்—நன்மையையும் பெறும். உண்மையை உணரும் சக்தி பெற்றது. இவ்வாறு தோன்றுகின்றவர்களையே நாம் மேதைகளென்றும், மனித இனத்தின் கொடையாளிகளென்றும் கொள்கிறோம்; புரவலர் என்கிறோம்.

* * *

நன்மை தீமைகளைத் தெளிவாக நாம் பாகுபடுத்திப் பார்ப்போமானால் தனி ஒருவரிடம் தீமை என்று சொல்லளவில் கண்ட

னம் செய்யப்படுவதில் பெரும்பகுதி மெய்யாக வெளிக் காரணங் களால் ஏற்பட்டவை என்பது புலனாகும். மக்களின் ஒழுக்கச் சீர்கேடு என்பது ஏழ்மையும் குடிப்பழக்கமும் ஆகிய இரண்டின் இணைப்பாகும். தாழ்நிலைக்கு ஆழ்த்தும் படு குற்றம், குழந் தைகள், மாணவர்களின் குற்றங்கள், பிழைகள் எல்லாம் சார்பெண் ணத்தில் (prejudice) நடைபெறுகின்றன. இந்தக் காரணங்கள் வரம்பற்றதல்ல; மாற்ற முடியாததுமல்ல. இவை தோன்றி மறையும் நிலைமைகளுடன் தொடர்பு கொண்டவை. இவைகளை மாற்றக்கூடும். பழங்காலத் தத்துவக் கொள்கைப்படி தீமை என்பது ஓரளவுக்குப் பல சமூகப் பிரச்சினையாகவும், நடத்தைகளா கவும் மாறிவிடுகிறது. வேலை கொடுத்துக் குடிப்பழக்கத்தை வெல் வது. தீமையின் பல காரணங்களைத் தவிர்ப்பதற்கு இது பரந்த அளவுக்கு நன்னெறிக்கு வழிவகுக்கிறது. இழிந்தவர்களின் வாழ் வைப் புதுப்பித்து அவர்களைக் கற்க வைப்பதால் குற்றம் நடை பெறாமல் தடுப்பதாகும். ஆதலால் இது நன்னெறியை வளர்ப்ப தாகும்.

பள்ளிக்கூடங்களில் பல அறநெறி சார்ந்த தீமைகளுக்குக் காரணம் சார்பெண்ணின் திரண்ட இருளால் என்றால், இயற்கை யான கோட்பாடுகளினால் பள்ளிக்கூடத்தைச் சீராக்குவது அப் பள்ளிக்கூடத்தை நன்னெறிப்படுத்துவதன் முதல் படியாகும்.

இந்தப் பெரிய பிரச்சினையை, இந்தத் திசையில்தான் நாம் காணவேண்டும். பரிசு, தண்டனை பற்றியவைகளின் முறையைப் பாகுபாடு செய்து சோதிப்பதாலும், போட்டியில் தூண்டிவிடும் கோட்பாட்டாலும், தக்க தருணத்தில் நல்ல நடைமுறையில் நன்னெறிக் கோட்பாடுகளை உபதேசிப்பதாலும், புதிதாகப் பிறப் பித்த பத்துக்கட்டளைகளாலும், (decalogues) அல்ல. இதுவரை நாம் ஏதோ ஓர் எளிய போதனா முறை சார்ந்த பிரச்சினை என்று கருதி வந்தோம். அதற்கு மாறாக இது ஒரு பெரிய அசலான சமுதாயப் பிரச்சினையாக இருக்கிறது.

ஓர் அறநெறிப் பிரச்சினை தடுக்கக் கூடிய காரணங்களின் பயன் களோடு நின்றுவிடும்போது அது வெறும் மேலீடான தோற்றமே. இப்பொழுது ஒரு கற்பனை செய்து கொள்வோம். மக்கட்தொகை நிறைந்த ஏழைகள் வாழும் இடம் வறுமையால் ஒரு வாய்ச் சோற்றுக்குப் போரிடுவார்கள். அழுக்கும் கள்ளுக்கடையும், சுகாதாரக் கவனிப்பின்மையும் அங்கு வாழ்பவர்களைத் தாழ்த்தி விடுகின்றன. அங்கு ஆணும் பெண்ணும் தீய தொழில்களுக்கு வெகு எளிதில் இடம் கொடுத்து விடுகிறார்கள். அத்தகைய மக் களைக் கண்டவுடனே முதல் கருத்தென்ன? 'என்ன ஒழுக்கம்

கெட்டவர்கள்' என்பதே. இதற்கு மாறாக ஒரு தொழிற்சாலைத் தொழிலாளிகள் வாழ்விடம் ஒன்றைக் கற்பனை செய்து கொள்வோம். அங்கு அவர்களுடைய மனைகள் சுகாதார இயல்படி அமைக்கப்பெற்றவை. அங்கு அவரவர் செய்கின்ற தொழிலுக்கு ஏற்ப ஓரளவு நல்ல சம்பளம் பெறுகிறார்கள். கள்ளுக் கடைக்குப் பதிலாக எல்லோரும் விரும்பக்கூடிய உண்மையான கலை நோக்குடன் நிறுவப்பட்ட நாடக அரங்குகள் தோன்றியிருக்கின்றன. தொழிலாளிகள் நல்ல நாகரிக முறையில் தங்கள் உணவை உண்டு அமைதியாகக் களித்துக் கொண்டிருக்கிற உணவு விடுதிக்குள், நுழைந்து பார்ப்போம். பார்த்தவுடன், 'எவ்வளவு நல்லவர்கள்!' என்று சொல்லத்தூண்டும். ஆனால், அவர்கள் மெய்யாக நல்லவர்களாகி விட்டனரா? இவர்களுடைய சமுதாய வாழ்வை நலம் படுத்தியவர்களே நல்லவர்கள். ஆனால், அவர்களுடைய முயற்சியின் பயனாய் 'நல்ல வழியில்' வாழ்கின்றவர்கள் அறநெறி நோக்கின்படி இன்னும் சிறப்பு வாய்ந்தவர்களென்று கூறிவிட முடியாது.

அது உண்மையாயின் பொருளாதாரப் பிரச்சினைக்கு முடிவு கண்டுள்ள ஒரு சமூகத்தை மனக்கண்கொண்டு பார்த்தால் போதும். புது யுகத்தில் பிறந்ததின் காரணத்தாலேயே மக்கள் நன்னெறியாளர்களாகி விட்டிருப்பதைக் காணலாம். அறநெறிப்பிரச்சினை ஒரு தனிப் பிரச்சினை என்பது தெளிவாகிறது. அது வாழ்க்கையைப் பொறுத்தது. இயற்கையைப் பொறுத்தது. வெளிப்படையான மேல் நிகழ்வுகளால் தீர்வு காணமுடியாத பிரச்சினை. மனிதர் உயர்ந்ததோ, தாழ்ந்ததோ வாய்ப்பைப் பெற்றவர்களாக இருக்கலாம். அதிகமாகவோ கம்மியாகவோ உள்ள நாகரிகச் சூழ்நிலையில் பிறந்திருக்கலாம். எங்கிருந்தாலும், எப்படியிருந்தாலும் மக்களிடை அறநெறிப் பிரச்சினை இருந்து கொண்டே இருக்கும். இப் பிரச்சினை செல்வத்தையும், நாகரிகத்தையும் விட ஆழமாகச் செல்கிறது.

குழந்தைகளின் போக்கிரித் தனம் என்பது 'தெய்விக வாழ்க்கைப் போரின் வெளித்தோற்றம் என்று வெகு எளிதில் நம்பி விட முடியும். குழந்தைகள் தங்களின் உள்ளார்ந்த மனிதனை வாழ விடப்பார்க்கிறார்கள். நாம் அவர்களைத் தடுக்கிறோம். நாம் அவர்களுக்கு இருள், பிழை ஆகியவற்றின் நச்சினைத் தருகிறோம். ஏழைகள் உடல் வளர்க்கச் சாதாரண ரொட்டிக்குப் போராடுவது போல் இக் குழந்தைகள் அவர்களுடைய தெய்விக ரொட்டிக்குப் போரிடுகின்றனர். ஏழைகள் மதுபானத்தின் கவர்ச்சியால் மயங்கித் தங்களைத் தாழ்த்திக்கொள்வதுபோல் குழந்தைகளும் நம்முடைய தூண்டுதல்களுக்கு ஆளாகித் தங்களைத் தாழ்வுபடுத்திக்

கொள்கின்றனர். இந்தப் போராட்டத்திலும், இந்த இழிவு படுத்துவதிலும் குழந்தைகள் தங்களை ஏழைகளாகவும், திக்கற்றவர்களாகவும், உதவி தேவைப்படுகிறவர்களாகவும், அநாதைகளாகவும் இருப்பதாகத் தம்மைக் காட்டிக்கொள்கின்றனர். 'மனிதன் ரொட்டியாலேயே வாழ்கிறானில்லை' என்ற பேருண்மையை வேறு எவரையும் விடக் குழந்தைகளே தெளிவாக வெளிக் காட்டியிருக்கிறார்கள். இந்த 'ரொட்டி' என்ற பிரச்சினை மனிதனின் உண்மையான பிரச்சினை அன்று. உடல் சார்ந்த தேவைகளுக்கென நடந்துவந்த துன்பங்களும், போர்களும், சச்சரவுகளும், மனிதனால் பழங்காலத்தில் உரிமை எனக் கோரப்பட்ட அனைத்தும் இங்குத் தெய்விகத் தேவைக்காக எல்லாம் வியப்படையும் வண்ணம் தெளிவாகத் திரும்பவும் நடத்தப்படுகிறது. குழந்தைகள் வளர விரும்புகிறார்கள். தாங்களே எதையும் செய்யவும், தங்களுடைய விவேகத்துக்கு ஊட்டம் கொடுக்கவும், அவர்களுடைய உள்ளார்ந்த சக்தியை வளர்க்கவும், தங்களுடைய நற்பண்புகளை அமைத்துக்கொள்ளவும் விரும்புகின்றனர். இந்தக் குறிக்கோள்களை நிறைவேற்ற வேண்டுமானால் அவர்கள் தங்களுடைய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்று, 'வாழ்வுக்கு ஆதாரமானதே' வெற்றி பெறவேண்டும். அவர்களுடைய உடலுக்கு மட்டும் ஊட்டம் கொடுத்தால் போதாது. அவர்கள் விவேக ஊட்டத்துக்கும். காத்திருக்கிறார்கள். தட்பத்திலிருந்து அவர்களுடைய உறுப்புகளைக் காக்கின்ற ஆடைகள் குழந்தைகளுக்குப் போதாது. வலிவாகிய ஆடைகளையும், பண்பாகிய அணிகளையும் உரிமையுடன் கேட்கின்றனர். தங்களுடைய உளச் சக்தியைக் காக்கவும் அழகு படுத்தவுமே அவ்வாறு கேட்கின்றனர். மனித வாழ்வுக்குப் பொருளாதாரப் பிரச்சினையே உண்மையான பிரச்சினை என்று நம்பும் வரை முதிர்ந்தோர்களாகிய நாம் இந்தத் தேவைகளை ஏன் நெரித்துவிட்டிருக்கிறோம். மேலான எண்ணங்கள் மனநிறைவு பெறாவிடில் போராட்டம், சினம், மனக் கவலை, இழிவு நிலை ஆகியவை அத்தகைய தீர்ப்புக்கண்ட பிறகும், திரும்பத் தோன்றக்கூடும் என்று ஏன் நாம் கற்பனை செய்து கொள்ளவே இல்லை? அம்மாதிரிப் போராட்டம், சினம், மனக் கவலை, இழிவுநிலை போன்றவைகளை இக் காலக் குழந்தைகளிடம் தொடர்ந்து எதிர்ப்படுகிறோம். இக் குழந்தைகள் சிறந்த உடல் நலம் சார்ந்த மதிப்புத் தகவுக்கு இணங்க நன்றாக உண்டும், உடுத்தியும், வெப்பத்தால் காக்கப்பட்டும் இருப்பவர்களே.

மனிதனுடைய விவேகத் தேவைக்குப் பொருத்தமான முறையில், இணங்கிக் கொடுப்பது அறநெறிக்குக் கொடுக்கப்பட்ட முக்கியமான கொடையாகும். நமது குழந்தைகள் விவேகம் நிறைந்த தொழில்களில் தங்களை ஓயாது சுதந்திரத்துடன்

நடத்திக்கொண்டு வந்திருக்கின்றனர். தங்களுடைய உள்ளார்ந்த தேவைகளுக்குச் சுதந்திரத்துடன் ஒத்துணர்வு காட்டியிருக்கின்றனர். தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தூண்டுதலுடன் நீண்ட நேரம் விளையாற்றிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் போதிய அளவு முதிர்ச்சி அடைந்த பிறகு அருவச் செயல்களைச் செய்திருக்கின்றனர். தியானத்தில் அவர்களுடைய மனத்தை ஒரு முனைப்படுத்தியிருக்கின்றனர். அவர்களுக்குள்ளேயே ஒழுங்கும், அமைதியும் நிலவப்பட்டிருப்பதைக் காட்டியிருக்கிறார்கள். இதன் பிறகு இயக்கத்தில் ஒரு கம்பீரம், அழகு வாய்ந்தவைகளை மகிழ்ச்சியுடன் அனுபவிக்கும் திறமை, இசைக்குத் தனி உணர்ச்சி, இறுதியாக மற்றவர்களுடன் இசைந்து அளவளாவத் தக்கவர்களாகவும் ஆகியவை அனைத்தும் செய்திருக்கிறார்கள். அப்பொழுது அவர்களுடைய உள்ளார்ந்த ஊற்று மேலே பாய்ந்திருக்கிறது.

இத்துணையும் 'விடுதலை'யாகும் தொழிலாகும். எந்தத் தனி முறையாலும் நாங்கள் எங்கள் குழந்தைகளை நன்னெறிப்படுத்தவில்லை. அவர்களுடைய ஏறுமாறான நடத்தையைக் கட்டுப்படுத்தச் சொல்லிக் கற்பிக்கவில்லை. அமைதியாக அவரவர் இடத்தில் உட்காரச் சொல்லவில்லை. மற்றவர்களின் நடத்தையை எடுத்துக்காட்டாக அறிவித்து அமைதியும் ஒழுங்கும் எவ்வளவு தேவைப்படுகிறதென்றோ, அல்லது மனிதனுக்கு ஒழுங்கு எவ்வளவு இன்றியமையாததென்றோ நாங்கள் அவர்களுக்குப் பேருரை நடத்திக் ஊக்குவிக்கவில்லை. அவர்களிடம் ஒருவருக்கொருவரிடம் காணப்பட வேண்டிய மரியாதையைப் பற்றியோ அல்லது மற்றவர்களுடைய உரிமைகளில் குறுக்கிடாது காத்துக்கொள்ள வேண்டிய பொறுமை அவர்களிடம் வளர்க்கவோ நாங்கள் எந்தச் சொற்பொழிவும் ஆற்றவில்லை. இவைகள் எதுவும் இதற்கு முன் இருந்ததில்லை. நாங்கள் அவர்களுக்குச் சுதந்திரத்தைத் தந்து, அவர்களை வாழவிட்டோம். குழந்தை எப்படி வாழ்கிறான். தன்னுடைய உடல் நலத் தேவைகள் அல்லாது, மற்றத் தேவைகள் என்ன என்பதை எங்களுக்கு எடுத்துக்காட்டியவன் அவனே.

அதற்குப் பிறகு பழக்கப்பட்ட அமைதி நிலையில் இதுவரை சிறு குழந்தைகளிடம் காணப்பட்டிராத விளையாற்றல், ஓயாது உழைக்கும் நற்பண்புடனும், விடாமுயற்சியும் பொறுமையும் கூடிய மகிழ்ச்சிக் கூக்குரலுடனும் வெளித் தோன்றின. இந்தக் குழந்தைகள் அமைதி நன்மார்க்கத்தில் அடியெடுத்து வைத்துவிட்டார்கள். இதுவரை இயற்கைக்கு முட்டுக்கட்டாக இருந்த தொல்லை விலக்கப்பட்டுவிட்டது.

நல்ல உணவால் மன நிறைவு பெற்று நச்சுப் பொருள்களிலிருந்து நீக்கப்பட்டுள்ள மனிதன் எவ்வாறு முன்னிலும் அமைதி

பெற்று மட்டமான இழிதொழில்களில் ஈடுபடுத்திக்கொள்வதை யும் மறுத்து, மேலான இன்பத்தை விரும்புகிருனோ, அதேபோல் குழந்தையும் தன்னுடைய உள்ளார்ந்த தேவைகளில் மனம் நிறைவு பெற்ற பிறகு வீறமைதி அல்லது சாந்தி நிலையை அடைந்து இன்னும் உயரும் பாங்கினைக் காட்டியிருக்கின்ருன்.

இத்துணையும் அறநெறிப் பிரச்சினையின் ஆணிவேரை இன்னும் தொடவில்லை. அதைச் சூழ்ந்திருந்த மாசு அனைத்தையும் களையச் செய்திருக்கிறது. மனிதனுக்குத் தேவைப்படுவன எவ்வளவுக் கெவ்வளவு மன நிறைவு பெறுகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு அவன் இன்புறுகிருன். உயர்ந்த நன்னெறியாளனிடம் உண்மை யாகப் பெற்றிருக்க வேண்டும் என்று நாம் நினைக்கின்ற தகுதியெல் லாம் அவன் இன்னும் பெறவில்லை. அதற்குப் பதிலாக நாம் மனி தனுடைய மதிப்புகளை இழக்கச் செய்துவிட்டோம். நன்மையும், தீமையும், சமூக முன்னேற்றமும் தலைகாட்டினவுடன் மறைந்து விட்டன. நன்மை என்று கருதப்படுகிற பெரும்பாலானவை நல்ல வாய்ப்பின் வடிவங்கள் என்றும், தீமைகள் என்று கருதப்படு பவைகளில் பெரும்பாலானவை பற்ருக் குறையின் வடிவங்கள் என்றும் நாம் உணர்ந்த பொழுது மனிதனிடம் காணப்படும் மேலாடைகள் களையப்பட்டு உண்மை நிலையில் நிறுத்தி விட்டோம். இந்த நிலையில் அவன் அறநெறித் துறையில் மறுபிறப்பெடுப்பான். வண்ணத்துப் பூச்சி தன் கூட்டுக்குள் இதுவரை உறங்கிக் கிடந்து திடீரென ஒருநாள் தாஞக இதுவரை தன் சுதந்திரத்திற்குத் தடை நின்ற கூட்டைப் பிய்த்துக் கொண்டு வண்ணம் நிறைந்த பூச்சி யாகி வெளியே பறந்து வருகிறதோ அதேபோல் குழந்தையும் நல் வாழ்வுடன் வாழும் மனிதனுடைய பரிசுத்தமான இன்றியமை கூட்டுக்குள்ளிருந்து தாஞக வெளியாகிருன்.

* * *

நம்முடைய கல்வி முறையின் முழு அமைப்பும் பொறித் தூண்டுதல் ஒன்றின் மேலேயே முழுக் கவனத்தையும் ஒரு முனைப் பாக்கிப் புலன்களைக் கற்பிக்கின்ற வகையில் இத்துடன் நிறுத்திக் கொண்டால், அப்பொழுது அம் முறை முழு மனிதனையும் தன் கருத்தில் கொண்டதாக இராது என்பது வெள்ளிடை மலை. மனிதன் உடற்பசி தீர்க்கும் உண்டிக்காகவே வாழ்கிருனில்லை என்பது உண்மையாயின் விவேகப் பசி தீர்க்கும் உண்டியாலேயே, அவன் வாழ்வதில்லை என்பதும் உறுதி.

சூழ்நிலையில் குழந்தையைத் தூண்டி விடுபவைகள் அங்குக் காணப்படும் புறப்பொருள்கள் மட்டுமன்று. அங்குள்ளவரும் அதில் அடங்குவார். அவரிடம் நாம் கொள்ளும் தொடர்பு

வெறும் புலன் சார்ந்தது மட்டும் அன்று. புலன் உணர்ச்சித் தொடர்பு மட்டும் அல்லாத மற்றவைகளேயும் இதில் அடக்கும் கிரேக்கர்கள் அழகைக் கண்டதும் தம் உணர்ச்சிகளேக் காட்டி இசைந்தார்கள். அதேபோல் அவர்களிடம் காணப்படும் அழகினேக் கண்டு நாம் மன நிறைவு பெற்று விடுவதில்லே. அவ்வாறே அவர்களுடைய பேச்சையும் இசையையும் கேட்டால் மட்டும் மனம் நிறைந்து நின்று விடுவதில்லே. புலன் சக்திகளால் முதலில் தூண்டப்பட்ட போதிலும் மனிதனுக்கு மனிதன் பரஸ்பரம் ஏற்படுவது பரிவினுலேயாகும்.

'அறநெறி உணர்ச்சி' என்று அறிவியல் எதைப்பற்றிக் கூறுகிறது? பெரும்பாலும் அது குறிப்பிடுவதெல்லாம் இவைகளாகும். நம்மவருடன் கொள்ளும் பரிவு அவர்கள் படும் துயரை முற்றிலும் உணர்தல், நியாயம் என்பது பற்றிய மென்மையான உணர்ச்சி. இந்த மென்மையான உணர்ச்சிகள் இல்லாவிடில் நேர்மையான வாழ்வு கோணலாகி விடுகிறது. நீதி வாக்கியங்களேயும், அறவுரை அனுட்டானங்களே மனப்பாடம் செய்து விட்டதனுலேயேயும் ஒருவன் நன்னெறியாளனுகி விட முடியாது. ஞாபகம் நம்மைப் பல ஆயிரம் முறை கைவிடலாம். மிகவும் எளிய உணர்ச்சிகளும் நம்மை வென்று விடலாம். கூர்மதியுடனும் இடைுருத சூழ்ச்சிகளுடன் சட்ட விதிகளே எச்சரிக்கையுடன் நன்கு உணர்ந்திருக்கும் குற்றவாளிகளும் சட்டத்தை அடிக்கடி மீறிவிடுகிருர்கள். ஆனுல், சட்டம் பற்றி ஒன்றுமே தெரியாத அறிவிலிகள் தங்களுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் ஓர் உணர்ச்சியின் வழிகாட்டுதலால் அவ்வாறு சட்டத்தை மீறுவதில்லே.

அறிவியல் 'அறநெறி உணர்ச்சி' என்பதில் சிக்கலானதைச் சேர்க்கிறது. இந்தச் சிக்கலில் பொது மக்கள் கருத்துக்கும், சட்டத்துக்கும் மதத்துக்கும் மதிப்புக் காட்டும் உணர்ச்சியுடன் இன்னும் பலவற்றையும் உள்ளடக்குகிறது. அறநெறி உணர்ச்சியில் அடங்கியது இது என்று அறிவியல் தெளிவாக வரையறுக்கவில்லே. அதைப்பற்றி ஆராயாது உள்ளுணர்வால் அறியப்படும் ஒரு திறமையால் (intuitively) நாம் பேசிக் கொள்கிருேம். இந்த இடுபெயரைப்பற்றி ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒரு கருத்து நிலவி வருகிறது. இந்த உள்ளார்ந்த சக்தியால் 'அறநெறியுணர்வு' என்ன என்று புரிந்து கொண்டு தீர்மானம் செய்து கொள்ள வேண்டும். ஆனுல் மதம் என்பது மிகவும் எளிமையானது, துல்லியமானது. வாழ்வின் அடிமூலத்தில் இருக்கின்ற இந்த உள்ளார்ந்த உணர்வை அன்பு என்கிறது. முழு அண்டமும் நுழைவதைவிட அதிகமாக இதற்குள் சமூக விதிகள் நுழைவதில்லே. ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் இடையே உள்ள பிணேப்பு

அன்பே. இது இருக்கும் பொழுது மற்றவையெல்லாம் வெறும் இடம்பம் ஆகும். சூரியனிடம் இருந்து ஒளிக்கற்றை நாற்புறமும் பரவுவது போல அன்பிலிருந்து இயற்கையாக நன்மை பிறக்கிறது. சிருட்டியே இந்த அன்பெனும் ஊற்றின் கையில் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. அன்புதான் அதைப் பாதுகாத்து வருகிறது. இயற்கையின் சிக்கனமான சக்திகளுக்கு உயிரினங்களின் நன்கொடையாக இதை அளிக்கிறது.

இயற்கையின் இரகசியத்தை ஆராயப் புகுந்துள்ள உயிர் நூல் முயற்சிகளும் வாழ்க்கையின் முக்கிய அம்சம் அன்பு என்பதை ஒப்புக் கொண்டிருக்கிறது. இந்த முக்கிய மிகத் தெளிவான உண்மையைக் கடைசியில் பல பரிசோதனைகளைச் செய்த பிறகு கண்டு கொண்டுள்ளனர். அந்த உண்மை என்ன? விலங்கினத்தை அழியாமல் காத்து வருவது அன்பே. வாழ்க்கைப் போராட்டம் அன்று. உண்மையில் வாழ்க்கைப் போராட்டம் அழிக்கப் பார்க்கிறது. பிழைத்திருப்பதென்பது மிகவும் வலிவு பெற்ற வைகளின் தனி உரிமையன்று. இப்படித்தான் முதலில் நினைத்துக் கொண்டிருந்தனர். வாழ்க்கை என்பது அன்புடன் இணைக்கப் பட்டிருக்கிறது. போரிட்டு வெற்றி பெறுகின்றவர்கள் வயது வந்தவர்களென்பது உண்மையே. தன்னையே உருவாக்கிக் கொண்டிருக்கிற அன்று பிறந்த குழந்தையைக் காப்பது யார்? இனத்தைக் காப்பது கடுமையான கொம்பு சார்ந்த மேல் தோலானால், குழந்தைக்கு அது கிடையாது; தசையின் வலிவு என்றால், அவன் மெலியவனாய் இருக்கிறான்; கொம்புகளானால், அவனுக்கு அவை முளைக்கவில்லை; வேகமாக இயங்குவதென்றால், அவனால் இன்னும் இயங்க முடியாது. இனப் பெருக்க வளம் (fecundity) என்றால், அவன் இன்னும் முதிர்ச்சி அடையவில்லை. ஆதலால், எல்லா இனங்களும் அடியோடு ஒழிந்து போயிருக்க வேண்டும். ஏனென்றால் எவரும் தொடக்கத்தில் அவ்வளவு வலிவு பெற்றவனாக இருக்கவில்லை. ஒரு காலத்தில் அவன் மெலிந்தே கிடந்தான். வயது வந்தவரைவிட மிகவும் குறைந்த வலிவைப் பெறாத எந்தக் குழந்தைமையும் (childhood) இல்லை. அன்புதான் எல்லா வலிவற்றவர்களையும் காக்கிறது. தப்பிப் பிழைப்பதற்கு (survival) விளக்கம் கூறுவதும் அன்பே. நம்முடைய அறிவிய லார்கள், தாயன்பினை ஓர் இயல் நிகழ்ச்சியாக ஆழ்ந்த கவனத் துடன் ஆய்ந்து வருகின்றனர். வாழ்க்கைப் போராட்டம் அழிவினை ஒரே மாதிரி சித்திரித்துக் காட்டியிருந்தால், தாய் அன்பு இயல்நிகழ்ச்சி வளமானதும் மிகவும் அற்புதமானதுமான பல காட்சிகளை நமக்கு உருவாக்கிக் காட்டுகிறது. இந்த உருவங்கள் இயற்கையில் காணப்படும் பல அற்புத வகைகளின் கண்ணுக்குப் புலனாகாத மென்மையான உணர்ச்சிகளாகக் காட்டுகிறது

ஒவ்வோர் இனத்தின் சிறப்பியல் இதுவே என்ற உண்மை இறுதியாகக் காணப்பட்டிருப்பதை எல்லா மாணவர்களும் புரிந்து கொள்ள வேண்டும்.

ஃபேப்ரே (Fabre) என்பவர் பூச்சிகளைப் பற்றித் தாம் நேரில் கண்டதை அற்புதமாக வருணித்திருக்கிறார். இந்தப் பூச்சிகள் மிகச் சிறியவையாகவும் நம்மைவிட எவ்வளவோ மடங்கு தாழ்ந்தனவாய் இருந்த போதிலும், மிகவும் வியக்கத்தக்க வகையில் தாய் அன்பு, இயற்கைப் பண்பு இப் பூச்சிகளிடம் இருப்பதாக எடுத்துக் கூறியிருக்கிறார். இந்த இயல் நிகழ்ச்சிகளைப் பற்றி ஓர் இயற்கை நூலார் ‘சிலந்திப் பூச்சியின் உள இயல்’[1] என்ற தலைப்பில் பதிப்பித்த முதல் கட்டுரைகளில் ஒன்று, ஒரு நாடகத்தின் நோக்கம் என்ன என்று பயன் அளிக்கலாம். எல்லோருக்கும் தெரிந்ததுபோல் சிலந்திப் பூச்சி தன் உடம்பில் இருந்து வரும் நூலால் ஒரு பை அமைத்துக் கொள்கிறது. இந்தப் பையைப் பெரும்பாலும் இலைகளின் புறத்தே ஒட்டவைத்து அதற்குள் தன் முட்டைகளை இட்டுக் காப்பாற்றி வருகிறது. முட்டைகளோடு அந்தப் பைக்குள் நுழைந்து தன் இனமாகிய செல்வத்தைக் காக்கிறது. அந்தப் பை எந்த இடத்திலாவது பிய்ந்து போனால் சிலந்திப்பூச்சி உடனே சீர்படுத்தி விடுகிறது. பரிசோதனை செய்ய வேண்டுமென்ற நோக்கத்தால் ஒரு சிலந்திப் பூச்சி தன் முட்டைப் பையிலிருந்து நீக்கப்பட்டு, தொலைவில் இருபது நாள்களுக்கு வைக்கப்பட்டிருந்தது. சிலந்திப் பூச்சி எப்பேர்ப்பட்டது? சில கன மில்லி மீட்டர் அளவான கறுத்த குண்டு உயிர்ப்பொருள். மூளையோ நரம்போ அற்ற உயிரினம். அதனுடைய வாழ்க்கை மிகக் குறைந்தது. ஆதலால், இருபது நாள்கள் என்பது அதனுடைய வாழ்வில் நீண்ட இடை நேரமாகும். ஆனால், இந்தச் சிறு பிராணி அதனுடைய விடுதலை பெறும் முயற்சியைச் சிறிதும் தளர்த்திக் கொள்ளவில்லை. அதனுடைய துடிதுடிப்பு கொஞ்சமும் தணியவில்லை. இருபது நாள்களுக்குப் பிறகு அது விடுதலை பெற்றவுடன் தன்னுடைய பைக்கே ஓடிற்று. அதற்குள் தன்னை மறைத்துக் கொண்டது. பையின் பக்கங்களைப் பழுது பார்த்தது. இந்த அன்பும் நினைவாற்றல் திறனும் இதுவரை எங்குக் குவிந்திருந்தது? பிறகு இந்தச் தாய்ச் சிலந்தி அங்கிருந்து நீக்கப்பட்டது. அந்தக் கூட்டுக்குள் மற்றொரு சிலந்திப் பூச்சி விடப்பட்டது. அது உடனே பிற குஞ்சுகளைத் தாய்போல் ஏற்றுக்கொண்டது. பிறர் தாக்குதலினின்று காத்தது. கூட்டின் சுவர்கள் சீர்கெட்டால் உடனே பழுது பார்த்தது. தான் அக் குஞ்சுகளுக்குத் தாயாக இல்லாத

[1] La psychologie d'une Araignee (The Psychology of a spider.)

போனாலும் இந்த இனத்தில் ஒரு தாய் அன்பு இருக்க வேண்டும். உண்மையான சொந்தத்தாய் கூட்டின் அருகே வந்தபொழுது அந்தப் பையைச் செவிலித்தாய் எதிர்த்து நிற்காததுடன் தன் பையை விட்டுவிட்டு ஓடிப்போயிற்று. ஏதோ ஒரு தாய்ச் சக்தி கூட்டை நோக்கி வரப்போகிறதென்று எந்தச் சேணிலை உணர் வாட்சியால் (telepathy)[1] கூட்டுக்குள் இதுவரை மறைந்து இருந்த சிலந்திப் பூச்சிக்குத் தெரிந்ததோ! இனி வரப்போகிறது பரி சோதனையின் இறுதி. குட்டிச் சிலந்திப் பூச்சிகள் வெடித்துப் பைக்குள் தாயுடன் இருந்தன. என்ன நடைபெறும் என்று பரி சோதகர் பையைப் பிய்த்துவிட்டார். சிறு சிலந்திப் பூச்சிகள் நாற்புறமும் ஓடிச் சென்றன. ஆனால் தாய் மட்டும் பிய்ந்து போன கூட்டினை விடாமல் பதுங்கிக் கிடந்தது. இதனுடைய பெற்ற குஞ்சுகளே இதைக் கடுமையாகத் தாக்கிக் கொன்று விட்டன. ஆதலால் தாய் அன்புக்குச் சிக்கலான உறுப்புகள் தேவை இல்லை. மூளையோ, இருதயமோ, புலன் உறுப்புகளோ தேவை இல்லை. வேறு எப்பொருளும் இல்லாமலே அத் தாய்க்கு அன்பு இருப்பது போலிருக்கிறது. வாழ்க்கை தன்னைக் காத்துக் கொள்வதற்கு ஏற்றுக் கொண்டுள்ள சக்தி அது. 'சாலமனால்' (Solomon) பேசப் பட்ட மெய்ஞ்ஞானம் போல் தொடக்கத்தில் தொடங்கிச் சிருட்டியுடன் கூடத் தொடர்ந்து வரும் ஒரு சக்திபோல் இருக்கிறது. 'இறைவன் அவருடைய மார்க்கம் தோன்று வதற்குமுன் அவருடைய பழைய தொழில்களுக்குமுன் என்னைப் பெற்று விட்டார்..........ஆழம் ஏதும் இல்லாத பொழுதே நான் பிறப்பிக்கப்பட்டேன். அப்பொழுது தலையாய தொழிலாளியாக நான் அவரருகே இருந்தேன். அவருடைய அன்றாட இன்பமாக நான் இருந்தேன். அவர் முன்னிலையில் பெருமகிழ்ச்சி அடைந்து வந்தேன். எவரெவர் என்னைக் கண்டுபிடிக்கிறார்களோ அவர்கள் வாழ்வைக் கண்டு பிடிக்கிறார்கள்.' இவை சாலமன் கூற்று.

இனத்தைக் காப்பதும், அவ்வினம் உயிருடன் வாழ்வதைப் பற்றி விளக்கம் தருவதுமான சக்தி வாய்ந்தது அன்பே என்று உயிர்நூலார் காண்பதற்கு வெகு காலத்துக்கு முன்பே, வாழ்வை உயிரினத்தைக் காத்தருளுவது அன்பெனும் சக்தி என்று மதம் காட்டிவிட்டிருக்கிறது. வாழ்வதற்கு வாழ்வைப் படைத்தால் மட்டும் போதாது. அந்த உயிரினம் அன்புடன் நடத்தப்பட வேண்டும்—காதலிக்கப்படவேண்டும். இதுதான் இயற்கை அன்னை யின் விதி. 'எவனிடம் அன்பிலையோ அவன் இறப்பில் உறைகிறான்.' ஹீப்ரு இனத்தவரின் கடைத் தேறுதலுக்கு மோஸஸ் தன்னுடைய

[1] ஐம்புலத் தொடர்பின்றியே தொலைவிலிருப்பவர் உள்ளத்தை மன ஆற்றலால் இயக்கும் திறம்.

பதின் கட்டளைகளைக்[1] கூறும் பொழுது அதற்கு முன்னதாக இந்த விதியையும் கூறினன். உன்னுடைய இறைவனை—கடவுளை உன்னுடைய முழு நெஞ்சால் அன்பு கொள். அண்டை வீட்டானை நீயென்றே கொள். ஃபாரசீஸ் (pharisees)[2] என்ற ஆசாரக்கள்ளர் இயேசுநாதரிடம் நெருங்கி விதியைப் பிரகடனம் செய்யுங்களென்று கேட்டுக் கொண்டனர். அவர் கூறினர்: 'உங்களுக்குத் தெரியாதா? உங்களுடைய அடுத்தவரை உங்களைப்போலவே நேசியுங்கள்.' இவ்வாறு கூறுவது மிகவும் தெளிவாக இருப்பது போலும் தன்னேர் இல்லாதது போலும், வாழ்வின் விதிபோலும் அதன் காரணமாக உலகம் தோன்றியதிலிருந்து இவ் விதி என்றும் இருந்திருக்க வேண்டும் என்றும் கூறுவதுபோல் இருந்தது. செயின்ட் பீட்டர் (St. Peter) என்பவர் புதிதாகத் தோன்றிய மதத்துக்குத் தலைவராகப் போகிறவர், பழைய ஒழுக்கத்திலிருந்து புது ஒழுக்கத்துக்கு மாறும்பொழுது இடைமாருக இருந்த அன்பைப் பற்றி மிகத்தெளிவாகக் கூறப்பட்டது. 'நான் உங்களுக்கு எவ்வாறு அன்பு காட்டுகிறேனே அவ்வாறே நீங்களும் பிறர்க்கு அன்பு காட்டுங்கள். அதாவது உங்களால் அன்பு காட்டக் கூடிய அளவுக்கு அல்ல; ஆனல் நான் அன்புக்காட்டக் கூடிய அளவுக்கு' என்று ஐயமறத் தெளிவாக்குகிருர். மனிதர் ஒருவர்க்கொருவர் அன்பு காட்டிக் கொள்வதற்கும் இயேசு நாதர் மக்களிடம் காட்டக்கூடிய அன்புக்கும் மலைக்கும் மடுவுக்கும் போல் வேற்றுமையுண்டு. மக்கள் தங்கள் அழிவை நோக்கிக் கண்மூடித்தனமாக விரைகின்ருர்கள். நன்மையைத் தீமையுடனும், வாழ்வைச் சாவுனுடனும், உணவை நச்சுடனும் மனிதர்கள் குழப்பிக்கொள்வார்கள். ஆதலால் 'உன்னைப்போலவே அண்டை வீட்டானை நேசி' என்ற உரிமைக் கட்டளையிடத்தில் அதிகம் நம்பிக்கை வைக்க முடியாது. உங்களை நான் நேசித்திருந்தது போல் நீங்களும் நேசியுங்கள்' என்று இயேசு நாதர் கூறுவது மெய்யாக ஒரு புதுக் கட்டளையாகும்.

அன்பின் விதியுடன் நடைமுறைக்காகப் பதின் கட்டளைகளை மோஸஸ் துணையாகப் பிறப்பித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. 'உங்களுடைய தந்தை தாயை மதியுங்கள். நீங்கள் கொலை செய்யாதிருப்பீர்களாக! பிறர் பொருள்மேல் அவாக்கொள்ளற்க! இயேசு நாதர் மேலும் என்ன கற்பித்திருக்கிருர்? 'அன்பில் அளவுக்களவு எதிர்பார்க்காதிருந்தால் போதும்; அப்பொழுது சட்டம் விதி ஏதும் துணைவரத் தேவையில்லை. அன்பின் அளவுகலம் வடிய விடவேண்டும். பாருங்கள்! இது ஒன்றே மனிதனுடைய கடைத்

[1] The Ten commandments.

[2] கடுமையான ஆசாரங்களையும் மரபுச் சடங்குகளையும், எழுத்தியலான சட்டங்களையும் கடைப்பிடிக்கும் யூத வகுப்பினர் (Jews).

தேறுதலுக்கு வழி திறந்துவிடுகிறது. உங்களை நேசிப்பவர்களை நீங்களும் நேசித்தால் உங்களுக்கு என்ன நன்றி இருக்கிறது? ஏனென்றால், பாவிகளும் தங்களை நேசித்தவர்களை நேசிக்கிறார்கள். நன்மை செய்தவர்களுக்கு நீங்களும் நன்மை செய்தால் உங்களுக்கு என்ன நன்றி இருக்கிறது? ஏனென்றால் பாவிகளும் அவ்வாறே செய்கின்றனர். பிறரிடம் இருந்து திரும்பிவரும் என்றவர்களுக்கு நீங்கள் கடன் கொடுத்தால், உங்களுக்கு என்ன நன்றி இருக்கிறது; ஏனென்றால் பாவிகளும் மறுபடியும் கூடியவரை பெறக் கடன் கொடுக்கிறார்கள். ஆனால், உங்களுடைய பகைவர்களை நேசியுங்கள்; நன்மை செய்யுங்கள்; கடன் கொடுங்கள்; திரும்ப எதையும் எதிர்பாராதீர்கள். நீங்கள் மிகவும் உயர்வின் மக்களாவீர்கள்.[1]

எல்லா பந்தயங்களிலிருந்தும் அளவுகளிலிருந்தும் விடுதலை பெறுங்கள் தேவையான ஒன்றினையே பற்றிக் கொள்ளுங்கள். உயிருடனிருக்க, உணர இதுதான் ஏசுநாதரால் காட்டப்பட்ட திருவெளிப்பாடு. மோஸஸைப் போலல்லாமல் அவர் மலைமேல் ஏறினார். ஆனால், மக்களிடமிருந்து ஒளிந்து கொள்ளவில்லை. மக்களைத் தன் பின் வரும்படி அழைத்தார். உண்மையின் இரகசியங்கள் அனைத்தையும் எல்லோர்க்கும் மறைக்காமல் விளக்கம் தந்தார். தாங்கள் துன்புற்றாலும் பிறர்க்கு இரங்குபவரே திருவருட்பேறு பெற்றவராவர். ஏனென்றால் துன்புறுவதே இரங்குவதாகும்; வாழ்வதாகும். அழுகின்றவர்களே (பிறர்க்கு) திருவருட்பேறு பெற்றவர்கள். நேர்மைக்காகப் பசியுற்றிருப்பவர்-ஏங்குபவரே திருவருட் பேறு பெற்றவர்கள். இன்னல் விளைத்து அடக்கி ஒடுக்கப்பட்டவரே திருவருட் பேறு பெற்றவர்கள். இருளை விலக்கி இருதய மாசகற்றியவரே திருவருட்பேறு பெற்றவர்கள். ஏனெனில், இரங்குகிறவன் மனநிறைவு பெறப்படுவான். ஆனால், இரங்காதவன் இழக்கப்பட்டான். போலி இன்பத்தில் மூழ்கிக் கிடப்பவன் கேடுறுக! நிறைந்துள்ளவன் கேடுறுக! நகையாடுகிறவன் கேடுறுக? அவர்கள் தங்களுடைய உணர்ச்சியை இழந்து விட்டார்கள். பிறகு மற்றவையெல்லாம் வெறும் இடம்பம். இருதயம் இறந்து கிடந்தால் அறநெறி விதிகளையெல்லாம் மனனம் செய்தும் நடை முறையில் அனுசரித்தும் பயன் என்ன? அது ஒரு சவத்தின் சமாதிக்கு வெள்ளையடிப்பது போலல்லவா இருக்கிறது. ஈர நெஞ்சிலா: அறநெறியின் தன் மன நிறைவு கொண்டவன் ஒரு சமாதி—கல்லறை.'

அறநெறி உணர்ச்சியைக் கற்பித்தல்.—நுண்ணறிவுக் கல்வி போல்—படிப்புபோல் அறநெறிக் கல்வியும் பற்றிய கருத்தில்

[1] St. Luke vi. 32—5.

இரக்கம் என்ற அடிப்படை இருக்கவேண்டும். மாயைக்கும், பொய்ம்மைக்கும் இருளுக்கும் குழந்தையை நாம் இழுத்துச் செல்லாமல் இருக்க வேண்டுமானால், இந்த அடிப்படையில் அறநெறிக் கல்வி அமைக்கப்பட வேண்டும். ஒருபுறம் நுண்ணறிவை அதனுடைய விதிகளுக்கு ஒப்ப உயரச்செய்ய அளிக்கப்படும் உணர்ச்சி சார்ந்த படிப்பும் சுதந்திரமும், மற்றொரு பக்கம் தன்னையே உயர்த்திக்கொள்ளும் வகையில் அளிக்கப்படும் உள்ளத்தைச் சார்ந்த பும் அறநெறிச் சுதந்திரமும் இரண்டும் ஒன்றோடொன்று ஒத்த இரு கருத்துகளாகும். இரண்டு இணைகரப் (parallel) பாதைகளாகும்.

நமக்கும் குழந்தைகளுக்கும் இடையேயுள்ள தொடர்பினை ஆராய்வோம். நாம் அவர்களுக்குப் புறத் தூண்டுதலாகிறோம். அவர்களிடம் மிக மென்மையாக வளர்ந்துகொண்டு வரும் உணர்ச்சிகள் அத் தூண்டுதல்களால் வினையாற்றப்பட வேண்டும்.

குழந்தைகளின் நுண்ணறிவுக்கென பல்வேறு புறப்பொருள்களைப் பெற்றிருக்கிறோம். அவை வண்ணங்கள், வடிவங்கள் முதலியன. ஆனால் அவர்களின் உள்ளத்துக்குத் தேவைப்படும் புறப்பொருள் நாமே ஆவோம். தூய்மையான குழந்தை உள்ளம் நம்மிடம் இருந்தே ஊட்டம் பெற வேண்டும். அவர்களுடைய கவனமானது எவ்வாறு அவர்களுக்கு விருப்பமான ஒரு துலங்கலின் மேல் நிலைபெற்றிருந்ததோ அம்மாதிரியே அவர்கள் தம்முடைய நெஞ்சத்தை நம்மேல் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். நம்மிடம் அன்பு காட்டுவதால், அவர்கள் அவர்களுடைய நெருங்கிய அறநெறி வாழ்வில் தங்களைத்தாங்களே உயர்த்திக் கொள்ள வேண்டும்.

அக்கறை வண்ணப் பலகைப் பெட்டியைக் குழந்தை எடுத்துக் கொள்ளச்செய்கிறது. அவைகளிடம் தளராது மனத்தைச் செலுத்துமளவுக்கு உட்கவரப்படுகிறான். இவன் அவைகளைக் கொண்டு இயங்குவதற்கு அப்பலகைகள் தடையின்றி இடந் தருகின்றன. ஆனால், வண்ணங்கள் சூரியனுடைய ஒளிக்கதிர்களைப் பிரதிபிம்பிக்கின்றன. குழந்தையின் கண்ணில் உள்ள இன்னும் முதிராத, தழுவாத கண்விழியின் பின்புறத் திரைமேல் கதிர்கள் விழுகின்றன. அதேபோல் குழந்தையின் நெஞ்சம் நம் பக்கம் திரும்பி நம்மேல் பதியவைத்து நம் உள்ளத்திலிருந்து ஊட்டம் வேண்டுமென்று கேட்கும்பொழுது, நாமும் எப்பொழுதும் ஆயத்தமாக இருக்கவேண்டும். எதிர்ப்புக்கூறாத புறப் பொருள்கள் போலிருக்க வேண்டும். குழந்தையின் தேவைக்கு நம் தற்பெருமையின் காரணத்தால் துலங்காமலிருக்கலாகாது. நம்மிடமுள்ள

எல்லா நெருங்கிய சக்திகளுடனும் குழந்தையிடம் துலங்க வேண்டும் (respond). அவனுடைய உள்ளம் இன்னும் வாழ்க்கையுடன் தழுவி முதிர்ச்சி பெறவில்லை. அவனுடைய தூய்மையான உள்ளத்துக்குத் தேவைப்படும் ஒளிக்கதிர்களை நம் உள்ளத்திலிருந்து பிரதிபலிக்கவேண்டும்.

நம்முடைய அன்பையும் உதவியையும் அளிக்க அவனைப் பேர் சொல்லி அழைக்கத் தேவை இல்லை. புறப்பொருள்கள் என்ன செய்கின்றன? அவைகளுடைய மென்மையாலும், பிரகாசத்தாலும், பல்வேறு அக்கறை ஊட்டவல்ல வடிவங்களாலும், எண்ணின் இரகசியத்தை உள்ளடக்கிய எண் கோல்களும், வண்ண நெடுங்கணக்கு போல் கண்ணுக்குள் பட்டு உயர்ந்த விவேக வினையாற்றல்களைக் குழந்தையிடம் தூண்டி விடுவது போலும் நாமும் காத்திருக்க வேண்டும். உயிர்ப்பு அற்று அல்ல. ஆனால், அவன் என்றும் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய விலையுயர்ந்த பொருள் நம்மிடம் இருப்பதாகக் குழந்தை உணர வைக்கும் வகையில் நாம் நடந்து கொள்ள வேண்டும். தொடுவதற்குக் கை நீட்டினவுடனே அவனுக்குப் பயனுவதற்கு என்றும் நாம் ஆயத்தமாக இருக்க வேண்டும். அவன் தொட்டு இயக்கி வினையாற்றப்படும் புறப்பொருள் போல் நம்முடைய துலங்கலும் அரைகுறையல்லாது முழுமையாக இருக்க வேண்டும். நிறைந்தாகவும் உடனடியானதாகவும் இருக்க வேண்டும். ஆனால், ஒவ்வொரு முறையும் குழந்தையின் அறிவு வாழ்வுக்கு ஒரு மேல் நோக்கத் தூண்டுதல் அளிக்கப்பட வேண்டும்.

சில சமயங்களில் குழந்தைகள் கொஞ்சப்படும் பொழுது அவர்கள் எதிர்த்து நிந்திக்கப்பட்டவர்போல் அந்த அரவணைப்புக்கு எதிர்ப்புக் காட்டியதைப் பலர் தம் அனுபவத்தால் கண்டிருக்கலாம். அதேபோல் குழந்தையின் அன்பைக் கட்டுப்படுத்தி அடக்கிய பொழுது அக் குழந்தை தொட்டாச் சிணுங்கியைப் போல் (லஜ்ஜாவதி Mimosa) மானம் இழந்தவனுய்த் தனக்குள் குறுகி விடுவதையும் கண்டிருக்கிறோம். குழந்தையின் தெய்விக சுதந்திரத்திற்கு நாம் மதிப்புத்தர வேண்டுமானுல், நாம் இவ்வாறு நடந்துகொள்ள வேண்டும். அவனுடைய கவர்ச்சிகரமான கம்பீர நடத்தையைக் கண்டு நம்முடைய சீராட்டுதலை அவன்மேல் வலியத் திணிக்கலாகாது. அவனுடைய அன்பை ஏற்றுக்கொள்ளும் மனப் போக்கில் நாம் இல்லாத சமயத்திலும் அவனுடைய அன்புக் கிளர்ச்சியை ஏற்றுக்கொள்ள மறுக்கலாகாது. ஆனுல், நாம் எப்பொழுதும் வஞ்சகமில்லாமல் உள் ஒளி மறைவில்லாத பக்தியை அவனிடம் காட்ட வேண்டும். அவனுடைய அன்புக்குரிய புறப்பொருளாக நாம் இருக்கிறோம். அவனுடைய வாழ்வை

ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கிற புறப்பொருளாக நாம் ஆவோம். மிகவும் சிறந்த ஆசிரியர்களும், தாய்மார்களும் எவ்வாறிருக்க வேண்டும்? அவர்கள் கல்வி புகட்டும் கருவிகளைத் தமக்கு எடுத்துக் காட்டாக வைத்துக் கொண்டவர்களாக இருக்க வேண்டும். அப்பொருள்களைப் போல் அறநெறிச் செல்வத்தால் தங்களை நிறைத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தனிப் பகுதியிலும் உணர்ச்சிக்குத் துலங்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும். மறுத்தலில் அடங்கியிருத்தல் வேண்டும். ஆனால், அன்பு ஊற்றுப் போல் வினையாற்றல் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். புலன் சார்ந்த புறப் பொருள்கள் அனைத்தும் மனிதனால் உணரக்கூடிய எல்லாப் புலன் உணர்ச்சிகளின் தொகையைப் பெற்றிருக்கின்றன. ஒளியின் அதிர்வும், வண்ணத்தின் அதிர்வும், ஒலியின் அதிர்வும், வெப்பத்தின் அதிர்வும், அப் புறப்பொருள்கள் தம்முள் பெற்றிருக்கின்றன. அவ்வண்ணமே ஆசிரியரும் தாயாரும் தம்முள் எல்லா வகை உள்ளார்ந்த உணர்ச்சிகளையும் பெற்றிருக்க வேண்டும். இவைகளைக் கொண்டு குழந்தை எப்பொழுது தன் உளப்பசியைத் தீர்த்துக் கொள்ள வருமோ என்று நாம் ஆவலுடன் காத்திருக்கவேண்டும்.

நம்மைக் குழந்தை எவ்வாறு நேசிக்க வைப்பது?' என்றும், 'குழந்தையை எவ்வாறு உணரச் செய்வது?' என்றும் கேள்வி கேட்கப்படலாம்.

வண்ணத்தைக் காணமுடியாத குழந்தை குருடனாய் இருப்பான். அவனுக்கு எவராலும் பார்வையை அளிக்க முடியாது. அங்ஙனமே உணர முடியாத குழந்தைக்கு எவராலும் உணர்ச்சியை ஊட்ட முடியாது. ஆனால், இயற்கை அன்னை தாயையும் சேயையும் உடலோடு இணைத்தது மட்டுமல்லாமல் இன்னும் நெருங்கி அன்பினால் பிணைத்திருக்கும் காரணத்தினால், குழந்தை பிறக்கும் பொழுதே அத்துடன் உடலையும் அன்பையும் கொண்டு வருகிற தென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. ஒரு சிறு பொருளின் மேலாவது அன்பு காட்டக் கூடியவனிடம் அளவுகடந்த உளப் பதிவுகளைத் தன்னுள் பெறுகின்ற உணர்ச்சி ஒன்று இருந்து வருகிறது. ஒரு பொருளைக் காணக்கூடியவனுக்குப் பார்வை உண்டு. ஆதலால், ஒரு பொருளைக் காண்பவன் காண்பான். தாயையோ மகனையோ நேசிக்கிறவன் நேசிப்பான். அந்த உள்ளார்ந்த சக்தி துடிக்கிறது. தன் முன் அந்தச் சமயத்தில் காட்டப்பட்ட பொருளுக்கு மட்டுமல்ல; எல்லாவற்றுக்கும் துடிக்கும்.

மாற்றுந்தாய் என வேறொன்று இட்ட முட்டைப் பைக்குள் விடப்பட்ட ஏழைச் சிலந்திப் பூச்சியும் அந்த நிலைக்குத் தன்னைத்

தழுவிக் கொண்டு, மாற்றுருடைய முட்டைகளைக் காத்தது. ஏனென்றால் சிலந்திப் பூச்சிக்குத் தாயன்புத் திறம் இருக்கிறது.

ஆதலால், தாயால் அன்பு காட்டப்பட்ட சேய், அந்த அன்பால் உதவியளிக்கப்பட்ட சேய், பிறரையும் நேசிக்கவல்ல ஓர் உள்ளார்ந்த உணர்ச்சியைப் பெற்றிருக்கிறது. அந்த உணர்ச்சிக்கு முன் நின்ற மானுடப் பொருள்கள் அச்சக்தியிலிருந்து பிரதிபிம்பத்தைப் பெறுகின்றார்கள்.

நாம் அவனால் காணப்படுகின்றதற்குக் காத்திருக்க வேண்டும். எல்லா விவேகத்தைத் தூண்டி விடும் புறப் பொருள்களுக்கு இடையில் நம்முடைய சக்தியையும் அவன் உணரும் நாள் வந்தே தீரும். நம்மிடம் நெருங்குவான். அவனுடைய இயல் அமைதியை நமக்குள் தேடுவான். புறப்பொருள்களில் ஒன்று முதலில் அவனைக் கவர்ந்து அவனை ஒரு நிலைப்படுத்தியதுபோல் நம்மிடம் அவன் காண்பதும் ஒரு புதுப் பிறப்பாகும்—புது விழிப்பாகும். அந்த நாளும் அந்த நேரமும் வராதென்பது அரிதிலும் அரிது. குழந்தைக்கு மென்மையான அன்புப் பணியை நாம் செய்து வந்திருக்கிறோம். அவனுடைய அறிவு வளர்ச்சிக்கு நிறைவு காண நாம் வழி வகை செய்து வந்திருக்கிறோம். நாம் ஒருவர் இருக்கிறோம் என்று காட்டிக்கொள்ளாமல் நம்மைப் பின்னணியில் வைத்துக் கொண்டு, ஆனால் எப்பொழுது உதவி தேவைப்படுமோ அப்பொழுது உதவிபுரிய ஆயத்தமாய் இருந்திருக்கிறோம். அவனுக்கு உற்றுழி உதவி புரிந்து—காலத்தில் உதவி புரிந்து—அவனுக்குப் பெரிய மன நிறைவு அளித்திருக்கிறோம். அவனுடைய மன ஒழுங்கை மொழியால் இன்னும் சிறப்பாக நினைத்த பொழுது பொருள்களின் பெயர்களை அவனுக்குக் கொடுத்திருக்கிறோம். அவ்வளவுதான் (பெயர் கொடுத்தல்). அவனிடத்திலிருந்து வேறெதையும் கேட்காமலும், நம்மிடமிருந்து வேறெதையும் வழங்காமலும், நம்முடைய இருப்பிடத்திற்குப் பின்வாங்கி விட்டிருக்கிறோம். அவனுக்கு நெடுங்கணக்கின் அகர முதல எழுத்துகளின் (alphabet) ஒலிகள் இன்னவை என்று தந்திருக்கிறோம். எண்களின் இரகசியத்தைத் தந்திருக்கிறோம். பொருள்களுடன் அவனைத் தொடர்பு கொள்ள வைத்திருக்கிறோம். ஆனால், அவனுக்கு எது பயன் அளிக்குமோ அத்துடன் நிறுத்திக் கொண்டிருக்கிறோம். அனேகமாக நம்முடைய உடலையே அவனிடமிருந்து மறைத்துக் கொண்டிருக்கிறோம் எனலாம். நம்முடைய மூச்சு, நம்முடைய தன்மை அனைத்தையும் அவனிடமிருந்து மறைத்துக் கொண்டிருந்திருக்கிறோம்.

அவன் ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுக்க விருப்பியபோது நாம் அவனுக்கு ஒரு முட்டுக்கட்டையாக இருந்ததில்லை. ஒரு

வினையாற்றலில் அவன் தன்னை நீண்ட நேரம் ஈடுபடுத்திக் கொண்டிருந்த பொழுது, தூங்குகின்ற குழந்தையின் இளைப்பாறு தலைப் பெற்ற தாய் எவ்வாறு காத்து வந்தாளோ அவ்வாறே நாமும் அவனுடைய அமைதியை எச்சரிக்கையுடன் பாதுகாத்து வந்திருக்கிறோம்.

அவன் முதலில் அருவத்தில் (abstraction) மூழ்கின பொழுது நம்மிடத்தில் அவனுடைய மகிழ்ச்சியின் எதிரொலியைத் தவிர வேறொன்றும் அவன் காணவில்லை.

ஒரு மலரின் வாழ்க்கைப் பணித்திட்டம் என்ன? இடை யுறாது மட்டுப்படுத்தாமல் மணம் கமழ்வதே. அதேபோல் குழந் தைகள் நம்மிடம் வரும்பொழுது நாம் எப்பொழுதும் சோர்வுறா திருப்பதையே கண்டனர். அவர்களுக்கு என்ன தேவையோ அதையே அவர்களுக்கு அளிக்க, என்றும் சோர்வுறாதிருக்கும் குறிக் கோளை நாம் பெற்று இருப்பதைக் கண்டனர்.

அவன் எங்களிடம் ஒரு புது வாழ்வைக் கண்டான். தன் னுடைய முதல் அன்பு பிறக்க வாய்ப்பளித்த தாய்ப்பாலை விடச் சுவையில் சிறிதும் குன்றாததை எங்களிடமும் கண்டான். எவருடைய வாழ்வு இவனை வாழ வைப்பதற்கே இருக்கிறதோ, எவருடைய தன்னலம் பாராட்டா வாழ்வு இவனுக்குச் சுதந்திர வாழ்வும், விரிவடைதலும் பெறச் செய்கிறதோ, அவரிடம் குழந்தை ஒருநாள் தன்னுடைய உணர்ச்சியைக் காட்டிக் கொள்வான்.

எம்முடைய ஆன்மாவுடன் தன் ஆன்மாவையும் நெருங்க இணைத்து அந்தப் பேரானந்தத்தின் சுவையை உணரும் நாள் வரும் என்பதற்கு ஐயம் இல்லை. அந்த நிலையில் எங்களுடைய குரல் அவனுடைய செவிகளால் மட்டும் கேட்டுணரப்பட மாட்டாது. எங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் சக்தி, அவ னுடைய வெற்றிகளை எங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளலும் அவனுடைய மகிழ்ச்சிகளை எங்களுடன் பகிர்ந்து கொள்ளலும் ஆகியவை அவனுடைய வாழ்வில் புது அம்சமாகும். நாங்கள் இவனுடைய தோழர்களுடைய முன்னேற்றத்தில் எவ்வளவு ஆழ்ந்த அக்கறை கொண்டிருக்கிறோமோ அந்த அளவுக்குத் தன்னுடைய தோழர்களும் தன்னுடன் இருக்கிறார்கள் என்று உணர்ந்து அவனும் அதேவிதமாக அவர்களிடம் அக்கறை காட்டு கிறான். இத்தகைய காட்சியைக் காண்பது இன்பம் ஊட்டும் காட்சியாகும். நாலைந்து குழந்தைகள் தங்களுடைய கரண்டி களைக் கிண்ணங்களின் மேல் சாய வைத்து விட்டு உண்டி ஆறி

விடும் என்ற கவலையும் இல்லாமல் பசியாலும் தூண்டப்படாமல் தங்களுடைய இளந்தோழன் செய்து வரும் முயற்சியில் ஆழ்ந்த சிந்தனை கொண்டவர்களாக இருக்கின்றார்கள். அவன் தன்னுடைய குறுந்துணியைத் (napkin) தன்னுடையதாடையின் கீழ்த் திணிக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறான். இறுதியில் அவ்வாறு செய்தே விடுகிறான். ஒரு தந்தை தன் மகனுடைய வெற்றியைக் காண வந்ததுபோல இவர்களும் தோழன் வெற்றியைக் கண்டதும் ஆறுதலும் பெருமையும் கொண்டவர்கள்போல் தம் உணர்ச்சியால் தெரிவித்துக்கொள்கின்றனர். அவர்களுடைய இனிய கீழ்ப்படிதலாலும், அவர்களுடைய தெய்விகக் கொந்தளிப்பாலும், அவர்களுடைய முன்னேற்றத்தாலும், குழந்தைகள் நமக்குக் கைம்மாறு உழைப்பீடு செய்வார்கள். நம்மை அவர்கள் தேட வைக்கும் கனிகள் நம்மால் கற்பனை செய்ய இயலாத அவ்வளவு அளவு கடந்ததாகும். வாழ்க்கையின் இரகசியங்களின் உட்பொருள் விளக்கம் பெறும்பொழுது இவ்வுண்மை வெளியாகிறது. 'ஈவாயாக அதே உனக்கும் ஈயப்படும். நல்ல அளவு, வற்புறுத்தி ஒன்றாய் இணைத்து வழியும்படி உன் நெஞ்சம் நிறைய மக்கள் அளிப்பார்கள்.'

அறநெறிக் கல்வியின் சாரம்.—உளம் சார்ந்த உணர்ச்சியை வாழவைத்து இன்னும் நிறைவு படுத்துவதே அறநெறிக் கல்வியின் சாரமாகும். புலன்கள் சார்ந்த அறிவுப் பயிற்சிகளால் 'ஒழுங்கு' ஏற்படுகிறது. அதேபோல் அறநெறிக் கல்வியைச் சூழ்ந்து நியாயம் அநியாயம், நன்மை தீமை என்ற வேற்றுமைதானே நிலைநாட்டப் பெறுகிறது. காணமுடியாத ஒருவனுக்கு இந்த உண்மையை எல்லா நுட்பங்களுடனும் எவராலும் கற்பிக்க முடியாது. வேற்றுமையைக் காண்பதும், அதை அறிவதும் இரண்டும் ஒன்றல்ல.

எனவே, குழந்தை நல்ல உதவி பெறப்பட வேண்டுமானால் சூழ்நிலை தக்க முறையில் ஒழுங்காக அமைக்கப்பட வேண்டுமென்பது இன்றியமையாததாகும். நன்மை தீமைகள் சரிவர வேற்றுமை காணப்பட வேண்டும். எந்தச் சூழ்நிலையில் இரண்டும் ஒன்றொடொன்று குழப்பப்படுகிறதோ — அதாவது — நன்மை பற்றின்மையுடனும், தீமை வினையாற்றலுடனும், நன்மை செல்வத்துடனும், தீமை அபாக்கியத்துடனும் குழப்பிக் கொண்டால், அது அறநெறி சார்ந்த மெய்யுணர்ச்சியில் ஒழுங்கை உருவாக்க உதவி புரியத் தக்கதல்ல. படுமோசமான அநீதியும், வதையும் நடைபெறுமிடத்தில் அதுவும் எதிர்பார்க்க முடியாது. இந்த நிலைமைகளில் குழந்தையின் நினைவு கலக்கப் பெற்ற தண்ணீரைப் போல் ஆகிவிடும். கருக்குழந்தைக்கு மதுபானம் எப்படியோ

அதைவிட இன்னும் நச்சுத் தன்மை பெற்றுவிடும். ஒழுங்கு என்பது இனி என்றும் இராது ஒழிக்கப்படலாம். அத்துடன் நினைவு நிலையின் தெளிவும் ஒழிக்கப்படலாம். இதனுல் 'அறநெறி மனிதனுக்கு' விளைவதென்ன என்று நம்மால் கூறமுடியாது. 'இந்தச் சிறு குழந்தைகளில் ஒருவனை எவன் துன்புறுத்துகிருனே அவன் கடல் ஆழத்தில் மூழ்கடிக்கக் கடவாஞக.' 'உன் கையோ பாதமோ உன்னைப் புண்படுத்தினுல் வெட்டி எடுத்து உன்னின்று தூக்கி எறி.'

எனினும், ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்ட சூழ்நிலையே எல்லாம் ஆகிவிடமுடியாது. அறிவூட்டும் கல்வியிலும், தானுகத் தோன்றிய வினையாற்றல்கள் மட்டும் விவேகத்தைக் களைப்பாற்றச் செய்தன என ஆகாது. ஆனுல், அதைவிட ஆசிரியரின் பாடங்கள் உண்மையை உறுதியாக்கியதுடன் வளர்ச்சியின் போக்கில் போய்க் கொண்டிருந்த உள்ளார்ந்த ஒழுங்கை ஒளிபெறச் செய்தது. அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அவள் சொன்னுள், 'இது சிவப்பு, இது பச்சை.' இப்பொழுது அவள் கூறுவாள், 'இது சரி, இது தப்பு' என்று மேலே குறிப்பிடப்பட்ட குழந்தைகளைப்போல் நன்மை தீமையைத் தங்களுடைய நினைவு நிலையின் மையமாக வைப்பதைக் காண்பது அவ்வளவு அரிதன்று. அதைத் தொட்டறியக்கூடிய உடற்குரிய ரொட்டிக்கு உயர்வாகவும், அறிவு ஊட்டத்துக்கு உயர்வாகவும் வைத்து மற்றவைகளைவிடத் தங்களுக்கு அதிக உயிர்ப்புடையதாகிய கேள்விகளை எடுத்துக் கூறுவார்கள். 'நன்மை எங்கிருக்கிறது? தீமை என்பது என்ன?' என்று கேட்பார்கள். ஆனுல், அறநெறிப்பாடம் மிகவும் சுருக்கமாக இருக்க வேண்டுமென்பதை நாம் மறந்து விடலாகாது. துறவிகளின் தந்தையாகிய மோசஸ் என்பவர் குழந்தைகளல்லாதவர்கள் நல்லொழுக்கத்தைப் புகட்டுவதற்காகப் பத்து எளிய கட்டளைகளை அளித்தார். இவை இயேசு நாதருக்கு அளவுக்கு மீறினதாகக் காணப்பட்டது. இவைகளனைத்துக்கும் மேலாக 'அன்பின் விதி' — 'அன்பாகிய சட்டம் (Law of Love) ஒன்று' இருந்தது. இந்தச் சட்டத்தைப் பத்துக் கட்டளைகளுக்குப் பதிலாக இயேசுநாதர் எடுத்துரைத்தார். பத்துக் கட்டளைகளும் அன்பு விதியின் விளக்கமே. இந்த அன்பு விதிக்குள் எல்லாச் சட்டங்களும் அறநெறிக் கொள்கைகளும் அடங்கிக் கிடக்கின்றன.

* * *

நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வேறுபாட்டினை உள்ளார்ந்த சக்தி ஒன்றினுல் கண்டறிய முடியும் என்பது சாத்தியமே. இது அறநெறியைப் பற்றிய அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டது. அந்த நிலையில் குறிப்பிட்ட நன்மையும் தீமையும் முழுமையானது; அதாவது அவை வாழ்வுடன் ஒன்றியிருக்கும். கற்றுக் கொண்ட

சமூகப் பழக்கங்களால் அன்று. இரண்டுக்குமுள்ள வேற்றுமை நம்து மனச்சான்று எடுத்துக் கூறுகிறது என்று நாம் அடிக்கடி பேசிக் கொள்கிறோம். நன்மை சாந்தத்தை அளிக்கிறது; அது ஒழுங்கு[1]; அது ஆர்வம்[2]; அது வலிமை[3]; தீமை என்பது கடுந்துயராகக்[4] குறிக்கப்படுகிறது. அத் துயர் சில வேளைகளில் தாங்க முடியாத அளவுக்கு இருக்கிறது[5]. உளநைவு என்பது இருளும் ஒழுங்கின்மையும் மட்டுமல்ல. அனல் காய்ச்சலும், ஆன்மாவின்—உள்ளத்தின் பிணியும் ஆகும். சமூக விதிகள், பொது மக்கள் கருத்து நல்ல செல்வாக்குடன் இருத்தல், அழிவேற்படுமென்ற அச்சம் ஆகிய அனைத்தும் இந்தப் பல உணர்ச்சிகளையும் ஆக்கும் சக்தியற்றவையாகும். பெரும்பாலும் சாந்தம் அபாக்கியசாலிகளிடம் காணப்படுகிறது. மாக்பத்தின் மனைவியின்[6] மனநைவு தன்னுடைய கையின்மேல் ஒரு சொட்டுக் குருதியைக் கண்டதும், ஒரு சாம்ராச்சியத்தையே பெற்றிருந்தவளாயினும், அக் காட்சி அவளுடைய உள்ளத்தை அரித்துவிட்டது.

விபத்துகள் வரப்போகிறதென்று முன் கூட்டி நமக்கு எச்சரிப்பதற்கும் வாழ்க்கைக்கு ஒத்த சூழ்நிலையை நாம் புரிந்து கொள்ளும்படி செய்வதற்கும் நம்மிடை ஓர் உள்ளார்ந்த உணர்ச்சி இருக்க வேண்டுமென்று கருதுவதில் வியக்கத்தக்கது ஏதுமில்லை. சாதாரணப் பொருள்களைக் காப்பாற்ற வேண்டிய நெறியினை அறநெறிப் பண்புக்குச் சமம் என்று இக் காலத்தில் அறிவியல் விளக்கிக் காட்டுகிறது. அவ்வாறாயின் நம்முடைய நல்வாழ்வுக்கு என்ன வேண்டுமென்பதை நம்முடைய உள்ளார்ந்த உணர்ச்சியால் சோதித்து விடலாம். உயிரியல் இதுபோன்ற உண்மையை நமக்கு எடுத்துகாட்டியதில்லையா? 'பயோமீட்டர்' (Biometer) என்பது உயிரியற் செய்திகளின் ஆயளவைக் கருவி.' இந்த பயோமீட்டரை மனிதன் அளக்க உபயோகித்துச் சரியான சராசரி மனிதன் எப்படி இருக்க வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதாவது ஒவ்வோர் உறுப்பிலும் சராசரி அளவைப் பெற்றிருக்கும் மனிதனை உருவாக்கியிருக்கின்றனர். இந்தச் சராசரி அளவைகள் புள்ளியலாலும் மருத்துவத்தின் வடிவியலாலும் இயல் நிலைக்கு (normality) ஒப்ப இருக்குமாறு கணக்கிட்டிருக்கின்றனர். உறுப்புகளில் எந்த நோயும் வருவதற்குத் தன் வடிவியலில் எத்தகைய இயற்சார்வும் (Predisposition) இல்லாத வகையில் இருப்பவனே சராசரி மனிதனாவான். பயோமீட்டரின் துணைக்கொண்டு மனிதன் இப்படித்தான் இருக்க வேண்டுமென்று உருவகப்படுத்திக் கொண்ட பொழுது

[1] order. [2] enthusiasm. [3] strength. [4] anguish. [5] remorse.

[6] Lady Macbeth—ஷேக்ஸ்பியரின் துக்க நாடகங்கள் ஒன்றின் கதாநாயகி,

அது கிரேக்கச் சிலைகளின் உடலமைப்பு விகிதத்துக்கு அற்புதமான வகையில் ஒத்திருந்தது. இந்த உண்மை கலைசார்ந்த மென்னயத்திற்கு (aesthetic sentiment). ஒரு புதுமை விளக்கம் தர உதவிற்று. கிரேக்கக் கலைஞன் தன் கலை உணர்ச்சியால் ஒவ்வோர் உறுப்பின் சராசரி அளவு இவ்வாறு இருக்க வேண்டுமென்று உணர்ந்து மிகவும் வியக்கத்தக்க முழு மனிதனை வடித்து காட்டியிருக்கிறான் என்பது தெளிவாகிறது. கலைஞனுடைய மகிழ்ச்சியெல்லாம் அழகின் மகிழ்ச்சியே. அவன் இன்னும் சிறப்பாக உணர்ந்தான்; வாழ்வின் வெற்றியை உணர்ந்தான்; இயற்கையின் குறைபாடுகளிலிருந்து—அதாவது நோய்க்கு இயற்சார்விலிருந்து வேறுபட்டதை உணர்ந்தான். உணரக்கூடியவனுக்கு ஆக்குதல் வெற்றி (triumph of creation) நெருங்கிய மகிழ்ச்சியைத் தரக்கூடியது. நுண்மையான பிழைகளும் அப்பொழுது இசைமுரணாகத் (discord) தோன்றும் சுருங்கச் சொன்னால் கலையுணர்ச்சிக் கல்வி என்பது முழுச்சாராசரிபற்றிக் கணக்கில் காணப்படும் 'நெருங்கிய அளவீடு[1]போல் ஆகும். எவ்வளவுக்கெவ்வளவு உண்மையான அளவை அதனுடைய கடைசிவரைக்கும் நெருங்க முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு இதனின்று விலகுதலைப்பற்றி ஆய்வதற்கு ஒப்பிடும் முழு வழியைப் பெறச் சாத்தியமாகிறது. மற்ற இசை முரண்களின் நடுவிலும் சிறந்த கலைஞன் அழகை ஒவ்வொரு நுட்பமாகக் காணும் சக்தி பெற்றிருக்கிறான். எவ்வளவுக்கெவ்வளவு அழகின் முழுமைப்பற்றி உணரும் சக்திபெற்றிருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு எளிமையில் உருவத்தில் ஏதாவது சிறு முரண் இருந்தாலும் எளிதில் கண்டுபிடித்து விடுவான்.

நன்மை தீமையின் வேற்றுமை என்ன என்பதை உணருவதற்கு மனநினைவில் இம்மாதிரி ஒன்று நடைபெறலாம். அழகை விட நன்மை என்பது இன்னும் அதிகமாக வாழ்க்கையின் நலனுக்கென இருக்கிறது. தீமை என்பதை அபாயத்தைக் குறிப்பதாகவே சொல்லிவிடலாம். விலங்குகளுக்குக் கூர்மையான தற்காப்பு உள் துடிப்பு (instinct) ஒன்று இருப்பதில்லையா? வாழ்க்கையின் நடைத்தைக்கும் அதைக் காத்தலுக்கும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று நுண்ணிய முறையும் அந்த உணர்ச்சி தூண்டி விடுகிறதில்லையா? நாய்களும், குதிரைகளும், பூனைகளும், பொதுவாக மனிதனை அண்டிப்பிழைக்கும் விலங்குகள் அனைத்தும் மனிதனைப்போல் வரப்போகும் பூகம்பத்திற்கு—நில அதிர்ச்சிக்கு அமைதியாகவும் மனமறியாமலும் காத்திருப்பதில்லை. ஆனால், துடிதுடிக்கின்றன. (தூந்திரநாட்டில்—பனிமூடிகிடக்கும் தரையுள்ள

[1] mathematical approximation—ஒரு கணக்குக்கு முழுதும் சரியாய் இரா விட்டாலும் குறிப்பிட்ட ஒரு காரியத்துக்குப் போதுமான அளவிற்கு ஏறத்தாழச் சரியாயிருக்கிற விடை,

நாட்டில்) பனிக்கட்டி பிளக்கும் தருவாயில் வண்டியிழுக்கும் எஸ்கிமோ நாய்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றாகத் தம்மை விடுவித்துக்கொண்டு ஏதோ குழியில் விழுவதைத் தடுத்துக்கொள்வது போல் நடந்துகொள்கின்றன. அந்த நாய்களின் வியக்கத்தக்க உள் துடிப்பை மனிதன் கண்டு அப்படியே திகைத்துப்போய் நிற்கிறான்.[1] மனிதனுக்கு இயல்பாக இந்த உள் துடிப்பு இல்லை. அவனுடைய விவேகத்தினாலும் நன்மை தீமைக்குள்ள தன் நெஞ்சறியும் உணர்ச்சியாலும் தன்னுடைய தற்காப்புகளை அமைத்துக் கொண்டு அபாயங்களின் அறிகுறிகளை உணர்கிறான். மனிதனுடைய விவேகம் உலகத்தையே மாற்றி அமைக்க முடிகிறது. இந்த நுண்ணறிவு விலங்குகளை விட எவ்வளவோ சிறந்த உயரத்தில் தூக்கி விடுகிறதென்றால் தன்னுடைய அறநெறி உணர்வை வளம்பெறச் செய்து கொண்டானானால் எவ்வளவு மாபெரும் சிறப்பிற்குத் தன்னை உயர்த்திக் கொள்ளமாட்டான்!

ஆனால், இன்றைக்கு மனிதனுடைய நிலைமை எப்படி ஆகி விட்டது. விலங்குகள் தன்னைவிட மேன்மையடைந்து விட்டன அல்லவா என்று கேட்கத் தொடங்கிவிட்டான். மனிதன் தன்னைப் புகழ்ந்து கொள்ள வேண்டும்பொழுது. 'நான் நாயைப்போல் நன்றியுள்ளவனாகவும், புறாவைப்போல் தூய்மையுள்ளவனாகவும், சிங்கத்தைப்போல் வலிமையுள்ளவனாகவும் இருக்கிறேன்' என்று சொல்லிக்கொள்கிறான்.

விலங்குகளுக்கு வியக்கத்தக்க புலன் உணர்வு அல்லது உள் துடிப்பு எப்பொழுதும் உண்டு. அந்த உணர்வு அவைகளுக்கு ஓர் அதிசயமான சக்தியை அளிக்கிறது. ஆனால் மனிதனுக்கு மனச்சான்று உணர்ச்சி இல்லை எனில், அவன் விலங்கினும் கேடானவனாகிவிடுகிறான். அப்பொழுது மிகையிலிருந்து அவனை எவராலும் காக்க முடியாது. அவனுடைய அழிவை நோக்கியே ஓடலாம். அபாயத்தையும் நாசத்தையும் நோக்கி விரையலாம். இதைக் கண்ட விலங்குகளும், 'என்ன இது!' என்று வியப்பும் அச்சமும் அடையலாம். விலங்குகளுக்குத் திறமை இருந்தால் மனிதனுக்கும் பாடம் கற்பிக்கத் தொடங்கியிருக்கலாம். அவைகளுக்குச் சமமாக நடந்துகொள்ள அவைகள் மனிதனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கலாம். நெஞ்சிலா மனிதன் விலங்குகளைப்போல் தற்காப்பு உள்ளுணர்வு அற்றவன்போல் ஆகிவிடுகிறான்; மன

[1] **மொழி பெயர்ப்பாளரின் அனுபவம்: பங்களூரில் அண்மையில் ஏற்பட்ட பூகம்பத்தை இரவில் மற்றவர்களால் உணரமுடியாத பொழுது அங்கு அறையில் இருந்த நாய் குரைத்தது ஒரு காரணமுமின்றி. அடுத்த வினாடி கதவுகள் தாமாக அடித்துக்கொண்டன படபடவென்று. அடுத்த நாள் செய்தித்தாளில் பூகம்பத்தை விளம்பரம் செய்திருந்தது வானிலை அறிக்கை.**

நோயால் பீடிக்கப்பட்டு அழிவை நோக்கி விரைந்தோடுகிறவஞ கிருன்.

தன்னுடைய கடைத்தேறுதலுக்குத் தேவையான புலன் உணர்வைப்பற்றி ஒரு கவலையும் கொள்ளாத மனிதனுக்குத் தூலத் தற்காப்புக் கோட்பாட்டின் (laws of physical self preservation) எல்லா நுண்மையான பகுதிகளேயும் அறிவியல் மூலமாகத் தெரிந்து கொள்வது என்ன இலாபம் அளிக்கும்? ஒருவன் உடல்நல 'விதி களுக்கு இணங்க ஊட்டத்தைப் பற்றி ஐயமறக் கற்றுணர்ந்தும், தன்னுடைய உடல் நல வாழ்வின் போக்கினேப் பின்பற்றும் வகை யில் எவ்வாறு பல வழிகளில் தன்னே அளக்கத் தெரிந்து கொள்ள வேண்டுமென அறிந்தும் குளிப்பதைப் பற்றியும் தசைகளேத் தேய்த்துப் பிசைந்து விடுதலேப்பற்றி உணர்ந்தும் மன்பதையைப் பற்றிய புலன் உணர்வை இழந்து, மாற்ருனுடைய உயிரை வாங்கி அல்லது தற்கொலேயே செய்து கொண்டானேயாஞல் அவனுடைய கவலே எல்லாம் எதற்குப் பயனுகும்? அவனுடைய நெஞ்சில் இன்று எதையும் உணராவிடில், பயன் என்ன? வெற்றிடம்—சூனியம் அவனே அதனிடம் இழுத்துச் சென்று மனச் சோர்வுற்ற நிலேயில் தள்ளிஞல் இவனுடைய நல்ல ஊட்டமளித்து நன்கு தூய்மைப் படுத்தப்பட்ட உடல் இவனுக்கு என்ன பயனளிக்கும்?

**நன்மைதான் வாழ்வு—தீமைதான் சாவு:** இந்தச் சொற் களில் காணப்படுவதுபோல் இரண்டுக்குமுள்ள வேற்றுமை மிக மிகத் தெளிவு.

நம்முடைய அறநெறி மனச்சான்று (Conscience) நம்முடைய விவேகத்தைப் போன்றது. நிறைவுபடுத்திக் கொள்ளவும் மேம் படுத்திக் கொள்ளவும் வல்லது. விலங்கின் புலன் உணர்வுகளுக் கும் மனிதனுடையதற்கும் உள்ள முக்கியமான அடிப்படை வேற்றுமை இதுவேயாகும்.

மனச்சான்றின் உணர்ச்சியின் திறமை கலே உணர்ச்சிபோல் நிறைவுபெறத் தக்கது. தீமையின் நுண்ணிய சாயலேயும் காணும் அளவு திறமை பெறும் வரைக்கும், நன்மையை உணர்ந்து அதன் முடிவுவரை இன்புறத் தெரியும் அளவுக்கு அந்த மனச்சான்று நிறைவு பெறத் தக்கது. எவன் ஒருவாறு உணர்கிருனே அவன் காப்பாற்றப் படுகிருன். எவன் குறைவாக உணர்கிருனே அவன் இன்னும் விழிப்புடையவஞக இருக்க வேண்டும். தீமையிலிருந்து நன்மையை வேறுபடுத்தி நமக்கு வழிகாட்டும் அந்தச் சிறப்பும் மதிப்பும் பொருந்திய உணர்ச்சியை இயன்ற அளவு அழியாமல் நிலேபெற்றிருக்க முயற்சி செய்ய வேண்டும். அறநெறி விதிகள் பற்றிய அறிவுடன் அன்பையும் சேர்த்து இவைகளே நமக்கு வழி

காட்டும் ஒளியாக வைத்துக்கொண்டு நம்முடைய மனச்சான்றினை அடிக்கடி சோதித்துப் பார்ப்பது நம்முடைய வாழ்வில் மிகவும் முக்கியமான செயல்களில் ஒன்றாகும். எவன் ஒருவனுக்கு இன்னும் உணர்வு கற்பிக்கப்படவில்லையோ அவனால் தன்னை மதிப்பிட முடியாது. ஒரு மருத்துவரை எடுத்துக்காட்டாகப் பார்ப்போம். ஒரு நோயின் எல்லாக் குணங்களை ஐயமற அவர் அறிந்திருக்க லாம். இருதய நோயில் இருதயத்துடிப்பு ஒலி எவ்வாறு பாதிக்கப் படுகிறது என்றும் அவர் அறிந்திருக்கலாம். ஆனால், அவருடைய செவிகள் ஒலியைக் கேட்கும் திறமை பெறாதிருந்தால், அவருடைய கரம் நாடியைத் தொட்டுணரும் சக்தியை இழந்திருந்தால், அவருடைய அறிவியலால் என்ன பயன்? நோய்களைப் புரிந்து கொள்ளும் திறமை அவருடைய புலன்களால் உணரப்படுகிறது. இந்தச் சக்தி இல்லையேல் நோயாளி பற்றி அவர் பெற்ற அறிவெல் லாம் வீண் தற்பெருமைக்கே என ஆகும். நம்முடைய மனச் சான்று பற்றி ஆய்ந்து புரிந்து கொள்வதும் அங்ஙனமே. நாம் குருடாயும் செவிடாயும் இருந்தால், நோயின் பல குணங்கள் நமக்குப் புலனாகாது போய்விடும். எதைக் கொண்டு நாம் தீர்ப் பளிப்பது, மதிப்பிடுவது என்றே நமக்குத் தெரியாது போய் விடும். பயனற்ற பொறுப்புகளை ஏற்றுக் கொண்டதின் சலிப்பு நம்மைத் தொடக்கத்திலிருந்து ஒடுக்கும்.

அதற்கு மாறாக உணர்வுதான் முழுநிறைவுக்கு நம்மை உந்தி ஊக்கமளிக்கிறது.

கிரேக்கக் கலைஞர்கள் தங்களுடைய கலையுணர்ச்சியின் துணைக் கொண்டு நேர்மையான உடலின் உருவம் எவ்வாறிருக்க வேண்டும் என்று கண்டறிய அவர்களிடம் மிகவும் அற்புதமான சக்திகள் இருந்துவந்தன. அதேபோல் நன்மை தீமைகளின் வேற்று மையைக் காணும் சிறந்த சக்தி பெற்றவர்கள் சிலர் இருந்திருக் கின்றனர். செயின்ட் தெரிசா (St. Teresa) என்ற கிருத்துவப் பெண் துறவியை உலக வாழ்வில் ஈடுபட்ட தீயவர்கள் நெருங்கினால் அப்பொழுது ஏதோ துர்நாற்றத்தை முகர்ந்தவர் போல் தாம் துன்புறுவதாகக் கூறுகிறார். சாதாரணமாக நாம் நுகர்வதுபோல அப்படிப் புலனால் அறியக்கூடிய துர்நாற்றம் அல்ல என்றும், ஆனால், அவர் மெய்யாகவே துன்புற்றார் என்றும், கற்பனை அல்ல என்றும் உறுதி கூறுகிறார். அவர் பட்ட துயர் அவரால் தாள முடியாத ஒரு தெய்விகத் துன்பம் என்கிறார்.

இதைவிட இன்னும் அக்கறை ஊட்டவல்லது தொடக்கப் பாதிரிமார்களைக் குறித்தது. அவர்கள் பாலை நிலத்தில் வாழ்ந்து வந்தனர். 'நாங்கள் எங்களுடைய சமய வட்டத் தலைவரின்[1]

[1] பிஷப்—Bishop.

காலடியில் வீற்றிருந்தோம்' என்று தொடங்குகிருர். மடத்துத் துறவிகளில் (Monks) ஒருவர் 'அவருடைய வணக்க முறை சார்ந்த உபதேசங்களைக் கேட்டுப்புகழ்ந்து கொண்டிருந்தோம். திடீரென்று அங்கு ஒரு திறந்த அபிநய நாட்டியக்காரி வந்து காட்சியளித்தாள்[1] அண்டியோக்கில் நகரப் பொது மேடையில் நடிக்கும் நடிகரில் மிகவும் அழகு வாய்ந்தவள். அவள் அணிகள் பல அணிந்தவள்; அவளுடைய பாதம் முத்தாலும் பொன்னாலும் மறைக்கப் பட்டிருந்தன. தலையும் தோள்களும் மறைக்காமல் இருந்தன. அவளுடன் பெரிய கூட்டம் பின்தொடர்ந்து வந்தது. அந்தக் கால மனிதர்கள் அவளைக் கண்ணால் பருகுவதில் சலிப்படையவே இல்லை. நாங்கள் முகர்ந்த காற்றில் அவளிடமிருந்து வந்த நறு மணம் கலந்திருந்தது. அவள் பிரிந்த பிறகு இதுவரை அவளையே கண்கொட்டாது உற்று நோக்கிக் கொண்டிருந்த எமது தந்தை யார் எங்களைப் பார்த்து, 'அவ்வளவு அழகைக் கண்டு நீங்கள் கவர்ச்சி அடையவில்லையா?' என்று வினவினர். நாங்கள் எல்லோரும் மௌனமாக இருந்தோம். 'நான் அவளைப் பார்ப் பதில் பெருமகிழ்ச்சி அடைந்தேன். ஏனென்றால், ஒரு நாள் அவள் நம்மை மதிப்பிடுவதற்கே ஆண்டவனால் நியமிக்கப் பட்டிருக் கிருள். அவள் ஒரு கெட்ட கறுப்படிக்கப்பட்ட புறுப்போல் எனக்குத் தோன்றுகிருள். ஆனால், இந்தப் புறு குளிப்பாட்டப் பெற்றுப் பனிபோல் வெண்ணிறம் பூண்டு, மோட்சவழி செல்லக் கடவாள்!' என்ருர் தலைவர். 'நடந்ததென்ன? இந்தப் பெண்டிர் திரும்பி வந்து தீக்கை—ஞானஸ்நானம்—அளிக்கக் கேட்டுக் கொண்டாள். 'என்னுடைய பெயர் பெலாஜியா (Pelagia) அல்லது அதுபோன்ற பெயரையே என் பெற்ருேர்கள் எனக்குச் சூட்டினர்கள். ஆனால், அண்டியோக் மக்கள் என்னை 'முத்து' என்றழைக்கிருர்கள். ஏனென்ருல் என்னுடைய பாவங்களை பல ஆபரணங்களால் மூடி மறைத்திருக்கிறேனே அதற்காக அப் பெயர்' என்ருள். இரண்டு நாள்களுக்குப்பிறகு அவளுடைய உடைமைகள் அனைத்தையும் ஏழைகளுக்கு அளித்துவிட்டு ரோமத்தாலான மேலங்கியை அணிந்து கொண்டாள். 'மாண்ட் ஒலிவெட்டோ' (Monte Oliveto) என்னுமிடத்தில் தனி அறையில் அவளுடைய இறுதி நாள் வரைக்கும் வாழ்ந்து வந்தாள்.[2]

நமது கனிவின்மை—அக உணர்ச்சியின்மை (Our Insensibility) —தீமைக்கு உணர்வு காட்டி வருந்துகிறோம். பிறரிடம் உள்ள நன் மையை ஒரு மாய வேகத்தில் கண்டு இன்ப உணர்ச்சி பெறுகிறோம். அந்த மென்மையான அக உணர்ச்சியிலிருந்து நாம் எவ்வளவு

[1] 'Mime' பண்டைக் கிரேக்கர் அல்லது ரோமர் வழக்கில் அபிநயக் கூத்து. [2] Montalembert, Les Moines d'Occident, Vol. i, P. 86.

தொலைவில் இருக்கிறோம்! நம்முடைய சமூகத்தில் ஒரு குற்றவாளியுடன் நீண்ட நாள் கூடி வாழ்ந்திருக்க முடியும். அவனை உயர்வாக மதித்தும், அவனுடைய கைகளைக் குலுக்கியும் இன்னும் பல செய்தும் அவனுடைய தீய செயல்களின் மதிப்பைக் குறைக்கும் வகையில் கண்டு பிடிக்கும் வரை நாம் அவனுடன் நல்ல மதிப்புடைய முறையில் நடந்து கொண்டுதானே வருகிறோம். உண்மை தெரிந்த பிறகு 'யார் அப்படி நினைத்திருப்பார்கள். அவர் எப்பொழுதும் நிரம்ப நல்லவராகத்தானே இருந்தார்?' என்று நாம் கூறுவோம்.

எனினும் குற்றவாளி ஒரு முறைகேட்டையும் காட்டாதிருக்க முடியுமா? தொடக்கத்திலிருந்தே அவன் போக்கை அறிவிக்கும் அவனுடைய கனிவின்மையைக் காட்டப்படாதிருந்திருக்குமா? நாம் எல்லோரும் அந்தச் சிறப்புடைய கிரேக்கச் சிற்பிகள்போல் அவ்வளவு அற்புதம் வாய்ந்திருந்திருக்க வேண்டும் என்று எவரும் கூறியிருக்க மாட்டார்கள். அல்லது அந்தத் துறவிகளைப்போல் உணர்ச்சி நுண்மை பெற்றவர்களாக இருந்திருக்க வேண்டும் என்றும் எவரும் கூறியிருக்க மாட்டார்கள். கலை அழகுள்ள பொருள்களைப் பார்த்துக் கொண்டே அவைகளின் அழகை உணராமலிருப்பதும் காட்டுமிராண்டித்தனம் என்றும், விகாரமானதாய் மட்டமான கோர உருவத்தையும் கண்டு அதை அழகென்று கொள்வதும், குறைபாடற்ற நாகரிகத்தை குறிக்கிறதென்றும், டிராம் வண்டிச்சக்கரங்களின் உரத்த கரகரப்பு ஒலியைக் கண்டு பிடிக்க முடியாதிருப்பதும், அல்லது, பெலினி[1] வாக்னர்[2] என்போருடைய ஒத்திசைவிலிருந்து சுருதி சேர்த்தாத இசைக் கருவிகளின் காதை துளைக்கும் கோர ஒலிகளை வேறுபடுத்தி உணராதிருத்தலும், எல்லாம் கண்டு நம்முடைய அகக்காட்சியின்மைக்கு நாம் வெட்கப்படுவோம்; மறைக்கப் பார்ப்போம். அறநெறி விஷயத்திலும் அவ்வளவு மழுங்கு தன்மை ஒரு பழக்கமாகப் போய் விட்டதென்று நமக்கு ஏன் புலனாவதில்லை? தீமை அறிகுறி ஏதுமில்லாமலேயே நன்னெறியார்களையும் குற்றவாளிகளையும் குழப்பிக்கொள்ள வல்லவர்கள் என்பதை நாம் உணர்கிறோம். எவ்வளவு முறை நியாயம் சார்ந்ததில் ஏற்படும் பிழைகள் குற்றம் செய்யாதவனுடைய குரல் நம்முடைய செவிகளில் ஒலிக்காமல் போனது ஏனோ? அவனுடைய விசாரணை எல்லோரும் அறியும் இடத்தில் நடந்த போதிலும் அவனைச் சிறையில் பல ஆண்டுகள் நலிவுற விட்டது ஏனோ? நன்மையைச் செல்வத்துடன் குழப்பிக் கொள்ள அது ஏன் அவ்வளவு கண்ணுக்குத் தெரியாமல் இருக்க வேண்டும்? தனவந்தர்களைப் பற்றிக் கிறித்துவ வேதம் இவ்வாறு கூறுகிறது: தனவந்தர்களே கேடுறுக! ஏனென்றால் உங்கள் வெகு

[1] Bellini, [2] Wagner

மதியைப் பெற்று விட்டனர்கள்.' இவ்வாறு வேத நூலில் பேசப்படும் தனவந்தர்கள் எவ்வாறு ஏழைகளின் அறநெறியை இன்னும் மேம் படுத்த முடியும். தங்களுடைய அறநெறியையோ தங்களுக்கு உடையவர்களின் வாழ்க்கையையோ பரிட்சை செய்து பார்க்காத வர்கள் எவ்வாறு சீர்திருத்த முடியும். தனவந்தர் அடிப்படையில் நல்லவர்கள் என்றும், ஏழைகள் அடிப்படையில் தீயவர்களென்றும் நம்பி விட்டார்களா என்ன?

இத்தகைய இருள் விவேகத்துறையிலும் இருப்பின் நம் கண் முன் தோன்றக்கூடிய பித்தத்தின் உருவத்தை நம்மால் கற்பனே செய்துகொள்ள முடியாது. அறநெறி உலகத்தில் பல குழப் பங்கள் இருக்கின்றன. வாழ்க்கையில் வேறு எந்தத்துறையிலும் இவ்வாறிருப்பதை நாம் கற்பனே செய்ய இயலாது. இன்று காண்பதைவிட இன்னும் சிறந்து தெளிவு படைத்த இளைஞர்கள் ஒரு காலத்தில் ஐரோப்பியப் போர் முனையில் கிருஸ்துமஸ் பண்டிகை கொண்டாடப்பட்டது என்று கேள்விப்பட்டார் களானால், அவர்கள் போரின் தொடக்கம் என்ன என்பதையே புரிந்து கொள்வார்கள். இம்மாதிரி நிலையில் தன்னால் இந்நிலை யைக் கனவிலும் எண்ணமுடியாத டேவிட் (David) என்பவர் தன்னுடைய எதிரிகள் தன்னைப் பழித்த மொழிகளைப் பொருத்த மானவை என ஏற்றுக் கொண்டிருப்பார் எனலாம். எதிரிகள் என்ன கூறினார்கள்? 'இப்பொழுது உங்கள் இறைவன் எங்கே?' 'எங்கள் இறைவனை இழந்துவிட்டோம்' என்பது பொருத்தமான ஒப்பாரியாகும். ஆனால் அவருடைய திருவிழாவை விருப்பு வெறுப் பற்ற நிலையில்—அசட்டு நிலையில் கொண்டாடுவதென்பது அவனை இழந்ததை உணராத நிலையைக் குறிக்கிறது. எவ்வளவு காலத் துக்கு முன் ஆத்மா இறந்துபட்டது? சாவின்மேல் கட்டத் தொடங்கியது. எப்பொழுது? இந்த மிருகத்தனமான படுகொலை என்ன கொடிய பைத்தியக்கார இடைக்காட்சி! இந்தப் படு கொலையின்மேல் காத்தருளியவன் பெயரால் சமாதானம் எனும் மரம் நாட்டப்பட்டது!

செயின்ட் தெரிசாவின் தீமைபற்றிய மென்மையான உணர்ச் சிக்கும் நமக்கும் எவ்வளவு தொலைவு! அந்தப் பாவம் செய்த பெண்ணை, 'இறைவனுடைய மனிதன் பழுதுபட்ட இறக்கைகள் பெற்ற புழு வெண்ணிறமாக மாறுவதைத் தன் தெய்விகக் கண் கொண்டு பார்க்க முடிந்தது. அவனெங்கே நாமெங்கே! இருவர்க் கும் இடையில் உள்ள வேற்றுமை ஒரு குடியானவனுக்கும் ஒரு கலைஞனுக்கும் உள்ள வேற்றுமையல்ல. ஆனால், ஒரு சவத்துக்கும் ஓர் உயிருள்ள மனிதனுக்கும் இடையில் காணப்படும் வேற்றுமை யாகும். நாம் இறந்துபட்டோம் என்பது தெளிவு. எனினும், நாம் இறந்துவிட்டோம் என்பதை நாம் அறிந்தோமில்லை.

நம்முடைய வாழ்க்கையின் இரகசியத்தை இங்குத் தேட வேண்டுமேயொழிய உடல் நலத்திலன்று. நம்முடைய உடலைவிட இன்னும் அதிகமாக மாசு படக்கூடியது ஒன்று இருக்கிறது. நம் உடல் வாழ்வைவிட மிக மென்மையான வாழ்வு, இருளின் அழிவு தலைமேல் தொங்குகிறது. இதுவே வாழ்க்கையின் இரகசியம்.

இன்னும் சீரான உலகத்துக்கு இட்டுச் செல்லும் விளக்கை மனிதன் இழந்து விட்டானானால் அவன் படைக்கப்பட்ட எல்லா விலங்குகளையும் விடத் தாழ்ந்த பாதாளத்தில் வீழ்ந்து விடுகிறான்.

ஆதலால் அன்புடையவன் இந்த வாழ்வின் கிணற்று ஊற்று களைப்பற்றித் தன்னுடைய முழுக் கவலையும் காட்டுவான். அன்று பிறந்த குழந்தையின் நுரையீரல் எவ்வளவு மென்மையாக இருக் கிறது! இயற்கைக்கு விரோதமான தாய் ஒருத்தி எவ்வளவு எளிதில் குழந்தைக்குக் காற்று இல்லாமல் மூச்சுத்திணறடிக்கச் செய்து விடமுடியும்! எனினும் இது என்ன எளிதில் சாதிக்கப் பட்ட செயல்; வாழ்வையே அழித்துவிடும் செயல். இதைவிட இன்னும் எவ்வளவோ எளிய முறையிலும் கொலைகாரத் தொழி லிலும் நம்முடைய ஆத்மாவையே கொன்றுவிடுகிறோம்.

உடல் இறந்து விட்டதா என்று கண்டுபிடிப்பதுபோல் ஆத் மாவும் இறந்து பட்டதா என்று அக உணர்ச்சி இன்மையைக் கொண்டு எளிதில் கண்டுபிடித்து விடலாம், ஒரு சவத்தின்மேல் பழுக்கக் காய்ச்சின இரும்பை வைப்பது வீண். அதனிடத்தில் துலங்கல் இல்லை (response).

எவனொருவன் வாழ்கிறானோ அவன் பழுக்கக் காய்ச்சின இரும்பை விட இன்னும் மிகக் குறைந்த தூண்டுதலுக்கும் எதிர் வினை ஆற்றல் பெற்றவனாக இருப்பதுடன் தன்னையே இன்னும் மேம்படுத்திக்கொள்ள வல்லவனாகிறான்—இதுவே வாழ்க்கை.

ஆத்மாக்கள் உணர்ந்தால் போதும். அப்படியானால் தீமைக்கு நடுவில் அவை எவ்வாறு வாழ முடியும்? உம்முடைய சாளரத்தின் நேர் கீழே பிறர் குப்பைகூளங்களைக் குவித்துக்கொண்டே வந்து காற்று முழுதுமே மாசடைந்து விட்டது என்றளவுக்குக் குவிந்து விட்டால், நமக்குத் துன்பம் விளைவிக்கும் இந்தச் செயலைப் பொறுத்துக் கொண்டு அதை நீக்க வேண்டும் என்று எதிர்ப்புக் காட்டாமல் இருந்துகொண்டிருக்க முடியுமா? மேலும், நமக்கு ஒரு குழந்தை இருந்தால் நம்முடைய எதிர்ப்பு இன்னும் தீவிரமாக இருக்கும். நாமே நம் கரங்களால் குப்பையை நீக்க முனைந்து விடுவோம்—ஏன் குழந்தையின் நலனுக்காக. ஆனால், தாயும்

சேயும் இறந்து கிடந்தார்களானால் அவர்கள் அந்தக் கொள்ளை நோய் விளைவிக்கக்கூடிய காற்றை உணரமாட்டார்கள்.

வாழ்வின் சிறப்பியல் என்ன? சூழ்நிலையிலும் ஆத்மாவிலும் காணப்படும் ஆரோக்கியத்துக்குத் தீங்கு விளைவிப்பதை அறவே ஒழிப்பதாகும். இயேசுநாதர் 'உலகத்தின் பாபம் அனைத்தையும் எடுத்துக் கொள்ளும் இளமறி' என்று அழைக்கப்பட்டார். உபதேசம் செய்யும் ஆசான் அல்லன்; ஆனால் தூய்மை ஆக்குபவன். உணர்ச்சியிலிருந்து பிறக்கும் அறநெறி ஒழுக்கம் இதுவேயாகும். உலகத்தின் மாசினைக் களைதல், வாழ்க்கைக்குக் குறுக்குள்ள இடர்களை விலக்கல் சாக்காட்டிருளிலிந்து உள்ளத்தை விடுவித்தல்.

ஒவ்வொரு மனிதனும் தான் பெற்ற நற்பண்புகளுக்குக்கெல்லாம் தன் மனச்சான்றே பொறுப்பு என்று உணர்கிறான். அவைகள் இசையை இன்புற்றது போலவோ, அல்லது புதிதாகக் கண்டுபிடித்தது போலவோ அன்று. வாழ்க்கையில் எந்த அளவு காத்து அதை நடத்தி வைத்திருக்கிறான். என்று கூறத் திறமை பெற்றிருக்கவேண்டும்.

முன்னேற்றம்போல் இந்தத் தூய்மைப்படுத்தும் நற்பண்புகளும் வரம்பு காணாதவை.

இனிமேல் அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டவர்களுக்கு 'எல்லாப் பாசங்களையும் விட்டு என்னைப் பின் தொடர்க' என்று இயேசுநாதர் அறிவுரை கூறினார்.

ஏனெனில் மனிதன் தன்னுடைய சொந்த வலிமையை மற்ற சக்திகளால் இன்னும் அதிகமாக வலுவுபடுத்திக்கொள்ளலாம். அந்தச் சக்திகள் எல்லையற்ற பரம்பொருளை நாடிச்செல்லத் தூண்டும். உறங்குபவன் முன் கண்ணுக்குப்புலனாகாத ஏணி இருக்கிறது. அதன்மேல் ஏறுகின்ற தேவதூதர்கள் அவனை மோட்சத்துக்கு வர அழைக்கின்றார்கள். அதாவது இயற்கை கடந்த வாழ்வுக்கு அழைக்கின்றனர். ஆம்! மனிதனை விட உயர்ந்த நிலை அடைவதற்கு நம்பிக்கை இல்லாதவனுக்கு இது ஒரு கனவு. ஆனால் நம்பிக்கையுள்ளவனுக்கு இது பெறக்கூடிய குறிக்கோள் ஆகும்.

ஃப்ரெட்ரிக் நீயிட்ஷே (Friedirich Nietszche) என்பவருக்கு மீமனிதர் (superman) என்பது நடைமுறைப் பயன் அற்ற ஒரு குறிக்கோளாகத் தோன்றிற்று. பரிணாமக் கோட்பாடுகள் அவரை ஊக்குவித்தன. அதே பரிணாமக் கொள்கைகளால் பரிசோதிக்கப்பட்ட பிறகும் அக் கருத்து புதுமையாகவும் தவறானதாகவும் இருப்பதாக எண்ணினார். மனிதத்தின் தீங்குகளை அகற்ற அவருடைய

கருத்துகள் ஒருதவியையும் அளிக்கவில்லை. அதற்கு மாருக அது மனிதனை உலகத்துடன் சங்கிலியால் கட்டப்பட்டது போலும் அங்கே கிடந்து தன் முயற்சியாலேயே தன்னைப் படைப்பித்துக் கொள்ளும் சக்தியால் தன்னிலும் மேம்பட்டவனுக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தார். இவ்வாறு செய்வதில் அவன் வழிமாறித் தற்பெருமையும், கொடுமையும், குற்றமும் பெறச் செய்துகொள்கிருன்.

ஆனுல் எண்ணற்ற துறவிகள் தங்களுடைய நம்பிக்கைக்கு ஏற்ப உணர்ந்து நடந்து கொண்டிருக்கிருர்கள். 'நான் வாழ் கிறேன்; எனினும் நானல்ல. ஆனுல், இயேசுநாதர் என்னுள் வாழ் கிருர்.'

நமது கவி கூறுவதுபோல் மனிதன் இனிமேல் ஆகப்போகும் தெய்விக வண்ணத்துப் பூச்சியின் கூட்டுப் புழுவடிவம் என்பது உண்மையானுல் அவன் பின்பற்றவேண்டிய வழியைப்பற்றி ஐயமே கிடையாது. 'அவன் மேலே ஏறவேண்டும். இல்லையேல் சாக வேண்டும்.'

ஆதலால், உடல் நல விதிகளுக்கும் உளநல விதிகளுக்கும் கீழ்ப் படிந்து நடப்பதே முழு வாழ்வு ஆகிவிடாது. ஆனுல், வாழ் விளுல்தான் தன்னுடைய சூழ்நிலையிலிருந்து தன்னைப் புனிதம் ஆக்கிக்கொள்வதற்கும் வீடுபேற்றை அடைவதற்கும் தேவைப் படுவதை எடுத்துக் கொள்ள முடியும். அந்த வாழ்க்கை இயற் கையைக் கடந்தது. மீ இயற்கை (supernatural) என்ன வேண்டு மென்று கேட்கிறது? அது தன்னை மாற்றி அமைத்துக்கொள்ள அன்பையும் தெய்வ ஒளியையும் கேட்கிறது.

ஓர் உண்மை பற்றிய கற்பனை வெறி (ecstasy) அல்ல. துறவி களைச் சிறப்புடையவர்களாக்குவது, உயர் பண்புக்கும் இழி பண்புக்கும் இடையே நடைபெறும் மெய்யான வெற்றிகரமான போராகும்.

அறநெறி ஒழுக்கமும் மதமும்—மதமாற்றம் போன்ற நெருக் கடி ஏற்படும் பொழுது ஓர் ஆழ்ந்த மனப்பதிவு ஏற்படுகிறதென் பது நன்கு தெரிந்த விஷயம். இந்த இயல் நிகழ்ச்சி நடைபெறும் பொழுது 'உள்ளார்ந்த ஒளி' ஒன்று தோன்றுகிறது ; ஓர் ஒழுங்கு பிறக்கிறது. இது திடீரென்று தானே அமைத்துக் கொள்கிறது. இதுவரை தனக்குத் தெரியாதிருந்தது. இப்பொழுது புலப்படு கிறது. நன்மை தீமைக்கிடையே உள்ள வேற்றுமை தெரிய வரு கிறது. ஆதலால் தன்னையே வெளிக்காட்டிக் கொள்கிறது. மதம் மாற்றப்பட்டவன் அந்த வெளிப்பாட்டின் பொழுது தெய்வத்

தைப் பற்றியோ அல்லது சமயக் கோட்பாட்டைப் பற்றியோ அல்லது சமயச் சடங்கு பற்றியோ சிறிதேனும் கவலைப்படுவ தில்லை என்பது உறுதி. அவர்கள் உள்ளத்தில் திடீரென்ற ஓர் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய உடல் வாழ்வையும் உளவாழ்வையும் மறந்தவர்கள் போல் ஆகிவிடுகின்றனர். தங்களைப்பற்றி ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறார்கள். அவர்க ளுடைய மனத்தில் கொண்டுள்ள ஒன்றையே மையமாக வைத்து ஒருமுனைப்புடன் இருக்கின்றனர். அது ஏதோ ஒரு வியப்பூட்டும் சோதியால் ஒளிபெறப்படுவதுபோல் தோன்றுகிறது. மத மாற்றம் அடைவோர் பெரும்பாலோர் குரல் இதுவே, 'நான் ஒரு பாவி!' இதுவரை தன்னை மாசுபடுத்திக் கொண்டிருந்த இருள் அனைத்தும் வீழ்ந்துவிட்டதுபோல், மறைந்து விட்டதுபோல் காணப்படுகிறது. அத்துடன் அவனை இதுவரை துரு ஏறச் செய்து கொண்டிருந்ததும், பலவீனப் படுத்திக்கொண்டிருந்ததும், மூச்சுத்திணற அடித்துக் கொண்டிருந்ததும் நழுவி விழுந்தன போல் காண்கின்றன. அவை தன்னை விட்டு விலகினபொழுது கொடியதாகவும், தெளிவற்றதாகவும், அருவருப்பான அச்சந்தரக் கூடியதாகவும் இருந்தனவாக உணர்கிறான். இதுதான் அவனைத் துடிக்கச் செய்கிறது. அவனை அழச் செய்கிறது. தன்னைப் புரிந்து கொள்ள, ஆறுதல் கூற, உதவிபுரிய ஒருவரைத் தேடச் செய்ய வைப்பது இதனாலேயே. அன்று பிறந்த குழந்தைக்கு எங்ஙனம் அரவணைப்பு தேவைப்படுகிறதோ அதேபோல் மத மாற்றம் அடைகிறவனுக்கும் தேவைப்படுகிறது. புதிய வாழ்வில் பிறந்த வர்களைப்போல் அவர்கள் அழுது துடிக்கிறார்கள். மனித சம்பந்த மான எந்தத் தன்மானமும் தடுப்பதில்லை ; எந்தக் கட்டுப்பாடும் தடுப்பதில்லை. அவர்களுடைய வாழ்வையே அவர்கள் உணர் கிறார்கள். உலகத்திலுள்ள தனபோகங்கள் அனைத்தையும்விட அவர்களுடைய வாழ்வின் மதிப்பே உயர்வாகக் காண்கின்றனர். பெரிய விபத்திலிருந்து தப்பித்துக் கொண்டவர்கள்போல் ஒரு களிவெறி அடைகின்றனர். தங்களை அடக்கி ஒடுக்கும் தீமையி லிருந்து விடுதலை பெறுவதே அவர்களுடைய தலையாய கவலை யாகும். அடுத்த அடி எடுத்து வைப்பதற்கு முன் தங்களுக்குள் தீமை ஆழ்ந்து வேரூன்றிக் கிடந்த காலத்தை மறுபடியும் சிந்திக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அதில் ஒன்றும் இப்பொழுது இல்லை என்பதைக் கண்முன் உணர்கின்றனர்.

உழைத்து உழைத்து மூச்சுத் திணறிப் போகும் மனிதன் போல் கடலிலிருந்து தப்பிக் கரையேறிப் பரந்த விபத்து நிறைந்த பாழ் நிலத்தை நோக்கி நின்றிருப்பது போல் என் உள்ளமும் சக்தியிழந்து, அச்சத்தால் உழன்று

இதுவரை எவரும் தாண்டாததும் வாழப் பெறாததுமான
ஜலசந்தியைக் கண்டேன்.[1]

புனித ஆத்மாவின் மாபெரும் செல்வ மெல்லாவற்றையும் இந்தத் தீமை அடிமையாக்கி விட்டிருந்தது. அந்த ஆத்மா இறுதியில் விடுதலை பெற்றது. புத்துணர்ச்சி பெற்றதுபோல் அவர்களின் கண்முன் பேரண்டத்தையே மறுபடியும் உயிர்ப்பிக்கச் செய்தது போலிருந்தது.

'நான் கண்டது பேரண்டத்தையே சோதிமயம்
ஆக்கும் ஒரு புன்முறுவல் போலிருந்தது.'[2]

நான் கேள்விப்பட்ட மத மாற்றங்களில் மிகவும் சிறந்தது ஒன்று பின்வருமாறு: சொற்பொழிவுத் திறத்தில் மிகவும் சிறப்படைந்த ஒரு பாதிரியார் ஒரு மாதா கோவிலில் நிறைந்த கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார். அங்குக் குழுமியிருந்தவர்கள் ஆழ்ந்த கவனத்துடனும் பாராட்டுதலுடனும் அவர் உரையாற்றலைக் கேட்டுக் கொண்டிருந்தனர். திடீரென்று ஒரு தேம்பும் குரல் அவருடைய உரையாற்றலின் இடையில் கேட்கப்பட்டது. கூட்டத்திலிருந்த ஒருவன் பலிபீடத்தின் நேர் தன் இரு கரங்களையும் நீட்டிக்கொண்டு உரக்கக் கத்தினான். 'நான் ஒரு பெரும் பாவி!' வழக்கம்போல் இந்தச் சந்தர்ப்பத்திலும் பாதிரியார் அவனிடம் நெருங்கினார். அந்த ஆன்மாவின் உள் மொழிதல் அனைத்தையும் ஏற்றார். அந்த ஆன்மா தன்னைப் போர்த்திக் கொண்டிருந்த தீமை அனைத்தையும் உதறி எறிந்து கொண்டிருப்பதைப் பாதிரியார் ஏற்றார். இவனுடைய இதயத்தைத் தான் உரையாற்றி வந்ததில் எப்பகுதி தொட்டது என்று அறியும் நோக்கத்தால், 'என்னுடைய எந்தப் பேச்சு உன்னைத் திரும்ப வைத்தது?' என்று அவனை வினவினார். அங்கு மனம் மாறின அவன், 'நீங்கள் பேசின பேச்சில் எம்மொழியையும் நான் கேட்கவில்லை. இந்த மாதா கோவிலுக்குள் நுழையும் பொழுது ஏன் நுழைந்தேன் என்று எனக்கே தெரியாது. அத் தருணத்தில் என் நேர் உங்கள் விரல் தீவிரமாகச் சுட்டிக் காட்டப்படுவதையே நான் உணர்ந்தேன். ஆம். அது உண்மையே. நான் பாவி என்று கத்தினேன். என்மேல் போர்த்தப் பட்டிருந்த ஒரு ஈய மேற் கவசம் என் தோள்களிலிருந்து நழுவி விழுந்ததாக நான் உணர்ந்தேன். என் இதயத்திலிருந்து என்னால் அடக்க முடியாத கண்ணீர் பெருக்கெடுத்தது' என்றான் அவன். இவ்வாறு இந்த மாற்றத்தில் எந்த விவேகப் பகுதியும் பங்கெடுக்கப்படவில்லை. இது ஒரு 'மாற்றமும்' அல்ல;

[1] Carey's translation of Dante, Inferno, Canto 1.

[2] Dante, Paradiso, Canto XXVII.

'புது அறிவும்' அல்ல. இவ்வாறு நடந்து கொள்வதற்கு இந்த இரண்டும் காரணமல்ல. இங்கு நடைபெற்றது தானாக நடைபெற்ற ஒரு மனச்சான்றின் இயல் நிகழ்ச்சியே ஆகும். இந்த மனச்சான்றும் நனவிலி நிலையில் (unconscious) தன்னை ஆயத்தமாக்கிக் கொண்டு வந்த பிறகு இருளிலிருந்து ஒளியைப் பிரித்தெடுத்தது. புதுமை மனிதனைப் படைக்கத் தூண்டியிருக்கிறது.

மனிதனால் சுவைக்கக் கூடிய எல்லா இன்பங்களிலும் மிக உயர்ந்ததைப் பெறத் தீமை என்பது பெரும் முட்டுக்கட்டை என்பதை மற்றவர்களைவிட மதமாற்றம் (convert) பெற்றவன் மிகத் தெளிவாக உணர்கிறான். அவன் பரிசுத்தமாக்கப்பட்டதுடன் அவனுடைய பரிசுத்தம் அவனையே உருமாற்றி விட்டிருக்கிறது. கல்லிலும் மாசிலும் படிந்து கிடந்த வைரம் தன்னைச் சுற்றிலும் கிடந்த பொருள்களிலிருந்து நீக்கப்பட்டு வெளியே கொணரப்பட்டு ஒளி பெற வாய்ப்பு அளித்ததுபோல்—அது தூய்மைப்படுத்தப்பட்ட மாபெரும் கல் மட்டுமல்ல. ஏனெனில், அதனை மாற்றுவது சூரிய கிரணங்கள். இதுவரை எங்கோ கிடந்த கல்லின்மேல் ஒளிக்கிரணம் பட இயலாமல் இருந்தது. இப்பொழுது கிரணம் பட்டுப் பிரதிபலித்து அதற்குச் சோதியை அளித்து விடுகிறது. தானாக ஒளிவிட்டுச் சொலிக்கும் வைரக் கல்லாக ஆக்கிவிடுகிறது. இதுவரை எதிர்பாராத ஒரு சோதி மயம் இதற்கு இயற்கையாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதற்கும், இவ் வைரத்தைச் சுற்றிலுமிருந்த மாசுக்கோ அல்லது இக் கல்லின் இயல்பான தன்மைக்கோ ஒரு சம்பந்தமும் இல்லை. இதைச் சுற்றிலு மிருந்த மாசு இக் கல்லின் மகிமையை வேறுபடுத்திக் காட்டியதுடன் இதனுடைய இயல்பான பண்பினை வெளிக்காட்டாத வகையில் சூரிய கிரணங்களை இதன்மேல் படாமல் தடுத்து விட்டிருந்தது.

எல்லா பக்தர்களும் தீமை என்பது நம்மை இவ்வுலகக் கல்லறைக்கு இழுத்துச் செல்லும் ஒரு சங்கிலி என்பதை உணர்வார்கள். நம்முள் இருக்கும் தெய்விகசாரத்துடன் நேர் தொடர்பு கொண்டு நாம் இன்னும் விரிவடையாதிருக்கும் வகையில் அன்புக்கு எதிரான மென்னய உணர்வுகள் பல முட்டுக்கட்டைகளாகின்றன. நம்முடைய ஒளி வீசலும்—ஒரு உலோகத்தின் ஒளி வீசல் வேறு உலோகக் கலப்பு சிறிதளவாயிருந்தாலும் எவ்வாறு மங்கலாக்கி விடுகிறதோ அதே போல் நாம் உயர்ந்தோர் குழுவிலிருந்து தூக்கி எறியப்படுவதற்கு உதவி புரிந்து விடுகிறது, நம் சோதரனை ஆட்கொள்வதற்கு மாறாகப் பகை நோக்குடன் காண்பதும், அவனைப் பற்றி நம் நெஞ்சம் கல்லாவதும், இறுதியில் சினத்தையும் மனக்கசப்பையும் தோற்றுவிக்கும் பொறாமையும் இவை அனைத்தும் நம் சுயச் சுடரை மாசுபடுத்துவனவாகும்.

உடல் தசையின் தொழில்கள் வெளிப்படை. அவை— பொறுமை, மாறுபாடு அல்லது ஒவ்வாமை, உயர்வூக்கம், சினம், சச்சரவு, குற்றம், முரண் சமயக்கருத்து, மனக்கசப்பு, பில்லி சூன்யம், கொலை முதலியவையாகும். துன்புறும் ஓர் இருதயத் துடன் ஒருவன் பலிபீடத்தை நெருங்கிப் பயனில்லை. அக் குற்றம் எவ்வளவு சிறிதாயினும் சரி. கருணைக்கு எதிரான எவ்வளவு கெடுக்கின்ற தூண்டுதலானாலும் எவ்வளவு சிறியதானாலும் சரி. அதனாற் பயனில்லை. அம்பால் தாக்கப்பட்ட முயல் ஒன்று உடலில் பாய்ந்த அம்புடன் தன் குழிக்கு வேகமாக ஓடிக்கொண் டிருக்கும். முயல் தன்னைக் காத்துக்கொள்ள அவ்வாறு ஓடுவதில்லை. தன் குழியில் போய்ச் சாகத்தான் அவ்வாறு ஓடிக் கொண்டிருக் கிறது. 'அதே போல் நீயும் பலி பீடத்தின் முன் உன் காணிக் கையை அளிக்க வந்திருந்தால் உன்னுடைய சோதரன் உனக்குத் தீங்கு விளைவித்ததை இன்னும் உன் நெஞ்சில் நினைவாகப் பதிந்து கிடந்தால் வந்த வழி திரும்புக! முதலில் உன் சோதரனுடன் அமைதி கொண்டு அவனிடம் உனக்கு ஒரு பொல்லாங்கும் இல்லை என்று உணர்ந்த பிறகு வந்து உன் காணிக்கையைச் செலுத்து வாயாக' என்று கூறுகிறது வேத நூல்.

எவன் ஒருவன் ஒரு குற்றத்தை மன்னித்து விடுகிறானே அவன் தர்க்க ரீதியான ஒரு நியாயத்தை வழங்கி விடுவதில்லை அல்லது மன்னிக்கப்படுபவனையும் அனுகூலம் அடையச் செய்வதும் இல்லை. ஆதலால் குற்றம் மன்னிப்புக்குரியதா அல்லவா என்று சிந்தனை செய்வது காலத்தை வீண் போக்குவதாகும். குற்றம் செய்தவன் அக்குற்றச் சாட்டினின்றும் மன்னிப்புப் பெற வேண்டுமா? வேண் டாமா? என்று கருதுவதும் வீண் காலங்கழிப்பதாகும். நாம் மன்னிக்க வேண்டும் நியாய உணர்ச்சியாலன்று. குற்றம் செய்த வனுடைய நன்மைக்கென்றன்று. ஆனால் நமக்காகவே நாம் மன்னிக்க வேண்டும். எவன் ஒருவன் மன்னிக்கிறானே அவன் தன் னிடமுள்ள பொறுமையையும், மனக் கசப்பையும் களைந்து விடு கிறான். இதுவரை தன் உள்ளத்தை அடக்கி ஒடுக்கி மேல் நோக்கி எழாது தடுத்து வந்ததனைத்தையும் களைந்து விடுகிறான். இதற் காகத்தான் நாம் மன்னிக்க வேண்டும். நம்மைச் சுதந்திரத்துடன் இயங்காமல் தடுக்கும் தளையை, நம் உயர்வைக் கெடுக்கும் பந் தத்தை உடைத்தெறிய வேண்டும். ஒரு பலூனுடைய இரும்புக் கம் பியை அறுத்துவிடும் பொழுது இந்தச் செயல் பூமிக்கு நல்லதா, அல்லது அந்தக் கம்பி தகுதி பெற்றதா என்றெல்லாம் கருதிப் பார்ப்பதில்லை. பலூன் மேலே இனிக் கிளம்ப வேண்டும். அதற் காகவே நாம் கட்டும் கம்பியை அறுத்து விடுகிறோம். பலூனுக்குள் இருப்பவன், மேலும் மேலே கிளம்புகிறவன் தரையிலிருந்து காண முடியாத ஓர் அற்புதக் காட்சியை மேலிருந்து கண்டு களிக்கிறான்.

கம்பிக்கு விளையும் தியாகத்தையும் இந்த மேலெழுந்து காணும் காட்சியின் இலாபத்தையும் சீர்தூக்கி மையத்தைக் கண்டு நடக்க வேண்டும் என்று எவராவது கருதுவார்களா?

மன்னித்துவிடு அப்பொழுது உன்னுடைய எழுச்சியின் அடையாளமாகப் பேரண்ட மன்னிப்பெல்லாம் உன்னை நாடி வருவதை நீ உணர்வாய் (Haec est vera fraternitas, quae vicit mundi crimina).

**குழந்தைகளிடம் மதம் சார்ந்த மென்மைய உணர்ச்சி.**—குழந்தைகளிடம் தானாகத் தோன்றும் மதம் சார்ந்த மென்மை உணர்ச்சி[1] பற்றியும் மனச்சான்றின் நெருக்கடி நிலைமையைப் பற்றியும் மிகக் குறைவான ஆராய்ச்சிகளே நடத்தப்பட்டிருக்கின்றன. அண்மையில் இங்கிலாந்தில் அற்புதமான மதம் சார்ந்த ஓர் இயக்கம் நடந்தது. அப்பொழுது குழந்தைகளிடம் மிகவும் வியக்கத்தக்க மதம் சார்ந்த அனுபவங்கள் நடைபெற்றன. சின்ன நெல்லி (Little Nelly) என்ற ஐந்தாண்டுக் குழந்தை தன் இறக்கும் தருவாயில் யூகாரிஸ்ட் (Eucharist) என்ற இயேசு நாதரின் இறுதி விருந்துச் சடங்கைத் தனக்கும் அளிக்க மன்றாடிக் கேட்டுக் கொண்டது. இதுவரை குழந்தைகளுக்கு அச் சடங்கு வழங்குவது மரபில் இல்லை. எனினும் இந்தச் சம்பவத்துக்குப் பிறகு பத்தாம் போப் ஆண்டவர் பயஸ் (Pius X) என்பவர் குழந்தைகளுக்கும் அதை வழங்க அனுமதி அளித்தார். வயதைப்பற்றிக் கவலைப்படாமல் அளிக்கலாம் என்று அவர் அருளிவிட்டார். இன்று ஆராயப்படும் ஆய்வுகளில் இது முக்கியமாகக் கவனிக்கப்படாத விஷயமாக இருக்கிறது.

இத்தகைய ஒரு தனி ஆராய்ச்சி உளஇயல் மாநாடு ஒன்றில் எடுத்துக் கொள்ளப்பட்டது. அந்த மாநாடு 1911 ஆம் ஆண்டு பிரஸில்ஸ் (ப்ரக்ஸலிஸ் Bruxells)ல் நடந்தது.[2] ஆராய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட குழந்தை எவ்விதமான மதம் சார்ந்த பாடமும் கற்பிக்கப்படவில்லை. ஒரு நாள் எக் காரணமுமின்றி திடீரென்று அவன் அழத் தொடங்கினான். 'ஏன் அழுகிறாய்' என்று தாயார் கேட்டபொழுது, ஏனென்றால் இரண்டு மாதங்களுக்கு முன் ஒரு நாய்க்குட்டி எப்படித் துன்புறுத்தப்பட்டது என்பது என்னுடைய நினைவுக்கு வந்தது. இந்தச் சமயத்தில் நான் அதை உணருகிறேன்' என்றான் குழந்தை. ஒன்றரை வருஷங்களுக்குப் பிறகு மற்றொரு சம்பவம் நடைபெற்றது. அவன்

[1] The Religious Sentiment in children.

[2] Premier Congre's International de Pedologie, Bruxelles. Quelques observations sur le developpement de l' emotion morale et religieuse chez un enfant, Ghidionescu, Doct en Philosophie, Bucharest.

மாலை நிலவைத் தன் சாளரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந் தவன் திடீரென்று அழத் தொடங்கினுன். 'என்னை வையாதே' என்று படபடப்புடன் குழந்தை சொன்னுன். 'நிலவைப் பார்த் துக் கொண்டிருக்கும் பொழுது எவ்வளவு முறை உன்னை நான் புண்படுத்தியிருக்கிறேன் என்று நான் உணர்ந்தேன். நான் இறைவனை அவமதித்துவிட்டதாகப் புரிந்து கொண்டிருக்கிறேன்' என்ருன் குழந்தை.

அறநெறி சார்ந்த உணர்ச்சியின் தொடர்ந்து நிகழ்ந்த இயல் நிகழ்ச்சியின் பல பகுதிகளை வியக்கத்தகும் ஆய்வு காட்டுகிறது. முதலது உணர்ச்சி ததும்பும் காட்சியின் வெளிப்படுதல். தன்னைத் துன்புறுத்திய குழந்தையை இரண்டு மாதங்களுக்குப் பிறகு அழ வைத்த உணர்ச்சி. துன்புறுத்தப் பட்ட நாய்க்குட்டியின் இன்னல் களை அவனும் உணர்ந்தான். இவனுடைய உள்ளத்தில் இம் மனச் சான்று நிகழ்ச்சி தொடங்கி வைத்த பிறகு ஒழுங்கு நிலைநாட்டப் பெறுகிறது. குழந்தை நன்மை தீமைச் செயல்களின் வேற்றுமை களை உணர்ந்து கொள்கிருன். தன்னுடைய பெற்ருேரின் வெறுப் பைப் பெற்றுவிட்டதை உணர்கிருன். இந்த வெறுப்பு—மனக் கசப்பு அவ்வளவு பெரிதல்ல. அந்தச் சமயத்தில் அவன் அதைப் பெரிதாக நினைக்காத அளவு சிறிதாகவே இருந்தது. ஆனல் இந்தச் சமயத்தில் தன்னுள்ளிருந்து மிகச் சிறிதான மாசுகளைக் களைந்தெறிந்து கொண்டிருக்கும்பொழுது அவன் இறைவனை உணர் கிருன். 'இறைவனை நான் அவமதித்து விட்டேனே என்று உணர் கிறேன்' என்று கூறினுன். அவன் தாய்தந்தையரை அவமதிக்க வில்லை என்பதை அவன் அறிவான். இறைவனைப்பற்றி இதுவரை அவனிடம் எவரும் கூறியதில்லை. அல்லது அவனுடைய மனச் சான்றைச் சோதிக்கச் சொல்லியும் எவரும் கற்பிக்கவில்லை.

இம்மாதிரி அறநெறி அனுபவ வட்டத்தை என்னுடைய அனுபவங்களில் வாய்ப்பு ஏதும் பெறவில்லை. ஆதலால் என்னு டைய மத அனுபவங்கள் இந்நேரம்வரை ஒரு குறிப்பிட்ட அளவு டன் நின்றுவிட்டன. செண்ட் ஃபிரான்ஸிஸ் மடத்தைச் சார்ந்த கன்னிமார் வைத்திருந்த குழந்தை இல்லத்தில் (Franciscan Sisters of the Via Giusti) மதம் சார்ந்த கல்வி சாதாரண முறைப் படி புகட்டப்பட்டது. அதுபற்றிச் சொந்த ஆய்வுகளோ கவனிப் புகளோ நடத்த இயலவில்லை. அதற்குப் பதிலாக அன்று ஆட்சியி லிருந்த அரசியல் கட்சி முனிசிபாலிடிகளுக்குள் அடங்கியிருந்த பள்ளிக்கூடங்களிலிருந்து மதம் சார்ந்த கல்வியை ஒழித்துவிட் டார்கள். குறுகிய கட்சி மனப்பான்மையுடன் தீவிரமாக அனுசரிக்கப்பட்ட நடவடிக்கை இது. குருட்டுப் பிடிவாதக்கார ருக்கு 'சயித்தான்' (devil) என்ருல் என்ன அச்சமோ, அதேபோல்

இறைவன் என்ற சொல்லும் அச்சத்தை விளைவிக்குநிலை ஏற்பட்டு விட்டது.

என்னுடைய அனுபவங்கள் என்னுடைய சொந்த மனையில் ஏற்றுக்கொண்ட குழந்தைகளைப்பற்றியதுடன் நின்று விட வேண்டியதாயிற்று. இக் குழந்தைகளின் பெற்றோர் மதத்தைத் தழுவாதவர்கள். ஆதலால், இதுவரை எந்த மதம் சார்ந்த எவ்வகையான விளையாட்சிக்கும் உட்படுத்தப்படாத குழந்தைகளே இவர்.

என்னுடைய குழந்தைகளில் ஒருவன் ஏழாண்டை விடக் கொஞ்சம் அதிகமாக உள்ளவன். அவன் குடும்ப நண்பர் ஒருவர் இவனுடைய அறிவையும், சுதந்திரம் அளிக்கப்படும் பள்ளிக் கூடத்தில் கற்றவனென்று அறிந்து, அவர் இவனைப் பரிசோதிக்கலாம் என்று எண்ணினார். லமார்க், டார்வின் (**Lamark and Darwin**) என்ற இருவரின் கொள்கைப்படி விலங்கின் பரிணாமத்தை (**Evolution**) அவனுக்குச் சுருக்கமாக எடுத்து விளக்கிக் கொண்டிருந்தார். குழந்தை இவருடைய விளக்கத்தை கூர்ந்து கவனித்துக் கொண்டே வந்தான். பிறகு அவன் 'அது சரி, மனிதன் குரங்கிலிருந்து வருகிறான், குரங்கு வேறொரு விலங்கிலிருந்து வருகிறது. அதே மாதிரி மற்றவையும். ஆனால் முதல் விலங்கு எங்கிருந்து வருகிறது?' என்று கேட்டுவிட்டான். முதல் விலங்கு தற்செயலாய்த் தோன்றியது' என்றார் நண்பர். 'கலகல' என்று சிரித்துவிட்டுத் தன் தாயைக் கூப்பிட்டு உணர்ச்சி பொங்க, 'கேளம்மா! என்ன முட்டாள்தனம்! உயிர் தற்செயலாய்த் தோன்றிற்றாம். அது முடியவே முடியாது!' என்றான். 'அப்படியானால் உயிர் எப்படி உண்டாயிற்று' என்றார் அவர், 'கடவுள்' என்றான் குழந்தை முழு நம்பிக்கையுடன்.

அதே குழந்தை தன் தாயாரின் ஒப்புதலைப் பெற்றுத் தன் தங்கையுடன் புனித ஆன்மிகக் கூட்டுறவு (Holy Communion) என்ற சடங்குக்கு ஆயத்தமாக்கப்பட்டான். ஒரு கற்றறிந்த இளம் பாதிரி—நிறைந்த கலைஞானம் படைத்தவர்—இந்தப் பணியை ஏற்றுக் கொண்டார். இந்தக் குழந்தை இங்கு என்னென்ன மறுப்புகளைக் கூறுமோ என்று பார்க்க வேண்டுமென்று ஆவல் கொண்டேன் நான். ஆனால், அவனுக்கு நடக்கும் பாடங்களுக்கு என்னை அனுமதிக்கவில்லை. நான் ஒரே ஒரு சந்தர்ப்பத்தில்தான் அங்கு இருந்தேன். அதுவும் பாடம் அநேகமாக முடிவுக்கு வரும் சமயம் அது. பாதிரியார் இன்தேறலின் ஒதுக்கீடு பற்றியும் இந்தப் புனிதத் தொண்டாற்றல் நிலையத்தில் விழாக் கோளாளன் (celebrant) காணும் நடைமுறைத் தனி முறை பற்றியும் எடுத்து விளக்கினார். அவ்வகையான விளக்க உரை குழந்

தைகளுக்குப் பொருத்தமானதல்ல என்றும், தங்களுடைய குறிக் கோளைவிட்டு அவர்கள் கவனம் வேறு வழிச் செல்லும் என்றும் நான் நினைத்தேன். ஆனால், அவர்களுடைய முகங்கள் பலி பீடத்தின் நேர் (altar) திரும்பியிருப்பதை வியப்புடன் கண்டேன். அத்தகைய மிக நுட்பமான விளக்க உரைகளுக்கு அவர்கள் பழக்கப்படாதவர் என்பது தெளிவாகத் தெரிந்தது. ஆனால், அவர்களை ஈர்க்கும் ஒரு மென்மை உணர்ச்சியால் ஊடுருவப் பட்டவர்கள்போல் இருந்தனர். புனித குருதியுடன் இருந்த கிண்ணம்[1] இவர்களுடைய ஆன்மாக்களுக்கு—உள்ளங்களுக்கு ஏற்புடையதாக இருந்தது. களங்கமற்ற 'பார்ஸிஃபால் (Parsifal) ஏற்றுக் கொண்டதுபோல் இவர்களும் ஏற்றுக்கொள்ள ஆயத்த மாயிருந்தனர். அவர்கள் முதல் புனித ஆன்மிகக் கூட்டுறவை பெற்ற பொழுது அவர்களுடைய உள்ளம் மிக்க இனிய நம்பிக் கையுடனும் மிகத் தெளிவுடனும் எளிமையுடனும் ஏற்றுக் கொண்டதை நான் நம்பும்படி கண்டேன். இறைவனைப் பற்றிய அனைத்தும் அவர்களால் புரிந்து கொள்ள முடியும் போலிருந்தது. இறைவன் இல்லை என்று சொல்லப்படுவதையே அவர்கள் அர்த்தம் அற்றது என நம்பினார்கள். மற்றவையெல்லாம் புரிந்து கொண்டனர். அவர்களுடைய அறநெறி வெற்றி அவர்களுடைய வாழ்விலும் பின்தொடர்ந்து வந்தது.

பல நாட்களுக்குப் பிறகு இந்தக் குழந்தைகளின் மாமன் மகள் 'புனித ஆன்மிகக் கூட்டுறவை' ஏற்றுக்கொள்ள ஆயத்தமாக்கப் பட்டிருந்தாள். அவளுடைய மனையில் ஒரு தெய்விக வழிபாட்டுப் பயிற்சியும் பெறாதவள். அவள் ஒருநாள் சில பொருள்களை வைத்துக் கொண்டு மிகவும் உற்சாகத்துடன் விளையாடுகையில் 'பூவினுடைய ஒவ்வொரு பாகத்தின் அமைப்பு எவ்வளவு அழகு! எனக்குக் கணக்கும் வடிவியலும் ரொம்பப் பிடிக்கும்! ஆனால், மதம்தான் எல்லாவற்றிலும் அழகு வாய்ந்தது' என்று சொன்னாள்.

பள்ளிக்கூடத்தில் கொஞ்சம் வயது வந்த குழந்தை இருந்தது. தாய்தந்தையர் இருவரும் மதத்தை எதிர்த்தவர்கள். இவள் பள்ளிக்கூடப் பயிற்சிகளை எல்லாம் செய்வதில் மிகுந்த அக்கறை காட்டினபோதிலும் எப்பொழுது பார்த்தாலும் படபடப்பாகவே இருந்தாள். அவள் இருந்த நகர்ப்புற மனையில் வியக்கத்தக்க விருந்துகள் வைக்கப்பட்டன. அந்த விருந்துகள் திறமையுடன் ஏற்பாடானவை. அவை அசலான கலை நிறைந்தனவாய் இருந்தன. அவள் இன்னும் அதிகமாகத் துடிதுடித்தாள். நன்மையில் நம்பிக்கை அற்றவள் போல் இருந்தாள். அவள் ஏதோ ஏமாற்றம்

[1] கிறித்துவ திருக்கோயில் இறை வழிபாட்டு இன் தேறல் குவளை.

அடைந்தவள்போல் காட்சி அளித்தாள். ஒருநாள் மெஸீனுவி லிருந்து வந்த ஓர் அனுதைக் குழந்தையை அழைத்தாள். இக் குழந்தை 'வயாக்யூஸ்தி' (Via Giusti) என்னும் இடத்திலுள்ள எமது பள்ளிக்கூடத்திலிருந்து வந்த குழந்தை அது. அவளை எவரும் இல்லாத தனி மூலைக்கு அழைத்துச் சென்றுள். இறைவணக்கத் தோத்திரத்தை சொல்லச் சொன்னுள். அனுதைக் குழந்தை இறைவணக்கத்தை ஒப்பித்தது. அப்பொழுது பணக்காரக் குழந்தை அதையே ஆவலுடன் நோக்கிய வண்ணமாக இருந்தது. அதன் பிறகு ஏதோ ஓர் ஆஞ்ஞைக்குக் கீழ்ப்படிபவள்போல் பியானுே அருகே சென்று வாசிக்க முயன்றுள். ஆனுல் அவளு டைய கரங்கள் துடிதுடித்தன. அவள் பியானுேவின் ஒரு பக்கம் சாய்ந்தாள். அவளுடைய முழங்கை பியானுேக் கட்டைகளின் மேல் கிடந்தது. அவளுடைய தலை தொங்கிக் கொண்டிருந்தது. அவளுடைய துடிதுடிப்பை இனிமேல் காட்டாதிருகக முடியவில்லை. அவளுடைய ஆத்மா தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ள ஆவல் கொள்கிறது. எதுவும் அவளுக்கு அமைதியை அளிக்க முடியவில்லை. அவளிடம் அன்பு காட்டியவர்கள் அதை அவளிடமிருந்து பின் வாங்கிக் கொண்டார்கள். அவளுடைய இருதயம் இன்னும் உயிர்ப்புடனும் அக்கறையுடனும் இருந்தது. 'குட்டிமான்'[1] எப்படி நீர் நிலையை நாடுகிறதோ அதேபோல் என்னுடைய உள்ள மும் இறைவா! உன்னையே நாடுகிறது.'

இருளிலிருந்து நயமற்ற மாசுப்போர்வையால் திரு ஆவியின் மறைமெய்மையை அணைத்துக் கொள்ள முடியாத முதிர்ந்தோன் போல் இன்னும் அக் குழந்தை ஆகவில்லை. அவளைச் சுற்றிலும் அந்தத் திரை படரவில்லை. பிறகு அத்தகைய மறைமெய்மைகள் [1]நிகோடோமஸுக்கு[2] இருந்தது போல் புரியாத நிலைமை ஏற்பட்டு விடுகிறது. நிகோடோமஸ் (Nicodemus) இயேசுநாதரைப் பார்த்து. 'மனிதன் எவ்வாறு பிறக்க முடியும்? அவன் இரண்டாம் முறை தாயின் கருப்பைக்குள் புகமுடியுமா?' என்று கேட்டார்.

எனவே, இந்த வேகமான மேற்பார்வையீட்டினுல் குழந்தைக்கு விவேகத்தின் தேவைப்பாடுகள் அல்லாமல் வேறு தேவைப்பாடுகளும் இருக்கின்றன என்ற உண்மையை நாம் புரிந்து கொள்ள முடியும். மேலும், இவனுடைய விவேகமானது வளர் வதற்கும் மன நிறைவு பெறுவதற்கும் முன்னதாகவே அவனுடைய தூய்மையானதும், மறையாததும் ஆன திறந்த உள்ளம் இறை ஒளியைப் பிரதிபலிக்கிறது. ஒருவேளை அவன் நாம் எதிர்பார்த்து கொண்டிருக்கிற பார்சிஃபலை (Parsifal) போல்

[1] கலைமான். ஐந்து வயதுக்கு உட்பட்ட மான்.

[2] Nicodemus.

மனம் தளர்ந்து உள்ளம் நொந்து கிடக்கிறான் போலும். அதே சமயத்தில் நமது கரங்கள் மாசு அடைந்து இருக்கின்ற காரணத்தால் சமாதானம் என்ற குருதி நிறைந்த கிண்ணத்தை[1] நோக்கி புனித கலத்துக்குள்[2] புறு இனிமேல் இறங்க முடியாமல் இருக்கிறது.[3]



[1] Chalice-புனித கிண்ணம்.

[2] Holy grail. இயேசுநாதர் தம்முடைய இறுதி இராப் போசனத்தின் போது உபயோகித்த புனித உண்கலம். புறு சமாதானச் சின்னம்.

[3] அறநெறிப் பிரச்சினை இங்கு ஓரளவுக்குதான் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதுவும் நன்கு புரிந்துகொள்ளும் வகையில் குறிப்பிடப்படவில்லை. அத்தகைய பணி விவேகத்தைக் கற்பித்தல் என்பதற்குப் பரிசோதனை வாயிலாக அளிக்கப்பட்ட கொடையாகும். குழந்தைகளின் அறநெறியும் மதமும் சார்ந்த கல்வியைப் பற்றி அண்மையில் ஸ்பெயின் நாட்டில் பார்ஸிலோனு (Barcelona, Spain.) என்னும் ஊரில் தொடங்கியிருக்கிறது. இதுபற்றிய ஒரு நூல் இந்தப் பிரிவு ஏட்டுக்குத் தொடர் நூல் ஆகும்.

நானும் என் தோழர்களும் அத்தகைய பொறுப்புள்ள பணியை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டுவருவோமா என்று என்னால் முன்னறிய இயலாது.

# உளஇயல் கலைச் சொற்கள்

## A

| | |
|---|---|
| Abandoned | — கைவிடப்பட்டது |
| Abandonment | — கைவிடல், கைதுறப்பது |
| Abnormal | — இயல்புகடந்த, பிறழ்வான அசாதரண |
| Abnormal State | — அசாதாரண நிலை |
| Abstraction | — அருவம், தனித்து எடுத்ததல் |
| Abstract | — கருத்து நிலை, வெற்று நிலை, அருவ |
| Abstract calculation | — அருவத்தில் கணக்குப் போடுதல் |
| Absolute | — வரம்பு கடந்த |
| Absolution | — மன்னிப்பு |
| Absolving | — ஆட்கொள்ளல் |
| Abulic | — மனத்திட்ப இழப்பு |
| Abstemious | — மீதூண் விரும்பாதவன் |
| Abstinance | — மது அருந்தாமை |
| Accelerated | — வரவர இன்னும் விரைவு படுத்தல் |
| Accommodation | — தக அமைப்பு, இசைவு படுத்தல் |
| Accommodation Visual | — (பார்வை) தக அமைப்பு, இணங்கிப் போதல் |
| Acquiesce | — இசைவு |
| Acquiescence | — ஒப்புதல் |
| Aquirements | — சாதனைகள் பெற்றவை |
| Acquisition | — சாதனைகள் |

Active personality — செயல் திறமுடைய ஆளுமை
Activity — செயல்
Adaptability — தழுவல் தன்மை
Adaptation to environment — சூழ்நிலைக்கு ஒப்பத் தழுவல்
Adduced — எடுத்துச் சொல்லல், சான்றுக் கூறல்
Adenoids — மூக்கு அடிச்சதை வளர்ச்சி நோய்
Adjunct — தொடர்புடைய, சம்பந்தப் பட்டவை
Adolescent — குமரப் பருவம்
Adult — முதிர்ந்தோர்
Advanced — முன்னேறுதல்
Aerolites — விண் வீழ் கற்கள்
Aesthetic — கலை உணர்ச்சி
Aesthetic sentiment — கலை சார்ந்த மென்னய உணர்ச்சி
Affection — அன்பு, பற்றுசை
Agility — விரைவு இயக்கம்
Alimentary — உணவு சம்பந்தமான
Alleviated — குறைத்தல், சரிக்கட்டுதல்
Alphabetical — நெடுங்கணக்கு எழுத்துகள்
Ambit — சுற்றெல்லை
Ambition — பேராசை
Ambulation — இடம் விட்டுப் பெயர்தல்
Ambient — மூச்சுவிடக் கிடைக்கும் வாயு
Amenity — வாழ்வு நலம்
Amiable — ஒத்து
Amorphous — உருவமற்ற
Anaemia — இரத்த சோகை
Analogous — போன்ற
Analogies — ஒப்புமைகள்
Analysis — பகுப்பாய்வு
Analitical — பிரிவுகள் ஆய்தல்
Analitical methods — பகுத்து ஆய்கிற முறைகள்
Anatomy — உடல் அமைப்பு
Animal instinct — விலங்கு புலன் உணர்வு
Animalculist — உடலியகத்துக்கு நுண் உயிர் இனங்களே காரணம் என்ற கோட்பாளர்
Anguish — வேதனை

Annulment — தள்ளல், விலக்கீடு
Anhilate — நிர்மூலமாக்குதல்
Antagonist — எதிரானது
Anthropology — மனித இயல், மனித நூல், மனித உடல் வரலாறு
Anomaly — முறைகேடு, நெறி திரும்புதல்
Anthropologist — மனித இயல் வல்லுநர்
Anthropological — மனித இயல் சார்ந்த
Anthropological measurements — மனித இயல் சார்ந்த அளவுகள்
Animosity — வெறுப்பு
Annunciation — ஏசு திருப்பிறப்பு உணர்த்திய காட்சி
Antitoxin — நச்சு முறி
Anthropology criminal — குற்றவாளிகளின் மனித இயல் நூல்
Anxieties — கவலை, தவிப்பு
Apparent fatigue — காணப்படும் சோர்வு
Apodictical — மறுக்க முடியாத போக்கு
Apostle — திருத்தொண்டர்
Appellation — இடுபெயர்
Appreciation — மதிப்பிட்டறிதல்
Apprehend — வருவதை உணர்தல்
Approximation — அணுகி இருத்தல், நெருங்கிய அளவீடு
Aptitudes — உளச் சார்பு
Arbitary — மனப்போக்கான, விருப்பப் படியான
Arithmetical frame — கணக்குப் போடத் துணை புரியும் சட்டம்
Articulations — இணைப்புகள்
Ascent to abstraction — அருவத்துக்கு உயர்தல்
Aspiration — உயர்ந்த விருப்பம்
Aspects — பண்புக்கூறு நோக்கு
Assailent — எதிரி, தாக்குபவர்
Assailed by a doubt — ஐயம் பிறக்கிறது, ஐயத்தால் தாக்கப்படுகிறுன்
Assimilation — உட் கவர்தல்
Association of ideas — கருத்து இயைபு, எண்ண இயைபு
Association — கருத்துத் தொடர்புப் பிரிவு

Associative — கூடச் சேரும் இயல்பு
Association period of continuity — தொடர்ச்சியின் இயைபு
Association period of similitude — ஒப்பனை இணைவு
Associative channels — எடுத்துச் செல்லும் கால் வாய்கள்
Attention — கவனம்
Attitude — போக்கு
Attitude of humility — பணிவுத் தன்மை
Atrophied — தசை இயக்கம் இழத்தல்
Attributes — இயற்பண்புகள்
Attribution of things — பொருள்களின் இயற்பண்பு
Auditory images — கேள்விப் படிமங்கள், ஒலிப் படிமங்கள்
Authority — அனுபவம் நிறைந்தவர் (இங்கு)
Auto-creation — தன்னாக்கம்
Auto-education — தானே கற்பித்தல்
Auto-experience — தன் அனுபவம்
Auto-exercise — தற்பயிற்சி
Average characteristic diagram— சராசரிச் சிறப்பியல் வரை படம்
Average developments — சராசரி வளர்ச்சி
Average levels — சராசரி மட்டங்கள்
Aviary — பறவை வளர்ப்புக் கூண்டு
Avanst — மதபோதகன், கற்றறிஞன்

## B

Backward — பின்தங்கிய, குறைபாடுடைய
Bad conduct — கெட்ட நடத்தை
Bacteriologist — நுண்மை ஆராய்ச்சியாளர்
Ballast — வெட்டிச்சுமை
Behave — நடந்துகொள்
Behaviour — நடத்தை
Benevolent — தயை, பரிவு
Bereft — இழந்த
Bestride — கால்களுக்கு நடுவில் வைத்துக் கொண்டு எட்டி நடத்தல்
Biblical cosmogony — வேதநூல் தழுவும் அண்டப் பிறப்பு

Binet Simon test — பினே சைமன் சோதனைகள், தேர்வுகள்
Biology — உயிர் நூல்
Biological chart — வாழ்க்கை வரலாற்று அட்டவணை
Biometer — உயிரியல் செய்திகளின் ஆயளவைக் கருவி
Blasphemy — தெய்வ நிந்தனை
Bombastic — சொற்பகட்டு
Brute force — விலங்கின் பலம்

## C

Calumniously — அவதூருக, அபாண்டப் பழியென
Calumny — அவதூறு
Camera obscura — காமிராவின் உள் அமைப்புப் போல
Canonisation — புனிதத் திருமுறையில் சேர்த்தல்
Capers — துள்ளுதல்
Caprice — சபல புத்தி, முரண்பட்ட உளப்போக்கு
Capricious — நிலையற்ற, மனம் போன போக்கில்
Catafalgues — பாடை
Cardinal importance — அடிப்படையான முக்கியத்துவம்
Cardinal points — நாற்றிசை முனைகள் சம்பந்தப்பட்ட நிலைமைகள்
Carnival — களியாட்டம்
'Casa de Bambini' — குழந்தை இல்லம் (இத்தாலிய மொழி)
Catalogue — பெயர்ப்பட்டியல்
Celebrant — விழாக் கோளாளன்
Cerebral cortex — பெருமூளையின் உள்ளுரி, மூளையின் மேலுள்ள சாம்பல் நிறப் பொருள்
Chaos — குழப்பம்
Chastisement — தண்டித்தல், கொடிய தண்டனை
Chastity — கற்பு
Childhood — இளமைப்பருவம், குழந்தைமை

Character — குணம், பண்பு, நற்குணம்
Characterised — பண்பாக்கப்படுகிறது
Characteristic — சிறப்பியல்பு
Charity — மன்பதை அன்பு
Charlatans — பகடிகள்
Chastisement — தண்டித்தல்
Choice — தேர்வு
Chastening — தீவிர கண்டனம்
Chronometer — திட்டக்காலக் கணிப்பு அளவு கருவி
Civilisation — நாகரிகம்
Clamarous — ஆரவாரத்துடன்
Clarify — தெளிவாக்கு, ஒழுங்குபடுத்து
Clarity — தெளிவு
Classification — வகைப்படுத்தல்
Classification of attributes — இயற்பண்புகளை இனம் பிரித்தல்
Clinical Psychology — மருத்துவ உள இயல்
Clinical psychiatry — மனநோய் மருத்துவம்
Cloistered — துறவி மடங்கள் சன்னியாசி மடம்
Clumsy — விகாரமானது, முரடானது
Coefficient — துணைக்காரணம்
Coefficient-maximum — குணகம்
Coefficient of humanity — மன்பதையின் துணைக்காரணம்
Coefficient of will — இயற்றிநிலையின் குணகம்
Cognitions — அறிதல்கள்
Coinvolve — பங்கு கொள்ளுதல்
Collaboration — உடன் உழைப்பு, ஒத்துழைப்பு
Co-ordination of movement — இயக்க இணக்கம்
Command — ஆணை
Commandments — அறநெறிக் கட்டளைகள்
Communion — உடன்படுத்திக் கொள்ளல், ஆன்மீகக் கூட்டுறவு
Community — சமூகம்
Comparison — ஒப்பீடு செய்தல், ஒப்புமை காண்டல்
Competition on endurance — உழைப்பாற்றல் போட்டி
Complex — சிக்கலான

Complex coordinated movement — சிக்கலான ஒன்றி இசைக்கும் இயக்கங்கள்
Complex discipline — சிக்கலான ஒழுங்கு
Complex objects — சிக்கல் வாய்ந்த பொருள்கள்
Comprehending — அறிந்து கொள், கிரகித்துக் கொள்
Comprehensible — அறிந்து கொள்ளத்தக்க
Commission — செயல் ஆற்றுதல்
Copiously — எராளமாக, நிறைந்த அளவு
Comprehension — அறிந்து கொள்ளல், யூகித்தல், முற்றிலும் உணர்தல்
Conception — கருத்துக் கோடல், கருத்துக் காட்சி, கருத்துருவம், உட் கருத்து
Concomitant — இனதுணை
Concomitant phenomenon — இணைந்து இயங்கும் இயல் நிகழ்ச்சி
Concord — உடன்பாடு
Concrete — உருவம்
Concrete terms — உருவச் சொற்கள்
Condemned — தீர்ப்பளிக்கப்பட்ட
Conditions — நிபந்தனைகள்
Conduct mark — நன்னடத்தை மதிப்பெண்
Conductive channel — எடுத்துச்செல்லும் கால் வாய்கள்
Confession — ஒப்புக்கொள்ளல்
Confusion — குழப்பம்
Confidence — மறைக்காமல் தன் உள்ளத் தைப் பிறர்க்கு எடுத்துக் கூறுவது
Congenital — பிறவி சார், பிறப்பு சார்ந்த, கருவளர்ச்சி சார்ந்த
Connote — குறித்தல்
Conscious — தெளி உணர்நிலையான
Conseience — மனச்சான்று
Consciousness — தெளி உணர்நிலை
Conquests of culture — பண்பாட்டு வெற்றிகள்
Conquests — வெற்றிகள்
Connoisseur — சுவைத்திற வல்லுநர்

Consecretion — படையல்
Consequence — பலன், பலன்கள், விளைவு
Constant element — நிலையான தனிப்பொருள்
Constancy — மாறாத் தன்மை, பிடிவாதம்
Constrained — மனமில்லாமல்
Consume — தனக்குள் பொசுக்கிவிடல்
Contact — பற்றிணைப்பு
Contemplate — ஆழ்ந்து சிந்தித்தல்
Constitute — உறுப்பாக அமைதல்
Contemporary — சம காலத்தவர்
Continuator — தொடர்ந்து நடத்தப் போகிற வன்
Contraband — தடை விதிக்கப்பட்ட
Contributions — அளித்தல்
Control of error — தவறுதடை
Convent — (கான்வென்ட்) கன்னிமார் மடம்
Conversion — மத மாற்றம்
Conviction — நம்பிக்கை
Convulsed — ஆட்டம் கொடுத்தல்
Corelation — ஒற்றுமை
Coordination of movement — இயக்க ஒற்றுமை
Corporal punishment — உடல் ஒறுப்பு
Corporal — பூத உடல் சார்ந்த
Correspond — பொருந்து, ஒத்திரு
Cosmos — அண்டம்
Counteract — சீர்திருத்தம் செய்தல்
Credulity — ஏமாளித்தனம்
Criminals — குற்றவாளிகள்
Criminal pathology — குற்றவாளிகளின் நோய் நூல்
Craze — வெறி
Criteria — மூலப்பிரமாணம்
Crustacean — நண்டு இனம்
Cubature — கன அளவில்
Culamination — உச்ச நிலை
Cultural — பண்பாடுடைய
Cupola — குவிமாடம்
Curiosity — விநோதம்
Curriculum — பாடத்திட்டம்
Curve — வளைவு

Cycle of the protozoa — புரோடோ ஜோவாவின் வாழ்க்கை வளையம்
Cynical — நன்மையில் நம்பிக்கை இழத்தல்

## D

Dadoes — மாற்று நிறமான அறைச் சுவரடி
Decalogues — பத்துக் கட்டளைகள் (மோஸஸால் விதிக்கப்பட்ட கிருத்துவ அறநெறி விதிகள்)
Deceit — ஏமாற்றம், கபடம்
Deceptive phenomenon — மயக்குறும் இயல் நிகழ்ச்சி
Defective refraction — பார்வைக் கோளாறு
Deficient — குறைபாடுடைய, பின்தங்கிய
Deficient children — குறைபாடுடைய, குழந்தைகள்
Definition — வரையறுத்தல்
Definition period — வரையறுக்கும் பிரிவு
Deformed — கோணல்
Defrauded — ஏமாற்றப்பட்டது
Degenerative — தாழ்ந்து நலிந்த
Degradation — துல்லிய நிலை இடித்தல்
Degrees of development — வளர்ச்சியின் படிப்படியானது
Deliberate interruption — வேண்டுமென்ற குறுக்கீடு
Delicate — மிகவும் நுட்பமான
Deligently ஓயாத உழைப்புடன்
Delinquent — இளம் குற்றவாளி
Delirius confusion — துடிதுடிப்புக் குழப்பம்
Delusion — ஏமாற்றம், மாயை
Demented — பைத்தியம் பிடித்தவர்கள் போல்
Depraved tendencies — தீய போக்குகள்
Depreciated — சிறுமைப்படுத்தப்பட்ட
Derangement — குறைகள்
Descrimination — பகுத்தறிதல்
Description — வருணனை
Desires — ஆசைகள், பற்று
Desertations — விளக்க உரைகள்
Desultory — தொடர்பற்ற

